॥ श्रीकृष्णाय परब्रह्मणे नमः ॥





# श्रीमद्भागवत

दशमस्कन्धे पूर्वार्द्धम् ॥



# ஸ்ரீமத்பாகவதம்.

## தசமஸ்கந்த பூர்வார்த்தம்.

தமிழுரையுடன்.

இச்சிறந்த உரை

மஹாமஹோபாத்தியாய வேதாந்தகேஸரி
பங்காடு ப்ரம்ஹஸ்ரீ கணபதி சாஸ்திரிகள்
அவர்களின் முக்கிய சிஷ்யரும், வியாகரண வேதாந்த
சாஸ்திரபாரங்கதரும், பாகவத பகவத்கீதோபன்யாஸகரும்,
சோதிடமந்திரசாஸ்திர வித்வரனும் 'ஆர்யமதஸம்வர்த்தனீ'
பத்திராதிபருமான
ப்ரம்ஹஸ்ரீ கடலங்குடி நடேசசாஸ்திரிகள்
அவர்களால் இயற்றி

தமது ஆர்யமதஸம்வர்த்தனீ அச்சு இயந்திரசாலையில்
அச்சியற்றி சென்னையில் பிரசுரஞ்
செய்யப்பட்டது.

காபிரைட்.] 1933. [விலை ரூ. 5-8-0.

# முகவுரை.

भागवतम्—भगवन्तमधिकृत्य कृतं पुराणं भागवतमित्युच्यते। भगः என்ற சொல்லால் (1) ज्ञानम् (2) ऐश्वर्यम् (3) शक्तिः, (4) बलम्, (5) वीर्यम्, (6) तेजः என்ற ஆறு குணங்கள் சொல்லப்படும். அதற்குமேலுள்ள वत् என்றதால் அவ்வாறு குணங்களுமுள்ளவர் சொல்லப்படுவார். ஆகவே இந்தக் குணங்கள் எவரிடம் எப்பொழுதும் நிறைந்து நிற்கின்றனவோ அவர் பகவான் எனப்படுவர். இத்தகைய பகவானுடைய ஸ்வரூபம், ஸ்வபாவம், குணங்கள் இவற்றின் மாதுரியத்தை இந்தப் புராணம் உபதேசிப்பதால் இதற்குப் பாகவதம் என்ற பெயரேற்பட்டது. இது பதினெண் மஹாபுராணங்களுளொன்றாகும். இதன் பெருமையைப் பற்றி ஸ்ரீபத்மபுராணம் உத்தரகண்டத்திலுள்ள பாகவத மாஹாத்மியம் கூறும் ஆறாவது அத்தியாயம் 85-வது சுலோகத்தில்

श्रीमद्भागवतं पुराणतिलकं यद्वैष्णवानां धनं
यस्मिन् पारमहंस्यमेवममलं ज्ञानं परं गीयते।
यत्र ज्ञानविरागभक्तिसहितं नैष्कर्म्यमाविष्कृतं
तच्छृण्वन् प्रपठन्विचारणपरो भक्त्या विमुच्येन्नरः॥ १॥

எது புராணங்களுக்குத் திலகம்போன்றதோ, எது விஷ்ணு பக்தர்களுக்கு மிக்க ப்ரியமானதோ, எதில் பரமஹம்ஸர்களான துறவிகளால் அடையக்கூடியதும், தோஷமற்றதும் = அதாவது: சுத்தமானதும், பரமுமான க்ஞானமானது சொல்லப்படுகிறதோ, எந்தப்புராணத்தில் க்ஞானம், வைராக்கியம், பக்தி இவற்றுடன் கூடின நைஷ்க்கர்ம்யமானது=கர்மங்களுக்கு ஈஶ்வரார்ப்பணஞ்செய்தல் மூலம் சித்த சுத்தியையுண்டாக்கி மோக்ஷஸாதனமாகவாகும் தன்மையானது, விளக்கப்பட்டிருக்கிறதோ அந்தப் பாகவதத்தைப் பக்தியுடன்கூட ஶ்ரவணஞ்செய்பவனும், படிப்பவனும் அர்த்தவிசாரஞ்செய்பவனுமான மனிதன் முக்தியையடைகிறான்" எனச்சொல்லப்பட்டிருக்கிறது. இதிலிருந்து இந்தப்பாகவத மஹாபுராணமா

---

(1) ஸர்வ விஷயங்களையும் பற்றின அறிவு, (2) ஈசுவரத்துவம், (3) எதையும் நினைத்தபடி செய்யும் திறமை, (4) எதையும் நினைத்தபடி செய்வதற்குவேண்டிய ஸஹாயஸம்பத்தி, (5) பராக்ரமவத்வம், (6) எவராலும் அசைக்கமுடியாமை.

னது பக்தி க்ஞான வைராக்கியங்களையுண்டாக்கி இம்மையில் பக வத் குணானுபவஞ்செய்வித்து மறுமையில் அழியா மோக்ஷவீட்டை யளிக்கவல்லது என்பது பெறப்படுகிறது.

மேலும் "कृष्णद्युमणिनिम्लोचे" (ஸ்கந். 3, அத். 2, ஶ்லோ. 7) கிருஷ்ணனுகிற ஸூரியன் மறைந்ததும் என்றும்,

कृष्णे स्वधामोपगते धर्मज्ञानादिभिस्सह ।
लोके नष्टदृशामेष पुराणार्कोऽधुनोदितः ॥

(ஸ்கந். 1, அத். 4, ஶ்லோ. 43–44) "தர்ம க்ஞானுதிகளுடன் கூட ஸ்ரீகிருஷ்ணன் சொந்தமான பரந்தாமாவையடைந்ததும் உல கில் அறிவுக்கண்ணற்றவர்களுக்கு அக்கண்ணை விளக்கவேண்டி இந்தப்புராணமாகிற ஸூரியன் இப்பொழுது உதயமாகி இருக்கிறது" என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதம் கிருஷ்ண ஸூரிய னுடைய ஸ்தானத்தில் இந்தப்புராண ஸூரியனுதயமானதாகச் சொன்னதிலிருந்து இந்தப் புராணமானது ஸ்ரீகோபாலன் செய்யும் காரியத்தையே செய்வதால் பகவத்ஸ்வரூபமேயாகும் என்று உபதே சிக்கப்பட்டதாக ஏற்படுகிறது. ஆனதுபற்றியேதான்

............पुराणन्तु श्रीमद्भागवतं शुभम् ।
धर्मार्थकाममोक्षाणां साधनं स्यान्न संशयः ॥

"ஸ்ரீமத்பாகவத புராணமோ, அறம், பொருள், இன்பம், வீடு இவற்றுக்குச் சிறந்த ஸாதனமாகும். இதிலையமில்லை" என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

மேலும் உபரிசரவஸுவின் வீரியத்துக்குப் பிறந்த வாஸவி என்றும், ஸத்யவதி என்றும் பெயருள்ள ஸ்திரீயினிடத்தில் பரா சர மஹருஷிக்குப்பிறந்ததுபற்றிப் பாராசர்யர் என்றும், பிறந்தபொ ழுது கொஞ்சகாலம் த்வீபத்தில் வஸித்ததுபற்றி த்வைபாயனர் என்றும், வேதங்களை விபாகம் செய்ததுபற்றி வேதவியாஸர் என் றும் சொல்லப்படும் மஹருஷியானவர் ஸூரியனுதயமானதும், ஸரஸ்வதீ நதியில் ஸ்னானுதிகளை முடித்துக்கொண்டு அந்நதியின் கரையிலுள்ள பதரிகாஶ்ரமத்தில் ஏகாந்தமான விடத்திலிருந்து கொண்டு காலவேகத்தினுல் யுகதர்மங்களுக்கு நிகழ்ந்த ஸாங்கரியத் தையும், ஜனங்கள் சிரத்தை (குரு சாஸ்திர விஶ்வாஸம்) யற்றவர்க ளாகவும், தைரியமற்றவர்களாகவும், மந்தமதிகளாகவும், அற்பாயு ளுள்ளவர்களாகவும், இருக்கப்போவதையும் தனது திவ்யதிருஷ்டி யினுல் கண்டு எல்லா வர்ணங்களுக்கும் ஆஶ்ரமங்களுக்கும் எதனுல்

க்ஷேமமுண்டாகும் என ஆலோசிக்கலானார். அவ்விதமாலோசித்து மனத்தில் நிஸ்சயித்துக்கொண்டு ருக், யஜுஸ், ஸாம, அதர்வம் என்ற நான்கு வேதங்களையும் பிறித்தெடுத்து தக்க சிடர்களுக்குப தேசித்துப் பின்னர் இதிஹாஸ புராணங்களையும் ஐந்தாவது வேத மான மஹாபாரதத்தையும் செய்து ரோமஹர்ஷணருக்கும் உபதே சித்தார். இவ்விதம் தனது பகவத் ஞானசக்தியவதாரத்துக்கேற்ற படி பல அரியகாரியங்களைச் செய்திருந்தபோதிலுங்கூடத்துஷ்டியை (தான் செய்தகாரியம் போதுமென்ற எண்ணத்தை) யடையாதவ ராய்க்கொண்டு முற்கூறிய ஸரஸ்வதியின் சுத்தமான கரையில் ஏகாந் தமானவிடத்திலிருந்துகொண்டு இதைத் தன் மனத்துக்குள் சொல் லிக்கொள்ளத் தொடங்கினர்—

"நான் விரதானுஷ்டானஞ்செய்து குருக்களையும், அக்னிகளை யும் பூஜித்திருக்கிறேன். பாரதம் என்ற வியாஜமாக வேதார்த்தங்க ளையும் வெளியிட்டிருக்கிறேன். அதனால் ஸ்திரீ ஶூத்திராதிகள் கூட தர்ம ஸூக்ஷ்மத்தைத் தெளிவாய் அறிந்துகொள்ளக்கூடியதாக விருக்கிறது. அப்படி இருந்துங்கூட எனது ஆத்மா தெளியாததா கவே இருக்கிறது. பரமஹம்ஸர்களான துறவிகளுக்கும் ப்ரியமான வைகளும், அச்யுதனுக்கும் ப்ரியமானவைகளுமான பகவத்தர்மங் களை முக்கியமாகப் பெரும்பாலும் சொல்லாததே அதன் காரண மாக இருக்கலாமோ என்னமோ தெரியவில்லையே?" எனக் கவலை கொண்டிருக்கும் ஸமயத்தில் ஸ்ரீமான் நாரதர் அங்குவர அவருக்கு வேண்டிய உபசாரங்களைச்செய்ய அதைப்பெற்ற நாரதர் "ஹே வியா ஸரே! நீர் எல்லாப்பொருளுமடங்கின பாரதத்தைச் செய்திருக்கி றீர். ப்ரம்ஹ ஸூத்திரஞ்செய்து ப்ரம்ஹவிசாரம் செய்துமிருக்கி றீர். இப்படி இருந்தும் அகிருதார்த்தன் போலக்கவலைப்படுகின்றீ ரே அதன் காரணமென்னை?" என்று கேட்டார். அதற்கு வியாஸர்— "நாரதரே! நீர் சொன்னதெல்லாம் உண்மையே? ஆயினும் என் மனம் செய்ததுபோதும் என்ற எண்ணத்தையடையாததாக இருக் கிறது. இதற்குக் காரணம் தெரியவில்லை. அதைத் தாங்கள் சொல்ல வேண்டும்" என்று கேட்டார். அதுகேட்ட நாரதர் "நீர் இதுவரை சொன்ன பாரதத்திலோ, ப்ரம்ஹஸூத்திரத்திலோ, மற்ற புராணங் களிலோ பகவானுடைய யஶஸ்ஸைப் பூராவும் சொல்லாது விடுத் திருக்கிறீர். எவ்விதம் தர்மாதிகளை விரிவுபடுத்திக் கூறினீரோ அவ்

விதம் பகவன் மஹிமையை விரிவாகத் தனித்துக்கூறாது விடுத்து மிருக்கிறீர். மேலும் பாரதாதிகளில் ஸகாமதர்மத்தையுபதேசித்தீரேயொழிய நிஷ்காமதர்மத்தையுபதேசித்தீரில்லை. ஆனதுபற்றித்தான் உமது மனம் தெளியவில்லை. ஆகவே நீர் பாகவதம் என்ற புராணத்தைச் செய்து அதில் நிஷ்காமதர்மத்தையும், பக்தி க்ஞான வைராக்கியாதிகளையும் தனியேவெளியிட்டால் உமது மனம் தெளியும்" என்றார். அப்படியே வியாஸரும் ஸ்ரீமத்பாகவதத்தை வெளியிட்டாரென இதே பாகவதம் 1-வது ஸ்கந்தம், 3, 4, 5-வது அத்தியாயங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. இதிலிருந்து இந்தப் பாகவதமானது பாரதாதிகளைக் காட்டிலும் மேம்பாடுடையதென்று பெறப்படுகிறது. ஆனதுபற்றியேதான் பரமஹம்ஸ பரிவ்ராஜகர்களான துறவிகள் கூட இதைப் பரமதாத்பரியத்துடன் பாராயணஞ்செய்து வருகின்றனர்.

ஆகவே இத்தகைய சிறப்புவாய்ந்த இந்த ஸ்ரீமத்பாகவதத்தை ஸ்ரீதரீயம், வம்சிதரீயம் முதலிய வியாக்கியானங்களைத்தழுவி எமது சிற்றறிவுக்கெட்டியவளவு தமிழில் பெயர்த்து தேவநாகரலிபியில் மூலத்துடன் வெளியிட முன்வந்திருக்கிறோம். அஃதுடன் கேரள தேசத்தில் குருவாயூர் என்ற ஸ்ரீகிருஷ்ண க்ஷேத்திரத்தில் வஸித்து வந்த நாராயணப்பட்டர் என்ற மஹானால் ஸ்ரீபாகவதார்த்தத்தைச் சுருக்கி எழுதப்பட்ட நாராயணீயம் என்ற கிரந்தத்தையும், அந்தந்த அத்தியாயத்தின் முடிவில் மூல ஸ்லோகத்துடன் தமிழில் பதவுரை எழுதி வெளியிடவும் எண்ணினோம். இவ்விதம் இந்தப்புராண ரத்தினத்தை வெளியிட ஆரம்பித்து ஸ்ரீகோபாலனுடைய லீலையை விரிவாயுபதேசிக்கும் தசமஸ்கந்தத்தை முதலில் தொடங்கி வெளியிட முன்வந்ததில் அதன் பூர்வார்த்தம் 49 அத்தியாயங்களையும், தமிழுரையுடன் முதலாவது புஸ்தகமாக இப்பொழுது வெளியிடுகிறோம். அடுத்த உத்தரார்த்தத்தையும் தனிப்புஸ்தகமாகவே வெளியிடவெண்ணிவேலை நடந்துவருகிறது. அது முடிந்ததும் 11, 12-வது ஸ்கந்தங்களை முறையே முடித்தபின்னர் அடிமுதல் வெளியிட ஆரம்பிக்க உத்தேசித்திருக்கிறோம். ஆகவே பாகவதபக்தர் யாவரும் எமது சிரமம் பயன்படுமாறு செய்ய முன்வரவேண்டுமாய்ப் பிரார்த்திக்கிறோம்.

இங்ஙனம் ஸ்ரீராதாகிருஷ்ணதாஸன்,
கடலங்குடி நடேச சாஸ்திரிகள்,
கஸ்தூரிரங்கவிலாஸ், நடேசய்யர் தெரு, புதுமாம்பலம்,
தேனாம்பேட்டை போஸ்டு, சென்னை.
[2-8-1933.]

# ஸ்ரீமத்பாகவதம்.

## தசமஸ்கந்த பூர்வார்த்தம்.

## விஷய அட்டவணை.



பக்கம்.

பக்கம்.

அத்தியாயம் 7.



அத்தியாயம் 8.



அத்தியாயம் 9.



அத்தியாயம் 10.



*

பக்கம்.



அத்தியாயம் 11.



அத்தியாயம் 12.



அத்தியாயம் 13.



அத்தியாயம் 14.



அத்தியாயம் 15.

பக்கம்.

பக்கம்.

பக்கம்.

பக்கம்.



அத்தியாயம் 34.



அத்தியாயம் 35.



அத்தியாயம் 36.

பக்கம்.

அத்தியாயம் 37.



அத்தியாயம் 38.



அத்தியாயம் 39.



அத்தியாயம் 40.

பக்கம்.



அத்தியாயம் 43.



அத்தியாயம் 44.



அத்தியாயம் 45.

அத்தியாயம் 49.



விஷய அட்டவணை முற்றிற்று.



ओंनमो भगवते वासुदेवाय ॥



# श्रीमद्भागवते

## दशमस्कन्धे पूर्वार्द्धे प्रथमोऽध्यायः ॥

### श्रीधरीयव्याख्यानावतरणिकास्थाः श्लोकाः ॥

विश्वसर्गविसर्गादिनवलक्षणलक्षितम्। श्रीकृष्णाख्यं परं धाम जगद्धाम नमाम तत् ॥ १ ॥ दशमे दशमं लक्ष्यमाश्रिताश्रयविग्रहम्। क्रीड-

---

# ஸ்ரீமத்பாகவதம்.

## பத்தாவது ஸ்கந்தம்.

## பூர்வார்த்தம், முதலாவது அத்தியாயம்.



அவதாரிகை—இந்த ஸ்ரீபாகவதத்தில் 12 ஸ்கந்தங்களுண்டு. பொதுவாய் புராணங்களுக்கு (1) ஸர்க்கம்=ஸிருஷ்டி, (2) ப்ரதி ஸர்க்கம்=ப்ரளயம், (3) வம்சம், (4) மன்வந்தரம், (5) வம்சாநுசரிதம் என்ற இவ்வைந்தையும் கூறுதல் லக்ஷணமாயினும் இந்தப் பாகவத மஹா புராணத்துக்குமட்டும், *(1) ஸர்க்கம், (2) விஸர்க்கம், (3) ஸ்தானம், (4) போஷணம், (5) ஊதி, (6) மன்வந்தரம், (7) ஈஶாநுகதை, (8) நிரோதம், (9) முக்தி, (10) ஆஶ்ரயம் எனப்

---

*ஸர்க்கம் முதலியன இன்னதென்பதை 2-வது ஸ்கந்தம் 10-வது அத்தியாயம் 1-வது சுலோகத்தில் கண்டுகொள்க.

**यदुकुलांभोधौ परानन्दमुदीर्यते ॥ २ ॥ दशमे कृष्णसत्कीर्तिवितानायानुवर्ण्यते । धर्मग्लानिनिमित्तस्तु निरोधो दुष्टभूभुजाम् ॥ ३ ॥ प्राकृतादिश्चतुर्धा यो निरोधस्स तु वर्णितः । तत्तत्प्रसङ्गतस्सृष्टिसंहारादिनिरूपणैः ॥४॥ कृता नवतिरध्याया दशमे कृष्णकीर्तये । आदौ चतुर्भिरध्यायैः ब्रह्मप्रार्थन याऽवनेः । भारं हर्तुं हरेर्जन्म सप्रसङ्गं निरूप्यते ॥ ५ ॥ गोकुले मथुरायां च द्वारवत्यां ततः क्रमात् । कृष्णलीला त्रिधा प्रोक्ता तत्तद्भेदैस्त्वनेकधा ॥६॥ स पञ्चत्रिंशदध्यायैर्बृहद्बृन्दावनादिषु । गोकुले वसतो लीला वर्ण्यते सुरदुष्करा ॥ ७ ॥ एकेन यमुनावारिण्यक्रूरेण कृता स्तुतिः । एकादशभिराख्याता लीला मधुवने कृता ॥८॥ शेषैर्द्वारवतीलीला तन्निर्माणादि वर्ण्यते । एवं नवतिरध्याया दशमे विशदार्थकाः ॥ ९ ॥ तत्र तु प्रथमे कंसः स्वमृत्युं**

---

பத்து லக்ஷணங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவற்றுள் 10வதான ஆஶ்ரயம் என்பது ஸ்ரீபகவான் வாஸுதேவனே ஆவார். அந்த வாஸுதேவனுடைய ஸ்வரூப ஸ்வபாவ குணமாதுர்யாதிகள் இந்தப் பத்தாவது ஸ்கந்தத்தில் உபதேசிக்கப்படுகின்றன. இதில் 90 அத்தியாயங்களுண்டு. அவற்றுள் முதலில் நான்கு அத்தியாயங்களால் ப்ரஹ்மதேவனுடைய ப்ரார்த்தனையினால் பூமியின்பாரத்தைப் போக்கவேண்டி பகவானுடைய அவதாரமானது அதையொட்டின விசேஷத்துடன் உபதேசிக்கப்படுகிறது.

ஸ்ரீகோபாலனுடைய லீலையானது முதலில் கோகுலத்திலும், பிறகு மதுரையிலும், பின்னர் துவாரகையிலுமாக அந்தந்த விசேஷங்களுடன் மூன்றுவிதமாக வுபதேசிக்கப்படுகிறது. 35 அத்தியாயங்களினால் கோகுலத்தில் ப்ருஹத் ப்ருந்தாவனம் முதலியவிடங்களில் செய்யப்படும் லீலையானது உபதேசிக்கப்படுகிறது. 40-வது அத்தியாயத்தினால் யமுனையின் ஜலத்தில் அக்ரூரர் செய்யும் ஸ்துதியும், பிறகு 11 அத்தியாயங்களினால் மதுவனத்தில் செய்யப்படும் லீலையும், அதற்குப் பிறகுள்ள 39 அத்தியாயங்களினால் துவாரகா நகர நிர்மாணமும், அங்கு செய்யப்படும் லீலை முதலியனவும் உபதேசிக்கப்படுகின்றன. அவற்றுள் முதலாவது அத்தியாயத்தில் தேவகியின் புத்திரனிடமிருந்து தனக்கு மரணம் வரப்போகிறது எனக் கேட்ட கம்ஸன் பயந்து தேவகியின் 6 குழந்தைகளைக் கொன்ற

देवकीसुतात् । श्रुत्वा भीतोऽवधीत्तस्याः षड्गर्भानिति वर्ण्यते ॥ १० ॥ कृष्णावतारचरितश्रवणामृतनिर्वृतः। उक्तानुवादेनौत्सुक्याद्राजा पृच्छति तत्पुनः ॥ ११ ॥

## श्रीभागवत प्रारंभः॥

राजोवाच—कथितो वंशविस्तारो भवता सोमसूर्ययोः। राज्ञां चो भयवंश्यानां चरितं परमाद्भुतम् ॥ १ ॥ यदोश्च धर्मशीलस्य नितरां मुनिसत्तम । तत्रांशेनावतीर्णस्य विष्णोर्वीर्याणि शंस नः॥ २ ॥ अवतीर्य यदोर्वंशे भगवान्भूतभावनः। कृतवान्यानि विश्वात्मा तानि नो वद विस्तरात् ॥३॥ निवृत्ततर्षैरुपगीयमानाद्भवौषधाच्छ्रोत्रमनोभिरामात्। क उत्तमश्लोकगुणानुवादात्पुमान्विरज्येत विना पशुघ्नात् ॥ ४ ॥ पितामहा मे समरेऽम-

---

விவரம் சொல்லப்படுகிறது. கிருஷ்ணனுடைய அவதார சரித்ர ஶ்ரவணமிருதத்தினல் திருப்தியையடைந்த பரீக்ஷித் ராஜன் சுகாசாரியரை நோக்கிப் பின்னும் கேட்கத்தொடங்குகிறார்—

பரீக்ஷித்ராஜன்—"ஹே முனிஸத்தம! உம்மால் சந்திர ஸூர்யர்களின் வம்சவிஸ்தாரமானது சொல்லப்பட்டது. இரு வம்சங்களிலும் பிறந்த அரசர்களுடைய மிக்க அத்புதமான சரித்திரமும் மிக்க மிக்க அத்புதம் வாய்ந்த தர்மசிலரான யதுவின் சரித்திரமும் சொல்லப்பட்டது. அந்த யதுவின் வம்சத்தில் அம்சமாக அல்லது அம்சத்துடன்=(ஆதிசேஷனுடன்) அவதரித்த விஷ்ணுவினுடைய லீலைகளை எங்களுக்குச் சொல்லவேண்டும். (1–2) பூதங்களை விருத்தி செய்பவரும், விஶ்வாத்மாவுமான பகவான் யதுவின் வம்சத்தில் அவதரித்து எவற்றைச் செய்தாரோ அவற்றை எங்களுக்கு விரிவாகச் சொல்லவேண்டும். (3) ஆசை யொழிந்தவர்களால் கானஞ் செய்யப்படுவதும், பிறவியாகிற பிணிக்கு மருந்தானதும், கேட்போரின் மனத்தைக் களிக்கச்செய்வதுமான உத்தம ஶ்லோகனுன பகவானுடைய குணனுவாதத்தினின்றும் *பசுஹத்தி செய்பவனைத்

---

* இங்கு அபசுக்னத் எனப் பாடம்கொண்டு ஆத்மஹத்தி செய்து கொள்ளுபவனைக் காட்டிலும் என்றும் வேறு பொருளும் கொள்ளப்படுகிறது. முக்தர், முமுக்ஷு, விஷயி ஆகிய மூவருக்குமே இந்த பகவத் குணநுவாதமானது விசேஷப்பயன் தருவதாகவாகிறது என்பது இந்த 4-வது சுலோகத்தாற் சொல்லப்படுகிறது.

रथैर्देवव्रताद्यातिरथैस्तिमिङ्गिलैः। दुरत्ययं कौरवसैन्यसागरं कृत्वाऽतरन्वत्सपदं स्म यत्प्लवाः॥ ५॥ द्रौण्यस्त्रविप्लुष्टमिदं मदङ्गं सन्तानबीजं कुरुपाण्डवानाम्। जुगोप कुक्षिङ्गत आत्तचक्रो मातुश्च मे यः शरणं गतायाः॥ ६॥ वीर्याणि तस्याखिलदेहभाजामन्तर्बहिः पूरुषकालरूपैः। प्रयच्छतो मृत्युमुतामृतञ्च मायामनुष्यस्य वदस्व विद्वन्॥७॥ रोहिण्यास्तनयः प्रोक्तो रामस्संकर्षणस्त्वया। देवक्या गर्भसंबन्धः कुतो देहान्तरं विना॥८॥ कस्मान्मुकुन्दो भगवान्पितुर्गेहाद्व्रजं गतः। क्व वासं ज्ञातिभिस्सार्धं कृत-

---

தவிர்த்து வேறு எந்தப் புருஷன் வெறுப்பையடைவான். (4) மேலும் எனது பாட்டன்மார் போரில் எவரை ஓடமாகக்கொண்டு தேவர்களை ஜயித்தவர்களும், பீஷ்மரை ஆத்யராக (முதல்வராக)க் கொண்டவர்களுமான அதிரதர்களாகிற திமிங்கிலங்களினால் தாண்டற்கரிய கௌரவஸேனையாகிற கடலைக் கொளப்படியாகச் செய்து தாண்டினரோ, எவர் சக்கிரம் போலச் சுழலுகின்ற *கதையென்ற ஆயுதத்தைத் தாங்கி சரண்புகுந்த என் தாயினது வயிற்றில் பிரவேசித்து அஶ்வத்தாமாவினது ப்ரம்ஹாஸ்திரத்தினால் பொசுக்கப்பட்டதும், குருக்கள் பாண்டவர்கள் இவர்களின் ஸந்தானத்துக்குக் காரணமானதுமான இந்த எனது சரீரத்தைக் காப்பாற்றினரோ, ஹே வித்வன்! எல்லா ப்ராணிகளுடையவும் உள் நின்று புருஷரூபத்தால் (அந்தர்யாமிரூபத்தால்) மோக்ஷத்தையும், வெளிநின்று காலரூபங்களால் ஸம்ஸாரத்தையும் தருகின்றவரும், லீலையினால் மனுஷ்ய சரீரத்தை எடுத்தவருமான அந்த கிருஷ்ணனுடைய லீலைகளைச் சொல்லுவீராக. (5-7) ஸங்கர்ஷணரான பலராமன் ரோஹிணியின் புதல்வனென உம்மால் சொல்லப்பட்டார். வேறு தேஹமில்லாது தேவகியினது கர்ப்பஸம்பந்தம் (அவருக்கு) எவ்விதம் உண்டாகும். (8) பகவானான முகுந்தன் (கிருஷ்ணன்) பிதாவின் வீட்டினின்றும் கோகுலத்தையடைந்தது எதற்காக. யாதவர்க

---

* परिभ्रमन्तमुल्काभां भ्रामयन्तं गदां मुहुः கொள்ளிக்கொப்பான கதையைச் சுற்றுகின்றவர் என முன்னர் (1-வது ஸ்கந்தம் 12 வது அத்தியாயம் 9-வது சுலோகத்தில்) சொல்லப்பட்டிருப்பதால் இங்கு आत्तचक्रः என்றவிடத்திலுள்ள चक्रः என்றதற்குக் கதை எனப்பொருள் கொள்ளப்பட்டது.

वान्सात्वतां पतिः॥ ९॥ व्रजे वसन् किमकरोन्मधुपुर्यां च केशवः। भ्रातरं चावधीत्कंसं मातुरद्धाऽतदर्हणम् ॥ १० ॥ देहं मानुषमाश्रित्य कति वर्षाणि वृष्णिभिः। मधुपुर्यां सहावात्सीत्पत्न्यः कत्यभवन्प्रभोः ॥ ११ ॥ एतदन्यच्च सर्वं मे मुने कृष्णविचेष्टितम्। वक्तुमर्हसि सर्वज्ञ श्रद्दधानाय विस्तृतम् ॥ १२ ॥ नैषातिदुःसहा क्षुन्मां त्यक्तोदमपि बाधते। पिबन्तं त्वन्मुखांभोजच्युतं हरिकथामृतम् ॥ १३ ॥ सूत उवाच ॥ एवं निशम्य भृगुनन्दन साधुवादं वैयासकिस्स भगवानथ विष्णुरातम्। प्रत्यर्च्य कृष्णचरितं कलिकल्मषघ्नं व्याहर्तुमारभत भागवतप्रधानः ॥ १४ ॥

---

ளுக்குப் பதியான பகவான் தனது பந்துக்களுடன் (கோபாலர்களுடன்) கூட எங்கு வாஸஞ்செய்தார். (9) கேசவன் கோகுலத்திலும், மதுரையிலும் வஸிக்குங்கால் செய்தது என்னை? தாயின் ப்ராதாவும் அவ்விதஞ் செய்யத்தகாதவனுமான கம்ஸனை நேரில் ஏன் கொன்றார். (10) மானுஷமான தேஹத்தை யாம்ப்ரயித்து யாதவர்களுடன் கூட மதுரையில் எத்துணை ஆண்டுகள் வஸித்தார். ப்ரபுவான கிருஷ்ணனுக்கு எத்துணைபத்நிகள் இருந்தனர். (11) எல்லாமறிந்த ஓ முனே! இவற்றையும் மற்றுமுள்ள கிருஷ்ணனது லீலை யாவையும், சிரத்தையுடன் கேட்கும் எனக்கு விரிவுபடுத்திக் கூறத்தகுதியுள்ளவராகிறீர். (12) மிக்கப் பொருத்தற்கரிதான இந்தப்பசியானது ஜலத்தைக்கூட குடிக்காதவனாக இருப்பினும் தமது முககமலத்தினின்றும் வழிந்த ஹரிகதையாகிற அமுதத்தைப்பருகுகின்ற என்னைப்பாதிக்கவில்லை" என்றார். (13) ஸூதபௌராணிகர் சௌனகாதியரை நோக்கி "ஹே ப்ருகு புத்ரரான சௌனகரே! இவ்விதம் பொருத்தமான (பரீக்ஷித்தின்) கேள்வியைக்கேட்டு *பகவத்பக்தர்களுள் சிறந்தவரும் பகவானுமான அந்த வியாஸபுத்திரர் (சுகர்) விஷ்ணுராதனை (பரீக்ஷித்தை) ப் புகழ்ந்து கலியினால் விளையும் பாபத்தைப் போக்கும் கிருஷ்ணசரிதத்தைச் சொல்லத்தொடங்கினார்" என்றார். (14)

---

* भागवतप्रधानः என்பதற்கு பகவத்பக்தர்களை ப்ரதானர்களாக = முக்யோத்தேஶ்யராகக்கொண்ட சுகர் என்றும் பொருள் கொள்ளலாம். "नित्यं विष्णुजनप्रियः" எனச் சொல்லப்படுவதே அதன் காரணமாகும்.

श्रीशुक उवाच-सम्यग्व्यवसिता बुद्धिस्तव राजर्षिसत्तम। वासुदेव कथायां ते यज्जाता नैष्ठिकी रतिः॥ १५॥ वासुदेवकथाप्रश्नः पुरुषांस्त्रीन पुनाति हि। वक्तारं पृच्छकं श्रोतॄन् तत्पादसलिलं यथा॥ १६॥ भूमिर्दृप्त नृपव्याजदैत्यानीकशतायुतैः। आक्रान्ता भूरिभारेण ब्रह्माणं शरणं ययौ॥ १७॥ गौर्भूत्वाऽश्रुमुखी खिन्ना क्रन्दन्ती करुणं विभोः। उपस्थितान्तिके तस्मै व्यसनं स्वमवोचत॥ १८॥ ब्रह्मा तदुपधार्याथ सह देवैस्तया सह। जगाम सत्रिनयनस्तीरं क्षीरपयोनिधेः॥ १९॥ तत्र गत्वा जगन्नाथं देवदेवं वृषाकपिम्। पुरुषं पुरुषसूक्तेन उपतस्थे समाहितः॥ २०॥ गिरं

---

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—ஹேராஜர்ஷிஸத்தம! உனது புத்தியானது நன்கு உறுதிப்பட்டிருக்கிறது. உறுதிப்பட்ட எந்தப் புத்தியினால் ஸ்ரீ கிருஷ்ணனுடைய கதையில் நிலைத்த அல்லது மேன்மையான ப்ரேமையானது உனக்கு உண்டாயிற்றே. (15) ஸ்ரீகிருஷ்ணனுடைய கதையைப் பற்றிய கேள்வியானது அவரது பாதத்தினின்றும் வெளிவந்த ஜலமா (கங்கையா) னதுபோல சொல்லுபவர், ப்ரஶ்னம் செய்பவர், (தனித்திருந்து) கேட்பவர் ஆகிய மூன்று புருஷர்களையும் பரிசுத்தராக்குகின்றதன்றோ. (16) பூதேவியானவள் கொழுத்த அரசர் என மாற்றுருக்கொண்ட அசுரர்களின் ஸைன்னிய சதங்களின் பதினாயிரங்களாகிற பெருஞ் சுமையால் இருத்தப்பட்டவளாய் ப்ரம்ஹதேவனைச் சரணடைந்தாள். சரண்புகுந்த (1)பூமியானவள் துயரமடைந்தவளாகக் கண்களில் நீரை வடியவிட்டுக்கொண்டு (மனது) கரையத்தக்கவாறு கதறுகின்றவளாய் ப்ரம்ஹதேவனின் அருகில் வந்து தனது கஷ்டத்தை அவரிடம் தெரிவித்தாள். (17–18) ப்ரம்ஹா அதை மனத்தில் வாங்கிப் பின்னர் தேவர்களுடனும், அப்பூதேவியுடனும் மஹாதேவனுடனும் கூடினவராய் பாற்கடலின் கரையையடைந்தார். அங்கு சென்று மனத்தை அசையாது நிறுத்தி ஜகந்நாதனும், தேவதேவனும் (2)விருஷாகபியுமான (3)புருஷனை புருஷஸூக்த மந்திரத்தி

---

(1) गौर्भूत्वा என்றதற்கு பசுவின் உருவமெடுத்து எனச் சிலர் கூறுகின்றனர். (2) वृषा=இந்திரனை अक=ப்ரம்ஹஹத்தி ரூபமான பாபத்தினின்றும் पाति=காக்கிறார் என்பதுபற்றி விருஷாகபியாவர். (3)

**समाधौ गगने समीरितं निशम्य वेधास्त्रिदशानुवाच ह। गां पौरुषीं मे शृणुतामराः पुनर्विधीयतामाशु तथैव मा चिरम् ॥ २१ ॥ पुरैव पुंसावधृतो धराज्वरो भवद्भिरंशैर्यदुषूपजन्यताम्। स यावदुर्व्या भरमीश्वरेश्वरः स्वकालशक्त्या क्षपयंश्चरेद्भुवि ॥ २२ ॥ वसुदेवगृहे साक्षाद्भगवान् पुरुषः परः। जनिष्यते तत्प्रियार्थं संभवन्तु सुरस्त्रियः ॥ २३ ॥ वासुदेवकलानन्तः सहस्र**

---

ஞல் துதித்தார். (19-20) பிரமதேவன் *தேவகாரியத்தை ஸமர்த்திக்கவேண்டி ஹிருதயாகாசத்தில் நன்கு சொல்லப்பட்ட வார்த்தையைக்கேட்டு, ஹேதேவர்காள்! புருஷனுன பகவானுற்சொல்லப்பட்ட வார்த்தையை என்னிடமிருந்து விரைவாகக் கேளுங்கள். பின்னர் தாமதமின்றி அவ்விதமே செய்யலாம் எனத் தேவர்களைப்பார்த்துச் சொல்லலானுர். பூமியினது ஜ்வர (தாப) மானது நீங்கள் தெரிவிப்பதற்கு முன்னரே அந்தர்யாமியான ஈஸ்வரனுல் அறியப்பட்டுவிட்டது. அந்த ஈஸ்வரேஸ்வரன் பூமியின் பாரத்தைத் தனது காலசக்தியினுல் குறைக்கவேண்டி எதுவரை பூமியில் ஸஞ்சரிப்பாரோ அதுவரை நீங்களும் அம்சங்களினுல் யாதவர்களிடத்தில் ஜனிக்கக்கடவீர். (21-22) பரமபுருஷனுன பகவான் வஸுதேவரின் பத்னியாரிடத்தில் (அல்லது நந்தகோபரின் பத்னியாரிடத்தில், அல்லது வசுதேவரை அடைத்துவைத்திருக்கும் காராகிருஹத்தில்) அவதரிக்கப்போகிருர். தேவஸ்திரீகள் அவருக்கு யனையாளாகவேண்டி அவதரிக்கக்கடவர். (23) தன்னையண்டினவர்களைக் காப்பவரும், ஆயிரந்தலையுடையவருமான (1)வாஸுதேவனுடைய அம்சமும் தேவனுமான ஆதிசேஷன் (2)பகவானுக்கு ப்ரியத்தைச்செய்யும் நோக்

---

புருஷ சப்தவாச்யனுன நாராயணனை * समाधौ என்ற பதத்துக்கு வம்சீதரர் இவ்விதம் பொருள் கூறுகிருர். (1) வாஸுதேவகலாநந்த: என்பதற்கு வாஸுதேவனுக்குச் சயனமூலமுண்டாகும் சுகத்தைத் தரும் ஆதிசேஷனும் என்றும் வம்சீதரர் பொருள் கூறியிருக்கிருர். (2) ராமாவதாரத்தில் தம்பியாக அவதரித்து செய்த கைங்கர்யத்தை ஏற்ற பகவான் இந்த அவதாரத்தில் தமையனுக அவதரிக்கும்படியும் அவ்விதம் செய்வது தான் எனக்கு ப்ரியத்தைத்தரும் எனவும் ஆக்ஞாபித்ததையொட்டி அவ்விதமவதரிக்கப்போகிருர் என்பது கருத்து.

यदनस्स्वराट्। अग्रतो भविता देवो हरेः प्रियचिकीर्षया ॥ २४ ॥ विष्णोर्माया भगवती यया संमोहितं जगत्। आदिष्टा प्रभुणांशेन कार्यार्थे संभविष्यति ॥ २५ ॥ इत्यादिश्यामरगणान्प्रजापतिपतिर्विभुः। आश्वास्य च महीं गीर्भिः स्वधाम परमं ययौ ॥ २६ ॥

शूरसेनो यदुपतिर्मथुरामावसन्पुरीम्। माथुराञ्छूरसेनांश्च विषयान्बुभुजे पुरा ॥ २७ ॥ राजधानी ततस्साभूत्सर्वयादवभूभुजाम्। मथुरा भगवान्यत्र नित्यं सन्निहितो हरिः ॥ २८ ॥ तस्यां तु कर्हिचिच्छौरिर्वसुदेवः कृतोद्वहः। देवक्या सूर्यया सार्द्धं प्रयाणे रथमारुहत् ॥ २९ ॥ उग्रसेनसुतः

---

குடன் பகவானுக்கு முந்தி அவதரிக்கப்போகிறார். (24) எவளால் ஜகத்தானது நன்கு மயக்கத்தையடைந்திருக்கிறதோ, பகவதியான அந்த விஷ்ணு மாயையும் ப்ரபுவினால் ஆக்ஞாபிக்கப்பட்டவளாய் அவதாரப்பிரயோஜன *காரியத்துக்குவேண்டி அம்சமாக அவதரிக்கப் போகின்றாள். (25) இவ்விதம் ப்ரஜாபதிகளுக்குப் பதியான ப்ரம்ஹதேவன் தேவக்கூட்டங்களுக்கு உத்தரவிட்டும் பூதேவியை வார்த்தைகளினால் தேற்றியும் மேலானதன ஸ்தானத்தை அடைந்தார்.

சூரஸேனன் என்ற யதுபதியானவர் மதுராபுரியில் வஸித்துக் கொண்டு மாதுரங்களென்றும் சூரஸேனங்களென்றுமான தேசங்களை முன்னர் ஆண்டனுபவித்து வந்தார். (27) எங்குபகவானான ஹரியானவர் எப்பொழுதுமே இருப்பையுடையவரோ அந்த மதுரையானது எல்லா யாதவ அரசர்களுக்கும் அன்றுதொட்டு ராஜதானியாகவாயிற்று. (28) அம்மதுரையிலோ ஒரு ஸமயம் சூரரின் புதல்வரான வஸுதேவர் விவாஹஞ் செய்துகொண்டு புதிதாக மணந்த தேவகியுடன் கூட (தனதிருப்பிடஞ் செல்லவேண்டி) தேரில் ஏறினார். (29) (1)உக்கிரஸேன ராஜனின் குமாரனான கம்ஸன்

---

* தேவகியின் கர்ப்பத்தை இழுத்தல், யசோதைக்கு மோஹத்தை யுண்டுபண்ணல் முதலிய காரியத்துக்குவேண்டி. (1) உக்கிரசேனர் என்பவர் தமயன். தேவகன் என்பவர் தம்பி. தேவகருடைய பெண் தேவகீ. உக்ரஸேனனுடைய புத்திரன் கம்ஸன். ஆகவே தனது சிறிய தகப்பன் பெண்ணாவதுபற்றி தனது தங்கையான தேவகியின் ப்ரியத்தைஸம்பாதிக்க வேண்டி தேரேறிக் குதிரையோட்டத் தொடங்கினான் என்று கருத்து.

कंसः स्वसुः प्रियचिकीर्षया। रश्मीन् हयानां जग्राह रौक्मै रथशतैर्वृतः ॥ ३० ॥ चतुश्शतं पारिबर्हं गजानां हेममालिनाम्। अश्वानामयुतं सार्द्धं रथानां च त्रिषट्शतम् ॥ ३१ ॥ दासीनां सुकुमारीणां द्वे शते समलंकृते। दुहित्रे देवकः प्रादाद्याने दुहितृवत्सलः ॥ ३२ ॥ शङ्खतूर्यमृदङ्गाश्च नेदुर्दुन्दुभयः समम्। प्रयाणप्रक्रमे तावद्वरवध्वोस्सुमङ्गलम् ॥ ३३ ॥ पथि प्रग्रहिणं कंसमाभाष्याहाशरीरवाक्। अस्यास्त्वामष्टमो गर्भो हन्ता यां वहसेऽबुध ॥३४॥ इत्युक्तस्स खलः पापो भोजानां कुलपांसनः। भगिनीं हन्तुमारब्धः

---

பொன்னாலாய நூற்றுக்கணக்கான தேர்களால் சூழப்பட்டவனாய்க் கொண்டு தங்கைக்கு ப்ரியத்தைச்செய்யுவான் கருதி குதிரைகளின் கடிவாளங்களைப் பிடித்தான். (30) பெண்ணினிடத்து வாத்ஸல்யங்கொண்ட தேவகன் (பெண் தன்வீட்டைவிட்டுப் புக்கஹம்) போகுங்கால் பொன்மாலையணிந்த நானூறு யானைகளையும், பதினைந்தாயிரம் குதிரைகளையும், ஒன்பதுநூறு, அல்லது ஆயிரத்தெண்ணூறு தேர்களையும், நன்கு அலங்கரிக்கப்பட்ட இளம்வயதுள்ள இருநூறு வேலைக்காரிகளையும் பாரிபர்ஹமாக (சீராக) பெண்ணுக்குக் கொடுத்தார். (31–32) பெண்ணும் மருமகனும் பயணமாகத் தொடங்குங்கால் சங்கம் தூர்யம் மிருதங்கம் இவைகளும், துந்துபி வாத்யங்களும் நல்ல மங்களமாகவாகும்படி ஒத்து முழங்கின. (33) வழியில் கடிவாளத்தைப்பிடித்திருக்கும் கம்ஸனை *அசரீரவாக்கானது "ஹே முட்டாளே!" எனவழைத்து "எவளை இட்டுச்செல்லுகின்றனையோ இவளது எட்டாவது (1)கர்ப்பமானது உன்னைக் கொல்லப் போகிறது" என்று சொல்லிற்று. (34) இவ்விதம் சொல்லப்பட்டவனும், வஞ்சகனும், பாபியும், போஜர்களின் குலத்துக்குத்தோஷத்தையுண்டுபண்ணுபவனுமான அந்தக் கம்ஸன் கத்தியைக் கையில் தாங்கி தங்கையைக் கொல்லவாரம்பித்தவனாய் தலைப்பின்னலைப்

---

* अस्य வாஸுதேவனுடைய शरीरम् தேஹம் அசரீரமெனப் படும். அதை ஸம்பந்தித்த வாக்கு அசரீரவாக்கெனப்படும். (1) எட்டாவது புத்திரன் என்று சொல்லாமல் எட்டாவது கர்ப்பம் என்றதானது கிருஷ்ணன் ஏழாவது புத்திரனாகவும், எட்டாவது கர்ப்பமாகவும் ஆவது பற்றியாம்.

खड्गपाणिः कचेऽग्रहीत् ॥ ३५ ॥ तं जुगुप्सितकर्माणं नृशंसं निरपत्रपम्। वसुदेवो महाभाग उवाच परिसान्त्वयन् ॥ ३६ ॥

वसुदेव उवाच—श्लाघनीयगुणश्शूरैर्भवान्भोजयशस्करः। स कथं भगिनीं हन्यात्स्त्रियमुद्वाहपर्वणि ॥ ३७ ॥ मृत्युर्जन्मवतां वीर देहेन सह जायते। अद्यवाब्दशतान्ते वा मृत्युर्वै प्राणिनां ध्रुवः ॥ ३८ ॥ देहे पञ्चत्वमापन्ने देही कर्मानुगोऽवशः। देहान्तरमनुप्राप्य प्राक्तनं त्यजते वपुः॥ ३९ ॥ व्रजंस्तिष्ठन्पदैकेन यथैवैकेन गच्छति। यथा तृणजलूकैवं देही कर्मगतिं गतः॥४०॥ स्वप्ने यथा पश्यति देहमीदृशं मनोरथेनाभिनिविष्टचेतनः। दृष्ट-

---

பிடித்தான். (35) வெறுக்கத்தக்க காரியத்தைச் செய்யத்தொடங்கினவனும், குரூரனும் வெட்கமற்றவனுமான அவனை மஹாபாகரான வஸுதேவர் பலவழியிலும் சாந்தப்படுத்தவேண்டி சொல்லத்தொடங்கினர். (36)

வஸுதேவர் சொல்லுவதாவது—"(ஹே கம்ஸ!) நீ சூரர்களால் புகழத்தக்க குணமுள்ளவனும், போஜர்களுக்குக் கீர்த்தியைத் தருபவனுமாவாய். அத்தகைய நீ ஸ்திரீயை அதிலும் தங்கையை விவாஹம் நடந்தேறிய ஸமயத்தில் கொல்லத்துணிந்தாய் என்பது எங்ஙனம்? ஹே வீர! பிறப்புள்ளவர்களுக்கு மரணமானது தேஹத்துடன் கூடவே உண்டாகிறது. இன்றைக்கோ நூறு வருஷங்களுக்கு அப்பாலோ ப்ராணிகளுக்கு மரணமேற்படுவது நிஶ்சயமே. (37-38) தேஹமானது மரணத்தையடையும் தருணத்தில் தேஹி (ஜீவன்) யானவன் தன்வசமற்றவனுய் கர்மாவையனுஸரித்து வேறு தேஹத்தை (மனத்தால்) பற்றிக்கொண்டு முன்னருள்ள தேஹத்தைவிடுகிறான். (39) நடப்பவன் ஒருகாலால் பூமியிலூன்றிக்கொண்டு மற்றொருகாலால் எவ்விதம் வேறிடஞ்செல்லுகிறானே, புல்லட்டையானது (தனது பாதி உடலால் வேறு புல்லைப்பற்றிக்கொண்டு பழைய புல்லிலுள்ள பாதி உடலை விடுகிறது) என்பது எவ்விதமோ இவ்விதமே கர்மத்தின் பயனையடைந்த ஜீவனுமாகிறான். (40) ஜாக்கிரத்தில் ஏற்பட்ட ராஜன் முதலியோரின் தரிசனத்தாலும், இந்திரன் முதலியோரின் கேள்வியாலும் அமைந்த ஸம்ஸ்காரத்துடன் கூடின மனத்தினால் அவற்றையே இடையறாது சிந்தித்துக்கொண்டு பிறகு

श्रुताभ्यां मनसानुचिन्तयन्प्रपद्यते तत्किमपि ह्यपस्मृतिः॥ ४१॥ यतो यतो धावति दैवचोदितं मनो विकारात्मकमाप पञ्चसु। गुणेषु मायारचितेषु देह्यसौ प्रपद्यमानस्सह तेन जायते॥ ४२॥ ज्योतिर्यथैवोदकपार्थिवेष्वदः समीरवेगानुगतं विभाव्यते। एवं स्वमायारचितेष्वसौ पुमान्गुणेषु रागानुगतो विमुह्यति॥ ४३॥ तस्मान्न कस्यचिद्द्रोहमाचरेत्स तथाविधः। आ-

---

தூங்குங்கால் இத்தகைய தேஹத்தை (அதாவது:—ஜாக்ரத்தில் கண்டதற்கும் கேட்டதற்குமொப்பான ராஜாதி தேஹத்தை) இவ் விதமெனப்பகுத்தறியாதவாறு ஸ்வப்பினத்தில் காண்கிறுன். க்ஷணத் துக்குள் அதேதான் நான் என எண்ணுகிறுன். அதனின்றும் ஜாக் கிரத் தேஹத்தைப்பற்றிய நினைவை இழக்கிறுன் என்பது எவ்வித மோ, நேரில் ஏற்பட்ட ராஜன் முதலியோரின் தரிசனத்தாலும், இந் திரன் முதலியோரின் கேள்வியாலும் அமைந்த ஸம்ஸ்காரத்துடன் கூடின மனத்தால் அவற்றையே இடையறுது சிந்தித்துக்கொண்டு மனோரதத்தினுல் அவற்றிலேயே பதிந்த அறிவுடையவனுகி அதே தேஹத்தைக் காண்பவனுகி க்ஷணத்துக்குள் அதேதான் நான் என வெண்ணி முந்தினதேஹத்தைப்பற்றிய நினைவை இழந்தவனுகவா கிறுன் என்பது எவ்விதமோ அவ்விதமே இங்கும் கர்மவசத்தால் வேறு தேஹத்தையடைந்து முந்தின தேஹத்தை விடுகிறுன். (41) தேஹத்துக்கு மரணம் வரும் ஸமயத்தில் பஞ்சபூதங்களும் மாயை யினுல் பற்பல தேஹரூபங்களாகச் செய்யப்படுங்கால் பலன் தரும் ஸமயத்திலுள்ள கர்மத்தினுல் ஏவப்பட்டதும், பலவாருக மாறு மியல்புடையதுமான மனம் எங்கெங்கத்தேஹத்தைப்பற்றுகிறதோ, பற்றி எதெதை பேராவலுடன் அடைந்ததோ அப்பொருளே நான் என எண்ணங்கொண்டவனுய் அவ்வவற்றில் இந்தத்தேஹியா (ஜீவ னு)னவன் அந்த மனத்துடனேயே பிறக்கிறுன். (42) இந்த ஜ்யோதிஸ்ஸானது ஜலத்துடன் கூடின குடம் முதலியவற்றில், அல் லது ஜலங்களிலும், எண்ணெய் முதலியவற்றிலும், ப்ரதிபிம்பத்தை யடைந்ததாய்க் காற்றின் வேகத்தையனுஸரித்து அசைவதுபோலத் தோற்றத்தையடைவது எவ்விதமோ இவ்விதமே இந்த ஜீவன் தனது அவித்யையினுற் செய்யப்பட்ட தேஹங்களில் ராகத்தையொட்டி ப்ர வேசித்து மிக்க மோஹத்தை=(அபிநிவேசத்தை) அடைகிறுன். (43)

त्मनः क्षेममन्विच्छन्द्रोग्धुर्वै परतो भयम् ॥ ४४ ॥ एषा तवानुजा बाला कृपणा पुत्रिकोपमा । हन्तुं नार्हसि कल्याणी मिमां त्वं दीनवत्सल ॥ ४५ ॥

श्रीशुक उवाच—एवं स सामभिर्भेदैर्बोध्यमानोऽपि दारुणः। न न्यवर्तत कौरव्य पुरुषादाननुव्रतः ॥ ४६ ॥ निर्बन्धं तस्य तं ज्ञात्वा विचिन्त्यानकदुंदुभिः। प्राप्तं कालं प्रतिव्योढुमिदं तत्रान्वपद्यत ॥ ४७ ॥ मृत्युर्बुद्धिम-

---

ஆனதுபற்றி கர்மாவையொட்டி தேஹாதிகளையெடுப்பவனும் தனக்கு க்ஷேமத்தை விரும்புபவனுமான அந்த ஆத்மா (ஜீவன்) ஹிம்ஸிப்பவனுக்கு ஹிம்ஸிக்கப்படுபவரிடமிருந்து பயம் வந்தே தீருமெனக் கண்டு ஒருவனுக்கும் தீங்கைச் செய்யலாகாது. (44) ஹேதீனவத்ஸல! இந்தத்தேவகி உனது தங்கை, பாலை, பயத்தால் உடனே கண்ணீர் வடிக்கும் ஸ்வபாவமுடையவள், பொம்மை போன்றவள். ஆகவே நீ நற்குணம்வாய்ந்த இவளைக்கொல்லத்தக்கவனன்று" என்றும்.

ஸ்ரீசுகர் சொல்லுவதாவது :— ஹே கௌரவ்ய! இவ்விதம் (1)ஸாமங்களினாலும், பேதங்களினாலும் உபதேசிக்கப்படினுங்கூட அஸுரர்களைப் பின்பற்றினவனும், இயற்கையில் க்ரூரனுமான அந்தக் கம்ஸன் விலகினானில்லை. (46) வஸுதேவர் அவனுடைய அந்தப் பிடிவாதத்தைக் கண்டு இச்சமயம் தான் நடக்கவேண்டுவது இன்னதென மனத்திலாலோசித்துக்கொண்டு ப்ராப்தமான காலரூபியான கம்ஸனை ஏமாற்றவேண்டி பின்வருமாறு மனத்தில் தீர்மானித்துக் கொண்டார். (47) நல்லறிவு படைத்தவன் (2)புத்தியின் பல

---

(1) ஸாமமாவது—ஸம்பந்தம், லாபம், உபகாரம், அபேதம், குணங்களைச் சொல்லல் ஆகிய ஐந்துமாம். பேதமாவது—திருஷ்டமாயும், அதிருஷ்டமாயுமுள்ள பயத்தைக் காட்டலாம்.

(2) "यावद्बुद्धिबलोदयम्" बुद्धि=ஞானம், बलम्=ஸாமர்த்தியம், उदयम्=வைபவம் இவையாகும். ஆகவே மிருத்யுவைப் போக்கவல்ல புத்தி, பலம், உதயம் இவைகள் எவ்வளவுண்டோ அவ்வளவையும் இவ்விஷயத்திலுபயோகிக்க வேண்டும். புத்தி பலம் முதலியன விருப்பினுங்கூட தகாததைச் செய்தாவது மிருத்யுவைத் தடுத்தலவச்யமாகிறது. அவ்விதம் செய்யாவிடில் ஜீவனுக்குக் குற்றம் சேர்ந்துவிடும். அல்லது தகாததைச் செய்தாவது மிருத்யுவைத் தடுக்குங்கால் மிருத்யுவிலகாவிடில் தகாததைச் செய்த குற்றமெதுவும் இவனுக்கு வரமாட்டாது எனலாம்.

तापोह्यो यावद्बुद्धिबलोदयम्। यद्यसौ न निवर्तेत नापराधोऽस्ति देहिनः ॥ ४८ ॥ प्रदाय मृत्यवे पुत्रान् मोचये कृपणामिमाम्। सुता मे यदि जायेरन्मृत्युर्वा न म्रियेत चेत् ॥४९॥ विपर्ययो वा किं न स्याद्गतिर्धातुर्दुरत्यया। उपस्थितो निवर्तेत निवृत्तः पुनरापतेत् ॥ ५० ॥ अग्नेर्यथा दारुवियोगयोगयोरदृष्टतोऽन्यन्न निमित्तमस्ति। एवं हि जन्तोरपि दुर्विभाव्यः शरीरसंयोगवियोगहेतुः॥ ५१ ॥ एवं विमृश्य तं पापं यावदात्मनिदर्शनम्। पूजया-

---

முதயமாகும்வரை மிருத்யுவைப்போக்க முயற்சிக்கவேண்டியவனுகிறுன். இதனுல் இந்த மிருத்யு விலகாவிட்டால் ஜீவனுக்குத் தோஷம் வந்துவிடாது. (48) மிருத்யுவான கம்ஸனுக்குப் புத்திரர்களைக் கொடுத்து ஒன்றுமறியாத இந்தத் தேவகியை மீட்பேனுக. இவளிடம் எனக்குப் புத்திரர்கள் பிறப்பார்களேயானுல் அப்பொழுது எதுவருமோ அது வரட்டும். புத்திரன் பிறக்கும்வரை இவள் உயிருடனிருப்பதுமட்டும் நிஸ்சிதம். அதற்கிடையில் மிருத்யுவான கம்ஸனே மரிப்பானுயின் அநியாயமெதுவும் நேருவதற்கில்லை. (49) புத்திரர்களும் பிறந்து மிருத்யுவான கம்ஸனும் மரிக்காதிருந்தால் எனது புத்திரனிடமிருந்தே இவனுக்கு மரணம் ஏன் உண்டாக மாட்டாது. ஈஸ்வரனுடைய ஸங்கல்பம் மாற்றமுடியாததன்ருே. (ஆகவே இப்பொழுது புத்திரனைத் தருவதாகவே ப்ரதிக்ஞை செய்வோம். அவ்விதஞ் செய்தால் கொல்லத்துணிந்த) கம்ஸன் விலகுவான். திரும்பினவன் வேறு ஸமயத்தில் மறுபடியும் வருவானேல் (அப்பொழுது அது எனது குற்றமாகவாகமாட்டாது.) (50) (காட்டிலுள்ள மரங்களை எரிக்கும்) நெருப்பு ஒருமரத்தை விடுவதற்கும் வேறு மரங்களை எரிப்பதற்கும் அம்மரங்களின் அதிருஷ்டத்தைத் தவிர்த்து வேறு காரணம் எவ்விதமில்லையோ இவ்விதமே ஜீவன் சரீரத்துடன் சேருவதர்க்கும் பிரிதலுக்குமுள்ள காரணமானது அதிருஷ்டரூபமாகவே தானுகும். (ஆகையினுல் இதற்குமேல் இந்தத்தேவகியின் அதிருஷ்டந்தான் இவளது ஜீவிதமரணங்களுக்கு நிமித்தமாகும்.) (51) இவ்விதம் தனது அறிவுக்கெட்டியவளவு ஆலோசித்துக்கொண்டு வஸுதேவர் அந்தப் பாபியை வெகுமானத்தை முன்னிட்டுக்கொண்டே புகழவாரம்பித்தார். (52) தெளிந்த முக கமல

मास वै शौरिर्बहुमानपुरस्सरम् ॥ ५२ ॥ प्रसन्नवदनांभोजो नृशंसं निरपत्र-पम्। मनसा दूयमानेन प्रहसन्निदमब्रवीत् ॥ ५३ ॥

वसुदेव उवाच—नह्यस्यास्ते भयं सौम्य यद्वै साहाशरीरवाक्। पुत्रान्समर्पयिष्येऽस्या यतस्ते भयमुत्थितम् ॥ ५४ ॥ श्रीशुक उवाच—स्वसुर्वधान्निववृते कंसस्तद्वाक्यसारवित्। वसुदेवोऽपि तं प्रीतः प्रशस्य प्राविशद्गृहम् ॥ ५५ ॥ अथ काल उपावृत्ते देवकी सर्वदेवता। पुत्रान्प्रसुषुवे चाष्टौ कन्यांश्चैवानुवत्सरम् ॥ ५६ ॥ कीर्तिमन्तं प्रथमजं कंसायानकदुन्दुभिः। अर्पयामास कृच्छ्रेण सोऽनृतादतिविह्वलः ॥ ५७ ॥ किं दुःसहं नु साधूनां विदुषां किमपेक्षितम्। किमकार्यं कदर्याणां दुःस्त्यजं किं धृतात्म

---

முள்ளவராய் தாபமுறும் மனத்துடன் புன்சிரிப்புக்கொண்டு வெட்கமிழந்த கொடியவனைப் பின்வருமாறு சொல்லத்தொடங்கினர் (53)

வஸுதேவர்—"நல்லவனே! இவளிடமிருந்து உனக்குப் பயமில்லையன்றோ. அந்த அசரீரவாக்கு எவ்விதம் சொல்லிற்றோ (அவ்விதம் நிஸ்சிதமே நடக்கும்.) எந்தப் புத்திரர்களிடமிருந்து பயமுண்டாயிற்றோ இவளது அந்தப் புத்திரர்களை உனக்குத் தந்துவிடுகிறேன்" என்றார். (54) ஸ்ரீசுகர் சொல்லுவதாவது—அவரது வார்த்தையின் ஸாரத்தையறிந்த கம்ஸன் தங்கையைக் கொல்லுவதினின்றும் விலகினான். வசுதேவரும் ப்ரீதியையடைந்து அவனைப் புகழ்ந்து வீட்டில் பிரவேசித்தார். (55) பின்னர் ப்ரஸவ காலம் ப்ராப்தமானதும் (1)ஸர்வாத்மாவான பகவானைத் தேவதையாகக்கொண்ட தேவகி ஒவ்வொரு ஆண்டுதோறும் எட்டுப் புத்திரர்களையும், (ஸுபத்திரை என்ற) பெண்ணையும் பெற்றாள். (56) அந்த வஸுதேவர் பொய்மையினின்றும் மிக்க பயந்தவராய் கீர்த்திமான் என்ற முதலிலுண்டான புத்திரனைக் கம்ஸனிடம் வெகு கஷ்டத்துடன் கொடுத்தார். (57) ஸாதுக்களுக்குப் பொருக்கமுடியாததேது? (2)வித்வான்களுக்கு எதிர்பார்க்கக்கூடியதேது? அற்பர்க

---

(1) ஸர்வதேவதாஸ்வரூபியான பகவானுக்கு ஆச்ரயமாக இருப்பதுபற்றி தேவகி ஸர்வதேவதாமயியாகிறாள் என்றும் பொருள் கொள்ளலாம். (2) பகவானே உண்மை, மற்றவையில்லை எனவறிந்தவர்க்கு.

नाम् ॥ ५८ ॥ दृष्ट्वा समत्वं तच्छौरेः सत्ये चैव व्यवस्थितम् । कंसस्तु
सुमना राजन्प्रहसन्निदमब्रवीत् ॥ ५९ ॥ प्रतियातु कुमारोऽयं न ह्यस्मादस्ति
मे भयम् । अष्टमाद्युवयोर्गर्भान्मृत्युर्मे विहितः किल ॥ ६० ॥ तथेति सुत-
मादाय ययावानकदुंदुभिः । नाभ्यनन्दत तद्वाक्यमसतोऽविजितात्मनः ॥

नन्दाद्या ये व्रजे गोपा याश्चामीषां च योषितः । वृष्णयो वसुदेवा-
द्या देवक्याद्या यदुस्त्रियः ॥ ६२ ॥ सर्वे वै देवताप्राया उभयो रपि भारत ।
ज्ञातयो बन्धुसुहृदो ये च कंसमनुव्रताः ॥ ६३ ॥ एतत्कंसाय भगवाञ्छशं-
साभ्येत्य नारदः । भूमेर्भारायमाणानां दैत्यानां च वधोद्यमम् ॥ ६४ ॥ ऋषे-
र्विनिर्गमे कंसो यदून्मत्वा सुरानिति । देवकीगर्भसंभूतं विष्णुं च स्ववधं

---

ளுக்குச் செய்யக்கூடாததென்பதேது ? மனத்தில் பகவானைத் தியா
னிப்பவர்க்கு விடக்கூடாததென்பதேது? (58) அரசனே ! வஸு
தேவருடைய அந்த நடு நிலைமையையும் ஸத்தியத்திலுள்ள பிடிப்பை
யும் கண்டு களித்த மனமுள்ள கம்ஸன் சிரித்துக்கொண்டு இதைச்
சொல்லலுற்றான். (59) "இந்தக் குழந்தைத் திரும்பிப்போகட்டும்.
இதனிடமிருந்து எனக்குப் பயமில்லையன்றோ. உங்களுடைய எட்
டாவது கர்ப்பத்தினிடமிருந்தன்றோ எனக்கு மரணம் விதிக்கப்பட்
டது" என்றான். (60) வஸுதேவர் அவ்விதமே யாகுகவென்று
சொல்லிப் புத்திரனை எடுத்துக்கொண்டு சென்றார். ஆயினும் அஸா
துவும் மனதடக்கமில்லாதவனுமான அவனது வார்த்தையை நம்பி
னாரில்லை. (61)

பரீக்ஷித்தே! நாரதபகவான் வந்து கோகுலத்திலுள்ள நந்தர்
முதலிய கோபாலர்கள் எவருண்டோ அவர்களும், இவர்களின் ஸ்தி
ரீகள் எவர்களுண்டோ அவர்களும், வஸுதேவர் முதலிய யாதவர்க
ளும், தேவகி முதலிய யது ஸ்திரீகளும், இவ்விருவருடையவும்
க்ஞாதிகளும் பந்துக்களும் நண்பர்களும், எவர் கம்ஸனை அனுஸரித்
திருக்கின்றனரோ அவர்களும் ஆகிய யாவரும் பெரும்பாலும் தேவ
தைகளேயாவர் என்பதையும், பூமிக்குச்சுமையாகவான அஸுரர்களை
ஸம்ஹரிக்க நடக்கும் முயற்சியையும் கம்ஸனிடம் தெரிவித்தார்.
(62-64) மஹருஷி சென்றதும் கம்ஸன் யாதவர்களைத் தேவர்க
ளென்றும், தேவகியின் கர்ப்பத்தினின்றுமுண்டாகின்றவனைத் தன்

प्रति ॥ ६५ ॥ देवकीं वसुदेवं च निगृह्य निगडैर्गृहे। जातं जतमहन्पुत्रं तयोरजनशङ्कया ॥ ६६ ॥ मातरं पितरं भ्रातॄन्सर्वांश्च सुहृदस्तथा। घ्नन्ति ह्यसुतृपो लुब्धा राजानः प्रायशो भुवि ॥६७॥ आत्मानमिह संजातं जानन्प्राग्विष्णुना हतम्। महासुरं कालनेमिं यदुभिस्स व्यरुध्यत ॥ ६८ ॥ उग्रसेनं च पितरं यदुभोजान्धकाधिपम्। स्वयं निगृह्य बुभुजे शूरसेनान्महाबलः॥६९॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्द्धे श्रीकृष्णावतारोपक्रमे श்रीकृष्णजन्महेतु निरूपणं नाम प्रथमोऽध्यायः ॥ १ ॥

---

னைக் கொல்லவேண்டிவரும் விஷ்ணுவென்றும் எண்ணிக்கொண்டு தேவகியையும் வஸுதேவரையும் விலங்கிட்டு வீட்டிலடைத்து அவர்களுடைய (ஒவ்வொரு) புத்திரனையும் *விஷ்ணுவென்ற சங்கை கொண்டு பிறக்கப்பிறக்கக்கொன்றுவந்தான். (65-66) பிறருயிரைக் கொண்டு தனதுயிரைக் காப்பவர்களும் பேராசை கொண்டவர்களுமான அரசர்கள் புவியில் பெரும்பாலும் தாயையும் தந்தையையும், உடன் பிறந்தோர்களையும் அவ்விதமே நண்பர்களையும், மற்றுமெல்லோரையும், கொல்லுகின்றனரென்பது பிரஸித்தமன்றோ? (67) இங்கு பிறந்த தன்னை முற்பிறவியில் விஷ்ணுவினுற் கொல்லப்பட்ட

---

* अजनशंकया என்றதனால் கம்ஸனிடம் வந்த நாரதர் கம்ஸனை நோக்கி "இவளுடைய எட்டாவது புத்திரன்" என்றதற்கு, 1 முதல் 8 முடியவுள்ளவிடத்தில் 2லிருந்து எண்ணினுல் ஒன்று 8-வதாகவும், 3லிருந்து எண்ணினுல் இரண்டு 8-வதாகவும், 4லிருந்து எண்ணினுல் மூன்று 8-வதாகவும், இவ்விதமே 5க்கு நான்கு 8-வதாகவும், 6க்கு 5ம், 7க்கு 6ம், 8க்கு 7ம் 8-வதாகவும் வரலாமாதலாலும், பொதுவாகப் பொருளை எண்ணுவதென்பது என்னும் மனிதனுடைய மனத்தைப் பொருத்ததாதலாலும், 1 முதல் 8 முடிய ஒவ்வொன்றையும் 8-வதாக கொள்ளலாம். ஆகவே விஷ்ணு உன்னை ஏமாற்றவேண்டி மத்தியிலும் அவதரிக்கக் கூடுமோதலால் இவ்விஷயத்தில் நீ கூடினவரை முன் ஜாக்கிரதையாக நடக்கவேண்டுமென்றுமுபதேசிக்க அதைக்கேட்ட கம்ஸன் 1 முதல் 8 முடியவுள்ள ஒவ்வொரு குழந்தையையும் விஷ்ணுவாக விருக்கலாமென வெண்ணிக் கொன்ருன் என வுபதேசித்ததாகக் கொள்ளவும்.

பெரிய அஸுரனுன காலநேமி எனவறிந்து யாதவர்களுடன் அவன் விரோதிக்கத் தொடங்கினன். (68) அதிகம் பலமுள்ள அவன் யது, போஜ, அந்தக தேசங்களுக்கு அதிபதியான உக்கிரஸேன னென்ற தந்தையை அடக்கித் தானே சூரஸேன தேசங்களை ஆண்டு வந்தான். (69)

இவ்விதம் பாகவதம் 10 வது ஸ்கந்தத்தில் கிருஷ்ணவதாரத்தின் தொடக்கத்தில் கிருஷ்ணவதாரத்துக்கு ஹேதுவை நிரூபணஞ் செய்தலென்ற ஒன்ருவது அத்தியாயம் முற்றிற்று.



## நாராயணீயம்.

நாராயணீயம் என்ற கிரந்தத்தில் இந்த தசமஸ்கந்தார்த்தத்தைச் சுருக்கி உபதேசிக்கின்ற சுலோகங்களையும் அந்தந்த அத்தியாயத்தின் முடிவில் எழுதி அவற்றைத் தமிழில் பெயர்க்கிறேம். அவற்றுள் முதலாவது அத்தியாயார்த்தச் சுருக்க ஶ்லோகங்களாவன—

**सान्द्रानन्दतनो हरे ननु पुरा दैवासुरे सङ्गरे**
**त्वत्कृत्ता अपि कर्मशेषवशतो ये ते न याता गतिम् ।**
**तेषां भूतलजन्मनां दितिभुवां भारेण दूरार्दिता**
**भूमिः प्राप विरिञ्चमाश्रितपदं देवैः पुरैवागतैः ॥ १ ॥**

(ப—ரை) **सान्द्रानन्दतनो!**=பூர்ணுநந்த சரீரமுள்ள **ननुहरे!**=ஹே ஹரியே! **पुरा**=முன்னர் **दैवासुरे**=தேவதைகளுக்கும் அசுரர்களுக்கு மேற்பட்ட **सङ्गरे**=சண்டையில் **त्वत्कृत्ता अपि**=உம்மால் கொல்லப் படினுங்கூட **कर्मशेषवशतः**=எஞ்ஜிய கர்மவசத்தால் **ते**=ப்ரஸித்தர்களான **ये**=எவர்கள் **गतिम्**=முக்தியை **न याताः**=அடையவில்லையோ, **भूतलजन्मनाम्**=பூமியிற்பிறந்த **तेषाम्**=அந்த **दितिभुवाम्**=அஸுரர்களுடைய **भारेण**=சுமையினுல் **दूरार्दिता**=வெகுதூரம் பீடிக்கப்பட்ட **भूमिः**=பூதேவியானவள் **पुरैवागतैः**=தனக்கு முந்தியே வந்தவர்களான **देवैः**=தேவர்களால் **आश्रित पदम्**=ஆஶ்ரயிக்கப்பட்ட (வணங்கப்பட்ட) பாதத்தையுடைய, **विरिञ्चम्**=ப்ரம்ஹதேவனை **प्राप**=அடைந்தாள் (சரண்புகுந்தாள்). (1) (எ—று)

**हा हा दुर्जनभूरिभारमथितां पाथोनिधौ पातुका-**
**मेतां पालय हन्त मे विवशतां संपृच्छ देवानिमान् ।**

इत्यादिप्रचुरप्रलापविवशामालोक्य धाता महीं
देवानां वदनानि वीक्ष्य परितो दध्यौ भवन्तं हरे ! ॥ २ ॥

(ப-ரை) हे हरे!=குருவாயூரில் வஸிக்கும் கிருஷ்ண! "हा हा!= அந்தோ ! அந்தோ !! दुर्जनभूरिभारमथिताम्=கெட்ட ஜனங்கள் மூல மேற்பட்ட அதிகச் சுமையினால் பிடிக்கப்பட்டவளும் पाथोनिधौ= சமுத்திரத்தில் पातुकाम्=மூழ்குகின்றவளுமான एताम्=இந்த என்னை पालय=காப்பீராக. हन्त=இப்பொழுது मे=எனக்கேற்பட்ட विवशताम्=நிலையற்ற தன்மையை इमान् देवान्=இந்தத்தேவர்களை, संपृच्छ= கேளும்". इत्यादिप्रचुरप्रलापविवशाम्=என்றதாதியான அதிகப் புலம் பலினால் தன்னிலையிழந்த महीम्=பூதேவியை धाता=ப்ரம்ஹதே வன் आलोक्य=கண்ணுற்று परितः=தனக்கு நான்கு பக்கங்களிலு முள்ள देवानाम्=தேவர்களின் वदनानि=முகங்களை वीक्ष्य=பார்த்து भवन्तम्=உம்மை दध्यौ=தியானஞ்செய்தார். (2) (எ-று)

ऊचे चाम्बुजभूरमूनयि सुराः सत्यं धरित्र्या वचो
नन्वस्या भवताञ्च रक्षणविधौ दक्षो हि लक्ष्मीपतिः ।
सर्वे शर्वपुरस्सरा वयमितो गत्वा पयोवारिधिं
नत्वा तं स्तुमहे जवादिति ययुस्साकं तवाकेतनम् ॥ ३ ॥

(ப-ரை) अम्बुजभूः=ப்ரம்ஹதேவன், "अयिसुराः!=ஹே தேவர் காள்! धरित्र्याः=பூதேவியினுடைய, वचः=வார்த்தையானது, सत्यं ननु=உண்மையன்றோ. अस्याः=இந்தப் பூதேவியினுடையவும், भवताञ्च=உங்களுடையவும், रक्षणविधौ=ரக்ஷணவிதியில் लक्ष्मीपतिर्हि= நாராயணனன்றோ दक्षः=ஸமர்த்தர். सर्वे वयं=நாம் யாவரும் शर्वपुरस्सराः=மஹாதேவனை முன்னிட்டுக்கொண்டு इतः=இங்கிருந்து पयोवारिधिम्=பாற்கடலை गत्वा=அடைந்து तम्=அவரை, नत्वा=வணங்கி, स्तुमहे=துதிக்கக் கடவோமாக" इति=என்று अमून्=இவர்களைப் பார்த்து ऊचे=சொன்னார். साकम्=யாவரும் ஒன்றுகூடி जवात्=வேக மாக तव=உம்முடைய, आकेतनम्=இருப்பிடத்தை (க்ஷீராப்தியை) ययुः=அடைந்தனர். (3) (எ-று)

ते मुग्धानिलशालि दुग्धजलधेस्तीरं गतास्सङ्गता
यावत्त्वत्पदचिन्तनैकमनसस्तावत्स पाथोजभूः ।
त्वद्वाचं हृदये निशम्य सकलानानन्दयन्नूचिवा-
नाख्यातः परमात्मना स्वयमहं वाक्यं तदाकर्ण्यताम् ॥ ४ ॥

(ப-ரை) ते=அவர்கள் मुग्धानिलशालि=அழகிய காற்றினால் விளங்குகின்ற दुग्धजलधेः=பாற்கடலின், तीरम्=கரையை गताः= அடைந்து सङ्गताः=ஒன்றுகூடி यावत्=எவ்வளவுக்குள் त्वत्पदचिन्तनैकमनसः=உமது திருவடியை அல்லது ஸ்வரூபத்தைத் தியானிப்ப தொன்றிலேயே மனதுடையவராயினரோ, तावत्=அவ்வளவுக்குள், सः=அந்த, पाथोजभूः=ப்ரம்ஹதேவன், त्वद्वाचम्=உமது வார்த்தையை, हृदये=மனத்தில், निशम्य=கேட்டு, सकलान्=பாவவரையும், आनन्दयन्=ஸந்தோஷப்படுத்துவதற்கு வேண்டி, परमात्मना=நாராயணனால், स्वयम=தானுகவே, अहम्=நான், आख्यातः=சொல்லப்பட்டேன், तद्वाक्यम्=அந்த வார்த்தையானது, आकर्ण्यताम्=கேட்கப் படட்டும் என ऊचिवान्=சொல்லலானார். (4) (எ-று)

जाने दीनदशामहं दिविषदां भूमेश्च भीमैर्नृपैः
तत्क्षेपाय भवामि यादवकुले सोऽहं समग्रात्मना ।
देवा वृष्णिकुले भवन्तु कलया देवाङ्गनाश्चावनौ
मत्सेवार्थमिति त्वदीयवचनं पाथोजभूरूचिवान् ॥ ५ ॥

(ப-ரை) दिविषदाम्=தேவர்களுக்கும், भूमेश्च=பூமிக்கும், भीमैः= குரூரர்களான, नृपैः=அரசர்களாலேற்பட்ட, दीनदशाम्=தாழ்மையான நிலையை, अहम्=நான், जाने=அறிவேன். तत्क्षेपाय=அந்த நிதசையைப் போக்கவேண்டி, सोऽहम्=அந்த நான், यादवकुले=யாதவ குலத்தில், समग्रात्मना=பூர்ணஸ்வரூபத்துடன், भवामि=அவதரிக்கிறேன். मत्सेवार्थम्=எனக்குப் பணிவிடைசெய்யவேண்டி, देवाः= தேவர்கள், वृष्णिकुले=யாதவகுலத்திலும், देवाङ्गनाः=தேவஸ்திரீகள், अवनौ च=பூமியிலும், कलया=அம்சத்துடன், भवन्तु=அவதரிக்கக் கடவர் என்ற त्वदीयवचनम्=உமது வசனத்தை, पाथोजभूः=ப்ரம்ஹ தேவன், ऊचिवान्=சொன்னார். (5) (எ-று)

श्रुत्वा कर्णरसायनं तव वचस्सर्वेषु निर्वापित-
स्वान्तेष्वीश गतेषु तावककृपापीयूषतृप्तात्मसु ।
विख्याते मथुरापुरे किल भवत्सान्निध्यपुण्योत्तरे
धन्यां देवकनन्दनामुदवहद्राजा स शूरात्मजः ॥ ६ ॥

(ப-ரை) हे ईश!=ஹே தேவ! कर्णरसायनम्=செவிக்கினிமையான, तव=உமது, वचः=வார்த்தையை, श्रुत्वा=கேட்டு, सर्वेषु=எல்

லாத் தேவர்களும், निर्वापितस्वान्तेषु=களித்தமனமுள்ளவர்களாகவும், तावककृपापीयूषतृप्तात्मसु=உம்முடைய கருணமுதத்தினல் திருப்தியையடைந்த மனமுள்ளவர்களாகவும், गतेषु=போனதும், भवत्सान्निध्यपुण्योत्तरे=தங்களுடைய ஸான்னித்ய புண்ணியத்தினல் மேன்மை பெற்றதும், विख्याते=பெயர்போனதுமான, मथुरापुरे=மதுராபட்டினத்தில், शूरात्मजः=சூரனுடைய புத்திரரும், सः=பிரஸித்தருமான, राजा=க்ஷத்திரிய வகுப்பிற்சேர்ந்த வஸுதேவர், धन्याम्=சிறப்புப் பெற்ற देवकनन्दनाम्=தேவகன் பெண்ணான தேவகியம்மாளை, उदवहत्किल=மணந்தார் அன்றோ. (6) (எ—று)

उद्वाहावसितौ तदीयसहजः कंसोऽथ सम्मानय-
न्नेतौ सूततया गतः पथि रथे व्योमोत्थया त्वद्गिरा ।
अस्यास्त्वामतिदुष्टमष्टमसुतो हन्तेति हन्तेरितः
सन्त्रासात् स तु हन्तुमन्तिकगतां तन्वीं कृपाणीमधात् ॥ ७ ॥

(ப—ரை) अथ=பிறகு, उद्वाहावसितौ=மணம் முடிந்ததும், एतौ=இத்தம்பதிகளை सम्मानयन्=கௌரவிக்கவேண்டி, सूततया=தேர்ப்பாகனுகவாகி पथि=வழியில் रथे=தேரில் गतः=செல்லுகின்ற तदीयसहजः=தேவகியாரது உடன் பிறந்தோனான कंसः=கம்ஸன் "अस्याः=இந்தத் தேவகியினுடைய अष्टमसुतः=எட்டாவது புத்திரன், अतिदुष्टम्=மிகத் துஷ்டனான, त्वाम्=உன்னை हन्ता=கொல்லப்போகிறான்" इति=என व्योमोत्थया=ஆகாசத்திலுண்டான त्वद्गिरा=உமது வார்த்தையினல் ईरितः=சொல்லப்படவே हन्त=அதுபோழ்து सतु=அவனே सन्त्रासात्=மிக்கபயத்தினல், अन्तिकगताम्=அருகிலிருக்கின்ற, तन्वीम्=தேவகியாரை, हन्तुम्=கொல்லுவதற்கு, कृपाणीम्=கத்தியை, अधात्=கையிலெடுத்தான். (7) (எ—று)

गृह्णानश्चिकुरेषु तां खलमतिश्शौरेश्चिरं सान्त्वनै-
र्नो मुञ्चन् पुनरात्मजार्पणगिरा प्रीतोऽथ यातो गृहान् ।
आद्यं त्वत्सहजं तथाऽर्पितमपि स्नेहेन नाहन्नसौ
दुष्टानामपि देव पुष्टकरुणा दृष्टा हि धीरेकदा ॥ ८ ॥

(ப—ரை) ताम्=அத்தேவகியாரை, चिकुरेषु=கூந்தல்களில், गृह्णानः=பற்றின, खलमतिः=கொடூர புத்தியுள்ள கம்ஸன், शौरेः=வஸுதேவரின் चिरंसान्त्वनैः=பலவாறான ஸமாதானங்களினலும், नोमुञ्चन्=

விடாதவனாய், पुनः=திரும்பவும் आत्मजार्पणगिरा=புத்திரர்களைத் தருகிறேன் என்ற வார்த்தையினால், अथ=பின்னர், प्रीतः=திருப்தி யடைந்து, गृहान्=வீட்டை, यातः=அடைந்தான். तथा=தருவதாகச் சொன்னபடியே अर्पितमपि=கொடுக்கப்பட்டபோதிலுங்கூட त्वत्सहजम्=உமது ஸஹோதரனை असौ=இந்தக் கம்ஸன் स्नेहेन=ஸ்நேஹத்தினால் नाहन्=கொல்லவில்லை. हे देव!=ஹேதேவ!, दुष्टानामपि=துஷ்டர்களுக்குங்கூட एकदा=ஒரு ஸமயத்தில் पूर्णकरुणा=நிரம்பின கருணையையுடைய धीः=புத்தியானது दृष्टा हि=காணப்பட்டிருக்கின்றதன்றோ? (8) (எ-று)

तावत्त्वन्मनसैव नारदमुनिः प्रोचे स भोजेश्वरं
यूयं नन्वसुरा स्सुराश्च यदवो जानासि किं न प्रभो!।
मायावी स हरिर्भवद्वधकृते भावी सुरप्रार्थना
दित्याकर्ण्य यदूनदूधुनदसौ शौरेश्च सूनूनहन् ॥ ९ ॥

(ப-ரை) "यूयम्=நீங்கள் असुराः=அஸுரர்கள், यदवः=யாதவர்கள் सुराश्च=தேவர்கள் ननु=அன்றோ. हे प्रभो! = ஹே ப்ரபோ! मायावी=மாயாவியான सः=அந்த, हरिः=விஷ்ணு, सुरप्रार्थनात्=தேவர்களின் வேண்டுகோளையொட்டி भवद्वधकृते=உங்களைக் கொல்ல வேண்டி भावी=அவதரிக்கப்போகிறார் इति=என்பதை किम्=என் न जानासि=அறியாதிருக்கின்றனை?" என तावत्=அப்பொழுது सः=பிரஸித்தரான नारदमुनिः=நாரத ருஷியானவர் त्वन्मनसैव=உமது ஸங்கல்பத்தை யொட்டியே भोजेश्वरम् = போஜராஜனான கம்ஸனை प्रोचे=சொன்னார். आकर्ण्य=அதைக்கேட்டு सः=அவன் यदून्=யாதவர்களை, अदूधुनत्=விரட்டியடித்தான். शौरेः=வஸுதேவருடைய सूनूंश्च=புத்திரர்களையும், अहन्=கொன்றான். (9) (எ-று)

प्राप्ते सप्तमगर्भतामहिपतौ त्वत्प्रेरणान्मायया
नीते माधव रोहिणीं त्वमपि भोस्सच्चित्सुखैकात्मकः ।
देवक्या जठरं विवेशिथ विभो संस्तूयमानः सुरैः
स त्वं कृष्ण विधूय रोगपटलीं भक्तिं परां देहि मे ॥ १० ॥

(ப-ரை) हेमाधव!=ஹேமாதவ! सप्तमगर्भताम्=ஏழாவது கர்ப்பமாகவிருத்தலை, प्राप्ते=அடைந்த अहिपतौ=ஆதிசேஷன் त्वत्प्रेरणात्=உமது ஆக்ஞையையொட்டி, मायया=மாயாதேவியினால் रोहिणीम्=

## अथ द्वितीयोऽध्यायः ॥

श्रीशुक उवाच—प्रलंब बक चाणूर तृणावर्तमहाशनैः। मुष्टिकारिष्टद्विविदपूतनाकेशिधेनुकैः ॥ १ ॥ अन्यैश्चासुरभूपालैर्बाणभौमादिभिर्युतः। यदू-

---

ரோஹிணியினிடம் नीते=சேர்க்கப்பட்டதும், हे विभो !=ஹேவிபுவான, भोः !=ஓய்! सच्चित्सुखैकात्मकः=ஸச்சிதானந்தரூபியான त्वमपि=நீரும், सुरैः=தேவர்களால், संस्तूयमानः=நன்கு துதிக்கப்படுகின்றவராய், देवक्याः=தேவகியம்மாளுடைய जठरम्=வயிற்றில், विवेशिथ=பிரவேசித்தீர். हे कृष्ण !=ஹே கிருஷ்ண ! सत्वम्=அந்த நீர், रोगपटलीम्=ரோகக் கூட்டத்தை विधूय=போக்கி मे=எனக்கு पराम्=மேலான, भक्तिम्=பக்தியை, देहि=கொடுத்தருள்வீராக.* (10) (எ-று)



## இரண்டாவது அத்தியாயம்.

(அ-கை) द्वितीये कंसघाताय देवक्या गर्भगो हरिः।
ब्रह्मादिभिः स्तुतस्साच सान्त्विततेति निरूप्यते ॥

கம்ஸனைக்கொல்லவேண்டித் தேவகியின் கர்ப்பத்தையடைந்த ஹரியானவர் ப்ரம்ஹா முதலியோரால் துதிக்கப்பட்டார் என்பதும், அந்தத் தேவகி தேருதல் செய்யப்பட்டாள் என்பதும் இரண்டாவது அத்தியாயத்தில் சொல்லப்படுகிறது—

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்—பலமுள்ள கம்ஸன் ஜராஸந்தனைப் பக்கபலமாகக்கொண்டும், ப்ரலம்பன், பகன், சாணூரன், திருணவர்த்தன், அகாஸுரன் இவர்களுடனும், முஷ்டிகன், அரிஷ்டன், த்விவிதன், பூதனை, கேசி, தேனுகன் இவர்களுடனும், பாணன், நர

---

* இந்த நாராயணகவி வாதரோகத்தால் பீடிக்கப்பட்டு அந்த வியாதியை நீக்கி அருள்புரியுமாறு குருவாயூரில் கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கும் கருணைக்கடலான கண்ணனைவேண்டினாரென்றும், அதனால் அவரது வியாதி நீங்கிவிட்டதென்றுமான கதையைப் பெரியார் சொல்லுகின்றனர். ஆகவே இதைப்படிப்பவர்க்கு சரீரப்பிணி நீங்குவதுடன், பிறவிப்பிணியும் நீங்குமாதல்பற்றி இந்த ஸ்துதியை நாம் இத்துடன் சேர்த்திருக்கிறோம்.

**नां कदनं चक्रे बली मागधसंश्रयः॥२॥ ते पीडिता निविविशुः कुरुपाञ्चाल केकयान्। शाल्वान्विदर्भान्निषधान्विदेहान्कोसलानपि॥ ३॥ एके तमनुरुन्धाना ज्ञातयः पर्युपासते। हतेषु षट्सु बालेषु देवक्या औग्रसेनिना॥ ४॥ सप्तमो वैष्णवं धाम यमनन्तं प्रचक्षते। गर्भो बभूव देवक्या हर्षशोकविवर्द्धनः॥ ५॥ भगवानपि विश्वात्मा विदित्वा कंसजं भयम्। यदूनां निजनाथानां योगमायां समादिशत्॥ ६॥ गच्छ देवि व्रजं भद्रे गोपगोभिरलंकृतम्। रोहिणी वसुदेवस्य भार्याऽऽस्ते नन्दगोकुले। अन्याश्च कंससंविग्ना विवरेषु वसन्ति हि॥ ७॥ देवक्या जठरे गर्भं शेषाख्यं धाम मामकम्। तत्सन्निकृष्य रोहिण्या उदरे सन्निवेशय॥ ८॥ अथाहमंशभागेन**

---

கன் முதலிய மற்றுமுள்ள அசுர அரசர்களுடனும் கூட யாதவர்களுக்குப் பீடையைச்செய்தவந்தான். (1–2) பீடிக்கப்பட்ட அவர்களும், குருதேசம், பாஞ்சாலதேசம், கேகயதேசம், சால்வதேசம், விதர்ப்பதேசம், நிஷததேசம், விதேஹதேசம், கோசலதேசம் இவைகளை அடைந்தனர். (3) சில ஞ்ஞாதிகள் அவனை யனுஸரித்துப் பிழைக்கத் தொடங்கினர். உக்ரஸேன குமாரனான கம்ஸனால் தேவகியினது ஆறுகுழந்தைகள் கொல்லப்பட்டதும், எவரை ஆதிசேஷனென்கின்றனரோ விஷ்ணுவினுடைய அம்சமான அவர் தேவகிக்குச் சந்தோஷத்தையும், துக்கத்தையும் வளர்க்கக்கூடிய ஏழாவது கர்ப்பமாக உண்டானர். (4–5) ஸர்வாந்தர்யாமியான பகவானும் தன்னையே நாதனாகக்கொண்ட யாதவர்களுக்குக் கம்ஸனிடமிருந்து பயமுண்டாகி இருப்பதை அறிந்து யோகமாயையைப் பார்த்து "பத்ரே! தேவி! இடையர்களாலும், பசுக்களாலும் அலங்கரிக்கப்பட்ட நந்தகோகுலத்தை யடைவாயாக. நந்தகோகுலத்தில் ரோஹிணி என்ற வஸுதேவருடைய பார்யை இருக்கிறாள். மற்ற மனைவிகளோ கம்ஸனிடமிருந்து பயந்தவர்களாய் பிறர் காணமுடியாதவிடங்களில் வஸிக்கின்றனர். தேவகியினுடைய வயிற்றிலிருக்கும் சேஷனெனப்பெயரிய என்னுடைய அம்சமான கர்ப்பத்தை அங்கிருந்து பெயர்த்து ரோஹிணியின் வயிற்றில் ஸ்தாபிப்பாயாக. ஹே சுபே! அடுத்தபடியாக நான் *அம்சபாகத்துடன் (பரிபூர்ண

---

* "அம்சபாகேந" என்ற பதத்துக்கு ஸ்ரீதரஸ்வாமிகள் ஆறுவித

देवक्याः पुत्रतां शुभे। प्राप्स्यामि त्वं यशोदायां नन्दपत्न्यां भविष्यसि॥९॥ अर्चिष्यन्ति मनुष्यास्त्वां सर्वकामवरेश्वरीम्। धूपोपहारबलिभिस्सर्वकाम वरप्रदाम् ॥ १० ॥ नामधेयानि कुर्वन्ति स्थानानि च नरा भुवि। दुर्गेति भद्रकालीति विजया वैष्णवीति च ॥ ११ ॥ कुमुदा चण्डिका कृष्णा माधवी कन्यकेति च। माया नारायणीशानी शारदेत्यंबिकेति च॥ १२ ॥ गर्भसंकर्षणात्तं वै प्राहुस्संकर्षणं भुवि। रामेति लोकरमणाद्बलं बलवदुच्छ्रयात् ॥१३॥

संदिष्टैवं भगवता तथेत्योमिति तद्वचः। प्रतिगृह्य परिक्रम्य गां गता तत्तथाकरोत्॥ १४॥ गर्भे प्रणीते देवक्या रोहिणीं योगनिद्रया। अहो

---

ரூபத்துடன்) தேவகிக்குப் புத்திரனுகவாகுதலை அடையப்போகிறேன். நீ நந்தகோபருடைய பத்தினியான யசோதையினிடத்தில் ஜனிக்கப்போகின்றனை. புத்திரன் முதலிய ஸர்வத்தையும் விரும்புகின்றவர்களுக்கு மேலான ஈப்ஸ்வரியும், எல்லாக் காமவரங்களையும் தருபவளுமான உன்னை மனிதர்கள் தூபம், உபஹாரம், பலி, இவற்ருல் அர்ச்சிக்கப்போகின்றனர். பூமியில் மனிதர் (உனக்கு) ஸ்தானங்களையும், (காமரூபம் முதலிய ஆலயங்களையும்) துர்க்கை என்றும், பத்ரகாளி என்றும், விஜயை என்றும், வைஷ்ணவி என்றும், குமுதை, சண்டிகை, க்ருஷ்ணை, மாதவி, கன்னிகை என்றும், மாயை, நாராயணி, ஈஶானி, சாரதை என்றும், அம்பிகை என்றுமான பெயர்களையும் இடப்போகின்றனர். கர்ப்பத்தினின்றும் இழுக்கப்பட்டதிலிருந்து அவரை ஸங்கர்ஷணன் என்றும்,உலகை ரமிக்கச் செய்வதுபற்றி ராமன் என்றும், பலமுள்ளவர்களுள் சிறந்தவராயிருப்பதுபற்றி பலன் என்றும் பூமியிலுள்ளவர் சொல்லப்போகின்றனர்'' என ஆஜ்ஞாபித்தார். (6–13)

இவ்விதம் பகவானினுலாஜ்ஞாபிக்கப்பெற்ற யோகமாயை அவ்விதமே ஆகட்டுமெனத் திரும்பவுமாதரவுடன் அவ்வார்த்தையைப்

---

மான பொருள் கூறியிருக்கின்றனர். अंशैः शक्तिभिः भजते=अधितिष्ठति सर्वान् ब्रह्मादिस्तंबपर्यन्तानिति अंशभागः तेन परिपूर्णरूपेणेत्यर्थः॥ தனது சக்திகளால் ப்ரம்ஹா முதல் ஸ்தம்பம் என்ற சிறு பூச்சியீருகவுள்ள யாவையும் தன் வசமாக்குவதுபற்றி அம்சபாகராகிருர். அதாவது: பரிபூர்ண ரூபமுள்ளவர் என்றும். மற்றமுள்ள ஐந்து பொருள்களையும் ஆங்கே கண்டுகொள்க.

विस्रंसितो गर्भ इति पौरा विचुक्रुशुः ॥ १५ ॥ भगवानपि विश्वात्मा भक्तानामभयंकरः। आविवेशांशभागेन मन आनकदुन्दुभेः ॥ १६ ॥ स बिभ्रत्पौरुषं धाम भ्राजमानो यथा रविः। दुरासदोऽतिदुर्धर्षो भूतानां संबभूव ह ॥ १७ ॥ ततो जगन्मङ्गलमच्युतांशं समाहितं शूरसुतेन देवी। दधार सर्वा-

---

பெற்று அவரை வலம் வந்து பூமியையடைந்து அதை அவ்விதமே செய்தாள். (14) யோகநித்ரை (யோகமாயை) யினால் தேவகியின் கர்ப்பமானது ரோஹிணியினிடம் கொண்டுபோகப்பட்டதும் அந்தோ! தேவகியின் கர்ப்பம் கரைந்துவிட்டதெனப் பட்டினத்து ஜனங்கள் வாய்விட்டலறினர். (15) எல்லாப் பொருளுக்கும் ஆத்மாவும் பக்தர்களுக்கு அபயமளிப்பவருமான பகவானும் பரிபூர்ணரூபத்துடன் வஸுதேவருடைய மனத்தில் (1)ஆவேசத்தையடைந்தார். (16) புருஷாகாரமாகவான தேஜஸ்ஸைத் தரிக்கும அந்த வஸுதேவர் (நடுப்பகலில்) பிரகாசிக்கும் ஸூரியன் போல உயிர்களுக்கு அருகிலண்ட முடியாதவராகவும், சப்ஸாதிகளால் அதட்ட முடியாதவராகவும் ஆனார். (17) பின்னர் சுத்த ஸத்வையான தேவியார் ஜகத்துக்கு உருக்கொண்ட மங்களமும், அழியாத ஐஸ்வர்யாதிகளையுடையதும், எல்லாவற்றுக்கும் ஆத்மாவாகவானதும், தன்னிடத்தில் முன்னரே ஆத்மாவாகவிருப்பதும், வஸுதேவரால் நன்கு (2)மானஸ தீக்ஷைமுறையால் சேர்ப்பிக்கப்பட்டதுமான பகவத்ரூபத்

---

(1) 'விச்வாத்மா' என்றதனால் வஸுதேவருடைய மனத்திலும் அவரிருக்கவேண்டுவது அவச்யமாகின்றமையின் திரும்பவும் வஸுதேவருடைய மனத்தில் ஆவேசித்தார் என்றதிலிருந்து எங்கும் நீக்கமற நிறைந்துள்ள தனது ஸ்வரூபத்தை மற்றவர் போல வஸுதேவரும் இதுவரை அறியாதிருந்ததுபோல இனியுமிராமல் ஸ்வேச்சையால் தானெடுத்த பால கோபாலரூபத்தை மனத்தில் கண்டு களிக்கட்டுமென ஆண்டவன் திருவுள்ளம் பற்றினர் என்பது கருத்து. ஆனதுபற்றியேதான் प्रविवेश என்று சொல்லாமல் आविवेश எனவுபதேசிக்கப்பட்டது என்றும் கொள்ளவும். ஆகவே ஜீவர்களுக்குப்போல சுக்ல சோணித ஸம்பந்தமெதுவுமிங்கில்லை என்பது நிச்சிதமாக ஏற்பட்டது.

(2) குளார்ணவம் என்ற மந்திர சாஸ்திரத்தில் தீக்ஷைமுறையை உபதேசிக்குமிடத்து பின்வருமாறு கூறப்பட்டிருக்கிறது. அதாவது:—

त्मकमात्मभूतं काष्ठा यथानन्दकरं मनस्तः॥१८॥ सा देवकी सर्वजगन्निवास निवासभूता नितरां न रेजे। भोजेन्द्रगेहेऽग्निशिखेव रुद्धा सरस्वती ज्ञान-

---

தை (1)சந்திரனைக்கிழக்கானதுபோல மனத்தினால்தரித்தாள். (மனத்தில் பெற்றுக்கொண்டாள்.) (18) அந்தத் தேவகியானவள் எல்லா ஜகத்துக்கும் இருப்பிடமான பகவானுக்கு இருப்பிடமாக விருப்பினுங்கூட குடம் முதலியவற்றில் மறைக்கப்பட்ட தீபசிகைபோலும் அஞ்ஞானவஞ்சகனிடத்தில் மறைக்கப்பட்ட சோபனையான ஸரஸ்வதிபோலும் கம்ஸனுடைய வீட்டில் மறைக்கப்பட்டவளாய் (2)மிக்க

---

स्पर्शदीक्षा वेधदीक्षा दृग्दीक्षाचेति भेदतः। दीक्षा तु त्रिविधा प्रोक्ता पार्वत्यै शंकरेण वै ॥
यथा पक्षी स्वपक्षाभ्यां शिशून् संवर्धयेच्छनैः। स्पर्शदीक्षोपदेशस्तु तादृशः कथितः प्रिये ॥
यथा कूर्मः स्वतनयान् ध्यानमात्रेण पोषयेत्। वेधदीक्षोपदेशस्तु मानसः स्यात्तथाविधः ॥
स्वापत्यानि यथा मत्स्यो वीक्षणेनैव पोषयेत्। दृग्दीक्षाया उपदेशस्तादृशः कथितः प्रिये ॥

அதாவது:—ஸ்பர்சதீக்ஷை, வைததீக்ஷை, த்ருக்தீக்ஷை என தீக்ஷை மூன்றுவிதமாகவாகும் எனப் பார்வதிக்குச் சங்கரருபதேசித்தார். பரவை இரக்கைகளால் தனது முட்டையை அடைகாத்து மெதுவாக வளர்ப்பது எவ்விதமோ இவ்விதமே ஆசிரியர் தனது கையால் சிடனைத் தடவிக் கொடுத்தல் ஸ்பர்சதீக்ஷை எனப்படும். ஆமையானது தியானமாத்திரத்தினால் தனது குழந்தையைப்போஷிப்பது எவ்விதமோ இவ்விதமே ஆசிரியர் தான் அனுபவிக்கும் பகவத்ருபம் சிடனுக்கும் மனத்தில் தோன்றட்டும் என மனத்தாலெண்ணுவது வைததீக்ஷை எனப்படும். மீன் தனது குழந்தைகளைக் கண்ணின் பார்வையினாலேயே வளர்ப்பது எவ்விதமோ இவ்விதமே ஆசிரியர் கண்ணினால் தனது சிடனைக் குளிரப்பார்ப்பது திருக்தீக்ஷை எனப்படும் என்றும். ஆகவே இங்கு சொல்லிய இரண்டாவதான வைததீக்ஷா முறையினால் வஸுதேவர் தனது மனத்தில் தோன்றின ஸ்ரீகோபாலனது ஸ்ரீமூர்த்தியை தேவகியும் அனுபவிக்கட்டும் என எண்ணத் தேவகி அம்மாளும் அவ்விதமே அம்மூர்த்தியை மனத்தில் வாங்கித் தியானித்துவந்தாளெனவேற்பட்டது.

(1) கிழக்கில் சந்திரனுதயமாவதைக் கொண்டு அது சந்திரனை உண்டுபண்ணினதாக எவ்விதமாகாதோ அவ்விதமே தேவகியினிடமிருந்து ஸ்ரீகோபாலன் வெளிவந்ததிலிருந்து ஸ்ரீதேவகி ப்ரபுவை உண்டுபண்ணினவளாகவாகமாட்டாள் என்றேற்பட்டது.

(2) மூலத்தில் "नितरां न रेजे" மிக்கவிளங்கினாளில்லை என்றதனால் ஆனந்த ரூபியான ஸ்ரீகோபாலன் ஹ்ருதயத்தில் பிரகாசிப்பதன்

खले यथा सती ॥ १९ ॥ तां वीक्ष्य कंसः प्रभया जितान्तरां विरोचयन्तीं भवनं शुचिस्मिताम्। अहैष मे प्राणहरो हरिर्गुहां ध्रुवं श्रितो यन्न पुरेयमीदृशी ॥ २० ॥ किमद्य तस्मिन्करणीयमाशु मे यदर्थतन्त्रो न विहन्ति विक्रमम्। स्त्रियाः स्वसुर्गुरुमत्या वधोऽयं यशः श्रियं हन्त्यनुकालमायुः ॥ २१ ॥ स एष जीवन्खलु संपरेतो वर्तेत योऽत्यन्तनृशंसितेन। देहे मृते तं मनुजाः शपन्ति गन्ता तमोऽन्धं तनुमानिनो ध्रुवम् ॥ २२ ॥ इति घोरतमा-

---

ப்ரகாசத்தையடைந்தாளில்லை. (19) கம்ஸன், ஸ்ரீகோபாலனை ஹிருதயத்திலுடையவளும், காந்தியினால் வீட்டைப் பிரகாசப்படுத்துபவளும், இயற்கையில் அழகிய புன்சிரிப்புள்ளவளுமான அந்தத்தேவகியை கண்ணுற்று இந்தத் தேவகி யாதுகாரணத்தினால் முன்னர் இம்மாதிரி இருந்தாளில்லையோ அக்காரணத்தினால் எனது ப்ராணனைக் கொள்ளை கொள்ளும் இந்த விஷ்ணு இவளது ஹிருதய குஹையில் பிரவேசித்திருக்கிறார் என்பது நிஸ்சயம் எனத்தன்னுள்ளில் சொல்லிக்கொண்டான். (20) (1)இவர் காரியத்தில் குறியுடையவராதலால் தனது சக்தியை வீணாக்கிக் கொள்ளமாட்டார் என்பதுபற்றி அந்த விஷ்ணு விஷயத்தில் இப்பொழுது என்னால் விரைவில் செய்யக்கூடியது என்னை? ஆனால் ஸ்திரீ, அதிலும் தங்கை, அதிலும் கர்ப்பிணி ஆகிய இவளின் இந்த வதமானது புகழையும், ஐஸ்வரியத்தையும், ஒவ்வொரு நிமிஷத்திலும் ஆயுளையும் அழித்துவிடும். (21) எவன் மிக்கக் கொடூரமான செய்கையுடனேயே வாழ்கின்றானோ அந்த இவன் பிழைத்திருக்கும் பிணமல்லவோ. உயிருடனிருக்கும் தருணத்தில் மனிதர் அவனைச் சபிக்கின்றனர். தேஹமிறந்ததும் பாபிக்கேற்பட்டுள்ள அந்தம்தமஸ்ஸென்ற நரகத்தை அடை

---

மூலம் ஸர்வ ஜனங்களுடையவும் மனத்தைக் கவரத்தக்கவாறு இந்த அம்மாள் பிரகாசிக்கவேண்டுவது அவசியமாயினும் கம்ஸனுடைய வீட்டில் அடைபட்டிருப்பதுபற்றிப் பிறர்க்கு ஆனந்தத்தை இவளது மூர்த்தி தராவிடினும் தனது திருவுள்ளத்தில் பரமானந்தத்தை அனுபவித்துவந்தாள் எனப் பெறப்பட்டது.

(1) "अर्थतन्त्रो न विहन्ति विक्रमम्" என்றதற்கு மனிதன் காரியத்தில் குறியுடையவனாயினுங்கூட தனது பராக்கிரமத்தை வீணாக்கிக் கொள்ள மாட்டான் என்பதுபற்றி என்றும் வேறு பொருள் கொள்ளலாம்.

द्भावात्सन्निवृत्तः स्वयं प्रभुः। आस्ते प्रतीक्षंस्तज्जन्म हरेर्वैरानुबन्धकृत्॥ २३॥ आसीनः संविशंस्तिष्ठन्भुञ्जानः पर्यटन्महीम्। चिन्तयानो हृषीकेशमपश्यत्तन्मयं जगत्॥ २४॥ ब्रह्मा भवश्च तत्रैत्य मुनिभिर्नारदादिभिः। देवैः सानुचरैः साकं गीर्भिर्वृषणमैडयन्॥ २५॥

देवा ऊचुः—सत्यव्रतं सत्यपरं त्रिसत्यं सत்यस्य योनिं निहितञ्च सत्ये। सत्यस्य सत्यमृतसत्यनेत्रं सत्यात्मकं त्वां शरणं प्रपन्नाः॥ २६॥

---

வான் என்பதும் நிச்சிதமே. (22) ப்ரபுவான கம்ஸன் இவ்வித மாலோசித்தவனாய் மிக்கக் கொடூரமான காரியத்தினின்றும் தானே விலகி அதிக விரோதத்தைச்செய்ய நோக்குடையவனாய் அந்தப் பகவானுடைய அவதாரத்தை எதிர் பார்த்துக்கொண்டு நின்றான். (23) ஹ்ருஷீகேசனைச் சிந்திப்பவனான கம்ஸன் ஓராஸனத்தில் உட்காரும்பொழுதும், படுக்கையில் படுக்கும்பொழுதும், ஓரிடத்தில் நிற்கும்பொழுதும், சாப்பிடும்பொழுதும், பூமியிற் சுற்றும்பொழுதும், ஜகத்து விஷ்ணுமயமாக இருப்பதைக் கண்டான்.* (24) ப்ரம்ஹ தேவனும் மஹாதேவனும் (1)பூதேவியும் நாரதர் முதலிய முனிகளுடனும், வேலைக்காரர்களுடன் கூடின தேவர்களுடனும் கூட அங்கு வந்து தமது வார்த்தைகளால் காமத்தை வர்ஷிக்கும் பகவானை (பின் வருமாறு) ஸ்துதித்தனர். (25)

---

* பகவதவதாரத்தை எதிர்பார்த்த கம்ஸன் களைத்து ஓராஸனத்தி லுட்காரப்போகுங்கால் அவ்வாஸனத்தில் பகவத்ருபமான ஒரு குழந்தையிருக்கக் கண்டு குழந்தையின்மேல் உட்காரத்துணிந்தோமே எனத்தனை வெறுத்துக்கொண்டான். அதைவிடுத்துப் படுக்கையில் படுக்கப்போனான். அங்கும் அக்குழந்தையைக் கண்டான். அதைவிடுத்து வேறிடத்தில் நிற்கத்தொடங்கினான். அங்கும் காலடியில் அக்குழவியைக் கண்ணுற்றான். அதைவிடுத்துச் சாப்பிட உட்கார்ந்தான். அன்னமிருக்கவேண்டிய விடத்தில் அக்குழந்தையையே கண்ணுற்றான். அதைவிடுத்து வெளியில் நடக்கத் தொடங்கினான். காலடிவைக்கத் தொடங்குங்கால் அங்கு ஒரு குழந்தையிருப்பதாகக் கண்டான். ஆகவே உலகம் முழுதும் பகவன்மயமாகவே கம்ஸனுக்குத் தோற்றத்தையடைந்தது.

(1) ஐடயந் ஸ்துதித்தனர் எனப் பன்மைசொல்லியிருப்பதைக் கொண்டும் भवश्च என்றவிடத்தில் च என்ற சப்தமிருப்பதைக்கொண்டும் பூதேவியும் என்று சேர்த்துக்கொண்டு உரை எழுதப்பட்டது.

एकायनोऽसौ द्विफलस्त्रिमूलश्चतूरसः *पञ्चशिफः षडात्मा । सप्तत्वगष्टविट-

தேவர்கள்—"ஸத்யமான ஸங்கல்பமுள்ளவரும், ஸத்தியத்தை மேலான ப்ராப்தி ஸாதனமாகவுடையவரும், மூன்று காலங்களிலும் ஸத்தியமானவரும், அதாவது: ஸத் என்ற பூமி ஜலம் தேஜஸ் இவற்றுக்கும், த்யத் என்ற வாயு ஆகாசம் இவற்றுக்கும் காரணமானவரும் என்றும். அவ்விதமே ஸத் என்ற பூமி ஜலம் தேஜஸ் இவற்றிலும், த்யத் என்ற வாயு ஆகாசம் இவற்றிலும் அந்தர்யாமியாக நிற்பவரும், ஸத்யத்துக்கும் (முற்கூறிய பஞ்சபூதங்களுக்கும்) ஸத்யமானவரும், அதாவது:—அவையழிந்தபோதிலும் தானழியாமல் எஞ்ஜியிருப்பவரும் என்றும். ருதஸத்யநேத்ரரும்=அதாவது: ருதமென்ற மிக்க உண்மையான வார்த்தைக்கும், ஸத்யமென்ற ஸமதர்சனத்துக்கும் ப்ரவர்த்தகரும் என்றும். இம்முறையாக ஸத்யாத்மாவுமான உம்மைச்சரண்புகுந்தோம். (26) இந்தப் பழமையான விருக்ஷ (ஸம்ஸார) மானது ப்ரகிருதியொன்றையே ஆச்ரயித்ததாகவும், ஸுகம் துக்கம் என்ற இரண்டு பழங்களுள்ளதாகவும், ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற மூன்று குணங்களை வேராகக்கொண்டதாகவும், அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்கு ரஸங்களுள்ளதாகவும், ஐம்புலன்களாகிற ஐந்து விழுதுகளுள்ளதாகவும், பசி தாகம் மூப்பு மரணம் சோகம் மோஹம் இவையாகிற ஆறுஸ்வபாவமுள்ளதாகவும், தோல் ரக்தம் மாம்ஸம், மேதஸ் (ஊந்தண்) எலும்பு, மஜ்ஜை (எலும்புக்குள்ளிருக்கும் பசை) சுக்ரம் என்றஏழுபட்டைகளுள்ளதாகவும், ஐந்துபூதங்கள், மனஸ், புத்தி, அஹங்காரம் என்ற எட்டுக்கிளைகளுள்ளதாகவும், இரண்டு கண்கள், இரண்டு காதுகள், இரண்டு மூக்குகள், ஒருவாய், ஒரு நீர் தவாரம், ஒரு மலதுவாரம் என்ற ஒன்பது ஓட்டைகளுள்ளதாகவும், ப்ராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன், நாகன், கூர்மன், க்ருகரன், தேவதத்தன், தனஞ்ஜயன் என்ற 10 ப்ராணன்களாகிற பத்து இலைகளையுடையதாகவும், ஜீவன் அந்தர்யாமி என்ற இரண்டு பக்ஷிகளையுடையதாகவுமன்றோ

* पञ्चविधः என்றும் பாடமுண்டு. இப்பாடப்படியே ஸ்ரீதரீய வியாக்கியானமுமிருக்கின்றது. ஆயினும் शिफः என்பது ப்ராசீன பாடமாகையால் அதுவே நம்மால் ஒப்பப்பட்டது.

पो नवाक्षो दशच्छदो द्विखगो ह्यादिवृक्षः ॥ २७ ॥ त्वमेक एवास्य सतः प्रसूतिस्त्वं सन्निधानं त्वमनुग्रहश्च । त्वन्मायया संवृतचेतसस्त्वां पश्यन्ति नाना न विपश्चितो ये ॥ २८ ॥ विभर्षि रूपाण्यवबोध आत्मा क्षेमाय लोकस्य चराचरस्य । सत्त्वोपपन्नानि सुखावहानि सतामभद्राणि मुहुः खलानाम् ॥ २९ ॥ त्वय्यम्बुजाक्षाखिलसत्वधाम्नि समाधिनावेशितचेतसैके । त्वत्पादपोतेन महत्कृतेन कुर्वन्ति गोवत्सपदं भवाब्धिम् ॥ ३० ॥ स्वयं समु-

---

இருக்கிறது.* (27) கார்யமான இந்த ப்ரபஞ்சத்துக்கு நீர் ஒருவரே உத்பத்திகாரணமாகவும், நீரே லயஸ்தானமாக (ஒடுங்குமிடமாக) வும், நீரே பாலகராகவும் ஆகின்றீர். இவ்விதமிருக்க, உமது மாயையினால் நன்கு மறைக்கப்பட்ட அறிவையுடையவர்கள் உம்மைப் பலவாறாகப்பார்க்கின்றனரே அன்றி எவர் சிறந்த அறிவையுடையவரோ அவர் (அவ்விதம்) பார்ப்பதில்லை. (28) அறிவுருவ ஆத்மாவான நீர் அசையுமசையாப்பொருள் ரூபமான உலகின் க்ஷேமத்துக்கு வேண்டி ஸத்வகுணம் பொருந்தியனவும், தர்மவழியிலிருப்பவர்க்குச் சுகத்தைத் தருவனவும், அதர்மவழி செல்லுபவர்க்கு நாசத்தைத் தருவனவுமான ரூபங்களை அடிக்கடி எடுக்கின்றீர். (29) (1)ஹே அம்புஜாக்ஷ! சில முக்கியர்களான விவேகிகள் எல்லா ஸத்வ குணங்களுக்கும் இருப்பிடமான உம்மிடத்தில் ஸமாதியினால் பற்றும்படி செய்யப்பட்ட மனதாகிற நிமித்தத்தினால் பற்றப்பட்டதும் மஹான்களால் ஸேவிக்கத்தக்கதாக ஸம்பாதிக்கப்பட்டதுமான உமது பாதமாகிற ஓடத்தினால் பிறவிக்கடலை பசுங்கன்றின் குளப்படியாகச் செய்கின்றனர். (30)

---

* இந்த 27-வது சுலோகத்தால் ஸமஷ்டிவ்யஷ்டிரூபமான இந்த ப்ரபஞ்சமானது உற்று நோக்குங்கால் உண்மையில் உம்மைவிட வேறாக இல்லாததுபற்றியும், தாங்களே ஸர்வஸிருஷ்டிக்கும் ஆதிகாரணமாகயிருப்பதிலிருந்து ஸர்வேச்வரனாகவிருப்பதுபற்றியும் நாங்கள் யாவரும் தங்களைச் சரண்புகுந்தது பொருத்தமானதே என்பது தெரிவிக்கப்பட்டது.

(1) சில முக்யாதிகாரிகள் பக்திமார்க்கத்திலீடுபட்டு மஹான்கள் காட்டிய வழியைப் பின்பற்றி உமது சரணபஜனஞ்செய்து இதனாலேயே முக்தியையடைகின்றனர் என வுபதேசிக்கப்பட்டது.

त्तीर्य सुदुस्तरं द्युमन्भवार्णवं भीममदभ्रसौहृदाः। भवत्पदाम्भोरुहनावमत्र ते निधाय याताः सदनुग्रहो भवान्॥३१॥ येऽन्येऽरविन्दाक्ष विमुक्तमानिनस्त्वय्यस्तभावादविशुद्धबुद्धयः। आरुह्य कृच्छ्रेण परं पदं ततः पतन्त्यधोऽनादृतयुष्मदङ्घ्रयः॥ ३२॥ तथा न ते माधव तावकाः क्वचिद्भ्रश्यन्ति मार्गात्त्वयि बद्धसौहृदाः। त्वयाभिगुप्ता विचरन्ति निर्भया विनायकानीकप

---

ஹே ஸ்வப்ரகாச! அந்தமஹான்கள் (எல்லா வுயிர்களிடத்திலும்) அதிகமான ப்ரீதியுடன் கூடினவர்களாயிருப்பதால் தாண்டற்கரிதானதும் பயங்கரமானதுமான பிறவிக்கடலை தாங்கள் தாண்டி உம்முடைய சரணாரவிந்தமாகிற ஓடத்தை இவ்விடத்திலேயே வைத்துவிட்டு (அதாவது: பக்திமார்க்க ஸம்பிரதாயத்தை ஏற்படுத்திவிட்டு என்றும். ஸம்ஸார ஸமுத்திரத்தின் கரையை=முக்தியை) அடைந்தனர். நீர் ஸாதுக்களான பக்தர்களை அனுக்கிரஹிப்பவராகவன்றோ இருக்கின்றீர். (31) ஹே அரவிந்தாக்ஷ! மற்றுமுள்ள எவர் (பக்திமார்க்கத்தில் பற்றில்லாத எவர்) முக்தர்களாகவாகிவிட்டோமென வெண்ணுகின்றவர்களாய் உம்மிடத்தில் செல்லாத மனமுள்ளவர்களாயிருப்பதுபற்றி சுத்தமான அறிவற்றவர்களாகின்றனரோ அவர் மோக்ஷத்துக்கு ஸமீபத்திலிருக்கின்ற ஸ்தானத்தை (அதாவது:—நல்ல குலம் தவம் வித்யை முதலியவற்றை என்றும்.) வெகு கஷ்டப்பட்டு அடைந்தும் உமது சரணத்தைப்பற்றாமைபற்றி அங்கிருந்து கிழில் விழுந்து விடுகின்றனர்.* (32) ஆயினும் மாதவ!, ப்ரபோ! தங்களுடைய பக்தர்கள் உம்மிடத்தில் ஊன்றின ப்ரேமையுள்ளவர்களாயிருப்பதுபற்றி ஒருபொழுதும் பக்திமார்க்கத்தினின்றும் நழுவுவதில்லை. (அவர்கள்) தங்களால் காக்கப்பட்டவர்களாய் இடையூறைத்தரும் யாவற்றையும் காப்பவை எவையோ அவற்றின்

---

* வெகு ஜன்மங்களிற் செய்த புண்ணியவசத்தால் நற்குடிப்பிறப்பு, தவம், வித்யை இவற்றையடைந்தும் எவர் பகவத் சரணாரவிந்தத்தை ஆச்ரயித்து பக்தி செய்யாதிருக்கின்றனரோ அவர் அத்தகைய பிறவி, தவம், வித்யை இவற்றையிழந்து திரும்பவும் பிறவிக்கடலிலேயே சுழலுகின்றனர். ஆகவே நற்குடிப்பிறப்பு முதலியவற்றையடைந்தவர் தன்பிறவி வீணாகாதவாறு பகவத்பக்தியிலீடுபடவேண்டுவது அவச்யமென்றேற்பட்டது.

**मूर्धसु प्रभो ॥ ३३ ॥ सत्त्वं विशुद्धं श्रयते भवान्स्थितौ शरीरिणां श्रेय उपायनं वपुः। वेदक्रियायोगतपस्समाधिभिस्तवार्हणं येन जनः समीहते ॥३४॥ सत्त्वं न चेद्धातरिदं निजं भवेद्विज्ञानमज्ञानभिदापमार्जनम्। गुणप्रकाशैरनुमीयते भवान्प्रकाशते यस्य च येन वा गुणः ॥ ३५ ॥ न नामरूपे गुणजन्म**

---

தலைகளில் எவ்வித பயமுமற்றவர்களாய் (1)ஸஞ்சரிக்கின்றனர்.(33) (அதிகாரி) ஜனமானது எந்தச்சரீரமூலம் வேதங்கள், க்ரியா யோகங்கள், தவம், ஸமாதி இவைகளைக்கொண்டு தங்களுடைய பூஜையைச் செய்கின்றதோ, ப்ராணிகளுக்குக் கர்மபலனைத்தருகின்ற சுத்தஸத்வமயமான அந்தச் சரீரத்தைத்தாங்கள் ரக்ஷணத்துக்குவேண்டி எடுக்கின்றீர்கள். (34) ஹே தாத: ! ஸத்வமயமானதும் பிறரிடத்திலமையாததுமான இந்த உமது சரீரம் (இல்லாதவரை) (2)அக்ஞானத்தையும்,அதனுலேற்பட்டபேதத்தையும் போக்குகின்ற ப்ரம்ஹாத்மைக்ய ஸாக்ஷாத்காரமானது உண்டாகவேமாட்டாது புத்தி முதலிய உள்ளிலுள்ள குணமானது எதை ஸம்பந்தித்ததோ, அதாவது: எது புத்தியாதிகளுக்கு ஸாக்ஷியோ என்றும். புத்திக்கு அதிஷ்டாதாவான எதனுல் வெளியிலுள்ள குண=விஷயமானது, ப்ரகாசிக்கிறதோ என்பதாய் ஜடமான குணங்களின் (புத்தி விஷயம் இவற்றின்) ப்ரகாசங்களினுல் அவற்றை ப்ரகாசப்படுத்தும் சைதன்யவடிவமான நீர் ஊஹிக்க மட்டும்படுகிறீர்.(3) (35) ஹேதேவ!=வெகுவிதமாக ப்ரகாசிப்பவரே!, மனஸ், வாக்கு இவைகளால் ஊஹிக்கத்தக்க வழியையுடையவரான உம்முடைய நாமரூபங்கள் (பெயரும் ரூபமும்) குணம், ஜன்மம், கர்மம் இவைகளால் இவ்விதமெனப்பிரித்துக் காட்டக்கூடியன

---

(1) எத்தகைய இடையூறுவரினும் அவற்றைப் பொருட்படுத்தாது பக்திமார்க்கத்திலேயே ஈடுபெடுகின்றனர் என்று கருத்து.

(2) अज्ञानभित्, आप, मार्जनम् எனப் பதங்களைப்பிரித்து அக்ஞானத்தை நாசப்படுத்துகின்ற அபரோக்ஷ ஸாக்ஷாத்காரமானது மார்ஜனத்தை–நாசத்தையடைந்தே இருக்கும் என வேறு பொருளும் ஸ்ரீதரீய வியாக்கியானத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

(3) சுத்த ஸத்வ சரீரமுடைய தங்களை ஸேவிக்குங்கால் சுத்த ஸத்வாகாரமான அந்தக்கரணத்தில் உமது ப்ரஸாதத்தால் ப்ரம்ஹாத்மைக்ய ஸாக்ஷாத்காரமுண்டாகிவிடும் என்பது கருத்து.

**कर्मभिर्निरूपितव्ये तत्र तस्य साक्षिणः। मनोवचोभ्यामनुमेयवर्त्मनो देव क्रियायां प्रतियन्त्यथापि हि ॥ ३६ ॥ शृण्वन्गृणन्संस्मरयंश्च चिन्तयन्नामानि रूपाणि च मङ्गलानि ते। क्रियासु यस्त्वच्चरणारविन्दयोराविष्टचेता न भवाय कल्पते ॥३७॥ दिष्ट्या हरेऽस्या भवतः पदो भुवो भारोऽपनीतस्तव जन्मनेशितुः। दिष्ट्याङ्कितां त्वत्पदकैः सुशोभनैर्द्रक्ष्याम गां द्यां च तवानुकम्पिताम् ॥ ३८ ॥ न तेऽभवस्येश भवस्य कारणं विना विनोदं बत तर्क-**

---

வன்று. அவற்றுக்கு நீர் ஸாக்ஷியாக (ப்ரகாசகராக) இருப்பதே அதன் காரணமாகும். ஆயினும் உபாஸகர்கள் உபாஸனுநிரூபமான மானஸ க்ரியைகளில் (அந்த நாமரூபங்களையும் அவற்றுடன் கூடின தங்களையும்) ஸாக்ஷாத்கரிக்கின்றனர் என்பது பிரஸித்தமாகவேயிருக்கிறது (1) (36)

எவன் உமது மங்களங்களான பெயர்களையும், ரூபங்களையும் காதால் கேட்டும், வாக்கினுல் உச்சரித்தும், பிறரை உச்சரிக்கும்படி செய்தும், தேவபூஜை முதலிய கர்மங்களில் உமது சரணாரவிந்தங்களில் மிக்கப் பற்றினமனமுள்ளவனுகவாகிருனே (அவன்) பிறவியையடைவதில்லை. (37) ஹேஹரே! உமது பாதமான இந்தப் பூமியினுடைய பாரமானது நியந்தாவான உம்முடைய அவதாரத்தினுல் (ஆவிர்ப்பாவத்தினுல்) போக்கப்பட்டதாகவாகிறது என்பது மங்களமே. வஜ்ரரேகை, அங்குசரேகை முதலியனவமைந்த அழகிய உமது பதங்களால் அலங்கரிக்கப்பட்டதும், உம்மால் அனுக்கிரஹிக்கப்பட்டதுமான பூமியையும் ஸ்வர்க்கத்தையும் நாங்கள் கண்ணுற் காணப்போகிறோம் என்பதும் மங்களமேயாகும். (38) ஹே ஈஶ! பிறவியற்ற (அஸம்ஸாரியான) உமக்கு இப்பொழுது பிறவியேற்படுவதற்கு க்ரீடையை (விளையாட்டை) த்தவிர்த்து வேறு காரணத்தை நாங்கள் ஊஹிக்கின்றோமில்லை. பயத்துக்கு (இரண்டாவது பொருளுக்கு) ஆஶ்ரயமாக இல்லாதவரே! ஜீவாத்மாவினிடத்திற் காணும் உத்பத்தி நாசம் ஸ்திதி இவை ஸர்வாதிஷ்டானமான

---

(1) நாமரூப விசிஷ்ட பகவானை உபாஸித்து பகவத்ஸாக்ஷாத்காரத்தையடைபவர்க்கு பகவத்விசேஷணங்களான நாமரூபங்களின் ஸாக்ஷாத்காரமும் ஏற்படவே செய்கிறது என்பது கருத்து,

यामहे। भवो निरोधः स्थितिरप्यविद्यया कृता यतस्त्वय्यभयाश्रयात्मनि ॥ ३९ ॥ मत्स्याश्वकच्छपनृसिंहवराहहंसराजन्यविप्रविबुधेषु कृतावतारः। त्वं पासि नस्त्रिभुवनं च यथाधुनेश भारं भुवो हर यदूत्तम वन्दनं ते ॥४०॥ दिष्ट्याऽम्ब ते कुक्षिगतः परः पुमानंशेन साक्षाद्भगवान्भवाय नः। माभूद्भयं भोजपतेर्मुमूर्षोर्गोप्ता यदूनां भविता तवात्मजः॥ ४१ ॥ श्रीशुक उवाच—इत्यभिष्टूय पुरुषं यद्रूपमनिदं यथा। ब्रह्मेशानौ पुरोधाय देवाः प्रतिययुर्दिवम् ॥ ४२ ॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे गर्भगतविष्णोर्ब्रह्मादिकृत-स्तुतिर्नाम द्वितीयोऽध्यायः ॥ २ ॥

---

உம்மை யாச்ரயித்துள்ள அவித்யையினல் செய்யப்பட்டதாகவன்றோ காணப்படுகிறது.* (39) ஹே ஈச! யதூத்தம! நீர் மத்ஸ்யமாகவும், ஹயக்ரீவாாகவும், ஆமையாகவும், நரஸிம்ஹனுகவும், வராஹமாகவும், ஹம்ஸமாகவும், க்ஷத்ரிய (ராம) னுகவும், விப்ரனுக (பரசுராமனாக) வும், யக்ஞராகவும் அவதரித்து எங்களையும் முவ்வுலகங்களையும் மற்ற ஸமயங்களில் எவ்விதம் காக்கின்றீரோ அவ்விதமே இப்பொழுதும் பூமியின் பாரத்தைப் போக்கக்கடவீர். உமக்கு நமஸ்காரம். (40) ஹே அம்ப! (தேவகியே!) ஸாக்ஷாத் பரமபுருஷனுன பகவான் (1)ஆதிசேஷனுடன் கூட எங்களுடைய க்ஷேமத்துக்குவேண்டி நல்ல வேளையாக உன்னுடைய ஹிருதய குஹையை யடைந்திருக்கிறுர். மரிக்கும் தருணத்திலுள்ள கம்ஸ னிடமிருந்து பயம் வேண்டுவதில்லை. உனது மனத்தினின்றும் வெளிவந்த இவர் யாதவர்களைக்காக்கப்போகின்ருர்" என்றனர்.(41)

---

* ஜீவனிடத்தில் காணப்படும் உத்பத்தியாதிகளே உம்மையாச்ரயித்த அவித்யாமூலமேற்படுவதாக இருக்க ஜீவனுக்கு ஜீவத் தன்மையையும், அவனுக்கு உத்பத்தியாதிகளையும் உண்டுபண்ணுகின்ற அவித்யைக்கு அதிஷ்டானமாகவான உம்மிடத்தில் அவித்யா மூலமேற்படும் உத்பத்தி யாதிகள் ஸம்பவிக்க இடமில்லை எனச்சொல்லவும் வேண்டுமோ என்பது கருத்து. (1) மூலத்திலுள்ள அंशेन என்றதற்கு வம்சிதரீய வியாக்கியானத்தில் இவ்விதம் பொருள் கூறப்பட்டிருக்கிறது.

## अथ तृतीयोऽध्यायः ॥

श्रीशुक उवाच—अथ सर्वगुणोपेतः कालः परमशोभनः। यर्ह्येवाजनजन्मर्क्षं शान्तर्क्षग्रहतारकम् ॥ १ ॥ दिशः प्रसेदुर्गगनं निर्मलोडुगणोद-

ஸ்ரீசுகர்—"எவரது ஸ்வரூபம் எல்லாவற்றுக்கும் ப்ரத்யக்ஷமோ (உள்ளிலிருக்கின்றதோ) அந்தப் புருஷனை (நாராயணனை) உள்ளபடி துதித்துவிட்டு ப்ரம்ஹா மஹாதேவன் இருவரையும் முன்விட்டுக்கொண்டு தேவர்கள் ஸ்வர்க்கத்தை நோக்கித் திரும்பிச்சென்றனர்" என்றார். (42)

ஸ்ரீமத்பாகவத தசமஸ்கந்தபூர்வார்த்தத்தில் தேவகியின் ஹ்ருதயத்திலுள்ள பகவானை ப்ரம்ஹாதி தேவர்கள் துதித்தல் என்ற இரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.



## மூன்றுவது அத்தியாயம்.

(அ-கை) तृतीये निजरूपेण संभूतस्तु हरिः स्वयम् ।
पितृभ्यां संस्तुतो नीतः पित्रा भीतेन गोकुलम् ॥

மூன்றுவது அத்தியாயத்திலோ தனது ஸ்வரூபத்துடன் தானே ஆவிர்ப்பவித்த ஹரியானவர் பிதா மாதா இவர்களால் துதிக்கப்பெற்று கம்ஸனிடமிருந்து பயந்த பிதாவான வஸுதேவரால் கோகுலத்துக்குக் கொண்டுபோகப்பட்டார் எனவுபதேசிக்கப்படுகிறது.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்—மங்களம் பொருந்தியதும், ஸர்வருதுக்களிலும் காணக்கூடிய குணங்களுடன் கூடினதும், மிக்கச் சோபனமுமான காலமானது எதுபோழ்து அமைந்ததோ, சாந்தங்களான அஸ்வினீ முதலிய நக்ஷத்திரங்களையும், ஸூரியன் முதலிய கிரஹங்களையும், ஸப்தரிஷி தாரகைகள் முதலிய தாரகைகளையும் உடையதும், நாராயணனிடமிருந்துண்டான ப்ரஜாபதியைத் தேவதையாகவுடையதுமான ரோஹிணீ நக்ஷத்திரமானது எதுபோழ்து அமைந்ததோ, எப்பொழுது *திக்குகள் தெளிந்தனவோ, ஆகாசமானது

* மழைகாலத்தில் திக்குகள் தெளிந்தனவென்றதிலிருந்து சரத்காலத்தின் குணம் அதுபோழ்து காணப்பட்டதாகவாகிறது.

यम्। मही मङ्गलभूयिष्ठपुरग्रामव्रजाकरा ॥ २ ॥ नद्यः प्रसन्नसलिला ह्रदा जलरुहश्रियः। द्विजालिकुलसन्नादस्तवका वनराजयः॥ ३ ॥ ववौ वायुः सुखस्पर्शः पुण्यगन्धवहः शुचिः। अग्नयश्च द्विजातीनां शान्तास्तत्र समिन्धत ॥ ४ ॥ मनांस्यासन्प्रसन्नानि साधूनामसुरद्रुहाम्। जायमानेऽजने तस्मिन्नेदुर्दुन्दुभयो दिवि ॥ ५ ॥ जगुः किन्नरगन्धर्वास्तुष्टुवुः सिद्धचारणाः। विद्याधर्यश्च ननृतुरप्सरोभिः समं तदा ॥ ६ ॥ मुमुचुर्मुनयो देवाः सुमनांसि मुदान्विताः। मन्दं मन्दं जलधरा जगर्जुरनुसागरम् ॥ ७ ॥ नि-

---

(1)அழுக்கற்ற நக்ஷத்திரக்கூட்டத்தினுதயத்தை யுடையதாயிற்றே, பூமியானது (2)மங்களம்நிறைந்த பட்டினம், கிராமம், இடைச்சேரி, பொன் விளையுமிடம் இவற்றையுடையதாகவாயிற்றே, நதிகள் தெளிந்த ஜலமுள்ளனவாகவும், மடுக்கள் (3)தாமரைகளின் சோபை நிறைந்தனவாகவும், வனக்கூட்டங்கள், பறவை, வண்டு இவற்றின் கூட்டங்களால் சப்திக்கப்பட்ட பூங்கொத்தையுடையனவாகவும், எதுபொழுது ஆயிற்றே, காற்றானது ஸுகமான தொடுகையை யுடையதாகவும், புண்ணியமான வாஸனையைக் கொணர்வதாகவும், சுத்தமானதாகவும் எப்பொழுது வீசிற்றே, அவ்விடத்தில் த்விஜர்களின் (ப்ராம்மணர் முதலியோரின்) அக்னிகள் சாந்தங்களாக நன்கு பிரகாசித்தனவோ, அசுரர்களால் வெறுக்கப்படுகின்ற தேவர்களுடையவும், ஸாதுக்களுடையவும், அதாவது:—கம்ஸனைத் தவிர்த்து மற்றெல்லா ப்ராணிகளுடையவும், மனஸ்ஸுகள் எப்பொழுது தெளிந்தனவோ, உண்மையில் பிறப்பற்ற அந்தப்பகவான் அவதரிக்குங்கால் ஸ்வர்க்கத்தில் துந்துபி வாத்தியங்கள் எப்பொழுது முழங்கினவோ, கின்னரர் கந்தர்வர் இவர்கள் கானம் செய்ய, சித்தர் சாரணர் இவர்கள் துதிக்க, அப்ஸரஸ்ஸுகளுடன் கூட வித்யாதர ஸ்திரீகள் பிரஸவிக்கும் தருணத்தில் நர்த்தனமாட, முனிகளும், தேவர்களும் சந்தோஷத்துடன் புஷ்பங்களை வாரி இறைக்க, மேகங்கள் ஸமுத்திரத்தின் ஓசைக்கொப்பாக இருக்கும்படி கர்ஜிக்க, (4)ஜனங்களுக்குப்

---

(1) இதனால் மேலுள்ள ஆகாசத்தின் தெளிவும், (2) இதனால் பூமியிலுள்ள தெளிவும் கூறப்பட்டது. (3) இதனால் பகலுக்குள்ள குணம் சொல்லப்பட்டது. (4) जायमाने जनार्दने என்றவிடத்தில் जनार्दने என்

शीथे तम उद्भूते जायमाने जनार्दने। देवक्यां देवरूपिण्यां विष्णुः सर्वगुहाशयः॥ आविरासीद्यथा प्राच्यां दिशीन्दुरिव पुष्कलः॥ ८॥ तमद्भुतं बालकमम्बुजेक्षणं चतुर्भुजं शङ्खगदार्युदायुधम्। श्रीवत्सलक्ष्मं गलशोभिकौ

---

பயத்தைத்தருவதும் இருளடர்ந்ததுமான நடு இரவு ஆரம்பிக்க, அப்பொழுது எல்லா ப்ராணிகளுடையவும் ஹிருதயகுஹையில் வஸிக்கின்ற விஷ்ணுவானவர் (எங்கும் நீக்கமற நிறைந்துள்ள பரமாத்மா) தேவருக்கொப்பான ஸ்வரூபம் வாய்ந்த தேவகியினிடத்தில் (தனது ஐஸ்வரரூபத்துடன் கூட) கிழக்கில் பூர்ணசந்திரன்போல ஆவிர்ப்பவித்தார். (1–8) வஸுதேவர், ஆஸ்சரியம் வாய்ந்தவரும், ப்ரம்ஹதேவனைப் புத்திரனுகவுடையவரும், தாமரைப்புஷ்பங்கள் போன்ற கண்களையுடையவரும், அல்லது (1)அம்புஜையினிடத்தில் (ஜலத்தினின்றுமுண்டான பூமியினிடத்தில்) தனது திருஷ்டியைச் செலுத்தினவரும், நான்கு கைகளுள்ளவரும், (2)சங்கம், கதை, சக்கிரம், பத்மம் இவையாகிற உயரெடுக்கப்பட்ட ஆயுதங்களையுடையவரும், ஸ்ரீவத்ஸம் என்ற மருவை (வலது மார்பில்) அடையாளமாகவுடை

---

யதற்கு जनभयंकरे=ஜனங்களுக்குப் பயத்தைத் தருகின்ற என வம்சீதரீய வியாக்கியானத்திற் சொல்லியிருப்பதையொட்டி இவ்விதம் உரை எழுதப்பட்டது. (1)अद्भ्यः पृथिवी=ஜலத்தினின்றும் பூமி உண்டாயிற்று என்றபடி ஜலத்தினின்றுமுண்டான பூதேவியார் பகவதவதாரகாலத்தில் மனித ரூபத்துடன் தேவகி அம்மாள் வஸிக்கும் அறையில் வஸிப்பதாலும், தான் அவதரிப்பது அவளது பாரத்தைப்போக்கவேண்டியே ஆதலாலும், நீ பயப்படாதே உனது பாரத்தைக் கட்டாயம் இரக்குகிறேன் எனக் கூறுபவர் போன்று பூதேவியாரைக் கடாக்ஷித்தார் என்று பொருள். அல்லது நான் அவதரித்தாகிவிட்டது. லக்ஷ்மீ, ருக்மிணியாக அவதரிக்கப்போகின்ருள். நீயும் ஸத்யபாமையாக அவதரிக்கக் கடவாய் எனக் கண்ணிணுல் ஸூசிப்பித்தார் என்றும் பொருள் கொள்க.

(2) பொதுவாய் பகவானுடைய நான்கு கைகளுள் வலது பக்கத்தில் மேலுள்ள கையில் சக்கிரத்தையும், அதற்குக் கீழுள்ள கையில் கதையையும், இடதுபக்கத்தில் மேலுள்ள கையில் சார்ங்கமென்ற வில்லையும், அதற்குக் கீழுள்ள கையில் சங்கத்தையும் தியானிக்கவேண்டுமென பகவத்தியான முறை சாஸ்திரத்திற் கூறியிருப்பினுங்கூட இங்கு அவதார காலத்தில் शंखचक्रगदापद्मश्रियाजुष्टम् எனப்பின்னர் சொல்லப்போவதையொட்டி

स्तुभं पीताम्बरं सान्द्रपयोदसौभगम् ॥९॥ महार्हवैडूर्यकिरीटकुण्डलत्विषा परिष्वक्तसहस्रकुन्तलम्। उद्दामकाञ्च्यङ्गदकङ्कणादिभिर्विरोचमानं वसुदेव ऐक्षत ॥१०॥ स विस्मयोत्फुल्लविलोचनो हरिं सुतं विलोक्यानकदुन्दुभिस्तदा। कृष्णावतारोत्सवसंभ्रमोऽस्पृशन्मुदा द्विजेभ्योऽयुतमाप्लुतो

---

யவரும், கழுத்தினால் விளங்குகின்ற கௌஸ்துபமென்ற மணியை யுடையவரும், பொன்னிறமான வஸ்திரத்தையுடையவரும், நீருண்ட மேகம்போல அழகு பொருந்தியவரும், மிக்க விலையுயர்ந்த வைடூர்ய மிழைத்த கிரீடம் குண்டலம் இவற்றின் காந்தியினால் நான்கு பக்கங் களில் ஸம்பந்திக்கப்பெற்ற ஆயிரக்கணக்கான (அபரிமிதமான) சுருண்ட தலைமயிரையுடையவரும், இடைக்கையில் தன்னிடமமைந்த அரைஞாண், தோள்வளை, கைவளை, மோதிரம் இவற்றால் மிக்கப்ரகா சிக்கின்றவருமான அவரை (அவதரித்த ப்ரபுவை) க்கண்ணுற்றுக்கண் டார். (9–10) அப்பொழுது அந்த வஸுதேவர் ஆச்சரியத்தினால் நன்கு மலர்ந்த கண்களையுடையவராய் ஹரியான புத்திரனைக் கண் ணுற்று கிருஷ்ணாவதாரத்திற் செய்யவேண்டிய உத்ஸவத்தில் (தா னம் வழங்குதல் முதலியவற்றில்) பரபரப்புடையவராய் சந்தோஷ ஜலத்தினால் ஸ்நானஞ்செய்து ப்ராம்ஹணர்களுக்கு பதினாயிரம் பசுக்

---

சார்ங்கமென்ற வில்லுக்குப் பதிலாக பத்மத்தையே இடதுபக்கத்து மேல் கையில் தியானிக்கவேண்டுமென ஸம்பிரதாயமறிந்த பெரியார் கூறுகின் றனர். அவ்விதம் கூறுவதற்குக் காரணமுமுண்டு. அதாவது: இந்த அவ தாரத்தில் சார்ங்கமென்றவில்லுக்கு ஏதோ இரண்டொரு ஸமயங்களில் போதிய வேலையிருப்பினும் பிராணிகளின் ஹிருதயாப்ஜத்தைக் கொள்ளை கொண்டு அவர்களை உய்ப்பிக்கச் செய்வதே அவதாரத்தின் முக்கிய நோக் கமென்பதைக் காட்டவேண்டியே அப்ஜத்தைக் கையில் தரித்தார் என் றும். அதுபற்றியேதான் மனத்தில் தான் எனக்கு முக்கிய நோக்கம் என்பதைக் காட்டவேண்டியே உருகுமியல்பையுடைய வெண்ணையைத் திருடுவதாகவும் ப்ரபு நடித்துக்காட்டினான். சூட்டினால் வெண்ணை உரு குவதுபோல பக்தியாகிற நெருப்பினால் மனது உருகுமியல்பையுடையதா யிருப்பதுபற்றி அந்தத் தனது முக்கிய நோக்கத்தை நவநீதசௌர்யம் என்ற லீலையால் ஸ்ரீகோபாலன் வெளிப்படுத்தினான். இல்லையேல் ஸர்வ சக்தனான பகவானுக்கு ஸாதாரண வெண்ணை கிடைப்பது அரிதாமோ.

गवाम् ॥ ११ ॥ अथैनमस्तौदवधार्य पुरुषं परं नताङ्गः कृतधीः कृताञ्जलिः । स्वरोचिषा भारत सूतिकागृहं विरोचयन्तं गतभीः प्रभाववित् ॥ १२ ॥

वसुदेव उवाच—विदितो*भगवान्साक्षात्पुरुषः प्रकृतेः परः। केवलानुभवानन्दस्वरूपः सर्वबुद्धिदृक् ॥ १३ ॥ स एव स्वप्रकृत्येदं सृष्ट्वाग्रे त्रिगुणात्मकम् । तदनु त्वं ह्यप्रविष्टः प्रविष्ट इव भाव्यसे ॥ १४ ॥ यथेमेऽविकृता भावास्तथा ते विकृतैः सह। नानावीर्याः पृथक्भूता विराजं जनयन्ति हि ॥ १५ ॥ सन्निपत्य समुत्पाद्य दृश्यन्तेऽनुगता इव। प्रागेव विद्य-

---

களை (மனத்தால்) தானஞ் செய்தார். (11) ஹே பாரதனே! பின்னர் சுத்தமான புத்தியையுடையவரான வஸுதேவர் இருகைகளையும் கூப்பிக்கொண்டும், தலைவணங்கியும் பகவத்ப்ரபாவத்தை யறிந்தவராயிருப்பதுபற்றிப் பயமற்றவராகித் தனது காந்தியினால் பிரஸவ அறையைப் பிரகாசப்படுத்துகின்ற இக்குழந்தையை பரமபுருஷனாக நிச்சயித்துக்கொண்டு ஸ்துதிக்கத் தொடங்கினார். (12)

வஸுதேவர்—ப்ரகிருதியைக்காட்டிலும் பரனான புருஷனும், அத்விதீயனும், ஞானஸ்வரூபியும், ஆநந்தஸ்வரூபியும், எல்லாப்புத்திகளுக்கும் ஸாக்ஷியும் பகவானுமான நீர் கண்கூடாகக் காணப்பட்டீர். (13) அதே நீர் சொந்தமான மாயையினால் முக்குண ஸ்வரூபமான இந்தப்ரபஞ்சத்தை முதலில்ஸிருஷ்டித்து அதில் பிரவேசத்தையடையாவிடினுங்கூட ப்ரவேசத்தையடைந்தவர் போலவன்றோ காணப்படுகின்றீர். (14) மஹத்தத்வம் முதலியன எவ்விதமோ அவ்விதமே தான் நீருமாகிறீர். தனிப்பட்டவைகளாய் பலதரப்பட்ட காரியங்களை யுண்டுபண்ணும் திறமையையுடைய அந்த மஹத்தத்வம் முதலிய பொருள்கள் தமது காரியங்களான கர்மேந்திரியம் ஐந்து, க்ஞானேந்திரியம் ஐந்து, ப்ராணன் ஐந்து, மனது ஒன்று ஆகிய பதினாறு பொருள்களுடன் கூட ஒன்றுகூடி விராட்டை (ப்ரம்ஹாண்டத்தை) உண்டாக்குகின்றன. அவ்விதமுண்டாக்கி (அதில்) பிரவேசித்தனபோன்று காணப்படுகின்றன. (காரியமான விராட்டின்) உத்பத்திக்கு முன்னரே இருப்பனபற்றி அந்த மஹத்தத்வம் முதலிய

---

* "विदितोसि भवान् साक्षात्" इति पाठान्तरम् ॥

मानत्वान्न तेषामिह संभवः॥ १६ ॥ एवं भवान्बुद्ध्यनुमेयलक्षणैर्ग्राह्यैर्गुणैः सन्नपि तद्गुणाग्रहः। अनावृतत्वाद्बहिरन्तरं न ते सर्वस्य सर्वात्मन आत्म

---

வற்றுக்கு ஸிருஷ்டிக்கப்பட்ட இந்தக்காரியத்தில் (ப்ரம்ஹாண்டத்தில்) பிரவேசமேற்பட நியாயமில்லை என்பது எவ்விதமோ இவ்விதமே நீர், ரூபம் முதலியவற்றைப்பற்றி யேற்படும் க்ஞானத்தினுல் ஊஹித்தறியத்தக்க ஸ்வரூபமுள்ளவைகளான குணங்களுடனும் (இந்திரியங்களுடனும்) அவற்றுக்கு விஷயங்களான ரூபாதிகளுடனும் சேர்ந்தே இருப்பினுங்கூட அந்தக் குணங்களினுல் (இந்திரியங்களினுல்) (1)கிரஹிக்கப்படுகிறீர் இல்லை. ஸர்வஸ்வரூபரும், ஸர்வத்துக்கு ஆத்மாவானவரும், ஆத்மாவும் (எப்பொழுதும் எங்கும் நீக்கமற நிறைந்திருப்பவரும்) வஸ்துவும் (எதனுலும் எச்சமயத்திலும்) அழிவற்றவருமான நீர் எதனுலும் மறைக்கமுடியாதவராக இருப்பதுபற்றி வெளியும் உள்ளும் அற்றவராகிறீர். (15–17)

---

(1) இந்திரியங்களால் அறியப்படுகின்ற சப்தாதி விஷயங்களுடன் கலந்து இருப்பதால் மட்டும் ஆத்மா கிரஹிக்கக்கூடியதாகவாகமாட்டாது. இந்திரியங்களின் சக்தியையும் கவனிக்கவேண்டும். இந்திரியங்களின் சக்தியோ அதன் காரியத்தைக் கொண்டு நிர்ணயிக்கவேண்டியதாக இருக்கிறது. கண்ணினுல் ரூபம் மட்டும் அறியப்படுகிறதேயொழிய சப்தாதிகள் அறியப்படுவேதில்லை. நாக்கினுல் ருசிமட்டுமறியப்படுகிறதேயொழிய ரூபாதிகளறியப்படுவதில்லை. ஆகவே சக்ஷுராதிகளுக்கு தனக்குரிய விஷயத்தைத் தவிர்த்து வேறொன்றின் விஷயத்தைக் கிரஹிக்கும் சக்தியில்லாதிருப்பதை அனுபவத்தில் காண்பதை உற்று நோக்குங்கால் இந்திரிய விஷயங்களுடன் ஆத்மா கலந்திருந்தபோதிலுங்கூட இந்திரியங்களுக்கு ஆத்மாவை அறிவிக்கும் சக்தியில்லாததாற்றுன் அவற்றுல் ஆத்மா அறியப்படவில்லை என்றேற்படுகிறது. நீரோ இவையுண்டாவதற்கு முந்தியே இருப்பவர் என முன்னர் சொல்லவும்பட்டது. நீரோ எல்லா ஸ்வரூபமாகவுமிருப்பவர். ஆகவே உம்மை மறைக்கும் வேறு பொருளோ உண்மையில் கிடையாது. அப்பொருளுண்டாயின் நீர் ஸர்வத்துக்கும் ஆத்மாவாக இருக்கமுடியாது. ஆனதுபற்றி எதற்கும் அதிஷ்டானமான உமக்கு இந்தப்பிரபஞ்ச ப்ரவேசமே ஸம்பவிக்க இடமில்லாதிருக்க தேவகியின் கர்ப்பப்பிரவேசம் எங்கு ஸம்பவிக்கும். ஆகவே அத்விதீய க்ஞானானந்த ஸ்வரூபியாகவே உள்ள நீர் எனது கண்ணுற் காணப்பட்டீர் என்பது மஹத்தான ஆச்சரியம் வாய்ந்த எனது பாக்யமே என்பது பொருள்.

वस्तुनः॥ १७ ॥ य आत्मनो दृश्यगुणेषु सन्निति व्यवस्यते स्वव्यतिरेकतोऽबुधः। विनानुवादं न च तन्मनीषितं सम्यग्यतस्त्यक्तमुपाददत्पुमान्॥१८॥ त्वत्तोऽस्य जन्मस्थितिसंयमान्विभो वदन्त्यनीहादगुणादविक्रियात्। त्वयीश्वरे ब्रह्मणि नो विरुध्यते त्वदाश्रयत्वादुपचर्यते गुणैः॥ १९॥ स त्वं त्रिलोकस्थितये स्वमायया बिभर्षि शुक्लं खलु वर्णमात्मनः। सर्गाय रक्तं

எந்தப்புருஷன் இந்தத்தேஹாதியான பொருளானது ஆத்மாவைக்காட்டிலும் வேருகவும் ஸத்யமாகவும் உள்ளது என ஆத்மதிருஶ்யமான தேஹாதிகளில் நிஶ்சயத்தையடைகிருனே (அவன்) அறியாதவனுவான். விசாரிக்கப்பட்ட தேஹத்தை ஆதியாகக்கொண்ட அந்த ஜகத் யாவும் வெரும் வியவஹார விஷயமாகமட்டுமேற்படுகின்றதேயல்லாது உண்மையிலிருப்பதாக எக்காரணத்தால் ஏற்படவில்லேயோ அக்காரணம்பற்றி ஞான நிவர்த்யமாகவே உள்ளதை உண்மையிலுள்ளதெனவெண்ணுபவன் அறியாதவனே ஆகிவிடுகிருன். (18) *ஹே விபோ! குணஸம்பந்த மற்றவரும், ஆனதுபற்றியே சேஷ்டையற்றவரும், ஆனதுபற்றி அவிக்ரியருமான உம்மிடமிருந்து இந்தத் தேஹாதியான ப்ரபஞ்சத்துக்கு ஸிருஷ்டி ஸ்திதி ப்ரளயங்களைச்(சுருதிகள்) சொல்லுகின்றன. ப்ரஹ்மமாகவிருப்பதுபற்றி அவிகாரியும், ஈஶ்வரனுக இருப்பதுபற்றி கர்த்தாவுமான உம்மிடத்தில் ஸிருஷ்டி ஸ்திதி ப்ரளயங்கள் கூறினது விரோதப்படமாட்டாது. குணங்கள் அவற்றைச் செய்தபோதிலும் அந்தக் குணங்கள் உம்மையாஶ்ரயித்திருப்பனபற்றி உம்மிடத்தில் உபசாரமுறையினுல் அவை கூறப்படுகின்றன. (19) அந்த நீர் மூவ்வுலகங்களின் ஸ்திதிக்கு (ரக்ஷணத்துக்கு) வேண்டியன்றோ சொந்தமான மாயையினுல் தனக்கு வெண்மையான வர்ணத்தையும், (ஸத்வகுணத்தையும்) ஸிருஷ்டிக்கு வேண்டி ரஜஸ்ஸுடன் கூடின சிவந்த வர்ணத்தையும், ப்ரளயத்துக்குவேண்டி

* முந்தின சுலோகத்தில் ஜகத்தானது பரமேச்வர திருச்யமாக இருப்பதுபற்றி பரமேச்வரனைவிட வேறன்று எனச் சொல்லப்பட்டது. இந்தச் சுலோகத்தால் பரமேச்வரனே உபாதான காரணமாகக்கொண்டிருப்பதுபற்றியும் ஜகத்து பரமேச்வரனைவிட வேறுபட்டதாகவாகாது எனவுபதேசிக்கப்படுகிறது.

रजसोपबृंहितं कृष्णं च वर्णं तमसा जनात्यये ॥ २० ॥ त्वमस्य लोकस्य विभो रिरक्षिषुर्गृहेऽवतीर्णोऽसि ममाखिलेश्वर। राजन्यसंज्ञासुरकोटियूथपै-र्निर्व्यूह्यमाना निहनिष्यसे चमूः ॥ २१ ॥ अयं त्वसभ्यस्तव जन्म नौ गृहे श्रुत्वाग्रजांस्ते न्यवधीत्सुरेश्वर। स तेऽवतारं पुरुषैः समर्पितं श्रुत्वाधुनैवा भिसरत्युदायुधः ॥ २२ ॥ श्रीशुक उवाच—अथैनमात्मजं वीक्ष्य महापुरुष लक्षणम्। देवकी तमुपाधावत्कंसाद्भीता शुचिस्मिता ॥ २३ ॥

देवक्युवाच—रूपं यत्तत्प्राहुरव्यक्तमाद्यं ब्रह्म ज्योतिर्निर्गुणं निर्विकारम्। सत्तामात्रं निर्विशेषं निरीहं स त्वं साक्षाद्विष्णुरध्यात्मदीपः ॥ २४ ॥

---

தமோ குணத்தினல் கருத்த வர்ணத்தையும் தரிக்கின்றீர். (20) அகிலேசப்ரபோ! ஹேவிபோ! நீர், இந்த லோகத்தை ரக்ஷிக்கவெண்ணங்கொண்டு எனது வீட்டில் (பத்னியினிடத்தில், கருநிறத்துடன்) யாதுகாரணத்தால் அவதரித்தவராக இருக்கின்றீரோ அக்காரணத்தால் ஸாதுக்களை ரக்ஷிக்கவேண்டி அரசர்களெனப் பெயர்கொண்ட கோடிக்கணக்கான அஸுரக்கூட்டத் தலைவர்களினல் இங்குமங்கும் இட்டுச் செல்லப்படுகின்ற ஸேனைகளை நாசமாக்கவும் போகின்றீர். (21) ஹே சுரேப்ரபோ! மோசக்காரனை இந்தக் கம்ஸனே எங்களதுவீட்டில் உம்முடைய பிறவியைக்கேட்டு உமக்கு முந்திப் பிறந்த குழந்தைகளைக் கொன்றுவிட்டான். வேலைக்காரர்களால் சொல்லப்பட்ட உமது அவதாரத்தைக்கேட்டு ஆயுதத்தை உயரத் தூக்கிக்கொண்டு இப்பொழுதே ஓடிவரப்போகிறுன்" என்றார். (22) பின்னர் சுத்தமான புன்சிரிப்புள்ள தேவகி கம்ஸனிடமிருந்து பயந்தவளாய் புருஷோத்தமனுடைய லக்ஷணம் வாய்ந்த இந்தக் குழந்தையைக்கண்டு அவரை ஸ்துதிக்கத் தொடங்கினள். (23)

தேவகி—அவ்யக்தமும், காரணமும், ப்ரம்ஹமும் (எங்கும் நீக்கமற நிறைந்துள்ளதும்), ஜ்யோதிஸ்ஸும் (சேதனமும்), நிர்க்குணமும், எவ்வித விகாரமுமற்றதும், ஸத்தாமாத்ரமும், நிர்விசேஷமும், நிரீஹமும் (எவ்வித க்ரியையுமற்றதும்) ஆக வேதாந்தங்கள் எந்த ரூபத்தைச் சொல்லுகின்றனவோ, சரீரத்திலுள்ள புத்தி முதலிய கரண ஸமூஹங்களுக்கு ப்ரகாசத்தைத்தருபவரும், அபரோக்ஷமாக அனுபவிக்கப்படும் விஷ்ணுவுமான அந்த நீரே அந்த ரூபமாக

नष्टे लोके द्विपरार्धावसाने महाभूतेष्वादिभूतं गतेषु । व्यक्तेऽव्यक्तं कालवेगेन याते भवानेकः शिष्यतेऽशेषसंज्ञः ॥ २५ ॥ योऽयं कालस्तस्य तेऽव्यक्तबन्धो चेष्टामाहुश्चेष्टते येन विश्वम् । निमेषादिर्वत्सरान्तो महीयांस्तं त्वेशानं क्षेमधाम प्रपद्ये ॥ २६ ॥ मर्त्यो मृत्युव्यालभीतः पलायन्लोकान्सर्वान्निर्भयं नाध्यगच्छत् । त्वत्पादाब्जं प्राप्य यदृच्छयाद्य स्वस्थः शेते मृत्युरस्मादपैति ॥ २७ ॥ स त्वं घोरादुग्रसेनात्मजान्नस्त्राहि त्रस्तान्भृत्यवित्रासहाऽसि ।

---

வாகிறீர்.* (24) மேலும், (1)இரண்டு பரார்த்தங்களின் முடிவில் சராசரரூபமான லோகமானது மஹாபூதங்களில் ஒடுங்க, அந்த மஹாபூதங்கள் பஞ்சபூத ஸூக்ஷ்மத்தில் ஒடுங்க, காரிய வகுப்பிற் சேர்ந்த அந்தப் பூதஸூக்ஷ்மமும் காலத்தின் வேகத்தினால் ப்ரதானத்தில் (ப்ரகிருதியில்) ஒடுங்க, நீர் ஒருவரே இவ்விதமொடுங்கின யாவற்றையும் பற்றிய அறிவுடன் கூடியவராய் எஞ்சி நிற்கின்றீர். (இத்தகைய உமக்கு கம்ஸனிடமிருந்து பயமுண்டாவதற்கிடமேது) (25) ஹே அவ்யக்தபந்தோ! (ப்ரளயகாலத்தில் ப்ரகிருதிக்கு அதிஷ்டானமாக இருப்பவரே!) இமைக்கொட்டலை ஆதியாகக் கொண்டதும், வத்ஸரத்தை (வருஷத்தை) முடிவாகக்கொண்டதும், மஹானும் (த்விபரார்த்த ரூபமானதுமான) யாதொரு இந்தக் காலமுண்டோ, எந்தக் காலத்தினால் ப்ரபஞ்சமானது மாறுதலையடைந்துக் கொண்டு வருகின்றதோ அந்தக்காலத்தை அந்த உப்முடைய சேஷ்டையென வேதாந்தங்கள் சொல்லுகின்றன. ஆகவே ஈஶானனும் அபயஸ்தானமுமான அந்த உம்மைச் சரணமடைகின்றேன். (26) ஹே ஆத்ய! ஸம்ஸாரமாகிற பாம்பினின்றும் பயந்து எல்லா வுலகங்களிலும் ஓடின மனிதன் பயத்தைப் போக்குமிடமொன்றையும் அடையாதவனாய் ஏதோவொரு பாக்கியோதயத்தினால் உமது சரணாரவிந்தத்தையடைந்து கவலையற்றவனாய் படுத்திருக்கிறான். ஸம்ஸாரமானது இவனிடமிருந்து விலகிவிடுகிறது. (27) அந்த நீர் பக்

---

* இந்த ச்லோகத்துக்கு ஸ்ரீதரீயவியாக்கியானத்தில் விரிவான பொருள் கூறப்பட்டிருப்பதை விரிவுக்கஞ்சி இங்கு எழுதவில்லை. (1) ப்ரம்ஹதேவனுடைய ஆயுள் மொத்தமும் பரார்த்தத்வயமெனப்படும். அதன்முடிவில் ஏற்படும் ப்ரளயம் மஹாப்ரளயமெனப்படும்.

**रूपं चेदं पौरुषं ध्यानधिष्ण्यं मा प्रत्यक्षं मांसदृशां कृषीष्ठाः॥ २८॥ जन्म ते मय्यसौ पापो मा विद्यान्मधुसूदन। समुद्विजे भवद्धेतोः कंसादहमधीरधीः॥ २९॥ उपसंहर विश्वात्मन्नदो रूपमलौकिकम्। शङ्खचक्रगदापद्मश्रिया जुष्टं चतुर्भुजम्॥ ३०॥ विश्वं यदेतत्स्वतनौ निशान्ते यथावकाशं पुरुषः परो भवान्। बिभर्ति सोऽयं मम गर्भगोऽभूदहो नृलोकस्य विडम्बनं हि तत्॥ ३१॥**

**श्रीभगवानुवाच—त्वमेव पूर्वसर्गेऽभूः पृश्निः स्वायम्भुवे सति। तदाऽयं सुतपा नाम प्रजापतिरकल्मषः॥ ३२॥ युवां वै ब्रह्मणादिष्टौ प्रजासर्गे यदा ततः। सन्नियम्येन्द्रियग्रामं तेपाथे परमं तपः॥ ३३॥ वर्षवातात**

---

தர்களின் பயத்தைப் போக்குகின்றவராக இருக்கின்றீர். கொடூரனை கம்ஸனிடமிருந்து பயந்த எங்களைக் காத்தருளல் வேண்டும். தியானத்துக்கு ஆஸ்பதமானதும், ஐஸ்வர்யமுமான இந்த ரூபத்தை ஸ்தூல திருஷ்டி பெற்றவர்களுக்கு ப்ரத்யக்ஷமாகச்செய்யாதீர். (28) ஹே மதுஸூதன! இந்தப்பாபியான கம்ஸன் என்னிடத்தில் உமது பிறவியை அறியவேண்டாம். தைரியமில்லாத புத்தியையடைந்த நான் உமது நிமித்தமாகக் கம்ஸனிடமிருந்து பயத்தையடைகின்றேன். (29) ஹே விஸ்வாத்மன்! சங்கம், சக்கிரம், கதை, பத்மம் இவற்றின் சோபையுடன் கூடினதும், நான்கு கைகளுள்ளதும், அலௌகிகமுமான இந்த ரூபத்தை மறைத்துக்கொள்ளுவீராக (30) பரமபுருஷனான யாதொரு நீர் ப்ரளயத்தின் முடிவில் இந்த ப்ரபஞ்சத்தை அவ்வவற்றுக்குற்ற அவகாசத்துக்குத் தக்கபடி சொந்த சரீரத்தில் தரிக்கின்றீரோ அந்த நீர் என்னுடைய கர்ப்பத்தை யடைந்தீர் என்பது மனிதவுலகின் பரிஹாஸமேயாகுமன்றோ" என்றாள்.

ஸ்ரீபகவான்—ஹே ஸதி! நீயோ முந்தின ஜன்மத்தில் ஸ்வாயம்புவமன்வந்தரத்தில் ப்ருஸ்னி என்ற பெயருள்ளவளாக இருந்தாய். அப்பொழுது இந்த வஸுதேவர் குற்றமற்ற ஸுதபஸ் எனப் பெயரிய ப்ரஜாபதியாக இருந்தார். நீங்களிருவரும் ப்ரஜைகளின் ஸிருஷ்டி விஷயத்தில் ப்ரம்ஹதேவனால் எப்பொழுது ஆக்ஞாபிக்கப் பட்டீர்களோ அது முதற்கொண்டு இந்திரியக்கூட்டங்களை நன்கு அடக்கிக்கொண்டு மேலான தவஞ்செய்தீர்கள். மழை காற்று வெய்

**पहिमघर्मकालगुणाननु। सहमानौ श्वासरोधविनिर्धूतमनोमलौ॥ ३४॥ शीर्णपर्णानिलाहारावुपशान्तेन चेतसा। मत्तः कामानभीप्सन्तौ मदाराधनमीहतुः॥ ३५॥ एवं वां तप्यतोस्तीव्रं तपः परमदुष्करम्। दिव्यवर्षसहस्राणि द्वादशेयुर्मदात्मनोः॥ ३६॥ तदा वां परितुष्टोऽहममुना वपुषानघे। तपसा श्रद्धया नित्यं भक्त्या च हृदि भावितः॥ ३७॥ प्रादुरासं वरद्राड् युवयोः कामदित्सया। व्रियतां वर इत्युक्ते मादृशो वां वृतः सुतः॥३८॥ अजुष्टग्राम्यविषयावनपत्यौ च दंपती। न वव्राथेऽपवर्गं मे मोहितौ देवमायया॥ ३९॥ गते मयि युवां लब्ध्वा वरं मत्सदृशं सुतम्। ग्राम्यान्भोगानभुञ्जाथां युवां प्राप्तमनोरथौ॥ ४०॥ अदृष्ट्वान्यतमं लोके शीलौदार्य-**

---

யில் பனி நெருப்பு, மற்றும் காலத்துக்கேற்ற குணம் இவற்றை அடிக்கடி பொருக்கின்றவர்களாகவும், ஶ்வாஸத்தையடக்குதலால் போக்கப்பட்ட மனோமலத்தையுடையவர்களாகவும், உதிர்ந்த சருகுகளையும் காற்றையும் புஜிக்கின்றவர்களாகவும், என்னிடமிருந்து புத்திராதி விஷயங்களையடைய விருப்பினவர்களாகவும் கொண்டு ஒடுங்கின மனத்துடன் என்னைப் பூஜித்துவந்தீர்கள். மிக்க மேலானதும் செய்தற்கரிதானதுமான கடுந்தவத்தை என்னிடத்தில் மனத்தைச் செலுத்தி நீங்கள் இவ்விதம் செய்யுங்கால் தேவமானப்படி பன்னிரண்டாயிரம் வருஷங்கள் கழிந்தன. ஹே அனகே! அப்பொழுது தபஸ்ஸுடனும், சிரத்தையுடனும், தொடர்ந்தபக்தியுடனும் மனத்தில் தியானிக்கப்பட்ட வரதராஜனான நான் சந்தோஷமடைந்து வரனைக்கொடுக்கு மெண்ணத்துடன் இந்தச் சரீரத்துடனேயே உங்கள் முன்னிலையில் தோன்றினேன். "வரன் கேட்கப்படட்டும்" என என்னால் சொல்லப்பட்டதும் உங்களால் என்னைப்போன்ற புத்திரன் வரமாகக் கேட்கப்பட்டது. சிற்றின்பப் பற்றில்லாதவர்களும், புத்திரனற்றவர்களுமான நீங்கள் இருவரும் தேவமாயையினால் மோஹிக்கச் செய்யப்பட்டவர்களாய்க் கொண்டு என்னிடமிருந்து மோக்ஷத்தை வரனாகக் கேட்டீர்களில்லை. வரனைக் கொடுத்து நான் போனதும் எனக்கொப்பான புத்திரனை வரனாகவடைந்து நீங்கள் மனோரதம் நிறைவேறினவர்களாய் சிற்றின்பப்போகங்களை யனுபவித்தீர்கள். நான் சீலம் (ஒழுக்கம்) ஔதார்யம்=மாஹாத்மியம், வாத்

गुणैः समम्। अहं सुतो वामभवं पृश्निगर्भ इति श्रुतः॥४१॥ तयोर्वां पुनरेवाहमदित्यामास कश्यपात्। उपेन्द्र इति विख्यातो वामनत्वाच्च वामनः ॥ ४२ ॥ तृतीयेऽस्मिन्भवेऽहं वै तेनैव वपुषाथ वाम्। जातो भूयस्तयोरेव सत्यं मे व्याहृतं सति ॥ ४३ ॥ एतद्वां दर्शितं रूपं प्राग्जन्मस्मरणाय मे। नान्यथा मद्भवं ज्ञानं मर्त्यलिङ्गेन जायते ॥ ४४ ॥ युवां मां पुत्रभावेन ब्रह्मभावेन चासकृत्। चिन्तयन्तौ कृतस्नेहौ यास्येथे मद्गतिं पराम् ॥ ४५ ॥

---

ஸல்யம் முதலிய குணம் இவற்ருல் எனக்கு ஸமமான வேறு ஒருவனையும் உலகில் காணுது ப்ருஶ்னிகர்ப்பன் என ப்ரஸித்திபெற்ற உங்களுடைய புத்திரனுகவவதரித்தேன். (1)அந்த உங்களுக்கே திரும்பவும் கஶ்யபருக்கு அதிதியினிடத்தில் உபேந்திரன் எனப் பிரஸித்திபெற்றவனுகவும், குள்ளனுசவிருப்பதுபற்றி வாமனன் எனப் பிரஸித்தனுகவும் பிறந்தேன். பின்னர் உங்களுடைய இந்த மூன்ருவது பிறவியில் அதே சரீரத்துடன் அதே உங்களுக்கே திரும்பவும் நான் புத்திரனுகப் பிறந்தேன். ஹே ஸதி! எனது வார்த்தை ஸத்தியம். "பகவானுடைய அவதாரம் இது" என்ற எண்ணம் முதலிலுண்டாகவேண்டி இந்த எனது ரூபம் உங்களுக்குக் காட்டப்பட்டது. அவ்விதமில்லாது மனுஷ்ய தேஹத்துடன் வந்தால் அதனுல் (2)என்னை விஷயமாகக்கொண்ட ஞானமேற்படமாட்டாதன்ருே. (32-44) நீங்களிருவரும் என்னைப் புத்திரனென்ற எண்ணத்துடனும், ப்ரம்ஹமென்ற எண்ணத்துடனும் அடிக்கடி நினைக்கின்றவர்களாகவும், என்னிடம் செலுத்தப்பட்ட ப்ரேமையையுடையவர்களாகவுமிருந்துகொண்டு மேலான கதியை (முக்தியை) அடையப்போகின்றீர்"(3) என்று சொன்னர். (45)

---

(1) ஸுதபஸ்ஸே கச்யபராகவும், ப்ருச்னியே அதிதியாகவும் ஜனிக்க அந்த உங்களுக்கே திரும்பவும் நான் உபேந்திரன் என்றும், வாமனன் என்றும் பெயருடன் புத்திரனுக வந்தேன் என்று கருத்து. (2) சாதாரணமான மனிததேஹத்துடன் நான் பிறந்திருந்தால் முந்தின பிறவியில் வாக்களித்த பகவானேதான் இங்கு அவதரித்திருக்கிருர் என நீங்கள் நினைக்க இடமில்லாமல் போயிருக்கும். அதற்காக இந்த ரூபத்துடன் அவதரித்தேன். பின்னர் உனது இஷ்டத்தையனுஸரித்து குழந்தையாகவுமாகப் போகிறேன் என்பது கருத்து. (3) இதற்குமேல் உங்களுக்குப் பிறவியிலையாதென்பது கருத்து.

श्रीशुक उवाच—इत्युक्त्वाऽसीद्धरिस्तूष्णीं भगवानात्ममायया। पित्रोः संपश्यतोः सद्यो बभूव प्राकृतः शिशुः॥ ४६ ॥ ततश्च शौरिर्भगवत्प्रचोदितः सुतं समादाय स सूतिकागृहात्। यदा बहिर्गन्तुमियेष तर्ह्यजा या योगमायाऽजनि नन्दजायया॥ ४७ ॥ तया हृतप्रत्ययसर्ववृत्तिषु द्वाःस्थेषु पौरेष्वपि शायितेष्वथ। द्वारस्तु सर्वाः पिहिता दुरत्यया बृहत्कपाटायसकीलशृङ्खलैः॥ ४८ ॥ ताः कृष्णवाहे वसुदेव आगते स्वयं व्यवर्यन्त यथा तमो रवेः। ववर्ष पर्जन्य उपांशुगर्जितः शेषोऽन्वगाद्वारि निवारयन्फणैः॥ ४९ ॥ मघोनि वर्षत्यसकृद्यमानुजा गम्भीरतोयौघजवोर्मिफेनिला। भया-

---

ஸ்ரீசுகர்—என்று சொல்லி பகவானுன ஹரியானவர் மௌன மாகவிருந்து மாதா பிதாக்கள் நன்கு பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே தனது மாயையினுல் ப்ரகிருதிவசப்பட்ட குழந்தையாக உடனே மாறிவிட்டார். (46) பிறகு பகவானுலேவப்பட்ட அந்த வஸுதேவரும் குழந்தையைச் சாவதானமாக எடுத்துக்கொண்டு ப்ரஸவ வீட்டிலிருந்து எதுபோழ்து வெளியிற்செல்ல நினைத்தாரோ அதுபோழ்து யாதொரு யோகமாயையுண்டோ அவள் பிறவியற்றவளாயினும் நந்தகோபபத்னியானயசோதையை நிமித்தமாகக்கொண்டு பிறந்தாள். (47) பிறகு வாயிற் காப்போரும், பட்டினத்து ஜனங்களும் அந்த மாயையினுல்போக்கப்பட்ட அறிவுதரும் எல்லா மனோ விருத்திகளையுமுடையவர்களாய்த் தூங்கும்படி செய்யப்பட்டதும், பெரிய கதவுகளினுலும், இரும்பாலான மூளை சங்கிலி இவற்ருலும் அசைக்கவியலாதபடி எல்லாத் துவாரங்களும் (கோட்டை வாயில்களும்) மூடப்பட்டிருந்தன. (48) வஸுதேவர் கிருஷ்ணனைத் தூக்கிக்கொண்டு வந்ததும் அந்தக் கோட்டைவாயில்கள் ஸூரியனிடமிருந்து இருளானதுபோலத் தானே திறந்துகொண்டன. மேகமானது மெதுவான கர்ஜனையுடன் மழையைப் பொழிந்தது. ஆதிசேஷன் (தனது) படங்களினுல் மழைஜலத்தை மறைத்துக்கொண்டு *ரஹஸ்யமாகப் பின்தொடர்ந்தான். (49) இந்திரன் ஓயாது மழையைப் பொழியுங்கால் அதிக ஜலக்கூட்டத்தின் வேகத்தினு

---

* மூலத்திலுள்ள உபாம்சு என்றபதத்தை அன்வகாத் என்ற பதத்துடன் சேர்த்தும் உரை எழுதப்பட்டது.

नकावर्तशताकुला नदी मार्गं ददौ सिन्धुरिव श्रियः पतेः ॥ ५० ॥ नन्दव्रजं शौरिरुपेत्य तत्र तान् गोपान्प्रसुप्तानुपलभ्य निद्रया। सुतं यशोदाशयने निधाय तत्सुतामुपादाय पुनर्गृहानगात् ॥ ५१ ॥ देवक्याः शयने न्यस्य वसुदेवोऽथ दारिकाम्। प्रतिमुच्य पदोर्लोहमास्ते पूर्ववदावृतः ॥ ५२ ॥ यशोदा नन्दपत्नी च जातं परमबुध्यत। न तल्लिङ्गं परिश्रान्ता निद्रयापगतस्मृतिः ॥ ५३ ॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्धे कृष्णजन्मनि तृतीयोऽध्यायः ॥ ३ ॥

---

லுண்டான அலைகள் மூலம் நுரையை யடைந்ததும், மிக்க பயத்தைத் தருகின்ற நூற்றுக்கணக்கான சுழல்களடர்ந்ததுமான யமுனை நதி, சமுத்திரம் ஸ்ரீதாபதிக்குப்போல *வழியைவிட்டது. (50) வஸுதேவர் நந்தகோகுலத்தையடைந்து அங்கு அந்தக் கோபாலர்கள் மாயையினால் தூங்குவதைக் கண்ணுற்று (தனது) புத்திரனை யசோதையின் படுக்கையில் வைத்து அவளது பெண்ணை மெதுவாக எடுத்துக்கொண்டு திரும்பி வீடுவந்து சேர்ந்தார். (51) பிறகு வஸுதேவர், பெண் குழந்தையை தேவகியினுடைய படுக்கையில் விட்டுக் கால்களில் விலங்கை மாட்டிக்கொண்டு முன்போலவே ஒரு வருங்காணுதவாறு இருந்தார், (52) மாயாதேவியினால் நினைவை இழந்தவளும் களைத்தவளும் நந்தகோபருடைய மனையாளுமான யசோதையோ (குழந்தை) பிறந்ததைமட்டு மறிந்தாளேயல்லாது ஆணு? பெண்ணு? என்ற அதன் குறியை அறிந்தாளில்லை" என்றார்.

இவ்விதம் பாகவத மஹாபுராணத்தின் பத்தாவது ஸ்கந்தத்தின்
பூர்வார்த்தத்தில் கிருஷ்ணுவதாரத்தில்
மூன்றாவது அத்தியாயம் முற்றிற்று.



---

* मार्गन्ददौ என்றதால் வஸுதேவர் குழந்தையுடன் வந்ததும் மேற்கிலுள்ள ஜலம் மேற்கிலும், கிழக்கிலுள்ளது கிழக்கிலுமாக நின்று அவர் போகும் வழியில் ஜலமில்லாமலாக்கிவிட்டது எனப்பெரியாருபதேசிக்கின்றனர்.

## நாராயணீயம்.

நாராயணீயத்தில் இவ்விஷயமாகச் சொல்லுவதாவது:—

आनन्दरूप भगवन्नयि तेऽवतारे प्राप्ते प्रदीप्तभवदङ्गनिरीयमाणैः।
कान्तिव्रजैरिव घनाघनमण्डलैर्द्यामावृण्वती विरुरुचे किल वर्षवेला ॥ ११ ॥

(ப—ரை) आनन्दरूप !=ஆனந்தஸ்வரூபரான ! अयि भगवन् !=ஓ பகவானே ! ते=உம்முடைய अवतारे=அவதாரமானது, प्राप्ते=ஏற்படுங்கால், प्रदीप्तभवदङ्गनिरीयमाणैः=மிக்க ஒளிக்கின்ற உமது அங்கத்தினின்றும் பரவுகின்ற कान्तिव्रजैरिव=காந்திக்கூட்டங்கள் போன்ற घनाघनमण्डलैः=மேகமண்டலங்களினால் द्याम्=ஆகாசத்தை, आवृण्वती=மறைக்கின்ற, वर्षवेला=வர்ஷாகாலமானது, विरुरुचे किल=மிக்க விளங்கிற்றன்றோ. (11) (எ—று)

आशासु शीतलतरासु पयोदतोयैराशासिताप्तिविवशेषु च सज्जनेषु।
नैशाकरोदयविधौ निशि मध्यमायां क्लेशापहस्त्रिजगतां त्वमिहाविरासीः ॥

(ப—ரை) आशासु=திக்குகள், पयोदतोयैः=மேக ஜலங்களால், शीतलतरासु=மிக்கக் குளிர்ந்தனவாகவானதும், सज्जनेषु=ஸாதுஜனங்கள், आशासिताप्तिविवशेषु=கோரப்பட்டதையடைந்ததால்பரவசர்களாக இருக்கும்பொழுதும், मध्यमायां निशि=நடு இரவில் नैशाकरोदयविधौ=சந்திர ஸம்பந்தமான உதயம் ஏற்படும்பொழுது त्रिजगताम्=மூன்று உலகங்களுடையவும் क्लेशापहः=துக்கத்தைப்போக்குகின்ற त्वम्=நீர் इह=இவ்வுலகில், आविरासीः=ஆவிர்ப்பாவ (தோற்ற) த்தையடைந்தீர்.

बाल्यस्पृशापि वपुषा दधुषा विभूतीरुद्यत्किरीटकटकाङ्गदहारभासा।
शङ्खारिवारिजगदापरिभासितेन मेघासितेन परिलेसिथ सूतिगेहे ॥ १३ ॥

(ப—ரை) बाल्यस्पृशापि=இளமையைத் தொட்டிருப்பினுங்கூட विभूतीः=ஐஸ்வர்யாதிகளை दधुषा=தரிக்கின்றதும், उद्यत्किरीटकटकाङ्गदहारभासा=வெளிக்கிளம்புகின்ற, கிரீடம், கைவளை, தோள்வளை, கழுத்திலுள்ள முத்தாஹாரம் இவற்றின் காந்தியையுடையதும், शङ्खारिवारिजगदापरिभासितेन=சங்கம், சக்கிரம், தாமரைப்பூ, கதை இவைகளால் நாலா பக்கங்களிலும் விளங்கச் செய்யப்பட்டதும், मेघासितेन=மேகம் போன்று கருத்ததுமான, वपुषा=சரீரத்தினால், सूतिगेहे=பிரஸவ அறையில், परिलेसिथ=விளக்கத்தை யடைந்தீர்.(13)

वक्षःस्थलीसुखनिलीनविलासिलक्ष्मीमन्दाक्षलक्षितकटाक्षविमोक्षभेदैः ।
तन्मन्दिरस्य खलकंसकृतामलक्ष्मीमुन्मार्जयन्निव विरेजिथ वासुदेव ॥१४॥

(ப-ரை) वासुदेव !=வாஸுதேவனே ! वक्षःस्थलीसुखनिलीनविलासिलक्ष्मीमन्दाक्षलक्षितकटाक्षविमोक्षभेदैः=மார்பு ப்ரதேசத்தில் ஸுகமாக மறைந்து வஸிக்கின்றவளும், சோபையுடன் கூடினவளுமான லக்ஷ்மியினுடைய லஜ்ஜையுடன் கூடின கடாக்ஷவிமோக்ஷணத்தின் பேதங்களினால், तन्मन्दिरस्य=அந்த வீட்டுக்கு, खलकंसकृताम्=துஷ்டனான கம்ஸனால் செய்யப்பட்ட अलक्ष्मीम्=அமங்களத்தை, उन्मार्जयन्निव=துடைப்பவர் போன்று विरेजिथ=விளங்கினீர். (14) (எ-று)

शौरिस्तु धीरमुनिमण्डलचेतसोऽपि दूरस्थितं वपुरुदीक्ष्य निजेक्षणाभ्याम् ।
आनन्दबाष्पपुलकोद्गमगद्गदार्द्रस्तुष्टाव दृष्टिमकरन्दरसं भवन्तम् ॥ १५ ॥

(ப-ரை) शौरिस्तु=வஸுதேவரோவெனில், धीरमुनिमण्डलचेतसोऽपि=புத்தியைத் தன்வசமாக்கின முனிக்கூட்டங்களின் சித்தத்துக்குக்கூட, दूरस्थितम्=வெகு தொலையிலிருக்கும், वपुः=உமது சரீரத்தை, निजेक्षणाभ्याम्=தனது கண்களால், उदीक्ष्य=பார்த்து, आनन्दबाष्पपुलकोद्गमगद्गदार्द्रः=ஆனந்தபாஷ்பம், மயிர்க்கூச்சல், தழுதழுத்த குரல் இவை நிறைந்தவராய்க் கொண்டு, दृष्टिमकरन्दरसम्=கண்களுக்கு மகரந்த ரஸமாகவான, (தேனுகவான) भवन्तम्=உம்மை तुष्टाव=துதித்தார். (15) (எ-று)

देव प्रसीद परपूरुष तापवल्लीनिर्लूनदात्रसमनेत्रकलाविलासिन् ।
खेदानपाकुरु कृपागुरुभिः कटाक्षैरित्यादि तेन मुदितेन चिरं नुतोऽभूः ॥

(ப-ரை) देव !=தேவனே ! परपुरुष !=பரபுருஷனே ! तापवल्लीनिर्लूनदात्रसमनेत्रकलाविलासिन् ! = ஆத்யாத்மிக, ஆதிதைவிக, ஆதிபௌதிக தாபமாகிற கொடியை அடியோடு வெட்டும் கத்திக்கொப்பான நேத்ரகலையின் (கடாக்ஷத்தின்) லீலையையுடையவரே ! प्रसीद=ப்ரஸாதத்தைச் செய்வீராக. कृपागुरुभिः=கருணையினால் கனத்த कटाक्षैः=கடாக்ஷங்களினால், खेदान्=துக்கங்களை, अपाकुरु=போக்கக்கடவீர். इत्यादि=என்றதை முதன்மையாகக் கொண்டிருக்கும்படி मुदितेन=ஸந்தோஷத்தையடைந்த, तेन=அந்த வஸுதேவரால் चिरम्=வெகு காலம், नुतः=துதிக்கப்பட்டவராக, अभूः=ஆனீர். (16) (எ-று)

**माता च नेत्रसलिलास्तृतगात्रवल्ल्या स्तोत्रैरभिष्टुतगुणः करुणालयस्त्वम् ।**
**प्राचीनजन्मयुगलं प्रतिबोध्य ताभ्यां मातुर्गिरा दधिथ मानुषबालवेषम् ॥**

(ப-ரை) नेत्रसलिलास्तृतगात्रवल्ल्या = கண்ணீரினால் நனைக்கப்பட்ட கொடிபோன்ற சரீரத்தையுடையவளான, मात्रा च=தாயினாலும், स्तोत्रैः=ஸ்தோத்திரங்களினால், अभिष्टुतगुणः=எடுத்துக் காட்டப்பட்ட குணங்களையுடையவரும், करुणालयः=கருணைக்கு இருப்பிடமுமான, त्वम्=நீர், ताभ्याम्=அந்த மாதா பிதாக்களுக்கு, प्राचीन-जन्मयुगलम्=முந்தின இரண்டு பிறவிகளை प्रतिबोध्य=நினைவூட்டி, मातुर्गिरा=தாயின் வார்த்தையினால், मानुषबालवेषम्=மனிதக் குழந்தையின் வேஷத்தை, दधिथ=எடுத்தீர். (17) (எ-று)

**त्वत्प्रेरितस्तदनु नन्दतनूज यातो व्यत्यासमारचयितुं स हि शूरसूनुः ।**
**त्वां हस्तयोरधित चित्तविधार्यमार्यै रंभोरुहस्थकलहंसकिशोररम्यम् ॥**

(ப-ரை) हे नन्दतनूज!=ஹே நந்தகோபரின் புத்திரரே! तदनु=பிறகு त्वत्प्रेरितः=உம்மாலேவப்பட்டவரும், व्यत्यासम्=மாறுதலை, (தனது குழந்தையை யசோதையினிடத்திலும், அவள் குழந்தையைத் தேவகியினிடத்திலுமாக) आरचयितुम्=செய்வதற்குவேண்டி. यातः=சென்றவருமான, सः=அந்த शूरसूनुः=சூர குமாரரான வஸுதேவர், आर्यैः=மஹான்களால், चित्तविधार्यम्=மனத்தால் தாங்கக்கூடியவரும், अम्भोरुहस्थकलहंसकिशोररम्यम् = தாமரஸ புஷ்பத்திலிருக்கின்ற அன்னக்குஞ்சுபோல அழகுவாய்ந்தவருமான, त्वाम्=உம்மை, हस्तयोः=கைகளில், अधित हि=தரித்தாரன்றோ. (18)

**जाता तदा पशुपसद्मनि योगनिद्रा निद्राविमुद्रितमथाकृत पौरलोकम् ।**
**त्वत्प्रेरणात्किमिव चित्रमचेतनैर्यद्द्वारैः स्वयं व्यघटि सङ्घटितैस्सुगाढम् ॥**

(பரை) त्वत्प्रेरणात्=உமது ப்ரேரணையினால் तदा=அப்பொழுது, पशुपसद्मनि=நந்தகோபருடைய வீட்டில், जाता=பிறந்த, योगनिद्रा=யோகமாயையானவள், अथ=பின்னர், पौरलोकम्=பட்டினத்து ஜனத்தை, निद्राविमुद्रितम्=தூக்கத்தினால் கண் மூடினதாக अकृत=செய்தாள். सुगाढम्=வெகு கெட்டியாக, सङ्घटितैः=மூடப்பட்டனவும், अचेतनैः=அசேதனங்களுமான, द्वारैः=வாயிற்படிகளினால், यत्=யாது காரணத்தால் स्वयम्=தானாகவே व्यघटि=திறக்கப்பட்டதோ அக்காரணம்பற்றி இவ்விஷயத்தில் चित्रम्=ஆஶ்சரியமானது, किमिव=எது.

## अथ चतुर्थोऽध्यायः ॥

श्रीशुक उवाच—बहिरन्तः पुरद्वारः सर्वाः पूर्ववदावृताः। ततो बालध्वनिं श्रुत्वा गृहपालाः समुत्थिताः ॥ १ ॥ ते तु तूर्णमुपव्रज्य देवक्या गर्भजन्म तत्। आचख्युर्भोजराजाय यदुद्विग्नः प्रतीक्षते ॥ २ ॥ स तल्पा-

---

शेषेण भूरिफणवारितवारिणाथ स्वैरं प्रदर्शितपथो मणिदीपितेन ।
त्वां धारयन् सखलु धन्यतमः प्रतस्थे सोऽयं त्वमीश मम नाशय रोगवेगान्॥

(ப—ரை) अथ = பின்னர், भूरिफणवारितवारिणा = அதிகமான படங்களினுல் மறைக்கப்பட்ட ஜலத்தையுடையவரும், मणिदीपितेन= தலையிலுள்ள ரத்னத்தினத்தினுல் பிரகாசிக்கும்படி செய்யப்பட்டவருமான, शेषेण=ஆதிசேஷனுல், प्रदर्शितपथः=காண்பிக்கப்பட்ட வழியையுடையவரும், धन्यतमः=மிக்க பாக்கியசாலியுமான, स खलु= அந்த வஸுதேவரோவெனில், त्वाम्=உம்மை, धारयन्=கையிலெடுத்துக்கொண்டு, स्वैरम्=ஸ்வச்சந்தமாக प्रतस्थे=புறப்பட்டார். हे ईश != ஹே ஈசனே! सोयम्=அந்த இந்த त्वम्=நீர், मम=என்னுடைய, रोग-वेगान्=வாத வியாதியின் வேகங்களை नाशय=போக்குவீராக. (20)

கிருஷ்ணவதார வர்ணனம் என்ற 38-வது தசகம் முற்றிற்று.



### நான்காவது அத்தியாயம்.

(அ—கை) चतुर्थे चण्डिका वाक्यमाकर्ण्यातिभयाकुलः ।
दुर्मन्त्रिभिर्हितं मेने कंसो बालादिहिंसनम् ॥

(க—ரை) மாயையின் வார்த்தையைக்கேட்டு மிக்கப்பயங்கொண்டு கலங்கின கம்ஸன் கெட்டமந்திரிகள் மூலம் குழந்தை முதலியோரின் ஹிம்ஸையைத் தனக்கு ஹிதமாகவெண்ணினுன் எனவுபதேசிக்கப்படுகிறது—

ஸ்ரீசுகர்—வெளியிலுமுள்ளிலுமுள்ள பட்டினத்து வாயில்கள் யாவும் முன்போலவே மூடிக்கொண்டன. பிறகு குழந்தையின் குரலைக்கேட்டு வீடுகாப்போர் எழுந்தனர். (1) அவர்களோ விரைவாக வோடி பயந்தவனுய் எதை எதிர்பார்த்த வண்ணமிருக்கின்ருனே அந்தத் தேவகியினது கர்ப்பப் பிறவியை போஜராஜனுக்குச் சொல்

तूर्णमुत्थाय कालोऽयमिति विह्वलः। सूतीगृहमगात्तूर्णं प्रस्खलन्मुक्तमूर्धजः ॥ ३ ॥ तमाह भ्रातरं देवी कृपणा करुणं सती। स्नुषेयं तव कल्याण स्त्रियं मा हन्तुमर्हसि ॥ ४ ॥ बहवो हिंसिता भ्रातः शिशवः पावकोपमाः। त्वया दैवनिसृष्टेन पुत्रिकैका प्रदीयताम् ॥ ५ ॥ नन्वहं ते ह्यवरजा दीना हतसुता प्रभो। दातुमर्हसि मन्दाया अङ्गेमां चरमां प्रजाम् ॥ ६ ॥ श्रीशुक उवाच— उपगुह्यात्मजामेवं रुदत्या दीनदीनवत्। याचितस्तां विनिर्भर्त्स्य हस्तादाचिच्छिदे खलः ॥ ७ ॥ तां गृहीत्वा चरणयोर्जातमात्रां स्वसुः सुताम्। अपोथयच्छिलापृष्ठे स्वार्थोन्मूलितसौहृदः ॥ ८ ॥ सा तद्धस्तात्समुत्पत्य सद्यो देव्यम्बरं गता। अदृश्यतानुजा विष्णोः सायुधाष्टमहाभुजा ॥ ९ ॥

---

னர். (2) அவன் படுக்கையினின்றும் விரைவாக எழுந்து இது யமன் எனப்பயந்து தடுமாறினவனாகவும், அவிழ்ந்த கூந்தலையுடையவனாகவுமாகி வேகமாக ப்ரஸவ அறையையடைந்தான். (3) இரங்கத்தக்கவளும் பதிவ்ரதையுமான தேவகி மனமுருகுமாறு அந்த ப்ராதாவைச் சொல்லலுற்றாள். "ஹே கல்யாண! (நல்லவனே!) இவள் உனது மருமகள். ஸ்திரீயைக் கொல்லுவது உனக்குத் தகுதியன்று. ஹே அண்ணா! தைவத்தினால் ஏவப்பட்ட உன்னால் நெருப்புக்கொப்பான வெகு குழந்தைகள் கொல்லப்பட்டன. பெண் ஒன்றுமட்டும் கொடுக்கப்படட்டும். ஹேப்ரபோ! அண்ணா! நீயும் கொல்லப்பட்ட புத்திரர்களையுடையவளுமான நான் உனது தங்கையல்லவோ. அறியாதவளான எனக்கு இந்தக் கடையிலுள்ள குழந்தையைக் கொடுக்கவேண்டியவனாகின்றனை" என்றாள். (4–6) ஸ்ரீசுகர்—பெண்ணைத் தழுவிக்கொண்டு மிக்க தைன்னியமுள்ளவளாய் இவ்விதம் அழுகின்ற தேவகியினால் யாசிக்கப்பட்ட துஷ்டனான கம்ஸன் அவளை அதட்டி (அவளது) கையினின்றும் (குழந்தையை) இழுத்துப் பிடுங்கிக்கொண்டான். (7) பிறந்த நிலையிலேயே இருக்கின்ற அந்தத் தங்கையின் பெண்ணை கால்களில் பிடித்துக்கொண்டு சொந்தப் பிரயோஜனத்துக்குவேண்டி சினேஹத்தையிழந்தவனாய் கற்பாறையினடியில் ஓங்கி அடித்தான். (8) விஷ்ணுவின் ஸஹோதரியான அப்பெண் அவனது கையினின்றும் விடுத்துக்கொண்டு உடனே தேவியாகவாகி ஆகாசத்தையடைந்து ஆயுதங்களுடன் கூடின எட்டு பெரிய கைகளையுடையவளாகவும், திவ்யமான மாலை,

दिव्यस्रगम्बरालेपरत्नाभरणभूषिता । धनुःशूलेषुचर्मासिशङ्खचक्रगदाधरा ॥ १० ॥ सिद्धचारणगन्धर्वैरप्सरःकिन्नरोरगैः । उपाहृतोरुबलिभिः स्तूयमानेदमब्रवीत् ॥ ११ ॥ किं मया हतया मन्द जातः खलु तवान्तकृत् । यत्र क्वा पूर्वशत्रुर्मा हिंसीः कृपणान्वृथा ॥ १२ ॥ इति प्रभाष्य तं देवी माया भगवती भुवि । बहुनामनिकेतेषु बहुनामा बभूव ह ॥ १३ ॥

तयाभिहितमाकर्ण्य कंसः परमविस्मितः । देवकीं वसुदेवं च विमुच्य प्रश्रितोऽब्रवीत् ॥ १४ ॥ अहो भगिन्यहो भाम मया वां बत पाप्मना । पुरुषाद इवापत्यं बहवो हिंसिताः सुताः ॥ १५ ॥ स त्वहं त्यक्तकारुण्यस्त्य

---

ஆடை, சந்தனம், ரத்தினாபரணம் இவற்றாலலங்கரிக்கப்பட்டவளாகவும், வில், சூலம், அம்பு, தோல், கத்தி, சங்கம், சக்கிரம், கதை இவற்றைத்தரிக்கின்றவளாகவும் காணப்பட்டாள். சித்தர், சாரணர், கந்தர்வர் இவர்களாலும், கையில் கொண்டுவரப்பட்ட பெரிய பலிகளை (பூஜாசாமான்களை) யுடைய அப்ஸரஸ், கின்னரர், உரகர் இவர்களாலும் துதிக்கப்படுபவளாய்ப் பின்வரும் வார்த்தையைச்சொல்லலானாள். ஹே மந்த! என்னைக் கொல்லுவதால் என்ன பயன். உனக்கு நாசத்தைச்செய்கின்றவனான பழையசத்துரு ஏதோவொரு இடத்தில் ஜனித்துவிட்டானன்றோ. ஒன்றுமறியாதவர்களை வீணில் கொல்லாதே என பகவதியான மாயாதேவியானவள் அவனைச்சொல்லி வெகு பேர்களமைந்த காசி முதலிய ஸ்தானங்களில் வெகு பெயர்களுள்ளவளாகவும் பூமியில் ஆனாள். (9–13)

அவளால் சொல்லப்பட்டதைக் கேட்டு கம்ஸன் மிக்க வாஶ்சரியத்தையடைந்தவனாய் தேவகியையும் வஸுதேவரையும் விடுவித்து வணக்கத்துடன் சொல்லத்தொடங்கினான். அந்தோ தங்காய்! அந்தோ தங்கையின் பர்த்தாவே! பாபியான என்னால், ராக்ஷஸன் தனது குழந்தையையே அழிப்பதுபோல உங்களது வெகு புத்திரர்கள் கொல்லப்பட்டுவிட்டனர். இது கஷ்டமே. காருண்யத்தை இழந்தவனும் ஞாதி ஸுஹிருத் இவர்களை இழந்தவனும், வஞ்சகனும், உயிருடனிருக்கும் பிணமுமான அந்த நான் ப்ரம்ஹ ஹத்தி செய்தவன்போல எந்தவுலகங்களை யடையப்போகின்றேனோ. கேவலம் மனிதர்களே தானென்பதில்லாமல் தைவமுங்கூட பொய் சொல்லு

कथातिसुहृत्खलः। काँल्लोकान्वै गमिष्यामि ब्रह्महेव मृतः श्वसन् ॥ १६ ॥ दैवमप्यनृतं वक्ति न मर्त्या एव केवलम्। यद्विश्रम्भादहं पापः स्वसुर्निहतवान् शिशून् ॥ १७ ॥ मा शोचतं महाभागावात्मजान्स्वकृतंभुजः। जन्तवो न सदैकत्र दैवाधीनास्तदाऽसते ॥ १८ ॥ भुवि भौमानि भूतानि यथा यान्त्यपयान्ति च। नायमात्मा तथैतेषु विपर्येति यथैव भूः ॥ १९ ॥ यथाऽनेवंविदो भेदो यत आत्मविपर्ययः। देहयोगवियोगौ च संसृतिर्न निवर्तते ॥ २० ॥ तस्माद्भद्रे स्वतनयान्मया व्यापादितानपि। मानुशोच्च यतः सर्वः स्वकृतं विन्दतेऽवशः ॥ २१ ॥ यावद्धतोऽस्मि हन्ताऽस्मीत्यात्मानं मन्यतेऽ

---

கின்றதே. எந்தப் பொய் வார்த்தையை நம்பி பாபியான நான் தங்கையின் குழந்தைகளைக் கொன்றேனோ. ஹே மஹாபாகர்களே! தனது ப்ராரப்த கர்மபலனையனுபவிக்கின்ற குழந்தைகளைக் குறித்துச் சோகப்படாதீர். ஜந்துக்கள் எப்பொழுதும் ஓரிடத்திலேயே இருப்பதில்லை. ஓரிடத்திலும் ஒரு ஸமயத்திலும் கூட தைவாதீனர்களாகவே தானிருக்கின்றனர். பூமியில் குடம் முதலியனபோன்று தேஹங்களே அழிவதும், உண்டாவதுமாகவிருக்கின்றன. இந்தத் தேஹங்கள் பிறப்பு முதலியவற்றினால் விகாரத்தையடைந்தபோதிலும் கூட கண்கூடாகவனுபவிக்கப்படும் இந்த ஆத்மா பூமியானது போல ஜனன மரணாதிவிகாரங்களையடைவதில்லை. (ஆகவே இவ்விதம் விசாரிக்குங்கால் சோகத்துக்கு இடமேயில்லை என்றேற்படுகிறது.) (19) உள்ளபடி இவ்விதமறியாதவனுக்கு எத்தகைய மித்யாக்ஞானத்தினால் பேதமேற்படுமோ அத்தகைய (மித்யாக்ஞான ரூபமான) *தேஹாத்மபுத்தியும், அதனால் தன்னைவிட வேறுபட்ட புத்திராதி தேஹங்களின் சேர்க்கையும், பிரிதலும், அதனால் சுகதுக்கானுபவரூபமான ஸம்ஸாரமும் ஆத்மாவினுண் மையான ஞ்ஞா

---

* தேஹத்தில் அஹம் புத்தியானது—தேஹமேதான் நான், நானேதான் தேஹம் என்ற எண்ணமானது, உண்டாவதால் ஆத்மா பரிச்சின்னனாகவாகிவிடுகிறான். அவ்விதமாகுங்கால் இது என்ற வியவஹாரத்துக்கு விஷயமான பொருள் வேறுபட்டதாகவாகிவிடுகிறது. அத்தகைய வேறுபாட்டின் மூலம் புத்திராதி தேஹங்களுடன் சேர்க்கையும், அஃதின்மையும் ஏற்படுகிறது. அதன் மூலம் சுக துக்க அனுபவரூபமான ஸம்ஸாரமும் அக்ஞானமுள்ளவரை விலகுவதில்லை.

स्पृक्। तावत्तदभिमान्यज्ञो बाध्यबाधकतामियात्॥ २२॥ क्षमध्वं मम दौरात्म्यं साधवो दीनवत्सलाः। इत्युक्त्वाश्रुमुखः पादौ श्यालस्वस्रोरथाग्रहीत्॥ २३॥ मोचयामास निगडाद्विश्रब्धः कन्यकागिरा। देवकीं वसुदेवं

---

னம் வரும்வரை விலகுவ தில்லை. (20) ஆகையால் ஹே நல்லவனே! (அக்ஞான திருஷ்டியால்) சொந்த உனது புத்திரர்கள் என்னால் கொல்லப்பட்டனராயினுங் கூட அவர்களைக் குறித்து நீ சோகத்தையடையாதே. ஏன்? எல்லா ப்ராணியும் தன் வசமிழந்ததாய் தனது கர்மபலனையன்றோ யனுபவிக்கிறது. (21) எதுவரை தேஹத்திலாத்மபுத்தி யுள்ளவனாக விருந்துகொண்டு பிறரால் கொல்லப்பட்டவன் என்றும், பிறரைக் கொல்லுகின்றவன் என்றும் ஆத்மாவை எண்ணுகின்றானோ, அதுவரை தேஹ ஹனனத்தை ஆத்மாவினிடத்திலாரோபிப்பவன் பிறரால் பாதிக்கப்படுந் தன்மையையும், பிறரைப் பாதிப்பவனாகவிருக்குந் தன்மையையும் அடைவான். (22) தீனவத்ஸலர்களும் ஸாதுக்களுமான நீங்கள் எனது கெட்ட நடத்தையை மன்னித்துவிடுங்கள் என்று சொல்லி முகத்தில் கண்ணீரை வடியவிட்டுக்கொண்டு அப்பொழுது தங்கையின் புருஷன், *தங்கை இருவருடையவும் கால்களைப் பிடித்துக்கொண்டான். (23) கன்னிகையின் வார்த்தையினால்

---

* மூலத்தில் श्यालस्वस्रोः எனப்பாடமிருக்கிறது. இதை ஒரே பதமாக வைத்துக்கொண்டு பொருளெழுதப்பட்டது. श्यालः स्वस्रोः என இரண்டு பதங்களாகப் பிரித்துக்கொண்டால் श्यालः=மைத்துனனான கம்ஸன், स्वस्रोः தங்கை, அவளது புருஷன் இருவருடையவும் கால்களைப் பிடித்துக்கொண்டான் எனப் பொருள் கொள்ளவேண்டும். स्वस्रोः=என்றவிடத்தில் தேவகியினிடத்தில் மட்டும் ஸ்வஸ்ருத்தன்மை இருக்கின்றதேயொழிய வஸுதேவரிடத்திலில்லை. ஆயினும், ஒரு கூட்டத்தில் ஒருவனே குடையைக் கையில்பிடித்துக்கொண்டு சென்றபோதிலும், அக்கூட்டத்திலுள்ளயாவரும் छत्रिणो गच्छन्ति குடையுள்ளவர்கள் போகின்றனர் என லிங்கஸமவாயந்யாயத்தை யொட்டிச் சொல்லப்படுவதைக் காண்கிறோம். அவ்விதமே இங்கும் காண்க. லிங்கத்துக்கு=வாச்யார்த்தத்துக்கு, ஸமவாய:=ஸமுதாயத்தில் பிரவேசஞ் செய்யப்படல் லிங்கஸமவாயமாகும்.

च दर्शयन्नात्मसौहृदम् ॥ २४ ॥ भ्रातुः समनुतप्तस्य क्षान्तरोषा च देवकी । व्यसृजद्वसुदेवश्च प्रहस्य तमुवाच ह ॥ २५ ॥ एवमेतन्महाभाग यथा वदसि देहिनाम् । अज्ञानप्रभवाऽहंधीः स्वपरेति भिदा यतः ॥ २६ ॥ शोकहर्षभय-द्वेषलोभमोहमदान्विताः । मिथो घ्नन्तं न पश्यन्ति भावैर्भावं पृथग्दृशः ॥ २७॥

श्रीशुक उवाच—कंस एवं प्रसन्नाभ्यां विशुद्धं प्रतिभाषितः । देवकी वसुदेवाभ्यामनुज्ञातोऽविशद्गृहम् ॥ २८ ॥ तस्यां राज्यां व्यतीतायां कंस आहूय मन्त्रिणः । तेभ्य आचष्ट तत्सर्वं यदुक्तं योगनिद्रया ॥ २९ ॥ आकर्ण्य

---

நம்பிக்கையையடைந்தவனாய் மனத்திலுள்ளப்ரியத்தை (இனிய மொழிகளால்) காட்டிக் கொண்டு தேவகியையும், வசுதேவரையும் ஜயிலினின்றும் விடுவித்தான். (24) தமையன் நன்கு பச்சாத்தாபத்தை யடைவதைக் கண்ட தேவகியும் விலகின கோபமுள்ளவளாயினள். வசுதேவரும் விலகின கோபமுள்ளவரானார். அவனை மன்னித்துச் சிரித்துக் கொண்டு சொல்லலுற்றார். ஹே மஹாபாக! (நீ)எவ்விதம் சொல்லுகின்றாயோ இது இவ்விதமேதான். பிராணிகளுக்குத் தன்னுடையதென்றும் பிறருடையதென்றுமான வேற்றுமையானது எதன் மூலமேற்படுமோ அத்தகைய தேஹாத்ம புத்தியானது அஞ்ஞானத்தாலுண்டாகின்றது. நிமித்தங்களாகவான பாவங்களினாலேயே (பதார்த்தங்களினாலேயே) பாவங்களை (பதார்த்தங்களை) பரஸ்பரம் அழிக்கும் பாவப்பொருளான (அழியாப்பொருளான) ஈஶ்வரனை, சோகம் ஹர்ஷம், பயம், த்வேஷம், லோபம், மோஹம், மதம் இவற்றுடன் கூடின பேதஞ்ஞானமுள்ளவர் பார்ப்பதில்லை" என்றார். [பின்னையோ தேஹினில் நானே ஹந்தா அடிப்பவன்) என்றும், நானே ஹதன் (அடிக்கப்பட்டவன்) என்றும் எண்ணுகின்றனர் என்பது பொருள்.] (25–27)

சுகர் சொல்லுவதாவது—தெளிந்த மனமுள்ளவர்களான தேவகீ வசுதேவர்களால் இவ்விதம் தெளிவாகயிருக்கும்படி சொல்லப்பட்ட கம்ஸன் அவர்களால் விடையளிக்கப்பட்டவனாய் (தனது) வீட்டில் பிரவேசித்தான். (28) அன்றிரவு சென்றதும் கம்ஸன் மந்திரிகளை அழைத்து யோகமாயையினால் எது சொல்லப்பட்டதோ அவையாவையும் அவர்களுக்குத் தெளிவாகச் சொன்னான். (29) பர்த்தாவினது வார்த்தையைக் கேட்டு தேவ சத்துருக்களும்,

भर्तुर्गदितं तमूचुर्देवशत्रवः। देवान्प्रति कृतामर्षा दैतेया नातिकोविदाः ॥ ३० ॥ एवं चेत्तर्हि भोजेन्द्र पुरग्रामव्रजादिषु। अनिर्दशान्निर्दशांश्च हनिष्यामोऽद्य वै शिशून् ॥ ३१ ॥ किमुद्यमैः करिष्यन्ति देवाः समरभीरवः। नित्यमुद्विग्नमनसो ज्याघोषैर्धनुषस्तव ॥ ३२ ॥ अस्यतस्ते शरव्रातैर्हन्यमानाः समन्ततः। जिजीविषव उत्सृज्य पलायनपरा ययुः ॥ ३३ ॥ केचित्प्राञ्जलयो दीना न्यस्तशस्त्रा दिवौकसः। मुक्तकच्छशिखाः केचिद्भीताः स्म इति वादिनः ॥ ३४ ॥ न त्वं विस्मृतशस्त्रास्त्रान्विरथान्भयसंवृतान्। हंस्यन्यासक्तविमुखान्भग्नचापानयुध्यतः ॥ ३५ ॥ किं क्षेमशूरैर्विबुधैरसंयुगविकत्थनैः। रहोजुषा किं हरिणा शम्भुना वा वनौकसा। किमिन्द्रेणाल्पवीर्येण

தேவர்களைக் குறித்துப் பொருமை கொண்டவர்களும் மிக்க அறியாதவர்களுமான அசுரர்கள் அவனை (கம்ஸனை) சொல்லத்தொடங்கினர். (30) "ஹேபோஜேந்திர! இவ்விதமாயின் அப்பொழுது பட்டினத்திலோ, கிராமத்திலோ, இடைச்சேரி முதலியவற்றிலோ உள்ள பல்முளைக்காதனவும், பல்முளைத்தனவுமான குழந்தைகளை இப்பொழுதே கொன்றுவிடுவோம். (31) சண்டையில் பயந்தவர்களும், உமது வில்லின் நாணொலிகளினுல் எப்பொழுதுமே பயந்த மனதுடையவர்களுமான தேவர்கள் முயற்சித்து யாது செய்யப் போகின்றனர். நீர் பாணம்விடுங்கால் பாணக்கூட்டங்களால் நாலாபக்கங்களிலும் அடிக்கப்படுகின்றவர்களாகவும், பிழைத்திருக்க வெண்ணங்கொண்டவர்களாகவுமாகி போரைவிட்டு ஓட்டம் பிடிப்பதில் நோக்குடையவராயினர். (32-33) சிலதேவர்கள் தீனர்களாய் அஸ்திரங்களைக் கீழில்வைத்து இருகைகளையும் கூப்பினர். சிலர் கச்சம், தலைமயிர் இவற்றைஅவிழ்த்துக் கொண்டு பயந்தவர்களாயினேம் என்று சொல்லினர். நீரோ மறக்கப்பட்ட சஸ்திரம் அஸ்திரம் இவற்றை யுடையவர்களையும், தேரையிழந்தவர்களையும், பயத்துடன் கூடினவர்களையும், வேறுவிஷயத்தி லீடுபட்டவர்களையும், புறமுதுகு காட்டினவர்களையும், ஒடிந்த வில்லுடையவர்களையும், சண்டை செய்யாதவர்களையும், அடிப்பதில்லை. (34-35) போர்க்களத்தை விடுத்து வேறிடத்தில் தற்புகழ்ச்சி செய்கின்றவர்களும், பயமற்றவிடத்தில் சூரர்களுமான தேவர்களால் யாது செய்யக் கூடும். எல்லாவற்றுக்கும் உள்ளில் பிரவேசித்திருக்கின்ற (அதா

ब्रह्मणा वा तपस्यता ॥ ३६ ॥ तथापि देवाः सापत्न्यान्नोपेक्ष्या इति मन्महे ततस्तन्मूलखनने नियुङ्क्ष्वास्माननुव्रतान् ॥ ३७ ॥ यथामयोऽङ्गे समुपेक्षितो नृभिर्न शक्यते रूढपदश्चिकित्सितुम् । यथेन्द्रियग्राम उपेक्षितस्तथा रिपुर्महान्बद्धबलो न चाल्यते ॥ ३८ ॥ मूलं हि विष्णुर्देवानां यत्र धर्मः सनातनः । तस्य च ब्रह्मगोविप्रास्तपो यज्ञाः सदक्षिणाः ॥ ३९ ॥ तस्मात्सर्वात्मना राजन्ब्राह्मणान्ब्रह्मवादिनः । तपस्विनो यज्ञशीलान्गाश्च हन्मो हविर्दुघाः ॥ ४० ॥ विप्रा गावश्च वेदाश्च तपः सत्यं दमः शमः । श्रद्धा दया तितिक्षा च क्रतवश्च हरेस्तनूः ॥ ४१ ॥ स हि सर्वसुराध्यक्षो ह्यसु-

---

வது வெளியில் காணமுடியாத) விஷ்ணுவினுல் என்ன செய்யவிய லும். புருஷப்பிரவிருத்தியற்ற இளாவிருதவனத்தை த்தனது இருப்பிடமாகக் கொண்ட சிவனுல் என்ன செய்யக்கூடும். அற்ப வீர்யமுள்ள இந்திரனுலும், தவஞ்செய்கின்ற ப்ரம்ஹதேவனுலுமோ யாது செய்யமுடியும். ஆயினும் சத்துருக்களாக விருப்பதுபற்றி தேவர்கள் அசட்டை செய்யத்தகாதவரென வெண்ணுகின்ருேம். ஆகவே அவர்களின் மூலத்தை (வேரை) க்களைவதில் பற்றுள்ளவர் களான எங்களை ஏவக்கடவீர். சரீரத்திற் கண்ட வியாதி மனிதர்க ளால் நன்கு உபேக்ஷிக்கப் படுமாயின் அது வேரூன்றினதாக வாகி வைத்தியஞ் செய்யமுடியாததாக எவ்விதமாகுமோ, உபேக்ஷிக்கப் பட்ட இந்திரிய சமூஹமும் எவ்விதமோ அவ்விதமே உபேக்ஷிக்கப் பட்ட சத்துரு பலமுள்ளவனுகவும் பெரியவனுகவுமாகி அசைக்க முடியாதவனுகவாகி விடுகிருன். (36–38) விஷ்ணுவானவர் தேவர் களுக்கு மூலமன்ருே? எங்கு பழைமையான தர்மமிருக்கின்றதோ அங்கு அவரிருக்கிருர். அந்தத் தர்மத்துக்கு வேதங்களும் பசுக் களும் வேதியரும், தக்ஷிணையுடன் கூடின யாகங்களும், தவமும் மூலமாகும். ஆகவே ஹே ராஜன்! வேதத்தை அத்யயனஞ் செய்யும் ப்ராம்ஹணர்களையும், யாகஞ்செய்யுமியல்பை யுடைய தபஸ்விகளை யும், பால் நெய்முதலிய ஹவிஸ்ஸைத்தரும் பசுக்களையும் முற்றிலும் கொல்லுகின்ருேம். ப்ராம்ஹணர்களும், பசுக்களும், வேதங்களும், தவம், ஸத்தியம், தமம், சமம், சிரத்தை, தயை, திதிக்ஷை, யாகங் கள் ஆகிய இவைகளும் ஹரியினது சரீரமாகும். அந்த ஹரியோ எல்லாத்தேவர்களுக்கும் அத்யக்ஷனுவதுடன் அசுரர்களை த்வேஷிப்

**रक्षिद् गुहाशयः। तन्मूला देवताः सर्वाः सेश्वराः सचतुर्मुखाः। अयं वै तद्वधोपायो यदृषीणां विहिंसनम् ॥ ४२ ॥ श्रीशुक उवाच। एवं दुर्मन्त्रिभिः कंसः सह संमन्त्र्य दुर्मतिः। ब्रह्महिंसां हितं मेने कालपाशावृतोऽसुरः ॥ ४३ ॥ संदिश्य साधुलोकस्य कदने कदनप्रियान्। कामरूपधरान्दिक्षु दानवान्गृहमाविशत् ॥ ४४ ॥ ते वै रजः प्रकृतयस्तमसा मूढचेतसः। सतां विद्वेषमाचेरुरारादागतमृत्यवः ॥४५॥ आयुः श्रियं यशो धर्मं लोकानाशिष एव च। हन्ति श्रेयांसि सर्वाणि पुंसो महदतिक्रमः॥**

**इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्द्धे कंसोद्यम निरूपणं नाम चतुर्थोऽध्यायः ॥ ४ ॥**

---

பவனுகவும், ஹிருதயகுஹையில் வசிப்பவனுகவுமன்றே இருக்கின்றான். நான்முகனுடனும், மஹாதேவனுடனும் கூடின எல்லாத் தேவர்களும் அந்த ஹரியை மூலமாக (ஆதாரமாகக்) கொண்டவர்கள். ருஷிகளை ஹிம்ஸித்தல் என்பது யாதுண்டோ இதுவே அந்தஹரியைக் கொல்லுமுபாயமாகும்" என்றனர். (39-42).

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்—கெட்ட புத்தியையுடையவனும், காலபாசத்தால் சுத்தப்பட்டவனும், அசுரனுமான கம்ஸன் கெட்ட மந்திரிகளுடன் கூட இவ்விதமாலோசித்துக் கொண்டு ப்ராம்ஹணஹிம்ஸையைத் தனக்கு ஹிதமாக (நன்மை பயக்கக்கூடியதாக) எண்ணினன். (43) ஹிம்ஸையில் பற்றுள்ளவர்களும், இஷ்டப்படி ரூபத்தையெடுக்கக்கூடியவர்களுமான அசுரர்களை ஸாதுஜனங்களை ஹிம்ஸிக்கவேண்டித் திக்குக்களில் அனுப்பித்தனது வீடு சென்றான். (44) ரஜோகுணம் வாய்ந்த ஸ்வபாவமுடையவர்களும் தமோகுணத்தினல் மூடமான சித்தமுடையவர்களுமான அவர்கள் ஸமீபத்தில் வந்த மரணமுடையவர்களாக இருப்பதுபற்றி ஸாதுக்களுக்கே தீங்கைச் செய்யத்தொடங்கினர். (45) மஹான்களின் த்வேஷமானது புருஷனுடைய ஆயுள், ஐஸ்வரியம், புகழ், தர்மம் ஸ்வர்க்காதி லோகங்கள், தனம் புத்திரன் முதலியவற்றின் ஆசை சுருங்கச் சொல்லின் இம்மைமறுமைச் சுகஸாதனங்கள் ஆகியயாவையும் அழித்துவிடுமன்றே. (46).

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண தசமஸ்கந்த பூர்வார்த்தத்தில்
கம்ஸனது முயர்ச்சியை நிருபணம்செய்தல் என்ற
நான்காவது அத்தியாயம் முற்றிற்று.

## अथ पञ्चमोऽध्यायः ॥

श्रीशुक उवाच— नन्दस्त्वात्मज उत्पन्ने जाताह्लादो महामनाः । आहूय विप्रान्वेदज्ञान्स्नातः शुचिरलंकृतः ॥ १ ॥ वाचयित्वा स्वस्त्ययनं जातकर्मात्मजस्य वै । कारयामास विधिवत्पितृदेवार्चनं तथा ॥ २ ॥ धेनूनां नियुते प्रादाद्विप्रेभ्यः समलंकृते । तिलाद्रीन्सप्त रत्नौघशातकौम्भाम्बरावृतान् ॥ ३ ॥ कालेन स्नानशौचाभ्यां संस्कारैस्तपसेज्यया । शुध्य-

---

### ஐந்தாவது அத்தியாயம்.

पञ्चमे जातकं नन्दः सूनोः कृत्वा महोत्सवम् ।
गत्वाथ मथुरां प्राप वसुदेवागमोत्सवम् ॥

(க—ரை) ஐந்தாவது அத்தியாயத்தில் நந்தகோபர் புத்திரனுக்கு ஜாதகர்ம மஹோத்ஸவத்தைச் செய்து பின்னர் மதுரைக்குச் சென்று வசுதேவரின் சேர்க்கை மூலமேற்பட்ட ஸந்தோஷத்தை யடைந்தார் என வுபதேசிக்கப்படுகிறது.

ஸ்ரீசுகர்—பெரியமனத்தை யுடையவரான (தாராளசித்தமுள்ளவரான) நந்தகோபரோ வெனில் புத்திரன் உண்டானதும் மனக்களிப்பை யடைந்தவராய் ஸ்னானஞ்செய்து சுத்தராகி அலங்கரித்துக்கொண்டு சோதிடமறிந்தவர்களான ப்ராம்ஹணர்களை வரவழைத்து ஸ்வஸ்திவாசனமந்திரத்தை ஜபிக்கச்செய்து புத்திரனுக்கு ஜாதகர்மத்தை (புத்திரன் பிறந்த காலத்திற் செய்யவேண்டிய வைதிகமான ஸம்ஸ்காரவிசேஷத்தை) யும், அதுபோல பிதிருக்கள் தேவர்கள் இவர்களின் பூஜையையும் முறைப்படி செய்வித்தார். (1–2) நன்கு அலங்கரிக்கப்பட்ட இரண்டுலக்ஷம் பசுக்களையும், ரத்தினக் கூட்டங்களாலும், பொன்னுலாய வஸ்திரங்களினாலும் மறைக்க (அலங்கரிக்க) ப்பட்ட ஏழு திலபர்வதங்களையும் வேதமறிந்த ப்ராம்ஹணர்களுக்குக் கொடுத்தார். (3) காலத்தால் பூமிமுதலியனவும், ஸ்நானத்தால் தேஹம் முதலியனவும், சுத்திசெய்தலால் அசுத்தவஸ்துவினுல் பூசப்பட்டபொருளும், ஜாதகர்மாதி ஸம்ஸ்காரங்களால், கர்ப்பத்தினின்றும் வெளிவந்தகுழந்தை முதலியனவும், தவத்தினுல் இந்திரியம் முதலியனவும், யாகத்தினுல் ப்ராம்ஹணன் முதலியோரும், தானங்களால் திரவியங்களும், கிடைத்தது போதுமென்ற எண்ணத்தினுல் மனதும், ஆத்மவித்யையினுல் ஆத்மா

न्ति दानैः संतुष्टा द्रव्याण्यात्मात्मविद्यया ॥ ४ ॥ सौमंगल्यगिरो विप्राः सूतमागधवन्दिनः । गायकाश्च जगुर्नेदुर्भेर्यो दुन्दुभयो मुहुः ॥ ५ ॥ व्रजः संमृष्टसंसिक्तद्वाराजिरगृहान्तरः । चित्रध्वजपताकास्रक्चैलपल्लवतोरणैः ॥ ६ ॥ गावो वृषा वत्सतरा हरिद्रातैलरूषिताः । विचित्रधातुबर्हस्रग्वस्त्रकाञ्चनमालिनः ॥७॥ महार्हवस्त्राभरणकञ्चुकोष्णीषभूषिताः । गोपाः समाययू राजन्नानोपायनपाणयः ॥ ८ ॥ गोप्यश्चाकर्ण्य मुदिता यशोदायाः सुतोद्भवम् । आत्मानं भूषयांचक्रुर्वस्त्राकल्पाञ्जनादिभिः ॥ ९ ॥ नवकुङ्कुमकिञ्जल्कमुखपङ्कजभूतयः । बलिभिस्त्वरितं जग्मुः पृथुश्रोण्यश्चलत्कुचाः ॥१०

---

வும் சுத்தங்களாகவாகின்றனவன்றோ? (4) வேதமறிந்த ப்ராம்ஹணர்கள் ஸ்வஸ்திவாசனங்களைச் செய்கின்றவர்களாகவும், சூதர்கள் புராணம் சொல்லுகின்றவர்களாகவும், மாகதர்கள் வம்சத்தைப் புகழ்கின்றவர்களாகவும், வந்திகள் காலத்துக்கேற்றவாறு புகழுரை கூறுகின்றவர்களாகவும், காயகர்கள் பாட்டுப்பாடுகின்றவர்களாகவும், பேரீவாத்தியங்கள் இடைவிடாது முழங்குகின்றனவாகவும் இருந்தன. இடைச்சேரியானது நன்கு சுத்தஞ்செய்யப்பட்டனவும் நன்கு ஜலந்தெளிக்கப் பட்டனவுமான வாயிற்படி, அங்கணம், வீட்டினுள் பிரதேசம் இவற்றை யுடையதாகவும், சித்திரமான கொடிமரங்களில் கொடியைக் கட்டல், துணி, தளிர், தோரணம் இவற்றை அமைத்தல் இவற்றால் அலங்கரிக்கப்பட்டதாகவும் ஆயிற்று. (5,6) பசுக்களும், விருஷபங்களும், ஊட்டுமறந்த கன்றுகளும் மஞ்சள் கலந்த எண்ணெயினால் ப்பூசப்பட்டனவாகவும், விசித்திரங்களான நற்சங்குப் பொடிகள், மயிற்றோகைமாலை, வஸ்திரம், பொன்னாலாய மாலை இவற்றையுடையனவாகவும் விளங்கின. (7) ஹேராஜன்! கோபாலர்கள் விலையுயர்ந்த வஸ்திரம் ஆபரணம் சட்டை முண்டாசு இவற்றால் அலங்கரிக்கப்பட்டவர்களாகவும், பற்பல காணிக்கைகளைக் கையிற்கொண்டவர்களாகவும் வந்தனர். கோபிகைகளும் யசோதைக்குப் புத்திரன் பிறந்ததைக் கேட்டுச் சந்தோஷித்தவர்களாய் வஸ்திரம், அலங்காரம், மை, முதலியவற்றால் சரீரத்தை யலங்கரித்துக் கொண்டனர். புதிய குங்குமங்களாகிற கிஞ்ஜல்கங்களினால் (தாதுகளினால்) முகமாகிற தாமரஸ புஷ்பங்களிலேற்பட்ட சோபையையுடையவர்களாகவும், ஸ்வர்ணம் ரத்தினம் இவற்றுடன்

गोप्यः सुमृष्टमणिकुण्डलनिष्ककण्ठ्यश्चित्राम्बराः पथि शिखाच्युतमाल्यवर्षाः । नन्दालयं सवलया व्रजतीर्विरेजुर्व्यालोलकुण्डलपयोधरहारशोभाः ॥ ११ ॥ ता आशिषः प्रयुञ्जानाश्चिरं पाहीति बालके । हरिद्राचूर्णतैलाद्भिः सिञ्चन्त्योऽजनमुज्जगुः ॥ १२ ॥ अवाद्यन्त विचित्राणि वादित्राणि महोत्सवे । कृष्णे विश्वेश्वरेऽनन्ते नन्दस्य व्रजमागते ॥ १३ ॥ गोपाः परस्परं हृष्टा दधिक्षीरघृताम्बुभिः । आसिञ्चन्तो विलिम्पन्तो नवनीतैश्च चिक्षिपुः ॥ १४ ॥

नन्दो महामनास्तेभ्यो वासोऽलंकारगोधनम् । सूतमागधवन्दिभ्यो येऽन्ये विद्योपजीविनः ॥ १५ ॥ तैस्तैः कामैरदीनात्मा यथोचितमपूज-

---

கூடினவர்களாகவும், பெரிய பின்தட்டை யுடையவர்களாகவும், அசையும் முலைகளை யுடையவர்களாகவும் வேகமாகச் சென்றனர். நன்கு துடைக்கப்பட்ட மணிமயமான ஓலைகளைக் காதிலணிந்தவர்களாகவும், பதக்கங்களைக் கழுத்திலணிந்தவர்களாகவும், சித்திரமான வஸ்திரங்களை இடையிலணிந்தவர்களாகவும், கூந்தலினின்றும் நழுவின பூமாலைகளின் வர்ஷங்களை யுடையவர்களாகவும், கைவளையல்களுடன் கூடினவர்களாகவும், மிக்க அசைகின்ற காதோலை, முலை, முக்தாஹாரம் இவைகளாலேற்படும் சோபையை யுடையவர்களாகவும் நந்த கோபருடைய வீட்டைநோக்கி வழியிற்செல்லும் கோபிகைகள் பிரகாசித்தனர். (8–11).

அவர்கள் 'வெகுகாலம் காப்பாயாக' எனக் குழந்தைவிஷயத்தில் ஆசிர்வாதங்களைச் செய்கின்றவர்களாய் மஞ்ஜள்பொடியுடன் கலந்த எண்ணை ஜலம் இவற்றால் கோபாலனை நனைத்து உறத்துக் கூவினர். (12) அம்மஹோத்ஸவத்தில் விசித்திரமான வாத்தியங்களும் வாசிக்கப்பட்டன. விஸ்வேஸ்வரனும் அனந்தனுமான ஸ்ரீகிருஷ்ணன் நந்தருடைய இடைச்சேரிக்கு வந்ததும் கோபாலர்கள் சந்தோஷத்தை யடைந்தவர்களாய் தயிர் பால் நெய் ஜலம் இவற்றால் ஒருவரையொருவர் நனைத்தும், வெண்ணைகளினால் பூசிக்கொண்டும் கூத்தாடினர். (13–14) பெரிய மனதை யுடைய நந்த கோபர் சூதர் மாகதர் வந்திகள் இவர்களுக்கும், மற்றும் எவர் வித்தையைக் கொண்டு பிழைக்கின்றனரோ அவர்களுக்கும் வஸ்திரம், அலங்காரம், பசு, தனம் இவற்றைக்கொடுத்தார். (15) விஷ்ணு

यत्। विष्णोराराधनार्थाय स्वपुत्रस्योदयाय च ॥ १६ ॥ रोहिणी च महाभागा नन्दगोपाभिनन्दिता । व्यचरद्दिव्यवासः स्रक्कण्ठाभरणभूषिता ॥१७॥ तत आरभ्य नन्दस्य व्रजः सर्वसमृद्धिमान् । हरेर्निवासात्मगुणै रमाक्रीडमभून्नृप ॥ १८ ॥ गोपान्गोकुलरक्षायां निरूप्य मथुरां गतः । नन्दः कंसस्य वार्षिक्यं करं दातुं कुरूद्वह ॥ १९ ॥ वसुदेव उपश्रुत्य भ्रातरं नन्दमागतम् । ज्ञात्वा दत्तकरं राज्ञे ययौ तदवमोचनम् ॥ २० ॥ तं दृष्ट्वा सहसोत्थाय देहः प्राणमिवागतम् । प्रीतः प्रियतमं दोर्भ्यां सस्वजे प्रेम-

வின் ஆராதனத்துக்கு வேண்டியும், தனது புத்திரனுடைய விருத்திக்குவேண்டியும் கம்பீரமனதுடைய நந்தகோபர் அந்தந்தப் பொருள்களினுல் தக்கப்படி மரியாதை செய்தார். (16) மஹாபாக்கியசாலியான (*) ரோஹிணியும் நந்தகோபரால் சந்தோஷப்படுத்தப்பட்டவளாய்க் கொண்டு திவ்யமான வஸ்திரம் மாலே கழுத்திலணியுமாபரணம் இவற்ருல் அலங்கரிக்கப்பட்டவளாய் இங்கும் மங்கும் நடந்தாள். (17) ஹேந்ருப! அது முதல் நந்தகோபருடைய இடைச்சேரியானது எல்லா நிறைவு முள்ளதாகவும், ஹரியினது நிவாஸத்தாலுண்டான யாவருக்கும் ப்ரியமாகவிருத்தல் முதலியதனது குணங்களால் லக்ஷ்மியினது உத்யானவனமாக வாயிற்று. (18) ஹேகுருத்வஹ! நந்தர் கோபாலர்களை கோகுல ரக்ஷணவிஷயத்தில் நியமித்துவிட்டு, கம்ஸனுக்கு ஒவ்வொரு வருஷத்திலும் கொடுக்கவேண்டிய கப்பத்தைக் கொடுப்பதற்காக மதுரைக்குச் சென்ருர். (19) வஸுதேவர் ப்ராதாவான நந்தர் வந்ததைக் கேள்விப்பட்டு அரசனுக்குக் கப்பம் கட்டியாகிவிட்டதையும் அறிந்து அந்த நந்தர் இருக்குமிடத்துக்குச் சென்ருர். (20) பிராணனைக்கண்ட தேஹம்போல வந்த அவரை (வசுதேவரை) கண்டு உடனே எழுந்து அன்பின் மிகுதியுள்ளவராய் ப்ரீதியுடன் மிக்கப்ரியரான வசுதேவரைத் தோள்களால் தழுவிக்கொண்டார். (21)

வஸுதேவர் நந்தரால் பூஜிக்கப்பட்டவராயும், சுகமாக உட்கார்ந்துகொண்டவராயும் ஆதரவுகாட்டப்பட்டவராயும் கொண்டு

(*) கம்ஸனிடம் பயந்து கோகுலத்தில் வசிக்கும் வசுதேவருடைய பார்யை.

विह्वलः ॥ २१ ॥ पूजितः सुखमासीनः पृष्ट्वानामयमादृतः । प्रसक्तधीः स्वात्मजयोरिदमाह विशांपते ॥ २२ ॥ दिष्ट्या भ्रातः प्रवयस इदानीमप्रजस्य ते । प्रजाशाया निवृत्तस्य प्रजा यत्समपद्यत ॥ २३ ॥ दिष्ट्या संसारचक्रेऽस्मिन्वर्तमानः पुनर्भवः । उपलब्धो भवानद्य दुर्लभं प्रियदर्शनम् ॥ २४ ॥ नैकत्र प्रियसंवासः सुहृदां चित्रकर्मणाम् । ओघेन व्यूह्यमानानां प्लवानां स्रोतसो यथा ॥ २५ ॥ कच्चित्पशव्यं निरुजं भूर्यम्बुतृणवीरुधम् । बृहद्वनं तदधुना यत्रास्से त्वं सुहृद्वृतः ॥ २६ ॥ भ्रातर्मम सुतः कच्चिन्मात्रा सह भवद्व्रजे । तातं भवन्तं मन्वानो भवद्भ्यामुपलालितः ॥ २७ ॥ पुंसस्त्रिवर्गो विहितः सुहृदो ह्यनुभावितः । न तेषु

---

(நந்தரிடம்)ஆரோக்யத்தைக்கேட்டு ஹேவிசாம்பதே! தனது புத்திரர் களிடத்துச்சென்றபுத்தியையுடையவராய் பின்வருமாறு சொல்லத் தொடங்கினர். (22) "ஹேப்ராத:! வயது முதிர்ந்த வரும், ப்ரஜை யைப் பற்றின ஆசையிலிருந்து நிவிருத்தியை யடைந்தவருமான உமக்கு இப்பொழுது ப்ரஜை உண்டாயிற்றென்பது யாதுண்டோ இது பாக்கியாயத்தமேயாகும். இப்பொழுது நீர் தைவாதீனமாகப் பார்க்கப்பட்டீர் என்ற காரணத்தால் இந்த ஸம்ஸாரசக்கிரத்தி லிருக் கின்ற நான் மறுபடியும் பிறந்தவன் போலவேயாகிறேன். அன்பரின் தரிசனம் கிடைத்தற்கரிதானதன்றோ? (23–24) ஹேப்ரிய! ஜலத் தின் பெருக்கால் இழுத்துக் கொண்டு போகப்படும் துரும்பு முத லியவற்றுக்குப் போல பல்வேறுபட்ட கர்மங்களையுடையவர்களான ஸுஹிருத்துக்களுக்கு ஓரிடத்தில் சேர்ந்து வஸித்தலானது ஸம் பவிப்பதரிதன்றோ? (25) எந்த விடத்தில் நீர் சுஹிருத்துக்களாற் சூழப்பட்டவராய் வஸிக்கின்றீரோ அந்தப்ருஹத்வனமானது இப் பொழுது பசுக்களுக்கு ஹிதமானதாகவும், வியாதியற்றதாகவும், அதிகமான ஜலம் புல் செடி இவற்றையுடையதாகவும் இருக்கின் றதா? (26) ஹேப்ராதாவே! எனது புத்திரன் தாயுடன் கூட உம்மைப்பிதாவாக எண்ணிக்கொண்டும், உங்களிருவராலும் சீராட் டப்பட்டவனுய்க் கொண்டும் உமது சேரியில் சுகமாக வஸிக்கின் றனை? (27) பந்துக்களுக்கு வேண்டி ஸம்பாதிக்கப்பட்ட (*) த்ரி

---

(*) அறம், பொருள், இன்பம் மூன்றும் த்ரிவர்க்கமெனப்படும்.

क्लिश्यमानेषु त्रिवर्गोऽर्थाय कल्पते ॥ २८ ॥ नन्द उवाच—अहो ते देवकीपुत्राः कंसेन बहवो हताः। एकावशिष्टावरजा कन्या सापि दिवं गता॥२९॥ नूनं ह्यदृष्टनिष्ठोऽयमदृष्टपरमो जनः। अदृष्टमात्मनस्तत्त्वं यो वेद न स मुह्यति ॥ ३० ॥ वसुदेव उवाच—करो वै वार्षिको दत्तो राज्ञे दृष्टा वयं च वः। नेह स्थेयं बहुतिथं सन्त्युत्पाताश्च गोकुले ॥ ३१ ॥ श्रीशुक उवाच—इति नन्दादयो गोपाः प्रोक्तास्ते शौरिणा ययुः। अनोभिरनडुद्युक्तैस्तमनुज्ञाप्य गोकुलम् ॥ ३२ ॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कंधे पूर्वार्धे नन्दवसुदेवसंगमो नाम पञ्चमोऽध्यायः ॥ ५ ॥

---

வர்க்கம் யாதுண்டோ அஃதன்றோ மனிதனுக்குப் பொருத்தமானது. ஆகவே அந்த பந்துக்கள் க்லேசத்தையடையுங்கால் அந்தத்ரிவர்க்கமானது சுகத்தையும் பொருட்டு ஆகமாட்டாது" என்றும். (28) நந்தகோபர்—"அந்தோ! உமது தேவகியின் வெகு புத்திரர்கள் கம்ஸனால் கொல்லப்பட்டனர். கடையிற் பிறந்த கன்னிகை ஒன்று எஞ்சினள். அவளும் ஆகாசத்தில் சென்று விட்டாள். (29) இந்த ஜனமானது (*) அதிருஷ்டத்திலேயே முடிவையுடையதாகவும், அதிருஷ்டத்தையே பின்னுள்ளதை யடைவிக்கும் ஸாதனமாகவுடையதாகவுமன்றோ இருக்கிறது. ஆகவே அதிருஷ்டமானது தனது சுகதுக்கங்களுக்குக் காரணம் என எவன் அறிகின்றானோ அவன் மோஹத்தை யடைவதில்லை "என்றார். (30) வசுதேவர்—"ஆண்டு தோறும் அரசனுக்குக் கொடுக்கவேண்டிய கப்பங்கொடுத்தாகிவிட்டது. நாங்களும் உங்களாற் பார்க்கப்பட்டோம். இவ்விடத்தில் வெகுகால மிருப்பது கூடாது. கோகுலத்தில் அசுபக்குறிகளுமிருக்கின்றன." என்றார். இவ்விதம் வஸுதேவரால் சொல்லப்பட்ட நந்தர் முதலிய அந்தக்கோபலர்கள்

---

(*) முற்பிறவிகளிற் செய்த கர்மத்திலேயே முடிவையுடையதாகவும், பின்னர் ஏற்படும் ப்ராப்தியையுடையதாகவுமாகிறது. அதாவது :— புத்திராதிசுகத்தைத்தரும் அதிருஷ்டமானது எதுபோழ்துகுறைகிறதோ அதுபோழ்து புத்திராதிகள் மரிக்கின்றனர். அவ்விதம் விலகின புத்திராதிகளைத் திரும்பவும் அதிருஷ்டமே சேர்த்தும் விடுகிறது என்பது கருத்து.

அவரிடம் விடைபெற்றுக்கொண்டு காளைபூட்டின வண்டிகளுடன் கோகுலத்தைக் குறித்துச் சென்றனர். (31-32)

இவ்விதம் மஹாபுராணமான ஸ்ரீமத்பாகவத தசமஸ்கந்த பூர்வார்த்தத்தில் நந்தகோப வசுதேவர்களுடைய ஸங்கமம் என்ற ஐந்தாவது அத்தியாயம் முற்றிற்று.



## நாராயணீயம்.

भवन्तमयमुद्वहन्यदुकुलोद्वहो निस्सरन्
 ददर्श गगनोच्चलज्जलभरां कलिन्दात्मजाम् ।
अहो सलिलसञ्चयस्स पुनरैन्द्रजालोदितो
 जलौघ इव तत्क्षणात्प्रपदमेयतामाययौ ॥ २१ ॥

(ப-ரை) भवन्तम्=உம்மை, उद्वहन्=எடுத்துக்கொண்டு, निस्सरन्=போகின்ற, अयम्=இந்த, यदुकुलोद्वहः=வசுதேவர், गगनोच्चलज्जलभराम्=ஆகாசத்தில் கிளம்புகின்ற ஜலப்பெருக்கையுடைய, कलिन्दात्मजाम्=யமுனையை, ददर्श=கண்ணுற்றார். सः=அந்த, सलिलसञ्चयः पुनः=ஜலப்பெருக்கோவெனில் ऐन्द्रजालोदितः=இந்திரஜாலமென்ற மாயையினுலுண்டான, जलौघ इव=ஜலப்பெருக்குப்போல, तत्क्षणात्=அதே க்ஷணத்தில், प्रपदमेयताम्=குதிகாலளவுள்ளதாயிருத்தலை, आययौ=அடைந்தது. अहो=இதுவெகு ஆஸ்சரியம். (21)

प्रसुप्तपशुपालिकां निभृतमारुवद्बालिका-
 मपावृतकवाटिकां पशुपवाटिकामाविशन् ।
भवन्तमयमर्पयन् प्रसवतल्पके तत्पदा
 द्वहन् कपटकन्यकां स्वपुरमागतो वेगतः ॥ २२ ॥

(ப-ரை) प्रसुप्तपशुपालिकाम्,=தூங்கும் கோபாலர்களையுடையதும், निभृतम्=இடைவிடாது, आरुवद्बालिकाम्=கத்துகின்ற குழந்தையையுடையதும், अपावृतकवाटिकाम्,=திறக்கப்பட்ட கதவுகளையுடையதுமான, पशुपवाटिकाम्=கோபாலர்கள் வஸிக்குமிடத்தை, आविशन्,=ப்ரவேசித்த अयम्=இந்த வசுதேவர், भवन्तम्=உம்மை, प्रसवतल्पके=ப்ரஸவப்படுக்கையில் अर्पयन्=விட்டு, तत्पदात्=அந்தவிடத்திலிருந்து कपटकन्यकाम्=பொய்யான பெண்குழந்தையை, उद्वहन्=

எடுத்துக்கொண்டு, वेगत:=வேகமாக, स्वपुरम्=தனதுபட்டினத்துக்கு आगत:=வந்துசேர்ந்தார்.(22)

ततस्त्वदनुजारवक्षुभितनिद्रवेगद्रव-
द्भटोत्करनिवेदितप्रसववार्तयैवार्तिमान् ।
विमुक्तचिकुरोत्करस्त्वरितमापतन्भोजरा-
डतुष्ट इव दृष्टवान्भगिकाकरे कन्यकाम् ॥ २३ ॥

(ப—ரை) तत:=பிறகு त्वदनुजारवक्षुभितनिन्द्रवेगद्रवद्भटोत्करनिवेदितप्रसववार्तयैव.=உமதுதங்கையின் அழுகுரலினல் கலைந்ததூக்கத்தையுடையவர்களும் வேகமாகவோடிவருகின்றவர்களுமான சேவகக்கூட்டங்களினல் தெரிவிக்கப்பட்ட ப்ரஸவவார்த்தையினலேயே, आर्तिमान्=பீடையையடைந்தவனும், विमुक्तचिकुरोत्कर:=அவிழ்ந்த கூந்தல் முடியையுடையவனும், त्वरितम्=வேகமாக, आपतन्.=ஓடிவந்தவனுமான, भोजराट्=போஜராஜனன கம்ஸன் अतुष्टइव=ஸந்தோஷமில்லாதவன்போல, भगिनिकाकरे=தங்கையான தேவகியின் கையில் कन्यकां=பெண்குழந்தையை, दृष्टवान्=கண்ணுற்ருன்.(23)

ध्रुवं कपटशालिनो मधुहरस्य माया भवे-
दसाविति किशोरिकां भगिनिकाकरालिङ्गिताम्।
द्विपो नलिनिकान्तरादिव मृणालिकामाक्षिप-
न्नयं त्वदुजामजामुपलपट्टके पिष्टवान् ॥ २४ ॥

(ப—ரை) असौ=இப்பெண்குழந்தை, कपटशालिन:=கபடம் பூண்டொழுகும், मधुहरस्य=மதுவென்ற அசுரனைக் கொன்ற விஷ்ணுவினுடைய, माया=மாயையாக, भवेत्=இருக்கலாம் इति=எனவெண்ணி, भगिनिकाकरालिंगितां=தங்கையின் கைகளினல் அணையப்பட்ட किशोरिकां=பெண்குழந்தையை, द्विप:=யானையானது, नलिनिकान्तरात्=தாமரைக்கொடியின் நடுவிலிருந்து, मृणालिकामिव =இளந்தாமரைக் கொடியைப்போல अयं=இந்தக்கம்ஸன், आक्षिपन्=இழுத்துப் பிடுங்கி त्वदनुजां=உமக்கடுத்துப்பிறந்த, अजां=மாயையை, उपलपट्टके=கற்பாறையில், पिष्टवान्=ஒங்கி அறைந்தான். (24)

ततो भवदुपासको झटिति मृत्युपाशादिव
प्रमुच्य तरसैव सा समधिरूढरूपान्तरा ।
अधस्तलमजग्मुषी विकसदष्टबाहुस्फुर-
न्महायुधमहो गता किल विहायसा दिद्युते ॥ २५ ॥

(ப—ரை) झटिति=சீக்கிரமாக, मृत्युपाशात्=யமபாசத்தினின்றும், भवदुपासक इव=உமது உபாஸகன்போல, सा=அந்தமாயை तरसैव=சீக்கிரமாகவே, प्रमुच्य=விடுபட்டு, समधिरूढरूपान्तरा=நன்கு அடைந்த வேறுருபத்தை யுடையவளாய், अधस्तलं=கீழுள்ள விடத்தை (கற்பாறையை) अजगुषी=அடையாதவளாய், विकसदष्टबाहुस्फुरन्महायुधं=விளங்கும் எட்டுகைகளிலும் ஒளிக்கின்ற சிறந்த ஆயுதங்களை யுடைத்தாயிருக்கும்படி, विहायसा=ஆகாசவழியினுல், गता=சென்றவளாக, दिद्युते=விளங்கினுள், अहो= இது வெகு ஆச்சரியமாக விருந்தது. (25)

नृशंसतर कंस ते किमु मया विनिष्पिष्टया
बभूव भवदन्तकः क्वचन चिन्त्यतां ते हितम् ।
इति त्वदनुजा विभो खलमुदीर्य तं जग्मुषी
मरुद्गणपणायिता भुवि च मन्दिराण्येयुषी ॥ २६ ॥

(ப—ரை) नृशंसतर !=மிக்கக்கொடூரனே! कंस !=ஹேகம்ஸ! विनिष्पिष्टया=கற்பாறையிலறையப்பட்டவளான, मया=என்னுல், ते=உனக்கு, किमु=யாதுபயன்? (என்னைக்கற்பாறையிலறைவதனுல் யாதுபயன் உனக்குண்டாகப்போகின்றதென்பது கருத்து) भवदन्तकः=உன்னைக் கொல்லுபவன், क्वचन जातः=எங்கேயோ பிறந்துவிட்டான், ते=உனது, हितं=நன்மையானது, चिन्त्यतां=ஆலோசிக்கப் படட்டும், इति=என, हेविभो=ஹேப்ரபுவே! त्वदनुजा=உமதுடன் பிறந்த மாயை, खलं=துஷ்டனுன, तं=அவனை, उदीर्य=சொல்லி, जग्मुषी=செல்லுகின்றவளாயும், मरुद्गणपणायिता=தேவக்கூட்டங்களால் துதிக்கப்பட்டவளாயுங்கொண்டு, भुवि=பூமியில், मन्दिराणि=காமரூபம் முதலிய ஆலயங்களையும், च=மாயா, நாராயணீ முதலியபெயர்களையும், एयुषी=அடைந்தவளாயினள். (26)

प्रगे पुनरगात्मजावचनमीरिता भूभुजा
प्रलंबबकपूतनाप्रमुखदानवा मानिनः ।
भवन्निधनकाम्यया जगति बभ्रमुर्निर्भयाः
कुमारकविमारकाः किमिव दुष्करं निष्कृपैः ॥ २७ ॥

(ப—ரை) प्रगे=விடியற்காலத்தில், भूभुजा=அரசனுன கம்ஸனுல், अगात्मजावचनं=பார்வதியாரின் வார்த்தையை, ईरिताः=சொல்லக்கேட்ட मानिनः அஹங்காரிகளான, प्रलंबबकपूतनाप्रमुखदानवाः

**पुन:**=ப்ரலம்பன், பகன், பூதனை இவர்களை முதன்மையாகக் கொண்ட அசுரர்களோவெனில், **भवन्निधनकाम्यया**=உம்மைக்கொல்ல வேண்டுமென்ற விருப்பத்துடன், **निर्भया:**=இம்மையிலும் மருமையிலும் பயமற்றவர்களாய்க் கொண்டு **जगति**=உலகிலுள்ள **कुमारकविमारका:**=ஆண்குழந்தைகளைக் கொல்லுகின்றவர்களாக, **बभ्रमु:**=இங்குமங்குமலைந்து திரிந்தனர். **निष्कृपै:**=தயையை இழந்தவர்களால் **दुष्करं**=செய்தற்கியலாததென்பது, **किमिव**=எது? (27)

> ततः पशुपमन्दिरे त्वयि मुकुन्दनन्दप्रिया
> प्रसूतिशयनेशये रुवति किञ्चिदञ्चत्पदे ।
> विबुध्य वनिताजनैस्तनयसंभवे घोषिते
> मुदा किमु वदाम्यहो सकलमाकुलं गोकुलम् ॥ २८ ॥

(ப-ரை) **तत:**=பிறகு, **मुकुन्द !**=ஹே முகுந்த! **त्वयि**=நீர், **पशुपमन्दिरे**=நந்தகோபருடைய வீட்டில், **नन्दप्रियाप्रसूतिशयनेशये**=நந்தகோபரின் மனைவியான யசோதையினுடைய ப்ரஸவப்படுக்கையில் படுத்துக்கொண்டவராகவும், **किञ्चिदञ्चत्पदे**=கொஞ்சமசைகின்ற சரணங்களையுடையவராகவும், **रुवति**=அழுங்கால், **वनिताजनै:**=அங்குள்ள ஸ்திரீஜனங்களால், **विबुध्य**=விழித்தெழுந்து, **तनयसंभवे**=குழந்தையின் உத்பத்தியானது, **घोषिते**=கூச்சலிடப்பட்டதும் **किमु वदामि**=நான் யாது சொல்வேன். **गोकुलम्**=கோகுலம், **सकलम्**=யாவும், **मुदा**=ஸந்தோஷத்தினால் **आकुलम्**=கலங்கிற்று. **अहो**=இது ஆஶ்சரியமாக இருந்தது. (28)

> अहो खलु यशोदया नवकलायचेतोहरं
> भवन्तमलमन्तिके प्रथममापिबन्त्या दृशा ।
> पुनः स्तनभरं निजं सपदि पाययन्त्या मुदा
> मनोहरतनुस्पृशा जगति पुण्यवन्तो जिताः ॥ २९ ॥

(ப-ரை) ***नवकलायचेतोहरम्**=புதிய நீருண்டமேகம்போல மனதைக் கவருகின்ற, **भवन्तम्**=உம்மை, **अन्तिके**=அருகில் **प्रथमम्**=முதலில் **दृशा**=கண்ணினால் **अलम्**=மிகவும், **आपिबन्त्या**=குடிக்கின்ற (பார்க்கின்ற) வளும், **पुन:**=மறுபடியும், **निजम्**=தன்னுடையதான, **स्तनभरम्**=ஸ்தனபாரத்தை, **मुदा**=ஸந்தோஷத்துடன், **पाययन्त्या**=குடிக்கச்செய்கின்றவளும், **मनोहरतनुस्पृशा**=மனதைக்கவரும் உமது

---

*இதை கடலைப்பூவென்றும் காசாம்புவென்றும் சிலர் சொல்லுகின்றனர்.

## अथ षष्ठोऽध्यायः ॥

श्रीशुक उवाच— । नन्दः पथि वचः शौरेर्न मृषेति विचिन्तयन् । हरिं जगाम शरणमुत्पातागमशङ्कितः ॥ १ ॥ कंसेन प्रहिता घोरा पूतना

---

திருமேனியைத் தொடுகின்றவளுமான, यशोदया யசோதையினல் जगति=உலகிலுள்ள, पुण्यवन्तः=சிறந்த புண்ணியஞ்செய்தவர்கள் जिताः=ஜயிக்கப்பட்டனர் என்பது अहो खलु=ஆஸ்சரியமன்றோ?

भवत्कुशलकाम्यया स खलु नन्दगोपस्तदा
　　प्रमोदभरसंकुलो द्विजकुलाय किन्नाददात् ।
तथैव पशुपालकाः किमु न मङ्गलं तेनिरे
　　जगत्त्रितयमङ्गल त्वमिह पाहि मामामयात् ॥ ३० ॥

(ப-ரை) हेजगत्त्रितयमङ्गल=மூவ்வுலகுக்கும் மங்களரூபியான கிருஷ்ண! सः=அந்த नन्दगोपः खलु=நந்தகோபரோ प्रमोदभरसंकुलः= சந்தோஷாதிக்கியம் வாய்ந்தவராய், भवत्कुशलकाम्यया=உமது க்ஷேமத்தில் விருப்பத்தினல், द्विजकुलाय=ப்ராம்ஹணக்கூட்டத்துக்கு किम्=எதைத்தான் नाददात्=கொடுக்கவில்லை. तथैव=அதுபோலவே, पशुपालकाः=கோபாலர்கள் किमु=எந்த, मङ्गलम्=மங்களத்தைத்தான் नतेनिरे=செய்யவில்லை. ஆகவே त्वम्=நீர் इह=இப்பொழுது, माम्—என்னை, आमयात्—வியாதியினின்றும், पाहि—காத்தருளவேண்டும்.

யோகமாயாநயநாதிவர்ணனம் என்ற 39-வது தசகம் முற்றிற்று.

•∘—❀∘•—

## ஆறுவது அத்தியாயம்

षष्ठे सख्युर्गिरा नन्दो व्रजं गच्छन् मृतां पथि ।
दृष्ट्वा तु राक्षसीं तस्या मृत्युं श्रुत्वाथ विस्मितः ॥ १ ॥

(க-ரை) தோழரானவஸுதேவரின் வார்த்தை யினல் இடைச்சேரியை நோக்கிச் செல்லும் நந்தகோபர் வழியில் இறந்து கிடக்கும் ராக்ஷஸியைக் கண்டு பின்னர் அவளுக்கு மரணமேற்பட்ட முறையையுங்கேட்டு ஆஸ்சரியப்பட்டார் என இந்த ஆறுவது அத்தியாயத்தி லுபதேசிக்கப்படுகிறது—

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்—வசுதேவரின் வாக்குபொய்யாகாது என வெண்ணிக்கொண்டு வழியில் வரும் நந்தகோபர் அசுபக்

**बालघातिनी । शिशूंश्चचार निघ्नन्ती पुरग्रामव्रजादिषु ॥ २ ॥ न यत्र श्रवणादीनि रक्षोघ्नानि स्वकर्मसु । कुर्वन्ति सात्वतां भर्तुर्यातुधान्यश्च तत्र हि ॥ ३ सा खेचर्येकदोपेत्य पूतना नन्दगोकुलम् । योषित्वा माययात्मानं प्राविशत्कामचारिणी ॥ ४ ॥ तां केशबन्धव्यतिषक्तमल्लिकां बृहन्नितम्बस्तनकृच्छ्रमध्यमाम् । सुवाससं कम्पितकर्णभूषणत्विषोल्लसत्कुन्तलमण्डिताननाम् ॥५॥ वल्गुस्मितापाङ्गविसर्गवीक्षितैर्मनो हरन्तीं वनितां व्रजौकसाम् । अमंसता-**

குறியின்வரவினால் சங்கைகொண்டவராய் ஸ்ரீநாராயணனைச் சரமணடைந்தார். (1) பாலர்களைக் கொல்லுகின்றவளும் கொடுமையுமான பூதனை கம்ஸனால் ஏவப்பட்டவளாய்க் குழந்தைகளைக் கொன்றுகொண்டு பட்டினம், கிராமம், இடைச்சேரி முதலியவிடங்களில் ஸஞ்சரித்து வந்தாள். (2) எங்கு சொந்தமான கர்மங்களில் ராக்ஷஸர்களை யழிக்கின்ற கிருஷ்ணனுடைய ஶ்ரவணகீர்த்தனாதிகளை மனிதர்கள் செய்வதில்லையோ அங்கன்றோ ராக்ஷஸிகள் தமது திறமையைக் காட்டுகின்றனர். ஸாக்ஷாத்கிருஷ்ணனே அங்கு வஸிக்குங்கால் அந்தச்சங்கைக்கு இடமேது. (3) இஷ்டப்படி அலையும் அந்தப் பூதனை ஒருநாள் ஆகாசமார்க்கமாக வந்து மாயையினால் சிறந்தஸ்திரீயைப்போல வேஷத்தால் தன்னை மாற்றிக்கொண்டு கோகுலத்தில் நுழைந்தாள். (4) *கேசபந்தத்தில் நன்கு தைக்கப்பட்ட மல்லிகைப் பூவையுடையவளும், பெரிய பின்தட்டினாலும், முலைகளினாலும் இருபுறத்திலும் அமுத்தப்பட்டதுபோன்ற சிறிய இடையையுடையவளும், அழகிய வஸ்திரங்களைத் தரித்தவளும், அசைகின்ற கர்ணபூஷணங்களின் காந்தியினால் அதிகம் பிரகாசிக்கின்ற சுருண்ட மயிர்களால் அலங்கரிக்கப்பட்ட முகத்தையுடையவளும், ரம்மியமான புன்சிரிப்பை யுடையனவும், கடைக்கண் சுழட்டலையுடையனவுமான பார்வைகளால் கோகுலவாஸிகளின் மனத்தைக் கொள்ளைகொள்ளுபவளுமான அந்த ஸ்திரீயை தாமரைப்பூவைக் கையிற்கொண்டு கணவனைக்காணவேண்டி ரூபமெடுத்துவந்த லக்ஷ்மியாகக் கோபிகைகள் எண்ணினர். (5–6) பாலர்களைப்பிடிக்கும் க்ரஹமான பூதனை அங்கு சிசுக்களைத் தேடுகின்ற

*இதைக்கோடாலி முடிச்சென வழக்கமாகச் சொல்லுகின்றனர்.

**म्भोजकरेण रूपिणीं गोप्यः श्रियं द्रष्टुमिवागतां पतिम्॥६॥ बालग्रहस्तत्र विचिन्वती शिशून्यदृच्छया नन्दगृहेऽसदन्तकम्। बालं प्रतिच्छन्ननिजोरुतेजसं ददर्श तल्पेऽग्निमिवाहितं भसि॥७॥ विबुध्य तां बालकमारिकाग्रहं चराचरात्मा स निमीलितेक्षणः। अनन्तमारोपयदङ्कमन्तकं यथोरगं सुप्तमबुद्धिरज्जुधीः॥८॥ तां तीक्ष्णचित्तामतिवामचेष्टितां वीक्ष्यान्तराकोशपरिच्छदासिवत्। वरस्त्रियं तत्प्रभया च धर्षिते निरीक्षमाणे जननी ह्यतिष्ठताम्॥९॥ तस्मिन्स्तनं दुर्जरवीर्यमुल्बणं घोराङ्कमादाय शिशोर्द-**

---

வளாய் அசாதுக்களுக்கு யமனும், அதிகமான தனது தேஜஸ்ஸை மறைத்துக்கொண்டதும், சாம்பலில் மறைந்த அக்னிபோன்றதுமான குழந்தையை நந்தகோபருடைய வீட்டில் தொட்டிலில் யதிருச்சையாகக் கண்டாள். (7) சராசரங்களுக்கும் ஆத்மாவான பகவான் பாலகர்களைக் கொல்லும் க்ரஹமாக அவளை யறிந்து கொண்டு (*)கண்களை மூடிக்கொண்டவராக இருந்தார். ஸ்வயம் அனந்தனும், துஷ்டர்களுக்கு அந்தத்தை (அழிவைச்) செய்பவனுமான குழந்தையை உண்மையறியாதவனும், பழுதையென வெண்ணுபவனுமான மனிதன் தூங்கும் பாம்பைப்போல, மடியிலெடுத்து வைத்துக்கொண்டாள். (8) கொடூரமான சித்தமுடையவளும் மிக்கவழகிய சேஷ்டையுள்ளவளுமான அந்த சிறந்த ஸ்திரீயை அழகிய உறையினல் மூடப்பட்ட கத்தியைப்போல வீட்டின் நடுவில்கண்டு அவளது காந்தியினல் ஏமாற்றப்பட்டவர்களான அவருடைய தாய்மார்களிருவரும் பார்த்துக்கொண்டே இருந்துவிட்டனர். (9) அந்த விடத்தில் கோரையான பூதனை கிருஷ்ணனை மடியில் வைத்துக்கொண்டு ஜரிக்கமுடியாததான வீரியத்தை யுடையதும் பெரிதுமான (1)ஸ்தனத்தை குழந்தைக்குக் கொடுத்தாள்.

---

(*)தனது குக்ஷியில் வசிக்கும் ஜீவராசிகளுக்கு இவளது விஷமயமான ஸ்தன்யத்தின் ஸம்பந்தத்தால் மரணம் நேராதிருக்குமாறு தியானித்தார் என்றும், அல்லது பாலஹத்தி செய்யும் துஷ்டையைக் கண்ணுற்காணலாகாது எனக்கண்ணை மூடிக்கொண்டார் என்றும், அல்லது தமது நேத்திரசோபையைக் கண்டு இவன் நாராயணன் என நிச்சயித்துக் கொண்டு பயந்து ஓடாதிருக்கட்டுமென வெண்ணிக்கண்ணை மூடினரென்றும் பொருள்கொள்ளலாம்.

(1)இங்கு ஸ்தனத்தை என்பதற்கு ஸ்தனத்திலுள்ள பாலையென்று

दावथ। गाढं कराभ्यां भगवान्प्रपीड्य तत्प्राणैः समं रोषसमन्वितोऽपिबत् ॥ १० ॥ सा मुञ्च मुञ्चालमिति प्रभाषिणी निष्पीड्यमानाखिलजीवमर्मणि। विवृत्य नेत्रे चरणौ भुजौ मुहुः प्रस्विन्नगात्रा क्षिपती रुरोद ह ॥ ११ ॥ तस्याः स्वनेनातिगभीररंहसा साद्रिर्मही द्यौश्च चचाल सग्रहा। रसा दिशश्च प्रतिनेदिरे जनाः पेतुः क्षितौ वज्रनिपातशङ्कया ॥ १२ ॥ निशाचरीत्थं व्यथितस्तना व्यसुर्व्यादाय केशांश्चरणौ भुजावपि। प्रसार्य गोष्ठे निजरूपमास्थिता वज्राहतो वृत्र इवापतन्नृप ॥ १३ ॥

---

உடனே பகவானுன கிருஷ்ணன் கோபத்துடன் கூடினவராய் இரண்டுகைகளாலும் கெட்டியாகக் கசக்கிக்கொண்டு அவளுடைய (1)ப்ராணன்களுடன் கூடவே பாலைக்குடித்தார். (10) அவள், "விடு, விடு போதும் போதும்" எனக்கத்துகின்றவளாகவும், ஜீவனுக்குரிய (2)மர்மஸ்தானங்கள் எல்லாவற்றிலும் மிக்கப்பீடிக்கப் படுபவளாகவும் கொண்டு கண்களைத் திறந்துகொண்டும், கைகளையும் கால்களையும் அடிக்கடி உதறிக்கொண்டும், வியர்வையுடன் கூடினசரீரமுள்ளவளாய் உறத்துக் கத்தினுள். (11) மிக்கப் பெரிய வேகமுள்ள அவளுடைய அழுகுரலால் மலைகளுடன் கூடின பூமியும், கிரஹங்களுடன் கூடின ஆகாசமும் அசைந்தன. பாதாளங்களும் திக்குகளும் எதிரொலியிட்டன. ஜனங்கள் இடிவிழுந்ததோ என்ற சங்கையினுல் பூமியில் விழுந்தனர். (12) ஹேநருப! இவ்விதம்

---

பொருள்கொள்ளவேண்டும். ஆனுல் சிலர் பாலைக் கொடுத்ததாகமட்டுமே சொல்லி யிருக்கின்றதென்றும், விஷமயமான தென்று சொல்லவில்லை யென்றும் சொல்லுகின்றனர். ஸ்ரீதராசாரியாரவர்கள் தமது உரையில் "கேவலம்விஷம் அபத்யமிதிக்ருத்வேவ" என்று கூறியிருப்பதிலிருந்து விஷம்கலந்த ஸ்தன்யத்தைக் கொடுத்தான் எனப்பொருள் கொள்ளுவதுதான் பொருத்தமானது.

(1)தனித்த விஷத்தைமட்டும் குடிப்பது அபத்யமாகுமென வெண்ணினவர் போல அவளுடைய ப்ராணன்களுடன் கூடவேஅதைக் குடித்தார் என ஸ்ரீதரர் கூறியிருக்கிறுர்.

(2)यस्मिन् कृत्ते मर्दिते च जीवो नश्यति देहतः। तदङ्गं मर्म विज्ञेयं सूक्ष्मं दुर्ज्ञेयमेव तत् ॥ என்ற வசனப்படி பார்க்குங்கால் கழுத்து, குஹ்யமான இடம் முதலியன மர்மஸ்தானம் எனக்கூறலாம்,

पतमानोऽपि तद्देहस्त्रिगव्यूत्यन्तरद्रुमान् । चूर्णयामास राजेन्द्र महदासीत्तदद्भुतम् ॥ १४ ॥ ईषामात्रोग्रदंष्ट्रास्यं गिरिकन्दरनासिकम् । गण्डशैलस्तनं रौद्रं प्रकीर्णारुणमूर्धजम् ॥ १५ ॥ अन्धकूपगभीराक्षं पुलिनारोहभीषणम् । बद्धसेतुभुजोर्वङ्घ्रिशून्यतोयह्रदोदरम् ॥ १६ ॥ संतत्रसुः स्म तद्वीक्ष्य गोपा गोप्यः कलेवरम् । पूर्वं तु तन्निःस्वनितभिन्नहृत्कर्णमस्तकाः ॥ १७ ॥ बालं च तस्या उरसि क्रीडन्तमकुतोभयम् । गोप्यस्तूर्णं समभ्येत्य जगृहुर्जातसंभ्रमाः ॥ १८ ॥ यशोदारोहिणीभ्यां ताः समं

பிடிக்கப்பட்ட முலையை யுடைய ராக்ஷஸியான பூதனை உயிரை இழந்தவளாய் வாயைத்திறந்து கொண்டும், தலைமயிர்களையும், இரு கால்களையும், இருகைகளையும் விரித்துக்கொண்டும் சொந்தமான ரூபத்தையடைந்தவளாய் வஜ்ராயுதத்தினலடிக்கப்பட்ட வ்ருத்ராசுரன் போல இடைச்சேரியில் விழுந்தாள். (13) ஹேராஜேந்த்ர! அவளுடைய தேஹமானது விழுந்த போதிலுங்கூட (*)ஆறுக்ரோசத்துக்கு இடையிலுள்ள மரங்களைப் பொடியாக்கிற்று. அது பெரிய ஆஸ்சரியமாக விருந்தது. (14) கலப்பைத் தடியினளவுள்ளதும், பயங்கரமுமான தத்திப்பற்களையுடைய முகத்தையுடையதும், மலையின் குகைபோன்ற மூக்கையுடையதும், சிறுமலைபோன்ற முலைகளையுடையதும், பயங்கரமானதும், நாலாபக்கங்களிலும் சிதறின சிவந்ததலைமயிர்களையுடையதும், பாழுங்கிணறு போல அகழமான கண்களையுடையதும், மணல் திட்டுபோன்ற மார்பினல் பயத்தைவிளைவிப்பதும், கட்டப்பட்ட அணைகள் போன்ற கை, துடை, முழங்கால், இவைகளை யுடையதும், ஜலமற்ற மடுப்போன்ற வயிற்றை யுடையதுமான அந்தச் சரீரத்தைக் கண்டு முன்னரே அவளுடைய கத்தலினல் கலங்கின மனம் காது மூளை இவற்றையுடையவர்களான கோபாலர்களும் கோபிகைகளும் மிகவும் பயத்தை யடைந்தனர். (15–17)

கோபிகைகள் வேகத்தை யடைந்தவர்களாய் சீக்கிரமாக ஓடிவந்து அந்தப் பூதனையினுடைய மாரில் பயமற்று விளையாடுகின்ற குழந்தையை எடுத்தனர். (18) அவர்கள் யசோதை ரோஹிணி இவர்களுடன் கூட மாட்டின்வாலால் சுற்றுதல் முதலிய வற்றினல்

(*)க்ரோசம் என்பது இரண்டுமைல்.

**बालस्य सर्वतः । रक्षां विदधिरे सम्यग्गोपुच्छभ्रमणादिभिः ॥ १९ ॥ गोमूत्रेण स्नापयित्वा पुनर्गोरजसार्भकम् । रक्षां चक्रुश्च शकृता द्वादशाङ्गेषु नामभिः ॥ २० ॥ गोप्यः संस्पृष्टसलिला अङ्गेषु करयोः पृथक् । न्यस्यात्मन्यथ बालस्य बीजन्यासमकुर्वत ॥ २१ ॥ अव्यादजोऽङ्घ्रि मणिमांस्तव जान्वथोरू यज्ञोऽच्युतः कटितटं जठरं हयास्यः । हृत्केशवस्त्वदुर ईश**

---

நாலாபக்கத்திலும் குழந்தைக்கு ரக்ஷையைச் செய்தனர். (19) முதலில் கோமூத்திரத்தினாலும் பிறகு கோதூளியினாலும் குழந்தையை ஸ்னானஞ்செய்து வைத்துப் பிறகு கோமயத்தினால் (*)பன்னிரண்டு அங்கங்களில் பன்னிரண்டு நாமங்களினால் திலகமிட்டு ரக்ஷையைச் செய்தனர். (20) கோபிகைகள் ஆசமனஞ்செய்துகொண்டு தமது தேஹத்தில் அங்கங்களிலும், கைகளிலும் தனித்தனியே ந்யாஸஞ் செய்துகொண்டு பிறகு குழந்தைக்குப்(1)பீஜந்யாஸத்தைச் செய்தனர். (21) அதாவது:—“உன்னுடைய கால்களை அஜனும் முழங்கால்களை மணிமானும், பிறகு தொடைகளை யக்ஞனும், இடுப்புப்

---

*ललाटे केशवः पातु नाभौ नारायणोऽवतु । माधवः पातु हृदये गोविन्दः कण्ठतस्त्वधः ॥१॥ दक्षकुक्षौ तथा विष्णुस्तद्भुजे मधुसूदनः । त्रिविक्रमस्तु तत्कण्ठे वामकुक्षौ तु वामनः ॥२॥ श्रीधरो वामहस्ते च हृषीकेशस्तु तद्गले । कट्यां वै पद्मनाभस्तु ककुद्दामोदरोऽवतु ॥ ३ ॥ என்றவசனப்படி கேசவன் நெற்றியிலும், நாராயணன் நாபியிலும், மாதவன் ஹிருதயத்திலும், கோவிந்தன் கழுத்துக்குக் கீழிலும், விஷ்ணு வலதுபக்கத்து வயிற்றிலும், மதுசூதனன் வலது புஜத்திலும், த்ரிவிக்ரமன் கழுத்திலும்,வாமனன் இடது பக்கத்து வயிற்றிலும், ஸ்ரீதரன் இடதுகையிலும், ஹிருஷீகேசன் கழுத்திலும், பத்மநாபன் இடையிலும், தாமோதரன் தோளிலும் ரக்ஷிக்கட்டும் என்பதாய் கோமயத்தினால் அவ்விடங்களில் திலகமிட்டனர் என்றகருத்து.

(1)முதலில் ஆசமனஞ் செய்யாது பரபரப்புடன் குழந்தைக்கு மட்டும் பீஜந்யாஸத்தைச் செய்தனர். பிறகு ஆசமனஞ் செய்து கொண்டு தங்களுடைய அங்கங்களில் ந்யாஸஞ் செய்து கொண்டு பிறகு குழந்தைக்குச் செய்தனர். முதலில் தன்னிடஞ் செய்து கொண்டு பின்னர் பிறர்க்குப் பீஜந்யாஸம் செய்வதே பலன் தரும் என்பது கருத்து. இங்கு (1)அஜன், (2) மணிமான், (3) யக்ஞன், (4) அச்யுதன், (5) ஹயாஸ்யன், (6) கேசவன், (7) ஈசன், (8) இனன், (9) விஷ்ணு, 10) உருக்ரமன், (11) ஈச்வரன் எனப்பதினொரு பீஜங்கள் சொல்லப்படுகின்றன. இவற்றை பின் சொன்னபடி ந்யாஸஞ் செய்தனர் என்றும்.

इनस्तु कण्ठं विष्णुर्भुजं मुखमुरुक्रम ईश्वरः कम् ॥ २२ ॥ चक्र्यग्रतः सहगदो हरिरस्तु पश्चात्त्वत्पार्श्वयोर्धनुरसी मधुहाऽजनश्च । कोणेषु शङ्ख उरुगाय उपर्युपेन्द्रस्तार्क्ष्यः क्षितौ हलधरः पुरुषः समन्तात् ॥ २३ ॥ इन्द्रियाणि हृषीकेशः प्राणान्नारायणोऽवतु । श्वेतद्वीपपतिश्चित्तं मनो योगेश्वरोऽवतु ॥ २४ ॥ पृश्निगर्भस्तु ते बुद्धिमात्मानं भगवान्परः । क्रीडन्तं पातु गोविन्दः शयानं पातु माधवः ॥ २५ ॥ व्रजन्तमव्याद्वैकुण्ठ आसीनं त्वां श्रियः पतिः । भुञ्जानं यज्ञभुक्पातु सर्वग्रहभयंकरः ॥ २६ ॥ डाकिन्यो यातुधान्यश्च कूष्माण्डा येऽर्भकग्रहाः । भूतप्रेतपिशाचाश्च यक्षरक्षोविनाय-

---

ரதேசத்தை அச்யுதனும், வயிற்றை ஹயக்ரீவனும், ஹ்ருதயத்தைக் கேசவனும், உனது வயிற்றை ஈசனும், கண்டத்தை இனனும், புஜத்தை விஷ்ணுவும், முகத்தை உருக்ரமனும், தலையை ஈஸ்வர னும் ரக்ஷிக்கட்டும் என்று நியாஸஞ் செய்தனர். (22) சக்ரத் துடன் கூடின ஹரி உனக்கு முன்பக்கதில் ரக்ஷிக்கட்டும். கதை யுடன் கூடின ஹரி உன்பின்னால் ரக்ஷிப்பவராக இருக்கட்டும். தனுஸ்ஸைத் தரிக்கும் மதுஸூதனனும், கத்தியைத்தரிக்கும் அஜனும் உனது இருபக்கங்களிலும் இருக்கட்டும். சங்கத்தைத் தரிக்கும் உருகாயன் நான்கு மூலைகளிலு மிருக்கட்டும். உபேந்திரன் மேல் (ஆகாசத்தில்) இருக்கட்டும். தார்க்ஷ்யன் பூமியின் கீழிருக்கட்டும். கலப்பையைத் தரிக்கும் புருஷன் நான்குபக்கங்களிலு மிருக்கட் டும். (23) ஹ்ருஷீகேசன் இந்திரியங்களை ரக்ஷிக்கட்டும். நாரா யணன் ப்ராணன்களை ரக்ஷிக்கட்டும். ஸ்வேதத்வீபபதி சித்தத்தை ரக்ஷிக்கட்டும். யோகேஸ்வரன் மனத்தை ரக்ஷிக்கட்டும். ப்ருஸ்னி கர்ப்பனே உனது புத்தியை ரக்ஷிக்கட்டும். பரனைபகவான் அஹங்காரத்தை ரக்ஷிக்கட்டும். கோவிந்தன் விளையாடுமுன்னை ரக்ஷிக்கட்டும். மாதவன் படுத்திருக்குமுன்னை ரக்ஷிக்கட்டும். வை குண்டன் நடக்கு முன்னை ரக்ஷிக்கட்டும். ஸ்ரிய:பதி உட்கார்ந் திருக்குமுன்னை ரக்ஷிக்கட்டும். எல்லாக்ரஹங்களுக்கும் பயத்தைத் தரும் யக்ஞபுக் சாப்பிடுமுன்னை ரக்ஷிக்கட்டும். (24–26) டாகினி களென்றும், யாதுதானிகளென்றும், கூஷ்மாண்டங்களென்றும், அர்ப்பகக்ரஹங்களென்றும், பூதம், ப்ரேதம், பிசாசங்களென்றும், யக்ஷன், ரக்ஷஸ், விநாயகன் என்றும், கோடரா, ரேவதீ, ஜ்யேஷ்

काः ॥ २७ ॥ कोटरा रेवती ज्येष्ठा पूतनामातृकादयः । उन्मादा ये ह्यपस्मारा देहप्राणेन्द्रियद्रुहः ॥ २८ ॥ स्वप्नदृष्टा महोत्पाता वृद्धबालग्रहाश्च ये । सर्वे नश्यन्तु ते विष्णोर्नामग्रहणभीरवः ॥ २९ ॥

श्रीशुक उवाच—इति प्रणयबद्धाभिर्गोपीभिः कृतरक्षणम् । पाययित्वा स्तनं माता संन्यवेशयदात्मजम् ॥ ३० ॥ तावन्नन्दादयो गोपा मथुराया व्रजं गताः । विलोक्य पूतनादेहं बभूवुरतिविस्मिताः ॥ ३१ ॥ नूनं बतर्षिः संजातो योगेशो वा समास सः । स एव दृष्टो ह्युत्पातो यदाहानकदुन्दुभिः ॥३२॥ कलेवरं परशुभिश्छित्त्वा तत्ते व्रजौकसः । दूरे क्षिप्त्वावयवशो न्यदहन्काष्ठवेष्टितम् ॥ ३३ ॥ दह्यमानस्य देहस्य धूमश्चागरुसौरभः ।

---

டா, பூதனை, மாதிருகை முதலியன என்றும், உன்மாதங்களென்றும், தேஹம் ப்ராணன் இந்திரியம் இவற்றுக்குத் தீங்கிழைக்கின்ற அபஸ்மாரக்ரஹங்களென்றும், எவைகளுண்டோ இவையும், ஸ்வப்பனத்திற் காணப்பட்ட பெரிய உத்பாதங்களும், வ்ருத்தபாலக்ரஹங்களும், எவையுண்டோ அவையாவும் விஷ்ணுவின் நாமக்ரஹணங்களினுல் பயந்தவைகளாய் நாசத்தை யடையட்டும்,, என்றனர். (27–29)

ஸ்ரீசுகர் சொல்லுவதாவது—இவ்விதம் ப்ரேமையுடன் கூடினவர்களான கோபிகைகளினுல் செய்யப்பட்ட ரக்ஷணத்தை யுடைய தனது புத்திரனை மாதாவான யசோதை ஸ்தன்யத்தைப் பானஞ் செய்வித்து படுக்கையிலிட்டு துணிகொண்டு மேலே மூடினுள். (30) அவ்வளவுக்குள் மதுரையினின்றும் கோகுலம் வந்த நந்தர் முதலியகோபாலர்கள் பூதனையின் தேஹத்தைக் கண்ணுற்று மிக்கவாஶ்சரியத்தை யடைந்தவர்களாகவாயினர். (31) வசுதேவர் எதைச் சொன்னுரோ அதே உத்பாதமானது காணப்பட்டதன்றே? ஆகவே அவர் இப்பொழுது பிறந்தருஷியாகவோ, யோகேஶ்வரனுக (க்ஞானியாக) வோதான் இருக்கிறுர் என்றனர் (32) அந்தக் கோகுலவாசிகள் அந்தச் சவசரீரத்தைக் கோடறிகளால் பிளந்து வெகுதூரத்தில் போட்டு ஒவ்வொரு அவயவங்களையும் கட்டைகளை யடுக்கி மறைத்துப் பொசுக்கினர். (33) பொசுக்கப்படுவதும் கிருஷ்ணனுல் பால்குடித்தல் மூலம் அனுபவிக்கப்பட்டது பற்றியே உடன் விலகின பாபத்தையுடையதுமான தேஹத்தினுடைய புகை

उत्थितः कृष्णनिर्भुक्तसपद्याहतपाप्मनः ॥ ३४ ॥ पूतना लोकबालघ्नी राक्षसी रुधिराशना । लिघांसयापि हरये स्तनं दत्वाप सद्गतिम ॥ ३५ ॥ किं पुनः श्रद्धया भक्त्या कृष्णाय परमात्मने । यच्छन्प्रियतमं किं नु रक्तास्तन्मातरो यथा ॥ ३६ ॥पद्भ्यां भक्तहृदिस्थाभ्यां वन्द्याभ्यां लोकवन्दितैः । अङ्गं यस्याः समाक्रम्य भगवानपिबत्स्तनम् ॥ ३७ ॥ यातुधान्यपि सा स्वर्गमवाप जननीगतिम् । कृष्णभुक्तस्तनक्षीराः किमु गावोऽनुमातुरः ॥३८॥ पयांसि यासामपिबत्पुत्रस्नेहस्नुतान्यलम् । भगवान्देवकीपुत्रः कैवल्याद्यखिलप्रदः ॥ ३९ ॥ तासामविरतं कृष्णे कुर्वतीनां सुतेक्षणम् ।

---

அகில் கட்டையின் வாஸனைக் கொப்பானதாக எழுந்தது. (34) உலகிலுள்ள பாலர்களைக் கொல்லுகின்றவளும், ராக்ஷஸியும், ரக்தத்தையே ஆஹாரமாகக் கொண்டவளுமான பூதனையுங் கூட கொல்லவேண்டுமென்ற எண்ணத்துடன் ஹரியான கிருஷ்ணனுக்கு ஸ்தன்யத்தைக் கொடுத்து சாதுக்களுக்குற்ற கதியை யடைந்தாள். (35) ஆஸ்திக்யத்துடனும் ப்ரேமையுடனும், பரமாத்மாவான கிருஷ்ணனுக்கு மிக்கப்பிரியமான பாயஸாதிகளைக் கொடுப்பவர் ஸத்கதியை யடைவர் என்பதில் என்னதடை? பற்றுள்ள அவரது (*) தாய்மார்கள் உள்ளபடி ஸத்கதியை யடைவர் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ. (36) லோகத்தவரால் நமஸ்கரிக்கப்பட்ட ப்ரம்ஹா முதலியோராலும் வணங்கத் தக்கனவும், பக்தர்களின் ஹிருதயத்தி லிருப்பனவுமான பாதங்களால் எவளுடைய அங்கத்திலேறி பகவான் ஸ்தன்யபானஞ் செய்தாரோ ராக்ஷஸியான அந்தப்பூதனைகூட ஜனனிகளுக்கு (உபமாதாக்களுக்கு) ள்ள கதியான ஸ்வர்க்கத்தை யடைந்தாள் என்றால் கிருஷ்ணனால் குடிக்கப்பட்ட முலைப்பாலை யுடையவர்களான பசுக்களும், தாய்மார்களும் (மேலானகதியை) அடைவர் என்ற விஷயத்தில் சொல்லவும் வேண்டுமோ? (37–38) கைவல்யம் முதலிய யாவையும் தருகின்

---

(*) 13-வது அத்தியாயம் 19-வது சுலோகம் முதல் சொல்லப்படும் வத்ஸாபஹார லீலையில் கோபகுமாரர்களாகவும் கன்றுகளாகவும் ரூபமெடுத்த ஸ்ரீகோபாலனுக்கு ஸ்தன்யபானாதிகளைப் பண்ணிவைத்த கோபிகைகளும், கோக்களும் மாதாக்களாக இருந்ததை ஞாபகத்தில் வைத்து இவ்விதம் அவரது தாய்மார்கள் எனப்பன்மை கூறப்பட்டது.

न पुनः कल्पते राजन्संसारोऽज्ञानसंभवः ॥ ४० ॥ कटधूमस्य सौरभ्यमवघ्राय व्रजौकसः । किमिदं कुत एवेति वदन्तो व्रजमाययुः ॥ ४१ ॥ ते तत्र वर्णितं गोपैः पूतनागमनादिकम् । श्रुत्वा तन्निधनं स्वस्ति शिशोश्चासन्सुविस्मिताः ॥ ४२ ॥ नन्दः स्वपुत्रमादाय प्रेत्यागतमुदारधीः । मूर्ध्न्युपाघ्राय परमां मुदं लेभे कुरूद्वह ॥ ४३ ॥ य एतत्पूतनामोक्षं कृष्णस्यार्भकमद्भुतम् । शृणुयाच्छ्रद्धया मर्त्यो गोविन्दे लभते रतिम् ॥ ४४ ॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कंधे पूर्वार्धे
पूतनामोक्षनिरूपणं नामषष्ठोऽध्यायः ॥ ६ ॥



றவரும் தேவகியின் புத்திருமான பகவான் புத்திரஸ்னேஹத்தினல் அதிகமாகப் பெருகின எவர்களின் பால்களைக் குடித்தாரோ கிருஷ்ணனிடத்தில் இடைவிடாது புத்திர திருஷ்டியைச் செய்கின்ற அவர்களுக்கு ஹேராஜன்! அஞ்ஞானத்தைக் காரணமாகக் கொண்ட ஸம்ஸாரமானது திரும்பவும் ஏற்படவே மாட்டாது. (39–40) கோபாலர்கள் சவப்புகையின் மணத்தை முகர்ந்து இது என்னெ? எங்கிருந்து வருகிறது என்று சொல்லிக்கொண்டு கோகுலத்தை நோக்கிச் சென்றனர். (41) அவர்கள் அங்கு கோபர்களால் சொல்லப்பட்ட பூதனைவந்தது முதலியவற்றையும், அவளது மரணத்தையும், குழந்தைக்கு க்ஷேமத்தையும் கேட்டு மிக்க வாய்சரியத்தை யடைந்தவர்களாக ஆயினர். (42) ஹேகுருத்வஹ! உதார புத்தியையுடைய நந்தகோபர் செத்துப்பிழைத்த தனது புத்திரனை வாரியெடுத்து உச்சி முகர்ந்து மேலான சந்தோஷத்தை யடைந்தார்.(43) எந்த மனிதன் அத்புதம் வாய்ந்த பூதனுமோக்ஷம் என்ற இந்தக் கிருஷ்ணனுடைய பாலலீலையைச் சிரத்தையுடன் கேட்பானே அவன் கோவிந்தனிடத்தில் பக்தியை யடைவான் என்றும். (44)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண தசமஸ்கந்த பூர்வார்த்தத்தில் பூதனுமோக்ஷ நிருபணம் எனப்பெயரிய.
ஆறுவது அத்தியாயம் முற்றிற்று.



## நாராயணீயம்.

तदनु नन्दममन्दशुभास्पदं नृपपुरीं करदानकृते गतम् ।
समवलोक्य जगाद भवत्पिता विदितकंससहायजनोद्यमः ॥ ३१ ॥

(ப—ரை) **तदनु**=பிறகு, **अमन्दशुभास्पदम्**=அதிகமான சுபத்துக்கு இருப்பிடமானவரும், **करदानकृते**=கப்பத்தைக் கொடுக்க வேண்டி, **नृपपुरीम्**=அரசனான கம்ஸனது பட்டினத்தை, **गतम्**=அடைந்தவருமான, **नन्दम्**=நந்தகோபனை, **विदितकंससहायजनोद्यमः**=அறியப்பட்ட கம்ஸனது ஸஹாயஜனங்களின் முயற்சியையுடையவரான, **भवत्पिता**=உமது பிதாவான வசுதேவர், **समवलोक्य** பார்த்து, **निजगाद**=பின்வருமாறு சொல்லலுற்றார். (31)

अयि सखे तव बालकजन्म मां सुखयतेऽद्य निजात्मजजन्मवत् ।
इति भवत्पितृतां व्रजनायके समधिरोप्य शशंस तमादरात् ॥ ३२ ॥

(ப—ரை) **अयि ! सखे !**=ஓய்தோழரே!, **तव**=உம்முடைய, **बालकजन्म**=குழந்தையினுத்பத்தியானது, **निजात्मजजन्मवत्**=சொந்தமானபுத்திரனது உத்பத்தியானது போல **अद्य**=இப்பொழுது, **माम्**=என்னை, **सुखयते**=சுகப்படுத்துகிறது. **इति**=என, **भवत्पितृताम्**=உமது பிதிருத்தன்மையை, **व्रजनायके**=நந்தகோபனிடத்தில், **समधिरोप्य**=ஏற்றிவைத்து, **तम्**=அந்த நந்தகோபனைப் பார்த்து, **आदरात्**=ப்ரேமையுடன், **शशंस**=சொன்னார். (32)

इहच सन्त्यनिमित्तशतानि ते कटकसीम्नि ततो लघु गम्यताम् ।
इतिच तद्वचसा व्रजनायको भवदपायभिया द्रुतमाययौ ॥ ३३ ॥

(ப—ரை) **इहच**=இவ்விடத்திலும், **ते**=உமது, **कटकसीम्नि**=விடுதிப்ரதேசத்தில், **अनिमित्तशतानि**=நூற்றுக்கணக்கான அசுபக்குறிகள், **सन्ति**=இருக்கின்றன. **ततः**=ஆனதுபற்றி, **लघु**=சீக்கிரமாக, **गम्यताम्**=போகப்படட்டும். **इति च**=என்றதான **तद्वचसा**=அந்த வஸுதேவருடைய வார்த்தையினால், **व्रजनायकः**=நந்தகோபர் **भवदपायभिया**=உமக்கு அபாயம் (தீங்கு) வருமோ என்றபயத்தினால், **द्रुतम्**=விரைவாக, **आययौ**=ஊருக்குத் திரும்பினார். (33)

अवसरे खलु तत्र च काचन व्रजपदे मधुराकृतिरङ्गना ।
तरलषट्पदलालितकुन्तळा कपटपोतक ते निकटं गता ॥ ३४ ॥

(ப-ரை) हेकपटपोतक! ஓய் பொய்க்குழந்தாய் तत्र=அந்த, अवसरे= சமயத்தில் मधुराकृति:=இனிமையான ஆகிருதியை யுடையவளான, काचन=யாதோவொரு, अङ्गना च=ஸ்திரீயும், तरलषट्पदलालितकुन्तला =இங்குமங்குமோடுகின்ற வண்டுகளால் கொண்டாடப்பட்ட அழகு வாய்ந்த தலைமயிரை யுடையவளாய்க்கொண்டு ते=உன்னுடைய, निकटम्=ஸமீபத்தை, गता खलु=அடைந்தாளன்றோ. (34)

सपदि सा हतबालकचेतना निशिचरान्वयजा किल पूतना ।
व्रजवधूष्विह केयमिति क्षणं विमृशतीषु भवन्तमुपाददे ॥ ३५ ॥

(ப-ரை) हतबालकचेतना=அபஹரிக்கப்பட்ட குழந்தைகளின் உயிரையுடையவளும், निशिचरान्वयजा=ராக்ஷஸவம்சத்தில் பிறந்தவளுமான सा=அந்த पूतना किल=பூதனையோவெனில் व्रजवधूषु=கோபஸ்திரீகள் इयं=இவள் का=யார் इति=என क्षणं=க்ஷணப்பொழுது विमृशतीषु=ஆலோசிக்கும்பொழுது, भवन्तं=உம்மை, उपाददे=எடுத்தாள்.

ललितभावविलासहृतात्मभिर्युवतिभिः प्रतिरोद्धुमपारिता ।
स्तनमसौ भवनान्तनिषेदुषी प्रददुषी भवते कपटात्मने ॥ ३६ ॥

(ப-ரை) ललितभावविलासहृतात्मभि:=அழகியசேஷ்டா விசேஷத்தினால் கவரப்பட்டமனத்தை யுடையவர்களான, युवतिभि:= கோபஸ்திரீகளினால் प्रतिरोद्धुं=தடுப்பதற்கு अपारिता=முடியாதவளான, असौ=இவள் भवनान्तनिषेदुषी=வீட்டினுள்ளில் பிரவேசித்துட்கார்ந்தவளாய் कपटात्मने=கபடமான குழந்தைச்சரீரத்தையுடைய, भवते=உம்மையும்பொருட்டு स्तनं=முலையை, प्रददुषी=கொடுப்பவளாகவானாள்.

समधिरुह्य तदङ्कमशङ्कितस्त्वमथ बालकलोपनरोषित: ।
महदिवाम्रफलं कुचमण्डलं प्रतिचुचूषिथ दुर्विषदूषितम् ॥ ३७ ॥

(ப-ரை) अथ=பிறகு, त्वं=நீர், अशंकित:=பயமற்றவராய், तदंकं= அவளுடையமடியில் समधिरुह्य=நன்கு ஏறிக்கொண்டு, बालकलोपन-रोषित:=குழந்தைகளை அழித்தல் காரணமாகக் கோபங்கொண்டவராய் दुर्विषदूषितं=கெட்டவிஷத்தினால் தூஷிக்கப்பட்ட कुचमण्डलं= ஸ்தனமண்டலத்தை, महत्=பெரிதான, आम्रफलमिव=மாம்பழத்தைப்போல प्रतिचुचूषिथ=உறிஞ்சிக் குடித்தீர். (37)

असुभिरेव समं धयति त्वयि स्तनमसौ स्तनितोपमनिस्स्वना ।
निरपतद्भयदायि निजं वपुः प्रतिगता प्रविसार्य भुजावुभौ ॥ ३८ ॥

(ப—ரை) त्वयि=நீர், असुभिः सममेव=ப்ராணன்களுடன் கூடவே, स्तनं=முலையை, धयति=குடிக்குங்கால், असौ=இந்தப்பூதனை, स्तनितोपमनिःस्वना=இடிக்கொப்பான சப்தமுள்ளவளாய், भयदायि, =பயத்தைத்தருகின்ற, निजं=சொந்தமான, वपुः=ராக்ஷஸசரீரத்தை प्रतिगता=அடைந்தவளாய், उभौ भुजौ=இரண்டுகைகளையும், प्रविसार्य =விரித்துக்கொண்டு निरपतत्=பூமியில் விழுந்தாள். (38)

भयदघोषणभीषणविग्रहश्रवणदर्शनमोहितवल्लवे ।
व्रजपदे तदुरःस्थलखेलनं ननु भवन्तमगृह्णत गोपिकाः ॥ ३९ ॥

(ப—ரை) व्रजपदे=கோகுலமானது, भयदघोषण भीषणविग्रहश्रवणदर्शनमोहितवल्लवे=பயத்தைத்தரும் சப்தத்தைக்கேட்டல் பயமுறுத்தும் சரீரத்தைப்பார்த்தல் இவற்றால் மோஹத்தையடைந்த கோபாலர்களையுடையதாக விருக்குங்கால், गोपिकाः=கோபிகைகள், तदुरःस्थलखेलनं=அவளுடைய மார்பில்விளையாடுகின்ற, भवन्तं=உம்மை, अगृह्णत ननु=எடுத்தனரன்றோ? (39)

भुवनमङ्गल नामभिरेव ते युवतिभिर्बहुधा कृतरक्षणः ।
त्वमयि वातनिकेतननाथ मामगदयन् कुरु तावकसेवकम् ॥ ४० ॥

(ப—ரை) भुवनमङ्गल! உலகுக்குமங்களமானவரே!, ते=உமது, नामभिरेव=நாமங்களினாலேயே, त्वम्=நீர், युवतिभिः=ஸ்திரீகளினால் बहुधा=பலவிதமாக, कृतरक्षणः=செய்யப்பட்டரக்ஷணத்தையுடையவரானீர். अयि! ஓய்! वातनिकेतननाथ!=குருவாயூரிலிருக்கும் ப்ரபுவானகிருஷ்ண! माम्=என்னை, अगदयन्=ரோகமற்றவனாகச் செய்துகொண்டு तावकसेवकम्=உமதுபக்தனாக, कुरु=செய்வீராக. (40)

பூதனாமோக்ஷவர்ணனமென்ற நார்ப்பதாவது தசகம் முற்றிற்று.

---

व्रजेश्वरः शौरिवचो निशम्य समाव्रजन्नध्वनि भीतचेताः ।
निष्पिष्टनिश्शेषतरुं निरीक्ष्य कञ्चित्पदार्थं शरणं गतस्त्वाम् ॥ ४१ ॥

(ப—ரை) व्रजेश्वरः=நந்தகோபர் शौरिवचः=வசுதேவருடைய வார்த்தையை निशम्य=கேட்டு, भीतचेताः=பயந்தசித்தமுடையவராய் अध्वनि=வழியில், समाव्रजन्=வருகின்றவராய், निष्पिष्टनिःशेषतरुं= மீதமின்றி எல்லாமரங்களையும் பொடிசெய்ததான, कञ्चित्=ஒரு, पदार्थं= பொருளை, (இதுஇன்னதென ஊஹித்தறிய வியலாதபொருளை) निरीक्ष्य=பார்த்து, त्वाम्=உம்மை, शरणं=சரணமாக, गतः=அடைந்தார்

निशम्य गोपीवचनादुदन्तं सर्वेऽपि गोपा भयविस्मयांधाः ।
त्वत्पातितं घोरपिशाचदेहं देहुर्विदूरेऽथ कुठारकृत्तम् ॥ ४२ ॥

(ப-ரை) गोपीवचनात्=கோபிகையின் வார்த்தையினால் उदन्तं= பூதனையின் விருத்தாந்தத்தை, निशम्य=கேட்டு, सर्वेऽपि=எல்லா, गोपाः=கோபாலர்களும், भयविस्मयान्धाः=பயம் ஆஸ்சரியம் இவை நிரம்பினவர்களாய்க்கொண்டு अथ=பிறகு त्वत्पातितम्=உம்மால் தள்ளப்பட்ட घोरपिशाचदेहं=பயங்கரமான பிசாசதேஹத்தை, कुठारकृत्तं =கோடாறி கொண்டுவெட்டி विदूरे=வெகுதொலையில் देहुः=பொசுக்கினர். (42)

त्वत्पीतपूतस्तनतच्छरीरात् समुच्चलन्नुच्चतरो हि धूमः ।
शङ्कामधादागरवः किमेष किं चान्दनो गौग्गुलवोऽथवेति ॥ ४३ ॥

(ப-ரை) त्वत्पीतपूतस्तनतच्छरीरात्=உம்மால்பானஞ் செய்யப்பட்டதும் அனதுபற்றியே பரிசுத்தமுமானஸ்தனத்தையுடைய அவளது சரீரத்தினின்றும், समुच्चलन्=நன்கு உயரக்கிளம்பின, उच्चतरः=அதிகமான धूमः=புகையானது, एषः=இது, आगरवः-किं=அகில் கட்டையினின்று முண்டானபுகையோ? चान्दनः किं= சந்தனக்கட்டையினின்று முண்டானபுகையோ अथवा=அல்லது, गौग्गुलवः=சாம்பிராணிப்புகையோ? इति=என்ற शंकां=ஸந்தேஹத்தை, अधाद्धि=உண்டுபண்ணிற்றன்றோ. (43)

मदङ्गसङ्गस्य फलं न दूरे क्षणेन तावद्भवतामपि स्यात् ।
इत्युल्लपन् वल्लवतल्लजेभ्यस्त्वं पूतनामातनुथाः सुगन्धिम् ॥ ४४ ॥

(ப-ரை) मदङ्गसङ्गस्य =எனது அங்கஸம்பந்தத்துக்கு, फलं= பலனானது, (முக்தியானது) नदूरे=வெகுதூரத்திலில்லை (வெறுஜன்மத்திலில்லை) भवतामपि=உங்களுக்கும் क्षणेन तावत्=க்ஷணத்துக்குள்ளேயே स्यात्=உண்டாகும், इति=என वल्लवतल्लजेभ्यः=சிறந்த (பாக்கியசாலிகளான) கோபாலர்களையும் பொருட்டு उल्लपन्=சொல்லவேண்டி, त्वं=நீர், पूतनां=பூதனையை, सुगन्धिं=நல்ல வாஸனையுள்ளவளாக, आतनुथाः=செய்தீர் (44)

चित्रं पिशाच्या न हतः कुमारश्चित्रं पुरैवाकथि शौरिणेदम् ।
इति प्रशंसन् किल गोपलोको भवन्मुखालोकरसे न्यमाङ्क्षीत् ॥४५॥

(ப-ரை) पिशाच्या=பூதனையினால் कुमारः=குழந்தை नहतः= கொல்லப்படவில்லை, चित्रं=இது ஆஸ்சரியமே, इदं=இது शौरिणा=

வசுதேவரால் पुरैव=முன்னரே, अकथि=சொல்லப்பட்டது என்பதும் चित्रं=ஆஶ்சரியமே, इति=என प्रशंसन्=புகழுகின்ற, गोपलोकः=கோபஜனமானது, भवन्मुखालोकरसे=உமதுமுகத்தைப் பார்ப்பதாலுண்டாகும் ஆனந்தத்தில் न्यमाङ्क्षीत्=மூழ்கிவிட்டது (45)

दिने दिनेऽथ प्रतिवृद्धलक्ष्मीरक्षीणमङ्गल्यशतो व्रजोऽयम् ।
भवन्निवासादयि वासुदेव प्रमोदसान्द्रः परितो विरेजे ॥ ४६ ॥

(ப–ரை) अथ=பிறகு दिनेदिने=நாள்தோறும், प्रतिवृद्धलक्ष्मीः=பெருக்கையடைந்த லக்ஷ்மியை(ஐஶ்வரியத்தை)யுடையதும், अक्षीणमङ्गल्यशतः=குறைவற்ற நூற்றுக்கணக்கான மங்கல்யத்தையுடையதுமான अयं=இந்த= व्रजः=கோகுலமானது अयि वासुदेव !=ஹே வாசுதேவனே ! भवन्निवासात्=உமது நிவாஸத்தினால் प्रमोदसान्द्रः=ஆனந்தம் நிறைந்ததாக परितः=நாலாபக்கத்திலும் विरेजे=விளங்கிற்று (46)

गृहेषु ते कोमलरूपहासमिथः कथासंकलिताः कमन्यः ।
वृत्तेषु कृत्येषु भवन्निरीक्षासमागताः प्रत्यहमत्यनन्दन् ॥ ४७ ॥

(ப–ரை) प्रत्यहं=தினந்தோறும், गृहेषु=தமதுவீட்டில் कृत्येषु=வீட்டுவேலைகள் वृत्तेषु=முடிந்ததும், भवन्निरीक्षासमागताः=உம்மைப் பார்க்கவேண்டிவந்தவர்களான कमन्यः=கோபஸ்திரீகள், ते=உம்முடைய कोमलरूपहासमिथःकथासंकलिताः = அழகியரூபம் மந்தஹாஸம் இவற்றைப்பற்றி ஒருவருக்கொருவர் கதைசொல்லுவதிலீடுபட்டவர்களாய்க்கொண்டு, अत्यनन्दन्=அதிகமான ஆனந்தத்தையடைந்தனர். (47)

अहो कुमारो मयि दत्तदृष्टिः स्मितं कृतं मां प्रति वत्सकेन ।
एह्येहि मामित्युपसार्य पाणिं त्वयीश किंकिं न कृतं वधूभिः ॥ ४८ ॥

(ப–ரை) कुमारः=குழந்தை, मयि=என்னிடத்தில் दत्तदृष्टिः=செலுத்தப்பட்டபார்வையை யுடையவனாக இருக்கிறான். अहो!=ஆச்சரியமடி !, वत्सकेन=குழந்தையினால், कृतं=செய்யப்பட்ட स्मितं=புன்சிரிப்பானது मांप्रति=என்னைக்குறித்தடி ! मां=என்னிடத்தில் एह्येहि=வா ! வா ! इति=என पाणिं=கையை उपसार्य=அருகில் நீட்டிக்கொண்டு ईश!=ஹேப்ரபோ ! वधूभिः=ஸ்திரீகளினால் त्वयि=உம் விஷயத்தில் किं किं=எது எதுதான் नकृतं=செய்யப்படவில்லை. (சிலர் மடியில்தூக்கிவைத்துக்கொண்டும், சிலர் ஆலிங்கனம்செய்து

கொண்டும், சிலர் முத்தமிட்டுக்கொண்டும், சிலர் கொஞ்சிவிளை யாடிக்கொண்டும் சந்தோஷித்தனர் என்றுகருத்து).(48)

**भवद्वपुःस्पर्शनकौतुकेन करात्करं गोपवधूजनेन ।**
**नीतस्त्वमाताम्रसरोजमालाव्यालम्बिलोलम्बतुलामलासीः ॥ ४९ ॥**

(ப-ரை)**भवद्वपुःस्पर्शनकौतुकेन**=உமது சரீரத்தைத் தொடுவதி லாவல்கொண்ட, **गोपवधूजनेन**=கோபஸ்திரீ ஜனத்தினால் **करात्करं**= ஒருவர்கையினின்றும் மற்றொருவர்கைக்கு **नीतः**=மாற்றப்பட்ட **त्वं** =நீர், **आताम्रसरोजमालाव्यालम्बिलोलम्बतुलां**=நன்கு சிவந்ததாமரைப்பூ மாலையில் தொங்குகின்ற வண்டுக்கொப்பாக இருத்தலை **अलासीः**= அடைந்தீர். (கண்ணனை எடுக்கும் கோபிகைகளின் கைகள் சிவந்த தாமரைப்பூ மாலைபோன்றிருப்பதால் ஸ்ரீகோபாலன் அம்மாலை யிலுள்ள புதியதேனில் ஆசைகொண்டு அதில்தொங்கும் வண்டுக் கொப்பாக விளங்கினார் என்று கருத்து (49)

**निपाययन्ती स्तनमङ्कगं त्वां विलोकयन्ती वदनं हसन्ती ।**
**दशां यशोदा कतमां न भेजे स तादृशः पाहि हरे गदान्माम् ॥ ५० ॥**

(ப-ரை) **अङ्कगं**=மடியிலிருக்கின்ற, **त्वां**=உம்மை, **स्तनं**=முலை யை, **निपाययन्ती**=குடிக்கச்செய்கின்றவளும், **वदनं**=ஸ்ரீமுகத்தை **विलोकयन्ती**=பார்க்கின்றவளாய், **हसन्ती**=சிரிக்கின்றவளுமான **यशो-दा**=யசோதையம்மாள் **कतमां**=எந்த **दशां**=நிலையைத்தான், **नभेजे**= அடையவில்லை. **तादृशः**=அத்தகைய **सः**=அந்த நீர் **हेहरे**=ஹேகிரு ஷ்ண! **मां**=என்னை, **गदात्**=வாதரோகத்தினின்றும் **पाहि**=காத்தருள் வீராக. (50)

பூதனையின் சரீரதாஹவர்ணனம், யசோதை முதலியோருக்குண் டான ஒப்புயர்வற்ற ஆனந்தவர்ணனம் என்ற நாற்பத்தொன்றாவது தசகம் முற்றிற்று,

—•◦❀◦•—

## ஏழாவது அத்தியாயம்.

उत्क्षिपन् शकटं व्योम्नि तृणावर्तमधः क्षिपन् ।
दर्शयन्विश्वमास्ये च कृष्णः क्रीडति सप्तमे ॥ १ ॥

कृष्णार्भकसुधासिन्धुसंप्लवानन्दनिर्भरः ।
भूयस्तदेव संप्रष्टुं राजाऽन्यदभिनन्दति ॥ २ ॥

## अथ सप्तमोऽध्यायः॥

राजोवाच—येन येनावतारेण भगवान्हरिरीश्वरः। करोति कर्णरम्याणि मनोज्ञानि च नः प्रभो ॥ १ ॥ यच्छृण्वतोऽपैत्यरतिर्वितृष्णा सत्त्वं च शुद्ध्यत्यचिरेण पुंसः। भक्तिर्हरौ तत्पुरुषे च सख्यं तदेव हारं वद मन्यसे चेत् ॥ २ ॥ अथान्यदपि कृष्णस्य तोकाचरितमद्भुतम्। मानुषं लोकमासाद्य तज्जातिमनुरुन्धतः ॥ ३ ॥ श्रीशुक उवाच—कदाचिदौत्था-

---

(க—கை) கிருஷ்ணன் சகடத்தை உயரத்தூக்கி எறிந்தும், திருணவர்த்தனைக் கீழில் தள்ளியும், முகத்தில் உலகத்தைக் காண்பித்தும் விளையாடுகிறார் என்பது இந்த ஏழாவது அத்தியாயத்திற் சொல்லப்படுகிறது.

கிருஷ்ணனுடைய பாலலீலையாகிற அமுதக்கடலில் மூழ்கினதாலுண்டான அதிக ஆநந்தத்தை யுடைய பரீக்ஷித் ராஜன் அதே கிருஷ்ணபாலலீலையைக் கேட்கவேண்டி வேறுவேறு அவதார சரித்திரத்தைப் புகழ்கிறார். (எ—று)

ராஜன்—"ஹேப்ரபோ! ஈச்வரனும், ஹரியுமான பகவான் எந்த எந்த மத்ஸ்யாதி அவதாரத்தினால் எந்த எந்தக் காரியங்களைச் செய்கின்றாரோ அவையவைகள் எங்களுடைய காதுக்கினிமையானவைகளும் மனத்தைக் கவரக்கூடியனவுமேயாகும். ஆயினும், எதைக் கேட்கும் எந்தப்புருஷனுக்கும் மனத்திற்கு ஏற்படும் வாட்டமும், அதுமூலமுண்டாகும் பற்பல ஆசையும் விலகுகின்றதோ, மனதும் விரைவில் சுத்தியை யடைகின்றதோ, ஹரியினிடத்தில் பக்தியும் விஷ்ணுதாஸரிடத்தில் ஸ்னேஹமும் உண்டாகின்றதோ அதேஹரியின் சரித்திரத்தை என்னிடம் அனுக்கிரஹத்தைச் செய்வீராயின் சொல்லக்கடவீர். பின்னர் மானுஷமான லோகத்தை யடைந்து கோபஜாதியை அனுகரணம் செய்கின்ற கிருஷ்ணனுடைய அத்புதமான வேறு பாலசரித்திரத்தையும் சொல்ல வேண்டும்" என்றார். (1–3) ஸ்ரீசுகர் சொல்லுவதாவது—ஒரு நாள் பதிவிரதையான யசோதை(கிருஷ்ணன்) (*)குப்புறத்திக்கொள்ளும் ஸம

---

*சுலோகத்திலுள்ள "ஔத்தாநிகஸம்பலவோதயே" என்ற பதத்துக்கு "உத்தானம் அங்கபரிவர்த்தனம் (குப்புறத்திக்கொள்ளல்)

निककौतुकाप्लुवे जन्मर्क्षयोगे समवेतयोषिताम् । वादित्रगीतद्विजमन्त्रवाचकैश्चकार सूनोरभिषेचनं सती ॥ ४ ॥नन्दस्य पत्नी कृतमज्जनादिकं विप्रैः कृतस्वस्त्ययनं सुपूजितैः । अन्नाद्यवासःस्रगभीष्टधेनुभिः संजातनिद्राक्षमशीशयच्छनैः ॥ ५ ॥ औत्थानिकौत्सुक्यमना मनस्विनी समागता-

---

யத்தில் செய்யவேண்டிய உத்ஸவாபிஷேக விஷயத்திலும் அதே தினத்தில் ஜன்மநக்ஷத்திரத்தின் சேர்க்கையிலுள்ள அதிமஹோத்ஸவ விஷயத்திலும் வந்துகூடின ஸ்திரீகளின் நடுவில் வாதித்ரம், கீதம், ப்ராம்ஹணர்களுக்குள் மந்திரங்களை ஜபிப்பவர் இவர்களுடன் கூடப்புத்திரனுக்கு அபிஷேகத்தை (மங்களஸ்னனத்தைச்) செய்துவைத்தாள். (4) நந்தகோபருடைய பத்தினியான யசோதை, செய்விக்கப்பட்ட மங்களஸ்னாதிகளை யுடையவும், அன்னத்தை முதன்மையாகக் கொண்ட வஸ்திரம், பூமாலை, இஷ்டமான பொருள், பசு இவைகளால் நன்கு பூஜிக்கப்பட்டவர்களான ப்ராம்ஹணர்களால் செய்யப்பட்ட மங்களத்தை யுடையவும், உண்டான தூக்க முள்ளகண்களை யுடையவுமான அக்குழந்தையை மெதுவாக (வண்டிக்குக் கீழிருக்கும் தொட்டிலில்) படுக்க விட்டாள். (5) குப்புறத்

---

நநா நாணியே கௌதுகாப்லவே—உத்ஸவாபிஷேகே” என்று ஸ்ரீதரீயவியாக்யானத்திலும், “உத்தானம்—க்ருஹாதபஹி: சிசோ: நிஷ்க்ரமணம் (வீட்டிற்குவெளியே குழந்தையைக்கொண்டுபோகுதல்) தத்ஸம்பந்தயௌத்தானிகம் தஸ்மிந் கௌதுகே -உத்ஸவே என்று வீரராகவீய வியாக்யானத்திலும் கூறப்பட்டிருக்கிறது. நாம் ஸ்ரீதரீய வியாக்யானத்தைத்தழுவி உரைஎழுதி இருக்கிறோம்.

*குழந்தை குப்புறத்திக்கொண்ட தினத்தில் குழந்தையின் ஜன்மநக்ஷத்திரமும் சேர்ந்ததைக் கண்டு சந்தோஷமடைந்த யசோதையம்மாள் குழந்தைக்கு மங்களஸ்நானஞ்செய்வித்து அதை ஒருஉத்ஸவமாகக் கொண்டாடக் கருதி ஸ்வஸ்திவாசக ப்ராம்ஹணர்களுடனும், வாய்த்யங்களுடனும், அத்திருநாளுக்கு வேண்டிய ஏனையசாமான்களை ஏற்றின வண்டியுடனும் யமுனாதீரம் வந்து வண்டியை ஓரிடத்தில் அவிழ்த்துவிட்டு குழந்தைக்கு முறைப்படி மங்களஸ்னாதிகளையும் ப்ராம்ஹண ஆசீர்வாதாதிகளையும் செய்வித்து அங்குள்ள வண்டியின் கீழில் ஒரு தொட்டிலில் ஸ்ரீகோபாலனைத் தூங்கவிட்டாள் எனப்பாகவத ஸம்பிரதாய மறிந்த பெரியாருபதேசிக்கின்றனர்.

न्पूजयती व्रजौकसः । नैवाश्रृणोद्वै रुदितं सुतस्य सा रुदन्स्तनार्थी चरणावुदक्षिपत् ॥ ६ ॥ अधःशयानस्य शिशोरनोऽल्पकप्रवालमृद्वङ्घ्रिहतं व्यवर्तत । विध्वस्तनानारसकुप्यभाजनं व्यत्यस्तचक्राक्षविभिन्नकूबरम् ॥ ७ ॥ दृष्ट्वा यशोदाप्रमुखा व्रजस्त्रिय औत्थानिके कर्मणि याः समागताः । नन्दादयश्चाद्भुतदर्शनाकुलाः कथं स्वयं वै शकटं विपर्यगात् । (इति ब्रुवन्तोऽतिविवादमोहिता जनाः समन्तात्परिवव्रुरार्तवत्) ॥ ८ ॥ ऊचुरव्यवसितमतीन्गोपान्गोपीश्च बालकाः । रुदतानेन पादेन क्षिप्तमेतन्न संशयः ॥ ९ ॥ न ते श्रद्दधिरे गोपा बालभाषितमित्युत । अप्रमेयं बलं तस्य बालकस्य न ते विदुः ॥ १० ॥

---

திக்கொண்ட திருநாளைக் கொண்டாடுவதில் ஆவல்கொண்ட மனத்தையுடையவளும், நல்லமனதுடையவளும் அங்குவந்த கோகுலவாசிஜனங்களைப் பூஜிப்பவளுமான அந்த யசோதை குழந்தையின் அழுகுரலைக் கேட்கவேயில்லை. (குழந்தையோ) ஸ்தன்யத்திலாவலுள்ளதாய் அழுதுகொண்டு இருகால்களையும் மேலே உதறிற்று. (6) கீழில் படுத்திருக்கின்ற குழந்தையினுடைய சிறியதாயும், தளிர்போன்று மெதுவாயுமிருக்கின்ற கால்களினால் உதைக்கப்பட்ட வண்டியானது உடைந்த பற்பலரஸங்களுள்ள வெண்கல பாத்திரங்களை யுடையதாக விருக்கும்படியும், நொறுங்கின குடம் அச்சு இவற்றை யுடையதாயிருக்கும்படியும், ஒடிந்த மூக்கணையை உடையதா யிருக்கும்படியும் சிதறுண்டது. (7) யசோதை முதலியவர்களும், குப்புறத்திக்கொள்ளும் திருநாளில் வந்துகூடின யாதொரு கோகுல ஸ்திரீகளுண்டோ அவர்களும், நந்தகோபாதிகளும், அதைக் கண்டு வண்டி தானாகவே எவ்விதம் கொடைசாய்ந்தது என்பதாய் அற்புதமான அதைப் பார்த்து ஒன்றும் புரியாதவராயினர். (8) [இவ்விதம் ஜனங்கள் சொல்லிக் கொண்டு அதிகமான விவாதத்தினால் மோஹித்தவர்களாய் ஆர்த்தர்கள் போல நாலாபக்கத்திலும் சூழ்ந்துகொண்டனர்] "அழுகின்ற இந்தக் குழந்தையினால் காலினால் இந்த வண்டி கொடை கவிழ்க்கப்பட்டது இதில் ஸம்சயமில்லை" என ஸம்சயத்துடன் கூடின புத்தியுள்ளவர்களான கோபாலர்களையும் கோபிகைகளையும் பார்த்து (பக்கத்திலுள்ள) பாலகர்கள் சொல்லி

रुदन्तं सुतमादाय यशोदा ग्रहशङ्किता । कृतस्वस्त्ययनं विप्रैः सूक्तैः स्तनमपाययत् ॥ ११ ॥ पूर्ववत्स्थापितं गोपैर्बलिभिः सपरिच्छदम् । विप्रा हुत्वार्चयांचक्रुर्दध्यक्षतकुशाम्बुभिः ॥१२॥ येऽसूयानृतदम्भेर्ष्याहिंसामानविवर्जिताः । न तेषां सत्यशीलानामाशिषो विफलाः कृताः ॥१३॥ इति बालकमादाय सामर्ग्यजुरुपाकृतैः । जलैः पवित्रौषधिभिरभिषिच्य द्विजोत्तमैः ॥१४॥ वाचयित्वा स्वस्त्ययनं नन्दगोपः समाहितः । हुत्वा चाग्निं द्विजा

---

னர். (9) அந்தப் பாலகனுடைய அப்ரமேயமான பலத்தை அவர்கள் அறியவில்லை. ஆனதுபற்றி குழந்தைகளின் வார்த்தையை அந்தக் கோபாலர்கள் நம்பவில்லை. (10)

கிருஹபீடையென்ற சங்கை கொண்டயசோதை ப்ராம்ஹணர்களால் வேதமந்திரங்களைக் கொண்டு மங்களாசாஸனஞ் செய்விக்கப்பட்டதும் அழுகின்றதுமான புத்திரனை வாரிஎடுத்து ஸ்தன்யத்தைப் பானஞ்செய்வித்தாள். (11) கோபாலர்களால் எட்டு திக்குகளிலும் பலிபோட்டு பரிவாரத்துடன் முன்போலவே ஸ்தாபிக்கப்பட்ட குழந்தையை ப்ராம்ஹணர்கள் கிருஹஹோமாதிகளைச் செய்து தயிர் அக்ஷதம், (*)குசாம்பு இவற்றால் அர்ச்சித்தனர். (12) எவர் அஸூயை, பொய், தம்பம், பொறாமை, ஹிம்ஸை, அகம்பாவம் இவையற்றவர்களோ ஸத்யமான வொழுக்கமுள்ள அவர்களாற் செய்யப்பட்ட ஆசிர்வாதங்கள் பயனற்றனவாகா வன்றோ. (13) எனவெண்ணிக் கொண்டு மனதடக்கமுள்ள நந்தகோபர் குழந்தையை எடுத்துவைத்துக்கொண்டு ஸாமம் ருக் யஜுஸ் இவற்றால் ஜபிக்கப்பட்டனவும் பவித்ரமான ஔஷதிகளை யுடையனவுமான ஜலங்களால் ப்ராம்ஹணர்களைக் கொண்டு அபிஷேகஞ் செய்துவைத்து ஸ்வஸ்திவாசனத்தையும் சொல்லச் செய்து அக்னியில் ஹோமத்தையும் செய்வித்து அதிகம் குணம்வாய்ந்த அன்னத்தை ப்ராம்ஹணர்களுக்குப் போஜனம் செய்துவைத்தார். வஸ்திரம், பூமாலை, பொன்மாலை இவற்றையுடையனவும், நற்குணங்கள்யாவும் வாய்ந்தனவுமான பசுக்களைப் புத்திரனுடைய க்ஷேமத்துக்குவேண்டி தானஞ்செய்தார். அதைப்பெற்ற அவர்களும் ஆசிர்வதித்தனர்.

---

(*)மந்திரத்தைச் சொல்லிக்கொண்டு தர்ப்பையின் நுனியால் ஜலத்தைத் தெளித்தல் குசாம்பு எனப்படும்.

तिभ्यः प्रादाद्दनं महागुणम् ॥ १५ ॥ गावः सर्वगुणोपेता वासःस्रग्रुक्ममालिनीः। आत्मजाभ्युदयार्थाय प्रादात्ते चान्वयुञ्जत ॥ १६ ॥ विप्रा मन्त्रविदो युक्तास्तैर्याः प्रोक्तास्तथाशिषः। ता निष्फला भविष्यन्ति न कदाचिदपि स्फुटम् ॥ १७ ॥ एकदारोहमारूढं लालयन्ती सुतं सती। गरिमाणं शिशोर्वोढुं न सेहे गिरिकूटवत् ॥ १८ ॥ भूमौ निधाय तं गोपी विस्मिता भारपीडिता। महापुरुषमादध्यौ जगतामास कर्मसु ॥ १९ ॥ दैत्यो नाम्ना तृणावर्तः कंसभृत्यः प्रणोदितः। चक्रवातस्वरूपेण जहारासीनमर्भकम् ॥२०॥ गोकुलं सर्वमावृण्वन्मुष्णंश्चक्षूंषि रेणुभिः। ईरयन्सुमहाघोरशब्देन प्रदिशो दिशः ॥ २१ ॥ मुहूर्तमभवद्गोष्ठं रजसातमसावृतम्। सुतं यशोदा नापश्य-

---

மந்திரமறிந்தவர்களும் அவ்விதமே மனோஜயமுள்ளவர்களுமான ப்ராம்ஹணர்கள் எவர்களோ அவர்களால் எந்த ஆசிர்வாதங்கள் சொல்லப்பட்டனவோ அவை பயனற்றனவாக ஒருபொழுதும் ஆவதில்லை என்பது வெளிப்படையன்றோ?. (14–17)

ஒருநாள் மடியிலிருக்கும் குழந்தையை லாளனஞ்செய்து கொண்டிருக்கின்ற யசோதை மலையின் சிகரம் போன்ற குழந்தையின் பாரத்தைத் தாங்கமுடியாதவளானாள். பாரத்தால் பீடிக்கப்பட்ட யசோதை ஆஶ்சரியத்தை யடைந்து அக்குழந்தையைப் பூமியில் வைத்துவிட்டு மஹாபுருஷனைத் தியானித்தவளாய் பிராணிகளின் நடுவில் தனது வீட்டுக் காரியங்களி லீடுபட்டவளாயினாள். (18–19) திருணாவர்த்தன் என்ற பெயருடன் கூடினவனும், கம்ஸனது வேலைக்காரனும், அவனால் ஏவப்பட்டவனுமான அசுரன் சுழற்காற்றின் ஸ்வரூபத்துடன் கோகுலம் முழுவதையும் சூழ்ந்துகொண்டும், மண்பொடிகளால் கண்களை பார்வையிழந்தனவாகச் செய்துகொண்டும், மிக்கப் பெரியகோரமான சப்தத்தினால் ஆக்னேயாதியான கோணதிக்குகளையும், கிழக்கு முதலிய திக்குகளையும் எதிரொலிஇடும்படி செய்துகொண்டும், பூமியிலிருக்கும் குழந்தையை எடுத்துச் சென்றான். (20–21) ஒரு முஹூர்த்த காலம் சேரியானது பொடியினாலேற்பட்ட இருளினால் மறைக்கப்பட்டதாக வாயிற்று. எவ்விடத்தில் வைத்தாளோ அங்கு யசோதை புத்திரனைக் கண்டாளில்லை. திருணாவர்த்தனால் வாரியிரைக்கப்பட்ட நுட்பமான கற்பொடிகளினால் பீடிக்கப்பட்டு மிக்கமோஹத்

स्तस्मिन्न्यस्तवती यतः ॥२२॥ नापश्यत्कश्चनात्मानं परं चापि विमोहितः तृणावर्तनिसृष्टाभिः शर्कराभिरुपद्रुतः ॥ २३ ॥ इति खरपवनचक्रपांसुवर्षे सुतपदवीमबलाऽविलक्ष्य माता । अतिकरुणमनुस्मरन्त्यशोचद्भुवि पतिता मृतवत्सका यथा गौः ॥ २४ ॥ रुदितमनु निशम्य तत्र गोप्यो भृशमनुतप्तधियोऽश्रुपूर्णमुख्यः । रुरुदुरनुपलभ्य नन्दसूनुं पवन उपारतपांसुवर्षवेगे ॥ २५ ॥

तृणावर्तः शान्तरयो वात्यारूपधरो हरन् । कृष्णं नभोगतो गन्तुं नाशक्नोद्भूरिभारभृत् ॥ २६ ॥ तमश्मानं मन्यमान आत्मनो गुरुमत्तया । गले गृहीत उत्स्रष्टुं नाशक्नोदद्भुतार्भकम ॥ २७ ॥ गलग्रहणनिश्चेष्टो

யடைந்தவராய் ஒருவரும் தன்னையோ பிறரையோ அறிந்தாரில்லை (22-23) இவ்விதம் கடுமையான சுழற்காற்றினுல் புழுதி மழை உண்டானபொழுது புத்திரன் போனவழியைக் காணுது தாயான வள் மிக்ககருணையுடன் கூடியிருக்கும்படி இடைவிடாது(அதையே) நினைத்துக்கொண்டு இறந்தகன்றையுடைய பசுவானது போல பூமியில் விழுந்து சோகத்தை யடைந்தாள். (24) நந்தருடைய வீட்டிலுள்ள கோபிகைகள் யசோதையின் அழுகையைக் கேட்டு அனுதாபத்தை யடைந்த புத்தியையுடைவர்களாகவும் கண்ணீர் நிறைந்த முகமுள்ளவர்களாகவுமாகி காற்றுனது பொடிமழையின் வேகத்தைக்குறைத்துக் கொண்டதும், நந்தகோபரின் புத்திரனைக் காணுது அழத்தொடங்கினர். (25) சுழற்காற்றின் ரூபத்தைத் தரித்தவனும் கிருஷ்ணனை எடுத்துக்கொண்டு ஆகாசத்தை யடைந்த வனும் தனது சக்திக்குமீறின பாரத்தைத் தரித்தவனும், ஆனது பற்றியே ஓய்ந்த வேகமுள்ளவனுமான திருணவர்த்தன் அதற்கு மேற்கொண்டு செல்லச் சக்தியற்றவனுனன். (26) தன்னைக் காட்டிலும் அதிகமான கனமுள்ளதாயிருப்பதுபற்றி அக்குழந்தையை கற்பாறையென வெண்ணுகின்றவனும் குழந்தையினுல் கழுத்தில் பிடிக்கப்பட்டவனும் கொண்டு அத்புதமான அக்குழந்தையை விட்டுவிட எண்ணினுனயினும் அவ்விதம்செய்யச் சக்தியற்றவனுக ஆனுன். (27) கழுத்தை இறுக்கிப் பிடித்ததனுல் சேஷ்டையற்ற அசுரன் வெளியில் வந்தநேத்திர மாம்ஸபிண்டத்தை யுடையவனுகவும், தெளிவற்ற சப்தமுள்ளவனுகவும் ஆகி உயிரை யிழந்தவனுப்க்

दैत्यो निर्गतलोचनः । अव्यक्तरावो न्यपतत्सहबालो व्यसुर्व्रजे ॥ २८ ॥ तमन्तरिक्षात्पतितं शिलायां विशीर्णसर्वावयवं करालम् । पुरं यथा रुद्रशरेण विद्धं स्त्रियो रुदत्यो ददृशुस्समेताः ॥ २९ ॥ प्रदाय मात्रे प्रतिहृत्य विस्मिताः कृष्णं च तस्योरसि लम्बमानम् । तं स्वस्तिमन्तं पुरुषादनीतं विहायसा मृत्युमुखात्प्रमुक्तम् । गोप्यश्च गोपाः किल नन्दमुख्या लब्ध्वा पुनः प्रापुरतीव मोदम् ॥ ३० ॥ अहो बतात्यद्भुतमेष रक्षसा बालो निवृत्तिं गमितोऽभ्यगात्पुनः । हिंस्रः स्वपापेन विहिंसितः खलः साधुः समत्वेन

---

குழந்தையுடன் கூட கோகுலத்தில் விழுந்தான் (28) ஆகாசத்தி லிருந்து கற்பாறையில் விழுந்தவனும், ருத்திரனுடைய பாணத்தால் அடிக்கப்பட்ட த்ரிபுரப்போன்றவனும், நொறுங்கின எல்லா அவய வங்களை யுமுடையவனும், பயங்கரனுமான அந்தத்ருணுவர்த்தனை அழுகின்ற ஸ்திரீகள்யாவரும் ஒன்றுகூடினவர்களாய் கண்ணுற்ற னர். அவனுடையமாரில் தொங்குகின்ற கிருஷ்ணனையும் எடுத்துக் கொண்டு ஆஶ்சரியத்தை யடைந்தவர்களாய் தாயினிடம் திருப்பிக் கொடுத்து சந்தோஷத்தை யடைந்தனர். ஆகாசமார்க்கத்தினுல் அசுரனுல் கொண்டுபோகப் பட்டவரும் ஆயினும் யமன்வாயினின் றும் விடுபட்டவரும், க்ஷேமத்துடன் கூடினவருமான அந்தக்கிருஷ் ணனைத் திரும்பவுமடைந்து நந்தகோபரை முக்கியராகக்கொண்ட கோபலர்களும், கோபிகைகளும் அதிகமான சந்தோஷத்தை யடைந்தனர் அன்றோ. (29–30) இந்தக் குழந்தை ராக்ஷஸனுல் யமனையடைவிக்கப்படினுங்கூடத் திரும்பவும் பிழைத்து வந்துவிட் டான் என்பது இப்பொழுது பெரிய ஆஶ்சரியமன்றோ என்றனர். சிலர் பிறரை ஹிம்ஸிக்கின்ற துஷ்டனானவன் தனது பாபத்தினு லேயே கொல்லப்பட்டான். ஸாதுவானவன் எங்கும் ஸமத்வம் காட்டுவதன் மூலம் பயத்தினின்றும் விடுபடுகிறுன் என்றனர். (31) இறந்த குழந்தை திரும்பவுமே தைவவசமாகச் சொந்தபந்துக்க ளைச் சந்தோஷப்படுத்திக் கொண்டு வந்துவிட்டான் என்பதுயா துண்டோ இவ்விஷயமாக நம்மால் செய்யப்பட்ட தவந்தான் யாதோ? நாராயணனுடைய அர்ச்சனந்தான் யாதோ? (*)பூர்த்

---

(*) இரங்குகிணறு, ஸாதாரணகிணறு, குளம் இவற்றை வெட்டல் பூர்த்தமெனப்படும், பஞ்சமஹாயக்ஞம், அக்கினிஹோத்ரம் முதலியன

भयाद्विमुच्यते ॥ ३१ ॥ किं नस्तपश्चीर्णमधोक्षजार्चनं पूर्तेष्टदत्तमुत भूतसौहृदम् । यत्संपरेतः पुनरेव बालको दिष्ट्या स्वबन्धून्प्रणयन्नुपस्थितः ॥३२॥ दृष्ट्वा द्भुतानि बहुशो नन्दगोपो बृहद्वने । वसुदेववचो भूयो मानयामास विस्मितः ॥ ३३ ॥ एकदार्भकमादाय स्वाङ्कमारोप्य भामिनी । प्रस्नुतं पाययामास स्तनं स्नेहपरिप्लुता ॥ ३४ ॥ पीतप्रायस्य जननी सा तस्य रुचिरस्मितम् । मुखं लालयती राजञ्जृम्भतो ददृशे इदम् ॥ ३५ ॥ खं रोदसी ज्योतिरनीकमाशाः सूर्येन्दुवह्निश्वसनाम्बुधींश्च । द्वीपान्नगांस्तद्दुहितॄर्वनानि भूतानि यानि स्थिरजङ्गमानि ॥ ३६ ॥ सा वीक्ष्य विश्वं सहसा राजन्संजातवेपथुः । संमील्य मृगशावाक्षी नेत्रे आसीत्सुविस्मिता ॥३७॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्धे
तृणावर्तमोक्षो नाम सप्तमोऽध्यायः ॥ ७ ॥

---

தம், இஷ்டம், தானம்தான்யாதோ? ப்ராணிகள் விஷயத்திற் காட்டிய ப்ரேமைதான் யாதோ? (32) நந்தகோபர் கோகுலத்தில் வெகுவான அத்புதங்களைக் கண்டு ஆஶ்சரியத்தை யடைந்தவராய் வசுதேவருடைய வார்த்தையைத் திரும்பவும் கொண்டாடினர். (33)

ஒருநாள் சிறந்ததேஜஸ்ஸுள்ள யசோதை, குழந்தையை எடுத்து தனது மடியில் வைத்துக்கொண்டு ஸ்னேஹத்துடன் கூடினவளாய் பெருகுகின்ற முலைப்பாலைப் பருகச்செய்து கொண்டிருந்தாள். ஹேராஜன்! கொஞ்சிவிளையாடுகின்ற தாயான அந்த யசோதை பெரும்பாலும் ஸ்தனத்தைப்பானஞ் செய்து முடித்ததும் கொட்டாவிவிடுகின்றதுமான அக்குழந்தையினுடைய அழகிய புன்சிரிப்பையுடைய இந்தவாயைக் கண்ணுற்றாள். (34-35) அதில் ஆகாசத்தையும், த்யுலோகபூலோகங்களையும், நக்ஷத்திரக் கூட்டத்தையும், திக்குகளையும், சூரியன், சந்திரன், அக்கினி, வாயு, சமுத்திரம் இவைகளையும் தீவுகளையும், மலைகளையும், நதிகளையும், வனங்களையும், அசையுமசையாப்பொருளான பிராணிகள் எவையுண்டோ அவற்றையும் கண்டாள். (36) ஹேராஜன்! மான்குட்டியினுடையது போன்ற கண்களையுடைய அவள் விஶ்வத்தைக்

---

இஷ்டமெனப்படும். உத்தமபாத்திரத்தில் ப்ரதிப்ரயோஜனத்தைக் கருதாது செய்யும் தானம் தத்தம் எனப்படும்.

கண்ணுற்று உடனே நடுக்கத்தையடைந்தவளாயும், மிக்கவாப்சரி யத்தை யடைந்தவளாயுங்கொண்டு கண்களை மூடிக்கொண்டவளாக இருந்தாள். (37)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண
தசமஸ்கந்தபூர்வார்த்தத்தில் சகட திருணாவர்த்த மோக்ஷ
நிரூபணம் என்ற ஏழாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## நாராயணீயம்.

**कदापि जन्मर्क्षदिने तव प्रभो निमन्त्रितज्ञातिवधूमहीसुरा ।**
**महानसस्त्वां सविधे निधाय सा महानसादौ ववृते व्रजेश्वरी ॥ ५१ ॥**

(ப—ரை) **हेप्रभो**=ஹேப்ரபோ! **कदापि**=ஒருநாள் **तव**=உம்முடைய, **जन्मर्क्षदिने**=ஜன்மநக்ஷத்திரங்கூடின தினத்தில் **निमन्त्रितज्ञाति-वधूमहीसुरा**=அழைக்கப்பட்ட ஞாதிகள், அவர்களின் பெண்டீர் ப்ராம்ஹணர் இவர்களையுடையவளான **सा**=அந்த **व्रजेश्वरी**=கோகுலேப்வரியான யசோதையம்மாள், **त्वाम्**=உம்மை, **महानसः**=பெரியவண்டியினுடைய, **सविधे**=அருகில், **निधाय**=தொட்டிலில் தூங்கவிட்டு, **महानसादौ**=சமையலறைமுதலியவற்றில் **ववृते**=பிரவிருத்தித்தவளாக ஆனாள். (51)

**ततो भवत्त्राणनियुक्तबालकप्रभीतिसंक्रन्दनसंकुलारवैः ।**
**विमिश्रमश्रावि भवत्समीपतः परिस्फुटद्दारुचटच्चटारवः ॥ ५२ ॥**

(ப—ரை) **ततः**=பிறகு, **भवत्समीपतः**=உமக்கு அருகில் **परिस्फुट-द्दारुचटच्चटारवः**=நொறுங்குகின்ற கட்டைகளினின்று முண்டான சடசடவென்ற சப்தமானது, **भवत्त्राणनियुक्तबालकप्रभीतिसंक्रन्दनसंकु-लारवैः**=உம்முடைய ரக்ஷணவிஷயத்தில் ஏவப்பட்டவர்களானகோபபாலகர்களின் மிக்கபயத்தாலுண்டான மிக்ககூக்குரலடர்ந்த சப்தங்களுடன் **विमिश्रम्**=கலந்திருக்கும்படி **अश्रावि**=கேட்கப்பட்டது.

**ततस्तदाकर्णनसंभ्रमश्रमप्रकंपिवक्षोजभरा व्रजाङ्गनाः ।**
**भवन्तमन्तर्ददृशुस्समन्ततो विनिष्पतद्दारुणदारुमध्यगम् ॥ ५३ ॥**

(ப—ரை) **ततः**=பிறகு, **तदाकर्णनसंभ्रमश्रमप्रकंपिवक्षोजभराः**=அதைக்கேட்டதனாலும், பரபரப்பினாலும், தமதுவீட்டினின்றும் நந்தகோபருடைய வீட்டுக்கு நடந்ததனாலுண்டான ஸ்ரமத்தினாலும்

மிக்க அசைகின்ற ஸ்தனபாரத்தை யுடையவர்களான व्रजाङ्गनाः= கோபஸ்திரிகள் समन्ततः=சுற்றிலும்=विनिष्पतद्दारुणदारुमध्यगम्=விழுந்தபெரிய கட்டைகளின் நடுவிலிருக்கின்ற, भवन्तम्=உம்மை *अन्तः=உள்ளில் ददृशुः-கண்டனர். (53)

शिशोरहो ! किं किमभूदितिद्रुतं प्रधाव्य नन्दः पशुपाश्च भूसुराः ।
भवन्तमालोक्य यशोदया धृतं समाश्वसन्नश्रुजलार्द्रलोचनाः ॥ ५४ ॥

(ப-ரை) नन्दः=நந்தகோபரும், पशुपाश्च=மற்றுமுள்ள கோபாலர்களும், भूसुराः=ப்ராம்ஹணர்களும் , अहो!=அந்தோ ! शिशोः= குழந்தைக்கு किंकिमभूत्=என்னென்னவுண்டாயிற்றோ? इति=எனச் சொல்லிக்கொண்டு प्रधाव्य=ஒரேஓட்டமாக ஓடிவந்து यशोदया= யசோதையினால் धृतं=எடுக்கப்பட்ட भवन्तम्,=உம்மை, अवलोक्य= கண்ணுற்று, अश्रुजलार्द्रलोचनाः=கண்ணீரினால் நனைந்த நேத்திரமுள்ளவர்களாய்க்கொண்டு समाश्वसन्=ஒருவாறு ஸமாதானத்தை (தேறுதலை) அடைந்தனர்.

कस्कोनु कौतस्कुत एष विस्मयो विशंकटं यच्छकटं विपाटितम् ।
न कारणं किञ्चिदिहेति ते स्थिताः स्वनासिकादत्तकरास्त्वदीक्षकाः ॥५५॥

---

(*)இங்குள்ள "அந்த:" என்றபதத்துக்கு வீட்டின்உள்ளில் என நாராயணீய வியாக்கியானத்தில் பொருள் கூறப்பட்டிருக்கிறது. ஆயினும் ஸ்ரீபாகவதத்துக்கு ஸம்பிரதாயமறிந்தவர் கூறும் பொருள்படி பார்க்குங்கால் இங்குள்ள "அந்த:" என்பதை "ந்த்ருசு:" என்றபதத்துடன் சேர்த்துக்கொண்டு உள்ளிற் கண்டனர். அதாவது :—மனத்தில் பகவத்விஷய மானகவலை கொண்டனர் எனப்பொருள் கூறலாமெனப்படுகிறது. ஆனால் யசோதை குழந்தையை மங்களஸ்னனம் செய்வித்து வீட்டினுள்ளில் ஓர் தொட்டிலில் படுக்கவிட்டதாகவும், அத்தொட்டிலுக்குமேல் சின்னவண்டி தொங்கிக்கொண்டிருந்ததாகவும், அவ்வண்டியில் அஸுரன் மறைந்திருப்பதைக்கண்ட பகவான் அதைக்காலால் உதைக்க அதுநொறுங்கி தொட்டிலுக்குச் சுற்றிலும் விழுந்ததாகவும் சிலர் கூறுகின்றனர். அவ்விதமாயின் நாராயணீயத்திலுள்ள "அந்த:" என்ற பதத்துக்கு வீட்டினுள்ளில் என்று கூறியபொருள் பொருத்தமாகலாம். அங்ஙனமாயின் ஸ்ரீபாகவதத்தில் "வித்வஸ்த நாநாரஸகுப்யபாஜனம்" என்று கூறியதின் பொருள் எவ்விதம் பொருந்துமென ஸம்பிரதாயமறிந்த பெரியார்களையறிந்தறிந்துகொள்க,

(ப—ரை) एषः=இது कस्कोनु=என்னென்னவோ, विस्मयः=ஆச்சரியமாகவிருக்கிறது. कौतस्कुतः = எங்கிருந்து உண்டாயிற்று यत्=எதனால் विशंकटम्=பெரிதான शकटम्=வண்டியானது, विपाटितम्=நொறுங்கிற்று. इह=இவ்விஷயத்தில் कारणम्=காரணமானது नकिञ्चित्=ஒன்றும் காணவில்லையே? इति=என तेतु=அவர்களோ त्वदीक्षकाः=உம்மையே பார்த்துக்கொண்டும், स्वनासिकादत्तकराः=தமது மூக்கில் விரலைவைத்துக்கொண்டும் स्थिताः=திகைத்து நின்றனர். (55) (எ—று)

कुमारकस्यास्य पयोधरार्थिनः प्ररोदने लोलपदांबुजाहतम् ।
मया मया दृष्टमनो विपर्यगादितीश ते पालकबालका जगुः ॥ ५६ ॥

(ப—ரை) अस्य=இந்த कुमारकस्य=சின்னக் குழந்தை पयोधरार्थिनः=பால்குடிக்க வெண்ணங்கொண்டு प्ररोदने=அழுங்கால் अनः=வண்டியானது, लोलपदांबुजाहतम् = அசைந்த பாதாம்புஜத்தினால் அடிக்கப்பட்டதாய்க் கொண்டு, विपर्यगात्=கவிழ்ந்துவிட்டது. मया=என்னால் दृष्टम्=பார்க்கப்பட்டது, मया=என்னால், दृष्टम्=பார்க்கப்பட்டது, इति=என ईश=ஹேப்ரபோ! ते=அந்த, पालकबालकाः=ரக்ஷகர்களானகுழைந்தைகள், जगुः=சொல்லினர் (56) (எ—று)

भिया तदा किञ्चिदजानतामिदं कुमारकाणामतिदुर्घटं वचः ।
भवत्प्रभावाविदुरैरितीरितं मनागिवाशङ्क्यत दृष्टपूतनैः ॥ ५७ ॥

(ப—ரை) तदा=அப்பொழுது, भिया=பயத்தினால், किञ्चित्=ஒன்றையும் अजानताम्=அறியாதவர்களான कुमारकाणाम्=குழந்தைகளுடைய, इदम्=இந்த, वचः=வார்த்தையானது, अतिदुर्घटम्=மிக்கப் பொருத்தமற்றதாகவிருக்கிறது, इति=என भवत्प्रभावाविदुरैः=உமது மஹிமையை யறியாதவர்களினால்ईरितम्=சொல்லிக்கொள்ளப் பட்டது. दृष्टपूतनैः=பூதனையை நேரில்கண்ட நந்தர் உபநந்தர் முதலியோராலோ मनागिव=கொஞ்சம்போல अशङ्क्यत ஆசங்கைகொள்ளப் பட்டது (குழந்தைகள் சொல்லுகிறபடி நடந்துமிருக்கலாமென எண்ணப்பட்டது). (57) (எ—று)

प्रवालताम्रं किमिदं पदं क्षतं सरोजरम्यौ नु करौ विरोजितौ ।
इति प्रसर्पत्करुणातरङ्गितास्त्वदङ्गमापस्पृशुरङ्गनाजनाः ॥ ५८ ॥

(ப-ரை) अङ्गनाजनाः=ஸ்திரீஜனங்கள், प्रवालताम्रम्=தளிர்போலநாலாபக்கத்திலும் சிவந்த, इदम्,=இந்த, पदम्=சரணமானது क्षतंकिम्=காயப்பட்டிருக்குமோ? सरोजरम्यौ தாமரஸபுஷ்பங்களைக் காட்டிலும் அழகிய करौ=கைகள், विरोजितौ ननु=புண்பட்டிருக்குமோ? इति=என प्रसर्पत्करुणातरङ्गिताः பெருகின கருணைநிரம்பினவர்களாய்க்கொண்டு त्वदङ्गम्=உமது சரீரத்தை आपस्पृशुः=நாலாபக்கத்திலும் மெள்ளமெள்ளத் தொட்டுப்பார்த்தனர். (58) (எ-று)

अये सुतं देहि जगत्पतेः कृपातरङ्गपातात्परिपातमद्य मे ।
इति स्म संगृह्य पिता त्वदङ्गकं मुहुर्मुहुः श्लिष्यति जातकण्टकः ॥ ५९ ॥

(ப-ரை) ,अये! அடே! (இஃதென்னை) जगत्पतेः=நாராயணனுடைய कृपातरङ्गपातात्=கருணையலையின் ஸம்பந்தத்தினால் अद्य= இச்சமயம், परिपातम्=பலவழியிலும் காப்பாற்றப்பட்ட, सुतम्=புத்திரனை, मे=என்னிடம், देहि=கொடு, इति=என்றுசொல்லிக்கொண்டு पिता=நந்தகோபர், संगृह्य=உம்மைப்பெற்று, जातकण्टकः=சரீரத்திலுண்டான மயிர்க்குச்சலையுடையவராய் त्वदङ्गकम्=உமது உடம்பை, मुहुर्मुहुः=அடிக்கடி, श्लिष्यति स्म=தழுவிக்கொண்டார். (59) (எ-று)

अनोनिलीनः किल हन्तुमागतस्सुरारिरेवं भवता विहिंसितः ।
रजोऽपि नो दृष्टममुष्य तत्कथं स शुद्धसत्वे त्वयि लीनवान् ध्रुवम् ॥ ६० ॥

(ப-ரை)अनोनिलीनः=வண்டியில் மறைந்தவனாய், हन्तुम्=கொல்லவேண்டி, आगतः=வந்த, सुरारिः किल=அசுரனன்றோ, एवम्=இவ்விதம் भवता=உம்மால், विहिंसितः=கொல்லப்பட்டான் என்கின்றனர். अमुष्य=இவனுடைய रजोऽपि=பொடியளவான சரீரங்கூட, नोदृष्टम्=காணப்படவில்லையே? तत्=அது, कथम्=எப்படி? என வாசங்கித்துப்பிறகு सः=அந்த அசுரன் சரீரத்துடன்கூடவே शुद्धसत्वे சுத்தஸத்வமூர்த்தியான, त्वयि=உம்மிடத்தில், लीनवान्=மறைந்தானென ध्रुवम्=நிச்சயிக்கிறேன். (ரஜஸ்ஸே காணப்படாதபொழுது தமஸ்ஸுக்கு இடமேது? ஆகவே ரஜஸ்தமஸ் இரண்டுமே இல்லாதபொழுது சுத்தஸத்வவிக்ரஹரான உம்மிடத்தில் ஒடுங்கிவிட்டான் என்பது பொருத்தமானதே என்பதுகருத்து) (60) (எ-று)

प्रपूजितैस्तत्र ततो द्विजातिभिर्विशेषतो लंभितमङ्गलाशिषः ।
व्रजं निजैर्बाल्यरसैर्विमोहयन्मरुत्पुराधीश रुजां जहीहि मे ॥६१ ॥

(ப-ரை) ततः=பிறகு तत्र=அவ்விடத்தில், प्रपूजितैः=மிக்கப்பூஜிக்கப்பட்ட द्विजातिभिः=ப்ராம்ஹணர்களினால், विशेषतः=அதிகமாக, लंभितमङ्गलाशिषः=அடைவிக்கப்பட்ட மங்களாசிர்வாதத்தையுடையவரும் निजैः=சொந்தமான, बाल्यरसैः=பால்யலீலா ரஸங்களினால் व्रजम्=கோகுலத்தை, विमोहयन्=மயங்கச்செய்கின்றவருமான त्वम्=நீர், मरुत्पुराधीश!=குருவாயூரில் வஸிக்குமீப்வரரே! मे=என்னுடைய, रुजाम्=வாதரோகத்தை, जहीहि=போக்குவீராக (61)

சகடாஸுரவதவர்ணம் என்ற நாற்பத்திரண்டாவது
தசகம் முற்றிற்று.

—•◦❀◦•—

त्वामेकदा गुरुमरुत्पुरनाथ वोढुं गाढाधिरूढगरिमाणमपारयन्ती ।
माता निधाय शयने किमिदं बतेति ध्यायन्त्यचेष्टत गृहेषु निविष्टशंका ॥

(ப-ரை) हेगुरुमरुत्पुरनाथ!=குருவாயூரில் வஸிக்கும் நாத! एकदा=ஒரு நாள், गाढाधिरूढगरिमाणम्=அதிகமாகவேற்பட்ட கனத்தையுடைய, त्वाम्=உம்மை, वोढुम्=சுமப்பதற்கு, अपारयन्ती=முடியாதவளாகவான, माता=தாயானயசோதை, शयने=படுக்கையில், निधाय=உம்மைவிட்டு, बत=இதுபோழ்துண்டான इदम्=இது, किम्=என்னே? इति=என निविष्टशङ्का=சித்தத்திலேற்பட்ட சங்கையையுடையவளாய் ध्यायन्ती=உம்மையே மனத்தாலெண்ணிக்கொண்டு गृहेषु=வீட்டில் अचेष्टत=வேலைசெய்யத் தொடங்கினாள். (62) (எ-று)

तावद्विदूरमुपकर्णित घोरघोषव्याजृंभिपांसुपटलीपरिपूरिताशः ।
वात्यावपुः स किल दैत्यवरस्तृणावर्ताख्यो जहार जनमानसहारिणं त्वाम्

(ப-ரை) तावत्=அவ்வளவுக்குள், विदूरमुपकर्णितघोरघोषव्याजृंभिपांसुपटलीपरिपूरिताशः=வெகுதூரம் கேட்கப்பட்ட கோரமான கோஷத்தினாலும், விருத்தியடைகின்ற பொடிகளின் கூட்டத்தினாலும் நாலாபக்கத்திலும் நிரப்பப்பட்ட திக்குகளையுடையவனும், वात्यावपुः=சுழற்காற்றின் சரீரமெடுத்தவனும், तृणावर्ताख्यः=த்ருணாவர்த்தன் எனப் பெயருள்ளவனுமான सः=அந்த, दैत्यवरः किल=அஸுர சிரேஷ்டனேவெனில், जनमानसहारिणम्=ஜனங்களின் மனத்தைக் கொள்ளைகொள்ளுகின்ற त्वाम्=உம்மை, जहार=எடுத்துக்கொண்டான். (63) (எ-று)

**उद्दामपांसुतिमिराहतदृष्टिपाते द्रष्टुं किमप्यकुशले पशुपाललोके ।**
**हा बालकस्य किमिति त्वदुपान्तमाप्ता माता भवन्तमविलोक्य भृशं रुरोद**

(ப-ரை) पशुपाललोके=பசுக்களைமேய்க்கும் ஜனமானது, उद्दामपांसुतिमिराहतदृष्टिपाते=அதிகமான புழுதியினலேற்பட்ட இருளினுல் கெடுக்கப்பட்ட கண்களின் பார்வையை யுடையதாகவும், किमपि=எதையும் द्रष्टुम्=பார்ப்பதற்கு अकुशले=முடியாததாகவும் இருக்கும்பொழுது माता=யசோதையானவள் हा!=ஹா! बालकस्य=குழந்தைக்கு किमिति=என்னவந்துவிட்டது எனச்சொல்லிக்கொண்டு त्वदुपान्तम्=உமது ஸமீபத்தை आप्ता=அடைந்தவளாய், भवन्तम्=உம்மை, अविलोक्य=அங்கு காணுது भृशम्=மிகவும், रुरोद=அழுதாள்.

**तावत्स दानववरोऽपि च दीनमूर्तिर्भावत्कभारपरिधारणलूनवेगः ।**
**संकोचमाप तदनु क्षतपांसुघोषे घोषे व्यतायत भवज्जननीनिनादः ॥ ६५ ॥**

(ப-ரை) तावत्=அவ்வளவுக்குள், सः=அந்த, दानववरोऽपि=அஸுர ஶ்ரேஷ்டனுங்கூட, दीनमूर्तिः=களைத்த சரீரமுள்ளவனும், भावत्कभारपरिधारणलूनवेगः=உம்முடையதான பாரத்தைத் தூக்குவதால் குறைந்த வேகத்தையுடையவனுகவும் (ஆகி) संकोचमाप=அசைவற்றிருத்தலை அடைந்தான். तदनु=அதற்குப் பிறகு क्षतपांसुघोषे=நஷ்டமானபொடிகள் சப்தம் இவற்றையுடையதான घोषे=இடைச்சேரியில், भवज्जननीनिनादः=உன் தாயான யசோதை யழும் சப்தமானது, व्यतायत=எங்கும் பரவினதாகவாயிற்று. (65) (எ-று)

**रोदोपकर्णनवशादुपगम्य गेहं क्रन्दत्सु नन्दमुखगोपकुलेषु दीनः ।**
**त्वां दानवस्त्वखिलमुक्तिकरं मुमुक्षुः त्वय्यप्रमुञ्चति पपात वियत्प्रदेशात्॥**

(ப-ரை) नन्दमुखगोपकुलेषु=நந்தகோபர் முதலிய கோபாலர்களின் கூட்டமானது रोदोपकर्णनवशात्=யசோதையின் அழுகுரல் கேட்டதன் காரணமாக, गेहम्=அவளது வீட்டை उपगम्य=அடைந்து क्रन्दत्सु=கதறுங்கால், अखिलमुक्तिकरम्=எல்லா ஜீவர்களுக்கும் முக்தியைத்தருகின்ற त्वाम्=உம்மை, मुमुक्षुः=விடுவிக்கவெண்ணங்கொண்ட दानवस्तु=அஸுரனே, त्वयि=நீர், अप्रमुञ्चति=விடாதபொழுது, दीनः=உயிரையிழந்தவனுய், वियत्प्रदेशात्=ஆகாசப்ரதேசத்தினின்றும் पपात=கீழே விழுந்தான். (66) (எ-று)

रोदाकुलास्तदनु गोपगणा बहिष्ठपाषाणपृष्ठभुवि देहमतिस्थविष्ठम् ।
प्रैक्षन्त हन्त निपतन्तममुष्य वक्षस्यक्षीणमेव च भवन्तमलं हसन्तम् ॥६७॥

(ப-ரை) तदनु=பிறகு रोदाकुलाः=அழுதாகலங்கின, गोपगणाः=கோபாலர்களின் கூட்டங்கள் बहिष्ठपाषाणपृष्ठभुवि=வெளியிலிருக்கும் கற்பாறையின் மேல்பிரேதசத்தில் अतिस्थविष्ठम्=மிக்கப்பெரிதான देहम्=திருணாவர்த்தனுடைய சரீரத்தையும், अमुष्य=இவனுடைய वक्षसि=மார்பில் अक्षीणमेव = எவ்விதக் குறைவுமேயில்லாதவரும் अलम्=மிகவும், हसन्तम्=சிரிக்கின்றவருமான भवन्तं च=உம்மையும் प्रैक्षन्त=கண்டனர். (67) (எ-று)

ग्रावप्रपातपरिपिष्टगरिष्ठदेहभ्रष्टासुदुष्टदनुजोपरि धृष्टहासम् ।
आघ्नानमंबुजकरेण भवन्तमेत्य गोपा दधुर्गिरिवरादिव नीलरत्नम् ॥ ६८ ॥

(ப-ரை) ग्रावप्रपातपरिपिष्टगरिष्ठदेहभ्रष्टासुदुष्टदनुजोपरि = கற்பாறையில் விழுதலினால் நாலா பக்கத்திலும் பொடியாக்கப்பட்ட பெரிய தேஹத்தினின்றும் விலகின ப்ராணன்களையுடைய துஷ்டனான அஸுரனுடைய மேலில் अंबुजकरेण=தாமரஸ புஷ்பம்போன்ற கையினால் आघ्नानम्=அடிக்கின்றவரும், ஆனதுபற்றியே धृष्टहासम्=பொய் சிரிப்புடன் கூடினவருமான, भवन्तम्=உம்மை, एत्य=அடைந்து, गिरिवरात्=பெரிய மலையினின்றும் नीलरत्नमिव=நீலரத்தினத்தைப் போல गोपाः=கோபாலர்கள், दधुः=எடுத்துக் கொண்டனர். (68)

एकैकमाशु परिगृह्य निकामनन्दन्नन्दादिगोपपरिरब्धविचुंबिताङ्गम् ।
आदातुकामपरिशङ्कितगोपनारीहस्तांबुजप्रपतितं प्रणुमो भवन्तम् ॥ ६९ ॥

(ப-ரை) एकैकम्=மெதுவான கரசரணாதிகளுள் ஒவ்வொரு அங்கத்தையும் आशु=சீக்கிரமாக, परिगृह्य=பிடித்துக்கொண்டு निकामनन्दन्नन्दादिगोपपरिरब्धविचुंबिताङ्गम्=மிக்க ஸந்தோஷித்த நந்தகோபர் முதலிய கோபாலர்களால் ஆலிங்கனஞ் செய்யப்பட்டதும், முத்தமிடப்பட்டதுமான அங்கங்களையுடையவரும், आदातुकामपरिशंकितगोपनारीहस्तांबुजप्रपतितम्=தன்னை எடுக்கவிரும்புகின்றவர்களும், குழந்தைக்கு என்ன வந்துவிட்டதோ என சங்கையையடைந்தவர்களுமான கோப ஸ்த்ரீகளின் தாமரஸ புஷ்பம்போன்ற கைகளில் தாவி விழுந்தவருமான भवन्तम्=உம்மை, प्रणुमः=ஸ்துதிக்கின்றோம்

**भूयोऽपि किन्नु कृणुमः प्रणतार्तिहारी गोविन्द एव परिपालयतात्सुतं नः।**
**इत्यादिमातरपितृप्रमुखैस्तदानीं संप्रार्थितस्त्वदवनाय विभो ! त्वमेव ॥**

(ப–ரை) **भूयोऽपि**=திரும்பவுமே (இத்தகைய ஆபத்து என் கண்ணனுக்கு வந்தால்) **किन्नुकृणुमः**=நாம் என்ன செய்வோம். **प्रणतार्तिहारी**=பக்தர்களுக்குவரும் ஆபத்தைப் போக்குமியல்பையுடைய **गोविन्द एव**=ஸ்ரீமந்நாராயணனே, **नः**=நமது **सुतम्**=குழந்தையை, **परिपालयतात्**=ஆபத்தைப் போக்கிக் காக்கக்கடவர் **इत्यादि**=என்றதாதியாக, **हेविभो !**=ஓய் ப்ரபுவான கிருஷ்ண ! **तदानीम्**=அப்பொழுது **मातरपितृप्रमुखैः**=தாய் தந்தையர் முதலியவர்களால் **त्वदवनाय**=உமது ரக்ஷணத்துக்குவேண்டி **त्वमेव**=நீரே, **संप्रार्थितः**=நன்கு வேண்டப்பட்டீர். (70) (எ–று)

**वातात्मकं दनुजमेवमयि प्रधून्वन् वातोद्भवान्मम गदान् किमु नो धुनोषि।**
**किंवा करोमि पुनरप्यनिलालयेश निश्शेषरोगशमनं मुहुरर्थये त्वाम्॥७१॥**

(ப–ரை) **अयि ! अनिलालयेश !**=ஓய் ! குருவாயூரில் வசிக்குமீசனே ! **वातात्मकम्**=சுழற்காற்று ரூபமான **दनुजम्**=அஸுரனை **एवम्**=இவ்விதம், **प्रधून्वन्**=நாசஞ்செய்த நீர் **वातोद्भवान्**=வாதமூலமுண்டான, **मम**=என்னுடைய, **गदान्**=ரோகங்களை **नो धुनोषि**=போக்குகின்றீரில்லை. **किमु**=அதற்குக் காரணமென்னை? உனது ப்ராரப்த கர்ம வசத்தால் போக்கவில்லையென்பீரேல்? **किंवाकरोमि**=அதற்கு நான் என்னசெய்வேன், **निश्शेषरोगशमनम्** = எல்லாவிதமான (வெளியில் வாதாதிரூபமானதும் உள்ளில் ராகாதி ரூபமானதுமான) ரோகங்களின் நாசத்தைக் குறித்து **मुहुः**=அடிக்கடி, **त्वाम्**=உம்மையே, **अर्थये**=வேண்டுகிறேன். (71) (எ–று)

திருணாவர்த்தவத வர்ணனம் என்ற நாற்பத்து மூன்றாவது
தசகம் முற்றிற்று.



## எட்டாவது அத்தியாயம்.

(அ–கை) **अष्टमे नामकर्मास्य बालक्रीडाकुतूहले।**
**मृद्भक्षणाभियोगे च विश्वरूपं निरूप्यते।**
**विश्वरूपादिबालस्य निशम्याशंकिनः पितुः।**
**नामकृद्गर्गवाक्येन निजं तत्वमसूसुचत्।**

## अथ अष्टमोऽध्यायः ॥

श्रीशुक उवाच—गर्गः पुरोहितो राजन्यदूनां सुमहातपाः । व्रजं जगाम नन्दस्य वसुदेवप्रचोदितः ॥ १ ॥ तं दृष्ट्वा परमप्रीतः प्रत्युत्थाय कृताञ्जलिः । आनर्चाधोक्षजधिया प्रणिपातपुरःसरम् ॥ २ ॥ सूपविष्टं कृतातिथ्यं गिरा सूनृतया मुनिम् । नन्दयित्वाब्रवीद्ब्रह्मन्पूर्णस्य करवाम किम् ॥ ३ ॥ महद्विचलनं नृणां गृहिणां दीनचेतसाम् । निःश्रेयसाय भगवन्कल्पते नान्यथा क्वचित् ॥ ४ ॥ ज्योतिषामयनं साक्षाद्यत्तज्ज्ञानमती-

---

(க—ரை) இந்த எட்டாவது அத்தியாயத்தில் நாமகரணமும், பாலக்ரீடா குதூஹலத்திலும், மிருத்பக்ஷண ஸம்பந்தத்திலும் இவருடைய விஸ்வரூபமும் நிரூபணஞ் செய்யப்படுகிறது. குழந்தையினுடையவிஸ்வரூபாதிகளைக் கேட்டு ஆசங்கைகொண்ட பிதாவுக்கு நாமகரணஞ் செய்த கர்க்கரது வார்த்தையினல் சொந்தமான தத்துவத்தையும் சூசிப்பித்தார்.

ஸ்ரீசுகர் சொல்லுகிருர்—ஹேராஜன்! யாதவர்களுக்குப் புரோஹிதரும் மிக்கமஹாதபஸ்வியுமான கர்க்கர் வசுதேவரால் அனுப்பப்பட்டு நந்தருடைய கோகுலத்தை யடைந்தார். (1) அவரைக் கண்டு மிக்கப்ரீதியை யடைந்தவராய் எழுந்து இருகைகளையும் கூப்பிக்கொண்டு தாழ்ந்தவணக்கத்தை முன்னிட்டு நாராயணன் என்றபுத்தியுடன் பூஜித்தார் (2) நன்கு ஆஸனத்திலுட்கார்ந்தவரும் செய்யப்பட்ட ஆதித்யத்தை யுடையவருமான முனியை ப்ரியமானவார்த்தையினல் சந்தோஷப்படுத்தி "ஹேப்ரம்ஹன்! பூர்ணரான தங்களுக்கு (நாங்கள்) எதைச் செய்வோம். (3) ஹேபகவன்! மஹான்கள் தமது ஆஸ்ரமத்தினின்றும் வேறிடத்துக்குச் செல்லுவதானது தாழ்மையான புத்தியையுடையவர்களும் (க்ஷணகாலங்கூட வீட்டைவிட்டு விலகச் சக்தியற்றவர்களும்) குடும்பிகளுமான மனிதர்களின் க்ஷேமத்தையும் பொருட்டு ஆகுமேயொழிய வேறுவிதமாக ஒருபொழுதுமாகாது. (4) இந்திரியங்களுக்கெட்டாத அறிவைத்தரும் ஜ்யோதிஷாமயனம் என்ற யாதொரு சோதிட சாஸ்திரமுண்டோ அது நேரில் உம்மால் செய்யப்பட்டிருக்கிறது. எதன் மூலம் வேறு மனிதன் கூட முந்தின பிறவி

न्द्रियम् । प्रणीतं भवता येन पुमान्वेद परावरम् ॥ ५ ॥ त्वं हि ब्रह्मविदां श्रेष्ठः संस्कारान्कर्तुमर्हसि । बालयोरनयोर्नॄणां जन्मना ब्राह्मणो गुरुः ॥६॥ गर्ग उवाच—यदूनामहमाचार्यः ख्यातश्च भुवि सर्वदा । सुतं मया संस्कृतं ते मन्यते देवकीसुतम् ॥ ७ ॥ कंसः पापमतिः सख्यं तव चानकदुन्दुभेः । देवक्या अष्टमो गर्भो न स्त्री भवितुमर्हति ॥ ८ ॥ इति संचिन्तयन् श्रुत्वा देवक्या दारिकावचः । अपि हन्ताऽऽगताशङ्कस्तर्हि तन्नोऽनयो भवेत् ॥ ९. ॥ नन्द उवाच—अलक्षितोऽस्मिन्रहसि मामकैरपि गोव्रजे । कुरु द्विजातिसंस्कारं स्वस्तिवाचनपूर्वकम् ॥ १० ॥

---

யிற் செய்த கர்மத்தையும் இப்பிறவியில் இனிவரும் பலனையும் அறிந்து விடக்கூடுமன்றோ. (5) ப்ரம்ஹவித்துக்களுக்குள் ஶ்ரேஷ்டரான நீர் இவ்விருபாலர்களுக்கும் நாமகரணம் முதலிய ஸம்ஸ்காரங்களைச் செய்யத் தகுதியுடையவராகிறீர். மனிதர்கட்குப் பிறவியினால் ப்ராம்ஹணன் குருவன்றோ'' என்றார். (6) கர்க்கர்—"நான் யாதவர்களின் ஆசாரியன். எப்பொழுதும் பூமியில் ப்ரஸித்தனுமாவேன். ஆகவே என்னால் நாமகரணாதி ஸம்ஸ்காரத்தைச் செய்விக்கப்பட்ட உமது புத்திரனைக் கம்ஸன் தேவகியின் புத்திரனெனக் கல்பித்து விடுவான். பாபத்தில் புத்தியுள்ள கம்ஸன் "என்னைக் கொல்லுவதால் யாதுபயன்" எனத் தேவகியின் பெண் சொன்ன வார்த்தையைக் கேட்டு தேவகியின் எட்டாவது கர்ப்பம் பெண்ணாக விருக்கமுடியாது என வாலோசிக்கின்றவனாய் (பொதுவாய் எங்கேயோ இருக்கவேண்டும் எனவெண்ணி) உமக்கும் வஸுதேவருக்குமுள்ள ஸக்கியத்தையும் ஆலோசித்துக் கொண்டு (உமது வீட்டிற்றானிருக்க வேண்டுமென ஊஹித்து என்னால் பெயரிடப்பட்டதைக் கொண்டு) ஆசங்கையை யடைந்தவனாய்க் கொன்றுவிடுவானேல் அப்பொழுது அது நமக்கு அன்னியாயமாகவாகிவிடும்'' என்றார். (7–8) நந்தகோபர்—"இந்தக் கோகுலத்தில், அதிலும் ரஹஸ்யத்தில், என்னைச் சேர்ந்தவர்களினாலுங்கூட அறியப்படாதவராய்க் கொண்டு த்விஜாதி (இருபிறப்பாளர்) களுக்குரிய ஸம்ஸ்காரத்தைமட்டும் கேவலம் ஸ்வஸ்திவாசன பூர்வகமாகச் செய்வீராக'' என்றார். (10)

श्रीशुक उवाच--एवं संप्रार्थितो विप्रः स्वचिकीर्षितमेव तत् । चकार नामकरणं गूढो रहसि बालयोः ॥ ११ ॥ गर्ग उवाच--अयं हि रोहिणीपुत्रो रमयन्सुहृदो गुणैः । आख्यास्यते राम इति बलाधिक्याद्बलं विदुः । यदूनामपृथग्भावात्संकर्षणमुशन्त्युत ॥ १२ ॥ आसन्वर्णास्त्रयो ह्यस्य गृह्णतोऽनुयुगं तनूः । शुक्लो रक्तस्तथा पीत इदानीं कृष्णतां गतः ॥ १३ ॥ प्रागयं वसुदेवस्य क्वचिज्जातस्तवात्मजः । वासुदेव इति श्रीमानभिज्ञाः संप्रचक्षते ॥ १४ ॥ बहूनि संति नामानि रूपाणि च सुतस्य ते । गुणकर्मानुरूपाणि तान्यहं वेद नो जनाः ॥ १५ ॥ एष वः श्रेय आधास्यद्

---

ஸ்ரீசுகர்—'இவ்விதம் நன்குப்ப்ரார்த்திக்கப்பட்ட ப்ராம்ஹணரான கர்க்கர் ரஹஸ்யத்தில் மறைந்திருந்து தன்ஞற் செய்யவிரும்பப்பட்டதாகவேயுள்ள அந்த நாமகரணத்தைக் குழந்தைகளுக்குச் செய்தார்' என்ருர். (11) கர்க்கர்—"இந்த ரோஹிணீபுத்திரனே குணங்களினுல் ஸுஹ்ருத்துக்களை ரமிக்கச்செய்துகொண்டு ராமனென்று சொல்லப்படப் போகிருன். பலம் அதிகமாக விருப்பதிலிருந்து பலன் என்றும் இவனையறிவர். யாதவர்களுக்கு ஐகமத்யத்தை யுண்டாக்குவதுபற்றி ஸங்கர்ஷணனென்றும் இவரைச் சொல்லப்போகின்றனர்.(1) (12) ஒவ்வொரு யுகந்தோறும் சரீரங்களை எடுக்கின்ற இந்த உமது புத்திரனுக்கு வெளுப்பு, அதுபோலச் சிவப்பு, பொன்னிறம் என்ற மூன்று நிறங்கள் இருந்தன. இப்பொழுது (2)கிருஷ்ண (கரு) நிறத்தையடைந்தான். இந்த உமதுபுத்திரன் முன்னர் ஒருஸமயத்தில் வஸுதேவருக்குப் பிறந்தான். ஆகவே இவனை அறிஞர் ஸ்ரீமான் வாசுதேவன் எனச்சொல்லுகின்றனர். உமது புத்திரனுக்கு குணம் கர்மம் இவற்றுக்கு அனுரூபங்களான வெகுபெயர்களும் ரூபங்களுமிருக்கின்றன. அவற்றைநான் அறிவேன். ஜனங்களறியார். கோபர் கோகுலம் இவற்றைச் சந்தோஷப்படுத்தும் இக்குழந்தை உங்களுக்கு ஶ்ரேயஸ்ஸைத் தரப்போகின்றது. இதனுல் நீங்கள் எல்லாக்கஷ்டங்களை

---

(1) கர்ப்பம் இழுக்கப்பட்டதென்ற கதையைக் கர்க்கர்வேண்டுமென்றே மறைத்துவிட்டார். (2) ஆகவே கிருஷ்ணன் என ஒருபெயர் இவருக்குண்டு.

गोपगोकुलनन्दनः । अनेन सर्वदुर्गाणि यूयमञ्जस्तरिष्यथ ॥ १६ ॥ पुरानेन व्रजपते साधवो दस्युपीडिताः । अराजके रक्ष्यमाणा जिग्युर्दस्यून्समेधिताः ॥ १७ ॥ य एतस्मिन्महाभागाः प्रीतिं कुर्वन्ति मानवाः । नारयोऽभिभवन्त्येतान्विष्णुपक्षानिवासुराः ॥ १८ ॥ तस्मान्नन्दात्मजोऽयं ते नारायणसमो गुणैः । श्रिया कीर्त्यानुभावेन गोपायस्व समाहितः ॥ १९ ॥ श्रीशुक उवाच—इत्यात्मानं समादिश्य गर्गे च स्वगृहं गते । नन्दः प्रमुदितो मेने आत्मानं पूर्णमाशिषाम् ॥ २० ॥

कालेन व्रजताल्पेन गोकुले रामकेशवौ । जानुभ्यां सह पाणिभ்யां रिङ्गमाणौ विजह्रतुः ॥ २१ ॥ तावङ्घ्रियुग्ममनुकृष्य सरीसृपन्तौ घोषप्रघो-

---

யும் நன்கு கடக்கப்போகின்றீர்கள். ஹேவ்ரஜபதே! முன்னொருக்கால் ராஜனில்லாதபொழுது *தஸ்யுக்களால் (நாஸ்திகர்களால்) பீடிக்கப்பட்ட ஸாதுக்கள் இந்தக் கிருஷ்ணனால் ரக்ஷிக்கப்படுகின்றவர்களாகவும், வளர்க்கப்பட்டவர்களாகவு மிருந்துகொண்டு தஸ்யுக்களை (நாஸ்திகர்களை) ஜயித்தனர். மஹாபாக்கியசாலிகளான எந்தமனிதர்கள் இந்தக் கிருஷ்ணனிடத்தில் ப்ரீதியைச் செய்கின்றனரோ விஷ்ணுபக்ஷத்தைச் சேர்ந்தவர்களை அசுரர்கள்போல சத்துருக்கள் இவர்களை ஹிம்ஸிக்கமாட்டார்கள். ஹேநந்தகோபரே! இந்த உமது புத்திரன் குணங்களினால் நாராயணனுக்கு ஸமமானவன். ஆகவே லக்ஷ்மியுடனும் கீர்த்தியுடனும் மஹிமையுடனும் கூடினவராய் இக்குழந்தையைக் காப்பீராக" என்றார். (13–19) ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—இவ்விதம் தனக்கு உபதேசித்துவிட்டு கர்க்கர் தனது இருப்பிடஞ் சென்றதும் நந்தகோபர் மிக்கச் சந்தோஷத்தை யடைந்தவராய் தன்னை ஆசிர்வாதங்களினால் நிறைந்தவராக எண்ணினர். (20)

ஸ்வல்பகாலஞ்சென்றதும் ராமகிருஷ்ணர்கள் கைகளுடன் கூடினகால்களினால் கோகுலத்தில் தவிழ்ந்து செல்லுகின்றவர்களாய்

---

* வேனன் என்ற அரசன் ராஜ்யபாரம் வகிக்கும் கால் யாவரையும் வேதநிந்தை செய்யும்படி செய்தான். அதனால் அவனது ப்ரஜைகள் யாவரும் நாஸ்திகர்களாயினர். தர்மத்தை அழிக்கக் காரணமான அவர்கள் தஸ்யு—திருடர்களாகவுமாயினர். அவர்களை அழிக்கவேண்டி பகவான் ப்ருது சக்ரவர்த்தியாக அவதரித்தார்.

**परुचिरं व्रजकर्दमेषु । तन्नादहृष्टमनसावनुसृत्य लोकं मुग्धप्रभीतवदुपेयतुरन्ति मात्रोः ॥ २२ ॥ तन्मातरौ निजसुतौ घृणया स्नुवन्त्यौ पङ्काङ्गरागरुचिरावुपगुह्य दोर्भ्याम् । दत्त्वा स्तनं प्रपिबतोः स्म मुखं निरीक्ष्य मुग्धस्मिताल्पदशनं ययतुः प्रमोदम् ॥ २३ ॥ यर्ह्यङ्गनादर्शनीयकुमारलीलावन्तर्व्रजे तदबलाः प्रगृहीतपुच्छैः । वत्सैरितस्तत उभावनुकृष्यमाणौ प्रेक्षन्त्य उज्झितगृहा जहृषुर्हसन्त्यः ॥ २४ ॥ शृङ्ग्यग्निदंष्ट्र्यसिजलद्विजकण्टकेभ्यः क्रीडापरावतिचलौ स्वसुतौ निषेद्धुम् । गृह्याणि कर्तुमपि यत्र न तज्जन-**

---

விளையாடத் தொடங்கினர். (21) அந்த ராமகிருஷ்ணர்கள், இரண்டு கால்களையும் அடிக்கடி இழுத்துக்கொண்டு, கால்களிலுள்ள சலங்கைகளின் நாதத்தினால் அழகாக இருக்கும்படி கோகுலத்திலுள்ள சேருகளில் வேகமாகச் செல்லுகின்றவர்களாகவும், அச்சலங்கைகளின் நாதத்தினால் சந்தோஷித்த மனத்தையுடையவர்களாகவும், இங்குமங்கும் செல்லுகின்ற ஜனத்தை யனுஸரித்து இரண்டு மூன்று அடிகள் சென்று மேற்கொண்டு போகவறியாதவர்போலும், பயந்தவர்போலும் தாய்மார்களின் ஸமீபத்தை யடைந்தனர். (22) அவர்களின் தாய்மார்கள் (குழந்தை யினிடமுள்ள) அன்பினால் பால்நிறைந்த ஸ்தனங்களையுடையவர்களாய் சேர், அங்கராகம் (மேல் பூச்சு) இவற்றினால் விளங்குகின்ற தமது புத்திரர்களைத் தோள்களினால் தழுவிக்கொண்டு ஸ்தனத்தைக் கொடுத்து அவர்கள் நன்கு பால்குடிக்குங்கால் புன்சிரிப்பு, அற்பமான பல் இவற்றையுடையதான முகத்தைக் கண்ணுற்கண்டு அதிக சந்தோஷத்தை யடைந்தனர். (23) எப்பொழுது ஸ்திரீகளுக்குக் காணத்தக்க குமாரலீலையை யுடையவர்களாகவாயினரோ அப்பொழுது இடைச்சேரியின் நடுவில் நன்கு பிடிக்கும்படி செய்யப்பட்ட வால்களையுடைய கன்றுகளினால் இங்குமங்கும் இழுக்கப்படுகின்ற இருவரையும் அந்தக் கோபஸ்திரீகள் பார்த்து வீட்டிற் செய்யவேண்டிய கார்யங்களை மறந்து ஸந்தோஷத்தை யடைந்தவர்களாகவாயினர். (24) விளையாட்டில் ஈடுபட்டவர்களும் அதிகம் சபலர்களுமான தனது புத்திரர்களை அவர்களின் தாய்மார்களிருவரும், மாடு, நெருப்பு, நாய், கத்தி, ஜலம், கிளி, முள்ளு முதலியவற்றினின்றும் தடுப்பதற்கும், வீட்டிலுள்ள காரியங்களைச் செய்வதற்கும் எப்பொழுது முடியாத

स्यौ शोकात् आपतुरलं मनसोऽनवस्थाम् ॥२५॥ कालेनाल्पेन राजर्षे रामः कृष्णश्च गोकुले । अघृष्टजानुभिः पद्भिर्विचक्रमतुरञ्जसा ॥ २६ ॥ ततस्तु भगवान्कृष्णो वयस्यैर्व्रजबालकैः । सहरामो व्रजस्त्रीणां चिक्रीडे जनयन्मुदम् ॥ २७ ॥ कृष्णस्य गोप्यो रुचिरं वीक्ष्य कौमारचापलम् । शृण्वत्याः किल तन्मातुरिति होचुः समागताः ॥ २८ ॥

वत्सान्मुञ्चन्क्वचिदसमये क्रोशसंजातहासः स्तेयं स्वाद्वत्त्यथ दधि पयः कल्पितैः स्तेययोगैः । मर्कान्भोक्ष्यन्विभजति स चेन्नात्ति भाण्डं

---

வர்களாயினரோ அப்பொழுது மனத்தில் நிலையற்றதன்மையை அதிகமாக அடைந்தனர். (25) ஹேராஜர்ஷே!. ஸ்வல்பகாலத்தினுல் ராமனும், கிருஷ்ணனும் முழங்காலை இழுக்காமல் கால்களினுலேயே கோகுலத்தில் வேகமாக ஓடத்தொடங்கினர். (26) பிறகு பகவானுன கிருஷ்ணனே பலராமனுடன் கூட தோழர்களான சேரியிலுள்ள குழந்தைகளுடன் சேர்ந்து கோகுலத்திலுள்ள ஸ்திரீகளுக்குச்சந்தோஷத்தை யுண்டுபண்ணவேண்டி விளையாடத்தொடங்கினுர். (27) கோபிகைகள் கிருஷ்ணனுடைய இனிமையான பால்ய சாபலத்தைக் கண்ணுற்று ஒரேகூட்டமாகக் கூடிக்கொண்டு வந்து கேட்க ஸம்மதித்த அந்தக் கிருஷ்ணனுடைய தாயான யசோதையினிடத்தில் பின்வருமாறு சொல்லத் தொடங்கினர்.* (28)

ஒருநாள் பால்கறக்காத சமயத்தில் கன்றுகளை அவிழ்த்துவிட்டான். திட்டினுல் சிரிக்கிறுன். கல்பிக்கப்பட்ட திருடுவதற்குரிய உபாயங்களினுல் திருடப்பட்ட தயிர் பால் இவற்றுள் ருசியானவற்றைச் சாப்பிடுகிறுன். பின்னர் குரங்குகளைச் சாப்பிடச் செய்ய வெண்ணெங்கொண்டு அவற்றுக்குப் பங்கிட்டுக் கொடுக்கிறுன். அவற்றுள் யாதேனுமொன்று சாப்பிடாவிடில் பால்தயிர்ச் சட்டியை உடைத்துவிடுகிறுன். தயிர்பால் முதலியபொருள் கிடைக்

---

* कृष्णचापलचौर्याणि सहैवाखिलसद्मतः । प्रजल्पन्त्यः समागत्य गोप्यो गोप्यै मुदं ददुः ॥ கோபிகைகள் ஒன்று சேர்ந்து எல்லா வீட்டினின்றும் வெளிக்கிளம்பிவந்து கிருஷ்ணனுடைய சாபல்யத்திருட்டுகளைச் சொல்கின்றவர்களாய் யசோதைக்குச் சந்தோஷத்தை விளைவித்தனர் என்று ஸ்ரீதரீய வியாக்யானத்தில் கூறப்பட்டிருக்கிறது.

भिनत्ति द्रव्यालाभे स गृहकुपितो यात्युपक्रोश्य तोकान् ॥२९॥ हस्ताग्राह्ये रचयति विधिं पीटकोलूखलाद्यैश्छिद्रं ह्यन्तर्निहितवयुनः शिक्यभाण्डेषु तद्वित् । ध्वान्तागारे धृतमणिगणं स्वाङ्गमर्थप्रदीपं काले गोप्यो यर्हि गृहकृत्येषु सुव्यग्रचित्ताः ॥ ३० ॥ एवं धार्ष्ट्यान्युशति कुरुते मेहनादीनि वास्तौ स्तेयोपायैर्विरचितकृतिः सुप्रतीको यथास्ते । इत्थं स्त्रीभिः

---

காவிடில் அவ்வீட்டுக்குடையவர்களிடங் கோபங்கொண்டு (தூங்கும்) குழந்தைகளை அழும்படிசெய்துவிட்டு ஓடிவிடுகிறான். (29) *எந்தக்காலத்தில் கோபிகைகள் வீட்டிற்செய்ய வேண்டியகாரியங்களில் நன்கு ஈடுபட்ட சித்தமுள்ளவர்களாக ஆயினரோ (அக்காலம் பார்த்து) தரிக்கப்பட்ட மணிக்கூட்டங்களையுடைய தனது சரீரத்தை இருட்டறையிலிருக்கும் தயிர்பால் முதலியவற்றைக் காட்டும் விளக்காகச் செய்துகொள்ளுகிறான். கைக்கெட்டாத விடத்தில் தொங்குகின்ற உரிகளிலிருக்கின்ற சட்டிகளில் உள்ளிலிருக்கின்ற தயிர்பால் முதலியவற்றைத் தெரிந்துகொண்டு ஓட்டையிடும் முறையையறிந்தவனாய் தயிர்கடையும் முக்காலிக்கட்டையைப் போட்டு அதன்மேல் உரலைத்தூக்கிவைத்து (1) அதன்மேல் ஒருபையனைத் தூக்கிநெருத்தி அவன்மேல் தானேறி நின்றுகொண்டு அச்சட்டிகளில் ஓட்டையிடுகிறான். (30) அடே! அடே! திருடா! என்னடாசெய்கிறாய் என்றால், நீ தான் திருடன் நான் வீட்டுக்குடையவன் என்றதாதிகளான குரும்புவார்த்தையைச் சொல்லுகிறான். நன்கு சுத்தஞ்செய்யப்பட்ட இடத்தில் (2)ஜலமலமோசனங்களைச்

---

* திருடுவதற்கு இவர் செய்ததாய் முந்தின சுலோகத்திற்சொல்லிய உபாயங்கள் இன்னதென இந்தச் சுலோகத்தாற் சொல்லப்படுகிறது.

(1) पीटकोलूखलाद्यैः என்றவிடத்திலுள்ள ஆத்ய என்ற பதத்தைக் கொண்டு இவ்விதம் உரை எழுதப்பட்டது.

(2) மேஹநாதீநி என்றதற்கு வம்சீதரீயவியாக்யானத்தில் துருதே உன்னை அடிக்கிறேன் பார் என்றதாதி கடுமையான சப்தமானது, உசதி எங்களால் சொல்லப்பட்டால் அப்பொழுது மேஹநாதீநி வெல்லத்தைக் காட்டுதல் முதலியவற்றைச் செய்கிறான். அதாவது:—என் வெல்லத்தை அடி என்றதாதி வார்த்தைகளைச் சொல்லி வெல்லத்தைக் காட்டுகிறான் என்று சொல்லப்பட்டிருக்கிறது. மேலும் ஸ்ரீதரீய வியாக்யானப்படி

सभयनयनश्रीमुखालोकिनीभिर्व्याख्यातार्था प्रहसितमुखी न ह्युपालब्धुमैच्छत् ॥ ३१ ॥ एकदा क्रीडमानास्ते रामाद्या गोपदारकाः । कृष्णो मृदं भक्षितवानिति मात्रे न्यवेदयन् ॥ ३२ ॥ सा गृहीत्वा करे कृष्णमुपालभ्य हितैषिणी । यशोदा भयसंभ्रान्तप्रेक्षणाक्षमभाषत ॥ ३३ ॥ कस्मान्मृदमदान्तात्मन्भवान्भक्षितवान् रहः । वदन्ति तावका ह्येते कुमारास्तेऽग्रजोऽ-

---

செய்துவிடுகிருன். இவ்விதம் திருடுவதற்குரிய உபாயங்களைக் கையாண்டு வேண்டிய காரியங்களைச் செய்துவிட்டு மிக்கநல்லவன் போல உனதருகிலிருக்கிருன். என இவ்விதம் பயந்த கண்களையுடையதும், அதன்மூலமேற்பட்ட சோபையுடன்கூடினதுமான கண்ணனது முகத்தைக் காட்டுகின்றவர்களான ஸ்திரீகளினுல் தெளிவு படுத்தப்பட்ட அந்தந்தக் கர்மபலனை யுடைவளான யசோதை சிறித்தமுகமுள்ளவளாய் ஆக்ஷேபிப்பதற்குக் கூட (வாயினுல் குழந்தையை அதட்டுவதற்குக்கூட) இச்சித்தாளில்லை. (31)

ஒருநாள் விளையாடிக்கொண்டிருக்கின்ற பலராமன் முதலிய அந்தக் கோபகுமாரர்கள் "கிருஷ்ணன் மண்ணைத் தின்ருன்" எனத் தாயினிடம் தெரிவித்தனர். (32) ஹிதம் செய்யவிருப்பங் கொண்ட அந்த யசோதை பயத்தினுல் நன்கு அசைகின்ற கண்களையுடைய கிருஷ்ணனைத் (தனது இடது) கையில்பிடித்துக் கொண்டு அதட்டி (ப்பின்வருமாறு) சொல்லத் தொடங்கினுள். (33) ஹேபரபாத்த தேஹமுள்ளவனே ! என் ரஹஸ்யமாக நீமண்ணைத்தின்ருய்.

---

"மேஹநாந்நி—ஜலமலமோசனம் முதலியவற்றை" என்று கூறியவிடத்தில், வெளியிலிருந்து ஜலத்தைக்கொண்டுவந்து கொட்டியும், ஆட்டுமோட்டுச் சாணங்களைப் போட்டும் அவ்விடத்தை அசுத்தப்படுத்துகிருன் எனப் பொருள் கொள்ளவேண்டும். இல்லையேல் ஜகஜ்ஜனமலத்வம்ஸிச்ரவணஸ்ம்ருதிகீர்த்தநா:, மலமூத்ராதிரஹிதா: புண்யச்லோகா: ப்ரகீர்த்திதா:, என்றபடி சுத்தசின்மாத்திர திவ்யமங்கள விக்ரஹனுன ப்ரபுவுக்கு மலமூத்திராதிகள் ஸம்பவிக்க இடமேது ? அதுடன் "த்வக்ச்மச்ருகேசநகரோமபிநத்தமந்தர்மாம்ஸாஸ்திரக்தக்ருமிவிட்கபவாதபித்தம்,ஜீவச்சவம் பஜதி காந்தமதிர்விமூடா யாதே பதாப்ஜமகரந்தமஜிக்ரதஸ்த்ரீ" என ருக்மிணியம்மாள் பின்னர் 10-வது ஸ்கந்தம் 60-வது அத்தியாயம் 45-வது சலோகத்தில் சொன்னதற்கு விரோதமும் வரும் எனக் கண்டு கொள்ளவும்.

प्ययम् ॥ ३४ ॥ नाहं भक्षितवानम्ब सर्वे मिथ्याऽभिशंसिनः । यदि सत्यगिरस्तर्हि समक्षं पश्य मे मुखम् ॥ ३५ ॥ यद्येवं तर्हि व्यादेहीत्युक्तः स भगवान्हरिः । व्यादत्ताव्याहतैश्वर्यः क्रीडामनुजबालकः ॥ ३६ ॥ सा तत्र ददृशे विश्वं जगत्स्थास्नु च खं दिशः । साद्रिद्वीपाब्धिभूगोलं सवाय्वग्नीन्दुतारकम् ॥ ३७ ॥ ज्योतिश्चक्रं जलं तेजो नभस्वान्वियदेव च । वैकारिकाणीन्द्रियाणि मनोमात्रा गुणास्त्रयः ॥ ३८ ॥ एतद्विचित्रं सहजीवकालस्वभावकर्माशयलिङ्गभेदम् । सूनोस्तनौ वीक्ष्य विदारितास्ये व्रजं

---

உன்னைச் சேர்ந்த இந்தக்குழந்தைகள் சொல்லுகின்றனர். இந்த உனது அண்ணாவும் சொல்லுகின்றானே ? (34) (அது கேட்ட கிருஷ்ணன்) ஹே அம்மா நான் சாப்பிடவில்லை. எல்லாரும் பொய் சொல்லுகின்றனர். அவர்கள் வார்த்தை ஸத்தியமானால் இவர்கள் முன்னிலையில் எனது வாயைப்பார் என்றார். (35) இவ்விதமாயின் அப்பொழுது வாயைத்திற என்று (தாயினால்) சொல்லப்பட்டவரும் குறைவற்ற ஐஸ்வரியமுள்ளவரும், கிரீடையினால் மனிதக்குழந்தை யாகவிருப்பவரும் பகவானுமான அந்த ஹரி வாயைத்திறந்தார்.(36) அந்தயசோதை, அசையும் பொருள் அசையாப்பொருள் அந்தரிக்ஷ லோகம், திக்குகள், மலை தீவு, கடல் இவற்றுடன் கூடின பூர்லோகம், ப்ரவஹம் என்றவாயு, படபாக்னி, சந்திரன், நக்ஷத்திரங்கள் இவற்றுடன்கூடின ஸ்வர்லோகம், ஜலம், நெருப்பு, காற்று, ஆகாசம் இவையும், இந்திரியாபிமானி தேவர்கள் தைஜஸங்களான இந்திரியங்கள் மனது (மஹத்தத்துவம்) தாமஸங்களான பஞ்சபூததன் மாத்திரைகள் ஸத்வம் ரஜஸ்தமஸ் என்ற மூன்று குணங்கள், அதாவது:—முக்குணங்களின் ஸாம்யாவஸ்தையான ப்ரகிருதி, ஆகிய விஸ்வம்யாவையும் அவருடைய வாயில் கண்டாள். (37–38) *ஜீவன், காலம், ஸ்வபாவம், கர்மம், அவற்றின் ஸம்ஸ்கார பூதமான ஆசயம் இவைமூலமேற்படும் சரா சரசரீரங்களின் பேதங்களடங்

---

* ஜீவன் மூலம் குணங்களுக்குச் சலனமும், காலமூலம் பரிணாமமும் (வேறு அவஸ்தையின் ப்ராப்தியும்) ஸ்வபாவமூலம் பிறவியும், பிறகு கர்மமும் சித்தத்திலடங்கிய கர்மஸம்ஸ்காரங்களுமே பற்பல சரீரங்களுண்டாவதற்குக் காரணமாகின்றமையின் இவ்விதம் கூறப்பட்டது.

**सहात्मानमवाप शङ्काम् ॥ ३९ ॥ किं स्वप्न एतदुत देवमाया किंवा मदीयो बत बुद्धिमोहः । अथो अमुष्यैव ममार्भकस्य यः कश्चनौत्पत्तिक आत्मयोगः ॥ ४० ॥ अथो यथावन्न वितर्कगोचरं चेतोमनः कर्मवचोभिरञ्जसा । यदाश्रयं येन यतः प्रतीयते सुदुर्विभाव्यं प्रणतास्मि तत्पदम् ॥ ४१ ॥ अहं**

---

கிய இந்த விசித்திரமான ப்ரபஞ்சத்தையும், தன்னுடன் கூடின இடைச்சேரியையும், திறக்கப்பட்ட வாயையுடைய புத்திரனது சிறியவாயில் ஒரேகாலத்தில் கண்ணுற்று, இங்கு காணப்படும் ப்ரபஞ்சம் ஸ்வப்பினமாகவிருக்குமோ? (நான்குபக்கங்களிலும் பார்த்துச் சொல்லுகிறாள். இது ஸ்வப்பினமில்லை) தேவனுடைய (ஹரியினுடைய) மாயையாகவிருக்குமோ? (அவ்விதமாயின் மற்றவரும் பார்க்கவேண்டுமே? அவ்விதம் அவர்கள் பார்க்கவில்லையே) கண்ணாடியில் காணப்படும் முகம்போல என்னுடையதான புத்திமாறாட்டமாக இருக்குமோ? (அவ்விதமாயின் இந்தக் கிருஷ்ணனும் உள்ளில் காணப்படுகின்றானே? எதில் முகந்தெரிகிறதோ அக்கண்ணாடி அதேகண்ணாடியில் தோன்றுமோ? தோன்றுவதற்கிடமில்லையே? ஆகவே இஃதெல்லாமில்லை) அல்லது என்னுடைய இதே குழந்தையின் இயற்கையிலமைந்ததும் அசிந்தியமுமான சொந்த ஐஸ்வரியமோ? எனப் பலவாறு சங்கைகொண்டாள்(1). (39-40) (2)எது சித்தம், மனது, கர்மம், வாக்கு இவைகளினால் நேரில் உள்ளபடி ஊஹிக்கவியலாததோ, எது ஜகத்துக்கு அதிஷ்டானமோ, காரணங்களுக்கு அதிஷ்டாதாவான எதனால் ஜகத்தானது ப்ரகாசிக்கின்றதோ, ஜகத்து புத்திவிருத்தியில் அபிவ்யக்தமான எதன்மூலம் தோற்றத்தையடைகிறதோ அசிந்த்யமான அந்தப்பதத்தை ஆனதுபற்றி வணங்கினவளாக இருக்கின்றேன். (41) நான் யசோதையென்ற பெயருள்ளவள், இவர் என்னுடையபதி, இவன் என்னுடைய புத்திரன், நான் கோகுலபதியினுடைய எல்லாப்பொருளையு மாண்டனுபவிக்கும் பார்யை, கோபிகைகளும் கோபாலர்களும் பசுவாகிறதனங்

---

(1)இந்தச் சுலோகத்துக்கு இவ்விதம் உரை எழுதாது வெறும் மொழிபெயர்ப்பாகமட்டுமெழுதினால் பதங்களின் கருத்து விளங்காதாகையால் இவ்விதமெழுதப்பட்டது. (2) கடைசியிற் சொல்லிய பக்ஷத்தையே நிச்சயமாகக்கொண்டு இந்தச் சுலோகத்தால் பின்வருமாறு சொல்லுகிறாள்.

ममास्मौ पतिरेष मे सुतो व्रजेश्वरस्याखिलवित्तपा सती । गोप्यश्च गोपाः सहगोधनाश्च मे यन्माययेत्थं कुमतिः स मे गतिः ॥ ४२ ॥

इत्थं विदिततत्त्वायां गोपिकायां स ईश्वरः । वैष्णवीं व्यतनोन्मायां पुत्रस्नेहमयीं विभुः ॥ ४३ ॥ सद्यो नष्टस्मृतिर्गोपी सारोप्यारोहमात्मजम् । प्रवृद्धस्नेहकलिलहृदयासीद्यथा पुरा ॥ ४४ ॥ त्रय्या चोपनिषद्भिश्च सांख्ययोगैश्च सात्वतैः । उपगीयमानमाहात्म्यं हरिं साऽमन्यतात्मजम् ॥ ४५ ॥ राजोवाच—नन्दः किमकरोद्ब्रह्मञ्श्रेय एवंमहोदयम् । यशोदा च महाभागा पपौ यस्याः स्तनं हरिः ॥ ४६ ॥ पितरौ नान्वविन्देतां कृष्णोदारार्भकेहितम् । गायन्त्यद्यापि कवयो यल्लोकशमलापहम् ॥ ४७ ॥ श्रीशुक

---

களுடன்கூட என்னைச்சேர்ந்தவர்கள் என்ற இத்தகைய கெட்டபுத்தியானது எவரது மாயையாலேற்பட்டதோ அவர் எனக்குக் கதி—சரணம். (42) (எ—று)

இவ்விதம் கோபிகையான யசோதை தத்த்வத்தையறிந்தவளாகவானதும விபுவான அந்த ஈஶ்வரன் புத்திரஸ்னேஹமயமான வைஷ்ணவமாயையை வீசினார். (43) உடனே அந்த யசோதை தத்த்வத்தினைவைமறந்தவளாய் புத்திரனை மடியில் தூக்கிவைத்துக்கொண்டு விருத்தியடைந்த ப்ரேமை நிரம்பின ஹிருதயமுள்ளவளாய் முன்போலவாயினள். (44) ருக் யஜுஸ் ஸாம ரூபமான கர்மகாண்டத்தினால் இந்திராதிகளென்றும், உபநிடதங்களால் ப்ரம்ஹமென்றும், ஸாங்கியர்களால் புருஷனென்றும், யோகிகளால் பரமாத்மாவென்றும், ஸாத்வதர்களால் பகவானென்றும் கொண்டாடப்படும் மஹிமையையுடைய ஹரியை அந்த யசோதை புத்திரனாகவெண்ணினாள்" என்றார். (45) ராஜன் சொல்லுகிறார்—ஹே ப்ரம்ஹன்! ஸர்வலோகத்தினுடையவும் பாபத்தைப் போக்குகின்ற கிருஷ்ணனுடைய கம்பீரமான எந்த பால லீலையைத் தேவகீ வஸுதேவர்கள் அனுபவிக்கவில்லையோ, ப்ரம்ஹா முதலிய கவிகள் இப்பொழுதும் கூட எந்த லீலையைக் கானஞ்செய்கின்றனரோ அதையனுபவித்த நந்தகோபர் இத்தகைய மேன்மையைத் தரத்தக்க என்ன புண்ணியத்தைச் செய்தார். எவளுடைய ஸ்தனத்தை ஹரியானவர் பானஞ்செய்தாரோ அந்த மஹாபாக்கியசாலியான யசோதை செய்த புண்

उवाच—द्रोणो वसूनां प्रवरो धरया सह भार्यया। करिष्यमाण आदेशान्ब्रह्मणस्तमुवाच ह ॥ ४८ ॥ जातयोर्नौ महादेवे भुवि विश्वेश्वरे हरौ। भक्तिः स्यात्परमा लोके ययाऽञ्जो दुर्गतिं तरेत् ॥ ४९॥ अस्त्वित्युक्तः स भगवान्व्रजे द्रोणो महायशाः। जज्ञे नन्द इति ख्यातो यशोदा सा धराऽभवत् ॥ ५० ॥ ततो भक्तिर्भगवति पुत्रीभूते जनार्दने। दम्पत्योर्नितरामासीद्गोपगोपीषु भारत ॥ ५१ ॥ कृष्णो ब्रह्मण आदेशं सत्यं कर्तुं व्रजे विभुः। सहरामो वसंश्चक्रे तेषां प्रीतिं स्वलीलया ॥ ५२ ॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्धे
विश्वरूपदर्शनं नामाष्टमोऽध्यायः ॥ ८ ॥

---

ணியமென்னே? (46-47) ஸ்ரீசுகர் சொல்லுகிறார்—வசுக்களுக்குள் சிறந்தவரான த்ரோணர் என்ற வசுவானவர் தரை என்ற பார்யையுடன்கூட ப்ரம்ஹதேவனுடைய உத்தரவுகளைச் செய்யப்போகின்றவராய் "பூமியிற் பிறந்த எங்களுக்கு உலகில் எத்தகைய பக்தியினல் கெட்ட கதியைத் தாண்டக்கூடுமோ அத்தகைய மேலான பக்தியானது விப்வேப்வரனும், மஹாதேவனுமான ஹரியினிடத்தில் ஏற்படவேண்டும்" என ப்ரம்ஹதேவனைப் பார்த்துச் சொன்னர். (48-49)"அந்தப் பக்தி உண்டாகட்டும்" என்று பரம்ஹதேவனுற்சொல்லப்பட்டவரும் மஹா யபஸ்வியும் பகவானுமான அந்த த்ரோணரே கோகுலத்தில் ஜனித்தார். அவர் நந்தரென ப்ரஸித்திபெற்றுர். அந்தத் தராதேவி யசோதையாகப் பிறந்தாள். ஆனதுபற்றி ஹே பாரத! கோபாலர் கோபிகைகள் இவர்களுக்குள் அந்தத் தம்பதிகளுக்குப் புத்திரனுகப் பிறந்தஜனர்த்தனனுன பகவானிடத்தில் அதிகமான பக்தியானது ஏற்பட்டது. (50-51) விபுவான கிருஷ்ணன் ப்ரம்ஹாவினுடைய ஆக்ஞையைச் சத்தியமாகச் செய்யவேண்டி பலராமனுடன் கோகுலத்தில் வஸித்துக்கொண்டு தனது பால்ய லீலையினல் அவர்களுக்கு ப்ரீதியைச் செய்து வந்தார். (52)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண
தசமஸ்கந்த பூர்வார்த்தத்தில் விப்வரூபதர்சனம் எனப்பெயரிய
எட்டாவது அத்தியாயம் முற்றிற்று.



## நாராயணீயம்.

**गूढं वसुदेवगिरा कर्तुं ते निष्क्रियस्य संस्कारान् ।**
**हृद्गतहोरातत्त्वो गर्गमुनिस्त्वद्गृहान् विभो गतवान् ॥ ७२ ॥**

(ப-ரை) **हे विभो!**=ஓய்விபுவே! **वसुदेवगिरा**=வசுதேவரின் வார்த்தையினால் **निष्क्रियस्य**=எவ்விதவிகாரமுமற்ற **ते**=உமக்கு **संस्कारान्**=நாமகரணாதி ஸம்ஸ்காரங்களை, **गूढं**=ரஹஸ்யமாக **कर्तुम्**=செய்ய வேண்டி **हृद्गतहोरातत्त्वः**=மனத்திற்பதிந்த ஹோராசாஸ்திர தத்துவத்தையுடையவரான **गर्गमुनिः**=கார்க்கர் என்ற ருஷியானவர் **त्वद्गृहान्**= உமது வீட்டை **गतवान्**=அடைந்தார். (72) (எ-று)

**नन्दोऽथ नन्दितात्मा वृन्दिष्टं मानयन्नमुं यमिनाम् ।**
**मन्दस्मितार्द्रमूचे त्वत्संस्कारान्विधातुमुत्सुकधीः ॥ ७३ ॥**

(ப-ரை) **अथ**=பிறகு **नन्दितात्मा**=சந்தோஷித்த மனத்தையுடைய **नन्दः**=நந்தகோபர் **यमिनाम्**=ருஷிகளுக்குள் **वृन्दिष्टम्**=ஶ்ரேஷ்டரான **अमुम्**=இந்தக் கார்க்கரை **मानयन्**=முறைப்படி பூஜைசெய்து **त्वत्संस्कारान्**=உமது ஸம்ஸ்காரங்களை **विधातुम्**=செய்வதற்கு **उत्सुकधीः**=ஆசைகொண்ட புத்தியையுடையவராய் **मन्दस्मितार्द्रम्**=அதிகம் புன்சிரிப்புள்ள கார்க்கரைநோக்கி **ऊचे**=சொல்லலானார். (73)

**यदुवंशाचार्यत्वात्सुनिभृत मिदमार्य कार्यमिति कथयन् ।**
**गर्गो निर्गतपुलकश्चक्रे तव साग्रजस्य नामानि ॥ ७४ ॥**

(ப-ரை) **यदुवंशाचार्यत्वात्**=நான் யதுவம்சத்துக்கு ஆசாரியனாகவிருப்பதுபற்றி **हे आर्य!**=ஹேநந்தகோபரே ! **इदम्** = இந்தக்காரியமானது **सुनिभृतम्**=மிக்கரஹஸ்யமாக **कार्यम्**=செய்யத்தக்கது **इति**= என **कथयन्**=சொன்ன **गर्गः**=கார்க்கரானவர் **निर्गतपुलकः**=வெளிவந்த மயிர்ச் சிலிப்பையுடையவராய் **साग्रजस्य**=தமயனுடன் கூடின **तव**= உமக்கு **नामानि**=பெயர்களை **चक्रे**=வைத்தார். (74) (எ-று)

**कथमस्य नाम कुर्वे सहस्रनाम्नो ह्यनन्तनाम्नो वा ।**
**इति नूनं गर्गमुनिश्चक्रे तव नाम नाम रहसि विभो ! ॥ ७५ ॥**

(ப-ரை) **सहस्रनाम्नः**=ஆயிரக்கணக்கான பெயர்களையுடையவரும், **वा**=அல்லது **अनन्तनाम्नः**=முடிவற்ற பெயரையுடையவருமான **अस्य**=இவருக்கு **कथम्**=எவ்விதம் **नाम**=பெயரை **कुर्वे**=செய்

வேன் इति नाम=எனக் கவலைக்கொண்டே गर्गमुनि:=கர்க்கருஷியா னவர் हेविभो!=ஹேப்ரபோ! तव=உமக்கு रहसि=ரஹஸ்யத்தில் नाम=பெயரை चक्रे=செய்தார் नूनम्-நிச்சயம். (75) (எ-று)

कृषिधातुणकाराभ्यां सत्तानन्दात्मतां किलाभिलपत् ।
जगदघकर्षित्वं वा कथयदृषिः कृष्णनाम ते व्यतनोत् ॥ ७६ ॥

(ப-ரை) ऋषिः=ருஷியானவர் कृषिधातुणकाराभ्यां=க்ருஷி என்ற தாதுவினலும், ண என்ற எழுத்தினலும் सत्तानन्दात्मताम्=ஸத்ரூப மாக விருத்தலையும் ஆனந்தரூபமாக விருத்தலையும் अभिलपत्=சொல் லுகின்றதும், वा=அல்லது जगदघकर्षित्वम्=உலகின் பாபத்தைப் போக்குகின்றவராக இருத்தலை, कथयत् = சொல்லுகின்றதுமான कृष्ण नाम-கிருஷ்ணன் என்ற பெயரை ते-உமக்கு व्यतनोत्किल= வைத்தார் போலும். (76) (எ-று)

குறிப்பு—कृषिर्भूवाचकः शब्दः णश्च निर्वृतिवाचकः ।
तयोरैक्यं परं ब्रह्म कृष्ण इत्यभिधीयते ।

என்றபடியும், जगतां अघं कर्षतीति=कृष्णः என்ற வ்யுத்பத்தி ப்படியும் ஏற்படுகின்ற கிருஷ்ண என்ற பதத்தின் பொருள் இந்த ஶ்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. (எ-று)

अन्यांश्च नामभेदान् व्याकुर्वन्नग्रजे च रामादीन् ।
अतिमानुषानुभावं न्यगदत्त्वामप्रकाशयन्पित्रे ॥ ७७ ॥

(ப-ரை) अन्यान्=வாஸுதேவன் முதலிய வேறு नामभेदांश्च=பெ யர்களையும், अग्रजे = தமையனிடத்தில் रामादीन्=ராமன் முதலிய பெயர்களையும் व्याकुर्वन्=விரிவுபடுத்திக் கூறுகின்றவராய் पित्रे=பிதா வினிடம் त्वाम्=உம்மை अप्रकाशयन्=வெளியிட்டுக் காட்டாதவராய்க் கொண்டு अतिमानुषानुभावम्=அமானுஷமான மஹிமையை न्यगदत्= தெளிவாகக் கூறினர். (77) (எ-று)

स्निह्यति यस्तव पुत्रे मुह्यति न स मायिकैः पुनश्शोकैः ।
द्रुह्यति यस्स तु नश्येदित्यवदत्ते महत्वमृषिवर्यः ॥ ७८ ॥

(ப-ரை) यः=எவன் तव=உமது पुत्रे=புத்திரனிடத்தில் स्निह्यति= ஸ்னேஹமுள்ள (பக்தியுள்ள) வனக வாகின்றனே सः=அவன் पुनः=மறுபடியும் मायिकैः=அக்ஞானத்தினலுண்டான शोकैः-சோ

கங்களினால் न मुह्यति=மோஹிப்பதில்லை (ஜனனமரணாதி துக்கத்தையனுபவிப்பதில்லை) यः=எவன் द्रुह्येत्=உமது புத்திரனையும் பொருட்டுத் துரோஹிப்பானோ (எவன் கிருஷ்ணனிடம் பற்றில்லாதவனாகவிருப்பானோ) सः=அவன் नश्येत्=நாசத்தை (ஜனனமரணாத்மகமான ஸம்ஸாரத்தை) அடைவான். इति=என ते=உம்முடைய महत्त्वम्=பெருமையை ऋषिवर्यः=ருஷிசிரேஷ்டர் अवदत्=சொன்னார்.

जेष्यति बहुतरदैत्यान् नेष्यति निजबंधुलोकममलपदम् ।
श्रोष्यति सुविमलकीर्तीरस्येति भवद्विभूतिमृषिरूचे ॥ ७९ ॥

(ப—ரை) बहुतरदैत्यान्=அதிகமான அஸுரர்களை जेष्यति=ஜயிக்கப்போகின்றான் निजबन्धुलोकम्=தனது பந்துஜனத்தை अमलपदम्=நிர்த்துஷ்டமான ஸ்தானத்தை नेष्यति=அடையச் செய்யப்போகின்றான். अस्य=இந்தப் புத்திரனுடைய सुविमलकीर्तीः=மிக்கப் புனிதமான கீர்த்திகளை श्रोष्यसि=கேட்கப் போகின்றீர் इति=என भवद्विभूतिम्=உமது மஹிமையை ऋषिः=கார்க்கமுனியானவர் ऊचे=சொன்னார். (79) (எ—று)

अमुनैव सर्वदुर्गं तरितास्थ कृतास्थमत्र तिष्ठध्वम् ।
हरिरेवेत्यनभिलपन्नित्यादि त्वामवर्णयत्स मुनिः ॥ ८० ॥

(ப—ரை) अमुनैव=இப்புத்திரனாலேயே सर्वदुर्गम्=எல்லாக்கஷ்டத்தையும் तरितास्थ=தாண்டப்போகின்றீர்கள். अत्र=இப்புத்திரனிடத்து कृतास्थम्=செய்யப்பட்ட ஆதரவுள்ளவர்களாக तिष्ठध्वम्=இருப்பீர்களாக हरिरेव=ஹரியே इति=என अनभिलपन्=சொல்லாமல் सः=அந்த मुनिः=முனியானவர் त्वाम्=உம்மைக்குறித்து इत्यादि=இதுமுதலிய அவதாரசரித்திரம் யாவையும் अवर्णयत्=வர்ணித்தார். (80) (எ—று)

गर्गेऽथ निर्गतेऽस्मिन्नन्दितनन्दादिनन्द्यमानस्त्वम् ।
मद्गदमुद्गतकरुणो निर्गमय श्रीमरुत्पुराधीश ॥ ८१ ॥

(ப—ரை) हेमरुत्पुराधीश!=ஹேகுருவாயூரில் வசிக்கும் ஈசனே! अथ—பிறகு गर्गे=கார்க்கமுனியானவர் निर्गते=தனதிருப்பிடம் சென்றதும் नन्दितनन्दादिनन्द्यमानः=ஸந்தோஷித்த நந்தகோபர்முதலியோரால் கொண்டாடப்படுகின்ற त्वम्=நீர் उद्गतकरुणः—உண்டான (வெ

னிவந்த) கருணையுடையவராய் मद्गदम्=எனது வியாதியை निर्गमय= போக்குவீராக. (81) (எ—று)

ஸ்ரீகிருஷ்ணனுடைய ஜாதகர்ம நாமகரண வர்ணனம் என்ற நாற்பத்துநான்காவது தசகம் முற்றிற்று.

—•◦◦❀◦◦•—

अयि सबल मुरारे पाणिजानुप्रचारैः
किमपि भवनभागान् भूषयन्तौ भवन्तौ ।
चलितचरणकञ्जौ मञ्जुमञ्जीरशिञ्जा-
श्रवणकुतुकभाजौ चेरतुश्चारुवेगात् ॥ ८२ ॥

(ப—ரை) सबल !=பலராமனுடன் கூடின अयि! मुरारे!=ஓமுராரியே! भवन्तौ=நீங்களிருவரும் पाणिजानुप्रचारैः=கை முழுந்தாள் இவற்றினுதவிகொண்டு செய்யும் ஸஞ்சாரங்களினால் भवनभागान्= வீட்டிலுள்ள ப்ரதேசங்களை किमपि=சொல்லமுடியாதபடி भूषयन्तौ= அலங்கரித்துக்கொண்டும், चलितचरणकञ्जौ=அசைகின்ற கோமளமான சரணமாகிற தாமரைப்பூவிலிருக்கின்ற मञ्जुमञ्जीरशिञ्जाश्रवणकुतुक- भाजौ=அழகிய சலங்கைகளுடைய ஒலிகளைக்கேட்பதில் சந்தோஷத்தையுடையவர்களாகக் கொண்டும் वेगात्=வேகமாக चारु=அழகாக இருக்கும்படி चेरतुः=ஸஞ்சரித்தீர்கள். (82) (எ—று)

मृदुमृदु विहसन्तावुन्मिषद्दन्तवन्तौ
वदनपतितकेशौ दृश्यपादाब्जदेशौ ।
भुजगलितकरान्तव्यालगत्कंकणाङ्कौ
मतिमहरतमुच्चैः पश्यतां विश्वनृणाम् ॥ ८३ ॥

(ப—ரை) मृदुमृदु=மெள்ளமெள்ள विहसन्तौ=சிரிக்கின்றவர்களும் उन्मिषद्दन्तवन्तौ=பிரகாசிக்கின்ற பற்களுள்ளவர்களும் वदन- पतितकेशौ=முகத்தில் விழுந்த கேசங்களையுடையவர்களும் दृश्य- पादाब्जदेशौ=காணத்தகுந்த தாமரைப்புஷ்பம் போன்ற பாதப்பிரதேசத்தையுடையவர்களும், भुजगलितकरान्तव्यालगत्कङ्कणाङ्कौ = கையினின்றும் நழுவி கைகளின் நுனியில் (மணிக்கட்டில்) தடைப்பட்டு நிற்கின்ற கங்கணங்களின் வடுக்களையுடையவர்களுமான நீங்களிருவரும் पश्यताम्=கண்கொண்டு சேவிக்கின்ற विश्वनृणाम्=எல்லா மனி

தர்களுடையவும் मतिम्=புத்தியை उच्चैः=அதிகமாக अहरतम्=கவர்ந்து விட்டீர்கள். (83) (எ–று)

अनुसरति जनौघे कौतुकव्याकुलाक्षे
किमपि कृतनिनादं व्याहरन्तौ द्रवन्तौ ।
वलितवदनपद्मं पृष्ठतो दत्तदृष्टी
किमिव न विदधाथे कौतुकं वासुदेव ॥ ८४ ॥

(ப–ரை) हेवासुदेव=ஓ கிருஷ்ணா! जनौघे=ஜனக்கூட்டமானது कौतुकव्याकुलाक्षे=ஆவல்கொண்டு அசைகின்ற கண்களுள்ளதாக अनुसरति=பின் தொடருங்கால் किमपि=மிக்க மனோஹரமாக कृतनिनादम्=செய்யப்பட்ட சப்தத்தையுடைத்தாயிருக்கும்படி व्याहरन्तौ=வார்த்தை சொல்லுகின்றவர்களும் द्रवन्तौ=இங்குமங்கும் வேகமாக ஓடுகின்றவர்களும் (தன்னைத் தொடர்ந்துவரும் ஜனக்கூட்டம் வெகு தொலையில் நின்றுவிட்டால்) वलितवदनपद्मम्=பின்னால் திருப்பப் பட்ட முகபத்மத்தை யுடைத்தாயிருக்கும்படி दत्तदृष्टी=அவர்களிடஞ் செலுத்தப்பட்ட கண்களையுடையவர்களுமான நீங்கள் किमिव कौतुकम्=எத்தகைய ஆனந்தத்தைத்தான் न विदधाथे=உண்டுபண்ணினீர் களில்லை. (84) (எ–று)

द्रुतगतिषु पतन्तावुत्थितौ लिप्तपंकौ
दिवि मुनिभिरपङ्कैः सस्मितं वन्द्यमानौ ।
द्रुतमथ जननीभ्यां सानुकंपं गृहीतौ
मुहुरपि परिरब्धौ द्राग्युवां चुंबितौ च ॥ ८५ ॥

(ப–ரை) द्रुतगतिषु = வேகமான வோட்டங்களில் [व्रजकर्दमे= இடைச்சேரியிலுள்ள சேற்றில்] पतन्तौ=விழுகின்றவர்களும் उत्थितौ=பின்னர் அதனின்றுமெழுந்தவர்களும் लिप्तपङ्कौ=உடம்பில் பூசிக் கொண்ட சேற்றையுடையவர்களும் अपङ्कैः=எவ்வித தோஷமுமற்ற வர்களான दिवि=ஆகாசத்திலுள்ள मुनिभिः=ருஷிகளினால் सस्मितम्=புன்னகையுடன் கூடியிருக்கும்படி वन्द्यमानौ=வணங்கப்படுகின் றவர்களும் अथ=பிறகு जननीभ्याम्=தாய்மார்களினால் सानुकंपम्=கரு ணையுடன் கூடியிருக்கும்படி द्रुतम्=வேகமாக गृहीतौ=வாரியெடுக்கப் பட்டவர்களும் मुहुरपि=அடிக்கடி परिरब्धौ=ஆலிங்கனஞ்செய்யப்பட் டவர்களுமான युवाम्=நீங்கள் द्राक्=விரைவாக चुंबितौ च=முத்தமு மிடப்பட்டீர்கள். (85) (எ–று)

स्नुतकुचभरमङ्के धारयन्ती भवन्तं
तरलमति यशोदा स्तन्यदा धन्यधन्या ।
कपटपशुप ! मध्ये मुग्धहासाङ्कुरं ते
दशनमुकुलहृद्यं वीक्ष्य वक्त्रं जहर्ष ॥ ८६ ॥

(ப—ரை) हेकपटपशुप !=ஓய் பொய்யான கோபாலனே! स्नुतकुचभरम्=பாலைப் பெருக்குகின்ற குசபாரத்தை யுடைத்தாயிருக்கும்படியும் तरलमति=கிருபை நிரம்பின புத்தியை யுடைத்தாயிருக்கும்படியும் भवन्तम्=உம்மை अङ्के=மடியில் धारयन्ती=வைத்துக்கொண்டு स्तन्यदा=பாலைக்கொடுக்கின்ற धन्यधन्या = மிக்க பாக்கியசாலியான यशोदा=யசோதையானவள் मध्ये=பால் குடிக்குமிடையில் मुग्धहासाङ्कुरम्=அழகிய புன்சிரிப்பின் முளையையுடையதும் दशनमुकुलहृद्यम्=பற்களாகிற மொக்குகளினால் மனத்தைக் கவருகின்றதுமான ते=உம்முடைய वक्त्रम=முகத்தை वीक्ष्य=பார்த்து जहर्ष=சந்தோஷித்தாள். (86) (எ—று)

तदनु चरणचारी दारकैस्साकमारा
न्निलयततिषु खेलन्बालचापल्यशाली ।
भवनशुकविडालान् वत्सकांश्चानुधावन्
कथमपि कृतहासैर्गोपकैर्वारितोऽभूः ॥ ८७ ॥

(ப—ரை) तदनु=பிறகு चरणचारी=காலால் நடக்கின்றவரும் दारकैस्साकम्=கோப குமாரர்களுடன் கூட आरात्=அருகிலுள்ள निलयततिषु=வேறு வீடுகளில் खेलन्=விளையாடுகின்றவரும் बालचापल्यशाली=பாலர்க்குரிய சாபல்யம் நிறைந்தவரும், भवनशुकविडालान्=வீட்டிலுள்ள கிளி பூனை இவைகளையும் वत्सकांश्च=கன்றுகளையும் अनुधावन्=பின்தொடர்ந்து ஓடுகின்றவருமான त्वम्=நீர் कृतहासैः=செய்யப்பட்ட சிரிப்பையுடையவர்களான गोपकैः=கோபாலர்களால் कथमपि=வெகு ப்ரயாஸப்பட்டு वारितः=தடுக்கப்பட்டவராக अभूः=ஆனீர். (87) (எ—று)

हलधरसहितस्त्वं यत्रयत्रोपयातो
विवशपतितनेत्रास्तत्र तत्रैव गोप्यः ।
विगलितगृहकृत्या विस्मृतापत्यभृत्या
मुरहर मुहुरत्यन्ताकुला नित्यमासन् ॥ ८८ ॥

(ப-ரை) हेमुरहर !=முராஸுரனைக்கொன்ற கிருஷ்ண ! त्वम्= நீர் हलधरसहित:=பலராமனுடன்கூட यत्रयत्र=எங்கெங்கு उपयात:= சென்றீரோ तत्रतत्रैव=அந்தந்தவிடத்திலேயே गोप्य:=கோபிகைகள் विवशपतितनेत्राः = தன்னிலையற்றுவிழுந்த நேத்திரமுள்ளவர்களாகவும் विगलितगृहकृत्या:=விடுபட்ட வீட்டுவேலையையுடையவர்களாகவும் विस्मृतापत्यभृत्याः=மறக்கப்பட்டகுழந்தை வேலைக்காரர் இவர்களையுடையவர்களாகவும் मुहु:=அடிக்கடி अत्यन्ताकुला: =மிகவும் கலங்கினவர்களாகவும் नित्यम्=நாள்தோறும் आसन्=ஆயினர். (88)

प्रतिनवनवनीतं गोपिकादत्तमिच्छन्
कलपदमुपगायन् कोमलं चापि नृत्यन् ।
सदययुवतिलोकैरर्पितं सर्पिरश्नन्
क्वचन नवविपक्वं दुग्धमप्यापिबस्त्वम् ॥ ८९ ॥

(ப-ரை) त्वम्=நீர் गोपिकादत्तम्=கோபிகைகளால் கொடுக்கப்பட்ட प्रतिनवनवनीतम् = புதிதுபுதிதான வெண்ணெயை इच्छन्= விரும்பிக்கொண்டு कलपदम्=மிக்க இனிமையான பதங்களையுடையதாக இருக்கும்படி उपगायन्=பாடிக்கொண்டும், क्वापि=ஒருவிடத்தில் कोमलम्=அழகாக இருக்கும்படி नृत्यन्=நர்த்தனஞ்செய்துகொண்டும் सदययुवतिलोकैः=தயையுடன் கூடினஸ்திரீ ஜனங்களால் கொடுக்கப்பட்ட सर्पिः=வெண்ணெயை अश्नन्=சாப்பிட்டுக்கொண்டும் क्वचन= ஒருவிடத்தில் नवविपक्वम्=புதிதாய் காய்ச்சப்பட்ட दुग्धमपि=பாலையும்கூட आपिबः=குடித்தீர். (89) (எ-று)

मम खलु बलिगेहे याचनं जातमास्ता-
मिह पुनरबलानामग्रतो नैव कुर्वे ।
इति विहितमतिः किं देव संत्यज्य याच्ञां
दधिघृतमहरस्त्वं चारुणा चोरणेन ॥ ९० ॥

(ப-ரை) हेदेव !=ஹேகிருஷ்ண ! मम=எனக்கு पूर्वम्=முந்தின வாமனவதாரத்தில் बलिगेहे=பலிசக்கிரவர்த்தியின் வீட்டில் याचनम्= யாசித்தலானது जातखलु=ஏற்பட்டதன்றோ. आस्ताम्=அஃதிருக்கட்டும் ஆகவே पुनः=திரும்பவும் इह=இந்த அவதாரத்தில் अबलानाम्=ஸ்திரீகளுடைய अग्रतः=முன்னிலையில் नैवकुर्वे=செய்யவேமாட்டேன் इति= என विहितमतिः=செய்யப்பட்ட நிஶ்சயத்தையுடையவராய் त्वम्=நீர்

याच्ञाम्=யாசனையை सन्त्यज्य=விட்டு चारुणा=அழகிய चोरणेन=திருட்டி னால் दधिघृतम्=தயிர் நெய்யை अहरः किम्?=அபஹரித்தீரா என்னே

तव दधिघृतमोषे घोषयोषाजनाना-
मभजत हृदि रोषो नावकाशं न शोकः ।
हृदयमपि मुषित्वा हर्षसिन्धौ न्यधास्त्वं
स मम शमय रोगान् वातगेहाधिनाथ ! ॥ ९१ ॥

(ப—ரை) हेवातगेहाधिनाथ!=குருவாயூரில் வஸிக்கும் நாதனே! तव=உம்முடைய दधिघृतमोषे=தயிர் நெய்த்திருட்டில் घोषयोषाजनानाम्=கோகுலத்திலுள்ள ஸ்திரீ ஜனங்களுடைய हृदि = மனத்தில் रोषः=கோபமானது अवकाशम्=இடத்தை, नाभजत=அடையவில்லை. शोकः=துக்கமும் अवकाशम्=இடத்தை नाभजत=அடையவில்லை. त्वम्=நீர் हृदयमपि=மனத்தையும் கூட मुषित्वा=திருடி हर्षसिन्धौ= சந்தோஷ ஸமுத்திரத்தில் न्यधाः=மூழ்க்கிவிட்டீர். सः=அந்த நீர் मम=என்னுடைய रोगान्=வாதரோகங்களை शमय=போக்குவீராக.

शाखाग्रे च विधुं विलोक्य फलमित्यम्बाञ्च तातं मुहुः
संप्रार्थ्याथ तदा तदीयवचसा प्रोत्क्षिप्तबाहौ त्वयि ।
चित्रं देव शशी स ते करमगात् किं ब्रूमहे संपत-
ज्ज्योतिर्मण्डलपूरिताखिलवपुः प्रागा विराड्रूपताम् ॥ ९२ ॥

(ப—ரை) हेदेव !=ஓ தேவனே ! अथ=பிறகு शाखाग्रे=கிளையின் நுனியில் विधुम्—சந்திரனை विलोक्य—கண்டு फलमिति—பழமென்ப தாய் अम्बाम्—தாயையும் तातञ्च—தந்தையையும் संप्रार्थ्य—நன்குவேண் டிக்கொண்டு अथ—பிறகு तदा—அப்பொழுது त्वयि—நீர் तदीयवचसा— அத்தாய்தந்தையரின் வார்த்தையினால் प्रोत्क्षिप्तबाहौ—நன்கு உயரத் தூக்கப்பட்ட கைகளையுடையவராக இருக்கும்பொழுது सः—அந்த शशी—சந்திரன் ते—உம்முடைய करम्—கையை अगात्—அடைந்துவிட் டான். किं ब्रूमहे—நாமென்ன சொல்லுவோம். संपतज्ज्योत्स्नामण्डल- पूरिताखिलवपुः—கையில் விழுந்த சந்திரனுடைய காந்திக் கூட்டங் களினால் நிரப்பப்பட்ட எல்லா சரீரத்தையுமுடையவராய் विराड्रूप- ताम्—விராட்ரூபியாகவிருத்தலை प्रागाः—அடைந்தீர் चित्रम्—இதுவெகு ஆச்சரியமாகவிருந்தது. (92) (எ—று)

किं किं बतेदमिति संभ्रमभाजमेनं
ब्रह्मार्णवे क्षणममुं परिमज्य तातम् ।

मायां पुनस्तनयमोहमयीं वितन्व-
न्नानन्दचिन्मय जगन्मय पाहि रोगात् ॥ ९३ ॥

(ப-ரை) आनन्दचिन्मय !=ஆனந்தமயரும் சின்மயருமானவரே! हेजगन्मय !-ஹே ஜகன்மயரே! बत-இப்பொழுதுண்டான इदम्-இது किं किं?-என்னே? என்னே? इति-என்று संभ्रमभाजम्-பரபரப்பை யடைந்த एनम्-இந்த तातम्-பிதாவான நந்தகோபரை ब्रह्मार्णवे-ப்ரம்ஹமாகிற சமுத்திரத்தில் क्षणम्-கொஞ்சகாலம் परिमज्य-மூழ்க்கி पुनः-திரும்பவும் तनयमोहमयीम्-புத்திரனென்ற மோஹத்தைத்தருகின்ற मायाम्-மாயையை वितन्वन्-உண்டுபண்ணின त्वम्-நீர் अमुम्-இந்த என்னை रोगात्-வாதரோகத்தினின்றும் पाहि-காத்தருள்வீராக.

இவ்விதம் கிருஷ்ணனுடைய பாலக்ரீடா வர்ணனமென்ற
நாற்பத்தைந்தாவது தசகம் முற்றிற்று.



अयि देव पुरा किल त्वयि स्वयमुत्तानशये स्तनन्धये।
परिजृंभणतो व्यपावृते वदने विश्वमचष्ट वल्लवी ॥ ९४ ॥

(ப-ரை) अयि! देव!-ஓதேவ! पुराकिल=முன்னொருஸமயத்தில் त्वयि-நீர் उत्तानशये-ஊர்த்வமுகமுள்ளவராக (மல்லாக்காக) ப்படுத்துக்கொண்டு स्तनन्धये-பால்குடிக்குங்கால் स्वयम्-தானகவே परिजृंभणतः-கொட்டாவி விடுவதன்மூலம் व्यपावृते-திறக்கப்பட்ட वदने-உமது வாயில் वल्लवी-யசோதை विश्वम्-உலகை अचष्ट-கண்டாள்.

पुनरप्यथ बालकैः समं त्वयि लीलानिरते जगत्पते!।
फलसञ्चयवञ्चनक्रुधा तव मृद्भोजनमूचुरर्भकाः ॥ ९५ ॥

(ப-ரை) हेजगत्पते!-ஹே ஜகத்பதே! अथ-பிறகு त्वयि-நீர் बालकैस्समम्-குழந்தைகளுடன் கூட पुनरपि-மறுபடியும் लीलानिरते-விளையாட்டில் மிக்கப்பற்றுள்ளவராக இருக்குங்கால் फलसञ्चयवञ्चनक्रुधा-பழக்கூட்டங்களை தருவதாய்ச்சொல்லி பின்னர் கொடாமல் ஏமாற்றின கோபத்தினுல் तव-உமது मृद्भोजनम्-மண் தின்னலை अर्भकाः-குழந்தைகள் ऊचुः-தாயினிடஞ்சொல்லினர். (95) (எ-று)

अयि ते प्रलयावधौ विभो क्षितितोयादिसमस्तभक्षिणः।
मृदुपाशनतो रुजा भवेदिति भीता जननी चुकोप सा ॥ ९६ ॥

(ப-ரை) अयि! विभो!-ஹேப்ரபோ! प्रलयावधौ-ப்ரளயமாகிற எல்லையில் क्षितितोयादिसमस्तभक्षिण:-பூமி ஜலம் முதலியயாவையும், பக்ஷிக்கின்ற ते-உமக்கு मृदुपाशनतः-அற்பம் மண் தின்னுவதனுல் रुजा-வியாதியானது भवेत्-உண்டாகும் इति-என भीता-பயந்த सा जननी-அந்தத் தாயானவள் चुकोप-கோபத்தையடைந்தாள். (96)

अयि दुर्विनयात्मक! त्वया किमु मृत्सा बत वत्स भक्षिता।
इति मातृगिरं चिरं विभो वितथां त्वं प्रतिजज्ञिषे हसन्॥ ९७॥

(ப-ரை) अयि! दुर्विनयात्मक!-அடே! அடங்காத மனத்தை யுடைய वत्स=குழந்தாய்! बत-இப்பொழுது त्वया-உன்னுல் मृत्सा-மண் किमुभक्षिता-எனடா தின்னப்பட்டது इति-என்ற मातृगिरम्-தாயின் வார்த்தையை हेविभो!-ஹேவிபோ! त्वम्-நீர் हसन्-சிரித்துக்கொண்டு चिरम्=வெகுநேரம் वितथाम्-உண்மையற்றதென प्रति-जज्ञिषे-ப்ரமாணஞ்செய்தீர். (97) (எ-று)

अयि ते सकलैर्विनिश्चिते विमतिश्चेद्वदनं विदार्यताम्।
इति मातृविभर्त्सितो मुखं विकसत्पद्मनिभं व्यदारयः॥ ९८॥

(ப-ரை) अयि-அடே கிருஷ்ண! सकलैः-உனது தோழர் அண்ணுவான பலராமன் யாவராலும் विनिश्चिते-நீ மண் தின்னதாக நிஸ்சயிக்கப்படுங்கால் ते-உனக்குமட்டும் विमतिश्चेत्-அதை யொப்புக்கொள்ள மனமில்லாவிடில் वदनम्-வாய் विदार्यताम्-திறக்கப்படட்டும் इति-என मातृविभर्त्सितः-தாயினுல் மிக்க அதட்டப்பட்டவராய் विकसत्पद्मनिभम्-மலர்ந்த தாமரஸ புஷ்பத்துக்கொப்பான मुखम्-வாயை व्यदारयः-திறந்தீர். (98) (எ-று)

अयि मृल्लवदर्शनोत्सुकां जननीं तां बहु तर्पयन्निव।
पृथिवीं निखिलां न केवलं भुवनान्यप्यखिलान्यदीदृशः॥ ९९॥

(ப-ரை) अयि!-ஓய்! मृल्लवदर्शनोत्सुकाम्-ஸ்வல்பமேனும் மண்ணை வாயில் காண ஆவல் கொண்டவளான ताम्-அந்த जननीं-தாயை बहु-அதிகமாக तर्पयन्निव-திருப்தி செய்துவைப்பவர்போல निखिलां पृथिवीम्-முழு பூமியை न केवलम्-மட்டுமல்லாது अखिलानि-ஸமஸ்தமான भुवनान्यपि-லோகங்களையும் अदीदृशः-வாயில் காணச் செய்தீர். (99) (எ-று)

कुहचिद्वनमंबुधिः क्वचित् क्वचिदभ्रं कुहचिद्रसातलम्।
मनुजा दनुजाः क्वचित् सुरा ददृशे किं न तदा त्वदानने॥ १००॥

(ப-ரை) **कुहचित्**-ஒருவிடத்தில் **वनम्**- காடும், **क्वचित्**- ஒரு விடத்தில் **अम्बुधिः**-ஸமுத்திரமும், **क्वचित्**-ஒருவிடத்தில் **अभ्रम्**-மேகமும் **कुहचित्**-ஓரிடத்தில் **रसातलम्**-பாதாளலோகமும் **क्वचित्**-மற்றோரிடத்தில் **मनुजाः**-மனிதர்களும், **दनुजाः**-அசுரர்களும் **सुराः**-தேவர்களுமாக **तदा**-அப்பொழுது **त्वदानने**-உமது வாயில் **किम्**-எதுதான் **नददृशे**-பார்க்கப்படவில்லை. (100) (எ-று)

**कलशांबुधिशायिनं पुनः परवैकुण्ठपदाधिवासिनम् ।**
**स्वपुरश्च निजार्भकात्मकं कतिधा त्वां न ददर्श सा मुखे ॥ १०१ ॥**

(ப-ரை) **सा**-அந்தயசோதை **त्वाम्**-உம்மை, **कलशांबुधिशायिनम्**-பாற்கடலில் பள்ளிகொண்டிருப்பவராகவும், **पुनः**-மறுபடியும் **परवैकुण्ठपदाधिवासिनम्** - சிறந்தவைகுண்டபதத்தில் வசிப்பவராகவும் **स्वपुरश्च**-தனக்குமுன்னிலையில் **निजार्भकात्मकम्**-தனது குழந்தைவடிவமுடையவராகவும் **मुखे**-வாயில் **कतिधा**-பின்னும் எவ்வளவு விதமாகவும் தான் **नददर्श**-காணவில்லை. (101) (எ-று)

**विकसद्भुवने मुखोदरे ननु भूयोपि तथाविधाननः ।**
**अनया स्फुटमीक्षितो भवाननवस्थां जगतां बतातनोत् ॥ १०२ ॥**

(ப-ரை) **ननु!**-ஹேகிருஷ்ண! **विकसद्भुवने**-ப்ரகாசிக்கின்ற புவனங்களையுடைய **मुखोदरे**-வாயினுள்ளில் **भूयोपि**-மறுபடியும் **तथाविधाननः**-ப்ரகாசிக்கும் புவனங்களையுடைய முகமுள்ளவரும் **अनया**-இந்த யசோதையினால் **स्फुटम्**-தெளிவாக **ईक्षितः**-பார்க்கப்பட்டவருமான **भवान्**-நீர் **जगताम्**-உலகங்களுக்கு **अनवस्थाम्**-நிலையற்ற தன்மையை **बत**-அப்பொழுது **आतनोत्**-செய்தீர். (102) (எ-று)

குறிப்பு—யசோதை தனது குழந்தையின் வாயில் உலகையும் தனது புத்திரனையும் கண்டாள். அவ்விதம் கண்ட அப்புத்திரனுடைய வாயில் ஒரு ஜகத்தையும் தனது புத்திரனையும் கண்டாள். திரும்பவும் அங்கு கண்ட புத்திரனது வாயை உற்றுநோக்க அங்கும் இவ்விதமே கண்டாள். இவ்விதம் காணும்பொழுது இவளால் காணப்பட்ட ஜகத்தானது ஓரிடத்தில் நிலைபெறாது தான் காணும் ஒவ்வொரு முகத்திலும் காணப்படுவதால் அந்த ஜகத்தை நிலையற்றதாகச் செய்தீர் என்பது கருத்து. (எ-று)

## अथ नवमोऽध्यायः ॥

श्रीशुक उवाच — एकदा गृहदासीषु यशोदा नन्दगेहिनी ।
कर्मान्तरनियुक्तासु निर्ममन्थ स्वयं दधि ॥ १ ॥ यानि यानीह गीतानि

---

धृततत्वधियं तदा क्षणं जननीं तां प्रणयेन मोहयन् ।
स्तनमंब दिशेत्युपासजन् भगवन्नद्भुतबाल पाहि माम् ॥ ११३ ॥

(ப—ரை) **तदा**—அப்பொழுது **क्षणम्**—க்ஷணகாலம் **धृततत्वधियम्**—தரிக்கப்பட்ட தத்த்வ புத்தியையுடையவளான **ताम्**—அந்த **जननीम्**—தாயை **प्रणयेन**—ப்ரீதியினுல் **मोहयन्**—மோஹிக்கச் செய்தவரும் **हे अम्ब !**—ஹே அம்மா ! **स्तनम्**—முலையை **दिश**—கொடு **इति**—என **उपासजन्**—அவளது மடியிலேறியுட்கார்ந்தவரும் **हे अद्भुतबाल !**—ஆஶ்சரியக் குழந்தையுமான ! **हेभगवन् !**—ஓபகவானே ! **माम्**—என்னை **पाहि**—காப்பீராக. (113) (எ—று)

இவ்விதம் விஶ்வரூப வர்ணனமென்ற
நாற்பத்தாருவது தசகம் முற்றிற்று.



## ஒன்பதாவது அத்தியாயம்.

(அ—கை) नवमे पय उद्रिक्तौ गत्वा गोप्यथ तत्कृतम् ।
विलोक्य भांडभङ्गादि कृष्णं दाम्ना बबंध तम् ॥ १ ॥
तनूदराश्रितं विश्वं दृष्ट्वा विस्मितचेतसः ।
बन्धनद्व्यङ्गुलापूर्त्या पूर्णतामन्वदर्शयत् ॥ २ ॥

(க—ரை) பால் பொங்கி வழியுங்கால் அதை இரக்கி வைக்க வேண்டி அங்குசென்ற யசோதை பிறகு கிருஷ்ணனுல் செய்யப் பட்ட பாண்டபங்கம் முதலியவற்றைக் கண்ணுற்று அந்தக் கிருஷ் ணனைக் கயிற்றினுல் இடுப்பில் கட்டினுள். (1) சிறியவயிற்றை யாஶ்ரயித்திருக்கின்ற விஶ்வத்தைக் கண்டு ஆஶ்சரியப்பட்ட புத்தி யுள்ள யசோதைக்குக்கட்டும் விஷயத்தில் இரண்டு அங்குலம் பூர்த் தியாகாமை மூலமாகத் தனது பூர்ணதையைக் காண்பித்தார். (2)

ஸ்ரீசுகர் சொல்லலுற்ருர்—ஒருநாள் வீட்டு வேலைக்காரிகள் வேறு காரியங்களில் ஏவப்பட்டவர்களாகவிருக்குங்கால் நந்தகோப

**तद्बालचरितानि च । दधिनिर्मन्थने काले स्मरन्ती तान्यगायत ॥ २ ॥ क्षौमं वासः पृथुकटितटे बिभ्रती सूत्रनद्धं पुत्रस्नेहस्नुतकुचयुगं जातकम्पं च सुभ्रूः । रज्ज्वाकर्षश्रमभुजचलत्कङ्कणौ कुण्डले च स्विन्नं वक्त्रं कबरविगलन्मालती निर्ममन्थ ॥ ३ ॥ तां स्तन्यकाम आसाद्य मथ्नन्तीं जननीं हरिः । गृहीत्वा दधिमन्थानं न्यषेधत्प्रीतिमावहन् ॥ ४ ॥ तमङ्कमारूढमपाययत्स्तनं स्नेहस्नुतं सस्मितमीक्षती मुखम् । अतृप्तमुत्सृज्य जवेन सा ययावुत्सिच्यमाने पयसि त्वधिश्रिते ॥ ५ ॥ संजातकोपः स्फुरितारुणाधरं संदश्य दद्भिर्दधिमन्थभाजनम् । भित्त्वा मृषाश्रुर्दृषदश्मना रहो जघास**

---

ருடைய பத்னியான யசோதை தானே தயிரைக்கடைய வாரம்பித்தாள். (1) அந்தக் கிருஷ்ணனுடைய பாலசரிதங்கள் எவை எவை பாட்டாகப்பாடப்பட்டனவோ அவ்வவற்றைத் தயிர் கடையுங்காலத்தில் நினைத்துக்கொண்டு கானஞ்செய்யத்தொடங்கினாள். (2) அழகிய புருவங்களையுடைய யசோதைபெரிதான இடுப்பு ப்ரதேசத்தில் நூலினால் கட்டப்பட்ட வெண்பட்டு வஸ்திரத்தையும், அசைகின்றனவும் புத்திர ஸ்னேஹத்தினால் பாலைப்பெருக விடுகின்றனவுமான இரண்டு ஸ்தனங்களையும், கயிற்றை இழுத்தல் மூலம் களைத்தகைகளில் அசைகின்ற கைவளையல்களையும், குண்டலங்களையும், வியர்த்தமுகத்தையும் தரிக்கின்றவளாயும், கூந்தலினின்றும் நழுவின மாலதி புஷ்பத்தையுடையவளாயும் ஆகிக் கடைந்து வந்தாள். (3) ஹரியானவர் முலைப்பாலிலாசையுள்ளவராய் வந்து ப்ரீதியை யுண்டுபண்ணுவான் கருதித் தயிர் கடையும் மத்தைப் பிடித்துக்கொண்டு கடையும் அந்தத் தாயைத் தடுத்தார். (4) மடியில் வந்தேறின அக்குழந்தையின் புன்சிரிப்புடன் கூடின முகத்தைப் பார்த்துக்கொண்டு ப்ரேமையினால் பெருகுகின்ற ஸ்தனத்தைப் பானஞ்செய்துவைத்தாள். ஆனாலோ அடுப்பிலேற்றப்பட்ட பால் பொங்கி வழிவதைக் கண்டதும் அவள் குடித்துத் திருப்தியையடையாத குழந்தையை விட்டுவிட்டு வேகமாக (அதை இரக்க) ச்சென்றாள். (5) கிருஷ்ணன் கோபத்தையடைந்தவராய் துடிக்கும் சிவந்த உதட்டைப்பற்களினாற் கடித்துக்கொண்டு தயிரேடுள்ள சட்டியை சிறு குழவியினால் உடைத்துவிட்டுப் பொய்யாகக் கண்ணில் நீரை வருவித்துக்கொண்டு வீட்டின்

हैयङ्गवमन्तरं गतः ॥ ६ ॥ उत्तार्य गोपी सुश्रृतं पयः पुनः प्रविश्य संदृश्य च दध्यमत्रकम् । भग्नं विलोक्य स्वसुतस्य कर्म तज्जहास तं चापि न तत्र पश्यती ॥ ७ ॥ उलूखलाङ्घ्रेरुपरि व्यवस्थितं मर्काय कामं ददतं शिचि स्थितम् । हैयङ्गवं चौर्यविशङ्कितेक्षणं निरीक्ष्य पश्चात्सुतमागमच्छनैः ॥ ८ ॥ तामात्तयष्टिं प्रसमीक्ष्य सत्वरस्ततोऽवरुह्यापससार भीतवत् । गोप्यन्वधावन्न यमाप योगिनां क्षमं प्रवेष्टुं तपसेरितं

---

நடுவையடைந்து ஒருவருமறியாத விடத்திலிருந்துகொண்டு வெண்ணெயைத் தின்றுகொண்டிருந்தார். (6) யசோதை நன்கு காய்ச்சப்பட்ட பாலை அடுப்பினின்றும் கீழிலிரக்கிவிட்டு திரும்பவும் தயிர் கடைந்தவிடம் வந்து தயிர்ச்சட்டி உடைந்திருப்பதையும், தனது புத்திரனுடைய அந்தக் காரியத்தையும் கண்டு அவனையும் அங்கு காணாதவளாய் (மூக்கில் விரலை வைத்துக்கொண்டு) சிரித்தாள். (7) உரலைத் திருப்பிப்போட்டுக்கொண்டு அதன்மேலுட்கார்ந்துகொண்டு உரியிலிருக்கும் வெண்ணெயை (அருகிலிருக்கின்ற) குரங்குக்கு வேண்டியவளவு கொடுக்கின்றவனும், திருட்டின் மூலம் இங்குமங்குமசையும் கண்களையுடையவனுமான புத்திரனைக்கண்ணுற்று மெள்ள மெள்ள நடந்து பின்பக்கமாக வந்து சேர்ந்தாள். (8) அவள் கையில் கொம்பு வைத்திருப்பதைக் கண்ணுற்று வேகமாக உரலினின்றும் குதித்து பயந்தவர்போல வேகமாக ஓட்டம் பிடித்தார். தபஸ்ஸினால் (த்யான விசேஷத்தினால்) அனுப்பப்பட்டதும் (அதாவது: பகவதாகாரதையை யடைந்ததும்) ஆனதுபற்றியே ப்ரவேசிக்கத் தகுதியையுடையதுமான யோகிகளின் மனதுகூட எவரை அடைவதில்லையோ, அந்தக்கிருஷ்ணனை கோபிகை *பின்தொடர்ந்து பிடிக்கச் சென்றாள். (9) பின்தொடர்ந்து ஓடுகின்றவளும் பெரிதும் அசைகின்றதுமான பின் தட்டின் சுமையால் தடைப்பட்ட நடையையுடையவளும், சிறிய இடையையுடையவளும் வேகத்தினால்

---

* அல்லது யோகிகளின் மனதுகூட எவரை யடையமுடிவதில்லையோ அந்தக் கிருஷ்ணனை யசோதை பின்தொடர்ந்து ஓடினாளேயன்றிப் பிடிக்கமுடியவில்லை என்றும் வேறுபொருள் ஸ்ரீதரீயவியாக்கியானத்தில் கூறப்பட்டிருக்கிறது.

मनः ॥ ९ ॥ अन्वञ्चमाना जननी बृहच्चलच्छ्रोणीभराक्रान्तगतिः सुमध्यमा । जवेन विस्रंसितकेशबन्धनच्युतप्रसूनानुगतिः परामृशत् ॥ १० ॥

कृतागसं तं प्ररुदन्तमक्षिणी कषन्तमञ्जन्मषिणी स्वपाणिना । उद्वीक्षमाणं भयविह्वलेक्षणं हस्ते गृहीत्वा भिषयन्त्यवागुरत् ॥ ११ ॥ त्यक्त्वा यष्टिं सुतं भीतं विज्ञायार्भकवत्सला । इयेष किल तं बद्धुं दाम्नाऽतद्वीर्यको-

---

அவிழ்ந்த கூந்தல்முடியினின்றும் நழுவின *புஷ்பங்களினுல் பின் தொடர்ந்து வரப்பட்டவளுமான தாயான யசோதை கிருஷ்ணனைப் பிடித்துக் கொண்டாள். (10)

குற்றஞ்செய்தவரும், அழுகின்றவரும், நாலாபக்கத்திலும் பற்றின மையையுடைய கண்களைத் தனது கையினுல் கசக்குகின்றவரும், அங்குமிங்கும் பார்க்கின்றவரும், பயத்தாற் கலங்கின கண்களை யுடையவருமான அந்தக் கிருஷ்ணனைக் கையில்பிடித்துக் கொண்டு பயத்தை யுண்டுபண்ணவேண்டி (1) அதட்டினுள். (11) குழந்தையினிடத்தில் வாத்ஸல்யமுள்ளவளும், (2) அக்குழந்தை

---

* யோகிகளுக்கும் அடைதற்கரிதான ஸ்ரீகோபாலனைப் பின்பற்றிப்பிடிக்க நடக்கும் யசோதையம்மாளின் காலடிகளைத் தேவதைகள் புஷ்பங்கள்கொண்டு பூஜித்தனரோ ? என எண்ணும்படியாக விருந்தது என்பது கருத்து.

(1) अवागुरत्=கழியைக்கையில் வைத்துக்கொண்டு பயத்தை யுண்டாக்கவேண்டி அடிக்கக்கையை ஓங்கினுள். அதாவது:—ஹே அடங்காத ஸ்வபாவமுள்ளவனே! ஹே வானரபந்தோ! தயிர் சட்டியை உடைத்தவனே ! எங்கடா வெண்ணையைத் தின்கின்ருய். இனி வெண்ணையைத் திருடமுடியாதபடியும், பையன்களுடன் விளையாட முடியாதபடியும் உன்னைக் கட்டுகிறேன்பார். இப்பொழுது கழியைக் கண்டு நடுங்குகின்ருயா அடிக்கின்றேன் பார் எனக் கையை ஓங்கினுள்.

(2) तद्वीर्यकोविदा=என்று பதம் பிரித்துக்கொண்டு, கிருஷ்ணன் மிக்க ரோஷமுள்ளவன் என்பதை அனுபவத்தில் கண்ட யசோதை ரோஷத்தால் காட்டுக்கு ஓடிவிட்டால் என்னபண்ணுகிறது என்று பயந்து எங்கும் ஓடிவிடாதபடி கயிற்றினுல் கட்டத்துணிந்தாள் என்றும் பொருள் கூறலாம்.

17

विदा ॥ १२ ॥ न चान्तर्न बहिर्यस्य न पूर्वं नापि चापरम्। पूर्वापरं बहिश्चान्तर्जगतो यो जगच्च यः ॥ १३ ॥ तं मत्वात्मजमव्यक्तं मर्त्यलिङ्गमधोक्षजम् । गोपिकोलूखले दाम्ना बबन्ध प्राकृतं यथा ॥ १४ ॥ तद्दाम बध्यमानस्य स्वार्भकस्य कृतागसः । द्व्यङ्गुलोनमभूत्तेन संदधेऽन्यच्च गोपिका ॥ १५ ॥ यदासीत्तदपि न्यूनं तेनान्यदपि संदधे । तदपि द्व्यङ्गुलं न्यूनं यद्यदादत्त बन्धनम् ॥ १६ ॥ एवं स्वगेहदामानि यशोदा संदधत्यपि ॥ गोपीनां सुस्मयन्तीनां स्मयन्ती विस्मिताऽभवत् ॥१७॥ स्वमातुः स्विन्न-

யின் சக்தியை அறியாதவளுமான யசோதை குழந்தை பயந்துவிட்டதாக எண்ணிக்கொண்டு கையிலிருந்த கழியை எறிந்துவிட்டு அவரைக் கயிற்றினால் கட்டுவதற்கு விரும்பினள். (12) எவனுக்கு உள்ளுமில்லையோ, வெளியுமில்லையோ, மேல்பட்டது மில்லையோ, கீழ்ப்பட்டது மில்லையோ, எவன் ஜகத்துக்குமேலிலும் கீழிலும் உள்ளிலும் வெளியிலுமிருக்கின்ருனே, எவன் ஜகத்துமாவானே, அவ்யக்தனும் மனிதவேஷ மெடுத்தவனுமான அந்த * அதோக்ஷஜனை (நாராயணனை) புத்திரனுகவெண்ணிக்கொண்டு யசோதை ப்ரகிருதிவசப்பட்ட புருஷனைப் போன்று கயிற்றினல் உரலில் கட்டத் தொடங்கினள். அக்கயிருனது கட்டப்படுகின்றவனும், குற்றஞ்செய்தவனுமான தனது குழந்தைக்கு இரண்டு அங்குலம் குறைவாகவிருந்தது. யசோதை அக்கயிற்றுடன் வேறுகயிற்றையும் முடிந்தாள். அக்கயிறும்போதாததாக யாதுகாரணத்தாலாயிற்ரோ (அக்காரணம்பற்றி) அத்துடன் வேறுகயிற்றையும் முடிந்தாள். அதுவும் இரண்டு அங்குலம் குறைவாகவே இருந்தது. இவ்விதம் எந்த எந்தக் கயிற்றை எடுத்தாளோ அது அதவும் இரண்டு அங்குலம் குறைவுள்ளதாகவே ஆயிற்று. இவ்விதம் யசோதை தனதுவீட்டிலுள்ள கயிறுகள் யாவற்றையும் முடிந்துகொண்டபோதிலும்கூட (கட்டமுடியாதவளாகி) மிக்கவிழுந்துவிழுந்துசிரிக்கின்ற கோபிகைகளின் நடுவில் தானும் சிரிக்கின்றவளாய் ஆச்சரியத்தை யடைந்தவளாயினள். (13-17) வியர்த்த உடம்பையுடையவளும், அவிழ்ந்தகூந்தல் அதிலுள்ள பூமாலை இவற்றை யுடையவளுமான தனது தாயினுடைய பரிஶ்ரமத்தைக் கண்

* இந்திரியங்களுக்குப் புலப்படாதவனை.

**गात्राया विस्रस्तकबरस्रजः । दृष्ट्वा परिश्रमं कृष्णः कृपयासीत्स्वबन्धने ॥ १८ ॥ एवं संदर्शिताह्यङ्ग हरिणा भृत्यवश्यता । स्ववशेनापि कृष्णेन यस्येदं सेश्वरं वशे ॥ १९ ॥ नेमं विरिञ्चो न भवो न श्रीरप्यङ्गसंश्रया । प्रसादं लेभिरे गोपी यत्तत्प्राप विमुक्तिदात् ॥ २० ॥ नायं सुखापो भगवान्देहिनां गोपिकासुतः । ज्ञानिनां चात्मभूतानां यथा भक्तिमतामिह ॥ २१ ॥ कृष्णस्तु गृहकृत्येषु व्यग्रायां मातरि प्रभुः । अद्राक्षीदर्जुनौ पूर्वं**

---

னுற்று கிருஷ்ணன் கிருபையினுல் தனது பந்தனத்தைச் சம்மதித்தான். (18) ஹே அங்க! ஈச்வரனுடன் கூடின இந்தவிச்வமானது எவரது வசத்திலிருக்கிறதோ பிறர்க்கு வசப்படாதவனும் ஹரியுமான அந்தக் கிருஷ்ணனுல் பக்தனுக்கு வசப்பட்டிருத்தல் என்பதன்றோ இதனுல் நன்கு வெளிக்காட்டப் பட்டது. (19) கோபிகையான யசோதையானவள் * உரலில் கட்டப்பட்டவனும் பந்த நிவிருத்தியைத் தருபவனுமான கிருஷ்ணனிடமிருந்து எந்த ப்ரஸாதத்தை யடைந்தாளோ அந்த இந்த ப்ரஸாதத்தை(புத்திரனுயினும்) ப்ரம்ஹதேவன் அடைந்தாரில்லை. (தனது ஆத்மாவாயினும்) சிவனும் அடைந்தாரில்லை. தனது அங்கத்தை யடைந்தவளான லக்ஷ்மியும் அடைந்தாளில்லை. (20) கோபிகையின் புத்திரனுன இந்தப் பகவான் இங்கு பக்திமான்களுக்குச் சுலுவிலடையக்கூடியவனுகவாவது எவ்விதமோ இவ்விதம் தேஹாபிமானம் நிறைந்ததாபஸர்களுக்கோ, அபிமான நிவிருத்தியையடைந்து ஆத்மஸ்வரூபத்துடன் கலந்தஞ்ஞானிகளுக்கோ சுலுவிலடையக் கூடியவனுக வாவதில்லை. (21) தாயானயசோதை வீட்டுக்காரியங்களி லீடுபட்டவளாக இருக்குங்கால் ப்ரபுவான கிருஷ்ணனே அர்ஜுனவிருக்ஷங்களைக் கண்டார்.

---

* மூலத்தில் लेभिरे=என்றதற்கு लेभिरं धान्यकुट्टनम्=என்ற கோசத்தையொட்டி உரல் எனப் பொருள் கொள்ளப்பட்டது. ஆனுல் ஸ்ரீதரவியாக்கியானத்தில் विमुक्तिदात् प्रसादं लेभिरे=மற்றவர்களும் மோக்ஷந்தரும் ஆண்டவனிடமிருந்து ப்ரஸாதத்தையடைந்தனர் என்பது உண்மைதானுயினும் கோபிகை எதை யடைந்தாளோ அந்த இந்த ப்ரஸாதத்தை ப்ரம்ஹாவும் அடையவில்லை, சிவனுமடையவில்லை, தனது அங்கத்திலுள்ள லக்ஷ்மியுமடையவில்லை, எனக் கூறப்பட்டிருக்கிறது. எவர்க்கும் கிடைக்காத ப்ரஸாதத்தை கோபிகையடைந்தாளென்பது கருத்து.

गुह्यकौ धनदात्मजौ ॥ २२ ॥ पुरा नारदशापेन वृक्षतां प्रापितौ मदात् ।
नलकूबरमणिग्रीवाविति ख्यातौ श्रियान्वितौ ॥ २३ ॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्धे गोपीप्रसादो
लूखलबन्धनं नाम नवमोऽध्याय: ॥ ९ ॥

---

அவைகளோ முன்னர் குபேரனுடைய புத்திரர்களும் ஐஸ்வரியத்துடன் கூடினவர்களும் குஹ்யகவகுப்பிற் சேர்ந்தவர்களும் நளகூபரன், மணிக்ரீவன் என ப்ரஸித்தியை யடைந்தவர்களும் மதங்காரணமாக நாரதசாபத்தினல் மரத்தன்மையை அடைவிக்கப்பட்டவர்களுமாவர். (23) (எ—று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண தசமஸ்கந்த
பூர்வார்த்தத்தில் கோபீப்ரஸாதம், உலூகலபந்தனம்
என்ற ஒன்பதாவது அத்தியாயம் முற்றிற்று.

—•◦✿◦•—

## நாராயணீயம்.

एकदा दधिविमाथकारिणीं मातरं समुपसेदिवान् भवान् ।
स्तन्यलोलुपतया निवारयन्नङ्कमेत्य पपिवान् पयोधरौ ॥ १०४ ॥

(ப—ரை) एकदा=ஒருநாள் दधिविमाथकारिणीम्=தயிர்கடைதலைச் செய்கின்ற मातरम्=தாயை समुपसेदिवान्=அடைந்த भवान्=நீர் स्तन्यलोलुपतया=முலைப்பாலில் ஆசைகொண்டிருப்பதுபற்றி अङ्कमेत्य=மடியிலேறி உட்கார்ந்துகொண்டு निवारयन्=தயிர்கடையும் மத்தைக் கையால் பிடித்துக்கொண்டு पयोधरौ=முலைகளை पपिवान्=குடித்தீர்.

अर्धपीतकुचकुड्मले त्वयि स्निग्धहासमधुराननाम्बुजे ।
दुग्धमीश दहने परिस्रुतं धर्तुमाशु जननी जगाम ते ॥ १०५ ॥

(ப—ரை) हे ईश !=ஹே ஈச! स्निग्धहासमधुराननाम्बुजे = அழகிய சிரிப்பினுல் இனிக்கும் முகபங்கஜத்தையுடைய त्वयि=நீர் अर्धपीतकुचकुड्मले=பாதி குடிக்கப்பட்ட முலைக்காம்பையுடையவராக இருக்குங்கால் ते=உம்முடைய जननी=தாயானவள் दहने=நெருப்பில் परिस्रुतम्=பொங்கிவழிகின்ற दुग्धम्=பாலை धर्तुम् = அடக்குவதற்காக (பொங்காமற் செய்வதற்காக) आशु=சீக்கிரமாக जगाम=சென்றுள்.

सामिपीतरभङ्गसङ्गतक्रोधभारपरिभूतचेतसा ।
मन्थदण्डमुपगृह्य पाटितं हन्त देव दधिभाजनं त्वया ॥ १०६ ॥

(ப-ரை) हेदेव ! = ஹேதேவனே! सामिपीतरसभङ्गसङ्गतक्रोधभारपरिभूतचेतसा = பாதிகுடிக்கப்பட்ட பாலில் செய்ததடையினுலுண்டான அதிகமான கோபத்தினல் கலங்கின மனத்தையுடையவரான त्वया=உம்மால் मन्थदण्डम्=மத்தின் கழியை उपगृह्य=எடுத்துக் கொண்டு दधिभाजनम्=தயிர்ச்சட்டியானது हन्त=அப்பொழுது पाटितम्=உடைக்கப்பட்டது. (106) (எ-று)

उच्चलद्ध्वनितमुच्चकैस्तदा सन्निशम्य जननी समाद्रुता ।
त्वद्यशोविसरवद्ददर्श सा सद्य एव दधि विस्तृतं क्षितौ ॥ १०७ ॥

(ப-ரை) तदा=அப்பொழுது उच्चकैः=உறத்து उच्चलत्=உயரக்கிளம்பின ध्वनिम्=ஓசையை सन्निशम्य=நன்குகேட்டு समाद्रुता= நன்குவேகமாக ஓடிவந்த सा=அந்த जननी=யசோதை त्वद्यशोविसरवत्=உமதுகீர்த்தியின் கூட்டம்போல क्षितौ=பூமியில் विस्तृतम्=சிதறிக்கிடந்த दधि=தயிரை सद्यएव=உடனேயே ददर्श=கண்ணுற்றாள்.

वेदमार्गपरिमार्गितं रुषा त्वामवीक्ष्य परिमार्गयन्त्यसौ ।
सन्ददर्श सुकृतिन्युलूखले दीयमाननवनीतमोतवे ॥ १०८ ॥

(ப-ரை) वेदमार्गपरिमार्गितम् = முனிகளால் காண்டத்ரயரூபங்களான வேதமார்க்கங்களினல் நாலாபக்கங்களிலும் தேடப்பட்டவரான त्वाम्=உம்மை असौ=இந்த யசோதை अवीक्ष्य=காணுது रुषा= கோபத்துடன் परिमा[र्ग]यन्ती=நாலாபக்கங்களிலும் தேடுகின்றவளாய் सुकृतिनि=புண்ணியசாலியான उलूखले=உரலில் இருந்துகொண்டு ओतवे=பூனையையும் பொருட்டு दीयमाननवनीतम्=கொடுக்கப்படும் வெண்ணெயையுடைய உம்மை सन्ददर्श=கண்டாள். (108) (எ-று)

त्वां प्रगृह्य बत भीतिभावनाभासुराननसरोजमाशु सा ।
रोषरूषितमुखी सखीपुरो बन्धनाय रशनामुपाददे ॥ १०९ ॥

(ப-ரை) सा=அவள் भीतिभावनाभासुराननसरोजम्=பயத்தின் அபிநயத்தினல் பிரகாசிக்கின்ற முககமலத்தையுடையவரான त्वाम्= உம்மை आशु=விரைவாக प्रगृह्य=கையில் பிடித்துக்கொண்டு रोषरूषितमुखी=கோபம் நிறைந்த முகமுள்ளவளாய் सखीपुरः=தோழி

களுக்கெதிரில் **बन्धनाय**=கட்டுவதற்கு வேண்டி **रशनाम्**=கயிற்றை **उपाददे**=எடுத்தாள் **बत**=இது வெகு ஆஶ்சரியமாக விருந்தது. (109)

**बन्धुमिच्छति यमेव सज्जनस्तं भवन्तमयि बन्धुमिच्छती ।**
**सा नियुज्य रशनागुणान् बहून् द्व्यङ्गुलोनमखिलं किलैक्षत ॥ ११० ॥**

(ப-ரை) **अयि !**=ஹேபகவன்! **यम्**=எவரை **सज्जनः**=மோக்ஷத்தில் விருப்பமுள்ள சாதுஜனமானது **बन्धुम्**=ப்ரேமைக்கு வசப்பட்டவராகச் செய்ய **इच्छति**=விரும்புகிறதோ **तम्**=அந்த **भवन्तमेव**=உம்மையே **बन्धुम्**=கயிற்றால் கட்ட **इच्छती**=விருப்பங்கொண்ட **सा**=அந்த யசோதையானவள் **बहून्**=வெகுவான **रशनागुणान्**=தாம்புக்கயிறுகளை **नियुज्य**=முடிபோட்டும்கூட **अखिलम्**=எல்லாக்கயிற்றையும் **द्व्यङ्गुलोनम्**=இரண்டு அங்குலம் குறைவுள்ளதாக **किल**=அன்றோ **ऐक्षत**=கண்டாள். (110) (எ-று)

**विस्मितोत्स्मितसखीजनेक्षितां स्विन्नसन्नवपुषं निरीक्ष्य ताम् ।**
**नित्यमुक्तवपुरप्यहो हरे बन्धमेव कृपयान्वमंसथाः ॥ १११ ॥**

(ப-ரை) **हेहरे !**=ஶ்ரீக்ருஷ்ண! **ताम्**=அந்த யசோதை **विस्मितोत्स्मितसखीजनेक्षिताम्**=ஆஶ்சரியத்தை யடைந்தவர்களும், விழுந்து விழுந்துசிரிக்கின்றவர்களுமான தோழிஜனங்களால் பார்க்கப்பட்டவளும், **स्विन्नसन्नवपुषम्**=வியர்த்தும் தளர்ந்துமான சரீரமுள்ளவளுமாக விருப்பதை **निरीक्ष्य**=கண்டு **नित्यमुक्तवपुरपि**=எப்பொழுதுமே முக்தமான(பந்தமற்ற)சரீரமுள்ளவராயினுங்கூட **बन्धमेव**=பந்தத்தையே **कृपया**=கருணையினால் **अन्वमंसथाः**=ஸம்மதித்தீர் **अहो !**=வெகு ஆஶ்சரியமிது. (111) (எ-று)

**स्थीयतां चिरमुलूखले खलेत्यागता भवनमेव सा यदा ।**
**प्रागुलूखलबिलान्तरे तदा सर्पिरर्पितमदन्नवास्थिथाः ॥ ११२ ॥**

(ப-ரை) **हेखल !**=ஹே துஷ்ட! **उलूखले**=உரலில் **चिरम्**=வெகு காலம் **स्थीयताम्**=இருக்கப்படட்டும் **इति**=என்று சொல்லி **सा**=அந்த யசோதை **यदा**=எப்பொழுது **भवनम्**=வீட்டை **आगता**=அடைந்தாளோ **तदैव**=அப்பொழுதே **प्रागुलूखलबिलान्तरे स्थितम्**=முன்னரே உரலின் துவாரத்தில் வைக்கப்பட்டிருக்கின்ற **सर्पिः**=வெண்ணெயை **अदन्**=தின்றுகொண்டு **अवास्थिथाः**=இருந்தனை. (112) (எ-று)

## अथ दशमोऽध्यायः ॥

राजोवाच—कथ्यतां भगवन्नेतत्तयोः शापस्य कारणम् । यत्तद्विगर्हितं कर्म येन वा देवर्षेस्तमः ॥ १ ॥ श्रीशुक उवाच—रुद्रस्यानुचरौ

---

यद्यपाशसुगमो भवान्विभो! संयतः किमु सपाशयाऽनया ।
एवमादिदिविजैरभिष्टुतो वातनाथ परिपाहि मां गदात् ॥ ११३ ॥

(ப-ரை) हेविभो!=ஹேவிபுவே! भवान्=நீர் अपाशसुगमो यदि=பாசமற்ற (விஷயப் பற்றற்ற) வர்களால் சுளுவில் அடையக்கூடியவர் என்பது உண்மையாயின் सपाशया=பாசத்துடன் (விஷயப் பற்றுடன்) கூடின अनया=இந்த யசோதையினுல் किमु? என்? संयतः=கட்டப்பட்டீர். हेवातनाथ!=குருவாயூரில் வஸிக்கும் நாத ! एवमादि=இதை முதன்மையாகக் கொண்டிருக்கும்படி दिविजैः=தேவர்களால் अभिष्टुतः=துதிக்கப்பட்ட நீர் माम्=என்னை गदात्=ரோகத்தினின்றும் परिपाहि=காப்பீராக. (113) (எ–று)

இவ்விதம் கிருஷ்ணனுடைய உலூகலபந்தனவர்ணனமென்ற நாற்பத்தேழாவது தசகம் முற்றிற்று.



## பத்தாவது அத்தியாயம்.

(அ–கை) दशमेऽपातयद्रिङ्गन्नन्तरा यमळार्जुनौ ।
तत्रत्याभ्यां च देवाभ्यां कृष्णः स्तुत इतीर्यते ॥ १ ॥

(க–ரை) இடையில் கட்டின உரலை இழுத்துக்கொண்டு நடுவில் செல்லுகின்ற கிருஷ்ணன் இரட்டையாகச் சேர்ந்து முளைத்திருக்கின்ற அர்ஜுன மரங்களைக் கீழில் தள்ளிவிட்டார் என்றும், அவற்றிலுள்ள தேவர்களால் ஸ்துதிக்கப்பட்டார் என்றும் இந்தப் பத்தாவது அத்தியாயத்தில் சொல்லப்படுகிறது. (1) (எ–று)

ராஜன் சொல்லலுற்றூர்—ஹே பகவன்! சாபத்துக்குக் காரணமான அவர்களுடைய கெட்ட கார்யம் யாதுண்டோ அதையும், எதனுல் பாகவதோத்தமரான நாரதருக்குக்கூட கோபமுண்டாயிற்றோ அந்த இதையும் சொல்லவேண்டும். (1) ஸ்ரீசுகர் சொல்லலுற்றூர்—

भूत्वा सुदृप्तौ धनदात्मजौ । कैलासोपवने रम्ये मन्दाकिन्यां मदोत्कटौ ॥२॥ वारुणीं मदिरां पीत्वा मदाघूर्णितलोचनौ । स्त्रीजनैरनुगायद्भिश्चेरतुः पुष्पिते वने ॥ ३ ॥ अन्तः प्रविश्य गङ्गायामम्भोजवनराजिनि । चिक्रीडतुर्युवतिभिर्गजाविव करेणुभिः ॥ ४ ॥ यदृच्छया च देवर्षिर्भगवांस्तत्र कौरव । अपश्यन्नारदो देवौ क्षीवाणौ समबुध्यत ॥ ५ ॥ तं दृष्ट्वा व्रीडिता देव्यो विवस्त्राः शापशङ्किताः । वासांसि पर्यधुः शीघ्रं विवस्त्रौ नैव गुह्यकौ ॥ ६ ॥ तौ दृष्ट्वा मदिरामत्तौ श्रीमदान्धौ सुरात्मजौ । तयोरनु-

---

ருத்திரனுடைய வேலைக்காரர்களான குபேரனது புத்திரர்கள் மிக்கக் கொழுப்புள்ளவர்களாகவும், அதிகம் மதங்கொண்டவர்களாகவுமாகி கைலாஸபர்வதத்திலுள்ள அழகிய உத்யான வனத்திலுள்ள கங்கைக்கரையில் புஷ்பங்கள் நிறைந்தவனத்தில் * வருணனிடமிருந்துண்டான மத்யத்தைக்குடித்து அதன் மூலமுண்டான மதத்தினல் சுழலுகின்ற கண்களையுடையவர்களாய் அநுஸரித்துக்கானம் செய்கின்ற ஸ்திரீ ஜனங்களுடன் கூட சஞ்சரித்தனர். (2–3) தாமரஸ புஷ்பங்களுடைய கூட்டங்கள் நிறைந்த கங்கையின் நடுவில் பிரவேசித்து பெண் யானைகளுடன் இரண்டு ஆண் யானைகள் போல விளையாடினர். (4) ஹே கௌரவ! தைவஸங்கல்பத்தால் அங்குவந்த பகவானும் தேவ ரிஷியுமான நாரதர் அந்தக் குபேர குமாரர்களைக் கண்ணுற்று (அவர்கள்) மதங்கொண்டிருப்பதாகவு மறிந்துகொண்டார். (5) அவரைக்கண்டு இடையில் வஸ்திரமற்றவர்களும், வெட்கமடைந்தவர்களுமான தேவிகள் சாபம் வருமோ என சங்கை கொண்டவர்களாய் விரைவாக வஸ்திரத்தை இடையிற்சுற்றிக்கொண்டனரேயன்றி வஸ்திரமிழந்த குஹ்யகர்கள் அவ்விதம் சுற்றிக்கொள்ளவில்லை. தேவகுமாரர்களும், தன மதம் நிறைந்தவர்களுமான அவ்விருவரும் மத்யத்தினல் மதங்கொண்டிருப்பதைக் கண்டு அவர்களுக்கு மதத்தைப்போக்கும் அனுக்கிரஹம் செய்யவேண்டியும், ஸ்ரீகிருஷ்ணதர்சனத்தை உண்டுபண்ணவேண்டியும் சாபத்தைக் கொடுக்கப்போகின்றவராய் பின்வருமாறு சொல்லத்தொடங்கினர்.

---

* வருணனை தேவதையாகவுடைய யாதொரு அன்னமுண்டோ தன்மயமான ஸுரை வாருணீ எனப்படும் என ஸ்ரீதராசாரியஸ்வாமிகள் சொல்லி இருக்கின்றனர்.

ग्रहार्थाय शापं दास्यन्निदं जगौ ॥ ७ ॥ नारद उवाच—न ह्यन्यो जुषतो जोष्यान्बुद्धिभ्रंशो रजोगुणः । श्रीमदादाभिजात्यादिर्यत्र स्त्रीद्यूतमासवः ॥ ८ ॥ हन्यन्ते पशवो यत्र निर्दयैरजितात्मभिः । मन्यमानैरिमं देहमजरामृत्यु नश्वरम् ॥ ९ ॥ देवसंज्ञितमप्यन्ते कृमिविड्भस्मसंज्ञितम् । भूतध्रुक् तत्कृते स्वार्थं किं वेद निरयो यतः ॥ १० ॥ देहः किमन्नदातुः स्वं निषेक्तुर्मातुरेव च । मातुः पितुर्वा बलिनः क्रेतुरग्नेः शुनोऽपि वा ॥११॥ एवं साधारणं देहमव्यक्तप्रभवाप्ययम् । को विद्वानात्मसात्कृत्वा हन्ति

---

நாரதர்—"பிரியமான விஷயங்களை அனுபவிக்கின்ற புருஷனுக்கு ஸ்ரீமதத்தை (தன மதத்தை) க்காட்டிலும் வேறான நற்குடிப் பிறத்தல், சிறந்த வித்தை முதலியவற்றாலுண்டுபண்ணப்பட்ட மதமும், ரஜோகுணத்தின் கார்யமான ஹாஸ்யம் முதலியனவும் புத்தியை அவ்வளவாக அழித்துவிடக்கூடியதன்று. எந்த ஸ்ரீமதம் வந்தாலோ ஸ்திரீகளும், சூதாடுதலும், மத்யமும், (கள் குடித்தலும்) உடன் உண்டாகின்றனவன்றோ? (8) எந்த ஸ்ரீமதம் வந்த காலத்திலோ தயையற்றவர்களும், மனதடக்கமற்றவர்களும், நஸ்வரமான இந்தத் தேஹத்தை மூப்பும் மரணமுமற்றதென எண்ணுகின்றவர்களுமான அவர்களால் பசுக்கள் கொல்லப்படுகின்றன. (9) நரதேவனென்றும், பூதேவனென்றுமான பெயருள்ளதாயினும் கூட முடிவில் புழுவென்றும், மலமென்றும், சாம்பலென்றுமான பெயரையடைகின்ற தேஹம் யாதொன்றோ அதற்குவேண்டி எவன் பிராணிகளைக் கொல்லுகின்றானோ, எத்தகைய பிராணிவதத்தால் இவன் நரகத்தையடையக் கூடுமோ, அத்தகைய சொந்தப்பிரயோஜனத்தை (தனக்குவரும் கெடுதலை) இவன் அறியவில்லையன்றோ? (10) நான் என எண்ணப்படும் தேஹமோ அன்னம் கொடுப்பவனுக்கோ, பிதாவுக்கோ, மாதாவுக்கோ, மாதாமஹனுக்கோ, பலமுள்ளவனுக்கோ, விலைகொடுத்து வாங்குபவனுக்கோ, எறும்புக்கோ, நாய்க்கோ, அன்றோ சொத்தாகவிருக்கின்றது. (11) இவ்விதம் பலர்க்குப் பொதுவானதும், அவ்யக்தத்தினின்றுமுண்டானதும், அவ்யக்தத்திலொடுங்குவதுமான தேஹத்தை ஆத்மாவாக எண்ணிக்கொண்டு மூடனைத் தவிர்த்து வேறு எந்த வித்வான்தான் பிராணிகளைக் கொல்லுவான். (12) ஸ்ரீமதத்தால் அறிவிழந்த மூடனுக்கு எழ்மையானது மே

जन्तूनतेऽसतः ॥ १२ ॥ असतः श्रीमदान्धस्य दारिद्र्यं परमञ्जनम् । आत्मौपम्येन भूतानि दरिद्रः परमीक्षते ॥ १३ ॥ यथा कण्टकविद्धाङ्गो जन्तोर्नेच्छति तां व्यथाम् । जीवसाम्यं गतो लिङ्गैर्न तथाऽविद्धकण्टकः ॥ १४ ॥ दरिद्रो निरहंस्तम्भो मुक्तः सर्वमदैरिह । कृच्छ्रं यदृच्छयाप्नोति तद्धि तस्य परं तपः ॥ १५ ॥ नित्यं क्षुत्क्षामदेहस्य दरिद्रस्यान्नकांक्षिणः । इन्द्रियाण्यनुशुष्यन्ति हिंसापि विनिवर्तते ॥ १६ ॥ दरिद्रस्यैव युज्यन्ते साधवः समदर्शिनः । सद्भिः क्षिणोति तं तर्षं तत आराद्विशुद्ध्यति ॥ १७ ॥ साधूनां समचित्तानां मुकुन्दचरणैषिणाम् । उपेक्ष्यैः किं धनस्तम्भैरसद्भिरसदाश्रयैः ॥ १८ ॥ तदहं मत्तयोर्माध्व्या वारुण्या

---

லான ஸித்தாஞ்ஜனமாகும். (மையாகும்) தரித்திரன் ஒருவனே பிராணிகளைத் தனக்கு ஒப்பாகப் பார்க்கிறான். (13) முள்ளினால் தைய்க்கப்பட்ட அங்கமுடையவனும், முகத்தின் வாட்டம் முதலிய குறிகளால் எல்லாஜீவர்களுக்கும் ஸுகமோ துக்கமோ ஸமமானதே என அறிந்தவனுமான மனிதன் அந்தத்துக்கத்தை வேறு பிராணிக்கு எவ்விதம் விரும்பமாட்டானோ அவ்விதம் முள்தைய்த்துக் கஷ்டப் படாதவன் விரும்புவதில்லை. (14) அஹங்காரமற்றவனும், * எல்லாமதங்களினாலும், விடுபட்டவனுமான தரித்திரன் தைவச்செயலாய் கஷ்டத்தையடைகிறான் என்பது யாதுண்டோ அதுவே அவனுக்கு மேலான தவமாகின்றது. (15) பசியினால் வாடின தேஹமுள்ளவனும், எப்பொழுதும் அன்னத்தை விரும்புகின்றவனுமான தரித்திரனுக்கு இந்திரியங்கள் ஒடுங்கிவிடுகின்றன. ஹிம்ஸையும் விலகுகிறது. ஸமதர்சிகளான ஸாதுக்கள் தரித்திரனுடன் தானாகவே கூடுகின்றனர். ஸாதுக்கள் மூலம் (அவன்) அந்த ஆசையைப் போக்கிக்கொள்ளுகிறான். அதனின்றும் சீக்கிரமாகச் சுத்தனாகி முக்தனாகி விடுகிறான். (16–17) ஸமமான சித்தமுள்ளவர்களும், முகுந்தனுடைய சரணத்தில் பக்தியுள்ளவர்களுமான ஸாதுக்களுக்கு வெறுக்கத்தக்கவர்களும் தனத்தினால் கர்வங்கொண்டவர்களும், துஷ்டர்களுக்கு ஆச்ரயமானவர்களுமான அஸாதுக்களினால் ஆகவேண்டுவதென்னே? (18) ஆகவே நான் வருணனை தேவதையாகவுடைய

---

* வித்யாமதம், தனமதம், குலமதம் எனமதம் 3 விதங்களாகும்.

श्रीमदान्धयोः । तमोमदं हरिष्यामि स्त्रैणयोरजितात्मनोः ॥ १९ ॥ यदिमौ लोकपालस्य पुत्रौ भूत्वा तमःप्लुतौ । न विवाससमात्मानं विजानीतः सुदुर्मदौ ॥ २० ॥ अतोऽर्हतः स्थावरतां स्यातां नैवं यथा पुनः । स्मृतिः स्यान्मत्प्रसादेन तत्रापि मदनुग्रहात् ॥ २१ ॥ वासुदेवस्य सांनिध्यं लब्ध्वा दिव्यशरच्छते । वृत्ते स्वर्लोकतां भूयो लब्धभक्ती भविष्यतः ॥ २२ ॥

श्रीशुक उवाच—एवमुक्त्वा स देवर्षिर्गतो नारायणाश्रमम् ॥ नलकूवरमणिग्रीवावासतुर्यमलार्जुनौ ॥ २३ ॥ ऋषेर्भागवतमुख्यस्य सत्यं कर्तुं वचो हरिः । जगाम शनकैस्तत्र यत्रास्तां यमलार्जुनौ ॥ २४ ॥ देवर्षिर्मे

---

மத்யத்தினல் மதங்கொண்டவர்களும், தனமதத்தால் அறிவிழந்தவர்களும், மனேஜயமற்றவர்களும் ஸ்திரீலோலர்களுமான இவர்களுடைய அஞ்ஞானமூல மேற்பட்ட மதத்தைப் போக்கப்போகிறேன். (19) இவர்கள் லோகபாலனை குபேரனது புத்திரர்களாகித் தமோகுணம் நிறைந்தவர்களாகவும், கெட்ட மதமுள்ளவர்களாகவுமாகி இடையில் வஸ்திமில்லாதிருத்தலை யாதுகாரணத்தாலறிந்தனரில்லையோ அக்காரணத்தால் எவ்விதமானல் மறுபடியும் இவ்விதம் செய்யாரோ (அத்தகைய) மரமாக இருத்தலை அடையக்கடவர். அப்பிறவியிலும் என்னுடைய அனுக்கிரஹத்தினல் (முற்பிறவியின்) நினைவு இருக்கும். தேவவருஷத்தில் 100 வருஷங்கள் கடந்ததும் என்னுடைய அனுக்கிரஹத்தினல் வாஸுதேவனுடைய ஸான்னித்யத்தையடைந்து திரும்பவும் தேவபாவத்தைபடைந்து பகவத்பக்தியுள்ளவர்களாக ஆகப்போகின்றனர்" என்ருர். (20–22)

ஸ்ரீசுகர் சொல்லுகிருர்—அந்தத் தேவர்ஷியானவர் இவ்விதம் சொல்லி நாராயணாஸ்ரமத்தையடைந்தார். நளகூபரன் மணிக்ரீவன் என்ற *இருவரும் யமளார்ஜுனமரங்களாக உண்டாயினர். (23) எவ்விடத்தில் யமளார்ஜுனங்களிருக்கின்றனவோ அங்கு பகவத்பக்தர்களுள் முக்யரான நாரதமஹருஷியின் வார்த்தையை ஸத்யமாகச் செய்யவேண்டி பகவான் மெள்ளச் சென்ருர். (24) யாது காரணத்தால் தேவர்ஷியான (நாரதர்) எனக்கு மிக்கப்பிரிய

---

* ஒன்றையொன்று தழுவி இரண்டு மருதமரங்களாகவுமுண்டாயினர் என்று கருத்து.

प्रियतमो यदिमौ धनदात्मजौ । तत्तथा साधयिष्यामि यद्गीतं तन्महात्मना ॥ २५ ॥ इत्यन्तरेणार्जुनयोः कृष्णस्तु यमयोर्ययौ । आत्मनिर्वेशमात्रेण तिर्यग्गतमुलूखलम् ॥ २६ ॥ बालेन निष्कर्षयताऽन्वगुलूखलं तद्दामोदरेण तरसोत्कलिताङ्घ्रिबन्धौ । निष्पेततुः परमविक्रमितातिवेपस्कन्धप्रवालविटपौ कृतचण्डशब्दौ ॥ २७ ॥ तत्र श्रिया परमया ककुभः स्फुरन्तौ सिद्धावुपेत्य कुजयोरिव जातवेदाः। कृष्णं प्रणम्य शिरसाऽखिललोकनाथं बद्धाञ्जली विरजसाविदमूचतुः स्म ॥ २८ ॥ कृष्ण कृष्ण महायोगिंस्त्वमाद्यः पुरुषः परः । व्यक्ताव्यक्तमिदं विश्वं रूपं ते ब्राह्मणा विदुः ॥२९॥ त्वमेकः सर्वभूतानां देहास्वात्मेन्द्रियेश्वरः । त्वमेव कालो भगवान्विष्णु-

---

மானவரோ, இந்தக் குபேர புத்திரர்களும் பிரியமானவர்களோ அக்காரணம்பற்றி மஹாத்மாவான நாரதரால் எது சொல்லப்பட்டதோ அதை அவ்விதமே செய்து முடிக்கிறேன் எனவெண்ணிக் கொண்டு கிருஷ்ணனே இரட்டையான மருதமரங்களின் நடுவில் சென்றார். கிருஷ்ணன் பிரவேசித்தமாத்திரத்தில் உரல் குறுக்காக மாட்டிக்கொண்டது. (25–26) குறுக்காக மாட்டிக்கொண்ட அந்த உரலைத்தாமோதரனான பாலன் இழுக்குங்கால் அம்மரங்கள் பிடுங்கப் பட்ட வேர்ப்பிடிப்பை யுடையனவாகவும், பரமனான கிருஷ்ணனுடைய பராக்கிரமத்தினால் மிக்க அசைந்த கவை, தளிர், கிளை இவற்றையுடையனவாகவும், பயங்கரமான சப்தத்தையுடையனவாகவும் வேகமாய் விழுந்தன. (27) மரங்களினின்றும் வெளிவந்த அக்கினிகள்போன்று மேலான காந்தியினால் நாலா பக்கத்திலும் பிரகாசிக்கின்ற இரண்டு ஸித்த புருஷர்கள் அங்கு வந்து எல்லாவுலகுகளுக்கும் நாதனான கிருஷ்ணனைத் தலையினால் வணங்கிக் கர்வமற்றவர்களாய் இருகைகளையும் கூப்பிக்கொண்டு பின்வருமாறு சொல்லத்தொடங்கினர். (28) "ஹே மஹாயோகின்! கிருஷ்ண! கிருஷ்ண! நீர் காரணபூதரான பரமபுருஷனே ஆவீர். ஸ்தூல ஸூக்ஷ்மமான இந்த விஶ்வத்தை உமது ரூபமாக ப்ரம்ஹவித்துக்கள் என்னுகின்றனர். (29) நீரொருவரே எல்லா ப்ராணிகளுடையவும் தேஹம், ப்ராணன், அஹங்காரம், இந்திரியம் இவற்றுக்கு ஈஸ்வரனாகவிருக்கின்றீர். பகவானும், எங்கும் நிறைந்தவரும், அழிவற்ற

रव्यय ईश्वरः ॥ ३० ॥ त्वं महान्प्रकृतिः सूक्ष्मा रजः सत्वतमोमयी । त्वमेव पुरुषोऽध्यक्षः सर्वक्षेत्रविकारवित् ॥ ३१ ॥ गृह्यमाणैस्त्वमग्राह्यो विकारैः प्राकृतैर्गुणैः । कोन्विहार्हति विज्ञातुं प्राक्सिद्धं गुणसंवृतः ॥३२॥ तस्मै तुभ्यं भगवते वासुदेवाय वेधसे । आत्मद्योतगुणैश्छन्नमहिम्ने ब्रह्मणे नमः ॥ ३३ ॥ यस्यावतारा ज्ञायन्ते शरीरेष्वशरीरिणः । तैस्तैरतुल्यातिशयैर्वीर्यैर्देहिष्वसंगतैः ॥ ३४ ॥ स भवान्सर्वलोकस्य भवाय विभवाय च । अवतीर्णोऽशभागेन सांप्रतं पतिराशिषाम् ॥ ३५ ॥ नमः परमकल्याण नमः परममङ्गल । वासुदेवाय शान्ताय यदूनां पतये नमः ॥ ३६ ॥ अनुजानीहि नौ भूमंस्तवानुचरकिंकरौ । दर्शनं नौ भगवत ऋषेरासीदनु-

---

வரும் ஈஸ்வரனுமான நீரே காலமாகவிருக்கின்றீர். (30) நீரே மஹத்தத்துவமாகவும், ரஜோகுணம் ஸத்வகுணம் தமோகுணம் இவை வாய்ந்த ஸூக்ஷ்மமான ப்ரகிருதியாகவுமாவீர். நீரே எல்லா க்ஷேத்திரங்களிலுமுள்ள விகாரங்களை அறிந்தவரும் அந்தர்யாமியு மான புருஷனுவீர். (31) நீரோ திருஶ்யங்களும் ப்ரகிருதியின் காரியங்களுமான குணங்களினுல் (புத்தி அஹங்காரம் இந்திரியம் முதலியவற்றுல்) கிரஹிக்கமுடியாதவர். ப்ராகிருதகுணங்களினுல் சூழப்பட்டவனுன எந்த ஜீவன்தான் தனக்கு முன்னரேயுள்ள உம்மை அறிவதற்குச் சக்தனுவான். (32) பகவானும் வாஸு தேவனும், ஜகத்ஸ்ரஷ்டாவும், தன்மூலமேற்படும், ப்ரகாசத்தையுடை யகுணங்களினுல் மறைக்கப்பட்ட ஸ்வரூபத்தையுடையவரும், ப்ரம் ஹமுமான அந்த உமக்கு நமஸ்காரம். (33) ஒப்புயர்வற்றனவும் ஜீவர்களிடத்துப் பொருந்தாதனவுமான அந்தந்தவீரியங்களுடன் கூட அசரீரியான எந்த உமது அவதாரங்கள் சரீரங்களில் காணப் படுகின்றனவோ கர்மபலனைத் தரும் அந்த நீர் ஸர்வலோகத்தினு டையவும் க்ஷேமத்துக்கும் மோக்ஷத்துக்கும் வேண்டி பரிபூர்ண ரூபத்துடன் இப்பொழுது அவதரித்திருக்கின்றீர். (34–35) ஹே பரமகல்யாண! உமக்கு நமஸ்காரம். ஹேபரமமங்கள! உமக்கு நமஸ்காரம். வாசுதேவரும் சாந்தரும் யாதவர்களுக்குப் பதியு மான உமக்கு நமஸ்காரம். (36) ஹேபூமன்! உமது வேலைக்கார னுன குபேரனுடைய கிங்கரர்களான எங்களுக்கு விடையளிப்பீராக.

ग्रहात् ॥ ३७ ॥ वाणी गुणानुकथने श्रवणौ कथायां हस्तौ च कर्मसु मनस्तव पादयोर्नः । स्मृत्यां शिरस्तव निवासजगत्प्रणामे दृष्टिः सतां दर्शनेऽस्तु भवत्तनूनाम् ॥ ३८ ॥

श्रीशुक उवाच—इत्थं संकीर्तितस्ताभ्यां भगवान्गोकुलेश्वरः । दाम्ना चोलूखले बद्धः प्रहसन्नाह गुह्यकौ ॥ ३९ ॥ श्रीभगवानुवाच—ज्ञातं मम पुरैवैतदृषिणा करुणात्मना । यच्छ्रीमदान्धयोर्वाग्भिर्विभ्रंशोऽनुग्रहः कृतः ॥ ४० ॥ साधूनां समचित्तानां सुतरां मत्कृतात्मनाम् । दर्शनान्नो भवेद्बन्धः पुंसोऽक्ष्णोः सवितुर्यथा ॥ ४१ ॥ तद्गच्छतं मत्परमौ नलकूवर सादनम् ।

---

நாரத மஹருஷியினுடைய அனுக்கிரஹத்தினால் பகவானான உம்முடைய தரிசனம் எங்களுக்குக் கிடைத்தது. (37) "எங்களுடைய வாக்கானது தங்களுடைய குணங்களைச்சொல்லுவதிலும், காதுகள் கதையைக் கேட்பதிலும், கைகள் உமது பூஜாதி கர்மங்களிலும், மனது உமது பாதங்களை நினைக்கும் விஷயத்திலும், தலையானது உமக்கு இருப்பிடமாகவான ஜகத்தை வணங்குவதிலும், கண்ணானது உமது சரீரங்களான ஸாதுக்களின் தர்சன விஷயத்திலும் இருக்கட்டும்" என்றனர். (38)

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்—இவ்விதம் அவர்களால் நன்கு ஸ்துதிக்கப்பட்டவரும், கோகுலேஸ்வரரும், கயிற்றால் உரலில் கட்டப்பட்டவருமான பகவான் சிரித்துக்கொண்டு குஹ்யகர்களைப் பார்த்துச் சொல்லலுற்றார். (39) ஸ்ரீபகவான் சொன்னதாவது:—"கருணாத்மாவான ருஷியினால் ஸ்ரீமதத்தினால் அந்தர்களான (அறிவிழந்தவர்களான) உங்களுக்கு ஐஸ்வரியத்தை யழித்தல் ரூபமான அனுக்கிரஹமானது செய்யப்பட்டதென்ற இது முன்னரே என்னாலறியப்பட்டது. (40) ஸமசித்தர்களும் மிகவும் என்னிடத்திலர்ப்பணஞ்செய்யப்பட்ட மனதையுடையவர்களுமான ஸாதுக்களின் தரிசனத்திலிருந்து மனிதனது பந்தமானது ஸூரியனுடைய தரிசனத்தினால் கண்களுடைய ப்ரதிபந்தமானது (தடையானது) போல நீங்கிவிடுமன்றோ. (41) ஆனதுபற்றி *ஹே நளகூபர! என்னையே

---

* இவ்விருவருள் நளகூபரனே முக்கியனாகவாவதால் இவ்விதம் இவன் மட்டும் அழைக்கப்பட்டான்.

எறிந்ததனால் **तरुमण्डलात्**=மரக்கூட்டத்தினின்றும் **झटिति**=வேகமாக **ऊर्ध्वम्**=மேலில் **गत:**=சென்ற **सोयम्**=அந்த இந்த **कुसुमनिकर:**=புஷ்ப ஸமூஹமானது **शनै:**=மெதுவாக **समेति**=வந்து கொண்டிருக்கிறது **नूनम्**=நிஸ்சயம் **इति**=என்று **सहेलम्**=விளையாட்டாக **उदैरय:**=பதில் சொன்னீர். (139) (எ–று)।

**क्वचन दिवसे भूयो भूयस्तरे परुषातपे**
**तपनतनयापाथ: पातुं गता भवदादय: ।**
**चलितगरुतं प्रेक्षामासुर्बकं खलु विस्मृतं**
**क्षितिधरगरुच्छेदे कैलासशैलमिवापरम् ॥ १४० ॥**

(ப–ரை) **भूय:**=திரும்பவும் **क्वचनदिवसे**=ஒரு தினத்தில் **भूयस्तरे**=மிக்கவதிகமான **परुषातपे**=கடுமையான வெய்யிலில் **तपनतनया पाथ:**=யமுனையின் ஜலத்தை **पातुम्**=குடிப்பதற்கு **गता:**=சென்ற **भवदादय:**=நீர் முதலியவர்கள் **क्षितिधरगरुच्छेदे**=மலைகளின் இரக்கைகளைத் துண்டிக்குங்கால் **विस्मृतम्**=மறக்கப்பட்ட **अपरम्**=மற்றொரு **कैलासशैलमिव**=கைலாஸ பர்வதத்தைப் போன்றதும் **चलितगरुतम्**=அசைகின்ற இரக்கைகளையுடையதுமான **बकम्**=கொக்கை **प्रेक्षामासु:खलु**=பார்த்தீர்களன்றோ. (140) (எ–று)

**पिबति सलिलं गोपव्राते भवन्तमभिद्रुत:**
**स किल निगलन्नग्निप्रख्यं पुनर्द्रुतमुद्वमन् ।**
**दलयितुमगात् त्रोट्या: कोट्या तदातु भवान्विभो !**
**खलजनभिदाचुञ्चुश्चञ्चू प्रगृह्य ददार तम् ॥ १४१ ॥**

(ப–ரை) **गोपव्राते**=இடைக் குழந்தைகளின் கூட்டமானது **सलिलम्**=ஜலத்தை **पिबति**=குடிக்குங்கால் **स किल**=அந்த அஸுரனே **अभिद्रुत:**=ஓட்டமாக ஓடிவந்து **भवन्तम्**=உம்மை **निगिलन्**=விழுங்கினவனாய் **अग्निप्रख्यम्**=அக்னிக்கொப்பான உம்மை **पुन:**=மறுபடியும் **द्रुतम्**=வேகமாக **उद्वमन्**=கக்குகின்றவனாய்க் கொண்டு **त्रोट्या:**=மூக்கினுடைய **कोट्या**=நுனியினால் **दलयितुम्**=கிழிப்பதற்குவேண்டி **अगात्**=வந்தான் **हे प्रभो!**=ஓய் ப்ரபுவே! **खलजनभिदाचुंचु:**=துஷ்ட ஜனங்களையழிப்பதில் ஸமர்த்தரான **भवान्**=நீர் **तदातु**=அப்பொழுதோ **चञ्चू**=அவனது மூக்குகளை **प्रगृह्य**=பிடித்துக்கொண்டு **तम्**=அவனை **ददार**=கிழித்தெறிந்தீர். (141) (எ–று)

सपदि सहजां सन्द्रष्टुं वा मृतां खलु पूतना-
मनुजमघमप्यग्रे गत्वा प्रतीक्षितुमेव वा ।
शमननिलयं याते तस्मिन् बके सुमनोगणे
किरति सुमनोवृन्दं वृन्दावनाद्गृहमैयथाः ॥ १४२ ॥

(ப-ரை) तस्मिन्=அந்த बके=பகாஸுரன் सपदि=சீக்கிரமாக (எதிர்பாராதபடி) मृताम्=மரித்த सहजाम्=உடன் பிறந்தவளான पूतनाम्=பூதனையை सन्द्रष्टुं वा खलु=பார்ப்பதற்கு வேண்டியோ, वा= அல்லது अनुजम्=தம்பியான अघम्=அகாஸுரனை अग्रेगत्वा=முன்னரே போயிருந்து प्रतीक्षितुमपि=எதிர் பார்ப்பதற்குவேண்டியோ शमननिलयम्=யமன் வீட்டை याते=அடைந்ததும், सुमनोगणे=தேவக்கூட்டமானது सुमनोवृन्दम्=புஷ்பக்கூட்டத்தை किरति=வாரி இரைக்குங்கால் त्वम्=நீர் वृन्दावनात्=ப்ருந்தாவனத்தினின்றும் गृहम्=வீட்டை ऐयथाः=அடைந்தீர். (142) (எ-று)

ललितमुरळीनादं दूरान्निशम्य वधूजनै
स्त्वरितमुपगम्यारादारूढमोदमुदीक्षितः ।
जनितजननीनन्दानन्दः समीरणमन्दिर-
प्रथितवसते शौरे दूरीकुरुष्व ममामयान् ॥ १४३ ॥

(ப-ரை) हे समीरणमन्दिरप्रथितवसते != குருவாயூராலயத்தில் ப்ரஸித்த வாஸஸ்தானத்தையுடையவரான ! हेशौरे !=ஹேகிருஷ்ணா! ललितमुरलीनादम्=இனிமையான வேணு நாதத்தை दूरात्=வெகு தொலையில் निशम्य=கேட்டு त्वरितम्=வேகமாக आरात्=அருகில் उपगम्य=வந்து वधूजनैः=கோப ஸ்திரீ ஜனங்களால் आरूढमोदम्=மேன்மேல் பெருகுகின்ற ஸந்தோஷத்தையுடைத்தாயிருக்கும்படி उदीक्षितः=பார்க்கப்பட்டவரும் जनितजननीनन्दानन्दः=உண்டுபண்ணப்பட்டதாய் நந்தகோபர் இவர்களின் ஆனந்தத்தையுடையவருமான நீர் मम=என்னுடைய आमयान्=ரோகங்களை दूरीकुरुष्व=போக்கி அருள்புரிவீராக. (143) (எ-று)

இவ்விதம் வத்ஸாஸுரன், பகாஸுரன் இவர்களின் வத வர்ணனமென்ற ஐம்பதாவது தசகம் முற்றிற்று.

कदाचन व्रजशिशुभिः समं भवान्वनाशने विहितमतिः प्रगेतराम् ।
समावृतो बहुतरवत्समण्डलैः सतेमनैर्निरगमदीश जेमनैः ॥ १४४ ॥

(ப–ரை) हे ईश !=ஹே ஈஶ ! कदाचन=ஒருநாள் भवान्=நீர் व्रज-शिशुभिः समम्=கோகுலத்திலுள்ள குழந்தைகளுடன்கூட वनाशने=வனபோஜனத்தில் विहितमतिः=செய்யப்பட்ட புத்தியையுடையவராய் प्रगेतराम्=விடியற்காலையிலேயே बहुतरवत्समण्डलैः=அதிகமான கன்றுக்கூட்டங்களினால் समावृतः=சூழப்பட்டவராய் (1)सतेमनैः=ஊர்காய்களுடன் கூடின (2)जेमनैः=கட்டுசாதங்களுடன் निरगमत्=வெளிக்கிளம்பினீர். (144) (எ–று)

विनिर्यतस्तव चरणाम्बुजद्वयादुदञ्चितं त्रिभुवनपावनं रजः ।
महर्षयः पुलकधरैः कलेवरैरुदूहिरे धृतभवदीक्षणोत्सवाः ॥ १४५ ॥

(ப–ரை) विनिर्यतः=வெளிக்கிளம்பின तव=உம்முடைய चर-णाम्बुजद्वयात्=அம்புஜம் போன்ற இரு திருவடிகளினின்றும் उदञ्चि-तम्=வெளிக்கிளம்பினதும் त्रिभुवनपावनम्=மூவுலகங்களையும் பரிசுத்தஞ் செய்கின்றதுமான रजः=பொடியை धृतभवदीक्षणोत्सवाः=தரிக்கப்பட்ட உமது தரிசனத்தினாலுண்டான ஸந்தோஷத்தையுடையவர்களான महर्षयः=மஹருஷிகள் पुलकधरैः=பயிர்ச்குச்சலைத் தரிக்கின்ற कलेवरैः=சரீரங்களினால் उदूहिरे=தரித்துக் கொண்டனர்.

प्रचारयत्यविरलशाद्वले तले पशून्विभो भवति समं कुमारकैः ।
अघासुरो न्यरुणदघाय वर्तनीं भयानकः सपदि शयानकाकृतिः ॥

(ப–ரை) हे विभो !=ஓய் விபுவே ! भवति=நீர் कुमारकैः समम्=குழந்தைகளுடன்கூட अविरलशाद्वले=அடர்ந்த பசும்புற்களையுடைய तले=தரையில் पशून्=கன்றுகளை प्रचारयति=மேய்க்குங்கால் भयानकः=பயத்தைத்தருபவனான अघासुरः=அகாசுரனானவன் सपदि=சீக்கிரமாக शयानकाकृतिः=மலைப்பாம்பினுருவமுள்ளவனாய் अघाय=உம்மையும் உம்மையே நம்பின கோபகுமாரர் முதலியோரையும் விழுங்குவதற்குவேண்டி वर्तनीम्=வழியை न्यरुणत्=தடுத்தான். (146)

---

(1) तेमनम्=என்றதால் கறி, குழம்பு, கறிவடாம் முதலிய வ்யஞ்ஜனப் பொருள் சொல்லப்படும். (2) जेमनम् = என்றதால் வெண் பொங்கல், புளியோகரை, சர்க்கரைப்பொங்கல், தயிர் சாதம் முதலியன சொல்லப்படும். இதையே சித்திரான்னமென்பர்,

महाचलप्रतिमतनोर्गुहानिभप्रसारितप्रथितमुखस्य कानने ।
मुखोदरं विहरणकौतुकाद्गताः कुमारकाः किमपि विदूरगे त्वयि ॥

(ப-ரை) त्वयि=நீர் किमपि=சற்று विदूरगे=விலகியிருக்குங்கால் महाचलप्रतिमतनोः=பெரிய மலைக்கொப்பான சரீரத்தையுடையவனும் गुहानिभप्रसारितप्रथितमुखस्य = குஹைக்கொப்பானதும் விரிந்ததும் உயர்ந்ததுமான முகத்தையுடையவனுமான அவனுடைய मुखोदरम्= முகத்தினுள் ப்ரதேசத்தை कुमारकाः=குழந்தைகள் विहरणकौतु-कात्=விளையாட்டிலுள்ள ஆசையினால் गताः=நுழைந்தனர். (147)

प्रमादतः प्रविशति पन्नगोदरं क्वथत्तनौ पशुपकुले सवत्सके ।
विदन्निदं त्वमपि विवेशिथ प्रभो सुहृज्जनं विशरणमाशु रक्षितुम् ॥

(ப-ரை) प्रमादतः=அஜாக்கிரதையினால் पन्नगोदरम्=பாம்பின் வயிற்றை प्रविशति=ப்ரவேசித்த सवत्सके=கன்றுகளுடன் கூடின पशुपकुले=கோபக்குழந்தைகளின் கூட்டமானது क्वथत्तनौ=கொதிக்கும் தேஹத்தையுடையதாகவானபொழுது हे प्रभो!=ஹே ப்ரபோ! इदम्=இதை विदन्=அறிந்த. त्वमपि=நீரும் विशरणम्=ரக்ஷகனற்ற सुहृज्जनम्=ஸ்னேஹித ஜனத்தை रक्षितुम्=காப்பதற்குவேண்டி आशु= விரைவாக विवेशिथ=ப்ரவேசித்தீர். (148) (எ-று)

गलोदरे विपुलितवर्ष्मणा त्वया महोरगे लुठति निरुद्धमारुते ।
द्रुतम्भवान् विदलितकण्ठमण्डलो विमोचयन् पशुपपशून् विनिर्ययौ ॥

(ப-ரை) गलोदरे=கழுத்தினுள்ளில் विपुलितवर्ष्मणा = விருத்தி செய்யப்பட்ட சரீரத்தையுடைய त्वया=உம்மால் महोरगे=பெரிய மலைப்பாம்பானது निरुद्धमारुते=தடுக்கப்பட்ட வாயுவையுடையதாக लुठति=இங்குமங்கும் புரளுங்கால் भवान्=நீர் विदलितकण्ठमण्डलः= பிளக்கப்பட்ட அஸுரனுடைய கழுத்துப் ப்ரதேசத்தையுடையவராய் पशुपपशून्=கோபகுமாரர்களையும் குழந்தைகளையும் विमोचयन्= விடுவித்துக்கொண்டு द्रुतम्=வேகமாக विनिर्ययौ=வெளிவந்தீர். (149)

क्षणं दिवि त्वदुपगमार्थमास्थितं महासुरप्रभवमहो महो महत् ।
विनिर्गते त्वयि तु निलीनमञ्जसा नभःस्थले ननृतुरथो जगुस्सुराः ॥

(ப-ரை) त्वदुपगमार्थम्=நீர் வெளிவருவதற்குவேண்டி दिवि= ஆகாசத்தில் क्षणम्=கொஞ்சகாலம் आस्थितम्=நின்றதும், महासुर-प्रभवम्=பெரிய அஸுரனிடமிருந்துண்டானதுமான महत्=பெரிய

महस्तु=ஜ்யோதிஸ்ஸோ निर्गतं=வெளிவந்த त्वयि=உம்மிடத்தில் अञ्जसा=சீக்கிரமாக निलीनम्=மறைந்தது. अहो=இது வெகு ஆச்சரியமாக இருந்தது. अथो=பிறகு सुराः=தேவர்கள் नभःस्थले=ஆகாசத்தில் ननृतुः=ஆடினர் जगुः=பாடினர். (150) (எ—று)

सविस्मयैः कमलभवादिभिः सुरैरनुद्रुतस्तदनुगतः कुमारकैः ।
दिने पुनस्तरुणदशामुपेयुषि स्वकैर्भवानतनुत भोजनोत्सवम् ॥१५१॥

(ப—ரை) तदनु=பிறகு सविस्मयैः=ஆச்சரியத்துடன் கூடினவர்களான कमलभवादिभिः=ப்ரம்ஹதேவன் முதலியோரால் अनुद्रुतः=ஆகாசமார்க்கமாகப் பின்தொடரப்பட்டவரும் कुमारकैः=கோபகுமாரர்களுடன் गतः=சேர்ந்தவருமான भवान्=நீர் दिने=பகலானது तरुणदशाम्=யௌவன நிலையை उपेयुषि=அடைந்ததும் (அதாவது: நடுப்பகலில்) स्वकैः=சொந்தமான கோப குமாரர்களுடன்கூட भोजनोत्सवम्=வனபோஜனத்திருவிழாவை अतनुत ननु=செய்தீர் அன்றோ.

विषाणिकामपि मुरलीं नितंवके निवेशयन् कवलधरः करांवुजे ।
प्रहासयन् कलवचनैः कुमारकान् बुभोजिथ त्रिदशगणैर्मुदा नुतः ॥

(ப—ரை) विषाणिकाम्=கொம்பு வாத்யத்தையும் मुरलीमपि=வேணுவையும் नितंवके=இடையில் निवेशयन्=சொருகிக்கொண்டும் करांवुजे=இடது கையில் कवलधरः=ஆஹாரத்தை வைத்துக்கொண்டும் कलवचनैः=இனிமையான வார்த்தைகளினுல் कुमारकान्=கோபகுமாரர்களை प्रहासयन्=சிரிக்கச் செய்துகொண்டும், त्रिदशगणैः=தேவக்கூட்டங்களால் नुतः = ஸ்துதிக்கப்பட்டவராய்க் கொண்டும் मुदा=ஸந்தோஷத்துடன் बुभोजिथ=சாப்பிடத் தொடங்கினீர். (152)

सुखाशनन्त्विह तव गोपमण्डले मखाशनात् प्रियमिव देवमण्डले ।
इति स्तुतस्त्रिदशवरैर्जगत्प्रभो मरुत्पुरीनिलय गदात् प्रपाहि माम् ॥

(ப—ரை) हे जगत्पते !=ஹே ஜகத்பதியான கிருஷ்ணா! तव तु=உமக்கோ इह=இந்த அவதாரத்தில் गोपमण्डले=கோப குமாரர்களின் கூட்டத்திலிருந்து सुखाशनम्=சுகமாகச்சாப்பிடுதலானது देवमण्डले=தேவக்கூட்டத்திலிருந்து मखाशनात्=யாகத்தில் ஹவிர்ப்பாகத்தைச் சாப்பிடுவதைக்காட்டிலும் प्रियमिव=ப்ரியம்போலும் इति=என त्रिदशवरैः=தேவ சிரேஷ்டர்களால் स्तुतः=ஸ்தோத்திரம் செய்யப்பட்டீர்,

## अथ त्रयोदशोऽध्यायः ॥

श्रीशुक उवाच—साधु पृष्टं महाभाग त्वया भागवतोत्तम। यन्नूतनयसीशस्य शृण्वन्नपि कथां मुहुः ॥ १ ॥ सतामयं सारभृतां निसर्गो यदर्थवाणीश्रुतिचेतसामपि। प्रतिक्षणं नव्यवदच्युतस्य यत्स्त्रिया विटानामिव साधुवार्ता ॥ २ ॥ शृणुष्वावहितो राजन्नपि गुह्यं वदामि ते। ब्रूयुः

---

हे मरुत्पुराधीश !=ஹே குருவாயூரில் வசிக்கும் ஈஶ்வரனே! माम्= என்னை गदात्=ரோகத்தினின்றும் पाहि=காப்பீராக. (153) (எ—று)

இவ்விதம் அகாஸுரனுடைய வத வர்ணனம் என்ற
ஐம்பத்தோன்ருவது தசகம் முற்றிற்று.



## பதிமூன்ருவது அத்தியாயம்.

(அ—கை) त्रयोदशेऽहरद्ब्रह्मा वत्सान् पालांश्च मायया।
तदा तत्सर्वरूपोऽब्दं कृष्णः पूर्ववदाचरत् ॥ १ ॥

(க—ரை) ப்ரம்ஹதேவன் கன்றுகளையும் அவற்றைமேய்க்கும் கோப குமாரர்களையும் மாயையினுல் அபஹரித்தார். அப்பொழுது ஸ்ரீகிருஷ்ணன் அவ்வெல்லாவற்றின் ரூபத்தை எடுத்துக்கொண்டு முன்போலவே நடந்து வந்தாரென இந்தப்பதிமூன்ருவது அத்தியாயத்திலுபதேசிக்கப்படுகிறது—

ஸ்ரீசுகர் சொல்லலுற்ருர்—ஹே மஹாபாக! பாகவதோத்தம! ஈஶனுடைய கதையை அடிக்கடி கேட்பவனுயினுங்கூட யாதுகாரணத்தால் புதிதுபோலச் செய்கின்ருயோ அக்காரணத்தால் உன்னுல் கேட்கப்பட்டதானது ஸாதுவேயாகும். (1) காமுகர்களுக்கு ஸ்திரீயின் விருத்தாந்தமானதுபோல அச்யுதனுடைய வார்த்தையானது கேட்கப்பட்டதாய்க் கொண்டு ஒவ்வொரு க்ஷணத்திலும் நன்கு புதிதுபோலவே ஆகிறது என்பது யாதுண்டோ இது பகவத்வார்த்தையையே (விருத்தாந்தத்தையே) பயனுகக்கொண்டவாக்கு, செவி, மனம் இவற்றையுடையவர்களாயினுங்கூட ஸாரக்கிராஹிகளாக இருக்கும் ஸாதுக்களுக்கு இயற்கையேயாகும். (2) ஹே ராஜன்!

**स्निग्धस्य शिष्यस्य गुरवो गुह्यमप्युत ॥ ३ ॥ तथाघवदनान्मृत्यो रक्षित्वा वत्सपालकान् । सरित्पुलिनमानीय भगवानिदमब्रवीत् ॥ ४ ॥ अहोऽतिरम्यं पुलिनं वयस्याः स्वकेलिसंपन्मृदुलाच्छवालुकम् । स्फुटत्सरोगन्धहृतालिपत्रिकध्वनिप्रतिध्वानलसद्द्रुमाकुलम् ॥ ५ ॥ अत्र भोक्तव्यमस्माभिर्दिवा रूढं क्षुधार्दिताः । वत्साः समीपेऽपः पीत्वा चरन्तु शनकैस्तृणम् ॥ ६ ॥ तथेति पाययित्वार्भा वत्सानारुध्य शाद्वले । मुक्त्वा शिक्यानि बुभुजुः समं भगवता मुदा ॥ ७ ॥ कृष्णस्य विष्वक्पुरुराजि-**

---

ரஹஸ்யமாக இருப்பினுங்கூட உனக்குச் சொல்லுகின்றேன் ஸாவதானமாகக்கேள். குருக்கள் பக்தியுள்ள சிஷ்யனுக்கு ரஹஸ்யமானதையுங்கூடச் சொல்லிவிடுவார்களன்ளே. (3) முன்சொன்ன ப்ரகாரமாக மிருத்யுவான அகாஸுரனுடைய வாயினின்றும், வத்ஸங்கள் அவற்றை மேய்க்கும் கோபாலர் இவர்களைக்காப்பாற்றி நதியிலுள்ள மணற்றிட்டுக்கிட்டுவந்து பகவான் இதைச்சொல்லலுற்ருர். (4) ஹே தோழர்காள்! தன்னைச்சேர்ந்ததான விளையாட்டின் ஸம்பத்தையுடையதும் மெதுவானதும் வெண்மையானதுமான மணல்களையுடையதும், மலர்ந்த மடுக்களின் மணத்தால் இழுக்கப்பட்ட வண்டு பறவை இவைகள் ஜலத்திற்செய்யும் சப்தத்தாலேற்படும் எதிரொலியினுல் அழகுவாய்ந்த மரங்களடர்ந்ததுமான மணற்றிட்டானது மிக்கவழகாகவிருக்கின்றது. என்ன ஆச்சரியம் பாருங்கள். (5) பசியினுல் பீடிக்கப்பட்ட நாம் இம்மணற்றிட்டில் சாப்பிடுவது தகும். சாப்பிடும் காலமோ தாண்டிவிட்டது. கன்றுகள் ஜலத்தைக் குடித்துவிட்டு தின்றபுல்லை இதனருகில் மெள்ள அசைவு போட்டுக் கொண்டிருக்கட்டும் என்ருர். (6) கோபகுமாரர்கள் அப்படியே ஆகட்டுமெனச் சொல்லிக் கன்றுகளை ஜலங்குடிக்கச்செய்து புல்தரையில் கூட்டமாக நிறுத்தி உரிகளை அவிழ்த்துக்கொண்டு பகவானுடன் கூட ஸந்தோஷமாகச் சாப்பிடத்தொடங்கினர். (7) கிருஷ்ணனுக்குச் சுற்றிலும் கூட்டங்கூட்டமாகப் பலவரிசைகளுடன் நெருக்கமாக உட்கார்ந்தவர்களும் கிருஷ்ணனது *முகத்தைப் பார்க்கின்றவர்களும் ஆனது

---

* மூலத்தில் அஸ்யானனா: என்றதனுல் பகவான் அச்சமயத்தில் எல்லாருடையவும் ஸத்ஸங்கல்பத்தைப்பூர்த்தி செய்விக்கவேண்டித் தனது

मण्डलैरभ्याननाः फुल्लदृशो व्रजार्भकाः । सहोपविष्टा विपिने विरेजुश्छदा यथाम्भोरुहकर्णिकायाः ॥ ८ ॥ केचित्पुष्पैर्दलैः केचित्पल्लवैरङ्कुरैः फलैः । शिग्भिस्त्वग्भिर्दृषद्भिश्च बुभुजुः कृतभाजनाः ॥ ९ ॥ सर्वे मिथो दर्शयन्तः स्वस्वभोज्यरुचिं पृथक् । हसन्तो हासयन्तश्चाभ्यवजह्रुः सहेश्वराः ॥१०॥

बिभ्रद्वेणुं जठरपटयोः शृङ्गवेत्रे च कक्षे वामे पाणौ मसृणकवलं तत्फलान्यङ्गुलीषु । तिष्ठन्मध्ये स्वपरिसुहृदो हासयन्नर्मभिः स्वैः स्वर्गे

---

பற்றி மலர்ந்த கண்களையுடையவர்களுமான கோபகுமாரர்கள் தாமரை புஷ்பத்திலுள்ள தாதுக்குச் சுற்றிலுமிருக்கின்ற இதழ்கள் போலக் காட்டில் விளங்கினர். (8) சிலர் புஷ்பங்களினாலும்,சிலர் இலைகளினாலும், சிலர் தளிர்களினாலும், சிலர் முளைகளினாலும், சிலர் பழங்களினாலும், சிலர் உறிகளினாலும், சிலர் மரப்பட்டைகளினாலும், சிலர் கற்களினாலும் தயார் செய்யப்பட்ட போஜன பாத்திரத்தையுடையவர்களாய்ச்சாப்பிட்டனர். (9) எல்லாரும் ஈச்வரனுடன் கூடினவர்களாய் தத்தமது ஆஹாரத்தின் உருசியைத் தனித்தனியே ஒருவருக்கொருவர் காட்டிக்கொண்டும், சிரித்துக்கொண்டும், சிரிக்கச் செய்துகொண்டும் சாப்பிட்டனர். (10)

ஸ்ரீகோபாலன் யாகத்தில் ஹவிர்ப்பாகத்தைச் சாப்பிடுகின்றவனாயினுங்கூட பாலர்களுக்கொப்பான லீலையையுடையவராய் பில்லாங்குழலை வயிற்றுக்கும் அதன்மேல் கட்டின வஸ்திரத்துக்கும் இடையில் சொருகிக்கொண்டும் கொம்பு பிரம்பு இவ்விரண்டையும் இடது கக்ஷத்தில் வைத்துக்கொண்டும் இடதுகையில் (1) நெய்யொழுகும் போஜனகபளத்தையும் விரல்களில் அதற்குசிதங்களான (2)நெல்லிக்கனி முதலியவற்றையும் வைத்துக்கொண்டும் தாமரைப்

---

யோக மாயா வைபவத்தினால் அனேகம் முகங்களை எடுத்துக்கொள்ளவே குழந்தைகள் ஒவ்வொருவரும் கிருஷ்ணன் என் முகத்தைப்பார்த்துக்கொண்டு சாப்பிடுகிறானேயொழிய பிறர் முகத்தைப் பார்ப்பதில்லை. ஆகவே என்னிடத்தில் தான் கிருஷ்ணனுக்கு ப்ரேமையதிகம் எனவெண்ணினர் என்பது பெறப்பட்டது.

(1) மூலத்தில் मसृणकवलम्=என்றிருக்கிறது. இதற்கு நெய்யொழுகும் தயிர்சாதம் என்றும். (2) तत्फलानि=அதற்குசிதங்களான பில்

लोके मिषति बुभुजे यज्ञभुग्बालकेलिः॥ ११ ॥ भारतैवं वत्सपेषु भुञ्जानेष्वच्युतात्मसु । वत्सास्त्वन्तर्वने दूरं विविशुस्तृणलोभिताः ॥ १२ ॥ तान्दृष्ट्वा भयसन्त्रस्तानूचे कृष्णोऽस्य भीभयम् । मित्राण्याशान्मा विरमतेहानेष्ये वत्सकानहम् ॥ १३ ॥ इत्युक्त्वाद्रिदरीकुञ्जगह्वरेष्वात्मवत्सकान् । विचिन्वन्भगवान्कृष्णः सपाणिकवलो ययौ ॥ १४ ॥ अम्भोजन्मजनिस्तदन्तरगतो मायार्भकस्येशितुर्द्रष्टुं मञ्जुमहित्वमन्यदपि तद्वत्सानितो वत्सपान् ।

---

பூவின் தாதுபோன்று யாவர்க்கும் எதிர்முகமாக நடுவில் நின்று கொண்டும் தன்னைச் சுற்றிலுமிருக்கின்ற சினேஹிதர்களைத் தனது விளையாட்டு வார்த்தைகளினுல் சிரிக்கச் செய்துகொண்டும் ஸ்வர்க்க லோகமே எடுபட்டுவந்து பார்த்துக்கொண்டிருக்குங்கால் சாப்பிடத் தொடங்கினுர். (11) ஹேபாரத! இவ்விதம் கோபகுமாரர்கள் அச்யுதனிடம் வைக்கப்பட்ட மனத்தையுடையவர்களாய்ச் சாப்பிடுங்கால், கன்றுகளோ புல்லில் ஆசைகொண்டவைகளாய் காட்டினுள்ளில் வெகுதூரம் சென்றன. (12) பயத்தால் நடுங்கின அவர்களைப் பார்த்து கிருஷ்ணன் பயத்தைத் தருவனவற்றினின்றும் பயத்தைப் போக்கி 'ஹே மித்திரர்காள்! சாப்பிடுவதை நிறுத்தாதீர்கள். நான் கன்றுகளை இங்கு ஓட்டிக்கொண்டுவருகின்றேன்' என்றுர். (13) இவ்விதம் சொல்லி பகவானுன கிருஷ்ணன் மலைகளிலும் அதன் குஹைகளிலும் கொடிகளடர்ந்தவிடங்களிலும் தனது வத்ஸங்களைத் தேடிக்கொண்டு இடதுகையிலுள்ள (1)கபளத்துடன் கூடவே சென்றுர். (14) ஹே குருத்வஹ! முன்னர் ஆகாசத்திலிருந்து கிருஷ்ணன் செய்த அகாசுர மோக்ஷணத்தைக்கண்டு மேலான ஆஶ்சரியத்தை யடைந்தவரும் தாமரைப் பூவினின்று முண்டானவருமான ப்ரும்ஹதேவன் அச்சமயத்தில் வந்து மாயைக்

---

வக்கனி நெல்லிக்கனி முதலியனவென்றும் ஸ்ரீதரர் பொருள்கூறுகிருர். मसृणश्वलम् என்பதற்கு நெய்யொழுகும் வெண்பொங்கல் என்றும், तत्फलानि என்பதற்கு அதற்குப்போதிய கரிவடாம் முதலியன வென்றும் பாகவத ஸம்பிரதாயமறிந்த பெரியார் பொருள் கூறுகின்றனர்.

(1) தன்னிடம் பக்திசெய்யும் ஜனங்களுக்குத்தான் தனதுசொந்தப் பிரயோஜனத்தையுமிழந்து பாடுபடுவதாகக்காட்டவேண்டி இவ்விதம் சென்றுர் என்று கருத்து.

**नीत्वान्यत्र कुरूद्वहान्तरदधात्खेऽवस्थितो यः पुरा दृष्ट्वाघासुरमोक्षणं प्रभवतः प्राप्तः परं विस्मयम् ॥ १५ ॥ ततो वत्सानदृष्ट्वैत्य पुलिनेपि च वत्सपान् । उभावपि वने कृष्णो विचिकाय समन्ततः ॥ १६ ॥ क्वाप्यदृष्ट्वान्तर्विपिने वत्सान्पालांश्च विश्ववित् । सर्वं विधिकृतं कृष्णः सहसाऽवजगाम ह ॥ १७ ॥ ततः कृष्णो मुदं कर्तुं तन्मातॄणां च कस्य च । उभयायितमात्मानं चक्रे विश्वकृदीश्वरः ॥ १८ ॥ यावद्वत्सपवत्सकाल्पकवपुर्यावत्कराङ्घ्र्यादिकं यावद्यष्टिविषाणवेणुदलशिग्यावद्विभूषाम्बरम् । यावच्छीलगुणाभिधाकृतिवयो यावद्विहारादिकं सर्वं विष्णुमयं गिरोऽङ्गवदजः**

---

குழந்தையான ஈச்வரனுடைய மனத்தைக்கவரத்தக்க வேறு மஹிமையையும் காணவேண்டி அவரது கன்றுகளையும் மணற்திட்டிலிருந்த கோபக்குழந்தைகளையும் வேறிடத்தில் கொண்டு சேர்த்து விட்டுத் தானும் மறைந்துவிட்டார். (15) கிருஷ்ணன் பிர்மதேவன் செய்தகாரியத்துக்குப் பிறகு கன்றுகளைக் காணுது திரும்பி வந்து மணற்றிட்டில் கோபகுமாரர்களையும் காணுதுபோகவே கன்றுகள் கோபகுமாரர்கள் இரண்டையுமே நாலாபக்கத்திலும் தேடத்தொடங்கினர். (16) காட்டினுள்ளில் ஓரிடத்திலும் கன்றுகளையும் குழந்தைகளையும் காணுது ஸர்வக்ஞனை கிருஷ்ணன் எல்லாம் ப்ரம்ஹாவினுல் செய்யப்பட்டதென விரைவில் அறிந்து கொண்டார். (17) பிறகு விச்வத்தைப்படைத்தவரும் ஈச்வரனுமான கிருஷ்ணன் அவர்களின் தாய்மார்களுக்கும் ப்ரம்ஹதேவனுக்கும் ஸந்தோஷத்தைச் செய்யவேண்டித் தன்னைகன்றுகளாகவும் குழந்தைகளாகவும் ஆனதாகச் செய்து கொண்டார். (18) கன்று மேய்ப்பவர் கன்றுகள் இவற்றின் அற்பமான சரீரங்கள் எத்துணை அளவுள்ளனவோ, கைகால் இவைகள் எத்துணை அளவுள்ளனவோ, தடி கொம்பு வேணு இலையினுற் செய்த ஊதல் உரி இவைகள் எத்துணை அளவுள்ளனவோ, ஆபரணம் வஸ்திரம் இவைகள் எத்துணையளவுள்ளனவோ, ஒழுக்கம் குணம் பெயர் வடிவம் வயது இவைகள் எத்துணையளவுள்ளனவோ, விளையாட்டு முதலியன எத்துணையளவுள்ளனவோ அத்துணையளவுமாகவாகி "எல்லா ஜகத்தும் விஷ்ணுமயமானது" என்றதாக ப்ரஸித்தியையடைந்த சுருதிவார்த்தை

सर्वस्वरूपो बभौ ॥ १९ ॥ स्वयमात्मात्मगोवत्सान्प्रतिवार्यात्मवत्सपैः । क्रीडन्नात्मविहारैश्च सर्वात्मा प्राविशद्व्रजम् ॥ २० ॥

तत्तद्वत्सान्पृथङ्नीत्वा तत्तद्गोष्ठे निवेश्य सः। तत्तदात्माभवद्राजंस्तत्तत्सद्म प्रविष्टवान् ॥ २१ ॥ तन्मातरो वेणुरवत्वरोत्थिता उत्थाप्य दोर्भिः परिरभ्य निर्भरम् । स्नेहस्नुतस्तन्यपयःसुधासवं मत्वा परं ब्रह्म सुतानपाययन् ॥ २२ ॥ ततो नृपोन्मर्दनमज्जलेपनालङ्काररक्षातिलकाशनादिभिः । संलालितः स्वाचरितैः प्रहर्षयन्सायं गतो यामयमेन माधवः॥ २३ ॥ गा-

---

யே இத்தகைய ரூபமெடுத்துக் கண்கூடாகக்காணும்படி வந்ததோ எனவெண்ணும்படி அஜனை கிருஷ்ணன் எல்லாவற்றினுடையவும், ரூபமுள்ளவராக விளங்கினார். (19) தானே தலைமை வஹித்துத் தானாகிற பசுங்கன்றுகளைத் தானாகிற கோபகுமாரர்களைக் கொண்டு தடுக்கச்செய்து தானாகிறவிளையாட்டுகளினாலும் விளையாடிக் கொண்டு ஸர்வாத்மாவான கிருஷ்ணன் கோகுலத்தில் நுழைந்தார். (20)

ஹேராஜன்! அந்தந்தக் கன்றுகளைத் தனியாக ஓட்டிக் கொண்டு அந்தந்தக் கொட்டிலில் நுழைந்து அந்தந்தவுருவமெடுத்த அவர் அந்தந்த வீட்டில் பிரவேசித்தவராகவுமானார். (21) அவர்களின் தாய்மார்கள் வேணுவின் நாதத்தைக்கேட்டு வேகமாகக்கிளம்பினவர்களாய்க் கொண்டு தோள்களினால் வாரியெடுத்துக் கெட்டியாகத் தழுவிக்கொண்டும் புத்திரர்களை பரம்ப்ரம்ஹமாகவே எண்ணிக்கொண்டும் அமுதத்தைப்போல ருசியுள்ளதும், மத்தியத்தைப்போல மதத்தைத் தருகின்றதுமான ஸ்னேஹத்தால் பெருகின முலைப்பாலைப் பானஞ் செய்வித்தனர் (22) (1)ஹேந்ருப! இவ்விதம் கிருஷ்ணன் அந்தந்த காலத்துக்குரிய க்ரீடா நியமத்துடன் மாலையில் வீடு வந்து அழகிய சரித்திரங்களினால் தாய்மார்களைச் சந்தோஷப்படுத்திக்கொண்டு பிறகு உடம்பைப்பிடித்தல், ஸ்னானஞ்செய்வித்தல், சந்தனம் முதலியவற்றைப்பூசல், அலங்கரித்தல், ரக்ஷை செய்தல், நெத்தியில் திலகமிடல், போஜனம் செய்வித்தல் முதலியவற்றால் கொண்டாடப்பட்டார். (23) (2)பிறகு பசுக்கள் வேகமாகக் கோகுலம்

---

(1) கோபிகைகளுக்குண்டான மோஹம் இதனால் சொல்லப்படுகிறது. (2) இதனால் பசுக்களுக்குண்டான மோஹம் சொல்லப்படுகிறது.

वस्ततो गोष्ठमुपेत्य सत्वरं हुङ्कारघोषैः परिहूतसङ्गतान्। स्वकान्स्वकान्वत्सतरानपाययन्मुहुर्लिहन्त्यः स्रवदौधसं पयः॥ २४॥ गोगोपीनां मातृतास्मिन्सर्वा स्नेहर्धिकां विना। पुरोवदास्वपि हरेस्तोकता मायया विना॥ २५॥ व्रजौकसां स्वतोकेषु स्नेहवल्ल्याब्दमन्वहम्। शनैर्निःसीम ववृधे यथा कृष्णे त्वपूर्ववत्॥ २६॥ इत्थमात्मात्मनात्मानं वत्सपालमिषेण सः। पालयन्वत्सपो वर्षं चिक्रीडे वनगोष्ठयोः॥ २७॥ एकदा चारयन्वत्सान्

---

வந்து ஹுங்கார கோஷங்களினால் அழைக்கப்பட்டனவும், அருகில் வந்தனவுமான தத்தமது கன்றுகளை அடிக்கடி நக்குகின்றனவாய்க் கொண்டு பெருகுகின்ற மடியிலுள்ள பாலைக்குடிக்கச்செய்தன. (24) இந்தக் கிருஷ்ணனிடத்தில் பசுக்களுக்கும், கோபிகைகளுக்கும் தாயின் தன்மையாவும் (1)ஸ்னேஹப்பெருக்கு ஒன்றைத் தவிர்த்து முன்போலவேதானிருந்தது. ஹரியான கிருஷ்ணனுக்கு இவர்கள் விஷயத்தில் புத்திரத்தன்மையும், மாயை ஒன்றைத்தவிர்த்து முன் போலவேதானிருந்தது. (25) கோகுலவாசி ஜீவர்களுக்கு யசோதா புத்திரனான கிருஷ்ணனிடத்தில் தமது புத்திரர்களைக்காட்டிலும் ஸ்னேஹாதிக்யம் முன்னர் எவ்விதமிருந்ததோ அவ்விதமே இப்பொழுதும் தமது புத்திரர்களிடத்தில் ஸ்னேஹக்கொடியானது ஒரு ஆண்டு முடியும்வரை மெள்ள மெள்ள எல்லையற்றதாய் வளர்ந்து கொண்டேபோயிற்று. (26) இவ்விதம் ஸர்வாத்மாவான அந்தக் கிருஷ்ணன் கன்றுமேய்ப்பவனாகவாகி கன்றுகளுடையவும், அவற்றை மேய்ப்பவர்களுடையவும் வேஷத்துடன் தானாகவே தன்னைக் காப்பாற்றிக்கொண்டு காட்டிலும் வீட்டிலுமாக ஒருவருஷம் முடிய விளையாடினார். (27) ஒருநாள் ஐந்தோ ஆறோ தினங்கள் வருஷத்

---

(1) கோக்களும் கோபிகைகளும் முன்போலவேதான் தாய்மார்களாகவிருந்து புத்திரனைப் போஷித்துவந்தனர். ஆயினும் இதுவரை இல்லாதபடி ஸ்னேஹம்மட்டும் நாளுக்குநாள் பெருகிக்கொண்டுவந்தது. முன்னர் இவள் எனக்கு மாதா நான் இவளுக்குப் புத்திரன் என்ற மோஹமிருந்தது. அதாவது: மோஹத்தினால் அவ்விதமெண்ணிவந்தனர். இப்பொழுதோ அந்த மோஹம் மட்டும் கிடையாது. இவள் எனக்குத் தாயுமில்லை நான் இவளுக்குத் தநயனுமில்லை என்ற க்ஞானமிருந்தபோதிலும் கிருஷ்ணன் வேண்டுமென்றே அவ்விதம் நடித்தார் என்றுகருத்து.

सरामो वनमाविशत् । पञ्चषासु त्रियामासु हायनापूरणीष्वजः ॥२८॥ ततो विदूराच्चरतो गावो वत्सानुपव्रजम् । गोवर्धनाद्रिशिरसि चरन्त्यो ददृशुस्तृणम् ॥२९॥ दृष्ट्वाथ तत्स्नेहवशोऽस्मृतात्मा स गोव्रजोऽत्यात्मपदुर्गमार्गः। द्विपात्ककुद्ग्रीव उदास्यपुच्छोऽगाद्धुङ्कृतैरास्रुपया जवेन ॥ ३० ॥ समेत्य गावोऽधोवत्सान्वत्सवत्योऽप्यपाययन् । गिलन्त्य इव चाङ्गानि लिहन्त्यः स्वौधसं पयः॥ ३१ ॥ गोपास्तद्रोधनायासमौघ्यलज्जोरुमन्युना । दुर्गाध्वकृच्छ्रतोऽभ्येत्य गोवत्सैर्ददृशुः सुतान् ॥ ३२ ॥ तदीक्षणोत्प्रेमरसाप्लुताशा-

---

தில் குறைவாகவிருக்குங்கால் பகவான் பலராமனுடன் கூட கன்று களை மேய்த்துக்கொண்டு காட்டில் நுழைந்தார். (28) பிறகு கோவர்த்தன மலையின் நுனியில் மேய்ந்துக்கொண்டிருக்கின்ற பசுக்கள் தாய்பேயுமிடத்திலிருந்து வெகு தொலையில் கோகுலத்துக்கருகில் புற்களை மேய்ந்துக்கொண்டிருக்கின்ற கன்றுகளைக்கண்டன. (29) கண்டபிறகு அந்தப் பசுக்கூட்டமானது அக்கன்றுகளிட மேற்பட்ட ஸ்னேஹத்துக்கு வசப்பட்டதாகவும், தமது சரீரத்தை மறந்ததாகவும், தன்னை ரக்ஷிக்கும் கோபாலர்களைப் பொருட்படுத்தாமலும், கரடுமோரடான வழியைக் கடந்தும், இரண்டு கால்களை சேர்த்துவைத்துக்கொண்டு ஓட்டம் பிடித்தும், (அதாவது: இரண்டு காலுள்ளதுபோலத் தோற்றத்தையடைந்தும்) கொண்டையில் கழுத்தை வைத்துக்கொண்டும், உயரத்தூக்கப்பட்ட முகம் வால் இவற்றையுடையதாகவும், சுற்றிலும் பெருகியோடும் பாலையுடையதாகவுமாகி ஹுங்கார சப்தங்களுடன் வேகமாக அங்கு வந்து சேர்ந்தது. (30) பசுக்கள் *ஊட்டும் கன்றுள்ளனவாயினுங் கூட கோவர்த்தன மலையின் கீழ்வந்து விழுங்குவனபோன்று அங்கங்களை நக்குகின்றனவாய்க்கொண்டு மடியிலுள்ள பாலைக் கன்றுகளை ஊட்டச் செய்தன. (31)

கோபாலர்கள் அப்பசுக்களைத் தடுக்கவேண்டிச் செய்தமுயர்ச்சி வீண்போனதாலேற்பட்ட லஜ்ஜை மூலமுண்டான அதிகக் கோபத்துடன் கஷ்டமான வழியினின்றும் சிரமத்துடன் வந்து கோவத்

---

* புதிதாய் ஈன்ற கன்றுள்ளனவாயினுங்கூட பசுக்கள் ஊட்டுமறந்த கன்றுகளுக்கேத் திரும்பவும் பாலைக்கொடுத்தன என்று கருத்து.

या जातानुरागा गतमन्यवोऽर्भकान् । उदूह्य दोर्भिः परिरभ्य मूर्धनि घ्राणै-
रवापुः परमां मुदं ते ॥ ३३ ॥

ततः प्रवयसो गोपास्तोकाश्लेषसुनिर्वृताः । कृच्छ्राच्छनैरपगतास्त-
दनुस्मृत्युदश्रवः ॥ ३४ ॥ व्रजस्य रामः प्रेमर्धेर्वीक्ष्यौत्कण्ठ्यमनुक्षणम् ।
मुक्तस्तनेष्वपत्येष्वप्यहेतुविदचिन्तयत् ॥ ३५ ॥ किमेतदद्भुतमिव वासुदे-
वेऽखिलात्मनि । व्रजस्य सात्मनस्तोकेष्वपूर्वं प्रेम वर्धते ॥ ३६ ॥ केयं वा
कुत आयाता दैवी वा नार्युतासुरी । प्रायो मायास्तु मे भर्तुर्नान्या मेऽपि

---

ஸங்களுடன் கூடின கோபகுமாரர்களைக் கண்ணுற்றனர். (32) அவர்கள் அவைகளைப் பார்த்ததாலுண்டான ப்ரேமையாகிற ரஸத்தில் மூழ்கின சித்தமுள்ளவர்களாகவும், விலகின கோபமுள்ளவர்களாகவும், அவர்களிடமுண்டான ப்ரேமையையுடையவர்களாகவுமாகி குழந்தைகளை வாரியெடுத்துத் தோள்களினால் தழுவிக்கொண்டு உச்சியில் பலதடவை முகர்ந்து மேலான சந்தோஷத்தையடைந்தனர். (33) வயது முதிர்ந்த கோபாலர்கள் குழந்தைகளை ஆலிங்கனம் செய்துகொண்டதனால் மிக்கச் சுகத்தையடைந்தவர்களாகவும், அக்குழந்தைகளின் நினைவினாலுண்டான கண்ணீருள்ளவர்களாகவும் கொண்டு வெகு கஷ்டத்துடன் மெள்ளமெள்ள அங்கிருந்து விலகினர். (34) பலராமன் ஊட்டுமறத்த *அபத்யங்களிடத்திலுங்கூட கோகுலவாஸி ஜந்துக்களுக்கு ஒவ்வொரு க்ஷணத்திலும் ஏற்படும் ப்ரேமைப் பெருக்கின் அதிசயத்தைக்கண்ணுற்று காரணமறியாதவராய் ஆலோசிக்கத்தொடங்கினர். (35) அகிலாத்மாவான வாசுதேவனிடத்தில் போலக்குழந்தைகளிடத்தில் எனக்கும் இந்தக்கோகுலவாஸி ஜந்துவுக்கும் இதுவரையேற்படாத ப்ரேமை விருத்தியடைந்துவருகின்றதே? இது என்ன ஆச்சரியம்? இந்த மாயை தேவர்களுடையதாகவிருக்கலாமா? மனிதர்களுடையதாகவிருக்கலாமா? அல்லது அசுரர்களுடையதாகவிருக்கலாமா? எங்கிருந்து வந்தது. எனக்குக்கூட மிக்க மோஹத்தைத்தருவதால் பெரும்பாலும்

---

* अपत्येषु=என்பது மூலம். இதற்கு பசுக்களுக்கு ஊட்டுமறத்த கன்றுகளிடத்திலும், கோபஸ்திரீகளுக்கு பால் குடித்தலை வெறுத்தின குழந்தைகளிடத்திலுங்கூட என்று பொருள் கொள்ளவேண்டும்.

विमोहिनी ॥ ३७ ॥ इति सञ्चिन्त्य दाशार्हो वत्सान्सवयसानपि । सर्वाना-चष्ट वैकुण्ठं चक्षुषा वयुनेन सः ॥ ३८ ॥ नैते सुरेशा ऋषयो न चैते त्वमेव भासीश भिदाश्रयेऽपि । सर्वं पृथक्त्वं निगमात्कथं वदेत्युक्तेन वृत्तं प्रभुणा बलोऽवैत् ॥३९॥ (ब्रह्मापि यातः स्वस्थानं तत्रस्थेन हि शौरिणा । मोहितैर्द्वार पालैश्च परिभूतो न्यवर्तत ॥) तावदेत्यात्मभूरात्ममानेन त्रुट्यनेहसा । पुरोव-दब्दं क्रीडन्तं ददृशे सकलं हरिम् ॥४०॥ यावन्तो गोकुले बालाः सवत्साः सर्व एव हि । मायाशये शयाना मे नाद्यापि पुनरुत्थिताः ॥४१॥ इत एतेऽत्र

---

எனது பர்த்தாவான கிருஷ்ணனுடைய மாயையாகவிருக்கவேண்டு மேயொழிய வேறுவிதமாக இருக்கமுடியாது எனத் தாசார்ஹனை அவர் ஆலோசித்துக்கொண்டு தோழர்களுடன் கூடின எல்லாக் கன் றுகளையும் க்ஞானமயமான கண்ணினுல் ஸ்ரீகிருஷ்ணனுகவே பார்த் தார். (36–38) ஹே ஈஶ! இந்தக் குழந்தைகள் (நான் நினைத்த படி) சுரேசர்களன்று. இவர்களால் ரக்ஷிக்கப்படும் இக்கன்றுகள் (நான் நினைத்தபடி) ருஷிகளுமன்று. வேற்றுமைக்கு ஆஶ்ரய மான கோபர் வத்ஸங்கள் இவற்றின் தேஹத்தில் கூட நீரே ப்ர காசிக்கின்றீர். இவையெல்லாம் எப்படி நிகழ்ந்தது. அதைத் தனித் தனியாகநீர் சொல்லவேண்டும். என்றுகேட்கப்பட்ட ஸ்ரீகிருஷ்ண னுல் முகக்குறியால் தெரிவிக்கப்பட்ட விருத்தாந்தத்தைப் பலராமன் அறிந்துகொண்டார். (39) [தனது ஸத்தியலோகத்தை யடைந்த ப்ரம்ஹதேவனும் அவ்விடத்திலிருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணனுல் மயக்கப் பட்ட த்வாரபாலகர்களால் அவமதிக்கப்பட்டு அங்கிருந்து திரும் பினர்.]

பிறகு ப்ரம்ஹதேவன் வந்து தனக்குரிய கால அளவினுல் * த்ருடிமாத்ரமான காலத்தினுல் முன்போலவே ஒருவருஷம்முடிய பரிஜனங்களுடன் விளையாடுகின்ற ஸ்ரீகிருஷ்ணனைக் கண்டார். (40) கோகுலத்தில் கன்றுகளுடன் கூடினகுழந்தைகள் எத்துணைபேர் களுண்டோ அவர்கள்யாவருமே எனது மாயையாகிற படுக்கையில் இப்பொழுதுங்கூட படுத்திருக்கின்றனரேயொழியத் திரும்பவெழுந்

---

* त्रसरेणुत्रयं भुङ्क्ते यः कालस्स त्रुटिः स्मृतः=மூன்று த்ரஸரேணுவை யனு பவிக்கும் காலமெதுவோ அது த்ருடி எனப்படும்.

**कुतस्त्या मन्मायामोहितेतरे । तावन्त एव तत्राब्दं क्रीडन्तो विष्णुना समम् ॥ ४२ ॥ एवमेतेषु भेदेषु चिरं ध्यात्वा स आत्मभूः । सत्याः के कतरे नेति ज्ञातुं नेष्टे कथञ्चन ॥ ४३ ॥ एवं सम्मोहयन्विष्णुं विमोहं विश्वमोहनम् । स्वयैव माययाजोऽपि स्वयमेव विमोहितः ॥ ४४ ॥ तस्यां तमोवन्नैहारं खद्योतार्चिरिवाहनि । महतीतरमायैश्यं निहन्त्यात्मनि युञ्जतः ॥ ४५ ॥**

---

தனரில்லை. எனது மாயையினல் மோஹத்தை யடைந்தவர்களைக் காட்டிலும் வேறுபட்டவர்களாய் இங்குமங்கும் காணப்படுமிவர்கள் எங்குள்ளவர்கள். அத்துணைபேர்களும் அங்கு விஷ்ணுவுடன் கூட வருஷம்முடிய விளையாடுகின்றனரே? என இவ்விதம் அந்த ப்ரம்ஹதேவன் இந்தவேறுபட்டத் தோற்றங்கள் விஷயமாக வெகுகாலம் தியானித்தும் எவர்கள் உண்மையிலுள்ளவர், எவர்கள் அவ்விதமில்லாதவர்கள் எனவறிந்துகொள்ள வெகுவாகமுயற்சித்தும் முடியாதவரானர். (41–43) இவ்விதம் உண்மையில் மோஹமற்றவரும் விப்வத்தையும் மோஹிக்கச்செய்கின்றவருமான விஷ்ணுவை நன்கு மோஹிக்கச் செய்யவெண்ணின ப்ரம்ஹதேவன்கூட தனது மாயையினுலேயே தானே மோஹத்தை யடைந்தார். (44) (1)இருளடர்ந்த இரவில் பனித்திவிலைகளினுலுண்டான இருள்போலும், பகலில் மினுமினுப் பூச்சியினுடைய காந்திபோலும் மஹாபுருஷனிடத்தில் பிரயோகிக்கின்ற புருஷனது தாழ்ந்த மாயையானது அம்மஹானிடத்தில் ஒன்றுஞ்செய்யாது ப்ரயோகிப்பவனிடமுள்ள

---

(1) ஆவரணசக்தி யென்றும் விக்ஷேபசக்தியென்றும் மாயைக்கு இரண்டுசக்திகளுண்டு, அவ்விரண்டுசக்திகளும் மாயாவசப்பட்ட ஜீவனுக்கு ஆவரணவிக்ஷேபங்களைச் செய்யுமே யொழிய மாயைக்கு நியந்தாவான பகவானுக்குச் செய்யா, என்றதை விளக்கவேண்டி இவ்விருதிருஷ்டாந்தங்கள் சொல்லப்பட்டன. அதாவது: இருளடர்ந்த இரவில் காணும் பனிக்கூட்டத்தினுலுண்டாகும் இருள் தனியாக ஒருமறைவைச் செய்யாது அவ்விருளிலேயே எவ்விதம் மறைந்துவிடுமோ, பகலிலுள்ள மினுமினுப் பூச்சியின் ஒளியானது தனியான ஒருபிரகாசத்தை எவ்விதம் செய்யாதோ அவ்விதமே ப்ரம்ஹதேவனுல் பிரயோகிக்கப்பட்ட மாயை பகவானிடத்திலொன்றையும் செய்யாது அம்மாயையிலேயே ஒடுங்கிவிட்டது என்பது கருத்து.

तावत्सर्वे वत्सपालाः पश्यतोऽजस्य तत्क्षणात् । व्यदृश्यन्त घनश्यामाः पीतकौशेयवाससः ॥ ४६ ॥ चतुर्भुजाः शङ्खचक्रगदाराजीवपाणयः । किरीटिनः कुण्डलिनो हारिणो वनमालिनः ॥ ४७ ॥ श्रीवत्साङ्गददोरत्नकम्बुकङ्कणपाणयः । नूपुरैः कटकैर्भाताः कटिसूत्राङ्गुलीयकैः ॥ ४८ ॥ आङ्घ्रिमस्तकमापूर्णास्तुलसीनवदामभिः । कोमलैः सर्वगात्रेषु भूरिपुण्यवदर्पितैः ॥ ४९ ॥ चन्द्रिकाविशदस्मेरैः सारुणापाङ्गवीक्षितैः । स्वकार्थानामिव

---

ஸாமர்த்தியத்தையே அழித்துவிடுகிறது. (45) அப்பொழுது கன்றுகளும் குழந்தைகளுமாகியயாவரும் ப்ரம்ஹதேவன் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே அதேக்ஷணத்தில் மேகம்போலக் கருத்தவர்களாகவும், பொன்னிறமான பட்டாடையை யணிந்தவர்களாகவும், நான்குகைகளையுடையவர்களாகவும், சங்கம் சக்கிரம் கதை தாமரைப்பூ இவற்றைக் கைகளிலுடையவர்களாகவும், கிரீடமுள்ளவர்களாகவும், குண்டலமணிந்தவர்களாகவும், முக்தாஹாரத்தைத் தரித்தவர்களாகவும், வனமாலையை யுடையவர்களாகவும், ஸ்ரீவத்ஸம் என்ற மருவின் காந்தியுடன்கூடின அங்கதங்களை (வளையல்களை) தோள்பிரதேசத்தில் தரிக்கின்றவர்களாகவும், ரத்தினமயங்களும் சங்கம்போல மூன்றுகோடுகளுள்ளனவுமான கங்கணங்களைக் கையிலணிந்தவர்களாகவும், நூபுர (பாதஸர) ங்களினாலும், (1) கடகங்களினாலும் சலங்கைகட்டின அறைஞாண் மோதிரம் இவற்றினாலும் விளங்குகின்றவர்களாகவும், வெகுஜன்மங்களில் செய்யப்பட்ட புண்ணியமுள்ளவர்களினால் ஸமர்ப்பிக்கப்பட்டனவும், எல்லா அங்கங்களிலும் கோமளங்களாக விருக்கின்றனவுமான புதியதுளஸீமாலைகளினால் கால்முதல் தலைவரை நிரம்பினவர்களாகவும், சந்திரிகை போலத் தெளிவான புன்சிரிப்புகளுடன் கூடினவைகளான சிவந்த கடைக்கண்பார்வைகளினால் தனது பக்தர்களின் மனோரதங்களை

---

(1) கடகம் என்பது कटको वलयोऽस्त्रियाम्=என்ற அமரகோசப்படி கையில் தோளுக்குக்கீழும், முழங்கைக்குமேலுமுள்ள இடத்தில் அணியும் ஓர்வித வளையலாக ஏற்படினும் நூபுரம் என்ற பாதஸரத்தை யொட்டிக் கூறி இருப்பதால் பாதஸரத்துடன் சேர்த்துக் காலிலணியும் காப்பாகக் கொள்ளவேண்டுமென வம்சிதரீயவியாக்கியானத்தில் கூறப்பட்டிருக்கிறது.

रजःसत्त्वाभ्यां स्रष्टृपालकाः ॥ ५० ॥ आत्मादिस्तम्बपर्यन्तैर्मूर्तिमद्भिश्चराचरैः । नृत्यगीताद्यनेकार्हैः पृथक्पृथगुपासिताः ॥ ५१ ॥ अणिमाद्यैर्महिमभिरजाद्याभिर्विभूतिभिः । चतुर्विंशतिभिस्तत्त्वैः परीता महदादिभिः ॥ ५२ ॥ कालस्वभावसंस्कारकामकर्मगुणादिभिः । स्वमहिध्वस्तमहिभिर्मूर्तिमद्भिरुपासिताः॥ ५३ ॥ सत्यज्ञानानन्तानन्दमात्रैकरसमूर्तयः । अस्पृष्टभूरिमाहात्म्या अपि ह्युपनिषद्दृशाम् ॥ ५४ ॥

एवं सकृद्ददर्शाजः परब्रह्मात्मनोऽखिलान् । यस्य भासा सर्वमिदं विभाति सचराचरम् ॥ ५५ ॥ ततोऽतिकुतुकोद्वृत्य स्तिमितैकादशेन्द्रियः ।

---

ரஜோகுணத்தினால் ஸிருஷ்டித்து ஸத்வகுணத்தினால் பாதுகாக்கின்றவர்கள் போலிருக்கின்றவர்களாகவும், ப்ரம்ஹா தொடங்கி ஸ்தம்பமென்ற சிறுபூச்சியிருகவுள்ளனவும் சரீரத்துடன் கூடினவுமான அசையுமசையாப்பொருள்களினால் நர்த்தனம் கீதம் முதலிய அனேகம் உபசாரங்களால் தனித்தனி உபாஸிக்கப்பட்டவர்களாகவும், (1) அணிமாமுதலிய ஸித்திகளினாலும், மாயை அவித்யை ஸ்ரீ, கீர்த்தி, புஷ்டி, சாந்தி, முதலிய விபூதிகளினாலும், (சக்திகளினாலும்) மஹத்தத்துவத்தை ஆதியாகக்கொண்ட (2) இருபத்துநான்கு தத்துவங்களினாலும் சூழப்பட்டவர்களாகவும், பகவானுடைய மஹிமையினால் போக்கப்பட்ட ஸ்வாதந்திரியத்தையுடையவைகளும் சரீரத்துடன் கூடினவைகளுமான காலம், ஸ்வபாவம், ஸம்ஸ்காரம், காமம், கர்மம், ஸத்வாதிகுணங்கள் இவைமுதலியவற்றால் உபாஸிக்கப்பட்டவர்களாகவும், உண்மை, யறிவு, அனந்தானந்தமாத்திரமாயும் ஏகரஸமாயும், (எப்பொழுதும் ஒரேரூபமுள்ளதாயும்) இருக்கின்ற ப்ரம்ஹரூபமான சரீரத்தை யுடையவர்களாகவும், ஆத்மக்ஞானமாகிற கண்ணையுடையவர்களுக்குக்கூட எட்டாத அதிகமான மஹிமையை யுடையவர்களாகவும் காணப்பட்டனர். (46-54)

---

(1) அணிமா, கரிமா, லகிமா, மஹிமா, ப்ராப்தி, ப்ராகாம்யம், ஈசித்வம், வசித்வம் என சித்திகள் எட்டுவிதங்களாகும்.

(2) மஹத்தத்துவம், சூத்ராத்மா, அஹம் தத்துவம், ஐந்து தன்மாத்திரைகள், ஐந்து கர்மேந்திரியங்கள், ஐந்து க்ஞானேந்திரியங்கள், ஐந்து ப்ராணன்கள், மனது ஆகிய, 24 தத்துவங்கள்.

तद्धाम्नाऽभूदजस्तूष्णीं पूर्देव्यन्तीव पुत्रिका ॥ ५६ ॥ इतीरेशेऽतर्क्ये निजमहिमनि स्वप्रमितिके परत्राजातोऽतन्निरसनमुखब्रह्मकमितौ । अनीशेऽपि द्रष्टुं किमिदमिति वा मुह्यति सति चच्छादाजो ज्ञात्वा सपदि परमोऽजाजवनिकाम् ॥ ५७ ॥ ततोऽर्वाक्प्रतिलब्धाक्षः कः परेतवदुत्थितः । कृच्छ्रादुन्मील्य वै दृष्टीराचष्टेदं सहात्मना ॥ ५८ ॥ सपद्येवाभितः पश्यन्दिशोऽपश्यत्पुरः स्थितम् । वृन्दावनं जनाजीव्यद्रुमाकीर्णं समाप्रियम् ॥ ५९ ॥

---

எதன் ஸ்வரூப சைதன்னியத்தினால் அசையுமசையாப் பொருளுடன் கூடின இவையாவும் ப்ரகாசத்தன்மையடைகின்றனவோ (அத்தகைய) பரப்ரம்ஹஸ்வரூபங்களாக யாவையும் ப்ரம்ஹதேவன் ஒரே ஸமயத்தில் கண்டார். (55) பிறகு அதிகம் ஸந்தோஷத்தினால் தனது பார்வைகளைத் திருப்பி அவற்றின் தேஜஸ்ஸினால் அசைவற்றுப் *பதினொறு இந்திரியங்களையுடைய ப்ரம்ஹதேவன் கோகுலாபிமானி தேவதையின் ஸமீபத்தில் வைக்கப்பட்ட நான்கு தலைகளுள்ள பொம்மைபோல அசைவற்று நின்றார். (56) இவ்விதம் ஸரஸ்வதீ தேவியின் பதியான ப்ரம்ஹதேவன், புத்தியினாலூஹித்தறியவியலாததும், பிறரிடத்தமையாத மஹிமையையுடையதும், ஸ்வப்ரகாச சுகரூபமானதும், ப்ரகிருதியைக்காட்டிலும் மேலாகவுள்ளதும் (ப்ரகிருதி ஸம்பந்தமற்றதும்) வேறு பொருளை மறுக்கும் வாயிலாக வேத சிரஸ்ஸுகளான உபநிடதங்களால் அறிவிக்கப்படுகின்றதுமான அந்த ஸ்வரூப விஷயத்தில் இஃதின்னதெனவறியாது மயங்கி இருக்கும்பொழுதும், பின்னர் பார்ப்பதற்கும் முடியாதவராக ஆனபொழுதும் பரமனும் அஜனுமான ஸ்ரீகிருஷ்ணன் அதையறிந்து மாயையாகிற படுதாவை உடனே விலக்கினார். (57) மாயையை விலக்கினபின்னர் வெளிவந்த பார்வையையுடைய ப்ரம்ஹதேவன் முன்னர் மரித்துப் பிழைத்தெழுந்தவன்போல கஷ்டத்துடன் கண்களைத் திறந்துகொண்டு பகவானான கிருஷ்ணனுடன் கூட இந்த ப்ருந்தாவனத்தைக் கண்ணுற்றார். (58) உடனே சுற்றிலுமுள்ள திக்குகளைப் பார்க்கின்ற ப்ரம்ஹதேவன், எது ஜனங்களுக்கு உதவிசெய்கின்ற மரங்களடர்ந்ததோ, எது எப்பொழுதுமே சுற்றி

---

* கர்மேந்திரியம் ஐந்து, க்ஞானேந்திரியம் ஐந்து, மனஸ் ஒன்று ஆகப்பதினொறு இந்திரியங்கள்.

यत्र नैसर्गदुर्वैराः सहासन्नृमृगादयः । मित्राणीवाजितावासद्रुतरुट्तर्षकादिकम् ॥ ६० ॥ तत्रोद्वहत्पशुपवंशशिशुत्वनाट्यं ब्रह्माद्वयं परमनन्तमगाधबोधम् । वत्सान्सखीनिव पुरा परितो विचिन्वदेकं सपाणिकवलं परमेष्ठ्यचष्ट ॥ ६१ ॥ दृष्ट्वा त्वरेण निजधोरणतोऽवतीर्य पृथ्व्यां वपुः कनक-

---

லும் பிரியங்களான பொருள்களையுடையதோ, எங்கு இயற்கையிலமைந்ததும் போக்கவியலாததுமான விரோதத்தையுடையவைகளான மனிதன் மிருகம் முதலியன ஆண்டவன் வசிப்பதால் முன்னிட்டு விலகின கோபம் காமம் இவை முதலியவற்றையுடைத்தா யிருக்கும்படி மித்திரர்கள்போல சேர்ந்தே வஸித்தனவோ அந்த எதிரிலுள்ள ப்ருந்தாவனத்தைக்கண்டார். (59–60) அவ்விடத்தில் கோபவம்சசிசுவுக்குரிய நாட்டியத்தை யனுஷ்டிக்கின்றதும், இரண்டாவதுபொருளற்றதும், பரமமும், அனந்தமும், அகாதமான போதமுள்ளதும் (ஸர்வக்ஞமும்), கன்றுகளையும் தோழர்களையும் சுற்றிலும் தேடுகின்றதும், ஒன்றாகவேயுள்ளதும், கையிலுள்ள கபளத்துடன் கூடியதுமான ப்ரம்ஹத்தை ப்ரம்ஹதேவன் முன்போலவே பார்த்தார் * (61) பார்த்துத் தனது வாஹனத்தினின்றும் வேகமாக இறங்கி தங்கக் கழிபோன்ற சரீரத்தை பூமியில் போட்டு நமஸ்கரித்து (தண்டம்

---

* இந்த ப்ஸ்லோகத்துக்கு ஸ்ரீதராசாரியர் செய்துள்ள அன்வயப்படிக்கான பொருள் பின்வருமாறு—तत्र च=அவ்விடத்தில் परमेष्ठी=ப்ரம்ஹா इव पुरा=முன்போலவே ब्रह्म=ப்ரம்ஹத்தை अचष्ट=பார்த்தார். ப்ரம்ஹம் எப்படிப்பட்டது எனின்? पशुपवंशशिशुत्वनाट्यमुद्वहत्=கோபவம்சக்குழந்தையாகவிருத்தல் என்ற நடனத்தைச்செய்வது. நாட்யமென்றதற்குக் காரணம் பின்வருமாறு—अद्वयम्=இரண்டாவதற்றதாயினும் वत्सान्विचिन्वत्=கன்றுகளைத்தேடுவதும் एकं च=ஒன்றாயினும் सखीन्=தோழர்களையும் தேடுவதும் अगाधबोधम्=ஸர்வக்ஞமாயினும் विचिन्वत्=தேடுவதும், अनन्तम्=முடிவற்றதாயினும் परितो विचिन्वत्=நாலாபக்கத்திலும் தேடுவதும் परं च=பரம் பொருளாயினும் शिशुत्वमुद्वहत्=குழந்தைத் தன்மையை வஹிக்கின்றதும் ब्रह्म=ப்ரம்ஹமாயினுங்கூட सपाणिकवलम्=பாணியில் கபளத்துடன் கூடினதுமாக இருப்பதால் நாட்டியமாடிற்று என்பது பொருள் என்றும்.

दण्डमिवानिपात्य। स्पृष्ट्वा चतुर्मुकुटकोटिभिरङ्घ्रियुग्मं नत्वा मुदश्रुसुजलैरकृताभिषेकम् ॥ ६२ ॥ उत्थायोत्थाय कृष्णस्य चिरस्य पादयोः पतन्। आस्ते महित्वं प्राग्दृष्टं स्मृत्वा स्मृत्वा पुनः पुनः ॥ ६३ ॥ शनैरथोत्थाय विमृज्य लोचने मुकुन्दमुद्वीक्ष्य विनम्रकन्धरः। कृताञ्जलिः प्रश्रयवान्समाहितः सवेपथुर्गद्गदयैलतेलया ॥ ६४ ॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्धे
ब्रह्ममोहनिरूपणं नाम त्रयोदशोऽध्यायः॥१३॥



---

போல வணங்கி) நான்கு கிரீடங்களின் நுனிகளாலும் இரண்டு சரணங்களையும் தொட்டு ஆனந்தாஸ்ரு ரூபங்களான ஜலங்களினால் அபிஷேகத்தைச் செய்தார். (62) முன்னர் பார்க்கப்பட்ட மஹிமையை அடிக்கடி நினைத்து நினைத்துக்கொண்டு எழுந்தெழுந்து வெகுகாலம் கிருஷ்ணனுடைய பாதங்களில் விழுந்து வணங்கினவராக இருந்தார். (63) பிறகு மெள்ள எழுந்து கண்களைத்துடைத்துக்கொண்டு முகுந்தனைப்பார்த்து வணங்கின தலையையுடையவராயும், இருகைகளையும் கூப்பிக்கொண்டு வணக்கமுள்ளவராயும், மனதடக்கமுள்ளவராயும், உடம்பில் நடுக்கமுள்ளவராயும் கொண்டு தழுதழுத்த வாக்கினால் ஸ்துதிக்க ஆரம்பித்தார். (64) (எ—று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவதமஹாபுராண தசமஸ்கந்த பூர்வார்த்தத்தில்
ப்ரம்ஹ மோஹ நிருபணமென்ற பதிமூன்றுவது
அத்தியாயம் முற்றிற்று.



## பதிநான்காவது அத்தியாயம்.

(அ—கை) चतुर्दशेऽद्भुतं दृष्ट्वा पूर्वागन्तुकनिश्चयम्।
अनीशः कर्तुमस्तौषीत् कृष्णं ब्रह्मा विमोहितः॥ १ ॥

(க—ரை) ப்ரம்ஹதேவன் ஆஸ்சரியத்தைக்கண்டு முந்தின அத்தியாயத்தில் சொன்னதையொட்டிக் கிடைத்த பகவத்ப்ரபாவ நிஸ்சயத்தைச் செய்யச் சக்தியற்றவராயும், மயக்கத்தையடைந்தவராயும் கிருஷ்ணனை ஸ்துதித்தார் என இந்தப்பதினான்காவது அத்தியாயத்திலுபதேசிக்கப்படுகிறது—

# अथ चतुर्दशोऽध्यायः ॥

ब्रह्मोवाच—नौमीड्य तेऽभ्रवपुषे तडिदम्बराय गुञ्जावतंसपरिपिच्छलसन्मुखाय । वन्यस्रजे कवलवेत्रविषाणवेणुलक्ष्मश्रिये मृदुपदे पशुपाङ्गजाय ॥ १ ॥ अस्यापि देव वपुषो मदनुग्रहस्य स्वेच्छामयस्य न तु भूतमयस्य कोऽपि । नेशे महि त्ववसितुं मनसान्तरेण साक्षात्तवैव किमुतात्मसुखानुभूतेः ॥ २ ॥ ज्ञाने प्रयासमुदपास्य नमन्त एव जीवन्ति सन्मुखरितां भवदीयवार्ताम् । स्थाने स्थिताः श्रुतिगतां तनुवाङ्मनोभिर्ये प्रायशोऽ-

---

ப்ரம்ஹதேவன் சொல்லலுற்ருர்—ஹே ஈட்ய! மேகம்போன்ற சரீரமுடையவரும், மின்னல்போன்ற வஸ்திரமுடையவரும், பூனைக்காச்சி மணிகளினல் செய்யப்பட்ட காதிலணியும் நகையினலும், சுற்றிலுமுள்ள மயிற்றோகையினலும் பிரகாசிக்கின்ற முகத்தையுடையவரும், வனத்திலுண்டான பூமாலையையுடையவரும், (இடது கையில்) கபளம் (கக்ஷத்தில்) மாடு ஓட்டும் பிரம்பு, கொம்பு என்ற வாத்யம் (இடையில்) வேணு இவ்வடையாளங்களினலமைந்த சோபையுள்ளவரும், மெதுவான பாதங்களுள்ளவரும், நந்தகோபரின் புத்திருமான உமக்கு நமஸ்காரம். (1) ஹே தேவ! என்னையனுக்கிரஹித்ததும், சொந்த பக்தர்களின் இச்சைக்குத் தக்கபடி மாறுதலையடைகின்றதும், பூதமயமாக இல்லாததும், அதாவது:—அசிந்த்யமும், சுத்த ஸத்வமயமுமான இந்த உமது ஸ்ரீமூர்த்தியினுடைய மஹிமையை அறிவதற்கே ப்ரம்ஹதேவனுயினும் நான் அசக்தனுகவிருக்கின்றேனே? இவ்விதமிருக்க ஆத்மாவும், சுகரூபமும், அனுபவரூபமுமாகவேயுள்ள உம்முடைய மஹிமையை நிருத்தமான (அடக்கப்பட்ட) மனத்தினலும் கூட எவன் தான் அறியச் சக்தனுகவாவான். (2) *ஹே அஜித! எவர் ஞ்ஞானவழியில் முயற்சியை அற்பமும் செய்யாது ஸாதுக்களால் இயற்கையாகவே நித்யமாக வெளியிடப்பட்டதும், தத்தமது இடத்திலேயே இருக்கின்றவர்களாயினுங்கூடத் தமது காதுக்கெட்டினதுமான உமது லீலையை மனமொழி மெய்களால் கொண்டாடுகின்றவர்களாகவே ஜீவிக்கின்ற

---

* அங்ஙனமாயின் அறியாதவர் ஸம்ஸாரதரணத்தைச் செய்வது எதனலென்முல் அதற்குவேண்டி இந்த ச்லோகம் சொல்லப்படுகிறது.

**जित जितोऽप्यसि तैस्त्रिलोक्याम् ॥३॥ श्रेयस्सृतिं भक्तिमुदस्य ते विभो क्लिश्यन्ति ये केवलबोधलब्धये। तेषामसौ क्लेशल एव शिष्यते नान्यद्यथा स्थूलतुषावघातिनाम् ॥ ४ ॥ पुरेह भूमन्बहवोऽपि योगिनस्त्वदर्पितेहा निजकर्मलब्धया। विबुध्य भक्त्यैव कथोपनीतया प्रपेदिरेऽञ्जोऽच्युत ते गतिं पराम् ॥ ५ ॥ तथापि भूमन्महिमाऽगुणस्य ते विबोद्धुमर्हत्यमलान्तरात्मभिः।**

---

னரோ அவர்களால் மூவ்வுலகிலும் எவராலும் பெரும்பாலும் ஜயிக்க (அடைய) முடியாதவராயினுங்கூட நீர் ஜயிக்கப்பட்ட (அடையப்பட்ட) வராகவாகின்றீர். (ஆனதுபற்றி க்ஞானமார்க்கத்தில் பாடு எதற்கு). (3) ஹே விபோ! எவர் இம்மை மருமைச் சுகங்களைத் தருகின்ற (அல்லது மோக்ஷத்துக்குச்சாதனமான) உமது பக்தியை விடுத்து தனித்த க்ஞானத்தையடைவதற்குவேண்டி மட்டும் கிலேசப்படுகின்றனரோ அவர்களுக்குப் பெரிய கருக்காயைக் குத்துகின்றவர்களுக்குப்போல கிலேசம் மட்டும் எஞ்ஜி நிற்குமேயொழிய வேறொன்றும் கிட்டாது.(1) (4) ஹேபூமன்! இந்த உலகில் பலர் முன்னர் யோகிகளாக இருந்து (2)(யோகங்களினால் க்ஞானத்தை யடையாதவர்களாய்) பின்னர் லௌகிகமான சேஷ்டையைக்கூட உம்மிடத்தில் அர்ப்பணஞ்செய்தவர்களாய், (உம்மிடத்தில் அர்ப்பணஞ் செய்யப்பட்ட) சொந்தக் கர்மங்களினாலேற்பட்டதும், கதையினால் (குணகதனத்தினால்) உமது ஸமீபத்தை யடைவிக்கப்பட்டதுமான பக்தியினாலேயே (விஸ்வ வியாபகரான உம்மை) யறிந்துகொண்டு சுகமாகவே மேலான உமது கதியையடைந்திருக்கின்றனர்.(3) (5) ஆயினும் (உமது ஸகுணஸ்வரூபமோ நிர்க்குணஸ்வரூபமோ இரண்டுமே அறிதற்கரிதானது தானாயினும்) ஹேபூமன்! குணங்களைக் கடந்தவரான (நிர்க்குணமான) உமது ஸ்வரூபமானது இந்திரியங்களைத் தன்வசமாக்கினவர்களால் விசேஷமான வடிவமெ

---

(1) பக்தியில்லாவிடில் க்ஞானம் சித்திக்கமாட்டாது என இதனாற் சொல்லப்பட்டது. (2) இந்த சுலோக ஸ்ரீதரீய வியாக்கியானத்தில் योगैर्ज्ञानं प्राप्यापि எனச்சில புஸ்தகத்திலிருக்கின்றது. ஆயினும் योगैर्ज्ञानमप्राप्य என வேறு ப்ராசீன பாடத்தைக்கொண்டு உரை எழுதப்பட்டது. (3) இதனால் பக்தியினாலேயே க்ஞானமுண்டாகின்றதென்ற விஷயத்தில் சாதுக்களின் ஆசாரம் காட்டப்பட்டது.

अविक्रियात्स्वानुभवादरूपतो ह्यनन्यबोध्यात्मतया न चान्यथा ॥ ६ ॥ गुणात्मनस्तेऽपि गुणान्विमातुं हितावतीर्णस्य क ईशिरेऽस्य । कालेन यैर्वा विमिताः सुकल्पैर्भूपांसवः खे मिहिका द्युभासः ॥ ७ ॥ तत्तेऽनुकम्पां सुसमीक्षमाणो भुञ्जान एवात्मकृतं विपाकम् । हृद्वाग्वपुर्भिर्विदधन्नमस्ते जीवेत यो मुक्तिपदे स दायभाक् ॥ ८ ॥ पश्येश मेऽनार्यमनन्त आद्ये परात्मनि त्वय्यपि मायिमायिनि । मायां वितत्येक्षितुमात्मवैभवं ह्यहं कियानैच्छमिवार्चिरग्नौ ॥ ९ ॥ अतः क्षमस्वाच्युत मे रजोभुवो ह्यजानतस्त्वत्पृ-

---

தவுமற்றதும், ப்ரம்ஹத்தைத் தனக்கு விஷயமாகக்கொள்ளாததுமான ப்ரம்ஹாத்மைக்ய ஸாக்ஷாத்காரமூலமாக ஸ்வப்ரகாசமாகவிருக்கும் தன்மையினல் ஸாக்ஷாத்கரிக்கக் கூடியதாகவாகிறதேயொழிய இதுதான் அது என விஷயமாகவாகும் முறையிலில்லை. (6) எந்த நிபுணர்களால் பூமியிலுள்ள பொடிகள் விசேஷமாக எண்ணப்பட்டனவாகவாகுமோ, அதுபோல ஆகாசத்திலுள்ள பனித்துளிகள் விசேஷமாக எண்ணப்பட்டனவாகவாகுமோ, அதுபோல நக்ஷத்திராதிகளின் கிரணபரமாணுக்களுங்கூட விசேஷித்து எண்ணப்பட்டனவாகவாகுமோ அவர்களாலும்கூட இந்த விஶ்வத்தின் பாலனத்துக்குவேண்டி (வெகு குணங்களை வெளிப்படுத்தி) அவதரித்தவரும் குணங்களுக்கு அதிஷ்டாதாவுமான உம்முடைய குணங்களை இவ்வளவெனவெண்ணுவதற்கு முடியுமோ? (7)

ஆகவே உமது தயையை எதிர்பார்த்துக்கொண்டும், தன்னல் தேடப்பட்ட கர்மபலனை (பற்றில்லாமலே) அனுபவித்துக்கொண்டும், மனமொழிமெய்களால் உம்மை நமஸ்கரித்துக்கொண்டும் எவன் ஜீவிப்பனே அவன் மோக்ஷபதத்தில் பாகமுள்ளவனுக ஆகிறுன்.(8) ஹே ஈஶ! எனது கெட்ட ஸ்வபாவத்தைப்பாரும். அனந்தனும் ஆத்யனும் பரமாத்மாவும் மாயாவிகளையும் மோஹிக்கச் செய்பவருமான உம்மிடத்தில் கூட எனது மாயையைவீசி எனது சக்தியைப் பார்க்க விரும்பினேனே? அக்னியினின்றுமுண்டான ஜ்வாலையானது அக்னியினிடத்தில் போல இவ்விதம் செய்வதற்கு நான் எவ்வளவு? (இவ்விதம் நான் செய்வதற்குத் தகுதியுடையவனுவேனே? ஒருபொழுதுமாகமாட்டேன்). (9) ஹே அச்யுத! ரஜோகுணத்தி

थगीशमानिनः । अजावलेपान्धतमोऽन्धचक्षुष एषोऽनुकम्प्यो मयि नाथवानिति ॥ १० ॥

क्वाहं तमोमहदहङ्खचराग्निवार्भूसंवेष्टिताण्डघटसप्तवितस्तिकायः । क्वेदृग्विधाऽविगणिताण्डपराणुचर्यावाताध्वरोमविवरस्य च ते महित्वम् ॥ ११ ॥ उत्क्षेपणं गर्भगतस्य पादयोः किं कल्पते मातुरधोक्षजागसे । किमस्तिनास्तिव्यपदेशभूषितं तवास्ति कुक्षेः कियदप्यनन्तः॥ १२ ॥ जगत्त्रयान्तोदधिसंप्लवोदे नारायणस्योदरनाभिनालात् । विनिर्गतोऽजस्त्विति वाङ्

---

னின்றுமுண்டானவனும் ஆனதுபற்றியே அறியாதவனும், ஆனது பற்றியே நான் அஜன்=ஜனனமற்றவன், நான் ஜகத்கர்த்தா என்ற அடர்ந்த தமோகுணரூபமான மதத்தினல் பொட்டையான கண்ணை யுடையவனும், உம்மைப்போல நானும் தனியானவொரு ஈசன் என அஹங்காரங்கொண்டவனுமான என் விஷயத்தில் "இவன் வேறிடத்தில் ப்ரபுவாகவிருந்தபோதிலுங்கூட நாதனை நம்மிடத்தில் அடங்கினவன், ஆனதுபற்றி நம்மால் தயவு காட்டக்கூடியவன்" என்பதாய் பொருத்துக்கொள்ளுவீராக. (10) ப்ரகிருதி, மஹத் தத்த்வம், அஹங்தத்த்வம், ஆகாசம், வாயு, அக்னி, ஜலம், பூமி ஆகிய எட்டு தத்துவங்களடங்கிய ப்ரம்ஹாண்டத்தில் (எனது சொந்த அளவினல்) ஏழு சாண் அளவுள்ள சரீரத்தையுடையவனுன நான் எங்கே? இத்தகைய வமைப்புள்ளதும் எண்ணமுடியாததுமான ப்ரம்ஹாண்டங்களாகிற பரமாணுக்களின் ஸஞ்சாரத்திற்குரிய ஜன்னல்கள் போன்ற உரோமத்வாரங்களையுடையவரான உம்முடைய மஹிமைதான் எங்கே? (11) ஹே அதோக்ஷஜ! கர்ப்பத்திலிருக்கின்ற குழந்தையினது பாதங்களின் உதைத்தலானது தாயாருக்கு அபராதம் செய்ததாகவாவதுண்டோ? ஸ்தூலமென்றும், ஸூக்ஷ்மமென்றும், அதாவது:—காரியமென்றும், காரணமென்றுமான, சப்தங்களினல் சொல்லப்பட்ட எந்தப்பொருள்தான் உமது குக்ஷிக்கு வெளியிலிருக்கின்றது? (12) மூவ்வுலகத்தினுடைய ப்ரளயகாலத்தில் ஒன்றுபட்ட ஸமுத்திர ஜலத்தில் இருக்கின்ற நாராயணனுடைய வயிற்றில் முளைத்த நாபித்தண்டினின்றும் ப்ரம்ஹா வெளிவந்தான் என்ற வாக்கோ பொய்யேயன்று. ஏன்? ஹே ஈஸ்வர! நான்

न वै मृषा किं त्वीश्वर त्वन्न विनिर्गतोऽस्मि ॥१३॥ नारायणस्त्वं नहि सर्वदेहिनामात्मास्यधीशोऽखिललोकसाक्षी। नारायणोऽङ्गं नरभूजलायनात्तच्चापि सत्यं न तवैव माया ॥१४॥ तच्चेज्जलस्थं तव सज्जगद्वपुः किं मे न दृष्टं भगवंस्तदैव। किं वा सुदृष्टं हृदि मे तदैव किं नो सपद्येव पुनर्व्यद-

---

உம்மிடமிருந்து வெளிவரவில்லையோ? (13) *நீர் நாராயணன்றோ? எல்லா (1)ஜீவர்களுக்கும் ஆத்மாவாகவும், (2)அதீசனுக (ப்ரவர்த்தனுக) வும், எல்லா உலகுக்கும் ஸாக்ஷியாகவும் அன்றோ இருக்கின்றீர். நர (ஸ்ரஷ்டாவி) விடமிருந்துண்டான தத்த்வங்களேயும் (நரவிடமிருந்துண்டான) ஜலத்தையும் ஆஶ்ரயித்திருப்பதுபற்றி நாராயணனுகச் சொல்லப்படுபவர் எவரோ அவரும் உமது அங்கமே= மூர்த்தியேயாவர். அந்த அங்கமு (மூர்த்தியு) ம் உண்மையானதன்று. உமது மாயையேயாகும். (14)

ஜகத்துக்கு ஆஶ்ரயபூதமான உம்முடைய அந்தச் சரீரந்தான் ஜலத்திலிருக்கிறது என இவ்விதம் சொல்லுவது உண்மையாகவிருக்குமானுல் ஹேபகவன்! அப்பொழுதே=ப்ரளயத்துக்கடுத்த க்ஷணத்திலேயே(3), என்னுல் ஏன் அது வெளியில் காணப்படவில்லை.

---

* அங்ஙனமாயின் நீ நாராயணனுடைய புத்திரனுக விருக்கலாம் அதனுல் க்ருஷ்ணனுன எனக்கென்ன பெருமை எனின்? அதனுண்மை இந்த 14-வது சுலோகத்தினுல் சொல்லப்படுகிறது.

(1) नारम्=ஜீவஸமூஹத்தை अयनम् = ஆஶ்ரயமாக உடையவர் ஆனதுபற்றி நீர் நாராயணனேயாவீர் என்பது ''सर्वदेहिनामात्मा'' என்றதாலும், (2) नारस्य=ஜீவஸமூஹத்துக்கு अयनम्=ப்ரவிருத்தியானது உம்மிடமிருந்து ஏற்படுவதுபற்றியும், நீர் நாராயணனேயாவீர் என்பது ''अधीशः'' என்றதாலும், नारम्=ஜீவஸமூஹத்தை अयसे=जानासि, அறிகின்றீர், ஆனதுபற்றியும் நீர் நாராயணனேயாவீர் என்பது "अखिललोकसाक्षी" என்றதாலும் சொல்லப்பட்டது. இதனுல் "நாராயண:" என்றதற்கு மூன்றுபொருள் கூறப்பட்டதாகவாயிற்று.

(3) ஹே பகவன்! ப்ரளயத்துக்குப் பிறகு உமது நாபிகமலத்தின் தண்டுவழியாக உன்னில் ப்ரவேசித்து நூறுவருஷங்கள் முடிய நான் தேடியும் என்னுல் ஏன் அது காணப்படவில்லை. அது உண்மையிலிருக்குமாயின் என்னுல் காணப்படவேண்டுவது அவச்யமன்றோ?

र्शि ॥ १५ ॥ अत्रैव मायाधमनावतारे ह्यस्य प्रपञ्चस्य बहिः स्फुटस्य । कृत्स्नस्य चान्तर्जठरे जनन्या मायात्वमेव प्रकटीकृतं ते ॥ १६ ॥ यस्य कुक्षाविदं सर्वं सात्मं भाति यथा तथा । तत्त्वय्यपीह तत्सर्वं किमिदं मायया विना ॥ १७ ॥ अद्यैव त्वदृतेऽस्य किं मम न ते मायात्वमादर्शितमेकोऽसि

---

அப்பொழுதே என்னுடைய மனத்திலும் ஏன் காணப்படவில்லை.(1) (2)தவஞ்செய்து முடிந்த பின்னர் (என்னல் அது) பார்க்கவும்பட்டது. (15) (3)மாயையைப் போக்கும் ஹே ஈஶ! இதே அவதாரத்தில் வெளியில் தெளிவாய் அறியப்படுகின்ற இந்த எல்லா ப்ரபஞ்சத்தையும் தனது வயிற்றினுள்ளில் தாயான யசோதைக்குக்காட்டினதிலிருந்து ப்ரபஞ்சத்துக்கு மாயாத்வமானது உம்மால் விளக்கப்பட்டிருக்கிறது. (16) (4)உமது வயிற்றில்இவையெல்லாம் எப்படி ப்ரகாசிக்கின்றதோ அவையாவும் அப்படியே = வெளியிலும் தோற்றத்தையடைகிறது. உம்முடன் கூடின அவையாவும் உம்மிடத்தில் மாயை இல்லாவிடில் (5)எவ்விதம் பொருந்தும். (17) உம்மைத் தவிர்த்து இந்த ப்ரபஞ்சத்துக்கு மாயாரூபமாக விருத்தலானது எனக்கே அதிலும் இப்பொழுதே உம்மால் காண்பிக்கப்பட

---

(1) பாஹ்யதிருஷ்டிக்குப் புலனாகக்கூடியதன்று என்றால் நான் தவஞ்செய்யுங்கால் எனதுமனத்தில் காட்டப்பட்டிருக்கவேண்டுமே? என் அவ்விதம் காட்டப்படவில்லை. (2) தவஞ்செய்து முடிந்ததும் அது காட்டவும்பட்டதே. ஆகவே உமது மூர்த்தியைத் தேச விசேஷமாத்திரத்திலிருப்பதாகச் சொல்லுவது உண்மையாகாது எனப்பெறப்படுகிறது. (3) ஜலத்தை ஆதியாகக்கொண்ட ப்ரபஞ்சமானது ஸத்யமாகவிருக்குமாயின் அதனால் உமக்குப் பரிச்சேத—குறைவு, வரலாம். அந்த ப்ரபஞ்சமோ மாயையினல் தோற்றும்படி செய்யப்பட்டது என்பதாய் உம்மாலேயே காட்டப்பட்டது எனப்பின்வரும் 3 சுலோகங்களால் சொல்லப்படுகிறது. (4) வெளியிலும் ப்ரபஞ்சமிருக்கட்டும். அதுவே வயிற்றினுள்ளிலும் ப்ரதிபிம்பமாகத் தோற்றத்தையடையலாமன்றோ எனின்? அதுபொருந்தாது என்பது இந்த 17-வது சுலோகத்தால் சொல்லப்படுகிறது. (5) உம்மிடத்தில் இதன் ப்ரதிபிம்பம் தோன்றுகிறது என்றாலோ, வெளியிலிருப்பதற்கு மாறுபாடாகவன்றோ தோற்றவேண்டும். அவ்விதமில்லையே? கண்ணாடி ஸ்தானத்திலுள்ள உமக்கு உம்மிடத்திலேயே ப்ரதிபிம்பமேற்படுவதற்கிடமில்லை. ஆகவே இது முற்றிலும் பொய்யேயாகும் என்றேற்பட்டது.

**प्रथमं ततो व्रजसुहृद्वत्साः समस्ता अपि। तावन्तोऽसि चतुर्भुजास्तदखिलैः साकं मयोपासितास्तावन्त्येव जगन्त्यभूस्तदमितं ब्रह्माद्वयं शिष्यते ॥ १८ ॥ अजानतां त्वत्पदवीमनात्मन्यात्मात्मना भासि वितत्य मायाम्। सृष्टाविवाहं जगतो विधान इव त्वमेषोऽन्त इव त्रिनेत्रः ॥ १९ ॥ सुरेष्वृषिष्वीश तथैव नृष्वपि तिर्यक्षु यादस्स्वपि तेऽजनस्य। जन्मासतां दुर्मदनिग्रहाय प्रभो विधातः सदनुग्रहाय च ॥ २० ॥**

**को वेत्ति भूमन्भगवन्परात्मन्योगेश्वरोतीर्भवतस्त्रिलोक्याम्। क वा कथं वा कति वा कदेति विस्तारयन्क्रीडसि योगमायाम् ॥ २१ ॥ तस्मादिदं**

---

வில்லையோ? அதாவது:—முதலில் ஒருவராகவிருந்தீர். பிறகு கோகுலத்திலுள்ள எல்லாச் சுஹிருத்துக்களாகவும், கன்றுகளாகவும் ஆனீர். என்னுடன் கூடின எல்லாத் தத்த்துவங்களாலுமுபாஸிக்கப்பட்டவர்களாகவும், அவ்வளவுபேர்களும் சதுர்புஜர்களாகவும் ஆனீர். அவ்வளவு ப்ரம்ஹாண்டங்களாகவும் ஆனீர். பிறகு ப்ரமாணத்துக்கெட்டாததும் அத்வயமுமான ப்ரம்ஹமாக எஞ்ஜி நிற்கிறீர். (18) உமது ஸ்வரூபத்தை யறியாதவர்களுக்கு அனாத்மாவான ப்ரகிருதியிலிருக்கும் ஆத்மாவான நீரே ஸ்வதந்திரமாக மாயையை விரிவுபடுத்திக்கொண்டு ஜகத்தின் ஸிருஷ்டிவிஷயத்தில் ப்ரம்ஹதேவனென நான்போலும், ரக்ஷண விஷயத்தில் இந்த நீர் போலும், ஸம்ஹார விஷயத்தில் முக்கண்ணன் போலும் விளங்குகின்றீர். (19) ஹே ஈஸ! ப்ரபோ! ஹே விதாத:! தேவர்களிடத்திலும், ரிஷிகளிடத்திலும், அதுபோலவே மனிதர்களிடத்திலும், பசுக்களிடத்திலும், ஜலஜந்துக்களிடத்திலும், உண்மையில் பிறவியற்றவரான உமது அவதாரமானது அஸாதுக்களுடைய கெட்டமதத்தைப் போக்க வேண்டியும், ஸாதுக்களை யனுக்கிரஹிக்கவேண்டியுமே ஏற்படுகிறது. (20) ஹே பூமன்! ஹே பகவன்! ஹே பராத்மன்! ஹே யோகேஸ்வர! மூவுலகிலும் யோகமாயையை விஸ்தாரப்படுத்திக்கொண்டு எங்கு எப்படி எவ்வளவு எப்பொழுது விளையாடுகிறீர் என உமது லீலைகளை எவன் அறிந்துகொள்ளக் கூடும். (21)

ஆகவே உண்மையிலில்லாத ஸ்வரூபமுள்ளதும் ஸ்வப்பினம் போன்ற தோற்றத்தையுடையதும், சைதன்னியமற்றதும் (ஜடரூப

जगदशेषमसत्स्वरूपं स्वप्नाभमस्तधिषणं पुरुदुःखदुःखम् । त्वय्येव नित्यसुखबोधतनावनन्ते मायात उद्यदपि यत्सदिवावभाति ॥ २२ ॥ एकस्त्वमात्मा पुरुषः पुराणः सत्यः स्वयंज्योतिरनन्त आद्यः । नित्योऽक्षरोऽजस्रसुखो निरञ्जनः पूर्णोऽद्वयो मुक्त उपाधितोऽमृतः ॥ २३ ॥ एवंविधं त्वां सकलात्मनामपि स्वात्मानमात्मात्मतया विचक्षते । गुर्वर्कलब्धोपनिषत्सुचक्षुषा ये ते तरन्तीव भवानृताम्बुधिम् ॥ २४ ॥ आत्मानमेवात्मतयाऽ-

---

மானதும்) அதிகம் துக்கமானவற்றைக் காட்டினுங்கூட துக்கரூபமானதுமான இந்த எல்லா ஜகத்தும் ஸத்சிதானந்த சரீரரும், அனந்தருமான உம்மிடத்திலேயே மாயையினாலுண்டாகி லயமடைகின்றதாக விருப்பினுங்கூட யாதொரு ஸத்=அழியாத பொருளுண்டோ அதுபோலத் தோற்றிக்கொண்டுவருகிறது. (22) புருஷனும் புராணனும், ஸ்வப்ரகாசனும், அனந்தனும், ஆத்யனும், நித்யனும், அக்ஷரனும், தொடர்ந்த சுகஸ்வரூபனும், நிரஞ்ஜனனும், பூர்ணனும், அத்வயனும், உபாதியினின்றும் விடுபட்டவனும், அமிருதனும், ஆத்மாவுமான நீர் ஒருவரே ஸத்யமாக=முக்காலத்திலுமழிவற்றவராக ஆகிறீர்.* (23) ஸத்திய ஞானானந்தரூபரும் எல்லா ஆத்மாக்களுக்கும் ஆத்மாவுமான உம்மை குருவாகிற ஸூரியனால் கிடைத்த உபநிஷத்தாகிற (ஞானமாகிற) நல்ல கண்கொண்டு ப்ரத்யக் சைதன்ய ஸ்வரூபமாக எவர்கள் பார்க்கின்றனரோ அவர்கள் பிறவியாகிற பொய்க்கடலைத் தாண்டுகின்றனர் போலவாகின்றனர்.(1) (24) தனது ஆத்மாவையே ப்ரத்யகாத்ம ப்ரம்ஹஸ்வரூபமாக அறியாத

---

* இந்த 23-வது சுலோகத்துக்கு ஸ்ரீதரீய வியாக்கியானத்தில் விரிவான பொருள் கூறப்பட்டிருப்பினும் விரிவுக்கஞ்சி அது இங்கு எழுதப்படவில்லை. (1) க்ஞானத்தால் தாண்டுகின்றனர் என்றும், அதுவும் "तरन्तीव" தாண்டுகின்றவர் போலவாகின்றனர் என்றும், ப்ரத்யகாத்ம ப்ரம்ஹஸ்வரூப க்ஞானத்தாலென்றும் மூன்று பொருள்கள் இந்த ஸ்லோகத்தில் சொல்லப்பட்டன. அவற்றுள் आत्मानमेवात्मतया என்றதால் ஞானத்தால் தாண்டும் முறையும், अज्ञानसंज्ञौ என்றதால் தாண்டுகின்றவர்போல வாகின்றனர் என்பதும், त्वामात्मानम् என்றதாதி இரண்டு சுலோகங்களினால் ப்ரத்யகாத்ம ப்ரம்ஹக்ஞானத்தாலென்பதும் விளக்கப்படுகிறது.

**विजानतां तेनैव जातं निखिलं प्रपञ्चितम् । ज्ञानेन भूयोऽपि च तत्प्रलीयते रज्ज्वामहेर्भोगभवाभवौ यथा ॥ २५ ॥ अज्ञानसंज्ञौ भवबन्धमोक्षौ द्वौ नाम नान्यौ स्त ऋतज्ञभावात् । अजस्रचित्यात्मनि केवले परे विचार्यमाणे तरणाविवाहनी ॥ २६ ॥ त्वामात्मानं परं मत्वा परमात्मानमेव च । आत्मा पुनर्बहिर्मृग्य अहो अज्ञजनाज्ञता ॥ २७ ॥ अन्तर्भवेऽनन्त भवन्तमेव ह्यतत्त्यजन्तो मृगयन्ति सन्तः । असन्तमप्यन्त्यहिमन्तरेण सन्तं गुणं तं किमु यन्ति सन्तः ॥ २८ ॥ अथापि ते देव पदाम्बुजद्वयप्रसादलेशानुगृहीत एव**

---

வர்களுக்கு அந்த அக்ஞானத்தினலேயே எல்லாப்ரபஞ்சமும் உண்டாகிக் கயிற்றில் பாம்பினுடலினுத்பத்தியும் பிறகு அதன் அழிவும் போலத் திரும்பவும் அந்த ப்ரபஞ்சமானது ஞானத்தினல் நாசத்தையடைந்துவிடுகிறது. (25) பவத்தினல் (ஸம்ஸாரத்தினல்) பந்தமென்றும், அதனின்றும் மோக்ஷமென்றுமான (உலகவேத) ப்ரஸித்தங்களான இவ்விரு பொருள்களும் அக்ஞானத்தால் கிடைத்த பெயரையுடையனபற்றி ஸத்தியக்ஞான ரூபமான ஆத்மாவைக்காட்டிலும் வேறுபட்டனவன்று. என்? அகண்டானுபவஸ்வரூபமும், பரமமும், சுத்தமுமான ஆத்மாவை விசாரித்தறியுங்கால் நித்தியப்ரகாசனை ஸூரியனிடத்தில் இரவு பகல்கள்போலவாவதாலென்க. (26) ஆத்மாவான உம்மை வேறுபட்ட தேஹாதியாகவெண்ணியும் (ஆத்மாவினிடத்தில் தேஹாதிகளின் அத்தியாஸத்தைச் செய்தும்) வேறுபட்ட தேஹாதிகளை ஆத்மாவாகவெண்ணியும் (தேஹாதிகளில் ஆத்மாவின் அத்யாஸத்தைச்செய்தும்) உள்ளில் நஷ்டமான ஆத்மாவானது வெளியில் தேடப்படுகிறது என்பது வெகு விசித்திரமாகவேயிருக்கிறது. (வீட்டில் நஷ்டமான பொருளைக் காட்டில் தேடுவதுண்டோ என்பது கருத்து.) மூட ஜனங்களின் அறியாமையானது வெகு ஆஸ்சரியமாகவன்றோ இருக்கின்றது. (27)

ஹே அனந்த! பகுத்தறிவுள்ள ஸாதுக்கள் சேதனசேதனரூபமான சரீரத்தின் நடுவிலேயே அசேதனமான பொருளை நீக்கிச் சேதனரூபமான உம்மைத் தேடியறிகின்றனர். ஸமீபத்தில் இல்லாததான பாம்பை மறுக்காமல் இருக்கின்ற பழுதையை விவேகிகள் அறிவதுண்டோ? (28) இவ்விதம் க்ஞானத்தாலறிவது சுளுவாக இருப்பினுங்கூட ஹே தேவ! பகவன்! உமது இரண்டு சரணாவிந்

हि । जानाति तत्त्वं भगवन्महिम्नो न चान्य एकोऽपि चिरं विचिन्वन् ॥ २९ ॥ तदस्तु मे नाथ स भूरिभागो भवेऽत्र वाऽन्यत्र तु वा तिरश्चाम् । येनाहमेकोऽपि भवज्जनानां भूत्वा निषेवे तव पादपल्लवम् ॥ ३० ॥

अहोऽतिधन्या व्रजगोरमण्यः स्तन्यामृतं पीतमतीव ते मुदा । यासां विभो वत्सतरात्मजात्मना यत्तृप्तयेऽद्यापि न चालमध्वराः ॥ ·१ ॥ अहो

---

தங்களின் ப்ரஸாத லேசத்தினல் அனுக்கிரஹிக்கப்பட்டவன்* எவனே அவன் உமது ஸ்வரூபத்தின் உண்மையை அறிவானேயன்றி எத்துணை காலம் அனாத்மாம்சத்தைப் போக்கி விசாரித்தபோதிலும் வேறு ஒருவனுமறியமாட்டானன்றே? (29) ஹே நாத! ஆனது பற்றி நான் இந்த ப்ரம்ஹப் பிறவியிலோ, பசுபக்ஷியாதிகளின் நடுவில் யாதொரு பிறவியுண்டோ அப்பிறவியிலோ உமது பக்தஜனங்களுள் யாதேனுமொருவனாகவிருந்து தங்களுடைய சரணபல்லவத்தை எதனால் இடையறாது பஜிக்கக்கூடுமோ அத்தகைய அதிகபாக்கியமானது எனக்கு உண்டாகட்டும். (30) (1)ஹேவிபோ! எந்த உமக்குத் திருப்தி செய்து வைப்பதையும் பொருட்டு எல்லாயாகங்களும் இதுபோழ்துங்கூட சக்தியுள்ளனவாகவாவதில்லையோ அந்த உம்மால் கன்றுகளுடையவும், குழந்தைகளுடையவும் ரூபத்தினல் எவர்களின் முலைப்பாலாகிற அமுதமானது அதிகமான சந்தோஷத்துடன் குடிக்கப்பட்டதோ (அந்த) கோகுலத்திலுள்ள பசுக்களும், கோபஸ்திரீகளும் அதிகம் பாக்கியம் செய்தவர்கள் என்பது ஆஸ்சரியமன்றே? (31) பரமானந்த ஸ்வரூபமும், எங்கும் நீக்கமற நிறைந்துள்ளதும், முக்காலத்திலுமழிவற்றதுமான ப்ரம்ஹமானது எவர்

---

* பகவத் பக்திமார்க்கத்தைவிடுத்து கேவல ஆத்மக்ஞானமார்க்கத்திலீடுபட்டு வெகுகாலம் மஹாவாக்யார்த்த விசாரத்தை மட்டும் செய்துவருபவர்க்கு க்ஞானஸித்தியோ, மோக்ஷமோ ஏற்படமாட்டாது. பகவத்பக்திமார்க்கத்திலீடுபட்டு மஹாவாக்யார்த்த விசாரஞ் செய்கின்றவர்க்கு பகவத்ப்ரஸாதத்தால் சித்தந்தெளிந்து ஸத்குரு லாபமும் கிடைத்து ப்ரம்ஹாத்மைக்ய ஸாக்ஷாத்காரமேற்பட்டு மோக்ஷ ஸித்தியேற்படுகிறது என்பது கருத்து. (1) தேவாதிகளாகப் பிறப்பதைக் காட்டிலும் யாதேனுமோரிடத்தில் உம்மிடம் பக்தியுள்ளவனாகப் பிறத்தலே சிறந்தது என்று இனிவரும் 7 சுலோகங்களால் தெரிவிக்கிறார்.

**भाग्यमहो भाग्यं नन्दगोपव्रजौकसाम् । यन्मित्रं परमानन्दं पूर्णं ब्रह्म सनातनम् ॥ ३२ ॥ एषां तु भाग्यमहिमाच्युत तावदास्तामेकादशैव हि वयं बत**

களுக்கு மித்திரனுகவிருக்கின்றதோ அந்த நந்தகோபருடைய வ்ரஜத்திலிருக்கும் ஜீவர்களின் பாக்கியமன்றோ பாக்கியமாகிறது. (32) ஹே அச்யுத! இப்பொழுதுள்ள இந்தக் கோகுலவாஸி ஜீவர்களுடைய பாக்கியத்தின் மஹிமையானது இருக்கட்டும். இதையாரால் சொல்லமுடியும். மஹாதேவனையாகியாகக் கொண்ட நாங்கள் *பதி

* வாக், பாணி, பாத, பாயு, உபஸ்தம் எனக் கர்மேந்திரியங்கள் ஐந்து. த்வக், சக்ஷுஸ், ச்ரோத்ர, ஜிஹ்வாம், க்ராணம், என க்ஞானேந்திரியங்கள் ஐந்து. மனஸ், புத்தி, அகங்காரம், சித்தம் என அந்தக்கரணங்கள் நான்கு. ஆக 14 இந்திரியங்களுக்குள் வாக்குக்கு அக்னியும், பாணிக்கு இந்திரனும், பாதத்துக்கு உபேந்திரனும், பாயுவுக்கு மித்ரனும், உபஸ்தத்துக்கு ப்ரஜாபதி என்ற தேவனும், அபிமானி தேவதைகளாவர். அதுபோல த்வக்குக்கு திக் என்ற தேவனும், சக்ஷுஸ்ஸுக்கு ஸூரியனும், சுரோத்ரத்துக்கு வாயுவும், ஜிஹ்வைக்கு வருணனும், க்ராணத்துக்கு அச்வினி தேவதைகளும் அபிமானிதேவதைகளாவர். அதுபோல மனஸ்ஸுக்குச் சந்திரனும், புத்திக்கு ப்ரம்ஹாவும், அஹங்காரத்துக்கு மஹாதேவனும், சித்தத்துக்கு வாஸுதேவனும் அபிமானிதேவதைகளாவர். ஆகவே இப்பதினன்கு தேவர்களுள் பாயு உபஸ்தம் இவற்றின் அபிமானி தேவதைகளை நீக்கினல் 12 பேர்களாவர். அதிலும் சித்தாதிஷ்டான தேவதையான வாஸுதேவனை நீக்கினல் 11 பெயர்களேயாவர். ஆகவே இந்த 11 அபிமானி தேவதைகளும் கோகுலவாசி ஜனங்களின் சரீரத்திலுள்ள தத்தமது அபிமானத்துக்கு விஷயங்களான இந்திரியங்கள் வாயிலாக ஸ்ரீகோபாலனுடைய ஸ்ரீமூர்த்தியிலமைந்துள்ள அவ்வவ்விந்திரியங்களின் விஷயங்களை அனுபவிப்பதாலும் இவர்களுள் புத்தியபிமானி ப்ரம்ஹதேவனும் சேர்ந்திருப்பதால் இப்பதினெரு அபிமானி தேவர்களும் பாக்கியசாலிகளென்றே சொல்லப்பட்டனர். முற்கூறிய தேவதைகளுள் ஒவ்வொருவரும் தத்தமது அபிமான விஷயமான இந்திரியம் வாயிலாக அவற்றுக்குரிய விஷயத்தை மட்டுமே தான் அனுபவிக்கமுடியும். இந்தக் கோகுலவாசி ஜனங்களோ எல்லா இந்திரியங்களாலும் எப்பொழுதுமே ஸ்ரீகோபாலனை அனுபவிப்பதால் இவர்களின் பாக்கியத்தின் மஹிமையை யாரால் நிர்ணயிக்கமுடியும் என்பது கருத்து.

भूरिभागाः । एतद्धृषीकचषकैरसकृत्पिबामः शर्वादयोऽङ्घ्र्युदजमध्वमृतासवं ते ॥ ३३ ॥ तद्भूरिभाग्यमिह जन्म किमप्यटव्यां यद्गोकुलेऽपि कतमाङ्घ्रिरजोभिषेकम् । यज्जीवितं तु निखिलं भगवान्मुकुन्दस्त्वद्यापि यत्पदरजः श्रुतिमृग्यमेव ॥ ३४ ॥ एषां घोषनिवासिनामुत भवान्किं देव रातेति नश्चेतो विश्वफलात्फलं त्वदपरं कुत्राप्ययन्मुह्यति । सद्वेषादिव पूतनापि सकुला त्वामेव देवापिता यद्धामार्थसुहृत्प्रियात्मतनयप्राणाशयास्त्वत्कृते ॥ ३५ ॥

---

ஞெரு பெயர்களுமே அதிகமான பாக்கியமுள்ளவர்களாக இருக்கின்றேமென்பது ஆஶ்சரியமன்றோ. ஏன்? இந்தக் கோகுலவாஸி ஜனங்களுடைய இந்திரியங்களாகிற பாத்திரங்களினுல் சித்தத்துக் கதிஷ்டாதாவான உம்முடைய சரணங்களாகிற தாமரஸ புஷ்பங்களிலுள்ள தேனுகிற ருசியான மத்யத்தை அடிக்கடி பானஞ்செய்கின்றேமென்பதுபற்றியே என்க. (33) ஆனதுபற்றி எவரது பாததூளியானது இப்பொழுதுங்கூட ஶ்ருதிகளால் தேடக்கூடியதேயொழிய அடையப்பட்டதில்லையோ அந்தப் பகவானுன முகுந்தன் எவர்களது ஜீவிதம் முழுதுமோ, அவர்களுள் எவரேனுமொருவருடைய பாததூளியின் அபிஷேகத்தையுடையதும், அதிகமான பாக்கியத்தையுடையதுமான பிறவியானது இந்த மனுஷ்யலோகத்தில் அதிலுங்காட்டில், அதிலுங்கோகுலத்தில் ஏதேனுமொன்று ஏற்படட்டும். (34)

ஹே தேவ! கோகுலவாசிகளான இவர்களுக்கு நீர் ஸர்வபலரூபரான உம்மைக்காட்டிலும் வேறு எந்தப் பலனைக் கொடுக்கப் போகின்றீர் என்பதாய் எங்களுடைய சித்தமானது பலவழியிலுமாலோசிக்கத் தொடங்கி மயக்கத்தை யடைகிறது. ஹே தேவ! ஸாதுக்களான பக்தர்களின் வேஷத்தை அனுகரணஞ் செய்ததைக் கொண்டுமட்டும் பாபியான பூதனைகூட தனது ஸஹோதரர்களான பகாசுர அகாசுரர்களுடன்கூட உம்மையே அடைவிக்கப்பட்டாளென்றுல் எவர்களுடைய வீடு பணம் மித்தரன் ப்ரியமானபொருள் சரீரம் புத்திரன் ப்ராணன் மனது இவைகள் உம்மிடத்திலேயே செலுத்தப்பட்டனவோ அவர்களுக்கு எதைக் கொடுக்கப் போகின்றீர் என யோஜித்துப் பார்ப்பீராக. (35) ஹே கிருஷ்ண! ஜனங்கள்

**तावद्रागादयः स्तेनास्तावत्कारागृहं गृहम् । तावन्मोहोऽङ्घ्रिनिगडो यावत्कृष्ण न ते जनाः ॥ ३६ ॥ प्रपञ्चं निष्प्रपञ्चोऽपि विडम्बयसि भूतले । प्रपन्नजनतानन्दसन्दोहं प्रथितुं प्रभो ॥ ३७ ॥ जानन्त एव जानन्तु किं बहूक्त्या न मे प्रभो । मनसो वपुषो वाचो वैभवं तव गोचरः ॥ ३८ ॥ अनुजानीहि मां कृष्ण सर्वं त्वं वेत्सि सर्वदृक् । त्वमेव जगतां नाथो जगदेतत्तवार्पितम् ॥ ३९ ॥ श्रीकृष्ण वृष्णिकुलपुष्करजोषदायिन् क्ष्मानिर्जरद्विजपशूदधिवृद्धिकारिन् । उद्धर्मशार्वरहर क्षितिराक्षसध्रुगाकल्पमार्कमर्हन्भगवन्नमस्ते ॥ ४० ॥**

---

எதுவரை உம்மைச்சேர்ந்தவர்களாக ஆகவில்லையோ அதுவரைதான் ராகம் முதலியன அவர்களுக்குத் திருடர்களாகவும், அதுவரைதான் வீடு காராகிருஹமாகவும் அதுவரைதான் மோஹமானது கால் விலங்காகவும் ஆகும். * (36) ஹே ப்ரபோ! நீர் ப்ரபஞ்சஸம்பந்தமற்றவராயினுங்கூட பூதலத்திலுள்ள ப்ரபன்னர்களான ஜனஸமூஹத்துக்கு அதிகமான ஆனந்தத்தை விருத்திசெய்யவேண்டி ப்ரபஞ்சத்தை அநுஸரிக்கிறீர். (37) ஹே ப்ரபோ! அறிந்தவர்கள் அறியட்டும். வெகுவார்த்தையினால் யாதுபயன். உமது வைபவமானது என்னுடைய மனத்துக்கோ சரீரத்துக்கோ வாக்குக்கோ எட்டக்கூடியதன்று. (38) ஹே கிருஷ்ண! எனக்கு உத்தரவு கொடுப்பீராக. நீர் ஸர்வஸாக்ஷியாக இருப்பதுபற்றி யாவையுமறிவீர். நீரே ஜகத்துக்களுக்கு நாதன். ஆகவே இந்த ஜகத்தானது (இந்த எனது சரீரமானது) உம்மிடத்தில் அர்ப்பணஞ் செய்யப்பட்டுவிட்டது. (39) ஹே கிருஷ்ண! யாதவகுலமாகிற தாமரஸபுஷ்பத்துக்கு ஆனந்தத்தைத் தருபவரே! பூமி, தேவர், ப்ராம்ஹணர், பசு, இவர்களாகிற சமுத்திரத்துக்கு விருத்தியைச் செய்பவரே! பாஷண்ட தர்மமாகிற அந்தகாரத்தைப் போக்குகின்றவரே! பூமியிலுள்ள கம்ஸாதிகளாகிற ராக்ஷஸர்களை யழிப்பவரே! சூரியன் முடியவுள்ள

---

* மற்றவர்களுக்கு ராகாதிகள் பந்தஹேதுக்களே யன்றி உம்மைச் சேர்ந்தவர்களுக்கு ராகாதிகள் உம்மைப் பற்றியனவாக விருப்பதுபற்றி அவர்களுக்கு அவை மோசகங்களாகவே ஆகின்றன. ஆயினும் அவர்களிடம் காணப்படும் பக்திமட்டும் அதிகமாகவே ஆகின்றது என்று கருத்து.

श्रीशुक उवाच—इत्यभिष्टूय भूमानं त्रिः परिक्रम्य पादयोः। नत्वाऽभीष्टं जगद्धाता स्वधाम प्रत्यपद्यत ॥ ४१ ॥ ततोऽनुज्ञाप्य भगवान्स्वभुवं प्रागवस्थितान्। वत्सान्पुलिनमानिन्ये यथापूर्वसखं स्वकम् ॥ ४२ ॥ एकस्मिन्नपि यातेऽब्दे प्राणेशं चान्तरात्मनः। कृष्णमायाहता राजन्क्षणार्धं मेनिरेऽर्भकाः ॥ ४३ ॥ किं किं न विस्मरन्तीह मायामोहितचेतसः। यन्मोहितं जगत्सर्वमभीक्ष्णं विस्मृतात्मकम् ॥ ४४ ॥ ऊचुश्च सुहृदः कृष्णं स्वागतं तेऽतिरंहसा। नैकोऽप्यभोजि कवल एहीतः साधु भुज्यताम् ॥ ४५ ॥ ततो हसन्हृषीकेशोऽभ्यवहृत्य सहार्भकैः। दर्शयंश्चर्माजगरं न्यवर्तत

---

யாவர்க்கும் பூஜ்யரே! ஹே பகவன். ப்ரம்ஹகல்பமுள்ளவரை உமக்கு நமஸ்கார மிருக்கட்டும். (40)

ஸ்ரீசுகர்சொல்லுகிறார்—ப்ரம்ஹதேவன் பலராலும் பூஜிக்கப்பட்ட ஸர்வேஶ்வரனை இவ்விதம் துதித்து மூன்றுதடவை வலம் வந்து கால்களில் நமஸ்கரித்துத் தனது ஸத்யலோகத்தை யடைந்தார். (41) பிறகு பகவான் தனது புத்திரனுக்கு உத்திரவு கொடுத்துவிட்டு முன்னர்தான் சொன்னபடி தனதுவரவை எதிர்பார்த்துக்கொண்டிருக்கின்ற தோழர்களையுடையதும், தான்சாப்பிடுமிடமானதுமான மணல்திட்டுக்கு முன்போலவே காட்டிலிருந்த கன்றுகளை இட்டுவந்தார். (42) ஹே ராஜன்! தமது ப்ராணேசனான கிருஷ்ணனில்லாமல் ஒருவருஷஞ் சென்றபோதிலுங்கூட (அதை) கிருஷ்ணனுடைய மாயையினால் தன்னறிவற்ற குழந்தைகள் அரைக்ஷணமாக வெண்ணினர். (43) இவ்வுலகில் எந்தமாயையினால் மயக்கப்பட்ட எல்லா ஜகத்தும் அடிக்கடி ஆத்மாவையே மறந்துவிடுகின்றதோ அந்த மாயையினால் மயக்கப்பட்ட சித்தத்தை யுடையவர் எதை எதைத்தான் மறந்துவிடமாட்டார். (44) வெகு வேகமாகக் கன்றுகளை ஓட்டிக்கொண்டு வந்துவிட்டாயே? நீயில்லாமல் ஒரு கபளத்தைக்கூட நாங்கள்சாப்பிடவில்லை. இங்குவா? இனிக்கவலையின்றிச் சாப்பிடலாம் என சுஹிருத்துக்களான கோபகுமாரர்கள் கிருஷ்ணனைச் சொல்லவும் சொல்லினர். (45) பிறகு ஹிருஷீகேசனான கிருஷ்ணன் சிரித்துக்கொண்டு குழந்தைகளுடன் கூடச் சாப்பிட்டு முடித்துக்கொண்டு மலைப்பாம்பின் தோலை (அவர்

वनाद्व्रजम् ॥ ४६ ॥ बर्हप्रसूननवधातुविचित्रिताङ्गः प्रोद्दामवेणुदलशृङ्गरवोत्सवाढ्यः । वत्सान्गृणन्ननुगगीतपवित्रकीर्तिर्गोपीदृगुत्सवदृशिः प्रविवेश गोष्ठम् ॥ ४७ ॥ अद्यानेन महाव्यालो यशोदानन्दसूनुना । हतोऽविता वयं चास्मादिति बाला व्रजे जगुः ॥ ४८ ॥ राजोवाच—ब्रह्मन्परोद्भवे कृष्णे इयान्प्रेमा कथं भवेत् । योऽभूतपूर्वस्तोकेषु स्वोद्भवेष्वपि कथ्यताम् ॥४९॥

श्रीशुक उवाच—सर्वेषामपि भूतानां नृप स्वात्मैव वल्लभः। इतरेऽपत्यवित्ताद्यास्तद्वल्लभतयैव हि ॥ ५० ॥ तद्राजेन्द्र यथा स्नेहः स्वस्वकात्मनि देहिनाम् । न तथा ममतालम्बिपुत्रवित्तगृहादिषु ॥ ५१ ॥ देहात्मवा-

---

களுக்குக்) காட்டிக்கொண்டு காட்டிலிருந்து கோகுலத்துக்குத் திரும்பினர். (46) மயில்தோகை புஷ்பம் புதிதான ஹரிதாளம் இவற்றால் அலங்கரிக்கப்பட்ட சரீரத்தையுடையவராகவும், வேணு, இலை, கொம்பு இவற்றின் அதிகமான சப்தத்தாலுண்டான ஸந்தோஷம் நிறைந்தவராகவும், கன்றுகளை உதட்டினுற் செய்யும் சப்தத்தாலழைக்கின்றவராகவும், பின்தொடர்ந்து வருபவரால் கொண்டாடப்பட்ட பவித்திரமான கீர்த்தியையுடையவராகவும், கோபஸ்திரீகளின் கண்களுக்குச் சந்தோஷத்தைத்தரும் பார்வையை யுடையயவராகவும் கோகுலத்தில் பிரவேசித்தார். (47) "யசோதையினுடையவும், நந்தகோபருடையவும், புத்திரனை இந்தக்கிருஷ்ணனால் இன்று பெரிய மலைப்பாம்பு கொல்லப்பட்டது. அப்பாம்பினின்றும் நாங்கள் காப்பாற்றப்பட்டோம்" எனக் குழந்தைகள் கோகுலத்தில் சொல்லினர். (48) ராஜன் சொல்லலுற்றார்—ப்ரம்ஹன்! தன்னிடமுண்டான குழந்தைகளிடங் கூட முன்னருண்டாகாத யாதொரு ப்ரேமையுண்டோ அந்த இவ்வளவு ப்ரேமை யசோதையினிடம் பிறந்த கிருஷ்ணனிடத்தில் எவ்விதமுண்டாயிற்று அதைச் சொல்லவேண்டும். (49)

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்—ஹேந்ருப! எல்லா ப்ராணிகளுக்கும் தனது ஆத்மாவே ப்ரேமைக்கு விஷயமாகிறான். புத்திரன் பணம் முதலிய மற்றவைகளோ அந்த ஆத்மாவினிடமுள்ள ப்ரேமையை யொட்டியே ப்ரியமாகவாகின்றன என்பது ப்ரஸித்தமன்றோ? ஆகவே ஹே ராஜேந்திர! ஜீவர்களுக்குத் தத்தமது ஆத்மாவினிடத்தில்




दिनां पुंसामपि राजन्यसत्तम । यथा देहः प्रियतमस्तथा नह्यनु ये च तम् ॥ ५२ ॥ देहोऽपि ममताभाक्चेत्तर्ह्यसौ नात्मवत्प्रियः। यज्जीर्यत्यपि देहेऽस्मिन् जीविताशा बलीयसी ॥ ५३ ॥ तस्मात्प्रियतमः स्वात्मा सर्वेषामपि देहिनाम् । तदर्थमेव सकलं जगदेतच्चराचरम् ॥ ५४ ॥ कृष्णमेनमवेहि त्वमात्मानमखिलात्मनाम् । जगद्धिताय सोऽप्यत्र देहीवाभाति मायया ॥ ५५ ॥ वस्तुतो जानतामत्र कृष्णं स्थास्नु चरिष्णु च । भगवद्रूपमखिलं नान्यद्वस्त्विह किंचन ॥ ५६ ॥ सर्वेषामपि वस्तूनां भावार्थो भवति स्थितः ।

---

ஸ்னேஹம் எவ்விதமோ அவ்விதம் என்னுடையதெனச் சொல்லப்படும் புத்திரன் பணம் வீடு முதலியவற்றிலேற்படுவதில்லை. ஹே ராஜன்யஸத்தம! தேஹத்தையே ஆத்மாவாகச் சொல்லுகின்ற புருஷர்களுக்குக்கூட தமது தேஹமானது எவ்விதம் அதிகம் ப்ரியமுள்ளதாகவாகுமோ, அவ்விதம் அந்தத் தேஹத்தைச் சார்ந்த புத்திராதிகளாவதில்லை. அந்தத் தேஹமுங்கூட என்னுடையது என எண்ணப்படுமாயின் அப்பொழுது இது ஆத்மாவானதுபோல ப்ரியமாகவாவதில்லை. இந்தத் தேஹம் தளர்ந்துவிட்டபோதிலுங்கூட ஜீவிதத்தில் ஆசையானது வலுவுள்ளதாகக் காணப்படுவதே அதன் காரணமாகும். ஆகவே எல்லா ஜீவர்களுக்கும் தமது ஆத்மாவே மிக்க ப்ரியமானதாகவாகிறது. அந்த ஆத்மாவுக்கு வேண்டியே சராசராத்மகமான இந்த எல்லா ஜகத்தும் ப்ரியமாகவாகிறது. நீ இந்தக் கிருஷ்ணனை எல்லா ஜீவர்களுக்கும் அந்தராத்மாவாக அறிந்துகொள்வாயாக. அந்தராத்மாவாயினுங்கூட அவர் ஜகத்துக்கு ஹிதத்தைச் செய்யவேண்டி மாயையினால் தேஹமுள்ளவர்போல இங்கு தோற்றத்தை யடைந்திருக்கிறார். (50–55) இவ்வுலகில் உண்மையில் கிருஷ்ணனையறிகின்ற புருஷர்களுக்கு ஸ்தாவரமும், ஜங்கமமுமான யாவும் பகவானையே ஸ்வரூபமாகவுடையதாகத் தோன்றுமேயொழிய இவ்வுலகில் பகவானுக்கு வேறாக ஒன்றிருப்பதாகத் தோன்றாது. (56) எல்லாப் பொருள்களுடையவும் உண்மையான நிலையானது காரணப்பொருளில் அடங்கியிருக்கிறது. அந்தக் காரணப் பொருளுக்கும் கிருஷ்ணபகவான் காரணமாகவிருக்கிறார். ஆகவே கிருஷ்ணனைக் காட்டிலும் வேறுபட்டபொருள் இருப்பதாக எவ்வி

तस्यापि भगवान्कृष्णः किमतद्वस्तु रूप्यताम् । ५७ ॥ समाश्रिता ये पद-पल्लवप्लवं महत्पदं पुण्ययशो मुरारेः। भवाम्बुधिर्वत्सपदं परं पदं पदं पदं यद्विपदां न तेषाम् ॥ ५८ ॥ एतत्ते सर्वमाख्यातं यत्पृष्टोऽहमिह त्वया । यत्कौमारे हरिकृतं पौगण्डे परिकीर्तितम् ॥ ५९ ॥ एतत्सुहृद्भिश्चरितं मुरारेरघार्दनं शाद्वलजेमनं च । व्यक्तेतरद्रूपमजोर्वभिष्टवं शृण्वन्गृणन्नेति नरोऽखिलार्थान् ॥ ६० ॥ एवं विहारैः कौमारैः कौमारं जहतुर्व्रजे । निलायनैः सेतुबन्धैर्मर्कटोत्प्लवनादिभिः ॥ ६१ ॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्धे
ब्रह्मकृतस्तुतिर्नाम चतुर्दशोऽध्यायः ॥ १४ ॥

---

தம் நிருபணஞ்செய்யமுடியும். (57) எவர்கள் புண்ணியமான யசஸ்ஸுள்ளதும் மஹான்களுக்கு ஆஶ்ரயமுமான முராரியினுடைய சரணபல்லவமாகிற தெப்பத்தை நன்கு ஆஶ்ரயித்தனரோ அவர்களுக்குப் பிறவிக்கடலானது கன்றின் கொளப்படியாகவாகிறது. ஸ்ரீவைகுண்டமாகிற பரமபதம் ஸித்திக்கிறது. ஆபத்துக்களுக்கு விஷயமான பதம் (பிறவி) யாதுண்டோ அது ஏற்படுவதமில்லை.(58) ஐந்தாவது வயதில் கிருஷ்ணனுல் செய்யப்பட்ட எந்தக் காரியமுண்டோ அது ஆருவது வயதில் சொல்லப்பட்டது என்பது எவ்விதம் என எதை உன்னுல் நான் கேட்கப்பட்டேனே இந்தஸந்தேஹ விஷயமாக இவையாவும் உனக்குச்சொல்லப்பட்டது.(59) தோழர்களுடன் கூட(செய்யப்பட்ட) முராரியினது இந்த லீலையையும், அகாசுரவதத்தையும் புல் தரையில் செய்த போஜனத்தையும், ஜட ப்ரபஞ்சத்தைக் காட்டிலும் வேறுபட்ட சுத்த ஸத்வாத்மசரூபத்தையும், ப்ரம்ஹதேவனது அதிகமான ஸ்தோத்திரத்தையும், ஶ்ரவணஞ் செய்பவனும் சொல்லுபவனுமான மனிதன் எல்லாப் புருஷார்த்தங்களேயுமடைகிறுன். (70) இவ்விதமாக ஒளிந்துபிடித்தல், நதியில் மணல்களினுல் அணைகட்டல், குரங்குகளுடன்கூட கிளைக்குக்கிளை தாண்டுதல் முதலிய ஐந்தாவது வயதுக்குரிய லீலைகளுடன் ஐந்தாவது வயதைக் கோகுலத்தில் கழித்தனர். (61) (எ—று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண தசமஸ்கந்த
பூர்வார்த்தத்தில் ப்ரம்ஹதேவனுற்செய்யப்பட்ட ஸ்தோத்திரமென்ற
பதினுன்காவது அத்தியாயம் முற்றிற்று.

## நாராயணீயம்.

अन्यावतारनिकरेष्वनिरीक्षितं ते
भूमातिरेकमभिवीक्ष्य तदाऽघमोक्षे ।
ब्रह्मा परीक्षितुमनाः स परोक्षभावं
निन्येऽथ वत्सकगणान्प्रवितत्य मायाम् ॥ १५४ ॥

(ப–ரை) अन्यावतारनिकरेषु=வேறு அவதார ஸமூஹங்களில் अनिरीक्षितम्=காணப்படாத ते=உம்முடைய भूमातिरेकम्=மேலான மஹிமையை तदा=அப்பொழுது நிகழ்ந்த अघमोक्षे=அகாசுரமோக்ஷத்தில் अभिवीक्ष्य=பார்த்து सः=அந்த ब्रह्मा=ப்ரம்ஹதேவன் परीक्षितुमनाः=(திரும்பவும்)பரீக்ஷிக்கவெண்ணங்கொண்டவராய் मायाम्=प्रवितत्य=மாயையை வீசி अथ=பிறகு वत्सकगणान्=கன்றுகளின் கூட்டங்களை परोक्षभावम्=கண்ணுக்குத் தெரியாதிருக்கும் தன்மையை निन्ये=அடையச் செய்தார். (154) (எ–று)

वत्सानवीक्ष्य विवशे पशुपोत्करे ता-
नानेतुकाम इव धातृमतानुवर्ती ।
त्वं सामिभुक्तकवलो गतवांस्तदानीं
भुक्तांस्तिरोधित सरोजभवः कुमारान् ॥ १५५ ॥

(ப–ரை) वत्सान्=கன்றுகளை अवीक्ष्य=காணமல் पशुपोत्करे=குழந்தைக் கூட்டமானது विवशे=கலங்கி நிற்குங்கால் तान्=அக்கன்றுகளை आनेतुकाम इव=கொண்டுவர விருப்பங்கொண்டவர் போல धातृमतानुवर्ती=ப்ரம்ஹதேவனின் ஸங்கல்பத்தை யனுஸரித்தவராய் त्वम्=நீர் सामिभुक्तकवलः=பகுதி சாப்பிடப்பட்ட ஆஹாரமுள்ளவராய் तदानीम्=அப்பொழுது गतवान्=சென்றீர். सरोजभवः=ப்ரம்ஹதேவன் भुक्तान्=சாப்பிட்டவர்களான कुमारान्=குழந்தைகளை तिरोधित=மறைத்துவிட்டார். (155) (எ–று)

वत्सायितस्तदनु गोपगणायितस्त्वं
शिक्यादिभाण्डमुरलीगवलादिरूपः ।
प्राग्वद्विहृत्य विपिनेषु चिराय सायं
त्वं माययाथ बहुधा व्रजमाययाथ ॥ १५६ ॥

(ப–ரை) तदनु=பிறகு त्वम्=நீர் मायया=மாயையினல் वत्सायितः=கன்றுகளாகவாகியும் गोपगणायितः=கன்று மேய்க்கும் குழந்தை

களின் கூட்டமாகவாகியும் शिक्यादिभाण्डमुरलीगवलादिरूप:=உறி முதலியனவாகவும், சட்டி, வேணு, கவலமான் கொம்பு முதலிய ரூபமுள்ளவராகவும் கொண்டு बहुधा=வெகுவாக ஆகி प्राग्वत्=முன் போலவே विपिनेषु=காடுகளில் चिराय=வெகுகாலம் विहृत्य=விளையாடிவிட்டு अथ=பிறகு सायम्=மாலையில் व्रजम्=கோகுலத்தை त्वम्=நீர் आययाथ=அடைந்தீர். ( 156) (எ-று)

त्वामेव शिक्यगवलादिमयं दधानो
भूयस्त्वमेव पशुवत्सकबालरूप: ।
गोरूपिणीभिरपि गोपवधूमयीभि
रासादितोऽसि जननीभिरतिप्रहर्षात् ॥ १५७ ॥

(ப-ரை) भूय:=மறுபடியும் पशुवत्सकबालरूप:=பசுவின் கன்று கோபபாலர் இவர்களின் ரூபமாக இருக்கின்ற त्वमेव=நீரே शिक्य-गवलादिमयम्=உறி கொம்பு இவை முதலியவற்றின் மயமான त्वामेव= உம்மையே दधान:=தரித்துக்கொண்டு गोरूपिणीभि:=பசு ரூபமாக இருப்பவர்களும் गोपवधूमयीभिरपि=கோப ஸ்திரீகள் ரூபமாக இருப்பவர்களுமான जननीभि:=தாய்மார்களால் अतिप्रहर्षात्=அதிகம் ஸந்தோஷத்துடன் आसादित:=அடையப்பட்டவராக असि=ஆனீர்.

जीवंहि कश्चिदभिमानवशात् स्वकीयं
मत्वा तनूज इति रागभरं वहन्त्य: ।
आत्मानमेव तु भवन्तमवाप्य सूनुं
प्रीतिं ययुर्न कियतीं वनिताश्च गाव: ॥ १५८ ॥

(ப-ரை) कश्चित्=ஒரு जीवम्=ஜீவனை अभिमानवशात्=என்னுடையதெனவேற்பட்ட அபிமானத்தை முன்னிட்டு स्वकीयम्=தன்னைச் சேர்ந்ததாக मत्वा=எண்ணிக்கொண்டு तनूज इति=புத்திரன் என்பதாய் रागभरम्=அதிகம் ஆசையை वहन्त्य:=அடைந்த वनिता:= கோபஸ்திரீகளும் गावश्च=பசுக்களும் आत्मानमेव=தனது ப்ரத்யகாத்மாவாகவேயுள்ள भवन्तम् = உம்மை सूनुम् = புத்திரனாக अवाप्य= அடைந்து कियतीं प्रीतिम्=எத்தனை ப்ரீதியைத்தான் नययु:=அடைந்தார்களில்லை. (158)

एवं प्रतिक्षणविजृंभितहर्षभार-
निश्शेषगोपगणलालितभूरिमूर्तिम् ।

त्वामग्रजोऽपि बुबुधे किल वत्सरान्ते
ब्रह्मात्मनोरपि महान् युवयोर्विशेषः ॥ १५९ ॥

(ப-ரை) एवम्=இவ்விதம் प्रतिक्षणविजृंभितहर्षभारनिश्शेषगोपगणलालितभूरिमूर्तिम्=ஒவ்வொரு க்ஷணத்திலும் விருத்தியையடைந்த சந்தோஷாதிக்கியத்தை யுடைய எல்லாக் கோபக்கூட்டங்களாலும் கொண்டாடப்பட்ட பல மூர்த்தியையுடைய त्वाम्=உம்மை अग्रजोपि=முன்னர் பிறந்த பலராமன் கூட वत्सरान्तेकिल=வருஷத்தின் முடிவிலன்றோ बुबुधे=அறிந்து கொண்டார். युवयोः = நீங்களிருவரும் ब्रह्मात्मनोरपि=ப்ரம்ஹ ஸ்வரூபர்களாகவாயினுங்கூட महान्=அதிகமான विशेषः=வேற்றுமையானது இருக்கின்றதன்றோ (கிருஷ்ணன் நிஷ்களப்ரம்ஹமும் ராமன் ஸகளப்ரம்ஹமும் ஆவார்கள் என்று கருத்தென இதன் வியாக்கியானத்திற் சொல்லப்பட்டிருக்கிறது.)

वर्षावधौ नवपुरातनवत्सपालान्
दृष्ट्वा विवेकमसृणे द्रुहिणे विमूढे ।
प्रादीदृशः प्रतिनवान् मकुटाङ्गदादि-
भूषांश्चतुर्भुजयुजः सजलाम्बुदाभान् ॥ १६० ॥

(ப-ரை) वर्षावधौ=வருஷத்தின் முடிவில் द्रुहिणे=ப்ரம்ஹதேவன் नवपुरातनवत्सपालान्=புதிதும் பழையதுமான கன்றுமேய்க்கும் குழந்தைகளை दृष्ट्वा=கண்டு विवेकमसृणे=பகுத்தறிவுகலங்கி विमूढे=மோஹிதராக இருக்குங்கால் प्रतिनवान्=புதிதான கோபாலரூபர்களை मकुटाङ्गदादिभूषान्=கிரீடம் தோள்வளை முதலிய ஆபரணங்களுள்ளவர்களாகவும் चतुर्भुजयुजः=நான்குகைகளுடன் கூடினவர்களாகவும் सजलाम्बुदाभान्=நீருண்ட மேகம்போன்ற காந்தியுள்ளவர்களாகவும் प्रादीदृशः=காண்பித்தீர். (160) (எ-று)

प्रत्येकमेव कमलापरिलालिताङ्गान्
भोगीन्द्रभोगशयनान् नयनाभिरामान् ।
लीलानिमीलितदृशः सनकादियोगि-
व्यासेवितान् कमलभूर्भवतो ददर्श ॥ १६१ ॥

(ப-ரை) भवतः=உம்முடைய प्रत्येकमेव=ஒவ்வொரு ரூபத்தையுமே कमलापरिलालिताङ्गान्=லக்ஷ்மியினால் நாலாபக்கத்திலும் தடவிக்கொடுக்கப்பட்ட அங்கங்களுள்ளனவாகவும் भोगीन्द्रभोगशयनान्=

ஆதிசேஷனுடைய உடலில் படுத்துறங்குவனவாகவும் **नयनाभिरामान्**=கண்ணைக் கவருகின்றனவாகவும் **लीलानिमीलितदृशः**=விளையாட்டாக மூடப்பட்ட நேத்திரங்களையுடையனவாகவும் **सनकादियोगिव्यासेवितान्**=ஸனகாதிகளான யோகிகளால் சேவிக்கப்பட்டனவாகவும் **कमलभूः**=ப்ரம்ஹா **ददर्श**=கண்டார். (161) (எ—று)

नारायणाकृतिमसङ्ख्यतमां निरीक्ष्य
सर्वत्र सेवकमपि स्वमवेक्ष्य धाता ।
मायानिमग्नहृदयो विमुमोह याव-
देको बभूविथ तदा कवलार्धपाणिः ॥ १६२ ॥

(ப—ரை) **धाता**=ப்ரம்ஹதேவன் **असङ्ख्यतमाम्**=எண்ணவியலாத **नारायणाकृतिम्**=நாராயணனுடைய ஆகிருதியை **निरीक्ष्य**=கண்டு **सर्वत्र**=எல்லாவிடத்திலும் **स्वमपि**=தன்னையும் **सेवकम्**=சேவகனாக **अवेक्ष्य**=கண்டும் **मायानिमग्नहृदयः**=மாயையில் மூழ்கின சித்தமுடையவராகக்கொண்டு **यावत्**=எப்பொழுது **विमुमोह**=மோஹத்தையடைந்தாரோ **तदा**=அப்பொழுது **एकः**=ஒருவராகவும் **कवलार्धपाणिः**=பாதி கபளத்தைக் கையில் கொண்டவராகவும் **बभूविथ**=ஆகிவிட்டீர்.

नश्यन्मदे तदनु विश्वपतिं मुहुस्त्वां
नत्वा च नूतवति धातरि धाम याते ।
पोतैः समं प्रमुदितैः प्रविशन्निकेतं
वातालयाधिप विभो परिपाहि रोगात् ॥ १६३ ॥

(ப—ரை) **नश्यन्मदे**=நசித்த மதமுள்ளவரும் **तदनु**=பிறகு **विश्वपतिम्**=ஜகத்துக்குப் பதியான **त्वाम्**=உம்மை **मुहुः**=அடிக்கடி **नत्वा**=வணங்கி **नूतवति च**=ஸ்துதித்தவருமான **धातरि**=ப்ரம்ஹதேவன் **धाम** = தனதிருப்பிடத்தை **याते**=அடைந்ததும் **प्रमुदितैः**=ஸந்தோஷத்தை யடைந்தவர்களான **पोतैः समम्**=குழந்தைகளுடன் கூட **निकेतम्**=வீட்டை **प्रविशन्**=பிரவேசித்தவரான **वातालयेश !**=குருவாயூரில்வசிக்கும் ஈசா! **विभो !**=ஹே விபுவே! **रोगात्**=வியாதியினின்றும் **परिपाहि**=காப்பீராக. (163) (எ—று)

இவ்விதம் ப்ரம்ஹதேவனால் செய்யப்பட்ட வத்ஸாபஹார
வர்ணனமும் பகவன் மாயையினால் ப்ரம்ஹாவுக்கு
மோஹமுண்டானதின் வர்ணனமுமென்ற
ஐம்பத்திரண்டாவது தசகம் முற்றிற்று.

## अथ पञ्चदशोऽध्यायः ॥

श्रीशुक उवाच—ततश्च पौगण्डवयःश्रितौ व्रजे बभूवतुस्तौ पशुपालसंमतौ । गाश्चारयन्तौ सखिभिः समं पदैर्वृन्दावनं पुण्यमतीव चक्रतुः॥१॥ तन्माधवो वेणुमुदीरयन्वृतो गोपैर्गृणद्भिः स्वयशो बलान्वितः । पशून्पुरस्कृत्य पशव्यमाविशद्विहर्तुकामः कुसुमाकरं वनम् ॥ २ ॥ तन्मञ्जुघोषालिमृगद्विजाकुलं महन्मनःप्रख्यपयःसरस्वता । वातेन जुष्टं शतपत्रगन्धि-

---

### பதினைந்தாவது அத்தியாயம்.

(அ-கை) ततः पञ्चदशे धेनुपालनं धेनुकार्दनम् ।
काळियक्ष्वेडतो गोपरक्षणञ्च निरूप्यते ॥ १ ॥
अहिवक्त्रप्रवेशेन वृथाखिन्नान् सखीनतः ।
कृष्णः प्रावेशयत् पक्वफलं तालालिकाननम् ॥ २ ॥

(க-ரை) பிறகு பதினைந்தாவது அத்தியாயத்தில் பசுக்களை மேய்த்தலும், தேனுகாஸுரனை அழித்தலும், காளியனுடைய விஷத்தினின்றும் கோபாலர்களை ரக்ஷித்தலும், சொல்லப்படுகிறது. (1) பாம்பின் வாயில் ப்ரவேசித்ததினால் வீணில் கஷ்டத்தையடைந்தவர்களான தோழர்களை ஸ்ரீகிருஷ்ணன் அங்கிருந்து பழுத்த பழம் நிறைந்த பனைமரக்கூட்டமுள்ள காட்டில் ப்ரவேசிக்கச் செய்தார்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்—பிறகு ஆறுவது வயதையடைந்த அவ்விருவரும் கோகுலத்தில் பசுக்களை மேய்ப்பதில் ஸம்மதிக்கப்பட்டவர்களாகவாயினர். தோழர்களுடன் கூட பசுக்களை மேய்த்துக்கொண்டு அடிவைத்தல்களினால் ப்ருந்தாவனத்தை மிக்கப்புண்ணியமுள்ளதாகச்செய்தனர். (1) பலராமனுடன் கூடின ஸ்ரீகிருஷ்ணன் தனது யசஸ்ஸைக்கொண்டாடுகின்றவர்களான கோபாலர்களால் சூழப்பட்டவராய் வேணுவை வாசித்துக்கொண்டும் பசுக்களை முன்னிட்டுக்கொண்டும் விளையாடவெண்ணங்கொண்டவராய் பசுக்களுக்கு ஹிதமானதும் புஷ்பங்கள் நிறைந்ததுமான அந்த வனத்தில் பிரவேசித்தார். (2) அழகாக சப்திக்கின்ற வண்டு, மான், பக்ஷி இவை நிறைந்ததும், மஹான்களின் மனத்துக்குத் துல்யமான ஜலமுள்ள குளங்களை ஒட்டினதும், தாமரஸ புஷ்பங்களின் மண

ना निरीक्ष्य रन्तुं भगवान्मनो दधे ॥ ३ ॥ स तत्र तत्रारुणपल्लवश्रिया फलप्रसूनोरुभरेण पादयोः । स्पृशच्छिखान्वीक्ष्य वनस्पतीन्मुदा स्मयन्निवाहाग्रजमादिपूरुषः ॥४॥ श्रीभगवानुवाच—अहो अमी देववरामरार्चितं पादाम्बुजं ते सुमनःफलार्हणम् । नमन्त्युपादाय शिखाभिरात्मनस्तमोपहत्यै तरुजन्म यत्कृतम् ॥ ५ ॥ एतेऽलिनस्तव यशोऽखिललोकतीर्थं गायन्त आदिपुरुषानुपदं भजन्ते । प्रायो अमी मुनिगणा भवदीयमुख्या गूढं वनेऽपि न जहत्यनघात्मदैवम् ॥ ६ ॥ नृत्यन्त्यमी शिखिन ईड्य मुदा हरिण्यः कुर्वन्ति गोप्य इव ते प्रियमीक्षणेन । सूक्तैश्च कोकिलगणा गृहमागताय

---

முள்ளதுமான காற்றினல் சேவிக்கப்பட்டதுமான அந்த வனத்தைக் கண்ணுற்று அங்கு விளையாடுவதற்கு பகவான் மனங்கொண்டார். (3) அந்த ஆதிபுருஷன் ஆங்காங்கு சிவந்த தளிர்களின் சோபையுடன் கூடினவும், பழம் புஷ்பம் இவற்றின் அதிகமான பாரத்தினல் கால்களில்படுகின்ற கிளைகளின் நுனியையுடையனவுமான மரங்களைக் கண்டு புன்னகை கொண்டவர்போல சந்தோஷத்துடன் தமையனைப் பார்த்துச் சொல்லத்தொடங்கினர். (4) ஸ்ரீபகவான் சொல்லுகிறர்—ஹே தேவவர! இம்மரங்கள் தமது கிளைகளாகிற தலைகளினல் நல்ல புஷ்பம் பழம் இவைகளாகிற பூஜைக்குரிய சாமான்களையெடுத்துக்கொண்டு எந்தப்பாபத்தினல் மரப்பிறவி உண்டாக்கப்பட்டதோ அந்தப் பாபத்தைப் போக்கவேண்டி தேவர்களால் பூஜிக்கப்பட்ட உம்முடைய சரணாவிந்தத்தை நமஸ்கரிக்கின்றன. ஆச்சரியம் பாருங்கள். (5) ஹே ஆதிபுருஷ! அனக! இந்த வண்டுகள் எல்லாவுலகுக்கும் பரிசுத்தியைத் தருகின்ற உமது யசஸ்ஸைக்கானஞ் செய்துகொண்டு அடிக்கடி உம்மைச் சேவிக்கின்றன. பெரும்பாலும் உமது பக்தர்களுள் முக்கியர்களான இந்த ருஷிக்கூட்டங்கள் காட்டில் மறைந்து வசித்தபோதிலுங்கூட தமது தைவமான உம்மை விட்டுவிடவில்லை. (6) ஹே ஈட்ய! இந்த மயில்கள் சந்தோஷத்துடன் தோகையை விரித்தாடுகின்றன. பெண் மான்கள் கோபிகைகள் போலப் பார்வையினலும், குயில் கூட்டங்கள் ப்ரியமான வார்த்தைகளினலும் வீட்டுக்கு வந்த உமக்கு ப்ரியத்தைச் செய்கின்றன. காட்டில் வசிக்கின்ற இவைகள் மஹா பாக்கியசாலிகளன்ரே.

धन्या वनौकस इयान्हि सतां निसर्गः ॥ ७ ॥ धन्येयमद्य धरणी तृणवीरुधस्त्वत्पादस्पृशो द्रुमलताः करजाभिमृष्टाः । नद्योऽद्रयः खगमृगाः सदयावलोकैर्गोप्योऽन्तरेण भुजयोरपि यत्स्पृहा श्रीः ॥ ८ ॥

श्रीशुक उवाच—एवं वृन्दावनं श्रीमत्प्रीतः प्रीतमनाः पशून् । रेमे सञ्चारयन्नद्रेः सरिद्रोधस्सु सानुगः ॥ ९ ॥ क्वचिद्गायति गायत्सु मदान्धालिष्वनुव्रतैः । उपगीयमानचरितः स्रग्वी सङ्कर्षणान्वितः ॥ १० ॥ क्वचिच्च कलहंसानामनुकूजति कूजितम् । अभिनृत्यति नृत्यन्तं बर्हिणं हासयन्क्वचित् ॥ ११ ॥ मेघगम्भीरया वाचा नामभिर्दूरगान्पशून् । क्वचिदाह्वयति प्रीत्या गोगोपालमनोज्ञया ॥ १२ ॥ चकोरक्रौञ्चचक्राह्वभारद्वाजांश्च

---

இவ்வளவேயன்றோ ஸாதுக்களின் ஸ்வபாவமாகும். (7) இப்பொழுது இந்தப் பூமி பாக்கியம் பெற்றதாகிறது. உமது பாதங்களைத் தொடுகின்ற புற்களும், செடிகளும் உமது நகங்களால் கிள்ளப்பட்ட மரங்களும், கொடிகளும், உமது தயையுடன் கூடின கடாக்ஷங்களினல் பார்க்கப்பட்ட நதிகளும், மலைகளும், பக்ஷிகளும், மான்களும், லக்ஷ்மீ கூட எதில் ஆசைகொண்டிருக்கின்ருளோ அந்த மார்பினல் (தழுவப்பட்ட) கோபஸ்திரீகளும் பாக்கியசாலிகளேயாகின்றனர்.

ஸ்ரீசுகர் சொல்லுகிருர்—இவ்விதம் சோபைநிறைந்த ப்ருந்தாவனத்தைக் குறித்து ப்ரீதியை யடைந்தவராய்க்கொண்டு மலையினருகிலிருக்கின்ற நதிக்கரைகளில் மற்றக் கோபாலர்களுடன் கூடப் பசுக்களை மேய்த்துக்கொண்டு ப்ரீதிநிறைந்த மனதுள்ளவராய் விளையாடினர். (9) ஒருஸமயம் தன்னையே அனுஸரித்த கோபாலர்களால் அருகில் நின்று கானஞ்செய்யப்படும் சரித்திரமுடையவராகவும், மாலையையணிந்தவராகவும், பலராமனுடன் கூடினவராய் மதங்கொண்ட வண்டுகள் ரீங்காரம் செய்யுங்கால் தானும் கானஞ்செய்தார். (10) ஓரிடத்தில் கலஹம்ஸங்களின் கூஜிதத்தையும் அனுஸரித்து சப்தித்தார். ஓரிடத்தில் தோகையை விரித்தாடும் மயிலுக்கெதிரில் தோழர்களை சிரிக்கச்செய்யவேண்டி ஆடினர். (11) ஓரிடத்தில் மேகம்போல கம்பீரமானதும், பசுக்கள், கோபாலர்கள், இவற்றின் மனத்தைக் கவருகின்றதுமான வாக்கினல் வெகுதூரஞ் சென்ற பசுக்களை அவற்றின் பெயரைச்சொல்லி ப்ரீதியுடன் அழைத்

28

बर्हिणः । अनुरौति स्म सत्त्वानां भीतवद्व्याघ्रसिंहयोः ॥ १३ ॥ क्वचित्क्रीडापरिश्रान्तं गोपोत्सङ्गोपबर्हणम् । स्वयं विश्रमयत्यार्यं पादसंवाहनादिभिः ॥ १४ ॥ नृत्यतो गायतः क्वापि वल्गतो युध्यतो मिथः । गृहीतहस्तौ गोपालान्हसन्तौ प्रशशंसतुः ॥ १५ ॥ क्वचित्पल्लवतल्पेषु नियुद्धश्रमकर्शितः । वृक्षमूलाश्रयः शेते गोपोत्सङ्गोपबर्हणः ॥ १६ ॥ पादसंवाहनं चक्रुः केचित्तस्य महात्मनः । अपरे हतपाप्मानो व्यजनैः समवीजयन् ॥ १७ ॥ अन्ये तदनुरूपाणि मनोज्ञानि महात्मनः । गायन्ति स्म महाराज स्नेहक्लिन्नधियः शनैः ॥ १८ ॥ एवं निगूढात्मगतिः स्वमायया गोपात्मज-

---

தார். (12) சகோர பக்ஷி, க்ரௌஞ்ச பக்ஷி, சக்கிரவாக பக்ஷி, வால்நீண்ட குருவி, மயில் இவைகள் கத்துவதுபோலத் தானுங் கத்தினர். ப்ராணிகளின் நடுவில் புலி சிங்கம் இவற்றினிடமிருந்து பயந்தவர்போல நடித்தார். (13) மற்றோரிடத்தில் விளையாட்டினால் நன்கு களைத்தவரும் கோபாலனுடைய மடியை தலையணையாகக் கொண்டவருமான தமையனான பலராமனை கால்பிடித்தல் முதலியவற்றால் தானே களைப்பாற்றி வைத்தார் (14) ஓரிடத்தில் கூத்தாடுகின்றவர்களும், பாடுகின்றவர்களும், துள்ளிக்குதிக்கின்றவர்களும், ஒருவருக்கொருவர் சண்டையிடுகின்றவர்களுமான கோபாலர்களைக் கை கோத்துக்கொண்டு சிரிக்கின்றவர்களாய்ப் புகழ்ந்தனர். (15) ஒரு சமயத்தில் கைச்சண்டையினாலுண்டான ஸ்ரமத்தினால் களைத்த கிருஷ்ணன் மரத்தின் அடியை யாஸ்ரயித்து கோபாலனுடைய மடியைத் தலையணையாகக்கொண்டு தளிர்களினால் செய்யப்பட்ட *படுக்கைகளில் படுத்துறங்கினர். (16) சிலர் மஹாத்மாவான அந்தக் கிருஷ்ணனுடைய காலைப்பிடித்தனர். பாபஸம்பந்தமற்றவர்களான வேறு சிலர் விசிறிகள் கொண்டு விசினர். (17) ஹே மஹாராஜ! வேறு சிலர் ஸ்னேஹத்தினால் நனைந்த புத்தியுள்ளவர்களாய்க் கொண்டு மஹாத்மாவான கிருஷ்ணனுக்குப் பொருத்தமானவைகளும் மனத்துக்கினிமையானவைகளுமான கீதங்களை மெதுவாகப் பாடினர். (18)

---

* तल्पेषु எனப்பன்மை காணப்படுவதிலிருந்து ஒவ்வொரு கோபாலரும் ஒவ்வொரு படுக்கை தயார் செய்ய அவ்வவற்றிலும் படுத்துறங்கினர் என்று பொருள்.

स्वं चरितैर्विडम्बयन् । रेमे रमालालितपादपल्लवो ग्राम्यैः समं ग्राम्यवदीशचेष्टितः ॥ १९ ॥

श्रीदामा नाम गोपालो रामकेशवयोः सखा । सुबलस्तोककृष्णाद्या गोपाः प्रेम्णेदमब्रुवन् ॥२०॥ राम राम महाबाहो कृष्ण दुष्टनिबर्हण । इतोऽविदूरे सुमहद्वनं तालालिसङ्कुलम् ॥ २१ ॥ फलानि तत्र भूरीणि पतितानि पतन्ति च । सन्ति किंत्ववरुद्धानि धेनुकेन दुरात्मना ॥ २२ ॥ सोऽतिवीर्योऽसुरो राम हे कृष्ण खररूपधृक् । आत्मतुल्यबलैरन्यैर्ज्ञातिभिर्बहुभिर्वृतः ॥ २३ ॥ तस्मात्कृतनराहाराद्भीतैर्नृभिरमित्रहन् । न सेव्यते पशुगणैः पक्षिसङ्घैर्विवर्जितम् ॥ २४ ॥ विद्यन्तेऽभुक्तपूर्वाणि फलानि सुरभीणि च ।

---

இவ்விதம் தனது மாயையினல் நன்கு மறைக்கப்பட்ட தனது ஸ்வபாவத்தையுடையவராக இருந்தபோதிலுங்கூட (இடையிடையே) ஈச்வரனுக்கே பொருத்தமான சேஷ்டையையுடையவராய் சரித்திரங்களினல் கோப குமாரனுகவிருத்தலை வெளிக்காட்டிக்கொண்டும், லக்ஷ்மியினுல் பிடித்துவிடப்பட்ட சரணபல்லவத்தையுடையவராய்க் கொண்டும் மூடர்களான கோபாலர்களுடன் கூட தானும் மூடன் போல விளையாடினர். (19) ராமகிருஷ்ணர்களுக்குத் தோழனன ஸ்ரீதாமாவென்ற கோபாலனும், ஸுபலன், ஸ்தோககிருஷ்ணன் முதலிய கோபாலர்களும் ப்ரேமையுடன் இதைச் சொல்லத் தொடங்கினர். (20) மஹாபாஹோ! ராம! ராம! துஷ்டர்களையடக்கும் ஹேகிருஷ்ண! இங்கிருந்து வெகு ஸமீபத்தில் பனைமரக்கூட்டங்களடர்ந்த பெரியவனமிருக்கின்றது. (21) அங்கு விழுந்தனவும் விழுகின்றனவுமான வெகு பழங்களிருக்கின்றன. ஆனலோ கெட்ட மனத்தையுடைய தேனுகாசுரனல் ஒருவருமெடுக்காமல் அவை காக்கப்படுகின்றன. (22) ஹேராம! ஹேகிருஷ்ண! அதிகவீர்யமுள்ள அந்த அஸுரன் கழுதையின் ரூபத்தையெடுத்துக் கொண்டு தனக்கொப்பானவல்லுவுள்ள வேறு பலக்ஞாதிகளுடன் கூடினவனுகவிருக்கிறன். (23) ஹேசத்துருக்களை யழிப்பவனே! பசுக்கூட்டங்களாலும், பக்ஷிக்கூட்டங்களாலும் விலக்கப்பட்ட அந்த வனமானது மனிதர்களைத் தின்பவனுன அவனிடமிருந்து பயந்தவர்களான மனிதர்களால் அனுபவிக்கப் படுவதில்லை. (24) முன்னர்

एष वै सुरभिर्गन्धो विषूचीनोऽवगृह्यते ॥ २५ ॥ प्रयच्छ तानि नः कृष्ण गन्धलोभितचेतसाम् । वाञ्छास्ति महती राम गम्यतां यदि रोचते ॥२६॥ एवं सुहृद्वचः श्रुत्वा सुहृत्प्रियचिकीर्षया । प्रहस्य जग्मतुर्गोपैर्वृतौ तालवनं प्रभू ॥ २७ ॥ बलः प्रविश्य बाहुभ्यां तालान्संपरिकम्पयन् । फलानि पातयामास मतङ्गज इवौजसा ॥ २८ ॥ फलानां पततां शब्दं निशम्यासुररासभः । अभ्यधावत्क्षितितलं सनगं परिकम्पयन् ॥ २९ ॥ समेत्य तरसा प्रत्यग्द्वाभ्यां पद्भ्यां बलं बली । निहत्योरसि काशब्दं मुञ्चन्पर्यसरत्खलः ॥ ३० ॥ पुनरासाद्य संरब्ध उपक्रोष्टा पराक्स्थितः । चरणावपरौ राजन्बलाय प्राक्षिपद्रुषा ॥ ३१ ॥ स तं गृहीत्वा प्रपदोर्भ्रामयित्वैकपाणिना । चि-

---

தின்னப்படாதனவும் நல்லமணமுள்ளனவுமான பழங்கள் அங்கிருக்கின்றன. சுற்றிலும் பரவின இந்த நறுமணமானது முகரப்படுகிறதே? (25) ஹேகிருஷ்ண! மணத்தால் மோஹித்த சித்தமுள்ள எங்களுக்கு அப்பழங்களைத் தருவாயாக. ஹேராம! ஆசையோ அதிகமாக இருக்கிறது பிடிக்குமானால் போகலாம். (26)

இவ்விதம் தோழர்களின் வார்த்தையைக் கேட்டுச் சிரித்துக்கொண்டு ப்ரபுக்களான ராமகிருஷ்ணர்கள் கோபாலர்களால் சூழப்பட்டவர்களாய்த் தோழர்களுக்குப் பிரியத்தைச் செய்யும் எண்ணத்துடன் அங்கு சென்றனர். (27) ப்ரவேசித்ததும் பலராமன் இருகைகளினாலும் பனைமரங்களை யானையானதுபோலத் தனது பலத்தினால் நன்கு ஆட்டுகின்றவராய் பழங்களை உதிர்த்துவிட்டார். (28) கழுதைவடிவமெடுத்த அஸுரன் பழங்கள் விழும் சப்தத்தைக் கேட்டு மரங்களுடன் கூடினபூமண்டலத்தை அசையும்படி செய்து கொண்டு ஓடிவந்தான். (29) வலுவுள்ளவனும் துஷ்டனுமான அவன் வந்து கா என்ற சப்தத்தைச் செய்துகொண்டு பின்னருள்ள இருகால்களினாலும் வேகமாக மாரில் பலராமனை உதைத்துவிட்டு நாலாபக்கத்திலும் ஓடினான். (30) ஹேராஜன்! திரும்பவும் ஓடிவந்து கோபங்கொண்ட கழுதை பின்னால் திரும்பிக்கொண்டு கோபத்துடன் பின்னுள்ள இருகால்களையும் பலராமனைக் கொல்லவேண்டி வீசிற்று. (31) அந்தப் பலராமன் பின்னங்கால்களின் நுனியில் ஒரு கையினால் பிடித்துச் சுழற்றி சுழற்றலினாலேயே இழந்த உயி

क्षेप तृणराजाग्रे ह्यामणत्यक्तजीवितम् ॥ ३२ ॥ तेनाहतो महातालो वेपमानो बृहच्छिराः । पार्श्वस्थं कम्पयन्भग्नः स चान्यं सोऽपि चापरम् ॥ ३३ ॥ बलस्य लीलयोत्सृष्टखरदेहहताहताः । तालाश्चकम्पिरे सर्वे महावातेरिता इव ॥ ३४ ॥ नैतच्चित्रं भगवति ह्यनन्ते जगदीश्वरे । ओतप्रोतमिदं यस्मिंस्तन्तुष्वङ्ग यथा पटः ॥ ३५ ॥

ततः कृष्णं च रामं च ज्ञातयो धेनुकस्य ये । क्रोष्टारोऽभ्यद्रवन्सर्वे संरब्धा हतबान्धवाः ॥ ३६ ॥ तांस्तानापततः कृष्णो रामश्च नृप लीलया । गृहीतपश्चाच्चरणान्प्राहिणोत्तृणराजसु ॥ ३७ ॥ फलप्रकरसङ्कीर्णं दैत्यदेहैर्गतासुभिः । रराज भूः सतालाग्रैर्घनैरिव नभस्तलम् ॥ ३८ ॥ तयोस्तत्सु-

---

ரையுடைய அவனை பனைமரத்தின் நுனியில் வீசி எறிந்தார். (32) அந்த அஸுரதேஹத்தினுல் அடிக்கப்பட்ட மிக்க உயரமுள்ள பெரியபனைமரமானது சுழன்றுகொண்டு அருகிலிருக்கின்ற பனைமரத்தைத் தள்ளிவிட்டு ஒடிந்துவிட்டது. பக்கத்திலுள்ள அந்தமரம் வேறுமரத்தையும் அம்மரம் வேறுமரத்தையும் ஒடித்தது. (33) பலராமனுடைய வலியினுல் எறியப்பட்ட கழுதையின் தேஹத்தினுல் முறிக்கப்பட்ட பனைமரங்களினுல் தாக்கப்பட்ட எல்லாப் பனைமரங்களும் பெருங்காற்றினுல் அசைக்கப்பட்டன போன்று ஆடத் தொடங்கின. (34) ஹே அங்க! நூல்களில் துணியானது போல எவரிடத்தில் இந்த ப்ரபஞ்சமானது ஓதப்ரோதமாக (குறுக்கும் நெடுக்குமமைக்கப்பட்டதாக) இருக்கிறதோ அத்தகை பகவானும் ஜகதீஸ்வரனுமான ஆதிசேஷனிடத்தில் இது ஆஸ்சரியமாகவாகாதன்றோ?. (35)

பிறகு தேனுகாசுரனுடைய ச்ஞாதிகளான கழுதைகள் எவர்களுண்டோ அவர்கள் யாவரும் தமதுபந்து கொல்லப்பட்டது பற்றிக் கோபங் கொண்டவர்களாய் பலராமனையும் கிருஷ்ணனையும் நோக்கி ஓடிவந்தனர். (36) ஹேந்ருப! ராமனும் கிருஷ்ணனும் வேகமாக ஓடிவருகின்ற அவரவர்களையும் பின்னுலுள்ள கால்களைப் பிடித்து பனைமரங்களில் வீசி எறிந்தனர். (37) மேகங்களினுல் ஆகாசமானதுபோல பனைமரங்களின் நுனியுடன் கூடினவும் உயிரற்றனவுமான அஸுரதேஹங்களுடன் கூடின பனம்பழக்கூட்டங்

**महत्कर्म निशम्य विबुधादयः । मुमुचुः पुष्पवर्षाणि चक्रुर्वाद्यानि तुष्टुवुः ॥ ३९ ॥ अथ तालफलान्यादन्मनुष्या गतसाध्वसाः । तृणं च पशवश्चेरुर्हतधेनुककानने ॥ ४० ॥ कृष्णः कमलपत्राक्षः पुण्यश्रवणकीर्तनः । स्तूयमानोऽनुगैर्गोपैः साग्रजो व्रजमाव्रजत् ॥४१॥ तं गोरजश्छुरितकुन्तलबद्धबर्हवन्यप्रसूनरुचिरेक्षणचारुहासम् । वेणुं क्वणन्तमनुगैरनुगीतकीर्तिं गोप्यो दिदृक्षितदृशोऽभ्यगमन्समेताः ॥४२॥ पीत्वा मुकुन्दमुखसारघमक्षिभृङ्गैस्तापं जहुर्विरहजं व्रजयोषितोऽह्नि । तत्सत्कृतिं समधिगम्य विवेश गोष्ठं**

---

களடர்ந்த பூதலமானது விளங்கிற்று. (38) அவ்விருவர்களின் அப்பெரிய காரியத்தைக் கண்டு தேவர் முதலியோர் பூமாரி பொழிந்தனர். வாத்தியங்களை முழங்கினர். துதிக்கவும் செய்தனர். (39) பிறகு கொல்லப்பட்ட தேனுகாசுரனையுடைய காட்டில் மனிதர்கள் பயமற்றவர்களால் பனம்பழங்களைத் தின்றனர். பசுக்களும் புல்லை மேய்ந்தன. (40) தாமரையிதழ்போன்ற கண்களை யுடையவரும், புண்ணியங்களான ஶ்ரவணகீர்த்தனங்களை யுடையவருமான கிருஷ்ணன் பின்தொடர்ந்துவரும் கோபர்களால் ஸ்துதிக்கப்படுகின்றவராய் தமையனுடன் கூட கோகுலத்தையடைந்தார். (41) பசுவின் தூளிபடர்ந்த சுருட்டை மயிர்களில் சொருகப்பட்ட மயிற்றோகை, காட்டிலுள்ள புஷ்பங்கள் இவற்றையுடையவரும், அழகிய கண்கள், அழகிய சிரிப்பு இவற்றையுடையவரும், வேணுவைக் கானஞ்செய்கின்றவரும், பின்னுள்ளவர்களால் தொடர்ந்து கூறப்பட்ட கீர்த்தியை யுடையவருமான அந்தக் கிருஷ்ணனைப் பார்ப்பதில் ஆவல்கொண்ட கண்களையுடையவர்களான கோபிகைகள் ஒரேகூட்டமாகக் கூடிக்கொண்டு எதிர்த்துவந்தனர். (42)

கோகுலத்திலுள்ள ஸ்திரீகள் முகுந்தனுடைய முகமாகிற தாமரஸ புஷ்பத்திலுள்ள அழகாகிற தேனைக் கண்களாகிற வண்டுகளினால் குடித்து பகற்காலத்தில் விட்டுப் பிரிந்ததாலுண்டான தாபத்தைப் போக்கிக்கொண்டனர். வெட்கம், புன்சிரிப்பு, வணக்கம் இவற்றையுடையதாகவிருக்கும்படி யாதொரு கடாக்ஷவீக்ஷணமுண்டோ அதாகிற கோபஸ்த்ரீகளின் ஸத்காரத்தையடைந்து கோகுலத்தில் பிரவேசித்தார். (43) புத்திரனிடத்தில் வாத்ஸல்யமுள்ள யசோ

सव्रीडहाससविनयं यदपाङ्गमोक्षम् ॥ ४३ ॥ तयोर्यशोदारोहिण्यौ पुत्रयोः पुत्रवत्सले । यथाकामं यथाकालं व्यधत्तां परमाशिषः ॥ ४४ ॥ गताध्वनश्रमौ तत्र मज्जनोन्मर्दनादिभिः । नीवीं वसित्वा रुचिरां दिव्यस्रग्गन्धमण्डितौ ॥ ४५ ॥ जनन्युपहृतं प्राश्य स्वाद्वन्नमुपलालितौ । संविश्य वरशय्यायां सुखं सुषुपतुर्व्रजे ॥ ४६ ॥ एवं स भगवान्कृष्णो वृन्दावनचरः क्वचित् । ययौ राममृते राजन्कालिन्दीं सखिभिर्वृतः॥४७॥ अथ गावश्च गोपाश्च निदाघातपपीडिताः। दुष्टं जलं पपुस्तस्यास्तृषार्ता विषदूषितम् ॥४८॥ विषाम्भस्तदुपस्पृश्य दैवोपहतचेतसः । निपेतुर्व्यसवः सर्वे सलिलान्ते कुरूद्वह ॥ ४९ ॥ वीक्ष्य तान्वै तथाभूतान्कृष्णो योगेश्वरेश्वरः । ईक्षयामृतवर्षिण्या स्वनाथान्समजीवयत् ॥ ५० ॥ ते संप्रतीतस्मृतयः समुत्थाय

---

தையும், ரோஹிணியும் அவ்விருவருக்கும் காலத்துக்கேற்றபடியும் இஷ்டத்துக்குத் தக்கபடியும் வேண்டுவனவற்றைச் செய்தனர். (44) அந்தக் கோகுலத்தில் ஸ்நானஞ்செய்வித்தல் உடம்பைப் பிடித்தல் முதலியவற்றுல் வழியில் நேர்ந்த களைப்பைப் போக்கிக்கொண்டும், வெண்மையான வஸ்திரத்தைத் தரித்துக்கொண்டும், திவ்யமான மாலை சந்தனம் இவற்றுல் அலங்கரிக்கப்பட்டவர்களாய்க் கொண்டும், தாயினுல் கொடுக்கப்பட்ட இனிமையான அன்னத்தைச் சாப்பிட்டு, உபசரிக்கப்பட்டவர்களாய்க்கொண்டும் மெதுவான வஸ்திரங் கொண்டு மூடப்பட்ட படுக்கையில் சுகமாகத் தூங்கினர். (45–46) ஹே ராஜன்! இவ்விதம் பிருந்தாவனத்தில் ஸஞ்சரிக்கின்ற பகவானுன அந்தக் கிருஷ்ணன் ஒருநாள் தோழர்களுடன்கூட பலராமன் மட்டுமில்லாமல் யமுனையைக் குறித்துச்சென்றுர். (46) பிறகு பசுக்களும், கோபாலர்களும் கோடைகாலத்து வெய்யிலினுல் பீடிக்கப்பட்டவர்களாய்த் தாகம் மேலிட்டு விஷத்தால் கெடுக்கப்பட்ட அந்த யமுனையின் ஜலத்தைக்குடித்தனர். (48) ஹே குருத்வஹ! யாவரும் அந்த விஷஜலத்தைக் குடித்து தைவத்தாற் கெடுக்கப்பட்ட அறிவையுடையவர்களாய் உயிரையிழந்து ஜலத்தினருகில் விழுந்துவிட்டனர். (49) யோகேஶ்வரர்களுக்கும் ஈஶ்வரனுன கிருஷ்ணன் தன்னையே நாதனுகவுடையவர்களான அவர்கள் அவ்விதமானதைக் கண்ணுற்று அமுதத்தைப் பெருக்குகின்ற பார்வை

जलान्तिकात् । आसंस्तुविस्मिताः सर्वे वीक्षमाणाः परस्परम् ॥ ५१ ॥ अन्वमंसत तद्राजन्गोविन्दानुग्रहेक्षितम् । पीत्वा विषं परेतस्य पुनरुत्थानमात्मनः ॥ ५२ ॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्धे धेनुकवधो नाम पञ्चदशोऽध्यायः ॥ १५ ॥

---

யினால் நன்கு பிழைக்கும்படி செய்தார். (50) அவர்கள் யாவரும் உடனே அடையப்பட்ட நினைவையுடையவர்களாய் ஜலத்தினருகி னின்றும் எழுந்து ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டு மிக்க வாய்ச்சரியத்தை யடைந்தவர்களாகவாயினர். (51) ஹே ராஜன்! விஷத்தைக் குடித்து இறந்துபோன தமக்குத் திரும்பவும் பிழைத்தெழுதலானது ஸ்ரீகோவிந்தனுடைய அனுக்கிரஹ வீக்ஷணமென்றே எண்ணினர். (52) (எ-று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண தசமஸ்கந்த பூர்வார்த்தத்தில் தேனுகாசுரவதம் என்ற பதினைந்தாவது அத்தியாயம் முற்றிற்று.

## நாராயணீயம்.

अतीत्य बाल्यं जगतां पते त्वमुपेत्य पौगण्डवयो मनोज्ञम् ।
उपेक्ष्य वत्सावनमुत्सवेन प्रावर्तथा गोगणपालनायाम् ॥ १६४ ॥

(ப-ரை) जगतां पते !=உலகங்களைக் காப்பவரான ஹே கிருஷ்ணா! त्वम्=நீர் बाल्यम्=பிஞ்சு வயதுகளை अतीत्य=கடந்து मनोज्ञम्=பால்யத்தைக் காட்டிலுமதிகம் மனோஹரமான पौगण्डवयः=பௌகண்டவயதை (6-வது வயது முதல் 10-வது வயது முடியவுள்ள வயது பௌகண்டம் எனப்படும்) उपेत्य=அடைந்து वत्सावनम्=கன்றுமேய்த்தலை उपेक्ष्य=விட்டு उत्सवेन=ஸந்தோஷத்துடன் गोगणपालनायाम्=பசுக்கூட்டங்களை ரக்ஷிப்பதில் प्रावर्तथाः=பிரவிருத்தித்தீர். (164) (எ-று)

उपक्रमस्यानुगुणैव सैवं मरुत्पुराधीश! तव प्रवृत्तिः ।
गोत्रापरित्राणकृतेऽवतीर्णस्तदेव देवारभथास्तदा यत् ॥ १६५ ॥

(ப—ரை) मरुत्पुराधीश=ஹே குருவாயூருக்கு நாதனான கிருஷ்ணா! तव=உம்முடைய सेयम=அந்த இந்த (கோரக்ஷண ரூபமான) प्रवृत्तिः=வியாபாரமானது उपक्रमस्य=துவக்கத்துக்கு अनुगुणैव=ஒத்ததாகவே இருந்தது. देव=ஹே கிருஷ்ணா! यत्=யாது காரணத்தால் *गोत्रापरित्राणकृते=பூமியை ரக்ஷிப்பதற்காக (பசு ஸமூஹத்தை ரக்ஷிப்பதற்காக என்ற அர்த்தமும் சிலேஷையினால் கிடைக்கின்றது) अवतीर्णः=அவதரித்தீரோ அக்காரணத்தால் तदा=அப்பொழுது तदेव=அந்த கோத்ராபரித்ராணத்தையே (கோ ஸமூஹரக்ஷணத்தையே) आरभथाः=ஆரம்பித்தீர். (165) (எ—று)

**कदापि रामेण समं वनान्ते वनश्रियं वीक्ष्य चरन् सुखेन ।**
**श्रीदामनाम्नः स्वसखस्य वाचा मोदादगा धेनुककाननं त्वम् ॥१६६॥**

(ப—ரை) कदापि=ஒருஸமயம் रामेण समम्=பலராமனுடன்கூட वनान्ते=காட்டின் நடுவில் वनश्रियम्=காட்டின் அழகை वीक्ष्य=பார்த்து सुखेन=ஸுகமாய் चरन्=ஸஞ்சரிக்கின்ற त्वम्=நீர் श्रीदामनाम्नः=ஸ்ரீதாமா என்று பெயருள்ள स्वसखस्य=தனது தோழனுடைய वाचा=வார்த்தையினால் धेनुककाननम्=தேனுகாஸுரன் வஸிக்கின்ற காட்டை मोदात्=ஸந்தோஷத்தினால் अगाः=அடைந்தீர். (166) (எ—று)

**उत्तालतालीनिवहे त्वदुक्त्या बलेन धूतेऽथ बलेन दोर्भ्याम् ।**
**मृदुः खरश्चाभ्यपतत्पुरस्तात्फलोत्करो धेनुकदानवोऽपि ॥ १६७ ॥**

(ப—ரை) अथ=பிறகு त्वदुक्त्या=உமது வார்த்தையினால் बलेन=பலராமனால் बलेन=சக்தியினால் उत्तालतालीनिवहे=மிகவும் பெரிதான பனைமரத்தின் கூட்டமானது दोर्भ्याम्=கைகளால் धूते=அசக்கப்பட்டவுடன் मृदुः=பழுத்ததும் खरश्च=பழுக்காததுமான फलोत्करः=பழக்கூட்டமானது पुरस्तात्=முன்னால் अभ्यपतत्=கூட்டமாக விழுந்தது. (अनन्तरम्=பிறகு) खरः=கழுதையின் உருவமுள்ள धेनुकदानवोऽपि=தேனுகன் என்ற அஸுரனும் अभ्यपतत्=எதிர்த்து ஓடிவந்தான். (167) (எ—று)

**समुद्यतो धेनुकपालनेऽहं वधं कथं धेनुकस्य कुर्वे ।**
**इतीव मत्वा ध्रुवमग्रजेन सुरौघरोद्धरमजीघतस्त्वम् ॥ १६८ ॥**

---

* अत्र "इनित्रकट्यचश्च" (४-२-५१) इति समूहार्थे त्रप्रत्ययो बोध्यः। अतश्च 'गोत्रा' शब्दस्य गवां समूह इत्यर्थः ॥

(ப–ரை) धेनुकपालने=தேனு (பசு) க்கூட்டங்களைக் காப்பதில் समुद्यतः=ஆவல்கொண்ட अहम्=நான் धेनुकस्=தேனுக ஸம்பந்தமான वधम्=நாசத்தை अद्य=இப்பொழுது कथम्=எப்படி कुर्वे=செய்வேன். इति मत्वेव=என்று நினைத்தவர்போல त्वम्=நீர் अग्रजेन=பலராமன் மூலம் सुरौघरोद्धारम्=தேவக்கூட்டங்களுக்குத் தடைசெய்கின்ற தேனுகாஸுரனை अजीघतः=வதிக்கச்செய்தீர் ध्रुवम्=நிஶ்சயம்.

तदीयभृत्यानपि जम्बुकत्वेनोपागतानग्रजसंयुतस्त्वम् ।
जम्बूफलानीव तदा निरास्थस्तालेषु खेलन् भगवन्निरास्थः ॥ १६९ ॥

(ப–ரை) हेभगवन्!=ஹே கிருஷ்ண ! खेलन् = விளையாடுகின்ற त्वम्=நீர் जम्बुकत्वेन=குள்ளநரிவுருவத்துடன் उपागतान्=அருகில் வந்தவர்களான तदीयभृत्यानपि=தேனுகாஸுரனுடைய வேலைக்காரர்களையுங்கூட निरास्थः=ஆசையற்றவராகவே जम्बूफलानीव=நாகைப்பழங்களைப்போல तदा=அப்பொழுது तालेषु=பனைமரங்களில் निरा-स्थः=வீசி எறிந்தீர். (169) (எ–று)

विनिघ्नति त्वय्यथ जम्बुकौघं सनामकत्वाद्वरुणस्तदानीम् ।
भयाकुलो जम्बुकनामधेयं श्रुतिप्रसिद्धं व्यधितेति मन्ये ॥ १७० ॥

(ப–ரை) अथ=பிறகு त्वम्=நீர் जम्बुकौघम्=நரிக் கூட்டத்தை विनिघ्नति=கொல்லும்பொழுது वरुणः=வருணன் सनामकत्वात्=தனக்கும் ஜம்புகமென்ற பெயரிருப்பதிலிருந்து भयाकुलः=பயத்தினால் கலங்கினவனாய் जम्बुकनामधेयम् = ஜம்புகமென்ற தனது பெயரை श्रुतिप्रसिद्धम्=வேத ப்ரஸித்தமாக व्यधित=செய்து கொண்டான் इति=என मन्ये=எண்ணுகிறேன். (170) (எ–று)

குறிப்பு.—ஜம்புகம் என்ற பெயர் வருணனுக்கும், குள்ள நரிக்குமிருப்பதையொட்டி இவ்விதம் கவி உத்ப்ரேக்ஷிக்கிறார் என வேற்படுகிறது. (எ–று)

तवावतारस्य फलं मुरारे सञ्जातमद्येति सुरैर्नुतस्त्वम् ।
सत्यं फलं जातमिहेति हासी बालैः समं तालफलान्यभुङ्क्थाः ॥

(ப–ரை) हेमुरारे!=ஹே முராரே! तव=உமது अवतारस्य=அவதாரத்தினுடைய फलम्=பயனானது अद्य=இப்பொழுது सञ्जातम्=உண்டாகிவிட்டது इति=என सुरैः=தேவர்களால் नुतः=ஸ்தோத்திரஞ்செய்யப்பட்ட त्वम्=நீர் इह=இங்கு फलम्=பலனானது (பனம்பழ

மானது) जातम्=கிடைத்துவிட்டது ஆனதுபற்றி सत्यम्=தேவர்களின் வார்த்தை ஸத்தியமே इति=என हासी=சிரித்துக்கொண்டு बालैः समम्=குழந்தைகளுடன் கூட तालफलानि=பனம்பழங்களை अभुङ्क्था:=சாப்பிட்டீர். (171) (எ-று)

मधुद्रवस्रुन्ति बृहन्ति तानि फलानि मेदोभरभृन्ति भुक्त्वा ।
तृप्तैश्च दृप्तैर्भवनं फलौघं वहद्भिरागाः खलु बालकैस्त्वम् ॥ १७२ ॥

(ப-ரை) त्वम्=நீர் मधुद्रवस्रुन्ति=தேன்போன்ற ரஸத்தைப் பெருகவிடுகின்றனவும் बृहन्ति=பெரிதுகளும், मेदोभरभृन्ति=உள்ளில் கதுப்பு அதிகமாகவுள்ளனவுமான तानि=அந்த फलानि=பழங்களை भुक्त्वा=சாப்பிட்டுவிட்டு तृप्तैः=திருப்தியை (போதுமென்ற எண்ணத்தை) யடைந்தவர்களும், दृप्तैः=கொழுத்தவர்களும் फलौघम्=பழக்கூட்டத்தை वहद्भिः=வீட்டுக்கு எடுத்துச் செல்லுகின்றவர்களுமான बालकैः=குழந்தைகளுடன் கூட भवनम्=வீட்டை आगाः=அடைந்தீர். (172) (எ-று)

हतो हतो धेनुक इत्युपेत्य फलान्यदद्भिर्मधुराणि लोकैः ।
जयेति जीवेति नुतो विभो त्वं मरुत्पुराधीश्वर पाहि रोगात् ॥ १७३ ॥

(ப-ரை) विभो!=விபுவான मरुत्पुराधीश्वर!=குருவாயூருக்கு ஈப்வர! धेनुकः=தேனுகாஸுரன் हतो हतः=கொல்லப்பட்டான் கொல்லப்பட்டான் इति=என்று சொல்லிக்கொண்டு उपेत्य=அருகில் வந்து मधुराणि=இனிமையான फलानि=பனம்பழங்களை अदद्भिः=சாப்பிடுகின்ற लोकैः=ஜனங்களால் जयेति=ஜயத்தையடைவீராக என்றும், जीवेति=வெகுகாலம் ஜீவித்திருப்பீராக என்றும் नुतः=ஸ்துதிக்கப்பட்ட त्वम्=நீர் रोगात्=ரோகத்தினின்றும் पाहि=என்னைக்காப்பீராக.

இவ்விதம் தேனுகாஸுரவத வர்ணனமென்ற ஐம்பத்துமூன்ருவது தசகம் முற்றிற்று.

---

त्वत्सेवोत्कः सौभरिर्नाम पूर्वं कालिन्द्यन्तर्द्वादशाब्दं तपस्यन् ।
मीनव्राते स्नेहवान् भोगलोले तार्क्ष्यं साक्षादैक्षताग्रे कदाचित् ॥

(ப-ரை) त्वत्सेवोत्कः=உம்மை ஸேவிப்பதில் ஆவல் கொண்டவரும் कालिन्द्यन्तः=யமுனை மடுவின் நடுவில் द्वादशाब्दम्=பன்னி

ரண்டு வருஷங்கள் முடிய **तपस्यन्**=தவஞ்செய்கின்றவரும் **भोगलोले**=போகத்தில் ஆவல்கொண்ட **मीनव्राते**=மீன்களின் கூட்டத்தில் **स्नेह-वान्**=ஸ்னேஹமுள்ளவருமான **सौभरिर्नाम**=ஸௌபரி என்ற மஹருஷியானவர் **पूर्वम्**=முன்னர் **कदाचित्**=ஒருசமயம் **अग्रे**=தனக்கெதிரில் **तार्क्ष्यम्**=கருடனை **साक्षाद्देक्षत**=நேரில் கண்டார். (174) (எ-று)

त्वद्वाहं तं सक्षुधं तृक्षसूनुं मीनं कञ्चिज्जक्षतं लक्षयन् सः ।
तप्तश्चित्ते शप्तवानत्र चेत्त्वं जन्तून् भोक्ता जीवितञ्चापि मोक्ता ॥१७५॥

(ப-ரை) **सक्षुधम्**=பசியுடன் கூடினவனும் **कञ्चित्**=ஒரு **मीनम्**=மீனை **जक्षतम्**=தின்பவனும் **त्वद्वाहम्**=உம்மைச் சுமப்பவனுமான **तृक्षसूनुम्**=திருக்ஷனுடைய குமாரனை கருடனை **लक्षयन्**=கண்ணுற்று **चित्ते**=மனத்தில் **तप्तः**=தாபத்தையடைந்தவரான **सः**=அவர் **अत्र**=இவ்விடத்தில் வசிக்கும் **जन्तून्**=பிராணிகளை **त्वम्**=நீ **भोक्ता चेत्**=தின்பாயேயானல் **जीवितञ्चापि**=உயிரையுங்கூட **मोक्ता**=இழந்துவிடுவாயென **शप्तवान्**=சபித்தார். (175) (எ-று)

तस्मिन् काले कालियः क्ष्वेळदर्पात् सर्पारातेः कल्पितं भागमश्नन् ।
तेन क्रोधात् त्वत्पदांभोजभाजा पक्षक्षिप्तस्तद्दुरापं पयोऽगात् ॥१७६॥

(ப-ரை) **तस्मिन् काले**=அக்காலத்தில் **क्ष्वेळदर्पात्**=விஷமூலமேற்பட்ட கொழுப்பினல் **सर्पारातेः**=சர்ப்ப சத்துருவான கருடனுக்கு **कल्पितम्**=ஏற்படுத்தப்பட்ட **भागम्**=பாகத்தை **अश्नन्**=சாப்பிட்ட **कालियः**=காளியன் **त्वत्पदांभोजभाजा**=உமது சரணாரவிந்தத்தையடைந்தவனான **तेन**=அந்தக் கருடனல் **क्रोधात्**=கோபத்தினல் **पक्ष-क्षिप्तः**=இரக்கையினல் அடிக்கப்பட்டவனாய் **तद्दुरापम्**=அந்தக் கருடனலடையமுடியாத **पयः**=இம்மடு ஜலத்தை **अगात्**=அடைந்தான்.

घोरे तस्मिन् सूरजानीरवासे तीरे वृक्षा विक्षताः क्ष्वेळवेगात् ।
पक्षिव्राताः पेतुरभ्रे पतन्तः कारुण्यार्द्रं त्वन्मनस्तेन जातम् ॥ १७७ ॥

(ப-ரை) **घोरे**=பயங்கரனான **तस्मिन्**=அந்தக் காளியன் **सूरजा-नीरवासे**=யமுனையின் ஜலத்தில் வசிக்குங்கால் **तीरे**=கரையிலுள்ள **वृक्षाः**=மரங்கள் **क्ष्वेळवेगात्**=விஷவேகத்தினல் **विक्षताः**=அழிந்துபோயின. **अभ्रे**=ஆகாசத்தில் **पतन्तः**=பறக்கின்ற **पक्षिव्राताः**=பறவைக்கூட்டங்கள் **पेतुः**=கீழில் விழுந்தன. **तेन**=அதனல் **त्वन्मनः**=

உமது மனதானது **कारुण्यार्द्रम्**=கருணை நிரம்பினதாக **जातम्**= ஆயிற்று. (177) (எ-று)

**काले तस्मिन्नेकदा सीरपाणिं मुक्त्वा याते यामुनं काननान्तम् ।**
**त्वय्युद्दामग्रीष्मभीष्मोष्मतप्ता गोगोपाला व्यापिबन् क्ष्वेळतोयम् ॥**

(ப-ரை) **तस्मिन्काले**=அந்தக்காலத்தில் **एकदा**=ஒருநாள் **त्वयि**= நீர் **सीरपाणिम्**=பலராமனை **मुक्त्वा**=விட்டு **यामुनम्**=யமுனையைச் சேர்ந்ததான **काननान्तम्**=காட்டின் நடுவை **याते**=சென்றதும் **उद्दामग्रीष्मभीष्मोष्मतप्ताः**=அதிகமான கோடைக்கால பயங்கரச்சூட்டினல் தாபத்தையடைந்தவர்களான **गोगोपालाः**=பசுக்களும் இடையர்களும் **क्ष्वेळतोयम्**=விஷ ஜலத்தை **व्यापिबन्**=அதிகமாகக் குடித்தனர்.

**नश्यज्जीवान् विच्युतान् क्ष्मातले तान् विश्वान्पश्यन्नच्युत त्वं दयार्द्रः।**
**प्राप्योपान्तं जीवयामासिथ द्राक् पीयूषांभोवर्षिभिः श्रीकटाक्षैः ॥**

(ப-ரை) **अच्युत !**=தன்னை நம்பின பக்தர்களைக் கைவிடாதவரே! **त्वम्**=நீர் **दयार्द्रः**=அதிகம் தயையுள்ளவராய் **नश्यज्जीवान्**= உயிரையிழந்தவர்களும் **क्ष्मातले**=பூப்பிரதேசத்தில் **विच्युतान्**=விழுந்துகிடக்கின்றவர்களுமான **तान् सर्वान्**=அவர் யாவரையும் **पश्यन्**= பார்த்து **उपान्तम्**=அருகை **प्राप्य**=அடைந்து **पीयूषांभोवर्षिभिः**=அமுதமயமான ஜலத்தை வர்ஷிக்கின்ற **श्रीकटाक्षैः**=சோபை பொருந்திய கடைக்கண் பார்வைகளினல் **द्राक्**=சீக்கிரமாக **जीवयामासिथ**=உயிருள்ளவர்களாகச் செய்தீர். (179) (எ-று)

**किं किं जातो हर्षवर्षातिरेकः सर्वाङ्गेष्वित्युत्थिता गोपसङ्घाः ।**
**दृष्ट्वाग्रे त्वां त्वत्कृतं तद्विदन्तस्त्वामालिङ्गन् दृष्टनानाप्रभावाः ॥१८०॥**

(ப-ரை) **गोपसङ्घाः**=கோபக்கூட்டங்கள் **सर्वाङ्गेषु**=எல்லா அங்கங்களிலும் **हर्षवर्षातिरेकः**=அதிக சந்தோஷ வர்ஷமானது **जातः**= உண்டாகியிருக்கின்றதே **किम् ! किम् !**=இஃதென்னே? இஃதென்னே? எனச் சொல்லிக்கொண்டு **उत्थिताः**=எழுந்தவர்களாய் **त्वाम्**=உம்மை **अग्रे**=எதிரில் **दृष्ट्वा**=கண்ணுற்று **दृष्टनानाप्रभावाः**=காணப்பட்ட பலவித ப்ரபாவத்தையுடையவர்களாயிருப்பதுபற்றி **तत्**=அதை **त्वत्कृतमिति**=உம்மால் செய்யப்பட்டதென்று **विदन्तः**=அறிந்து கொண்டவர்களாய் **त्वाम्**=உம்மை **आलिङ्गन्**=ஆலிங்கனஞ்செய்து கொண்டனர். (180) (எ-று)

गावश्चैवं लब्धजीवाः क्षणेन स्फीतानन्दास्त्वाञ्च दृष्ट्वा पुरस्तात् ।
द्रागावव्रुः सर्वतो हर्षबाष्पं व्यामुञ्चन्त्यो मन्दमुद्यन्निनादाः ॥ १८१ ॥

(ப-ரை) एवम्=இவ்விதம் क्षणेन=க்ஷணத்துக்குள் लब्धजीवाः=அடையப்பட்ட ஜீவனையுடைய गावश्च=பசுக்களும் पुरस्तात्=எதிரில் त्वाञ्च=உம்மையும் दृष्ट्वा=பார்த்து स्फीतानन्दाः=பெருகின ஆனந்தத்தையுடையவைகளாய் हर्षबाष्पम्=ஆனந்தக்கண்ணீரை व्यामुञ्चन्त्यः=பெருகவிட்டுக்கொண்டும் मन्दम्=மெதுவாகவிருக்கும்படி उद्यन्निनादाः=வெளிக்கிளம்பின சப்தத்தையுடையனவாய்க் கொண்டும் सर्वतः=நாலாபக்கத்திலும் द्राक्=சீக்கிரமாக आवव्रुः=சூழ்ந்துகொண்டன. (181) (எ-று)

रोमाञ्चो यं सर्वतो नश्शरीरे भूयस्यन्तः काचिदानन्दमूर्छा ।
आश्चर्योयं क्ष्वेलवेगो मुकुन्देत्युक्तो गोपैर्नन्दितो वन्दितोऽभूः ॥१८२॥

(ப-ரை) हेमुकुन्द!-ஹே கிருஷ்ண! नः-எங்களுடைய शरीरे सर्वतः-தேஹத்தில் எல்லாவிடத்திலும் अयम्-இந்த रोमाञ्चः-மயிர்க்குச்சமும், अन्तः-உள்ளில் भूयसी-அதிகமான कापि-சொல்லுவதற்கியலாத आनन्दमूर्छा-சந்தோஷ நிறைவும் உண்டாகியிருப்பதால் अयम्-இந்த क्ष्वेलवेगः-விஷ வேகமானது आश्चर्यः-ஆச்சரியமானதேயாகும் इति-என गोपैः-கோபர்களால் उक्तः-சொல்லப்பட்ட நீர் नन्दितः-சந்தோஷப்படுத்தப்பட்டவராகவும் वन्दितः-வணங்கப்பட்டவராகவும் अभूः-ஆனீர் (182) (எ-று)

एवं भक्तान् मुक्तजीवानपि त्वं मुग्धापाङ्गैरस्तरोगांस्तनोषि ।
तादृग्भूतस्फीतकारुण्यभूमा रोगात्पाया वायुगेहाधिनाथ ॥ १८३ ॥

(ப-ரை) हेवायुगेहाधिनाथ!-குருவாயூரில் வசிக்கும் நாத! त्वम्-நீர் मुक्तजीवानपि-உயிரையிழந்தவர்களாயினும் भक्तान्-பக்தர்களை मुग्धापाङ्गैः-அழகிய கடைக்கண்களினால் अस्तरोगान्-ரோகமற்றவர்களாக एवम्-இவ்விதம் तनोषि-செய்தீர். तादृग्भूतस्फीतकारुण्यभूमा-அவ்விதமுண்டான விரிந்த தயையின் பெருக்கையுடைய நீர் रोगात्-வாதரோகத்தினின்றும் पायाः-என்னைக் காப்பீராக. (183)

இவ்விதம் காளியமர்த்தனஞ்செய்யுங்கால் விஷஜலத்தால் மரித்தவர்களான கோபாலர்களின் உஜ்ஜீவன வர்ணனம் என்ற ஐம்பத்து நான்காவது தசகம் முற்றிற்று.

## अथ षोडशोऽध्यायः ॥

श्रीशुक उवाच—विलोक्य दूषितां कृष्णां कृष्णः कृष्णाहिना विभुः। तस्या विशुद्धिमन्विच्छन्सर्पं तमुदवासयत् ॥ १ ॥ रजोवाच—कथमन्तर्जलेऽगाधे न्यगृह्णाद्भगवानहिम्। स वै बहुयुगावासं यथासीद्विप्र कथ्यताम् ॥ २ ॥ ब्रह्मन्भगवतस्तस्य भूम्नः स्वच्छन्दवर्तिनः। गोपालोदारचरितं कस्तृप्येतामृतं जुषन् ॥ ३ ॥ श्रीशुक उवाच—कालिन्द्यां कालियस्यासीद्ध्रदः

---

### பதினாறுவது அத்தியாயம்.

(அ-கை) षोडशे कालियस्योक्तो निग्रहो यमुनाह्रदे।
तत्पत्नीभिः स्तुतेनाथ कृष्णेनानुग्रहः कृतः ॥ १ ॥
हत्वा रासभदैतेयान् जग्ध्वा तालफलान्यलम्।
प्रीतोऽनृत्यत्फणारङ्गे कालियस्य कलानिधिः ॥ २ ॥

(க-ரை) யமுனையினருகிலுள்ள மடுவிலிருந்த காளியனுடைய நிக்ரஹமும், பின்னர் அவனது பத்னிகளால் ஸ்துதிக்கப்பட்ட கிருஷ்ணனால் அவனுக்கு அனுக்ரஹம் செய்யப்பட்டதென்பதும், கழுதை வடிவமுள்ள அஸுரர்களைக்கொன்று வேண்டியமட்டும் பனம் பழங்களைச்சாப்பிட்டு ப்ரீதியையடைந்த கலாநிதியான கிருஷ்ணன் காளியனுடைய படங்களாகிற நாடகமேடையில் நர்த்தனம் செய்தார் என்பதும் இந்தப் பதினாறுவது அத்தியாயத்தில் சொல்லப்படுகிறது. (1–2) (எ–று)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—கருநாகத்தினால் யமுனை தூஷிக்கப்பட்டிருப்பதைக்கண்ட விபுவான கிருஷ்ணன் அந்த யமுனைக்குச் சுத்தியைச்செய்யவிருப்பங்கொண்டவராய் அப்பாம்பை அங்கிருந்து விரட்டினார். (1) ராஜன் சொல்லுகிறார்—ஹே விப்ர! அகழமான ஜலத்தினுள்ளில் வெகுயுகங்களாக வஸித்துவருகின்ற அந்தப்பாம்பை பகவான் எப்படி அடக்கினார். அவன் அப்புறம் எப்படி ஆனான் என்றதைச் சொல்லவேண்டும். (2) ஹேப்ரம்ஹன்!. எங்கும் நிறைந்தவனும், பக்தர்களின் இஷ்டத்துக்குத்தக்கபடி நடப்பவனுமான அந்தப் பகவானுடைய கோபாலர்களுடன் சேர்ந்துசெய்த உதாரசரித்திரமாகிற அமுதத்தைப் பானஞ்செய்த எவன்தான் திரு

**कश्चिद्विषाग्निना । श्रप्यमाणपया यस्मिन्पतन्त्युपरिगाः खगाः ॥ ४ ॥ विप्रुष्मता विषोदोर्मिमारुतेनाभिमर्शिताः । म्रियन्ते तीरगा यस्य प्राणिनः स्थिरजङ्गमाः ॥ ५ ॥ तं चण्डवेगविषवीर्यमवेक्ष्य तेन दुष्टां नदीं च खलसंयमनावतारः । कृष्णः कदम्बमधिरुह्य ततोऽतितुङ्गमास्फोट्य गाढरशनो**

---

ப்தியை (போதுமென்ற எண்ணத்தை) அடைவான். (3) ஸ்ரீசுகர் சொல்லுகிறார்—காளியனுடைய விஷாக்னியினுல் கொதிக்கின்ற ஜலத்தையுடையதும், ஆனதுபற்றி மேல் பறக்கின்ற பக்ஷிகள்கூட எதில் விழுந்து விடுகின்றனவோ அத்தகையதும், ஜலத்துளிகளுடன் கூடினதும் விஷஜல அலைகளின் ஸம்பந்தமுள்ளதுமான காற்றினுல் தொடப்பட்டவைகளான எதன்கரையிலுள்ள ஸ்தாவரஜங்கமங்களான ப்ராணிகள் மரிக்கின்றனவோ அத்தகையதுமான மடுவொன்று (1)யமுனையினருகிலிருந்தது. (4–5) துஷ்டர்களை அடக்குவதற்கு வேண்டி அவதரித்த ஸ்ரீகிருஷ்ணன் அந்தக்காளியன் உக்கிரமான வேகத்தையுடைய விஷத்தின் ஸாமர்த்தியமுள்ளவனுக இருப்பதையும், யமுனுநதியானது அவனுல் தோஷமுள்ளதாக வாக்கப்பட்டிருப்பதையும் கண்டு மிக்கவுயரமுள்ள (2) கதம்பமரத்திலேறிக்கொண்டு கையினுல் கையைத் தட்டியும், இடையிலுள்ள வஸ்திரத்தைக் கெட்டியாகக்கட்டிக் கொண்டும், அந்தக் கதம்பமரத்

---

(1) அந்த யமுனைக்குத் தெற்குப் பக்கத்தில் ஒருயோஜனை தூரமுள்ளதும் யமுனையின் ப்ரவாஹத்துடன் ஸம்பந்தப்படாததுமான தனியான மடுவொன்றிருந்ததாகவும் அதிலேயே காளியன் வசித்ததாகவும் இம்மடுவையே யமுனையென்று சொல்லும் வழக்கமுண்டென்றும் கொள்ளவேண்டும். இல்லையேல் அவ்விஷ ஸம்பந்தம்பெற்ற ஜலத்துடன் சேர்ந்த யமுனையானது மதுராதேசத்திலுள்ள ஜனங்களால் அனுபவிக்கப்படாமலே போயிருக்கும். (2) காளியனுடைய விஷஜ்வாலையினுல் கரையிலுள்ள மரங்களெல்லாம் எரிந்துவிட்டபோதிலுங்கூட ஸ்ரீபகவானுடைய சரணஸம்பந்தம் பெறத்தக்க பாக்கியமிருந்தமைபற்றி அம்மரமொன்றுமட்டும் பட்டுப்போகவில்லை என்று கொள்ளவும். அல்லது தேவலோகத்திலிருந்து அமுத கலசத்தை எடுத்துவந்த ஸ்ரீகருடன் இதில் களைப்பாற உட்கார்ந்தமையின் இம்மரம்மட்டும் பட்டுப்போகவில்லையென வேறுபுராணத்தில் கூறப்பட்டிருப்பதையொட்டி இம்மரம்மட்டும் எரிந்துபோகவில்லை என்றுவது கொள்ளவும்,

न्यपतद्विषोदे ॥ ६ ॥ सर्पह्रदः पुरुषसारनिपातवेगसंक्षोभितोरगविषोच्छ्वसिताम्बुराशिः । पर्यक्प्लुतो विषकषायबिभीषणोर्मिर्धावन्धनुःशतमनन्तबलस्य किं तत् ॥ ७ ॥ तस्य ह्रदे विहरतो भुजदण्डघूर्णवार्घोषमङ्ग वरवारणविक्रमस्य । आश्रुत्य तत्स्वसदनाभिभवं निरीक्ष्य चक्षुःश्रवाः समसरत्तदमृष्यमाणः ॥ ८ ॥ तं प्रेक्षणीयसुकुमारघनावदातं श्रीवत्सपीतवसनं स्मितसुन्दरास्यम् । क्रीडन्तमप्रतिभयं कमलोदराङ्घ्रिं सन्दश्य मर्मसु रुषा भुजया चछाद ॥ ९ ॥ तं नागभोगपरिवीतमदृष्टचेष्टमालोक्य तत्प्रियसखाः पशुपा भृशार्ताः। कृष्णेऽर्पितात्मसुहृदर्थकलत्रकामा दुःखानुशोकभयमूढधि-

---

திலிருந்து விஷமடுவில் குதித்தார். (6) காளியனிருந்த மடுவானது புருஷஶ்ரேஷ்டனான கிருஷ்ணனுடைய பதநவேகத்தினல் நன்கு கலக்கப்பட்டவைகளான ஸர்ப்பங்களின் விஷத்தினல் மேல்பொங்கி எழுந்த ஜலக்கூட்டத்தை யுடையதாகவும், விஷத்தினல் கஷாயமாக்கப்பட்டனவும் பயங்கரங்களுமான அலைகளையுடையதாகவும், சுற்றிலும் ஓடுகின்றதாகவும் கொண்டு நூறு விற்கடைதூரம் பரவிற்று. எல்லையற்ற பலமுள்ள ஸ்ரீகிருஷ்ணனுக்கு இது எம்மாத்திரம்?(7)

ஹே அங்க! சிறந்த யானையினது விக்ரமமுள்ளவரும் மடுவில் விளையாடுகின்றவருமான அந்தக் கிருஷ்ணனுடைய புஜதண்டத்தின் அடியினலேற்பட்ட ஜலத்தின் சப்தத்தைக் கேட்டும், அந்தக் கிருஷ்ணனல் தனது வீட்டுக்கேற்பட்ட அழிவைக் கண்ணுற்றும் காளியன் அதைப்பொறுக்காதவனய் வெளிவந்தான். (8) பார்க்கத்தெகட்டாதவரும், சுகுமாரரும், மேகம்போல் விளங்குகின்றவரும், ஸ்ரீவத்ஸமென்ற மருவுடன் கலந்த பீதாம்பரத்தையுடையவரும், புன்சிரிப்பினல் அழகுவாய்ந்த முகத்தையுடையவரும், எவ்வித பயமுமின்றி விளையாடுகின்றவரும், கமலத்தின் வயிறுபோன்ற சரணங்களை யுடையவருமான அந்தக் கிருஷ்ணனை மர்மஸ்தானங்களில் நன்கு கடித்து கோபத்துடன் உடலினல் சுற்றிக்கொண்டான். (9) பாம்பின் உடலினல் சுற்றிலும் சுற்றிக்கொள்ளப்பட்டவரும் அசைவற்றிருப்பவருமான அந்தக் கிருஷ்ணனைக்கண்டு அவரையே ப்ரியமாகவுடையவர்ளும் தோழர்களும் கிருஷ்ணனிடத்தில் அர்ப்பணஞ்செய்யப்பட்ட சரீரம், மனது, பொருள், களத்தி

**यो निपेतुः ॥ १० ॥ गावो वृषा वत्सतर्यः क्रन्दमानाः सुदुःखिताः । कृष्णे न्यस्तेक्षणा भीता रुदत्य इव तस्थिरे ॥ ११ ॥ अथ व्रजे महोत्पातास्त्रिविधा ह्यतिदारुणाः । उत्पेतुर्भुवि दिव्यात्मन्यासन्नभयशंसिनः ॥ १२ ॥ तानालक्ष्य भयोद्विग्ना गोपा नन्दपुरोगमाः । विना रामेण गाः कृष्णं ज्ञात्वा चारयितुं गतम् ॥ १३ ॥ तैर्दुर्निमित्तैर्निधनं मत्वा प्राप्तमतद्विदः । तत्प्राणास्तन्मनस्कास्ते दुःखशोकभयातुराः ॥ १४ ॥ आबालवृद्धवनिताः सर्वेऽङ्ग पशुवृत्तयः । निर्जग्मुर्गोकुलाद्दीनाः कृष्णदर्शनलालसाः ॥ १५ ॥**

---

ரம், காமம் இவற்றையுடையவர்களுமான கோபாலர்கள் மிக்கப் பீடிக்கப்பட்டவர்களாயும் துக்கம், அதையொட்டின சோகம், பயம் இவற்ருல் மயங்கின புத்தியுள்ளவர்களாயும் பூமியில் விழுந்துவிட்டனர். (10) பசுக்களும், விருஷபங்களும், வத்ஸதரிகளும், (கர்ப்பந்தரிக்கப்போதிய வயதையடைந்த பசுங்கன்றுகளும்) பயந்தும் மிக்கத் துக்கத்தையடைந்தும் கத்துகின்றனவாயும் கிருஷ்ணனிடத்தில்வைக்கப்பட்ட கண்களையுடையனவாயும்கொண்டு அழுகின்றவை போலவிருந்தன. (11) பிறகு கோகுலத்தில் பூமியில் ஆட்டம் முதலியனவும், ஆகாசத்தில் கொள்ளிக்கட்டைவிழுதல் முதலியனவும், சரீரத்தில் இடது கண் துடித்தல் முதலியனவும், மிக்கப் பயத்தைத்தருகின்றனவும், மிக்கச் சமீபத்தில் வரும் பயத்தைச் சொல்லுகின்றனவுமான மூன்றுவிதமான பெரிய உத்பாதங்கள் (அசுபக்குறிகள்) உண்டாயின. (12)

ஹே அங்க! அவற்றைக்கண்டு பயத்தால் கலங்கின நந்தகோபரை ஆதியாகக்கொண்ட பாலர் கிழவர் ஸ்திரீகள் முதலிய அந்த கோபாலர்கள் யாவரும் பலராமனைவிட்டுத் தனியாகப் பசுக்களை மேய்க்கக் கிருஷ்ணன் போனதையும் அறிந்து அந்தக் கெட்ட நிமித்தங்களினுல் மரணத்தையடைந்துவிட்டான் எனவெண்ணிக் கொண்டு அவரை நாராயணனெனவறியாதவர்களாகவும் அவரிடம் சென்ற ப்ராணன்களையுடையவர்களாகவும், அவரிடஞ்சென்ற மனமுடையவர்களாகவும் துக்கம், சோகம், பயம் இவற்ருல் பீடிக்கப்பட்டவர்களாகவும், பசுக்களுக்கொப்பான நிலையை (அதிகமான வாத்ஸல்யத்தை) அடைந்தவர்களாகவும் தீனர்களாகவும் கிருஷ்ணனைப்பார்க்க

तांस्तथा कातरान्वीक्ष्य भगवान्माधवो बलः । प्रहस्य किञ्चिन्नोवाच प्रभावज्ञोऽनुजस्य सः ॥ १६ ॥ तेऽन्वेषमाणा दयितं कृष्णं सूचितया पदैः । भगवल्लक्षणैर्जग्मुः पदव्या यमुनातटम् ॥ १७ ॥ ते तत्र तत्राब्जयवाङ्कुशाशनिध्वजोपपन्नानि पदानि विश्पतेः । मार्गे गवामन्यपदान्तरान्तरे निरीक्षमाणा ययुरङ्ग सत्वराः ॥ १८ ॥ अन्तर्ह्रदे भुजगभोगपरीतमारात्कृष्णं निरीहमुपलभ्य जलाशयान्ते । गोपांश्च मूढधिषणान्परितः पशूंश्च सङ्क्रन्दतः परमकश्मलमापुरार्ताः ॥ १९ ॥ गोप्योऽनुरक्तमनसो भगवत्यनन्ते तत्सौहृदस्मितविलोकगिरः स्मरन्त्यः । ग्रस्तेऽहिना प्रियतमे भृशदुःखतप्ताः

---

ஆவல் கொண்டவர்களாகவுமாகிக் கோகுலத்தினின்றும் வெளியேறினர். (13-15) அவர்கள் அவ்விதம் பயந்ததைக்கண்டு பகவானும் மாதவனுமான அந்தப் பலராமன் தம்பியின் ப்ரபாவத்தையறிந்தவராக இருப்பதுபற்றி சிரித்துக்கொண்டு ஒன்றும் சொல்லாதிருந்துவிட்டார். (16) அவர்கள் பகவல்லக்ஷணமமைந்த அடிகளினால் சூசிப்பிக்கப்பட்டவழியினால் தயிதனான க்ருஷ்ணனைத்தேடிக்கொண்டு யமுனையின் கரையையடைந்தனர். (17) ஹே அங்க! அவர்கள் வழியில் ஆங்காங்கு அம்புஜரேகை, யவரேகை, அங்குசரேகை, வஜ்ரரேகை, த்வஜரேகை இவற்றுடன் கூடின க்ருஷ்ணனுடைய அடிகளை பசுக்களின் அடிகளுக்கிடையிடையே பார்த்துக்கொண்டு வேகமாக நடந்தனர்.* (18) மடுவின் நடுவில் பாம்பினுடலால் சுத்தப்பட்டவரும், சேஷ்டையற்றிருப்பவருமான க்ருஷ்ணனை வெகுதூரத்திலிருந்தே கண்டும் மடுவின் ஓரத்தில் கோபாலர் மயங்கின புத்தியுள்ளவர்களாக இருப்பதையும், சுற்றிலும் பசுக்கள் கத்துவதையும் அறிந்தும், துக்கிதர்களாகி மேலான மோஹத்தையடைந்தனர். (19) அனந்தனான பகவானிடத்தில் பற்றின மனத்தையுடையவர்களான கோபிகைகள் அவருடைய ஸ்னேஹம், புன்சிரிப்பு, பார்வை, வார்த்தை இவற்றை நினைத்துக்கொண்டும், மிக்க ப்ரியனான க்ருஷ்ணன் பாம்பினால் சுற்றப்பட்டிருக்குங்கால் அதிகமான துக்கத்தினால் தாபத்

---

* வேதமார்க்கத்தில் தவறாத யோகிகள் அர்த்தந்த உபாதிகளைப் போக்கி பரமான தத்த்வத்தைத் தேடுவது எவ்விதமோ அவ்விதமிருந்தது என்பது கருத்து.

**शून्यं प्रियव्यतिहृतं ददृशुस्त्रिलोकम् ॥ २० ॥ ताः कृष्णमातरमपत्यमनुप्रविष्टां तुल्यव्यथाः समनुगृह्य शुचः स्रवन्त्यः । तास्ता व्रजप्रियकथाः कथयन्त्य आसन्कृष्णाननेऽर्पितदृशो मृतकप्रतीकाः ॥ २१ ॥ कृष्णप्राणान्निर्विशतो नन्दादीन्वीक्ष्य तं ह्रदम् । प्रत्यषेधत्स भगवान्रामः कृष्णानुभाववित् ॥ २२ ॥ इत्थं स्वगोकुलमनन्यगतिं निरीक्ष्य सस्त्रीकुमारमतिदुःखितमात्महेतोः । आज्ञाय मर्त्यपदवीमनुवर्तमानः स्थित्वा मुहूर्तमुदतिष्ठदुरङ्गबन्धात् ॥ २३ ॥ तत्प्रथ्यमानवपुषा व्यथितात्मभोगस्त्यक्त्वोन्नमय्य कुपितः स्वफणान्भुजङ्गः । तस्थौ श्वसन् श்வसनरन्ध्रविषाम्बरीष-**

---

தையடைந்தவர்களாய்க் கொண்டும் ப்ரியனுன கிருஷ்ணனில்லாத மூவுலகையும் சூன்யமாகவெண்ணினர். (20)

குழந்தையை யொட்டி மடுவில் குதிக்கவெண்ணின கிருஷ்ணனது மாதாவான யசோதையைக் கையால் பிடித்துக் கொண்டு கண்ணீரைப் பெருகவிடுகின்றவர்களும், துல்யமான கஷ்டத்தை யுடையவர்களுமான அந்தக் கோபிகைகள் கோகுலப்பிரியனுன கண்ணனுடைய அந்தந்தக் கதைகளைச் சொல்லிக்கொண்டு கிருஷ்ணனுடைய முகத்தில் வைக்கப்பட்ட கண்களையுடையவர்களாய் இறந்தவர்க்கொப்பானவர்களாக ஆயினர். (21) கிருஷ்ணனையே ப்ராணனுகக் கொண்ட நந்தகோபாதிகள் அம்மடுவில் ப்ரவேசிப்பதைக் கண்டு பகவானும் கிருஷ்ணனுடைய ப்ரபாவத்தை அறிந்தவருமான அந்தப் பலராமன் தடுத்தார். (22) இவ்விதம் தன்னை வேறுகாதனற்றவனுகக்கண்டு தன் நிமித்தமாகச் சொந்தமான கோகுலமானது ஸ்திரீகளுடனும் குழந்தைகளுடனுங் கூட அதிகம் துக்கமடைந்திருப்பதைக்கண்டு ஒருமுகூர்த்தகாலம் மனிதனுடைய வழியை யனுஸரித்தவராகவிருந்து பிறகு பாம்பினது கட்டினின்றும் வெளிப்பட்டார். (23) அந்தக் கிருஷ்ணனுடைய விருத்தியடைந்த (வளர்ந்த) சரீரத்தினுல் வலியேறின தனது சரீரத்தையுடைய பாம்பானது அவர்மேல் சுத்தின கட்டை விடுவித்துக்கொண்டு கோபத்தையடைந்ததாய்த் தனது படங்களை உயரத்தூக்கிக் கொண்டும் பெருமூச்சுவிட்டுக்கொண்டும் மூக்கின் துவாரத்தில் விஷத்தையுடையதாய்க்கொண்டும், திருவிழாக் கூட்டத்தில் கடலை முதலியன

स्तब्धेक्षणोल्मुकमुखो हरिमीक्षमाणः ॥ २४ ॥ तं जिह्वया द्विशिखया परिलेलिहानं द्वे सृक्किणी ह्यतिकरालविषाग्निदृष्टिम्। क्रीडन्नमुं परिससार यथा खगेन्द्रो बभ्राम सोऽप्यवसरं प्रसमीक्षमाणः ॥ २५ ॥

एवं परिभ्रमहतौजसमुन्नतांसमानम्य तत्पृथुशिरस्स्वधिरूढ आद्यः। तन्मूर्धरत्ननिकरस्पर्शातिताम्रपादाम्बुजोऽखिलकलादिगुरुर्ननर्त ॥२६॥ तं नर्तुमुद्यतमवेक्ष्य तदा तदीयगन्धर्वसिद्धसुरचारणदेववध्वः। प्रीत्या मृदङ्गपणवानकवाद्यगीतपुष्पोपहारनुतिभिः सहसोपसेदुः ॥ २७ ॥ यद्य-

---

வறுக்கும் வாணலிபோல் நன்கு சிவந்ததும் அசைவற்றதுமான கண்களையுடையதாய்க்கொண்டும், நெருப்புப் பொறிகளை முகத்தி லுடையதாய்க்கொண்டும், கிருஷ்ணனைப் பார்த்துக்கொண்டு நின் றது. (24) இரண்டு கிளைகளையுடைய ஒவ்வொரு முகத்திலு முள்ள நாக்கினால் இரண்டு கடைவாய்களைச் சுற்றிலும் நக்குகின்ற தும், அதிகம் பயங்கரமான விஷாக்னியுடன் கூடின கண் களை யுடையதுமான அந்த இந்த ஸர்ப்பத்தை ஹரியானவர் விளையாடிக் கொண்டு கருடன்போல நாலா பக்கத்திலும் சுற்றி வந்தார். அந்தக் காளியனும் ஸமயத்தை எதிர்பார்த்துக்கொண்டு சுற்றி வந்தான். (25) இவ்விதம் நாலாபக்கத்திலும் சுற்றுவதனால் சக்தியை யிழந்தவனும் உயரத்தூக்கப்பட்ட தலைகளையுடையவனு மான அவனை வணங்கச் செய்து அவனுடைய அப்பெரிய தலைகளி லேறிக்கொண்டு அவனது தலைகளிலிருக்கின்ற நாகரத்தினக்கூட்டங் களின் ஸம்பந்தத்தால் மிக்கச்சிவந்த சரணாரவிந்தத்தை யுடைய வரும், எல்லா க்கலைகளுக்கும் ஆதிகுருவும் ஆத்யனுமான பகவான் நர்த்தனஞ் செய்யவாரம்பித்தார். (26)

அவர் நர்த்தனஞ்செய்யவாரம்பித்ததைக் கண்ணுற்று அப்பொ ழுது அவரைச்சேர்ந்தவர்களான கந்தர்வர், ஸித்தர், தேவர், சார ணர், தேவஸ்திரீகள் ஆகிய இவர்கள் ஸந்தோஷத்துடன் மிருதங்கம், பணவம், ஆனகம் முதலியவாத்யங்களாலும் கீதங்களாலும், புஷ் போபஹாரங்களினாலும், ஸ்தோத்திரங்களினாலும் விரைவாகக் கொண்டாடினர். (27) ஹே அங்க! முக்கியங்களான *நூறுதலைகளை

---

* दशार्धशीर्ण:=என வேறுபாடங்கொண்டு காளியனுடைய தலை

च्छिरो न नमतेऽङ्ग शतैकशीर्ष्णस्तत्तन्ममर्द खलदण्डधरोऽङ्घ्रिपातैः । क्षीणायुषो भ्रमत उल्बणमास्यतोऽसृङ्नस्तो वमन्परमकश्मलमाप नागः ॥२८॥ तस्याक्षिभिर्गरलमुद्वमतः शिरस्सु यद्यत्समुन्नमति निःश्वसतो रुषोच्चैः । नृत्यन्पदानुनमयन्दमयांबभूव पुष्पैः प्रपूजित इवेह पुमान्पुराणः ॥ २९ ॥ तच्चित्रताण्डवविरुग्णफणातपत्रो रक्तं मुखैरुरु वमन्नृप भग्नगात्रः । स्मृत्वा चराचरगुरुं पुरुषं पुराणं नारायणं तमरणं मनसा जगाम ॥ ३० ॥ कृष्णस्य गर्भजगतोऽतिभरावसन्नं पार्ष्णिप्रहारपरिरुग्णफणातपत्रम् । दृष्ट्वाहिमा-

---

யுடையவனும், குறைந்த ஆயுளையுடையவனுயினுங்கூட இங்குமங்கும் சுத்துகின்றவனுமான காளியனுடைய எந்த எந்தத்தலை வணங்கவில்லேயோ அந்த அந்தத்தலேயை துஷ்டர்களைச் சிக்ஷிப்பவனான கிருஷ்ணன் கால்கொண்டு உதைத்தலினல் தொகைத்தார். முகத்தினின்றும் மூக்கினின்றும் அதிகமான ரக்தத்தைக் கக்கிக்கொண்டு காளியன் மோஹத்தையடைந்தான். (28) திரும்பவும் கோபத்தினல் அதிகமாகப் பெருமூச்சுவிடுகின்றவனும், கண்களினல் விஷத்தைக் கக்குகின்றவனுமான அந்தக்காளியனுடைய தலைகளுள் எந்த எந்தத்தலை உயரக்கிளம்புகிறதோ அதை அதை நர்த்தனஞ்செய்யும் பகவான் காலுதையினல் வணங்கச் செய்துகொண்டு இந்தச் சமயத்தில் ஸந்தோஷித்த கந்தர்வாதிகளால் புராண புருஷனும் சேஷசாயியுமான நாராயணன் போல புஷ்பங்களால் பூஜிக்கப்பட்டவராய் அடக்கிவிட்டார். (29) ஹேநருப! அவரது விசித்திரமான நர்த்தனத்தினல் ஒடிந்த குடைபோன்ற படத்தையுடையவனும் வாய்களினல் அதிகமான ரக்தத்தைக் கக்குகின்றவனும், நொறுங்கின உடலையுடையவனுமான காளியன் அவரைச்சராசர குருவும் புராணபுருஷனுமான நாராயணனக வெண்ணிக் கொண்டு மனத்தினல் சரணமடைந்தான். (30) காளியன், கர்ப்பத்தில் ஜகத்தையுடையவரான ஸ்ரீகிருஷ்ணனுடைய அதிகச் சுமையினல் தளர்ச்சியை யடைந்தவனும் குதிகாலுதைகளினல் நன்கு நொறுங்கின குடைபோன்ற

---

கள் ஐந்து எனச் சிலர் சொல்லுகின்றனர் "காளியன் பொய்கை கலங்கப் பாய்ந்திட்டு அவன் நீண்முடி ஐந்திலும் நின்று நடஞ்செய்து" எனப் பெரியாழ்வார் திருமொழியிலும் இவ்விதமே கூறப்பட்டிருக்கிறது.

द्यमुपसेदुरमुष्य पत्न्य आर्ताः श्लथद्वसनभूषणकेशबन्धाः ॥ ३१ ॥ तास्तं सुविग्नमनसोऽथ पुरस्कृतार्भाः कायं निधाय भुवि भूतपतिं प्रणेमुः । साध्व्यः कृताञ्जलिपुटाः शमलस्य भर्तुर्मोक्षेप्सवः शरणदं शरणं प्रपन्नाः ॥३२॥

नागपत्न्य ऊचुः—न्याय्यो हि दण्डः कृतकिल्बिषेऽस्मिंस्तवावतारः खलनिग्रहाय । रिपोः सुतानामपि तुल्यदृष्टेर्धत्से दमं फलमेवानुशंसन् ॥ ३३ ॥ अनुग्रहोऽयं भवता कृतो हि नो दण्डोऽसतां ते खलु कल्मषापहः ।

---

படங்களை யுடையவனுமாக இருப்பதைக் கண்டு இவனது பத்னிகள் துக்கிதர்களாகவும் அவிழ்ந்த வஸ்திரம் நகை தலைமுடி இவற்றை யுடையவர்களாகவும் கொண்டு ஆத்யனை ஸ்ரீகிருஷ்ணனைச் சரணமடைந்தனர். (31) பிறகு பதிவ்ரதைகளான அவர்கள் நன்கு கலங்கின மனமுள்ளவர்களாகவும் குழந்தைகளை முன்விட்டுக் கொண்டும் இருகைகளையும் கூப்பிக்கொண்டும் பாபியாயினும் பர்த்தாவினது மோக்ஷத்தில் (விடுதலையில்) விருப்பமுள்ளவர்களாகவும் கொண்டு யாவர்க்கும் ஆஶ்ரயத்தைத் தருபவரும் பூதபதியுமான அவரைச்சரணாகதி பண்ணினவர்களாய் உடம்பை பூமியில் வைத்து வணங்கினர். (32)

(1) நாகபத்னிகள் சொல்லத்தொடங்கினர்—சத்துருவிஷயத்திலும் புத்திரர்கள் விஷயத்திலும் துல்லியமான திருஷ்டியையுடைய தாங்கள் அபராதஞ்செய்தவனை இவன் விஷயத்தில் செய்த சிக்ஷையானது நியாயவழிதவறாததேயாகும். தங்களுடைய அவதாரமானது துஷ்டநிக்ரஹத்துக்கு வேண்டியேற்பட்டதன்றோ. தாங்கள் பயனை (கர்மபலனை)யாலோசித்து சிக்ஷையைக்கொடுக்கின்றீர். (33) *அஸா

---

(1) இதுமுதல் 21 சுலோகங்களால் பகவானை நாகபத்னிகள் ஸ்துதிக்கின்றனர். அவற்றுள் 33 முதல் 38 முடியவுள்ள 6 சுலோகங்களால் தனது கணவனுக்குப் பகவான் செய்த சிக்ஷையை அனுமோதனஞ் செய்தும், பிறகு 39முதல் 48முடியவுள்ள 10 சுலோகங்களால் பகவானை ஸ்துதித்தும், பிறகு 49 முதல் 54 முடியவுள்ள 5 சுலோகங்களால் பாகவானை ப்ரார்த்தனைசெய்தும் பேசுகின்றனர்.

* முந்தின சுலோகத்தால் நிக்ரஹங்கூட அனுக்ரஹத்தின் பொருட்டே என்று சொல்லப்பட்டது. இந்தச் சுலோகத்தால் தாங்கள் செய்தது அனுக்ரஹமே யொழிய நிக்ரஹமன்று என்று சொல்லப்படுகிறது.

**यद्दन्दशूकत्वममुष्य देहिनः क्रोधोऽपि तेऽनुग्रह एव संमतः॥ ३४॥ तपः सुतप्तं किमनेन पूर्वं निरस्तमानेन च मानदेन। धर्मोऽथ वा सर्वजनानुकम्पया यतो भवांस्तुष्यति सर्वजीवः॥ ३५॥ कस्यानुभावोऽस्य न देव विद्महे तवाङ्घ्रिरेणुस्पर्शाधिकारः। यद्वाञ्छया श्रीर्ललनाचरत्तपो विहाय कामान्सुचिरं धृतव्रता॥ ३६॥ न नाकपृष्ठं न च सार्वभौमं न पारमेष्ठ्यं न रसाधिपत्यम्। न योगसिद्धीरपुनर्भवं वा वाञ्छन्ति यत्पादरजःप्रपन्नाः॥ ३७॥ तदेष नाथाप दुरापमन्यैस्तमोजनिः क्रोधवशोऽप्यहीशः।**

---

துக்களான எங்களுக்கும் எங்கள் பர்த்தாவான இந்த ஜீவனுக்கும் எந்தப்பாபத்தினல் பாம்புப்பிறவி ஏற்பட்டதோ அத்தகைய பாபத்தைப்போக்கக்கூடிய உம்மால் செய்யப்பட்ட இந்தச்சிக்ஷையானது உமது அனுக்கிரஹ ரூபமேயாகும். உமது கோபமுங்கூட அனுக்கிரஹமென்றே எண்ணப்படுகிறது. (34) தான் பூஜிக்கத்தக்கவன் என்ற எண்ணமற்றவனும் பிறரைப் பூஜிப்பவனுமான இந்தக் காளியனல் முந்தின பிறவியில் ஸர்வாத்மாவான தாங்கள் எதனுல் சந்தோஷப்படக்கூடுமோ அத்தகைய என்ன தவஞ்செய்யப்பட்டதோ? அல்லது ஸர்வஜனங்களிடத்திலும் தயையுடன் என்ன தர்மம் செய்யப்பட்டதோ? (35) ஹே தேவ! உத்தம ஸ்திரீயான லக்ஷ்மீயானவள் எந்தச் சரண தூளியின் ஸ்பர்சத்தில் அதிகாரம் பெறும் விருப்பத்துடன் வேறு ஆசையை யொழித்து விரதத்தை யனுஷ்டிப்பவளாய் வெகுகாலந் தவஞ்செய்தாளோ தங்களுடைய அந்தச் சரண தூளியின் ஸ்பர்சாதிகாரமானது இந்தக் காளியனுக்கு எதன் மஹிமையாலேற்பட்டதென்று நாங்களறிந்திலேம். (36) ஹேநாத! எந்தப் பாததூளியை யடைந்தவர்கள் ஸ்வர்க்கத்தையும் விரும்புவதில்லையோ ,ஸார்வபௌமபதவியையும் (அகண்ட பூமண்டலாதிபதியாகவிருத்தலையும்) விரும்புவதில்லையோ, ப்ரம்ஹபட்டத்தையும் விரும்புவதில்லையோ, பாதாளலோகாதிபத்யத்தையும் யோக சித்திகளையும் விரும்புவதில்லையோ, மோக்ஷத்தையும் விரும்புவதில்லையோ, ஸம்ஸார சக்கிரத்தில் சுழலுகின்றவனும் எதை விரும்புகின்றவனுமான ஜீவனுக்கு ஸர்வஸம்பத்தும் ப்ரத்யக்ஷமோ அந்தப் பாததூளியைத் தமோகுணமூலமுண்டானவனும் கோபத்துக்கு வசப்பட்டவ

**संसारचक्रे भ्रमतः शरीरिणो यदिच्छतः स्याद्विभवः समक्षः ॥ ३८ ॥ नमस्तुभ्यं भगवते पुरुषाय महात्मने। भूतावासाय भूताय पराय परमात्मने ॥ ३९ ॥ ज्ञानविज्ञाननिधये ब्रह्मणेऽनन्तशक्तये। अगुणायाविकाराय नमस्ते प्राकृताय च ॥ ४० ॥ कालाय कालनाभाय कालावयवसाक्षिणे। विश्वाय तदुपद्रष्ट्रे तत्कर्त्रे विश्वहेतवे ॥४१॥ भूतमात्रेन्द्रियप्राणमनोबुद्ध्याश-**

---

னுமான இந்தக் காளியன்கூட அடைந்துவிட்டானன்றோ. (37–38) அசிந்த்யமான ஐஸ்வர்யாதி குணங்களுள்ளவரும், ஹிருதய குஹை களில் அந்தர்யாமி ரூபத்துடனிருப்பவரும், இவ்விதமாயினும் எவ் விதப் பரிச்சேதமும் (குறைவும்) அற்றவரும், ஆகாசம் முதலிய பூதங்களுக்கு ஆஸ்ரயமானவரும், எல்லாவற்றுக்கும் முந்தியே இருப்பவரும், ஸர்வகாரணமானவரும், காரணப் பொருளையும் கட ந்து நிற்பவருமான உமக்கு நமஸ்காரம். (39) அறிவுருவத்தாலும் சித்சக்தியினாலும் நிறைவுபெற்றவரும், ப்ரம்ஹமாக இருப்பவரும், அளவுகடந்த சக்திவாய்ந்தவரும், எவ்விதக் குணஸம்பந்தமுமற்றவ ரும், எவ்விதவிகாரமும் (மாறுதலும்) அற்றவரும், ப்ரகிருதி ப்ரேரக ருமான உமக்கு நமஸ்காரம்.* (40) காலஸ்வரூபரும், காலசக்திக்கு ஆஸ்ரயமானவரும், காலத்தின் அவயவங்களுக்கு (ஸிருஷ்டியாதி ஸமயங்களுக்கு) ஸாக்ஷியானவரும், (1)ப்ரபஞ்சரூபமாக இருப்பவ ரும், ப்ரபஞ்சத்துக்கு ஸாக்ஷியானவரும், ப்ரபஞ்சத்துக்குக் கர்த் தாவும், (2)எல்லாக்காரக ரூபமாகவுமிருப்பவருமான உமக்கு நமஸ் காரம். (41)

---

* எவ்வித குணஸம்பந்தமுமற்றிருப்பதுபற்றி அவிகாரமான (எவ் விதமாறுதலுமற்ற) ப்ரம்ஹமும், அறிவுருவமாகவிருப்பதுபற்றி காரண மான பொருள்களைக் கடந்தவரும், ப்ரகிருதி ப்ரேரகரானதுபற்றி அனந்த (அளவுகடந்த) சக்தியுள்ளவரும், விக்ஞானத்துக்கு (சித்சக்திக்கு) இருப்பி டமாக இருப்பதுபற்றி ஸர்வத்துக்கும் காரணமானவரும், அவ்விருவுருவ மானவருமான உமக்கு நமஸ்காரம் என இதனால் தெரிவிக்கப்பட்டது. (1) ஸர்வப்ரபஞ்சாதிஷ்டான சின்மாத்ர ஸ்வரூபமானவர் என்பது பொ ருள். (2) பொதுவாய் எந்த வேலைக்கும் ஒருவன், ஒன்றை, ஒன்றினால், ஒன்றையும் பொருட்டு, ஓரிடத்திலிருந்து, ஓரிடத்தில், செய்கிறான் என் பதாய் 6 ஆறுவிதமான பொருளின் உதவி வேண்டிவருகின்றது. இவை

**यात्मने। त्रिगुणेनाभिमानेन गूढस्वात्मानुभूतये ॥४२॥ नमोऽनन्ताय सूक्ष्माय कूटस्थाय विपश्चिते। नानावादानुरोधाय वाच्यवाचकशक्तये ॥ ४३ ॥**

**नमः प्रमाणमूलाय कवये शास्त्रयोनये। प्रवृत्ताय निवृत्ताय निगमाय नमो नमः॥ ४४ ॥ नमः कृष्णाय रामाय वसुदेवसुताय च। प्रद्युम्नायानिरुद्धाय सात्वतां पतये नमः॥ ४५ ॥ नमो गुणप्रदीपाय गुणात्मच्छादनाय च।**

---

பஞ்சபூததன்மாத்ரைகள், இந்திரியங்கள், ப்ராணன்கள், மனஸ், புத்தி, சித்தம் இவற்றின் ரூபமாக இருப்பவரும், முக்குணரூபமான அபிமானத்தினால் மறைக்கப்பட்ட தனது அம்சபூதர்களான ஜீவர்களின் அனுபூதிரூபமான க்ஞானத்தையுடையவரும், அஹங்காரமற்றிருப்பதுபற்றி அனந்தரும், திருஶ்யமாக இல்லாதிருப்பதுபற்றி ஸூக்ஷ்மமானவரும், உபாதியினாற் செய்யப்பட்ட விகாரமற்றிருப்பதுபற்றி (1)கூடஸ்தரும், அனதுபற்றியே ஸர்வக்ஞரும், இல்லையென்றும் இருக்கென்றும் ஸர்வக்ஞனென்றும் கிஞ்சித்ஞனென்றும் பத்தனென்றும் முக்தனென்றும் ஒன்றென்றும் பலவென்றுமான பற்பல வியவஹாரங்களை மாயையினால் அனுவர்த்திப்பவரும், பெயரென்றும் பெயருள்ளதென்றுமான சக்திபேதத்தையொட்டிப் பல விதமாகத் தோன்றுகின்றவருமான உமக்கு நமஸ்காரம். (42–43) கண் முதலிய அறிவு கருவிகளுக்கு மூலமானவரும் (அறிதற்குரிய திறமையைத் தருபவரும்) கவியும் (அவற்றை எதிர்பாராத க்ஞானமுள்ளவரும்) ருக்வேதாதியான சாஸ்திரங்களை வெளியிட்டவரும், பிரவிருத்தி காரணரும், நிவிருத்தி காரணரும், லயகாரணருமான உமக்கு அடிக்கடி நமஸ்காரம். (44) கிருஷ்ணனும், ஸங்கர்ஷணனும், சுத்தஸத்வகுணத்தில் ப்ரகாசத்தையடைபவரும், ப்ரத்யும்னரும், அநிருத்தரும், (அதாவது: நான்கு மூர்த்தி ரூபமானவரும்) இவற்றையுபாஸிப்பவர்க்கு ஸாலோக்யம் முதலிய முக்தியைத் தந்து காப்பவருமான உமக்கு அடிக்கடி நமஸ்காரம். (45) அந்தக்கர

---

கணே காரகங்களாகும். அதாவது: காரியமேற்படுவதற்கு இன்றியமையாத பொருள் காரகம் என்றேற்பட்டது.

(1) தன்னுடன் சேர்ந்த பொருளுக்குண்டாகும் மாறுதலுக்குத் தான் காரணமாயினும் தன்னிடத்தில் அத்தகைய மாறுதலெதுவுமற்ற பொருள் கூடம் எனப்படும். அது போன்றவரும் என்பது பொருள்.

गुणवृत्त्युपलक्ष्याय गुणद्रष्ट्रे स्वसंविदे ॥ ४६ ॥ अव्याकृतविहाराय सर्वव्याकृतसिद्धये। हृषीकेश नमस्तेऽस्तु मुनये मौनशीलिने ॥ ४७ ॥ परावरगतिज्ञाय सर्वाध्यक्षाय ते नमः। अविश्वाय च विश्वाय तद्द्रष्ट्रेऽस्य च हेतवे ॥४८॥ त्वं ह्यस्य जन्मस्थितिसंयमान्विभो गुणैरनीहोऽकृत कालशक्तिधृक्। तत्तत्स्वभावान्प्रतिबोधयन्सतः समीक्षयाऽमोघविहार ईहसे ॥४९॥

---

ணங்களை ப்ரகாசப்படுத்துகின்றவரும் உபாஸகர்களுக்கு விசித்ரமான பலன் தரவேண்டி தன்னை குணங்களினாலேயே மறைத்துக்கொண்டு பலவிதமாகத் தோன்றுகின்றவரும், அந்தக்கரணங்களின் விருத்திகளினால் காண்பிக்கப்படுகின்றவரும், குணங்களுக்கு ஸாக்ஷியும், குணங்களால் (அந்தக்கரணங்களால்) நேரில் காணக்கூடாதவருமான உமக்கு நமஸ்காரம். (46) ஊஹித்தறியவியலாத மஹிமையுள்ளவரும், எல்லாக் காரியங்களுக்கும் ப்ரகாசத்தைத் தரும்வாயிலாக உபலக்ஷண முறையால் காணக்கூடியவரும், ஹே ஹ்ருஷீகேச! (இந்திரிய ப்ரேரகரான ப்ரபோ!) ஆத்மா ராமனும், ஆத்மாராமத்தன்மையை ஸ்வரூபமாகச் கொண்டவருமான உமக்கு நமஸ்காரம் இருக்கட்டும். (47)

ஸ்தூல ஸூக்ஷ்மங்களான பொருளின் நிலையையறிந்தவரும், (எதிலும் பற்றற்றவரும்) ஸர்வத்துக்கும் அதிஷ்டாதாவும், ப்ரபஞ்சம் முடிந்தவிடமானவரும், ப்ரபஞ்சத்தோற்றத்துக்கு அதிஷ்டானமானவரும், ப்ரபஞ்சாத்யாஸம் அதன் அபவாதம் (மறுப்பு) இவற்றுக்கு ஸாக்ஷியாகவிருப்பவரும், ப்ரபஞ்சாத்யாஸாபவாதங்களுக்கு அவித்யா வித்யா மூலம் ஹேதுவாக (காரணமாக) இருப்பவருமான உமக்கு நமஸ்காரம். (48) *ஹே விபோ! வீண்போகாத சேஷ்டையையுடையவரே! நீர் அனாதியான காலசக்தியைத் தரித்தவராயும், ஸ்வரூபத்தில் எவ்விதமாறுதலுமற்றவராயுமிருந்துகொண்டும், ஈக்ஷண ஸங்கல்பத்தினால் ப்ரகிருதியிலொடுங்கி இருக்கின்ற அதனதன் ஸ்வபாவங்களை வெளிப்படுத்திக்கொண்டும் குணங்கள்

---

* இவ்விதம் 16 சுலோகங்களுள் 6 சுலோகங்களினால் சிக்ஷையை அனுமோதனஞ்செய்தும், 10 சுலோகங்களினால் நமஸ்கரித்தும், பகவத் ப்ரஸாதத்தை ஸம்பாதித்துக்கொண்டு, பின்னுள்ள 5 சுலோகங்களினால் ப்ரார்த்திக்கின்றனர்.

तस्यैव तेऽमूस्तनवस्त्रिलोक्यां शान्ता अशान्ता उत मूढयोनयः। शान्ताः प्रियास्ते ह्यधुनावितुं सतां स्थातुश्च ते धर्मपरीप्सयेहतः॥ ५० ॥ अपराधः सकृद्भर्त्रा सोढव्यः स्वप्रजाकृतः। क्षन्तुमर्हसि शान्तात्मन्मूढस्य त्वामजानतः ॥५१॥ अनुगृह्णीष्व भगवन्प्राणांस्त्यजति पन्नगः। स्त्रीणां नः साधु शोच्यानां पतिः प्राणः प्रदीयताम् ॥ ५२ ॥ विधेहि ते किंकरीणामनुष्ठेयं तवाज्ञया। यच्छ्रद्धयानुतिष्ठन्वै मुच्यते सर्वतोभयात् ॥ ५३ ॥

श्रीशुक उवाच—इत्थं स नागपत्नीभिर्भगवान्समभिष्टुतः। मूर्च्छितं भग्नशिरसं विससर्जाङ्घ्रिकुट्टनैः॥ ५४ ॥ प्रतिलब्धेन्द्रियप्राणः कालियः

---

மூலம் இந்த உலகின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைச் செய்கின்றீர். (49) ஆனதுபற்றி அந்த உமக்கே சாந்தமானவைகளும் (ஸத்வகுண ப்ரதானங்களும்) அசாந்தமானவைகளும் (ரஜோகுண ப்ரதானங்களும்) மூட யோனிகளு (தமோகுண ப்ரதானங்களு) மான மூவ்வுலகிலுமுள்ள இவை சரீரங்களாகவாகும் (விளையாட்டுக் கருவிகளாகவாகும்.) ஆயினும் ஸாதுக்களின் தர்மத்தைப் பரிபாலனஞ்செய்யவேண்டி ப்ரவிருத்திப்பவரும், ஆனதுபற்றி அவர்களைக் காக்க முன்வந்திருப்பவருமான உமக்கு சாந்தங்களான (ஸத்வ குண ப்ரதானங்களான) வைகளே இப்பொழுது ப்ரியங்களாகவாகின்றன. (50) ஹே சாந்தாத்மன்! பர்த்தாவான நீர் சொந்த ப்ரஜையினால் செய்யப்பட்ட குற்றத்தை ஒருதடவை பொறுத்துக்கொள்ளவேண்டும். உம்மை அறியாதவனும் மூடனுமான இந்தக் காளியன் விஷயத்தில் பொறுக்கவேண்டியவராகிறீர். (51) ஹே பகவன்! அனுக்கிரஹிப்பீராக. காளியன் ப்ராணன்களை விடுகிறான். நன்கு இரக்கங்காட்டத் தக்கவர்களும் ஸ்திரீகளுமான எங்களுக்குப் பதியாகிற ப்ராணனைத் திருப்பித்தரவேண்டும். (52) எதைச் சிரத்தையுடன் அனுஷ்டிப்பவன் ஸம்ஸாரத்தினின்றும் விடுபடுவானோ உமது ஆக்ஞையினால் அனுஷ்டிக்கக்கூடிய (அத்தகைய) காரியத்தை வேலைக்காரிகளான எங்களுக்குக் கட்டளையிடுவீராக. (53)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—இவ்விதம் நாகபத்னிகளால் நன்கு ஸ்துதிக்கப்பட்ட அந்தப் பகவான் காலின் உதைகளினால் ஒடிந்த தலையையுடையவனும் மயக்கத்தையடைந்தவனுமான காளியனை

शनकैर्हरिम्। कृच्छ्रात्समुच्छ्वसन्दीनः कृष्णं प्राह कृताञ्जलिः॥ ५५॥ कालिय उवाच—वयं खलाः सहोत्पत्त्या तामसा दीर्घमन्यवः। स्वभावो दुस्त्यजो नाथ लोकानां यदसद्ग्रहः॥५६॥ त्वया सृष्टमिदं विश्वं धातुर्गुणविसर्जनम्। नानास्वभाववीर्यौजोयोनिबीजाशयाकृति॥ ५७॥ वयं च तत्र भगवन्सर्पा जात्युरुमन्यवः। कथं त्यजामस्त्वन्मायां दुस्त्यजां मोहिताः स्वयम्॥५८॥ भवान् हि कारणं तत्र सर्वज्ञो जगदीश्वरः। अनुग्रहं निग्रहं वा मन्यसे तद्विधेहि नः॥ ५९॥ श्रीशुक उवाच—इत्याकर्ण्य वचः प्राह भगवान्कार्यमानुषः। नात्र स्थेयं त्वया सर्प समुद्रं याहि मा चिरम्। स्व-

---

விட்டுவிட்டார். (54) திரும்பவும் அடையப்பட்ட இந்திரியம் ப்ராணன் இவற்றையுடைய காளியன் தீனனுய் கஷ்டத்துடன் பெருமூச்சுவிட்டுக்கொண்டும், இருகைகளையும் கூப்பிக்கொண்டும் ஹரியான கிருஷ்ணனைப்பார்த்து மெள்ளச் சொல்லத்தொடங்கினுன். (55) காளியன் சொல்லுகிறுன்—ஹே நாத! ஜனங்களுக்கு எதனுல் அஸத்தான தேஹாதிகளில் நான் என்ற அபிமானம் ஏற்படுகிறதோ அந்த ஸ்வபாவம் சுளுவில் விடுவதற்கியலாததன்ருே. நாங்களோ ஸிருஷ்டிகாலந்தொடங்கியே தமோகுணம் வாய்ந்தவர்களும் ஆனதுபற்றியே நீண்ட கோபமுள்ளவர்களும், துஷ்டர்களுமாவோம். (56) ஹே நாத:! குணங்களால் பற்பலவிதமாக ஸிருஷ்டிக்கப்படுவதும், பல்வேறுபட்ட ஸ்வபாவம், வீர்யம், சக்தி, யோனி, பீஜம், மனது, ஆகிருதி இவற்றையுடையதுமான இந்த ப்ரபஞ்சமானது உம்மால் ஸிருஷ்டிக்கப்பட்டது. (57) ஹே பகவன்! அவற்றுள் பாம்புகளான நாங்களோ பிறவியினுலேயே அதிகமான கோபமுள்ளவர்களாவோம். ஸ்வயம் மோஹத்தையடைந்த நாங்கள் விடுதற்கியலாத உமது மாயையை எவ்விதம் விடுவோம். (58) ஸர்வக்ஞனும் ஜகதீஸ்வரனுமான நீரன்ருே அம்மாயையை விடும் விஷயத்தில் காரணமாகின்றீர். அனுக்ரஹத்தையோ நிக்ரஹத்தையோ எதை விரும்புகின்றீரோ அதை எங்களுக்குச் செய்வீராக. (59) ஸ்ரீசுகர் சொல்லலுற்ருர்—இவ்விதம் அவன் வார்த்தையைக்கேட்டு காரியத்துக்குவேண்டி மனுஷ்யனுகவவதரித்த பகவான் "ஹேஸர்ப்ப! நீ இந்தவிடத்தில் இருத்தல் தகாது. சொந்த க்ஞாதி,

ह्याप्य यदाराध्यो गोनृभिर्भुज्यते नदी ॥ ६० ॥ य एतत्संस्मरेन्मर्त्यस्तुभ्यं मदनुशासनम् । कीर्तयन्नुभयोः संध्योर्न युष्मद्भयमाप्नुयात् ॥ ६१ ॥ योऽस्मिन्स्नात्वा मदाक्रीडे देवादींस्तर्पयेज्जलैः । उपोष्य मां स्मरन्नर्चेत्सर्वपापैः प्रमुच्यते ॥ ६२ ॥ द्वीपं रमणकं हित्वा ह्रदमेतमुपाश्रितः । यद्भयात्स सुपर्णस्त्वां नाद्यान्मत्पदलाञ्छितम् ॥ ६३ ॥ श्रीशुक उवाच—एवमुक्तो भगवता कृष्णेनाद्भुतकर्मणा । तं पूजयामास मुदा नागपत्न्यश्च सादरम् ॥ ६४ ॥ दिव्याम्बरस्रङ्मणिभिः परार्ध्यैरपि भूषणैः । दिव्यगन्धानुलेपैश्च महत्योत्पलमालया ॥ ६५ ॥ पूजयित्वा जगन्नाथं प्रसाद्य गरुडध्वजम् । ततः प्रीतोऽभ्यनुज्ञातः परिक्रम्याभिवन्द्य तम् ॥ ६६ ॥ सकलत्रसुहृत्पुत्रो द्वीपमध्ये

---

புத்திரன், பத்னி இவர்களுடன்கூட விரைவாகச்சமுத்திரம் போய்ச் சேரவேண்டும். நதியானது பசுக்களாலும் மனிதர்களாலும் அனு பவிக்கப்படுகிறது. உனக்கு நான் செய்த இந்தச்சிக்ஷையை எந்த மனிதன் ஸ்மரிப்பானே, எவன் இருஸந்தியா காலங்களிலும் சொல் லுவானே அவன் உங்களிடமிருந்து (பொதுவாகப் பாம்பினிடமி ருந்து) பயத்தைபடையமாட்டான். எவன் நான் விளையாடின இம் மடுவில் ஸ்னானஞ்செய்து ஜலங்களினுல் தேவாதிகளுக்குத் தர்ப்ப ணஞ்செய்வானே, எவன் உபவாஸமிருந்து என்னை நினைத்துக் கொண்டு அர்ச்சிப்பானே, அவன் எல்லாப்பாபங்களினுலும் விடுபடு கிறுன். எவனிடமிருந்துண்டான பயத்தினுல் ரமணகமென்ற தீவை விட்டு இம்மடுவை வந்தடைந்தாயோ அந்தக் கருடன் எனது காலடி யினுல் அடையாளமிடப்பட்ட உன்னைச்சாப்பிடமாட்டான்'' என் ருர். (60–63) ஸ்ரீசுகர் சொல்லலுற்ருர்—அத்புதமான கர்மாவை யுடையவரும் பகவானுமான கிருஷ்ணனுல் இவ்விதஞ் சொல்லப் பட்ட காளியனும் நாகபத்னிகளும் சந்தோஷங்கொண்டு ஆதரவு டன் திவ்வியமான வஸ்திரம், மாலை, மணிகள், விலையுயர்ந்த ஆபர ணங்கள், திவ்பமான சந்தனப்பூச்சுகள், உயர்ந்த நீலோத்பலமாலை இவற்ருல் அவரைப் பூஜித்த ார். (64–65) ஜகன்னுதனைப் பூஜித் துப் பிறகு கருடத்வஜனை வேண்டிக்கொண்டு பிறகு ப்ரீதியை யடைந்தவனுய் அவரை வலம் வந்து நமஸ்கரித்து அவரால் விடை யளிக்கப்பட்டவனுய் பத்னி புத்திர மித்திரர்களுடன்கூட ரமணகத்

जगाम ह। तदैव साऽमृतजला यमुना निर्विषाऽभवत्। अनुग्रहाद्भगवतः क्रीडमानुषरूपिणः ॥ ६७ ॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्द्धे कालियनिर्यापणं नाम षोडशोऽध्यायः ॥ १६ ॥

---

தீவின் நடுவில் போய்ச்சேர்ந்தான். (66) அப்பொழுதே அந்த யமுனையானது கிரீடாமானுஷ ரூபியான பகவானுடைய அனுக்கிரஹத்தினல் விஷமற்றதாகவாகி அமுதத்துக்கொப்பான ஜலமுள்ளதாகவுமாயிற்று. (67) (எ-று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண தசமஸ்கந்த பூர்வார்த்தத்தில் காளியநிர்யாபணம் என்ற பதினறாவது அத்தியாயம் முற்றிற்று.

## நாராயணீயம்.

अथ वारिणि घोरतरं फणिनं प्रतिवारयितुं कृतधीर्भगवन्।
द्रुतमारिथ तीरगनीपतरुं विषमारुतशोषितपर्णचयम् ॥ १८४ ॥

(ப-ரை) हे भगवन्!=ஹே பகவன்! अथ=பிறகு वारिणि=ஜலத்திலுள்ள घोरतरम्=மிக்க பயங்கரமான फणिनम्=பாம்பை प्रतिवारयितुम्=விரட்டுவதற்காக कृतधीः=நிஶ்சிதமான புத்தியையுடையவராய் विषमारुतशोषितपर्णचयम्=விஷக்காற்றினல் உணங்கிப்போன இலைக்கூட்டங்களையுடையதான तीरगनीपतरुम्=கரையிலுள்ள நீப மரத்தை द्रुतम्=வேகமாக आरिथ=அடைந்தீர். (184) (எ-று)

अधिरुह्य पदांबुरुहेण च तं नवपल्लवतुल्यमनोज्ञरुचा।
ह्रदवारिणि दूरतरं न्यपतः परिघूर्णितघोरतरङ्गगणे ॥ १८५ ॥

(ப-ரை) नवपल्लवतुल्यमनोज्ञरुचा=மரத்திலுள்ள புதிதானதளிர்களுக்கொப்பாக அழகிய காந்தியையுடையதான पदांबुरुहेण=சரணாரவிந்தத்தினல் तम्=அந்த மரத்தில் अधिरुह्य च=ஏறி परिघूर्णितघोरतरङ्गगणे=நாலாபக்கத்திலும் அசைக்கப்பட்டதும் ஆனதுபற்றி பயங்

காமுமான அலைக்கூட்டத்தையுடைய **ह्रदवारिणि**=மடுவின் ஜலத்தில் **दूरतरम्**=வெகு தூரத்தில் **न्यपतः**=குதித்தீர். (185) (எ-று)

**भुवनत्रयभारभृतो भवतो गुरुभारविकंपिविजृंभिजला ।**
**परिमज्जयति स्म धनुश्शतकं तटिनी झटिति स्फुटघोषवती ॥१८६॥**

(ப-ரை) **भुवनत्रयभारभृतः** = மூவுலகங்களின் பாரத்தைச் சுமக்கின்ற **भवतः**=உம்முடைய **गुरुभारविकंपिविजृंभिजला**=அதிக மான பாரத்தினுல் மிக்கவசைகின்றதும் பெருகி வழிகின்றதுமான ஜலத்தையுடையதும் **स्फुटघोषवती**=இரைந்த சப்தத்தையுடையது மான **तटिनी**=நதியானது **झटिति**=சீக்கிரமாக **धनुश्शतकम्**=நாறுவிற் கடை தூரத்தை **परिमज्जयति स्म**=முழுகும்படி செய்துவிட்டது.

**अथ दिक्षु विदिक्षु परिक्षुभितभ्रमितोदरवारिनिनादभरैः ।**
**उदकादुदगादुरगाधिपतिस्त्वदुपान्तमशान्तरुषान्धमनाः ॥ १८७ ॥**

(ப-ரை) **अथ**=பிறகு **दिक्षु**=கிழக்கு முதலிய திக்குகளிலும், **विदिक्षु**=ஆக்னேயம் முதலிய கோண திக்குகளிலும், **परिक्षुभितभ्रमितोदरवारिनिनादभरैः**=நாலா பக்கத்திலும் கலங்கினதும், சுழலுள் ளதுமான உள் பிரதேசத்தையுடைய ஜலத்தினின்றுண்டான அதிக மான சப்தங்களினுல் **उरगाधिपतिः**=காளியன் **अशान्तरुषा**=அதிக மான கோபத்தினுல் **अन्धमनाः**=தன்னிலையிழந்த மனத்தையுடைய வனுய், **उदकात्**=ஜலத்தினின்றும் **त्वदुपान्तम्**=உமதருகில் **उदगात्**= வெளிக்கிளம்பினுன். (187) (எ-று)

**फणशृङ्गसहस्रविनिःसृमरज्वलदग्निकणोग्रविषांबुधरम् ।**
**पुरतः फणिनं समलोकयथा बहुशृङ्गिणमञ्जनशैलमिव ॥ १८८ ॥**

(ப-ரை) **फणशृङ्गसहस्रविनिःसृमरज्वलदग्निकणोग्रविषांबुधरम्** = ஆயிரம் படங்களின் நுனியினின்றும் பெருகுகின்றதும் ஜ்வலிக் கின்ற நெருப்புப் பொறிகளையுடையதும் ஆனதுபற்றியே உக்கிரமு மான விஷ மயமான ஜலத்தைத் தரிக்கின்றவனும் **बहुशृङ्गिणम्**= வெகு சிகரங்களையுடைய **अञ्जनशैलमिव**=மை மலையைப் போலிருப் பவனுமான **फणिनम्**=பாம்பை **पुरतः**=எதிரில் **समलोकयथाः**=பார்த் தீர். (188) (எ-று)

**ज्वलदक्षिपरिक्षरदुग्रविषश्वसनोष्मभरः स महाभुजगः ।**
**परिदश्य भवन्तमनन्तबलं समवेष्टयदस्फुटचेष्टमहो ॥ १८९ ॥**

(ப—ரை) ज्वलदक्षिपरिक्षरदुग्रविषश्वसनोष्मभर: = ஜ்வலிக்கின்ற கண்களையுடைத்தாயிருக்கும்படி நாலா பக்கத்திலும் சிதறுகின்ற உக்கிரமான விஷக்காற்றின் அதிகமான சூட்டையுடையவனுன स:=அந்த, महाभुजग:=பெரிய பாம்பானது भवन्तम्=உம்மை परिदश्य=நாலாபக்கத்திலும் கடித்து अनन्तबलम्=அதிகமான பலமுள்ளவரும் ஆயினும் अस्फुटचेष्टम=தெளிவான சேஷ்டையற்றவருமான உம்மை समवेष्टयत्=நன்கு சுற்றிக்கொண்டான். अहो=இது வெகு கஷ்டமாகவிருந்தது. (189) (எ—று)

अविलोक्य भवन्तमथाकुलिते तटगामिनि बालकधेनुगणे ।
व्रजगेहतलेऽप्यनिमित्तशतं समुदीक्ष्य गता यमुनां पशुपा: ॥१९०॥

(ப—ரை) अथ=பிறகு भवन्तम्=உம்மை, अविलोक्य=காணுமல் तटगामिनि=கரையையடைந்த बालकधेनुगणे=குழந்தைகளுடையவும், பசுக்களுடையவும் கூட்டமானது आकुलिते = கலங்கினபொழுது पशुपा:=கோபாலர்கள் व्रजगेहतले=கோகுலத்திலுள்ள வீட்டுப்ரதேசத்தில் अनिमित्तशतम्=நூற்றுக்கணக்கான அசுபக்குறிகளை समुदीक्ष्य=கண்ணுற்று यमुनाम्=யமுனையை गता:=அடைந்தனர். (190)

अखिलेषु विभो भवदीयदशामवलोक्य जिहासुषु जीवभरम् ।
फणिबन्धनमाशु विमुच्य जवादुदगम्यत हासजुषा भवता ॥ १९१ ॥

(ப—ரை) विभो !=ஹேவிபுவே! भवदीयदशाम्=உம்முடையதான நிலையை अवलोक्य=கண்டு अखिलेषु=யாவரும் *जीवभरम्=ஜீவச்சுமையை जिहासुषु=விடவெண்ணங்கொண்டபொழுது फणिबन्धनम्=பாம்பின்கட்டை आशु=சீக்கிரமாக विमुच्य=விடுவித்துக்கொண்டு हासजुषा=மந்தஹாஸத்தையடைந்த भवता=உம்மால் जवात्=வேகமாக उद्गम्यत=வெளிவரப்பட்டது. (191) (எ—று)

अधिरुह्य तत: फणिराजफणान् ननृते भवता मृदुपादरुचा ।
कलशिञ्जितनूपुरमञ्जुमिलत्करकङ्कणसङ्कुलसंक्वणितम् ॥ १९२ ॥

(ப—ரை) तत:=பிறகு फणिराजफणान्=காளியனது படங்களில் अधिरुह्य=ஏறிக்கொண்டு मृदुपादरुचा=மெதுவான (படங்களிலுள்ள

---

* உம்மைவிட்டுப் பிரிந்ததால் உயிருடனிருப்பதே அவர்களுக்குப் பெரும் சுமையாகத் தோன்றிற்று என்பது கருத்து.

நாகரத்தினங்களின் காந்திபட்டிருப்பதுபற்றி மிக்க அழகு பொருந்திய) பாதங்களின் காந்தியையுடையவரான भवता=உம்மால் कलशिञ्जितनूपुरमञ्जुमिलत्करकङ्कणसङ्कुलसंक्वणितम्=இனியசப்தம் வாய்ந்த பாதஸரத்தை யுடைத்தாயிருக்கும்படியும், (தாளம் போடவேண்டி) அழகாகச் சேர்ந்த கைகளிலுள்ள கங்கணங்களின் நெருக்கமான (அதிகமான) சப்தத்தையுடைத்தாயிருக்கும்படியும் ननृते=நர்த்தனஞ் செய்யப்பட்டது. (192) (எ–று)

जहृषुः पशुपास्तुतुषुर्मुनयो ववृषुः कुसुमानि सुरेन्द्रगणाः ।
त्वयि नृत्यति मारुतगेहपते परिपाहि स मां त्वमदान्तगदात् ॥१९३॥

(ப–ரை) हेमारुतगेहपते!=குருவாயூரிலுள்ள ஆலயத்தில் வஸிக்கும் நாத! त्वयि=நீர் नृत्यति=நர்த்தனஞ்செய்யுங்கால் पशुपाः=கோபாலர்கள் जहृषुः=சந்தோஷித்தனர். मुनयः=முனிகள் तुतुषुः=ஆனந்தத்தையடைந்தனர் सुरेन्द्रगणाः=தேவ ப்ரேஷ்டர்களின் கூட்டங்கள் कुसुमानि=புஷ்பங்களை ववृषुः=வர்ஷித்தன. ஆகவே सः=அந்த त्वम्=நீர் अदान्तगदात्=அடங்காத வியாதியினின்றும் माम्=என்னை परिपाहि=காப்பீராக. (193) (எ–று)

இவ்விதம் காளியமர்த்தனத்தில் காளியனுடைய தலையில் பகவான் செய்த நர்த்தன வர்ணனமென்ற ஐம்பத்தைந்தாவது தசகம் முற்றிற்று.

ருசிர

रुचिरकंपितकुण्डलमण्डलः सुचिरमीश ननर्तिथ पन्नगे ।
अमरताडितदुन्दुभिसुन्दरं वियति गायति दैवतयौवते ॥ १९४ ॥

(ப–ரை) हे ईश!=ஹேப்ரபோ! दैवतयौवते=தேவ ஸ்திரீகளின் கூட்டமானது अमरताडितदुन्दुभिसुन्दरम्=தேவர்களால் அடிக்கப்பட்ட துந்துபி என்ற வாத்தியத்தினால் அழகாக இருக்கும்படி वियति=ஆகாசத்தில் गायति=கானஞ்செய்யுங்கால் रुचिरकंपितकुण्डलमण्डलः=அழகாக இருக்கும்படி அசைக்கப்பட்ட குண்டலமண்டலத்தையுடையவராய் ननर्तिथ=நர்த்தனஞ்செய்தீர். (194) (எ–று)

नमति यद्यदमुष्य शिरो हरे परिविहाय तदुन्नतमुन्नतम् ।
परिमथन् पदपङ्करुहा चिरं व्यहरथाः करतालमनोहरम् ॥ १९५ ॥

(ப-ரை) हे हरे !=ஹே ஹரே! अमुष्य=இந்தக் காளியனுடைய यद्यत्=எந்தெந்த शिर:=தலையானது नमति=வணங்குகிறதோ तत्=அந்தந்தத்தலையை परिविहाय=விட்டு उन्नतमुन्नतम्=உயரவுயரத்தூக்கின தலையை पदपङ्करुहा=சரணாரவிந்தத்தினால் परिमथन्=உதைத்துக்கொண்டு करतालमनोहरम्=கைத்தாளத்தினால் அழகாகவிருக்கும்படி चिरम्=வெகுகாலம் व्यहरथा:=விளையாடினீர். (195) (எ-று).

त्वदवमञ्ननविभुग्नफणागणे गलितशोणितशोणितपाथसि ।
फणिपतावयसीदति सन्नतास्तदबलास्तव माधव पादयो: ॥ १९६॥

(ப-ரை) हे माधव !=ஹே மாதவ! फणिपतौ=ஸர்ப்பராஜனான காளியன் त्वदवमञ्ननविभुग्नफणागणे = உம்மால் உதைக்கப்பட்டதும், வணங்கினதுமான படங்களின் கூட்டத்தையுடையவனாகவும், गलितशोणितशोणितपाथसि=கக்கப்பட்ட ரக்தத்தினால் சிவந்ததாகச் செய்யப்பட்ட ஜலத்தையுடையவனாகவும், अवसीदति=கஷ்டத்தையடையுங்கால் तदबला:=அவனது பத்நிகள் तव=உம்முடைய पादयो:=கால்களில் सन्नता:=வணங்கினர். (196) (எ-று)

अयि पुरैव चिराय परिश्रुतत्वदनुभावविलीनहृदो हि ता:।
मुनिभिरप्यनवाप्यपथै: स्तवैर्नुनुवुरीश भवन्तमयन्त्रितम् ॥ १९७ ॥

(ப-ரை) अयि ईश !=ஹே ஈசனே! पुरैव=முன்னரே चिराय=வெகுகாலமாக परिश्रुतत्वदनुभावविलीनहृद:=கேட்கப்பட்ட உமது மஹிமையில் மூழ்கின மனதையுடையவர்களான ताहि=அவர்களோ मुनिभिरपि=ருஷிகளாலுங்கூட अनवाप्यपथै:=அடையவியலாத மார்க்கத்தையுடையவைகளான स्तवै:=ஸ்தோத்திரங்களினால் भवन्तम्=உம்மை अयन्त्रितम्=தங்கு தடையின்றி नुनुवु:=ஸ்துதித்தனர்.

फणिवधूजनभक्तिविलोकनप्रविकसत्करुणाकुलचेतसा ।
फणिपतिर्भवता च्युतजीवितस्त्वयि समर्पितमूर्तिरवानमत् ॥ १९८ ॥

(ப-ரை) हे अच्युत !=ஹே அச்யுத! फणिवधूजनभक्तिविलोकनप्रविकसत्करुणाकुलचेतसा=நாகபத்நீ ஜனங்களின் பக்தியைக்கண்டு பெருகின கருணை நிறைந்த மனத்தையுண்டைய भवता=உம்மால் जीवित:=பிழைப்பிக்கப்பட்ட (உயிர்ப்பிச்சை கொடுக்கப்பட்ட) फणिपति:=காளியன் त्वयि=உம்மிடத்தில் समर्पितमूर्ति:=அர்ப்பணஞ்செய்யப்பட்ட சரீரத்தையுடையவனாய் अवानमत्=வணங்கினான். (198)

रमणकं व्रज वारिधिमध्यगं फणिरिपुर्नकरोति विरोधिताम् ।
इति भवद्वचनान्यतिमानयन् फणिपतिर्निरगादुरगैस्समम् ॥ १९९ ॥

(ப-ரை) वारिधिमध्यगम् = ஸமுத்திரத்தின் நடுவிலிருக்கின்ற रमणकम्=ரமணகமென்ற தீவை व्रज=அடைவாயாக. फणिरिपुः= ஸர்ப்பசத்ருவான கருடன் विरोधिताम्=விரோதத்தை न करोति= செய்யமாட்டான் इति=என்ற भवद्वचनानि=உமது வார்த்தைகளை अतिमानयन्=மிக்க மதித்தவனுய்க்கொண்டு फणिपतिः=காளியன் उरगैस्समम्=பாம்புகளுடன் கூட निरगात्=வெளியேறினன். (199)

फणिवधूजनदत्तमणिव्रजज्वलितहारदुकूलविभूषितः ।
तटगतैः प्रमदाश्रुविमिश्रितैः समगथाः स्वजनैर्दिवसावधौ ॥२००॥

(ப-ரை) फणिवधूजनदत्तमणिव्रजज्वलितहारदुकूलविभूषितः=நாக பத்நீ ஜனங்களால் கொடுக்கப்பட்ட மணிக்கூட்டங்களினுல் ஜ்வலிக் கின்ற முக்தாஹாரம், வெண்பட்டு இவற்ருல் அலங்கரிக்கப்பட்டவ ராய் तटगतैः=கரையிலிருக்கின்றவர்களும் प्रमदाश्रुविमिश्रितैः=ஸ்திரீக ளென்ன ஆனந்தபாஷ்பமென்ன இவற்றுடன் கூடினவர்களுமான அல்லது ஆனந்த பாஷ்பங்களுடன் கூடினவர்களுமான स्वजनैः= சொந்த ஜனங்களுடன்கூட दिवसावधौ=பகலின் முடிவில் समगथाः= கூடினீர். (200) (எ-று)

निशि पुनस्तमसा व्रजमन्दिरं व्रजितुमक्षम एव जनोत्करे ।
स्वपति तत्र भवच्चरणाश्रये दवकृशानुररुन्ध समन्ततः ॥ २०१ ॥

(ப-ரை) जनोत्करे पुनः=ஜனக்கூட்டமோவெனில் तमसा=இருள் காரணமாய் निशि=இரவில் व्रजमन्दिरम्=கோகுலத்திலுள்ள வீட்டை व्रजितुम्=அடைவதற்கு अक्षमे=முடியாததாகவும் भवच्चरणाश्रये=உமது சரணத்தை பாஶ்ரயித்ததாகவும் तत्रैव=அந்த யமுனையின் கரையி லேயே स्वपति=தூங்குங்கால் दवकृशानुः=காட்டுத்தீயானது समन्ततः=சுற்றிலும் अरुन्ध=சூழ்ந்துகொண்டது. (201) (எ-று)

प्रबुधितानथ पालय पालयेत्युदयदार्तरवान् पशुपालकान् ।
अवितुमाशु पपाथ महानलं किमिह चित्रमयं खलु ते मुखम् ॥२०२॥

(ப-ரை) अथ=பிறகு प्रबुधितान्=நெருப்பின் சூட்டினுல் விழித் துக்கொண்டவர்களும் पालयपालयेति=காரும் காருமென उदयदार्त-

वान्=உண்டான தீனமான சப்தத்தையுடையவர்களுமான पशुपालकान्=கோபாலர்களை अवितुम्=ரக்ஷிக்கவேண்டி महानलम्=பெரிய காட்டுத் தீயை आशु=சீக்கிரமாக पपाथ=குடித்தீர். इह=இவ்விஷயத்தில் चित्रम्=ஆச்சரியமென்னே? अयम्=இந்த அக்னி ते=உம்முடைய मुखं खलु=வாயன்றோ. (202) (எ—று)

शिखिनि वर्णत एव हि पीतता परिलसत्यधुना क्रिययाप्यसौ ।
इति नुतः पशुपैर्मुदितैर्विभो हर हरे दुरितैस्सह मे गदान् ॥ २०३ ॥

(ப—ரை) हे विभो !=ஹே விபோ ! हे हरे !=ஹே ஹரியே ! शिखिनि=நெருப்பில் पीतता=பீதமாக (பொன்னிறமாக) இருத்தலானது वर्णत एव=நிறத்தினுல் மட்டுமன்றோ परिलसति=ப்ரகாசித்துக்கொண்டிருக்கிறது. अधुना हि=இப்பொழுதோவெனில் असौ=இந்தப் பீதமாக இருக்குந்தன்மையானது (குடிக்கப்பட்டதாக இருத்தல் என்ற மற்ருெரு பொருளைக்கொண்டு இவ்விதம் சொல்லப்பட்டது) क्रियया अपि=குடித்தல் என்ற வியாபாரத்துக்கு உத்தேஶ்யமாக இருத்தலினுலும் கூட परिलसति=நன்கு விளங்குகிறது इति=என मुदितैः=ஸந்தோஷத்தையடைந்த पशुपैः=கோபாலர்களால் नुतः=ஸ்துதிக்கப்பட்டவரான நீர் दुरितैः सह=ரோக காரணங்களான பாபங்களுடன் கூட मे=என்னுடைய गदान्=வியாதிகளை हर=போக்குவீராக. (203)

இவ்விதம் காளியமர்த்தனஞ் செய்தவிடத்தில்
காளியனுக்குப் பகவதனுக்கிரஹ வர்ணனமும், பகவான்
காட்டுத்தீயைப் பானஞ்செய்ததை வர்ணித்தலும்
என்ற ஐம்பத்தாருவது தசகம் முற்றிற்று.



## பதினேழாவது அத்தியாயம்.

(அ—கை) नागं सप्तदशे नागालयं तं निरयापयत् ।
बन्धूंस्वदुःखतः श्रान्तान्सुप्तांस्तत्र दवादपात् ॥ १ ॥

(க—ரை) அந்த நாகத்தை நாகாலயத்தைக் குறித்து விரட்டினுர் என்பதும், தனக்கேற்பட்ட துக்க மூலம் களைத்து அவ்விடத்தில் தூங்கின பந்துக்களைக் காட்டுத்தீயினின்றும் காப்பாற்றினுர் என்பதும் இந்தப் பதினேழாவது அத்தியாயத்திலுபதேசிக்கப்படுகிறது.

## अथ सप्तदशोऽध्यायः ॥

राजोवाच—नागालयं रमणकं कस्मात्तत्याज कालियः। कृतं किं वा सुपर्णस्य तेनैकेनासमञ्जसम् ।१॥ श्रीशुक उवाच—उपहार्यैः सर्पजनैर्मासि मासीह यो बलिः। वानस्पत्यो महाबाहो नागानां प्राङ्निरूपितः॥ २ ॥ स्वं स्वं भागं प्रयच्छन्ति नागाः पर्वणि पर्वणि। गोपीथायात्मनः सर्वे सुपर्णाय महात्मने ॥ ३ ॥ विषवीर्यमदाविष्टः काद्रवेयस्तु कालियः। कदर्थीकृत्य गरुडं स्वयं तं बुभुजे बलिम् ॥ ४ ॥ तच्छ्रुत्वा कुपितो राजन्भगवान्भगवत्प्रियः। विजिघांसुर्महावेगः कालियं समुपाद्रवत् ॥ ५ ॥ तमापतन्तं तरसा विषायुधः प्रत्यभ्ययादुच्छ्रितनैकमस्तकः। दद्भिः सुपर्णं व्यदशद्ददायुधः

---

ராஜன் சொல்லுகிறார்—காளியன் நாகங்களுக்கு ஆலயமான ரமணகமென்ற தீவை எந்தக்காரணத்தால் விட்டான். அவ்வொருவனால் மட்டும் கருடனுக்குச் செய்யப்பட்ட அப்ரியம் என்னை? (1) ஸ்ரீசுகர் சொல்லுகிறார்—ஹே மஹாபாஹோ! *பக்ஷ்யங்களாகவான ஸர்ப்பங்களுக்குட்பட்ட ஜனங்களால் இவ்வுலகில் ஒவ்வொரு மாஸத்திலும் ஸர்ப்பங்களுக்கு மரத்தினடியில் யாதொரு பலியானது முன்னர் ஏற்படுத்தப்பட்டிருந்ததோ அந்தப் பலியினால் கிடைத்த தத்தமது பாகத்தை ஸர்ப்பங்கள் யாவும் ஒவ்வொரு அமாவாஸ்யையிலும் தங்களை ரக்ஷிப்பதற்காக மஹாத்மாவான கருடனுக்குக் கொடுத்துவந்தன. (2–3) விஷ வீர்யத்தினாலேற்பட்ட மதம் நிறைந்தவனும், கத்ருவின் புத்திரனுமான காளியனோவெனில் கருடனை அலக்ஷியஞ் செய்துவிட்டு அந்தப்பலியைத் தானே சாப்பிட்டான். (4) ஹே ராஜன்! பகவத்ப்ரியரும் பகவானுமான கருடன் அதைக்கேட்டு கோபங்கொண்டவராய் அவனைக்கொல்லவெண்ணங்கொண்டு அதிகவேகமாகக் காளியனைக் குறித்து ஓடிவந்தார். (5) விஷத்தையே ஆயுதமாகக்கொண்ட காளியன் தனது பலதலைகளையும் உயரத் தூக்கிக்கொண்டு ஓடிவரும் அந்தக்கருடனை வலுவாக

---

* உலகிலுள்ள ஜனங்கள் ஸர்ப்பங்கள் கடிக்கத் தொடங்குவதைக் கண்டு பயந்து ஒவ்வொரு மாஸத்திலும் அமாவாஸ்யைதோறும் மரத்தினடியிலுள்ள பாம்புப்புற்றில் பாம்பின் பாதை விலகவேண்டி பலியிடுவது வழக்கம்.

करालजिह्वोच्छ्वसितोग्रलोचनः॥ ६ ॥ तं तार्क्ष्यपुत्रः स निरस्य मन्युमान्प्रचण्डवेगो मधुसूदनासनः। पक्षेण सव्येन हिरण्यरोचिषा जघान कद्रूसुतमुग्रविक्रमः ॥ ७ ॥ सुपर्णपक्षाभिहतः कालियोऽतीव विह्वलः। ह्रदं विवेश कालिन्द्यास्तदगम्यं दुरासदम् ॥ ८ ॥ तत्रैकदा जलचरं गरुडो भक्ष्यमीप्सितम्। निवारितः सौभरिणा प्रसह्य क्षुधितोऽहरत् ॥ ९ ॥ मीनान्सुदुःखितान्दृष्ट्वा दीनान्मीनपतौ हते। कृपया सौभरिः प्राह तत्रत्यक्षेममा-

---

எதிர்த்தான். விஷப்பற்களை ஆயுதமாகக்கொண்டவனும், பயங்கரமான நாக்கையுடையவனும், பெருத்தும் பயங்கரங்களுமுமான கண்களையுடையவனுமான அவன் பற்களினால் கருடனைக்கடித்தான். (6) உக்கிரமான பராக்கிரமமுடையவரும், மதுஸூதனனுடைய வாஹனமானவரும், கடுமையான வேகமுள்ளவருமான அந்தக்கருடன் அதிகங் கோபங்கொண்டவராய் கத்ருவின் புத்திரனை அந்தக் காளியனைத் தள்ளிவிட்டு பொன்போலப்ரகாசிக்கின்ற தனது வலது பக்கத்து இரக்கையினால் தாக்கினார். (7) கருடனுடைய இரக்கையினாலடிக்கப்பட்ட காளியன் மிக்கப்பயந்தவனாய் அந்தக் கருடன் போகமுடியாததும் (அகழமாகவிருப்பதுபற்றி) அடைதற்கரிதானதுமான யமுனையினருகிலுள்ள மடுவில் பிரவேசித்தான் (8) ஒரு நாள் அம்மடுவில் மிக்கப்பசியுள்ள *ஒரு கருடபக்ஷியானது ஸௌபரி என்ற மஹருஷி தடுப்பதையும் பொருட்படுத்தாது தனக்குப் பிடித்த பக்ஷ்யமான மீனை பலாத்காரமாகத் தின்றுவிட்டது. (9) பெரிய மீன் கொல்லப்பட்டதைக் கண்டு சிறு மீன்கள் மிக்கத்துக்கப்படுவதைக்கண்டு ஸௌபரி என்ற மஹருஷியானவர் அம்மடுவிலுள்ளவற்றுக்கு க்ஷேமத்தைச் செய்யவேண்டி தயையுடன் பின் வருமாறு சொல்லத்தொடங்கினார். (10) இந்த மடுவில் பிரவேசித்து

---

* காளிந்தி என்ற மடுவில் வசிக்கின்ற மீன்களுள் ஒன்றை அதன் கரையில் வட்டமிட்டுக்கொண்டு நின்ற கருடன் என்ற ஸாதாரண பக்ஷி யொன்றுதின்றுவிட்டது. அந்த மீனின் குழந்தைகள் துக்கிப்பதைக்கண்டு தாளாத மனமுடைய ஸௌபரி என்ற மஹருஷியானவர் ஸாக்ஷாத் கருடனேயாயினுஞ்சரி இம்மடுவிலுள்ள மீனைப்பிடிப்பானாயின் அவன் தலை சுறுங்கிவிடும். இப்படியிருக்க இந்த ஸாதாரண கருடபக்ஷி விஷயத்திலோ, வேறு பக்ஷி விஷயத்திலோ என்னதடை என்று சபித்தார்.

चरन् ॥ १० ॥ अत्र प्रविश्य गरुडो यदि मत्स्यान्स खादति। सद्यः प्राणैर्वियुज्येत सत्यमेतद्ब्रवीम्यहम् ॥ ११ ॥ तं कालियः परं वेद नान्यः कश्चन लेलिहः। अवात्सीद्गरुडाद्भीतः कृष्णेन च विवासितः ॥ १२ ॥

कृष्णं ह्रदाद्विनिष्क्रान्तं दिव्यस्रग्गन्धवाससम्। महामणिगणाकीर्णं जाम्बूनदपरिष्कृतम् ॥ १३ ॥ उपलभ्योत्थिताः सर्वे लब्धप्राणा इवासवः। प्रमोदनिभृतात्मानो गोपाः प्रीत्याभिरेभिरे ॥ १४ ॥ यशोदा रोहिणी नन्दो गोप्यो गोपाश्च कौरव। कृष्णं समेत्य लब्धेहा आसँल्लब्धमनोरथाः ॥ १५ ॥ रामश्चाच्युतमालिङ्ग्य जहासास्यानुभाववित्। नगा गावो वृषा वत्सा लेभिरे परमां मुदम् ॥ १६ ॥ नन्दं विप्राः समागत्य गुरवः सकलत्रकाः।

---

அந்த ப்ரவேசித்த கருடனே மீன்களைத் தின்னபோதிலும் கூட உடனே ப்ராணன்களால் விடுபடுவான். நான் இதைச் சத்தியமாகவே சொல்லுகிறேன் என்றார். (11)

அச்சாபத்தைக் காளியன்மட்டு மறிவானேயன்றி வேறு பாம்பு ஒன்றுமறியமாட்டாது. (அவன்) கருடனிடமிருந்து பயந்து அங்கு வஸித்துவந்தான். திரும்பவும் கிருஷ்ணனால்விரட்டப்பட்டான்.(12) திவ்யமான மாலை, சந்தனம், வஸ்திரம் இவற்றையுடையவராகவும், விலையுயர்ந்த ரத்தினக்கூட்டங்களால் நிறைந்தவராகவும், ஸ்வர்ணத்தினால் அலங்கரிக்கப்பட்டவராகவும் கிருஷ்ணன் மடுவினின்றும் வெளிவந்ததைக்கண்டு ப்ராணனையடைந்த இந்திரியங்கள் போல கோபாலர் யாவரும் எழுந்து சந்தோஷம் நிறைந்த மனமுள்ளவர்களாய் ப்ரீதியுடன் அவரை ஆலிங்கனஞ்செய்துகொண்டனர். (13–14) ஹே கௌரவ! யசோதை, ரோஹிணி, நந்தகோபர், மற்றுமுள்ள கோபாலர், கோபிகைகள் யாவரும் கிருஷ்ணனையடைந்து சேஷ்டையையடைந்தவர்களாகவும், அடைந்த மனோரதமுள்ளவர்களாகவுமாயினர். (15) இவருடைய மஹிமையையறிந்த பலராமனும் அச்யுதனான கிருஷ்ணனை ஆலிங்கனஞ்செய்துகொண்டு சிரித்தார். மரங்களும், பசுக்களும், விருஷபங்களும், கன்றுகளும் மேலான சந்தோஷத்தையடைந்தன. (16) குருக்களான ப்ராம்ஹணர்கள் பத்நிகளுடன் கூட நந்தகோபரிடம் வந்து "காளியனால் சுத்தப்பட்ட உம்முடைய புத்திரன் தைவாதீனமாகவே விடுபட்

**ऊचुस्ते कालियग्रस्तो दिष्ट्या मुक्तस्तवात्मजः॥१७॥ देहि दानं द्विजातीनां कृष्णनिर्मुक्तिहेतवे। नन्दः प्रीतमना राजन् गाः सुवर्णं तदादिशत् ॥ १८ ॥ यशोदापि महाभागा नष्टलब्धप्रजा सती। परिष्वज्याङ्कमारोप्य मुमोचाश्रुकलां मुहुः॥ १९ ॥ तां रात्रिं तत्र राजेन्द्र क्षुत्तृड्भ्यां श्रमकर्शिताः। ऊषुर्व्रजौकसो गावः कालिन्द्या उपकूलतः॥ २० ॥ तदा शुचिवनोद्भूतो दावाग्निः सर्वतो व्रजम्। सुप्तं निशीथ आवृत्य प्रदग्धुमुपचक्रमे ॥ २१ ॥ तत उत्थाय संभ्रान्ता दह्यमाना व्रजौकसः। कृष्णं ययुस्ते शरणं मायामनुजमीश्वरम् ॥ २२ ॥ कृष्ण कृष्ण महाभाग हे रामामितविक्रम। एष घोरतमो वह्निस्ता-**

---

டான். கிருஷ்ணன் விடுபட்டதற்குவேண்டி ப்ராம்ஹணர்களுக்குத் தானத்தைக் கொடும்" என்றனர். ஹே ராஜன்! அப்பொழுது நந்தகோபரும் ப்ரீதியுடன் கூடின மனமுள்ளவராய் பசுக்களேயும், சுவர்ணத்தையும் கொடுத்தார். (17-18) முதலில் நஷ்டமானவனும் பிறகு அடையப்பட்டவனுமான புத்திரனையுடையவளும், பதிவ்ரதையும்,மஹாபாக்கியசாலியுமான யசோதையும்(கிருஷ்ணனை) ஆலிங்கனஞ்செய்து மடியில் தூக்கிவைத்துக்கொண்டு அடிக்கடி கண்ணீரை வடித்தனள். (19) ஹே ராஜேந்திர! பசி தாகங்களினலுண்டான ப்ரமத்தினல் களைத்தவர்களான கோகுல வாஸிகளும் பசுக்களும் அங்கு யமுனையினருகிலுள்ள கரையில் அவ்விரவு முழுதும் வஸித்தனர்.(20) அப்பொழுது நடு இரவில் கோடைக்காலத்தில் வனத்திலுண்டான காட்டுத்தீயானது தூங்கும் கோகுல வாஸிகள் யாவரையும் நாலா பக்கத்திலும் சூழ்ந்துகொண்டு எரிக்கத் தொடங்கிற்று. (21) பொசுக்கப்படும் அந்தக் கோகுலவாஸிகள் அங்கிருந்து எழுந்து பரபரத்தவர்களாய் மாயாமனிதரும், ஈஸ்வரனுமான கிருஷ்ணனைச் சரண்புகுந்தனர். (22) ஹே கிருஷ்ண! கிருஷ்ண! ஹே மஹாபாக! ஒப்பற்ற பராக்ரமமுள்ள ஹே ராம! இந்தப் பயங்கரமான நெருப்பானது உங்களைச் சார்ந்தவர்களான எங்களை விழுங்குகின்றது. ஹே ப்ரபோ! தாண்டுதற்கரிய காலரூபியான நெருப்பினின்றும் நண்பர்களான எங்களைக்காப்பீராக. எங்கிருந்தும் பயமற்ற உமது சரணத்தை விடுவதற்கு நாங்கள் *சக்தர்களல்லோம்

---

* எங்களுக்கு மரணத்தினின்றும் பயமில்லை. உமது சரணஸேவை போய்விடுமே என்றுதான் நடுங்குகிறோம் என்றனர் என்பது கருத்து.

वकान्प्रसते हि नः॥ २३॥ सुदुस्तरान्नः स्वान्पाहि कालाग्नेः सुहृदः प्रभो। न शक्नुमस्त्वच्चरणं संत्यक्तुमकुतोभयम् ॥ २४ ॥ इत्थं स्वजनवैक्लव्यं निरीक्ष्य जगदीश्वरः। तमग्निमपिबत्तीव्रमनन्तोऽनन्तशक्तिधृक् ॥ २५ ॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्द्धे
दावाग्निमोचनं नाम सप्तदशोऽध्यायः ॥१७॥

## अथ अष्टादशोऽध्यायः॥

श्रीशुक उवाच—अथ कृष्णः परिवृतो ज्ञातिभिर्मुदितात्मभिः। अनु-

---

என்றனர். (23-24) ஜகதீச்வரனும் அனந்தமான சக்தியைத் தரித்தவனும் அனந்தனுமான ஸ்ரீகிருஷ்ணன் இவ்விதம் ஸ்வஜனங்களின் கஷ்டமான நிலையைக் கண்ணுற்று அந்தக் காட்டுத்தீயை விழுங்கிவிட்டார். (25) (எ—று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண தசமஸ்கந்த
பூர்வார்த்தத்தில் தாவாக்னி மோசனம் என்ற
பதினேழாவது அத்தியாயம் முற்றிற்று.

## பதினெட்டாவது அத்தியாயம்.

(அ—கை) अष्टादशे ततो ग्रीष्मे वसन्तगुणलक्षिते ।
अघातयद्बलेनालं प्रलम्बं लीलया हरिः ॥ १ ॥
कृत्वा नृत्यं फणाग्रेषु कालियस्य सकौतुकम् ।
बलं प्रलम्बतुङ्गांसमारोहयदरातिहा ॥ २ ॥

(க—ரை) பிறகு சத்துருக்களைக் கொல்லுகின்ற ஹரியானவர் வஸந்தகாலத்துக்குரிய குணங்களுடன் காணப்படுகின்ற க்ரீஷ்ம (கோடைக்) காலத்தில் ப்ரலம்பன் என்ற அஸுரனைப் பலராமனைக் கொண்டு அனாயாஸமாகக் கொன்றார். காளியனுடைய படங்களின் நுனிகளில் ஸந்தோஷத்துடன் கூட நர்த்தனத்தைச்செய்து ப்ரலம்பாசுரனுடைய உன்னதமான தோளில் பலராமனை ஏறச் செய்தார். என இந்தப் பதினெட்டாவது அத்தியாயத்தி லுபதேசிக்கப்படுகிறது. (1—2)

गीयमानो न्यविशद्व्रजं गोकुलमण्डितम् ॥ १ ॥ व्रजे विक्रीडतोरेवं गोपालच्छद्ममायया । ग्रीष्मो नामर्तुरभवन्नातिप्रेयान् शरीरिणाम् ॥२॥ स च वृन्दावनगुणैर्वसन्त इव लक्षितः । यत्रास्ते भगवान्साक्षाद्रामेण सह केशवः ॥ ३ ॥ यत्र निर्झरनिर्ह्रादनिवृत्तस्वनझिल्लिकम् । शश्वत्तच्छीकरर्जीषद्रुममण्डलमण्डितम् ॥ ४ ॥ सरित्सरःप्रस्रवणोर्मिवायुना कह्लारकञ्जोत्पलरेणु-

---

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்.—பிறகு கிருஷ்ணன் ஸந்தோஷமடைந்த மனதுடையவர்களான பந்துக்களால் சூழப்பட்டவராயும், அவர்களால் பின்னின்று ஸ்துதிக்கப்படுகின்றவராயுங்கொண்டு பசுக்கூட்டங்களால் அலங்கரிக்கப்பட்ட கோகுலத்தில் பிரவேசித்தார். (1) அவர்கள் (ராமகிருஷ்ணர்கள்) பசுக்களை மேய்த்தல் என்ற கபடமாகிற மாயையுடன் கோகுலத்தில் இவ்விதம் விளையாடி வருங்கால் பிராணிகளுக்கு அதிகமான ப்ரீதியைத்தராததான க்ரீஷ்மம் எனப்பெயரிய ருதுவானது ஆரம்பித்தது. (2) எவ்விடத்தில் பகவானான கிருஷ்ணன் பலராமனுடன்கூட நேரில் வசிக்கின்றாரோ அங்கு அது ப்ருந்தாவனத்துக்குரிய குணங்களினால் வசந்தம் போலக் காணப்பட்டது. (3) எந்தவிடமானது கோடைகாலத்தில் கூட மலையருவிகளின் சப்தத்தினால் மறைக்கப்பட்டசப்தத்தையுடைய *சுவர்க்கோழிகளை யுடையதாகவும், இடையறாதுவிழும் ஜலத்துளிகளினால் கசிவுள்ளவைகளான மரக்கூட்டங்களினால் அலங்கரிக்கப் பட்டதாகவுமிருக்கின்றதோ நதி குளம் இவற்றின் பெருக்கிலுள்ள அலைகளில் சம்பந்தித்ததும், ஆம்பல், தாமரஸபுஷ்பம், நீலோத்பலம் இவற்றின் பொடியைக் கொண்டுவருகின்றதுமான காற்றினால் அதிகம் புற்களடர்ந்த எந்தவிடத்தில் கோடைகாலத்திய நெருப்பு சூரியன் இவைமூலமுண்டான தாபமானது வனவாஸிகளுக்கேற்படுவதில்லையோ, எவ்விடத்தில் அகழமான ஜலத்தையுடைய மடுக்களின் கரையைத் தொடுகின்ற அலைகளை யுடைய மணற்றிட்டுகளினால் குழம்பின சேற்றை

---

* மூலத்திலுள்ள झिल्लिकम्=என்ற பதத்துக்கு कठोरध्वनि सूक्ष्मकीटाः அருவருக்கத் தக்கத்வனியையுடைய சிறுபூச்சிகள் என ஸ்ரீதரர் பொருள் கூறியிருக்கிறார். ஆயினும் இதற்குச் சுவர்கோழி என ஸம்பிரதாயமறிந்தவர் பொருள் கூறுவதை யொட்டி இவ்விதம் எழுதப்பட்டது.

हारिणा । न विद्यते यत्र वनौकसां दवो निदाघवह्न्यर्कभवोऽतिशाद्वले ॥५॥
अगाधतोयह्रदिनीतटोर्मिभिर्द्रवत्पुरीष्याः पुलिनैः समन्ततः। न यत्र चण्डां
शुकरा विषोल्बणा भुवो रसं शाद्वलितं च गृह्णते ॥ ६ ॥ वनं कुसुमितं
श्रीमन्नदच्चित्रमृगद्विजम् । गायन्मयूरभ्रमरं कूजत्कोकिलसारसम ॥ ७ ॥
क्रीडिष्यमाणस्तत्कृष्णो भगवान्बलसंयुतः। वेणुं विरणयन्गोपैर्गोधनैः संवृ-
तोऽविशत् ॥ ८ ॥ प्रवालबर्हस्तबकस्रग्धातुकृतभूषणाः । रामकृष्णादयो
गोपा ननृतुर्युयुधुर्जगुः॥ ९ ॥ कृष्णस्य नृत्यतः केचिज्जगुः केचिदवादयन्।
वेणुपाणितलैः शृङ्गैः प्रशशंसुरथापरे ॥ १० ॥ गोपजातिप्रतिच्छन्ना देवा
गोपालरूपिणः। ईडिरे कृष्णरामौ च नटा इव नटं नृप ॥११॥ भ्रामणैर्लङ्घनैः
क्षेपैरास्फोटनविकर्षणैः। चिक्रीडतुर्नियुद्धेन काकपक्षधरौ क्वचित् ॥ १२ ॥

---

யுடைய பூமியினது பசும்புற்களடர்ந்த கசிவை, விஷம்போலக் கடு
மையான காலபக்கத்திலுமுள்ளச் சூரியனது கிரணங்கள் கூடப்
போக்கமுடியவில்லையோ, புஷ்பங்கள் நிறைந்ததும், சோலையுள்ள
தும், கூத்தாடுகின்ற சித்திரமான மான் பக்ஷி இவற்றை யுடையதும்,
கானஞ்செய்கின்ற மயில், வண்டு இவற்றை யுடையதும், சப்திக்
கின்ற குயில் நீர்காக்கை இவற்றையுடையதுமான அந்த வனத்தில்
விளையாட வெண்ணங்கொண்ட பகவானான ஸ்ரீகிருஷ்ணன் பலரா
மனுடன் கூடினவராயும் வேணுவை வாசித்துக் கொண்டும் கோபர்
களாலும் பசுக்களாலும் சூழப்பட்டவராய் ப்ரவேசித்தார். (4–8)
ராமன் கிருஷ்ணன் முதலிய கோபாலர்கள் தளிர், மயிற்றோகை, பூங்
கொத்து, பூமாலை, நற்சங்குப் பொடி இவைகளாற் செய்யப்பட்ட
ஆபரணங்களை யுடையவர்களாய்க் கொண்டு நர்த்தனஞ் செய்தனர்,
சண்டையிட்டனர், பாடினர். (9) ஹேநிருப! கிருஷ்ணன் நர்த்த
னஞ் செய்யுங்கால் சிலர் பாடினர். சிலர் வேணுக் களினாலும், உள்
ளங்கைகளினாலும், கொம்புகளினாலும் வாசித்தனர். பிறகு சிலர் புக
ழுரை கூறினர். (10) கோபாலர்களின் உருவமெடுத்த தேவர்கள்
கோபஜாதியினால் மறைக்கப்பட்டவர்களாய் நடர்கள் மற்றொரு நட
னைப்போல ராமகிருஷ்ணர்களை ஸ்துதித்தனர். (11) காகபக்ஷதரர்
களான (ஜில்பாக்குடுமி யுள்ளவர்களான) அவர்கள் ஒருஸமயத்தில்

**क्वचिन्नृत्यत्सु चान्येषु गायकौ वादकौ स्वयम्। शशंसतुर्महाराज साधु-साध्विति वादिनौ ॥ १३ ॥ क्वचिद्विल्वैः क्वचित्कुम्भैः क्वचामलकमुष्टिभिः। अस्पृश्यनेत्रबन्धाद्यैः क्वचिन्मृगखगेहया ॥१४॥ क्वचिच्च दर्दुरप्लावैर्विविधैरुप-**

---

(1) ப்ராமணங்களினுலும், (2) லங்கனங்களினுலும், (3) க்ஷேபங்களினுலும், (4) ஆஸ்போடனங்களினுலும், (5) விகர்ஷணங்களினுலும், பாஹுயுத்தத்தினுலும் விளையாடினர். (12) ஹேமஹாராஜ! ஒருஸமயத்தில் மற்றவர்கள் நர்த்தனஞ் செய்யும் பொழுது தாம் அதற்கேற்பப் பாடுகின்றவர்களாகவும், வாத்யத்தை வாசிப்பவர்களாகவும், நல்லது நல்லது எனச் சொல்லுகின்றவர்களாகவுங்கொண்டு புகழ்ந்தனர். (13) ஒருஸமயத்தில் பில்வப்பழங்களினுலும், கும்பம் என்ற மரத்தின் பழங்களினுலும், ஒருஸமயத்தில் நெல்லிக்கனிகளை முஷ்டியாகக் கையில் வைத்துக்கொண்டும், ஒருவரையொருவர் தொடமுடியாதபடி ஓடிக்கொண்டும், கண்களைத் துணியினுல் கட்டிக்கொண்டு பிறரைப்பிடிக்கும் முயற்சிகளினுலும், பிறவற்ருலும், ஒருஸமயத்தில், மான்களைப் போல ஓடியும் பக்ஷிகளைப் போலப் பறந்தும், ஒருஸமயத்தில் தவக்களைகள் போலத் துள்ளிக்குதித்துக் கொண்டும், பற்பலவிதங்களான பரிஹாஸ சேஷ்டைகளினுலும், ஒருஸமயத்தில் ஊஞ்ஜலில் ஆடுவதனுலும், ஒருஸமயத்தில் ராஜாக்

---

(1) ஒருபையனை நடுவிலுட்காரவைத்து அவன்கையில் துணியின் தலைப்பைக் கொடுத்து மற்ருெருதலைப்பைத் தான்பிடித்துக் கொண்டு அந்தத்துணியுடன் அவனைச் சுத்திவருங்கால் வெளியிலிருக்கும் கோபாலர் இவரை துணிச்சாட்டையால் அடிக்க முயர்ச்சிக்க அதைப்பொறுத்துக் கொண்டு தன்னை யடிப்பவரைப் பிடித்தல் ப்ராமணம் எனப்படும்.

(2) ஒருபையனை இருகைகளையும் பூமியில் வைத்துக்கொண்டு நிற்கச் செய்து அவன் முதுகில் கால்படாமல் தாண்டுதல் லங்கனம் எனப்படும். இதைப்பச்சைக் குதிரை தாண்டுதல் என்பது வழக்கம். (3) ஒருவனைக் குப்புறத்திப் படுக்கவைத்து அவனை மல்லாக்காகத் தள்ளிமுதுகில் மண்படும்படி செய்தல். க்ஷேபம் எனப்படும். (4) இருதோள்களையும் தட்டிக்கொண்டு விளையாடுதல் ஆஸ்போடனம் எனப்படும். (5) ஒருவனை இருகால்களையும் நீட்டிக் கொண்டு பூமியிலுட்காரச்செய்து மற்றவன் அவன் கைகளைப் பிடித்திழுத்துக் கிளப்பிவிடுதல் விகர்ஷணம் எனப்படும்.

हासकैः। कदाचित्स्पन्दोलिकया कर्हिचिन्नृपचेष्टया ॥ १५ ॥ एवं तौ लोकसिद्धाभिः क्रीडाभिश्चेरतुर्वने। नद्यद्रिद्रोणिकुञ्जेषु काननेषु सरस्सु च ॥

पशूंश्चारयतो गोपैस्तद्वने रामकृष्णयोः। गोपरूपी प्रलम्बोऽगादसुरस्तज्जिहीर्षया ॥ १७ ॥ तं विद्वानपि दाशार्हो भगवान्सर्वदर्शनः। अन्वमोदत तत्सख्यं वधं तस्य विचिन्तयन् ॥ १८ ॥ तत्रोपाहूय गोपालान्कृष्णः प्राह विहारवित्। हे गोपा विहरिष्यामो द्वन्द्वीभूय यथा यथम् ॥ १९ ॥ तत्र चक्रुः परिवृढौ गोपा रामजनार्दनौ। कृष्णसङ्घट्टिनः केचिदासन्रामस्य चापरे ॥ २० ॥ आचेरुर्विविधाः क्रीडा वाह्यवाहकलक्षणाः। यत्रारोहन्ति जेतारो वहन्ति च पराजिताः ॥ २१ ॥ वहन्तो वाह्यमानाश्च चारयन्तश्च

---

கள் போன்ற சேஷ்டையினுலும், ஆக இவ்விதம் உலகில் பழக்கத்திலிருக்கின்ற லீலைகளினுலும் அவ்விருவரும் காடு, நதி, மலையின் குஹை, கொடிகளடர்ந்த விடம் இவற்றிலும், பெரிய காடுகளிலும், தடாகங்களிலும் ஸஞ்சரித்து வந்தனர். (14-16)

அந்தக்காட்டில் கோபாலர்களுடன்கூட ராமகிருஷ்ணர்கள் பசுக்களை மேய்த்து வருங்கால் இடையர் வேஷங்கொண்ட ப்ரலம்பன் என்ற அஸுரன் அவர்களை யபஹரிக்குமெண்ணத்துடன் அங்கு வந்தான். (17) தாசார்ஹனும், ஸர்வக்ஞனுமான பகவான் அவ்வசுரனை அறிந்திருந்த போதிலுங்கூட அவனது வதத்தைச் சிந்திக்கின்றவராய் அவனது ஸக்கியத்தை (தனதுகக்ஷியில் அவன்சேருவதைச்) சம்மதித்தார். (18) அப்பொழுது விளையாடும் முறையறிந்த கிருஷ்ணன் கோபாலர்களை யழைத்து ஹே கோபாலர்களே! அவரவர்க்குப் பிடித்தமானபடி இரண்டுபிரிவாகப்பிரிந்து விளையாடுவோம் என்ருர். (19) கோபாலர்கள் ராமகிருஷ்ணர்களைத் தலைமை வஹிப்பவர்களாகச் செய்துகொண்டனர். அவர்களுள் சிலர் கிருஷ்ணன் கக்ஷியைச் சேர்ந்தவர்களாகவும், மற்றவர் ராமன் கக்ஷியைச் சேர்ந்தவர்களாகவும் ஆயினர். (20) எந்த விளையாட்டில் ஜயித்தவர்கள் மேலேறியுட்காருகின்றவர்களாகவும், தோத்தவர்கள் சுமப்பவர் களாகவும் ஆகின்றனரோ அத்தகைய சுமக்கப்படுதல் சுமத்தல் இவற்றை லக்ஷணமாகக் கொண்ட பற்பல விளையாட்டுகளைச் செய்தனர். (21) கிருஷ்ணன் முதலியோர் சுமப்பவர்களாகவும், சுமக்

गोधनम् । भाण्डीरकं नाम वटं जग्मुः कृष्णपुरोगमाः ॥२२॥ रामसङ्घट्टिनो यर्हि श्रीदामवृषभादयः। क्रीडायां जयिनस्तांस्तानूहुः कृष्णादयो नृप ॥२३॥ उवाह कृष्णो भगवान् श्रीदामानं पराजितः । वृषभं भद्रसेनस्तु प्रलम्बो रोहिणीसुतम् ॥ २४ ॥ अविषह्यं मन्यमानः कृष्णं दानवपुङ्गवः । वहन्द्रुततरं प्रागादवरोहणतः परम् ॥ २५ ॥ तमुद्वहन्धरणिधरेन्द्रगौरवं महासुरो विगतरयो निजं वपुः । स आस्थितः पुरटपरिच्छदो बभौ तडिद्द्युमानुडुपतिवाडिवाम्बुदः ॥ २६ ॥ निरीक्ष्य तद्वपुरलमम्बरे चरत्प्रदीप्तदृग्भ्रुकुटितटोग्रदंष्ट्रकम्। ज्वलच्छिखं कटककिरीटकुण्डलत्विषाद्भुतं हलधर ईषदत्र-

---

கப்படுகின்றவர்களாகவும் பசுக்களை மேய்த்துக் கொண்டும் பாண்டீரகம் எனப்பெயரிய ஆலமரத்தை யடைந்தனர். (22) ஹே ந்ருப! ராமன் கக்ஷியைச் சேர்ந்த ஸ்ரீதாமா விருஷபன் முதலியோர் எது போழ்து விளையாட்டில் ஜயித்தனரோ அதுபோழ்து கிருஷ்ணன் முதலியோர் ஜயித்த அவரவர்களைச் சுமந்தனர். (23) தோல்வியையடைந்த பகவானுன கிருஷ்ணன் ஸ்ரீதாமாவைச் சுமந்தார். பத்ரஸேனன் விருஷபனையும், ப்ரலம்பன் பலராமனையும் சுமந்தனர். (24) அஸுரஸ்ரேஷ்டனுன ப்ரலம்பன் கிருஷ்ணனைத்தன்னுல் தூக்கமுடியாதவனுக எண்ணிக்கொண்டு பலராமனைச் சுமந்து கொண்டு இறக்கவேண்டிய விடத்துக்கப்பால் வெகுவேகமாகச் சென்றுன். (25)

அந்தப்பலராமனைச் சுமக்கின்ற அந்தப்பெரிய அஸுரன் வேகங்குன்றினவனுய் பெரியமலைக்கொப்பான கனத்தையுடைய தனது சரீரத்தை யடைந்தவனுயும் பொன்னுலலங்கரிக்கப் பட்டவனுயும் கொண்டு மின்னலின் காந்தியுள்ளதும் சந்திரனைச் சுமப்பதுமான மேகம் போலவிளங்கினுன். (26) அதிகவேகமாக ஆகாசத்தில் ஸஞ்சரிக்கின்றதும், மிக்கப்ரகாசிக்கின்ற கண்களையுடையதும், புருவங்களில் ஸம்பந்தப்பட்ட உக்கிரமான தத்திப்பற்களையுடையதும், (பழுக்கக்காய்ச்சின தாம்பிரக்கம்பிபோல) ஜ்வலிக்கின்ற தலைமயிரையுடையதும், தோள்வளை கிரீடம் குண்டலம் இவற்றின் காந்தியினுல் ஆச்சரியம் வாய்ந்ததுமான அவனது சரீரத்தைக் கண்டு பலராமன் கொஞ்சம் பயந்தார். (27) பிறகு பலராமன் தன்னைப்பற்றிய நினை

सत् ॥ २७ ॥ अथागतस्मृतिरभयो रिपुं बलो विहाय सार्थमिव हरन्तमा-
त्मनः । रुषाहनच्छिरसि दृढेन मुष्टिना सुराधिपो गिरिमिव वज्ररंहसा ॥
२८ ॥ स आहतः सपदि विशीर्णमस्तको मुखाद्वमन्रुधिरमपस्मृतोऽसुरः ।
महारवं व्यसुरपतत्समीरयन् गिरिर्यथा मघवत आयुधाहतः ॥ २९ ॥
दृष्ट्वा प्रलम्बं निहतं बलेन बलशालिना । गोपाः सुविस्मिता आसन्साधु-
साध्विति वादिनः ॥ ३० ॥ आशिषोऽभिगृणन्तस्तं प्रशशंसुस्तदर्हणम् ।
प्रेत्यागतमिवालिङ्ग्य प्रेमविह्वलचेतसः ॥ ३१ ॥ पापे प्रलम्बे निहते देवाः
परमनिर्वृताः । अभ्यवर्षन्बलं माल्यैः शशंसुः साधुसाध्विति ॥ ३२ ॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्धे
प्रलम्बवधो नामाष्टादशोऽध्यायः ॥ १८ ॥

—•○◌○•—

---

வையடைந்தவராய் பயத்தையிழந்து தனது கோபஸமூஹத்தை விட்டு(த்தன்னை)எடுத்துச் செல்லும் சத்துருவை, தேவேந்திரன் வஜ்ஜ்ராயுதத்தின் வேகத்தினால் மலையைப்போல கெட்டியான முஷ்டியினால் கோபத்துடன் தலையிலடித்தார். (28) அடிக்கப்பட்ட அந்த அஸுரன் நொறுங்கின தலையையுடையவனாயும் முகத்தினின்று ரக்தத்தைக் கக்கிக்கொண்டும் தன்னினைவு அற்றவனாய் இந்திரனுடைய ஆயுதத்தினாலடிக்கப்பட்ட மலையானது போல பெரிய சப்தத்தைச் செய்துகொண்டு உயிரை இழந்தவனாய் விழுந்தான். (29) பலசாலியான பலராமனால் ப்ரலம்பன் அடிக்கப்பட்டதைக் கண்டு கோபாலர்கள் நல்லது நல்லது எனச் சொல்லிக்கொண்டு மிக்கவாஶ்சரியத்தை யடைந்தவர்களாக வாகி இறந்து பிழைத்தவனைப் போல ஆலிங்கனஞ் செய்துகொண்டு ப்ரேமையினால் கலங்கின சித்தமுள்ளவர்களாயும், ஆசீர்வாதங்களைச் செய்துகொண்டும், புகழுவதற்குரியவரான அந்தப் பலராமனைப் புகழ்ந்தனர். (30–31) பாபியான ப்ரலம்பன் கொல்லப்பட்டதும் தேவர்கள் மிக்கச்சுகத்தை யடைந்தவர்களாய்க் கொண்டு புஷ்பங்களினாலும் மாலைகளினாலும் பலராமனை வர்ஷித்து நல்லது நல்லது என்றும் கொண்டாடினர். (32)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண தசமஸ்கந்த பூர்வார்த்தத்தில்
ப்ரலம்பவதம் என்ற பதினெட்டாவது அத்தியாயம் முற்றிற்று.



## நாராயணீயம்.

रामसख: क्वापि दिने कामद भगवन् गतो भवान्विपिनम् ।
सूनुभिरपि गोपानां धेनुभिरभिसंवृतो लसद्वेष: ॥ २०४ ॥

(ப-ரை) कामद !=காமத்தைத்தரும் भगवन् !=ஹேபகவானே! रामसख:=பலராமனுக்கு ஸகாவான भवान्=நீர் गोपानाम्=கோபாலர்களின் सूनुभि:=புத்திரர்களாலும், धेनुभि:=பசுக்களாலும் अभिसंवृत:=சுற்றிலும் சூழப்பட்டவராகவும், लसद्वेष:=விளங்குமலங்கார விசேஷத்தை யுடையவராகவும் கொண்டு क्वापि=ஒருஸமயம் दिने=பகலில் विपिनम्=காட்டை गत:=அடைந்தீர். (204) (எ-று)

सन्दर्शयन् बलाय स्वैरं बृन्दावनश्रियं विमलाम् ।
काण्डीरैस्सह बालैर्भाण्डीरकमागमो वटं क्रीडन् ॥ २०५ ॥

(ப-ரை) बलाय=பலராமனுக்கு विमलाम्=சுத்தமான बृन्दावनश्रियम्=பிருந்தாவனத்தின் சோபையை सन्दर्शयन्=காட்டிக்கொண்டும் काण्डीरै:=கைகளில் மாடுவோட்டும் கொம்பைத் தரித்தவர்களான बालैस्सह=குழந்தைகளுடன் கூட स्वैरम्=மனம்போனபடி क्रीडन्=விளையாடிக் கொண்டும் भाण्डीरकम=பாண்டீரகமென்ற वटम्=ஆலமரத்தை आगम:=அடைந்தீர். (205) (எ-று)

तावत्तावकनिधनस्पृहयालुर्गोपमूर्तिरदयालु: ।
दैत्य: प्रलम्बनामा प्रलम्बबाहुं भवन्तमापेदे ॥ २०६ ॥

(ப-ரை) तावत्=அப்பொழுது तावकनिधनस्पृहयालु:=உம்மைக் கொல்லவேண்டுமென்ற விருப்பமுள்ளவனும் अदयालु:=தயையற்றவனும் गोपमूर्ति:=இடையர் ரூபமெடுத்தவனுமான प्रलम्बनामा=ப்ரலம்பன் என்ற பெயருள்ள दैत्य:=அஸுரன் प्रलम्बबाहुम्=நீண்ட கைகளையுடைய भवन्तम्=உம்மை आपेदे=அடைந்தான். (206)

जानन्नप्यविजानन्निव तेन समं निबद्धसौहार्द: ।
वटनिकटे पटुपशुपव्यावद्धं द्वन्द्वयुद्धमारब्धा: ॥ २०७ ॥

(ப-ரை) जानन्नपि=அதையறிந்திருந்துங்கூட अविजानन्निव=அறியாதவர் போல तेन समम्=அவனுடன் கூட निबद्धसौहार्द:=உண்டாக்கிக்கொண்ட ஸ்னேஹத்தன்மையை யுடையவராய் वटनिकटे=ஆலமரத்தினருகில் पटुपशुपव्यावद्धम्=சதுரர்களான ஸ்ரீதாமாமுத

லிய கோபாலர்களுடன் கலந்த द्वन्द्वयुद्धम्=த்வந்த்வயுத்தத்தை(இதை க்குஸ்தி என்பார்கள்) आरब्धा:=தொடங்கினீர். (207)

गोपान्विभज्य तन्वन् सङ्गं बलभद्रकं भवत्कमपि ।
त्वद्बलभीरुं दैत्यं त्वद्बलगतमन्वमन्यथा भगवन् ॥ २०८ ॥

(ப-ரை) हेभगवन्!=ஹேபகவானே! गोपान्=கோபாலர்களை बलभद्रकम्=பலராமனைத் தலைவனுகக் கொண்டதும் भवत्कमपि=உம்மைத் தலைவனுகக்கொண்டதுமான सङ्गम्=கூட்டமாக तन्वन्=பிரித்துக் கொண்டு त्वद्बलभीरुम्=உமதுபலத்தைக் கண்டுபயந்தவனும் त्वद्बलगतम्=உமது ஸைன்னியத்தில் சேர்ந்தவனுமான दैत्यम्=ப்ரலம்பாசுரனை अन्वमन्यथा:=அவ்விதமே ஸம்மதித்தீர். (208) (எ-று)

कल्पितविजेतृवहने समरे परयूथगं स्वदयिततरम् ।
श्रीदामानमधत्था: पराजितो भक्तदासतां प्रथयन् ॥ २०९ ॥

(ப-ரை) कल्पितविजेतृवहने=ஜயித்தவர்களைத் தோத்தவர் தூக்குகிறது எனக் கல்பிக்கப்பட்ட समरे=யுத்தத்தில் भक्तदासताम्=பக்தர்களுக்குத் தாஸனுகவிருத்தலை प्रथयन्=ப்ரகடனஞ் செய்யவேண்டி परयूथगम्=வேறுகக்ஷியிற் சேர்ந்தவனும் स्वदयिततरम्=தனக்கு மிக்கவேண்டியவனுமான श्रीदामानम्=ஸ்ரீதாமாவென்பவனை पराजित:=தோல்வியை யடைந்த நீர் अधत्था:=தூக்கினீர். (209) (எ-று)

एवं बहुषु विभूमन् बालेषु वहत्सु वाह्यमानेषु ।
रामविजित: प्रलम्बो जहार तं दूरतो भवद्भीत्या ॥ २१० ॥

(ப-ரை) विभूमन्=வியாபகரான ஹேகிருஷ்ண! एवम्=இவ்விதம் बहुषु=வெகுவான बालेषु=குழந்தைகள் वहत्सु=சுமக்கின்றவர்களாகவும் वाह्यमानेषु=சுமக்கப் படுகின்றவர்களாகவும் இருக்குங்கால் रामविजित:=பலராமனுல் ஜயிக்கப்பட்ட प्रलम्ब:=ப்ரலம்பாசுரன் तम्=அந்தப் பலராமனை भवद्भीत्या=உம்மிடமிருந்துண்டான பயத்தினுல் दूरत:=வெகுதூரத்தில் जहार=தூக்கிச் சென்ருன். (210)

त्वद्दूरं गमयन्तं तं दृष्ट्वा हलिनि विहितगरिमभरे ।
दैत्य: स्वरूपमागाद्यद्रूपात् स हि बलोऽपि चकितोऽभूत् ॥ २११ ॥

(ப-ரை) त्वत्=உம்மிடமிருந்து दूरम्=தொலைவில் गमयन्तम्=எடுத்துச் செல்லுகின்ற तम्=அவனை दृष्ट्वा=கண்டு हलिनि=பலராமன்

विहितगरिमभरे=செய்யப்பட்ட தனது கௌரவத்தை (கனத்தை) யுடையவராக ஆனதும் यद्रूपात्=எத்தகைய ரூபத்தைக்கண்டு सहि= அந்த बलोऽपि=பலராமன்கூட चकितः=பயந்தவராக अभूत्=ஆனரோ [तत्=அத்தகைய] स्वरूपम्=சொந்த ரூபத்தை आगात्=அடைந்தான்.

उच्चतया दैत्यतनोस्त्वन्मुखमालोक्य दूरतो रामः ।
विगतभयो दृढमुष्ट्या भृशदुष्टं सपदि पिष्टवानेनम् ॥ २१२ ॥

(ப-ரை) दैत्यतनोः =அஸுரனுடைய சரீரமானது उच्चतया= உன்னதமாக விருப்பதுபற்றி रामः=பலராமன் दूरतः=வெகுதூரத்திலிருந்து त्वन्मुखम्=உமது முகத்தை आलोक्य=பார்த்து विगतभयः=பயத்தை இழந்தவராய் दृढमुष्ट्या=கெட்டியான முஷ்டியினுல் (கையால் குத்துவதால்) एनम्=இந்த அஸுரனை सपदि=சீக்கிரமாக पिष्टवान्=பொடியாக்கினர். (212) (எ-று)

हत्वा दानववीरं प्राप्तं बलमालिलिङ्गिथ प्रेम्णा ।
तावन्मिलतोर्युवयोः शिरसि कृता पुष्पवृष्टिरमरगणैः ॥ २१३ ॥

(ப-ரை) दानववीरम्=அஸுரவீரனை हत्वा=கொன்று प्राप्तम्=வந்தவரான बलम्=பலராமனை प्रेम्णा=ப்ரேமையுடன் [यावत्=எவ்வளவுக்குள்] आलिलिङ्गिथ=தழுவிக்கொண்டீரோ तावत्=அவ்வளவுக்குள் मिलतोः=கூடினவர்களான युवयोः=உங்களிருவருடையவும் शिरसि= தலையில் अमरगणैः=தேவக்கூட்டங்களால் पुष्पवृष्टिः=புஷ்பமழையானது कृता=செய்யப்பட்டது (பொழியப்பட்டது.) (213) (எ-று)

आलम्बो भुवनानां प्रालम्बं निधनमेवमारचयन् ।
कालं विहाय सद्यो लोलम्बरुचे हरे हरेः क्लेशान् ॥ २१४ ॥

(ப-ரை) लोलम्बरुचे !=வண்டுக்கொப்பான காந்தியை யுடையவரான हरे !=ஹேகிருஷ்ண ! भुवनानाम्= எல்லாவுலகங்களுக்கும் आलम्बः=ஆஶ்ரயமானவரும் एवम्=இவ்விதம் प्रालम्बम्=ப்ரலம்பாஸுர ஸம்பந்தியான निधनम्=நாசத்தை आरचयन्=செய்தவருமான நீர் कालम्=காலதாமதத்தை विहाय=விடுத்து सद्यः=உடனேயே क्लेशान्= வியாதியினுலேற்பட்ட கஷ்டங்களை हरेः=போக்குவீராக. (214)

இவ்விதம் ப்ரலம்பாஸுரனுடைய வதவர்ணனம் என்ற
ஒருசுலோகமதிகமான ஐம்பத்தேழாவது
தசகம் முற்றிற்று.

## अथ एकोनविंशोऽध्यायः ॥

श्रीशुक उवाच—क्रीडासक्तेषु गोपेषु तद्गावो दूरचारिणीः । स्वैरं चरन्त्यो विविशुस्तृणलोभेन गह्वरम् ॥ १ ॥ अजा गावो महिष्यश्च निर्विशन्त्यो वनाद्वनम् । ईषीकाटवीं निर्विविशुः क्रन्दन्त्यो दावतर्षिताः ॥ २ ॥ तेऽपश्यन्तः पशून्गोपाः कृष्णरामादयस्तदा । जातानुतापा न विदुर्विचिन्वन्तो गवां गतिम् ॥ ३ ॥ तृणैस्तत्खुरदच्छिन्नैर्गोष्पदैरङ्कितैर्गवाम् । मार्ग-

---

## பத்தொன்பதாவது அத்தியாயம்.

(அ-கை) ऊनविंशे निविष्टन्तु गोपगोकुलमच्युतः ।
मुञ्जारण्यमरण्याग्नेररक्षत्तन्निपानतः ॥ १ ॥

(க-ரை) முஞ்ஜாரண்யத்தில் நுழைந்த கோபாலர்களையும் பசுக்கூட்டத்தையும் ஸ்ரீகிருஷ்ணன் காட்டுத்தீயைவிழுங்கி அக்காட்டுத்தீயினின்றும் காப்பாற்றினர் என இந்த பத்தொன்பதாவது அத்தியாயத்தி லுபதேசிக்கப்படுகிறது. (1) (எ-று)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—கோபாலர் விளையாட்டிலீடுபட்டவர்களாக இருக்குங்கால் தமதிஷ்டப்படி சஞ்சரிக்கின்ற அவர்களின் பசுக்கள் வெகுதூரத்தில் ஸஞ்சரிக்கின்றனவாய் புல்லிலுள்ள ஆசையினால் கஷ்டமானவிடத்தில் நுழைந்தன. (1) ஆடுகளும் பசுக்களும் எருமைகளும் ஒருகாட்டினின்றும் மற்றொருகாட்டை யடைந்தவைகளாய் காட்டுத்தீயினால் பிடிக்கப்பட்டுக்கதறிக்கொண்டு முஞ்சிக்காட்டில் நுழைந்தன. (2) ராமகிருஷ்ணாதியர்களான அந்தக் கோபாலர்கள் அப்பொழுது பசுக்களைக் காணாது துக்கத்தை யடைந்தவர்களாய் மாடுகளின் வழியைத் தேடிக்காணாதவராயினர். (3) பிழைப்பிற்குரிய ஸாதனங்களையிழந்த அவர்கள் யாவரும் வெவ்வேறுபட்ட * எண்ணமுள்ளவர்களாய் பசுக்களின் பற்களினாலும், குளம்புகளினாலும் துண்டாக்கப்பட்ட புற்களைக் கொண்டும், குளப்படிகளால் அடையாளமிடப்பட்ட பூப்ர தேசங்களைக் கொண்டும், பசுக்களின் வழியைப் பின்பற்றிச் சென்றனர். (4)

---

* பசுக்கள் இங்கு சென்றனவோ, அல்லது அங்கு சென்றனவோ எனப் பலதரப்பட்ட எண்ணமுள்ளவர்களாயினர் என்பது கருத்து.

मन्वगमन्सर्वे नष्टाजीव्या विचेतसः ॥ ४ ॥ मुञ्जाटव्यां भ्रष्टमार्गं क्रन्दमानं स्वगोधनम् । संप्राप्य तृषिताः श्रान्तास्ततस्ते संन्यवर्तयन् ॥ ५ ॥ ता आहूता भगवता मेघगम्भीरया गिरा । स्वनाम्नां निनदं श्रुत्वा प्रतिनेदुः प्रहर्षिताः ॥ ६ ॥ ततः समन्ताद्वनधूमकेतुर्यदृच्छयाभूत्क्षयकृद्वनौकसाम् । समीरितः सारथिनोल्बणोल्मुकैर्विलेलिहानः स्थिरजङ्गमान्महान् ॥ ७ ॥ तमापतन्तं परितो दवाग्निं गोपाश्च गावः प्रसमीक्ष्य भीताः । ऊचुश्च कृष्णं सबलं प्रपन्ना यथा हरिं मृत्युभयार्दिता जनाः ॥ ८ ॥ कृष्ण कृष्ण महावीर हे रामामितविक्रम । दावाग्निना दह्यमानान्प्रपन्नांस्त्रातुमर्हथः ॥ ९ ॥ नूनं

---

வழிதவறினதும் (1) முஞ்ஜிக்காட்டில் கத்துகின்றதுமான தமது பசுக்கூட்டத்தை அடைந்து அவர்கள் தாகத்தையடைந்தவர்களாகவும் களைத்தவர்களாகவுமாகி ஆங்கிருந்து திரும்பினர். (5) பகவானான கிருஷ்ணனுல் மேகம்போல் கம்பீரமான வார்த்தையினுல் அழைக்கப்பட்ட அந்தப் பசுக்கள் தமது பெயர்களின் சப்தத்தைக் கேட்டுச் சந்தோஷித்தனவாய் எதிரொலியிட்டன. (6) பிறகு வாயுவினுல் நன்கு வளர்க்கப்பட்டதும் அதிகமான கொள்ளிக்கட்டைகளினுல் ஸ்தாவரஜங்கமங்களை யழிக்கின்றதுமான பெரிய காட்டுத்தீயானது வனத்தில் வஸிப்பவைகளுக்கு நாசத்தைச் செய்துகொண்டு தைவாதீனமாக நாலாபக்கத்திலும் சூழ்ந்துகொண்டது. (7) நாலாபக்கத்திலும் சூழ்ந்துகொண்டு வருகின்ற அந்தக் காட்டுத்தீயைக் கண்டு பசுக்களும் கோபாலர்களும் பயந்தவர்களாய் பலராமனுடன் கூடின கிருஷ்ணனை மிருத்யுபயத்தால் பீடிக்கப்பட்ட ஜனங்கள் ஸ்ரீஹரியைப் போலச் சரண் புகுந்தவர்களாய்ச் சொல்லத்தொடங்கினர். (8) அதிகம் வீர்யமுள்ள ஹேகிருஷ்ணா! கிருஷ்ணா! ஒப்பற்ற பராக்ரமமுள்ள ஹேபலராம! காட்டுத்தீயினுல் பொசுக்கப்படுகின்றவர்களும் சரண்புகுந்தவர்களுமான எங்களைக் காக்கக்கடமைப் பட்டிருக்கின்றீர்கள். (9) ஸர்வதர்மங்களையுமறிந்த ஹேகிருஷ்ணா! உமது பந்துக்கள் கஷ்டப்படத் தகுதியுள்ளவர்க

---

(1) முஞ்சா என்பதும், இஷீகா என்பதும் நாணல்போன்ற ஓர் வகைப் புல்லைக்குறிக்கும்.

त्वद्बान्धवाः कृष्ण न चार्हन्त्यवसीदितुम् । वयं हि सर्वधर्मज्ञ त्वन्नाथास्त्वत्परायणाः ॥ १० ॥

श्रीशुक उवाच—वचो निशम्य कृपणं बन्धूनां भगवान्हरिः । निमीलयत मा भैष्ट लोचनानीत्यभाषत ॥ ११ ॥ तथेति मीलिताक्षेषु भगवानग्निमुल्बणम् । पीत्वा मुखेन तान्कृच्छ्राद्योगाधीशो व्यमोचयत् ॥ १२ ॥ ततश्च तेऽक्षीण्युन्मील्य पुनर्भाण्डीरमापिताः । निशाम्य विस्मिता आसन्नात्मानं गाश्च मोचिताः ॥ १३ ॥ कृष्णस्य योगवीर्यं तद्योगमायानुभावितम् । दावाग्नेरात्मनः क्षेमं वीक्ष्य तं मेनिरेऽमरम् ॥ १४ ॥ गाः संनिवर्त्य सायाह्ने सहरामो जनार्दनः । वेणुं विरणयन्गोष्ठमगाद्गोपैरभिष्टुतः ॥१५॥ गोपीनां परमानन्द आसीद्गोविन्ददर्शने । क्षणं युगशतमिव यासां येन विनाभव-

---

னல்லர். இது நிஸ்சயம். நாங்கள் உம்மையே நாதனாகவுடையவர்களும் உம்மையே தைவமாகக் கொண்டவர்களுமல்லவோ? (10)

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்—பகவானான கிருஷ்ணன் பந்துக்களின் தீனமானவார்த்தையைக் கேட்டுக் கண்களைமூடிக் கொள்ளுங்கள் பயப்படாதிர்கள் என்றார். (11) அப்படியே யாகட்டுமென்று அவர்கள் கண்களை மூடிக்கொண்டதும் யோகாதீசனான பகவான் வாயினால் பயங்கரமான நெருப்பை விழுங்கி அவர்களைக் கஷ்டத்தினின்றும் விடுவித்தார். (12) பிறகு திரும்பவும் பாண்டீரமென்ற ஆலமரத்தினடியில் கொண்டு சேர்க்கப்பட்ட அவர்கள் கண்களைத்திறந்து தன்னையும் பசுக்களையும் காப்பாற்றப் பட்டவர்களாகக் கண்டு ஆச்சரியத்தை யடைந்தவர்களாக ஆயினர். (13) யோகமாயையினால் செய்யப்பட்ட கிருஷ்ணனுடைய அந்த யோகவீர்யத்தையும், காட்டுத்தீயிலிருந்து தங்களுடைய ரக்ஷணத்தையும் கண்டு அந்தக் கிருஷ்ணனை ஜராமரணமற்ற பரமேஸ்வரனாகவெண்ணினர். (14) ஜனார்த்தனன் பலராமனுடன் கூட மாலையில் பசுக்களைத் திருப்பிக் கொண்டு கோபாலர்களால் ஸ்துதிக்கப்பட்டவராய் வேணுவைவாசித்துக் கொண்டு கோகுலத்தை யடைந்தார். (15) எவரில்லாமல் எந்தக் கோபஸ்திரீகளுக்கு க்ஷணப்பொழுது கூட நூறு யுகங்கள் போல வாயிற்றோ அந்தக் கோபஸ்திரீகளுக்குக் கோவிந்தனைக்கண்டதும் பரமானந்தமானது உண்டாயிற்று. (16) காட்டுத்

त ॥१६॥ तयोस्तदद्भुतं कर्म दावाग्नेर्मोक्षमात्मनः। गोपाः स्त्रीभ्यः समाचख्युः प्रलम्बवधमेव च ॥ १७ ॥ गोपवृद्धाश्च गोप्यश्च तदुपाकर्ण्य विस्मिताः । मेनिरे देवप्रवरौ कृष्णरामौ व्रजं गतौ ॥ १८ ॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्द्धे दावाग्निपानं नामैकोनविंशोऽध्यायः ॥ १९ ॥

---

தீயினின்றும் தங்களை விடுவித்தல் ப்ரலம்பனுடைய வதம் என்ற அவ்விருவருடைய அந்த அத்புதமான காரியத்தையும், கோபாலர்கள் ஸ்திரீகளிடம் சொல்லினர். (17) கோபவ்ருத்தர்களும், கோபிகைகளும் அதைக்கேட்டு ஆஶ்சரியத்தை யடைந்தவர்களாய் பலராமனையும் கிருஷ்ணனை கோகுலத்தில் வந்த தேவசிரேஷ்டர்களாக எண்ணினர். (18)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண தசமஸ்கந்த பூர்வார்த்தத்தில் காட்டுத்தீயை விழுங்குதல் என்ற பத்தொன்பதாவது அத்தியாயம்முற்றிற்று.

### நாராயணீயம்.

त्वयि विहरणलोले बालजालैः प्रलंब-
प्रमथनसविलंबे धेनवः स्वैरचाराः ।
तृणकुतुकनिविष्टा दूरदूरं चरन्त्यः
किमपि विपिनमैषीकाख्यमीषांबभूवुः ॥ २१५ ॥

(ப—ரை) त्वयि=நீர் बालजालैः=குழந்தைகளின் கூட்டங்களுடன் विहरणलोले=விளையாடுவதில் ஈடுபட்டவராகவும், प्रलंबप्रमथनसविलंबे=ப்ரலம்பாஸுரனைக் கொல்லவேண்டி தாமதித்தவராகவுமிருக்கும்பொழுது, धेनवः=பசுக்கள் स्वैरचाराः=தமதிஷ்டப்படி ஸஞ்சரிக்கின்றனவாயும், तृणकुतुकनिविष्टाः=புற்களிலாவல் கொண்டனவாயும், दूरदूरम् = வெகு வெகுதூரத்தில் चरन्त्यः = ஸஞ்சரித்துங்கொண்டு ऐषीकाख्यम्=இஷீகமென்ற முஞ்ஜிப்புல் நிறைந்திருப்பது

பற்றி இஷீகமென்ற பெயரையுடையதும், किमपि=பிரவேசிக்கவியலாததுமான विपिनम्=காட்டை ईयांबभूवु:=அடைந்தன. (215)

अनधिगतनिदाघक्रौर्यवृन्दावनान्ता-
द्बहिरिदमुपयाता: काननं धेनवस्ता: ।
तव विरहविषण्णा ऊष्मलग्रीष्मताप-
प्रसरविसरदंभस्याकुला: स्तंभमापु: ॥ २१६ ॥

(ப-ரை) अनधिगतनिदाघक्रौर्यवृन्दावनान्तात्=அறியப்படாத கோடைக்காலத்தின் கொடுமையையுடைய பிருந்தாவனத்தின் எல்லையிலிருந்து बहि:=வெளியிலுள்ள इदम्=இந்த काननम्=காட்டை उपयाता:=அடைந்த ता:=அந்த धेनव:=பசுக்கள் तव=உம்முடைய विरहविषण्णा:=வியோகத்தினால் தளர்ந்தனவாகவும், ऊष्मलग्रीष्मतापप्रसरविसरदंभस्याकुला:=மிக்கச்சூடான க்ரீஷ்மதாபத்தின் நிறைவினாலேற்பட்ட தாகத்தினால் கலங்கினவைகளாகவுமாகி स्तंभम्=செயலற்றிருத்தலை आपु:=அடைந்தன. (216) (எ-று)

तदनु सह सहायैर्दूरमन्विष्य शौरे
गलितसरणिमुञ्जारण्यसञ्जातखेदम् ।
पशुकुलमभिवीक्ष्य क्षिप्रमानेतुमारात्
त्वयि गतवति हीही सर्वतोऽग्निर्जजृंभे ॥ २१७ ॥

(ப-ரை) शौरे !=ஹே கிருஷ்ணா! तदनु=பிறகு सहायैस्सह=தோழர்களுடன் கூட दूरम्=வெகுதூரம் अन्विष्य=தேடி गलितसरणिमुञ्जारण्यसञ्जातखेदम्=நடக்கும் வழியற்றதும் முஞ்ஜிப்புல் நிறைந்ததுமான காட்டிலேற்பட்ட கஷ்டத்தையுடைய पशुकुलम्=பசுக்கூட்டத்தை अभिवीक्ष्य=சுற்றிலும் கண்ணுற்று क्षिप्रम्=சீக்கிரமாக आनेतुम्=ஓட்டிவருவதற்குவேண்டி आरात्=அவற்றினருகில் त्वयि=நீர் गतवति=போனபொழுது अग्नि:=அக்கியானது सर्वत:=பசு, கோபாலர் இவர்களைச் சுற்றிலும் हीही=ஹீஹீ என்ற சப்தத்துடன் जजृंभे=விருத்தியையடைந்தது. (217) (எ-று)

सकलहरिति दीप्ते घोरभाङ्कारभीमे
शिखिनि विहतमार्गा अर्धदग्धा इवार्ता: ।
अहह भुवनबन्धो पाहि पाहीति सर्वे
शरणमुपगतास्त्वां तापहर्तारमेकम् ॥ २१८ ॥

(ப-ரை) सकलहरिति=எல்லாத்திக்குகளிலும் शिखिनि=நெருப்பானது घोरभाङ्कारभीमे=கொடுமைவாய்ந்த பாம்பாம் என்ற ஒலியினால் பயத்தை விளைவிக்கின்றதாய் दीप्ते=பிரகாசிக்குங்கால் विहतमार्गाः=வெளியில் வரவழியையறியாதவர்களும் अर्धदग्धाः=பாதி பொசுக்கப்பட்டவர்களுமான सर्वे=யாவரும் (பசுக்களும் கோபாலர்களும்) आर्ता इव=ஸாம்ஸாரிகமான துக்கத்தையடைந்தவர்கள் போல अहह !=அந்தோ! அந்தோ! भुवनबन्धो !=எல்லா உலகுக்கும் பந்துவான கிருஷ்ண! पाहि पाहि=காரும் காரும் என तापहर्तारम्=*தாபத்தைப் போக்குகின்ற त्वामेकम्=உம்மொருவரையே शरणमुपगताः=சரண்புகுந்தனர். (218) (எ-று)

अलमलमतिभीत्या सर्वतो मीलयध्वं
दृशमिति तव वाचा मीलिताक्षेषु तेषु ।
क्नु दवदहनोऽसौ कुत्र मुञ्जाटवी सा
सपदि ववृतिरे ते हन्त भाण्डीरदेशे ॥ २१९ ॥

(ப-ரை) अतिभीत्या=அதிகமான பயத்தினால் अलमलम्=போதும் போதும் सर्वतः=யாவரும் दृशम्=கண்ணை मीलयध्वम्=மூடிக்கொள்ளுங்கள் इति=என்ற तव=உம்முடைய वाचा=வார்த்தையினால் तेषु=அவர்கள் मीलिताक्षेषु=மூடப்பட்ட கண்களையுடையவர்களாகவானபொழுது असौ=இந்த दवदहनः=காட்டுத்தீயானது क्नु=எங்கேயோ, सा=அந்த मुञ्जाटवी=முஞ்ஜிக்காடானது कुत्र=எங்கேயோ (இரண்டும் இருந்தவிடம் தெரியாமல் மாயமாய் மறைந்துவிட்டது என்பது கருத்து.) सपदि=உடனேயே ते=அவர்கள் भाण्डीरदेशे=பாண்டீரமென்ற ஆலமரமிருக்குமிடத்தில் ववृतिरे=இருப்பவர்களாகவாயினர். हन्त=இது வெகு ஆஸ்சரியமாகவிருந்தது. (219) (எ-று)

जय जय तव माया केयमीशेति तेषां
नुतिभिरुदितहासो बद्धनानाविलासः ।
पुनरपि विपिनान्ते प्राचरः पाटलादि-
प्रसवनिकरमात्रग्राह्यघर्मानुभावे ॥ २२० ॥

---

* உலகில் ஸாம்ஸாரிகமான தாபத்தையடைந்தவர்கள் அத்தகைய தாபத்தைப்போக்கும் ஸ்ரீகோபாலன் ஒருவரையே எவ்விதம் சரண்புகுவாரோ அவ்விதமே இதுவுமிருந்தது என்பதுகருத்து.

(ப-ரை) हे ईश !=ஹே ஈசனே ! जय जय = லோகோத்தாராக அவிராக इयम्=இது तव=உம்முடைய का=என்ன माया=மாயை इति= என तेषाम्=அவர்களுடைய नुतिभि:=ஸ்தோத்திரங்களினால் उदित-हास:=உண்டுபண்ணப்பட்ட சிரிப்பையுடையவராகவும் बद्धनानाविलास:=அமைக்கப்பட்ட பலவிதமான விளையாட்டையுடையவராகவும் கொண்டு पाटलादिप्रसवनिकरमात्रग्राह्यघर्मानुभावे=பாதிரி முதலிய புஷ்பங்களின் கூட்டத்தினால் மட்டும் அறியக்கூடிய வெய்யில் கால மஹிமையையுடையதான विपिनान्ते=பிருந்தாவனத்தின் நடுவில் पुनरपि=திரும்பவும் प्राचर:=ஸஞ்சரித்து வந்தீர். (220) (எ-று)

त्वयि विमुखमिवोच्चैस्तापभारं वहन्तं
तवभजनवदन्त: पङ्कमुच्छोषयन्तम् ।
तव भुजवदुदञ्चद्भूरितेज:प्रवाहं
तपसमयमनैषीर्यामुनेषु स्थलेषु ॥ २२१ ॥

(ப-ரை) उच्चै:=மேன்மேலும் तापभारम्=தாபச்சுமையை (அதாவது:—ஆத்யாத்மிக, ஆதிபௌதிக ஆதிதைவிகங்களாகிற துக்கச்சுமையை என்றும்.) वहन्तम्=வஹிக்கின்ற(அனுபவிக்கின்ற)त्वयि=உம் விஷயத்தில் विमुखमिव=பக்தியில்லாதவனைப்போல उच्चैस्तापभारम्= மேன்மேலும் அதிகச் சூட்டை वहन्तम्=உண்டுபண்ணுகின்றதும், अन्त:=உள்ளிலுள்ள (மனத்திலுள்ள) पङ्कम्=பாபத்தைத உச்சோஷ-यन्तम्=முற்றிலும் போக்குகின்ற तवभजनवत्=உமது பக்தியைப் போல अन्त:=நதி குளம் இவற்றினுள்ளிலிருக்கின்ற पङ्कम्=சேற்றை उच्छोषयन्तम्=உலர்த்திவிடுகின்றதும், उदञ्चद्भूरितेज:प्रवाहम्=மேன் மேலும் விருத்தியாகிக்கொண்டிருக்கின்ற அதிக பராக்கிரமத்தின் பெருக்கையுடைய तव=உம்முடைய भुजवत्=தோளைப்போல उदञ्चद्भूरितेज:प्रवाहम्=மேன்மேலும் வளர்ந்துகொண்டிருக்கிற வெய்யிலின் பெருக்கையுடையதுமான तपसमयम्=க்ரீஷ்மகாலத்தை यामुनेषु= யமுனையையடுத்துள்ள स्थलेषु=இடங்களில் अनैषी:=கழித்தீர். (221)

तदनु जलदजालैस्त्वद्वपुस्तुल्यभाभि:
विकसदमलविद्युत्पीतवासोविलासै: ।
सकलभुवनभाजां हर्षदां वर्षवेलां
क्षितिधरकुहरेषु स्वैरवासी व्यनैषी: ॥ २२२ ॥

(ப—ரை) तदनु=பிறகு त्वद्वपुस्तुल्यभाभि:=உமது சரீரத்துக் கொப்பான (அதாவது: கருத்த) காந்தியையுடையனவும், विकसदमलविद्युत्पीतवासोविलासै:=மின்னுகின்றதும், அழுக்கற்றதுமான மின்னல்களாகிற பீதாம்பரத்தின் சோபையையுடையனவுமான जलदजालै:=மேகக்கூட்டங்களினால் सकलभुवनभाजाम्=எல்லா வுலகங்களிலுமிருக்கின்ற ப்ராணிகளுக்கும் हर्षदाम्=ஸந்தோஷத்தைத் தருகின்ற वर्षवेळाम् = வர்ஷாகாலத்தை क्षितिधरकुहरेषु = மலையின் குஹைகளில் स्वैरवासी=தனதிஷ்டப்படி வஸிக்கின்றவராய் अनैषी:= போக்கினீர். (222) (எ—று)

कुहरतलनिविष्टं त्वां गरिष्ठं गिरीन्द्रः
शिखिकुलनवकेकाकाकुभि: स्तोत्रकारी ।
स्फुटकुटजकदम्बस्तोमपुष्पाञ्जलिं च
प्रविदधदनुभेजे देव गोवर्धनोऽसौ ॥ २२३ ॥

(ப—ரை) देव !=ஹே தேவனே! गिरीन्द्र:=பர்வதஶ்ரேஷ்டனான असौ=இந்த गोवर्धन:=கோவர்த்தன மலையானது कुहरतलनिविष्टम्= குஹையின் தரையினுட்கார்ந்து கொண்டிருக்கின்றவரும் गरिष्ठम्= மஹானுபாவருமான त्वाम्=உம்மை शिखिकुलनवकेकाकाकुभि:=மயில் கூட்டங்களின் புதிதான கேகா என்ற சப்தமாகிற காகுகளினால் (பக்திப்பெருக்கினால் வெளியிடப்பட்ட விசேஷ வார்த்தைகளினால்) स्तोत्रकारी=ஸ்தோத்திரஞ் செய்துகொண்டும் स्फुटकुटजकदम्बस्तोमपुष्पाञ्जलिम्=மலர்ந்த காட்டுமுல்லை அடப்பமரம் இவற்றின் கூட்டங்களினால் புஷ்பாஞ்ஜலியை विदधच्च=செய்து கொண்டும் अनुभेजे= உபாஸித்து வந்தது. (223) (எ—று)

अथ शरदमुपेतां तां भवद्भक्तचेतो-
विमलसलिलपूरां मानयन् काननेषु ।
तृणममलवनान्ते चारु सञ्चारयन् गा:
पवनपुरपते त्वं देहि मे देहसौख्यम् ॥ २२४ ॥

(ப—ரை) पवनपुरपते !=குருவாயூருக்குப் பதியான கிருஷ்ண! अथ=பிறகு भवद्भक्तचेतोविमलसलिलपूराम्=உமது பக்தனுடைய சித்தம்போலத் தெளிந்த ஜலப்பெருக்கையுடையதும், उपेताम्=அபிஸாரிணியான நாயிகைபோல ப்ராப்த்தமானதுமான ताम् = அந்த

## अथ विंशोऽध्यायः ॥

**श्रीशुक उवाच—ततः प्रावर्तत प्रावृट् सर्वसत्त्वसमुद्भवा । विद्योतमानपरिधिर्विस्फूर्जितनभस्तला ॥ १ ॥ सान्द्रनीलाम्बुदैर्व्योम सविद्युत्स्त-**

---

**द्वारकम्**=சாத்ருதுவை **काननेषु**=காடுகளில் **मानयन्**=பூஜித்துக்கொண்டும் **अमलघनान्ते**=அழுக்கற்ற (அல்லது அழகிய) காட்டின் நடுவில் **गाः**=பசுக்களை **चारु**=அழகிய (பசுமையான) **तृणम्**=புல்லை **सञ्चारयन्**=மேயச் செய்துகொண்டும் இருந்த **त्वम्**=நீர் **मे**=எனக்கு **देहसौख्यम्**=சரீர சவுக்கியத்தை **देहि**=தருவீராக. (224) (எ—று)

இவ்விதம் பசு, கோபாலர் இவர்களைக் காட்டுத்தீயினின்றும்
விடுவித்தலை வர்ணிப்பதும், ருதுக்களை வர்ணிப்பதுமான
ஐம்பத்தெட்டாவது தசகம் முற்றிற்று.



### இருபதாவது அத்தியாயம்.

(அ—கை) विंशे प्रावृट्छरच्छोभावर्णनेन वनोचिताः ।
प्रावृट्क्रीडा निरूप्यन्ते गोपरामयुजो हरेः ॥ १ ॥
हेयादेयोपमानेन प्रावृट्छरदृतुश्रियोः ।
वर्णनन्त्वद्भुतैश्वर्यकृष्णलीलाविवक्षया ॥ २ ॥

(க—ரை) மழைக்காலம் சரத்காலம் இவற்றை வர்ணித்தல் வாயிலாக கோபர் பலராமன் இவர்களுடன் சேர்ந்த ஹரியினுடைய வனவாஸத்துக்குசிதங்களான வர்ஷாகால க்ரீடைகள் இந்த இருபதாவது அத்தியாயத்தில் சொல்லப்படுகின்றன. (1) விடத்தக்கதையும், எடுக்கத் தக்கதையும் உபமானமாகக்காட்டி வர்ஷருது சரத்ருது இவற்றின் சோபையை வர்ணித்தலானது அத்புதமான ஐஸ்வரியம் வாய்ந்த ஸ்ரீகிருஷ்ணனுடைய லீலையைச் சொல்லவேண்டியாம். (2) (எ—று)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—பிறகு எல்லா ப்ராணிகளுடையவும் உத்பத்தியையுடையதும், மிக்கப்ரகாசிக்கின்ற கோட்டையையுடையதும், நன்கு கலங்கின ஆகாசப்ரதேசத்தையுடையதுமான வர்ஷா காலமானது ஆரம்பமாயிற்று. (1) மின்னல் இடி முழக்கம் இவற்

नयित्नुभिः । अस्पष्टज्योतिराच्छन्नं ब्रह्मेव सगुणं बभौ ॥ २ ॥ अष्टौ मासान्निपीतं यद्भूम्याश्चोदमयं वसु । स्वगोभिर्मोक्तुमारेभे पर्जन्यः काल आगते ॥ ३ ॥ तडित्वन्तो महामेघाश्चण्डश्वसनवेपिताः । प्रीणनं जीवनं ह्यस्य मुमुचुः करुणा इव ॥ ४ ॥ तपःकृशा देवमीढा आसीद्वर्षीयसी मही । यथैव काम्यतपसस्तनुः संप्राप्य तत्फलम् ॥ ५ ॥ निशामुखेषु

---

றுடன் கூடின நெருக்கமான கருத்தமேகங்களினுல் மறைக்கப்பட்ட ஆகாசமானது தெளிவற்ற ஜ்யோதிஸ்ஸை (ஸ்வரூப ப்ரகாசத்தை) யுடையதும், ஸகுணமும் (ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற குணங்களுக்கு வசப்பட்டதும்) ஆன ப்ரம்ஹம் போல (ஜீவத்தன்மையையடைந்த ப்ரம்ஹம் போல) விளங்கிற்று.* (2) எட்டு மாதங்கள் முழுதும் தனது கிரணங்களால் பூமியினின்றும் குடிக்கப்பட்ட ஜலமயமான யாதொரு பொருளுண்டோ (அதைக்) காலம்வந்ததும் பர்ஜன்யன்= ஸூரியன் (*)திருப்பிக்கொடுப்பதற்கு ஆரம்பித்தான். (3) மின்னலுடன் கூடின பெரிய மேகங்கள் பெரிய காற்றினுலசைக்கப்பட்டனவாய்க் கொண்டு கருணை நிரம்பின மஹான்கள் போல இந்த வுலகுக்குத் திருப்தியைத் தரும் ஜலத்தை வர்ஷித்தன.(0) (4) கோடைக் காலத்தினுல் இளைத்ததும்(பின்னர்)பர்ஜன்யதேவனுல் நனைக்கப்பட்டதுமான பூமியானது காம்யமான தவஞ்செய்கின்றவரின் தேஹமானது தேவனுல்தரப்பட்ட அத்தவப்பயனை நன்கு அடைந்த பின்னர் எவ்விதம் பெருக்குமோ அவ்விதம் பெருத்ததாகவாயிற்று. (5) இரவின் தொடக்கங்களில் இருளினுல் மினுமினுப் பூச்சிகள்

---

* மின்னல் ஸத்வகுணத்துக்கும், கர்ஜிதம் ரஜோகுணத்துக்கும், மேகம் தமோகுணத்துக்கும் உபமையாக்கப் பட்டதெனக் கொள்ளவும்.

(*) இதனுல் கப்பம் வாங்குவதும், சமயம்வந்தபோது ஜனங்களுக்கு அதைத் திருப்பிக்கொடுப்பதுமான ராஜாக்களுடைய செய்கை ஸூசிப்பிக்கப்பட்டது.

(0) இதனுல் தயாவான்கள் தாபமுறும் ஜனங்களைக் கண்டு இரங்கினவர்களாய்த் தமது ஜீவனத்தையும் (உயிரையும்) கூட விடத்துணிவது எவ்விதமோ அவ்விதமே மேகங்களும் தாபமுறும் உலகைக்கண்டு வாயுவினுல் அசைக்கப்பட்டனவாய் ஜலத்தை வர்ஷித்தன என வுபதேசிக்கப்பட்டது.

**खद्योतास्तमसा भान्ति न ग्रहाः। यथा पापेन पाखण्डा न हि वेदाः कलौ युगे ॥ ६ ॥ श्रुत्वा पर्जन्यनिनदं मण्डूका व्यसृजन्गिरः। तूष्णीं शयानाः प्राग्यद्ब्राह्मणा नियमात्यये ॥ ७ ॥ आसन्नुत्पथवाहिन्यः क्षुद्रनद्योऽनुशुष्यतीः। पुंसो यथाऽस्वतन्त्रस्य देहद्रविणसंपदः ॥ ८ ॥ हरिता हरिभिः शष्पैरिन्द्रगोपैश्च लोहिता। उच्छिलीन्ध्रकृतच्छाया नृणां श्रीरिव भूरभूत् ॥ ९॥ क्षेत्राणि सस्यसंपद्भिः कर्षकाणां मुदं ददुः। धनिनामुपतापं च दैवा-**

---

விளங்கினவேயன்றி க்ரஹங்கள் பிரகாசிக்கவில்லை. அது கலியுகத்தில் பாபத்தினுல் வேதவிருத்த மார்க்கங்களேயன்றி வேதங்கள் எவ்விதம் பிரகாசிக்காவோ அதுபோலவிருந்தது.* (6) தவக்களைகள், மேகங்களின் கர்ஜனையைக்கேட்டு நித்யகர்மத்தின் முடிவில் ஆசிரியரின் சப்தத்தைக்கேட்டு முன்னர் மௌனமாகப் படுத்திருந்த ப்ராம்ஹண சிஷ்யர்கள் போலத் தமது வாக்கை வெளியிட்டன. (7) கோடைகாலத்தில் வறண்டுபோயிருந்த அற்பநதிகள் இந்திரியவசப்பட்ட அல்லது எவருக்கும் அடங்காத புருஷனுடைய தேஹம், பணம் இவற்றின் நிறைவுகள் போல வழி கடந்து செல்லுகின்றனவாகவாயின. (8) பசும் புற்களால் பசுமை நிறம் வாய்ந்ததும், பட்டுப் பூச்சிகளால் சிவந்ததும், நாய்க்குடைகளினுலேற்பட்ட நிழலையுடையதுமான பூமியானது அரசர்களின் சேனைரூபமான ஸம்பத்தானது போலவாயிற்று. (9) நெல்விளையும் வயல்கள் உழவு தொழில் செய்பவர்க்குப் பயிர்களின் நிறைவுகளினுல் சந்தோஷத்தையும், (மழை பொழிவதும் பொழியாததும்) தைவாதீனம் என்பதையறியாதவர்களான தனிகர்களுக்கு அனுதாபத்தையும் கொடுத்தன.†

---

* இதனுல் கலியுகத்தில் வேதவிருத்த மார்க்கத்தைப் பின்பற்றினவர்களுக்குப் பாபவசத்தால் பெருக்கும் வைதிகர்களான ஸாதுக்களுக்குத் திமையும் சூசிப்பிக்கப்பட்டது.

† வர்ஷாகாலத்தில் தொடர்ந்து மழைபெய்தால் ப்ரியங்கு (இது ஞாழல் எனப்படும். ஞாழல் என்பதற்குத் தமிழகராதியில் குங்குமமரம், கொங்கு மரம், பொன்னுவிரை முதலிய பொருள் கூறப்பட்டிருக்கிறது) முதலியன பலித்துப்பயிரிபெவர்க்குச் சந்தோஷத்தைத் தருகின்றன. மழை ஓய்ந்தால் முற்கூறியவற்றின் பலிதம் குறையுமாதலால் தனிகர்களுக்கு (அத்தகைய மரங்களின் முதலாளிக்குத்) தாபத்தைத் தருகின்றன என ஸ்ரீதரீயவியாக்யானத்தில் பொருள் கூறப்பட்டிருக்கிறது.

धीनमजानताम् ॥ १० ॥ जलस्थलौकसः सर्वे नववारिनिषेवया । अबिभ्रद्रुचिरं रूपं यथा हरिनिषेवया ॥ ११ ॥ सरिद्भिः सङ्गतः सिन्धुश्चुक्षुभे श्वसनोर्मिमान् । अपक्वयोगिनश्चित्तं कामाक्तं गुणयुग्यथा ॥ १२ ॥ गिरयो वर्षधाराभिर्हन्यमाना न विव्यथुः । अभिभूयमाना व्यसनैर्यथाधोक्षजचेतसः ॥ १३ ॥ मार्गा बभूवुः संदिग्धास्तृणैश्छन्ना ह्यसंस्कृताः । नाभ्यस्यमानाः श्रुतयो द्विजैः कालहता इव ॥१४॥ लोकबन्धुषु मेघेषु विद्युतश्चलसौहृदाः । स्थैर्यं न चक्रुः कामिन्यः पुरुषेषु गुणिष्विव ॥ १५ ॥ धनुर्वियति माहेन्द्रं

ஜலத்திலும் தரையிலும் வஸிப்பனவெல்லாம் புதிதான ஜலத்தை நன்கு குடித்தமைபற்றி (1)ஹரியினுடைய ஸேவையினல் போல அழகிய ரூபத்தைத் தரித்தன. (11) நதிகளுடன் கூடினதும், காற்றினல் அலைகளுள்ளதுமான சமுத்திரமானது, காமம் நிறைந்ததும் பரிபக்வ நிலையையடையாததுமான யோகியினுடைய சித்தமானது விஷயங்களுடன் கூடினல் எப்படியோ அப்படி கலக்கத்தையடைந்தது. (12) மலைகள் மழைத்தாரைகளால் அடிக்கப்படினுங்கூட துக்கங்களால் பீடிக்கப்படினுங்கூட அதோக்ஷஜ (ஸ்ரீகிருஷ்ண) னிடத்தில் செலுத்தின புத்தியையுடையவர்கள் போல அசையாதிருந்தன. (13)

வழிகள் புற்களால் மறைக்கப்பட்டனவாகவும், கால்பட்டுத் தேயாதனவுமாகி ப்ராம்ஹணர்களால் ஆவிருத்தி செய்யப்படாதனவும்காலத்தால் ஹதங்களும் (வெகுகாலம் சொல்லப்படாமைபற்றி மறந்துபோனவும்) ஆன வேதங்கள் போல சந்தேஹிக்கக்கூடிய நிலையையடைந்தனவாகவாயின. (14) மின்னல்கள் லோகபந்துக்களான மேகங்களில் சலித்த பற்றுள்ளனவாகவாகி வியபிசாரிகளான ஸ்திரீகள் நற்குணம் வாய்ந்த புருஷர்களிடத்திற்போல நிலைத்து நிற்றலையடையவில்லை (15) இந்திர தனுஸ்ஸானது குணமற்ற (ஞாணற்ற) தாயினுங்கூட கர்ஜிதம் முதலிய குணமுள்ள ஆகாசத்தில் குண ஸம்

(1) ஹரிஸேவையானது பரமதர்ம ரூபமாகவும் பரமசுகரூபமாகவுமிருப்பதால் அதிலீடுபட்டவர்க்கு உடனேயே அழகிய ரூபங்களுண்டாகின்றன என்பது கருத்து.

निर्गुणं च गुणिन्यभात्। व्यक्ते गुणव्यतिकरेऽगुणवान्पुरुषो यथा ॥ १६ ॥
न रराजोडुपश्छन्नः स्वज्योत्स्नाराजितैर्घनैः। अहंमत्या भासितया स्वभासा
पुरुषो यथा ॥ १७ ॥ मेघागमोत्सवा हृष्टाः प्रत्यनन्दन् शिखण्डिनः।
गृहेषु तप्ता निर्विण्णा यथाच्युतजनागमे ॥ १८ ॥ पीत्वापः पादपाः पद्भि-
रासन्नानात्ममूर्तयः। प्राक्क्षामास्तपसा श्रान्ता यथा कामानुसेवया ॥१९॥
सरःस्वशान्तरोधःसु न्यूषुरङ्गापि सारसाः। गृहेष्वशान्तकृत्येषु ग्राम्या
इव दुराशयाः ॥ २० ॥

जलौघैर्निरभिद्यन्त सेतवो वर्षतीश्वरे। पाखण्डिनामसद्वादैर्वेदमार्गाः

---

பந்தம்பெற்ற வ்யக்தமான ப்ரபஞ்சத்தில் உண்மையில் குணஸம்பந்தமற்ற புருஷன் போல (நிர்க்குணப்ரம்ஹம்போல) விளங்கிற்று. (16) தன்னுடைய ஒளியினுல் ப்ரகாசிப்பிக்கப்பட்ட மேகங்களினுல் மறைக்கப்பட்ட சந்திரன் * தனதுஸ்வரூபத்தை தன்னியத்தினுல் ப்ரகாசப்படுத்தப்பட்ட அஹங்காரத்தினுல் மறைக்கப்பட்ட புருஷன்போலத் தெளிவாய் விளங்கவில்லை. (17) மேகங்களின் வரவினுல் சந்தோஷத்தையுடையனவும் ஆனதுபற்றியே கொழுப்பேறினவைகளுமான மயில்கள், குடும்பபாலனதிகாரியங்களினுல் தாபத்தையடைந்தவர்களும் ஆனதுபற்றியே வைராக்கியத்தை யடைந்தவர்களுமான ஸாதுக்கள் ஹரிபக்தஜனங்கள் வந்ததும் ஸந்தோஷிப்பது போலிருந்தன. (18) மரங்கள் வேர்களினுல் ஜலத்தைக் குடித்து, முன்னர் தபஸ்ஸினுல் இளைத்தவர்களும் களைத்தவர்களுமான ஜனங்கள் பின்னர் வேண்டிய பொருளின் சேவையினுல் போல அனேகரூபமுள்ள தேஹமுள்ளனவாக வாயின. (19) ஹே அங்க! சக்கிரவாகங்கள் சேர் முள்ளு முதலியவை நிறைந்தனவாயினுங்கூட தடாகங்களில் கெட்ட சித்தமுள்ள மூடர்கள் ஓயாதகார்யங்கள் நிறைந்த விட்டில் போல வஸித்துவந்தன. (20) கலியில் பாஷண்டிகளின் (வைதிகஸம்ஸ்காரம்பெறுதவர்களின்) கெட்டவாதங்களினுல் வேதமார்க்கங்கள்போல இந்திரன் மழையைப் பொழியுங்கால்

---

* அல்லது स्वभासा = நான் வித்வான், கொடையாளி, சூரன் என்றதாதியான சொந்தத் தோற்றத்தினுலாரோபிக்கப்பட்ட அஹங்காரத்தினுல் என வேறு பொருளும் ஸ்ரீதரீயத்தில் கூறப்பட்டிருக்கிறது.

कलौ यथा ॥ २१ ॥ व्यमुञ्चन्वायुभिर्नुन्ना भूतेभ्योऽथामृतं घनाः । यथाशिषो विश्पतयः काले काले द्विजेरिताः ॥ २२ ॥ एवं वनं तद्वर्षिष्ठं पक्वखर्जूरजम्बुमत् । गोगोपालैर्वृतो रन्तुं सबलः प्राविशद्धरिः ॥ २३ ॥ धेनवो मन्दगामिन्य ऊधोभारेण भूयसा । ययुर्भगवताहूता द्रुतं प्रीत्या स्नुतस्तनीः ॥ २४ ॥ वनौकसः प्रमुदिता वनराजीर्मधुच्युतः । जलधारा गिरेर्नादानासन्ना ददृशे गुहाः ॥ २५ ॥ क्वचिद्वनस्पतिक्रोडे गुहायां चाभिवर्षति । निर्विश्य भगवान्रेमे कन्दमूलफलाशनः ॥ २६ ॥ दध्योदनं समानीतं

---

ஏற்பட்ட ஜலப்பெருக்குகளினுல் கரைகள் உடைந்து போயின. (21) ராஜாக்கள் புரோஹிதர்களின் வார்த்தையைக் கேட்டு அந்த ந்தக்காலத்தில் வேண்டுவனவற்றைக் கொடுப்பது போல மேகங்கள் காற்றினுல் அசைக்கப்பட்டனவாய் ப்ராணிகளுக்கு அப்பொழுது. ஜலத்தைக் கொடுத்தன. (22) இவ்விதம் அதிகம் ஸமிருத்தி(நிறைவு) யுள்ளதும், பழுத்த பேரீச்சை, நாகை முதலிய மரங்களையுடையது மான அந்த வனத்தில் பசு, கோபாலர் இவர்களால் சூழப்பட்ட வரும் பலராமனுடன் கூடினவருமான கிருஷ்ணன் விளையாடுவதற்குவேண்டி பிரவேசித்தார். (23) பெருத்த மடியின் சுமையினுல் மெள்ளமெள்ள நடக்கின்ற பசுக்கள் பகவானுல் அழைக்கப்படவே படியினின்றும் பெருகின பாலையுடையனவாய் ப்ரீதியினுல் வேகமாக ஓடிவந்தன. (24) அச்யுதனுன கிருஷ்ணன் மிக்கச்சந்தோஷத்தை யடைந்த வேடுவஸ்திரீகளையும், தேனைப்பெருக்குகின்ற மரக்கூட்டங்களையும், மலையினின்றும் விழுகின்ற நீர்த்தாரைகளையும், அவற்றின் சப்தங்களையும், அருகிலுள்ள குஹைகளையும் கண்ணுற்ருர். (25) ஒருஸமயம் * இந்திரன் மழைபொழியுங்கால் பகவானுன கிருஷ்ணன் குஹையில் ப்ரவேசித்து கிழங்கு வேர் பழம் இவற்றைச் சாப்பிட்டுக் கொண்டு ஸந்தோஷித்தார். (26) பலராமனுடன் கூடினவராய் கூடவிருந்து சாப்பிடத்தகுந்தவர்களான (ஸ்ரீதாமா முதலிய) கோபாலர்களுடன் கற்பாறையில் ஓடுகின்ற ஜலத்தினருகிலுட்கார்

---

* वनस्पतिक्रोडे = என்பது மூலம். இதற்கு வனஸ்பதிகளுக்கு (மரங்களுக்கு) க்ரோடத்தை முகத்தை—அதாவது: முளையைத்தருகின்ற இந்திரன் என்றும், அல்லது விருக்ஷங்களின் அடியில் என்றும் வம்சிதரர் பொருள் கூறியிருக்கிருர்.

शिलायां सलिलान्तिके। सम्भोजनीयैर्बुभुजे गोपैः सङ्कर्षणान्वितः ॥ २७ ॥ शाद्वलोपरि संविश्य चर्वतो मीलितेक्षणान्। तृप्तान्वृषान्वत्सतरान्गाश्च स्वोधोभरश्रमाः ॥ २८ ॥ प्रावृट्श्रियं च तां वीक्ष्य सर्वभूतमुदावहाम्। भगवान्पूजयाञ्चक्रे आत्मशक्त्युपबृंहिताम् ॥ २९ ॥ एवं निवसतोस्तस्मिन्रामकेशवयोर्व्रजे। शरत्समभवद्व्यभ्रा स्वच्छाम्ब्वपरुषानिला ॥३०॥ शरदा नीरजोत्पत्त्या नीराणि प्रकृतिं ययुः। भ्रष्टानामिव चेतांसि पुनर्योगनिषेवया ॥ ३१ ॥ व्योम्नोऽब्दं भूतशाबल्यं भुवः पङ்कमपां मलम्। शरज्ज-

---

ந்துகொண்டு வீட்டிலிருந்து கொண்டுவரப்பட்ட தயிர்சாதத்தைச் சாப்பிட்டார். (27) பகவானான கிருஷ்ணன் புல்தரையில் படுத்துக் கொண்டு கண்களை மூடிக்கொண்டு அசைவுபோடுகின்றனவும் திருப்தியையடைந்தனவுமான விருஷபங்களையும், மாட்டுமரத்த கன்றுகளையும், தமது மடியின் பாரத்தினால் ப்ரமத்தை யடைந்த பசுக்களையும், தனது சக்தியினால் விருத்தி செய்யப்பட்டதும் எல்லாப்ராணிகளுக்கும் சந்தோஷத்தைத் தருகின்றதுமான அந்த வர்ஷாகால சோபையையும் கண்ணுற்று சந்தோஷித்தார். (28-29)

ராமகிருஷ்ணர்கள் இவ்விதம் அந்தக் கோகுலத்தில் வசித்து வருங்கால் மேகங்களற்றதும் தெளிந்த ஜலத்தையுடையதும் சாந்தமான காற்றையுடையதுமான சரத்ருதுவானது உண்டாயிற்று. (30) தாமரைபுஷ்பங்களி னுத்பத்தியையுடையதான சரத்ருதுவினால் யோகப்ரஷ்டர்களின் சித்தங்கள் திரும்பவும் யோகானுஷ்டானத்தினால் போல ஜலங்கள் ஸ்வபாவத்தை (தனக்கியற்கையான தெளிவை) அடைந்தன. (31) * நான்கு ஆஸ்ரமிகளுடையவும்

---

* பிரும்மசாரி, கிருஹஸ்தன், வானப்ரஸ்தன், ஸன்யாஸி, என நான்கு ஆச்ரமிகளுண்டு. அவர்களுள் பிரும்மசாரிக்கு குருவுக்குவேண்டி தர்ப்பம் ஸமித்து முதலியவற்றைக் கொண்டுவருதல் மூலம் நேரும் கஷ்டத்தை ஹரிபக்தியானது போக்குவது போலும், கிருஹஸ்தனுக்கு குழந்தை முதலியவற்றுடன் சேர்க்கையாலுண்டான ச்ரமத்தை ஹரிபக்தி போக்குவது போலும், வானப்ரஸ்தனுக்கு சரீரத்தில் அழுக்கு முதலியவற்றைத் தரித்தலாலுண்டாகும் கிலேசத்தை ஹரிபக்தியானது போக்குவது போலும், ஸன்யாஸிக்கு காமாதிவாஸனைமூலமேற்படும் அழுக்கை ஹரிபக்திபோக்குவதுபோலுமிருந்தது என்றும். அதாவது:—பகவத்பக்தி

हाराश्रमिणां कृष्णे भक्तिर्यथाऽशुभम् ॥ ३२ ॥ सर्वस्वं जलदा हित्वा विरेजुः शुभ्रवर्चसः । यथा त्यक्तैषणाः शान्ता मुनयो मुक्तकिल्बिषाः ॥ ३३ ॥ गिरयो मुमुचुस्तोयं क्वचिन्न मुमुचुः शिवम् । यथा ज्ञानामृतं काले ज्ञानिनो ददते न वा ॥ ३४ ॥ नैवाविदन्क्षीयमाणं जलं गाधजलेचराः । यथायुरन्वहं क्षय्यं नरा मूढाः कुटुम्बिनः ॥ ३५ ॥ गाधवारिचरास्तापमविन्दन् शरदर्कजम् । यथा दरिद्रः कृपणः कुटुम्ब्यविजितेन्द्रियः ॥ ३६ ॥ शनैः शनैर्जहुः

---

கஷ்டத்தைக் கிருஷ்ணபக்தி எவ்விதம் போக்குமோ, அவ்விதம் சரத்காலமானது ஆகாசத்தினின்றும் மேகத்தையும், ப்ராணிகளின் நெருங்கின வாஸத்தையும், பூமியினது சேற்றையும், ஜலங்களின் அழுக்கையும் போக்கிற்று. (32) மேகங்கள் தன்னிடமுள்ள ஜலம் யாவையும் வர்ஷித்து விட்டு வெளுத்தகாந்தியுள்ளனவாய்க் கொண்டு, புத்திரேஷணை, வித்தேஷணை, லோகேஷணை இவற்றைவிட்டவர்களும், விலக்கப்பட்ட பாபத்தையுடையவர்களும், ஆனதுபற்றியே சாந்தர்களும் (மனதடக்கமுள்ளவர்களும்)ஆன முனிகள் போல விளங்கின. (33) க்ஞானிகளான பெரியார் தனது அனுபவத்திலுள்ள க்ஞானாமுதத்தை யாவர்க்கு முபதேசிக்காது (அவ்வுபதேசம் பெறத் தகுதியுள்ள) சிலருக்கே கிருபையினாலுபதேசிப்பதுபோல மலைகள் தெளிந்த ஜலத்தை சிலவிடத்தில் மட்டும் பெருகவிட்டனவே அன்றி எல்லாவிடத்திலுமில்லை. (34) அற்பமான ஜலமுள்ளவிடத்தில் ஸஞ்சரிக்கின்ற மீன்முதலியவைகள் ஜலம்குறைந்து கொண்டு வருவதை, குடும்பிகளும் மூடர்களுமான மனிதர்கள் ஒவ்வொரு நாளும் தேய்ந்துகொண்டுவரும் ஆயுளைப்போல அறிந்துகொள்ளாமலே இருந்தன. (35) அற்பமான ஜலமுள்ளவிடத்தில் ஸஞ்சரிக்கின்ற ப்ராணிகள், தரித்ரனும், கிருபணனும் (கிடைத்ததை விட்டு விட மனமில்லாதவனும்) குடும்பியும் இந்திரியஜயமற்றவனுமான மனிதன் போல சரத்காலத்திய சூரியனாலுண்டான தாபத்தை யனுபவித்தன. (36) தீரர்கள் (புத்தியைத் தன்வசமாக்கினவர்கள்) சீ

---

யுடன் பிரும்ஹசர்யாத்யாச்ரமதர்மானுஷ்டானம் செய்பவர்க்குத் தமது அனுஷ்டானம் ஈச்வராராதனம் என்ற எண்ணமுண்டாகுமேயன்றி அனுஷ்டான காலத்திலியற்கையாக நேரும் சிரமத்தை சிரமமாக அவர் ஒரு பொழுதும் எண்ணமாட்டார் என்பது கருத்து.

**पङ्कं स्थलान्यामं च वीरुधः। यथाहंममतां धीराः शरीरादिष्वनात्मसु ॥ ३७ ॥ निश्चलाम्बुरभूत्तूष्णीं समुद्रः शरदागमे। आत्मन्युपरते सम्यङ् मुनिर्व्युपरतागमः॥ ३८ ॥ केदारेभ्यस्त्वपोऽगृह्णन्कर्षका दृढसेतुभिः। यथा प्राणैः स्रवज्ज्ञानं तन्निरोधेन योगिनः॥ ३९ ॥ शरदर्कांशुजांस्तापान्भूताना-मुडुपोऽहरत्। देहाभिमानजं बोधो मुकुन्दो व्रजयोषिताम् ॥ ४० ॥ खम-शोभत निर्मेघं शरद्विमलतारकम्। सत्त्वयुक्तं यथा चित्तं शब्दब्रह्मार्थदर्श-नम् ॥ ४१ ॥ अखण्डमण्डलो व्योम्नि रराजोडुगणैः शशी। यथा यदुपतिः कृष्णो वृष्णिचक्रावृतो भुवि ॥ ४२ ॥ आश्लिष्य समशीतोष्णं प्रसूनवनमारु-**

---

ராதிகளான அனாத்மபதார்த்தங்களில் நான் என்றும் என்னுடையது என்றுமான எண்ணத்தைப் போல, தரைகள் சேற்றையும், கொடிகள் அபக்குவமான நிலையையும் மெள்ளமெள்ள விட்டன. (37) மனது அடங்கினதும் நன்கு விடப்பட்ட க்ரியையையுடைய முனி (ஸந்யாஸி) போல, ஸமுத்திரமானது சரத்காலம் வந்ததும் அசைவற்ற ஜலமுள்ளதாய் சப்திக்காதிருந்தது. (38) இந்திரியங்கள் வாயிலாக வெளியிலுள்ள விஷயங்களிலேற்படும் அறிவை யோகிகள் இந்திரியங்களை யடக்குவதனுல் போல உழுதுபயிரிடுகின்றவர்கள் கெட்டியான அணைகளினுல் வயல்களில் ஜலத்தைத் தேக்கிக்கொண்டனர். (39)

தேஹாபிமானத்தாலுண்டாகும் தாபத்தை ஆத்மக்ஞானமானது போலும், கோபஸ்திரீகளின் தாபத்தை முகுந்தன் (ஸ்ரீகிருஷ்ணன்) போலும் ப்ராணிகளுக்குச் சரத்காலத்திய ஸூரியனுடைய கிரணங்களாலுண்டான தாபங்களைச் சந்திரன் போக்கினுன். (40) சரத்தினுல் தெளிவான நக்ஷத்திரங்களை யுடையதும் மேகமற்றதுமான ஆகாசமானது, ஸத்வகுணத்துடன் கூடினதும் (1) வேதார்த்த நிர்ணயத்தைக் கண்டதுமான சித்தமானது போல விளங்கிற்று. (41) பரிபூர்ண மண்டலத்துடன் கூடின சந்திரன், யாதவக்கூட்டத்தினுல் சூழப்பட்டவரும் யதுபதியுமான ஸ்ரீகிருஷ்ணன் பூமியில் போல

---

(1) பூர்வமீமாம்ஸையினுதவியால் கர்மகாண்ட நிர்ணயத்தையும், உத்தரமீமாம்ஸையினுதவியால் ப்ரம்ஹகாண்ட நிர்ணயத்தையும் கண்டமனம் ப்ரகாசிப்பது போல என்று கருத்து.

तम् । जनास्तापं जहुर्गोप्यो न कृष्णहृतचेतसः ॥ ४३ ॥ गावो मृगाः खगा नार्यः पुष्पिण्यः शरदाभवन् । अन्वीयमानाः स्ववृषैः फलैरीशक्रिया इव ॥ ४४ ॥ उदहृष्यन्वारिजानि सूर्योत्थाने कुमुद्विना । राज्ञा तु निर्भया लोका यथा दस्यून्विना नृप ॥ ४५ ॥ पुरग्रामेष्वाग्रयणैरैन्द्रियैश्च महोत्सवैः । बभौ

---

நக்ஷத்திரக் கூட்டங்களுடன் ஆகாசத்தில் விளங்கிற்று. (42) ஜனங்கள் ஸமமான குளுமைகூடு இவற்றையுடைய புஷ்பித்தவனத்தி லுள்ள காற்றை ஆலிங்கனஞ் செய்துகொண்டு தாபத்தைப் போக்கிக் கொண்டனரே அன்றி கிருஷ்ணனால் அபஹரிக்கப்பட்ட சித்தத்தை யுடையவர்களான கோபிகைகள் தாபத்தைப் போக்க முடியாதவராயினர். (43) பசுக்களும், மான்களும், பக்ஷிகளும், ஸ்திரீகளும் சரத்காலத்தினால் புஷ்பிணிகளாக (கர்ப்பதாரணத்துக்குரிய ருதுவுள்ளவர்களாக) ஆகி ஈஸ்வரனுடைய ஆராதனத்துக்கு வேண்டி செய்யப்படும் காரியங்கள் பலன்களினால் போல தன்னையொட்டின பதிகளினால் * பின்தொடரப்பட்டவைகளாக வாயின. (44) ஹேநருப! அரசன் மூலம் திருடர்களைத் தவிர்த்து மற்றஜனங்கள் எவ்வித பயமுமற்றவர்களாகவாவதுபோல, சூரியனுதயமானதும் ஆம்பலைத்தவிர்த்து தாமரஸபுஷ்பங்கள் மலர்ந்தன. (45) பக்குவமான பயிர்களடர்ந்த பூமியானது பட்டினம் கிராமம் இவ்விடங்களில் செய்யப்படும் ஆக்ரயணங்களினாலும் (புதிதான அன்னத்தைச் சாப்பிடவேண்டி செய்யப்படும் வைதிககார்யங்களினாலும்) இந்திரியங்களுக்குத் திருப்தியைத் தருகின்ற பெரியதிருவிழாக்களினாலும் ஹரியின் கலைகளான ராமகிருஷ்ணர்களாலும் மிக்கவிளங்கிற்று. (46) மந்திரயோகாதிகளினால் சித்திபெற்றவர்கள் ப்ராரப்த்தாயத்தமான ஆயுளினால் தடைசெய்யப்பட்டவர்களாகி காலம் வந்ததும் யோகாதிகளினால் கிடைக்கக்கூடிய தேவாதி தேஹங்களையடைவதுபோல வியாபாரிகள், ஸந்நியாஸிகள், அரசர்கள், ஸ்னாத

---

* அவற்றுக்கு இஷ்டமில்லாவிடினும் அவற்றைப் பதிகள் விடாது தொடருவதுபோல, ஈச்வர ஆராதனரூபமான கர்மமானது ஆராதிப்பவர் கோராவிடினும் கூட தனக்குரிய பலனை அவசியம் கொடுத்தே தீருகிறது எனப் பெறப்பட்டது.

भूः पकसस्याढ्या कलाभ्यां नितरां हरेः॥ ४६ ॥ वणिङ्मुनिनृपस्नाता निर्गम्यार्थान्प्रपेदिरे । वर्षरुद्धा यथा सिद्धाः स्वपिण्डान्काल आगते ॥४७॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्द्धे प्रावृट् शरद्वर्णनं नाम विंशोऽध्यायः ॥ २० ॥



## अथ एकविंशोऽध्यायः ॥

श्रीशुक उवाच—इत्थं शरत्स्वच्छजलं पद्माकरसुगन्धिना । न्यविशद्वायुना वातं सगोगोपालकोऽच्युतः ॥१॥ कुसुमितवनराजिशुष्मिभृङ्गद्विज-

---

கவிரதானுஷ்டானம் செய்தவர் ஆகிய இவர்கள், வெளிக்கிளம்பி (தத்தமக்குரிய) (1)பலன்களையடைந்தனர். (47)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண தசகஸ்கந்த பூர்வார்த்தத்தில் ப்ராவிருட் சரத் வர்ணனம் என்ற இருபதாவது அத்தியாயம் முற்றிற்று.



## இருபத்தொன்றாவது அத்தியாயம்.

(அ—கை) एकविंशे शरद्रम्यवृन्दावनगते हरौ ।
तद्वेणुस्वनमाकर्ण्य गोपीभिर्गीतमीर्यते ॥ १ ॥

(கு—ரை) ஹரியான கிருஷ்ணன் சரத்தினுல் அழகான ப்ருந்தாவனத்தையடைந்த காலத்து அவரது வேணு நாதத்தைக் கேட்டுக் கோபிகைகளால் செய்யப்பட்ட கானமானது இந்த இருபத்தொன்றாவது அத்தியாயத்திலுபதேசிக்கப்படுகிறது. (1) (எ—று)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—அச்யுதனன கிருஷ்ணன் பசு, கோபாலர் இவர்களுடன் கூட, பத்மங்களின் கூட்டங்களினுல் நல்ல

---

(1) வியாபாரியானவன் சரத்காலத்தில் வெளியிற் சென்று வியார மூலம் பணத்தையும், ஸன்யாஸி சரத்காலத்தில் வெளிதேசயாத்திரை மூலம் தான்கோரின பலனையும், அரசர்கள் திக்விஜயத்தையும், ஸ்னுதகர்கள் விவாஹாதிபலனையும் அடைந்தனர் என்று கருத்து.

**कुलद्रुमसरःसरिन्महीध्रम् । मधुपतिरवगाह्य चारयन्गाः सहपशुपालबलश्चुकूज वेणुम् ॥ २ ॥ तद्व्रजस्त्रिय आश्रुत्य वेणुगीतं स्मरोदयम् । काश्चित्परोक्षं कृष्णस्य स्वसखीभ्योऽन्ववर्णयन् ॥ ३ ॥ तद्वर्णयितुमारब्धाः स्मरन्त्यः कृष्णचेष्टितम् । नाशकन्स्मरवेगेन विक्षिप्तमनसो नृप ॥ ४ ॥ बर्हापीडं नट-**

---

மணமுள்ள வாயுவினால்சூழப்பட்டதும், சரத்காலத்தினால் தெளிந்த ஜலத்தையுடையதுமான வனத்தில் இவ்விதம் பிரவேசித்தார். (1) கிருஷ்ணன் புஷ்பித்த மரக்கூட்டங்களிலிருக்கின்ற மத்தங்களான வண்டுகளுடையவும், பக்ஷிகளுடையவும் கூட்டங்களினால் சப்தமுள்ளதாகச் செய்யப்பட்ட குளங்கள் நதிகள் மலைகள் இவற்றையுடையதான காட்டில் பிரவேசித்து பசுமேய்க்கும் கோபாலர் பலராமன் இவர்களுடன் கூட பசுக்களை மேய்த்துக்கொண்டு வேணுவை வாசித்தார். (2) சில கோபஸ்திரீகள் காமத்தையுண்டாக்கக் கூடிய கிருஷ்ணனுடைய அந்த வேணுகானத்தை வேறிடத்திலிருந்து கேட்டு தமது தோழிமார்களையும் பொருட்டு பின்வருமாறு வர்ணிக்கத் தொடங்கினர். (3) ஹே ந்ருப! அந்த வேணுகானத்தை வர்ணிக்கத்தொடங்கின அவர்கள் கிருஷ்ணனுடைய லீலையை நினைக்கின்றவர்களாகவும்,காமவேகத்தினால்கலங்கினமனதையுடையவர்களாகவுமாகி அதைப் பொருக்கமுடியாதவராயினர். (4) மயில் தோகையால் செய்யப்பட்ட சிரோபூஷணத்தையும், நடன் போலச் சிறந்த சரீரத்தையும், இரு காதுகளிலும் கர்ணிகார புஷ்பத்தையும், *வைஜயந்தீ என்ற மாலையையும், ஸ்வர்ணம்போலப் பொன்னிற

---

* वैडूर्यमुक्ताफलनीलरत्नैस्समाणिकैस्संग्रथिताहि माला । वायोरपां भूमिखतेजसां हि तत्वैः प्रदिष्टा खलु वैजयन्ती ॥ என்ற வசனப்படி வைடூர்யம், முத்து, நீலரத்தினம், வஜ்ரம், மாணிக்கம் ஆகிய ரத்தினங்கள் கொண்டு கட்டப்பட்டதும், வாயு, ஜலம், பூமி, ஆகாசம், தேஜஸ் ஆகியவற்றின் தத்வங்களுடன் கூடினதுமான மாலை வைஜயந்தீ எனப்படும். அல்லது— श्वेतैः पीतैस्तथारक्तैर्हरितैर्नीलवर्णकैः । पुष्पैरेभिस्सुगन्धैश्च वैजयन्त्यस्ति मालिका ॥ என்ற வசனப்படி வெண்ணிறமுள்ளனவும், பொன்னிறமுள்ளனவும், சிவப்பு நிறமுள்ளனவும், பசுமை நிறமுள்ளனவும், நீல நிறமுள்ளனவும், நறுமணமுள்ளனவுமான இந்தப் புஷ்பங்களால் கட்டப்பட்ட மாலை வைஜயந்தீ எனப்படும்,

**वरवपुः कर्णयोः कर्णिकारं बिभ्रद्वासः कनककपिशं वैजयन्तीं च मालाम्। रन्ध्रान्वेणोरधरसुधया पूरयन्गोपवृन्दैर्वृन्दारण्यं स्वपदरमणं प्राविशद्गीत-कीर्तिः॥ ५ ॥ इति वेणुरवं राजन्सर्वभूतमनोहरम्। श्रुत्वा व्रजस्त्रियः सर्वा वर्णयन्त्योऽभिरेभिरे ॥ ६ ॥ गोप्य ऊचुः—अक्षण्वतां फलमिदं न परं विदामः सख्यः पशूननु विवेशयतोर्वयस्यैः। वक्त्रं व्रजेशसुतयोरनु-वेणुजुष्टं यैर्वा निपीतमनुरक्तकटाक्षमोक्षम् ॥ ७ ॥ चूतप्रवालबर्हस्तबको-त्पलाब्जमालानुपृक्तपरिधानविचित्रवेषौ। मध्ये विरेजतुरलं पशुपालगो-**

---

மான வஸ்திரத்தையும் தரித்துக் கொண்டும், வேணுவின் ஓட்டைகளை அதர (உதடு) அமுதத்தினல் நிரப்பிக்கொண்டும், கோபக்கூட்டங்களினல் கானஞ்செய்யப்பட்ட கீர்த்தியையுடையவராய்க் கொண்டும், தனது அடிவைப்புகளினல் ரதியை (காமனையை) உண்டுபண்ணக்கூடிய பிருந்தாவனத்தில் பிரவேசித்தார். (5) ஹேராஜன்! கோபஸ்திரீகள் யாவரும் இவ்விதம் ஸர்வ ப்ராணிகளுடையவும் மனத்தைக் கவருகின்ற வேணுவின் சப்தத்தைக்கேட்டு அதை வர்ணிக்கின்றவர்களாய்ச் சந்தோஷத்தையடைந்தனர். (6) *கோபிகைகள் சொல்லத்தொடங்கினர். ஹே தோழிகளே! வேணுவையொட்டி இருப்பதும் (அதாவது: வேணுவை வாசிப்பதும்) ஸ்னிக்தர்களிடத்தில் செய்யப்பட்ட கடாக்ஷ மோக்ஷத்தையுடையதுமான தோழர்களுடன் கூட பசுக்களைக் காட்டில் பிரவேசிக்கச் செய்கின்ற நந்தகோபரின் புத்திரர்களான ராம கிருஷ்ணர்களுடைய முகமானது எவர்களால் பார்க்கப்பட்டதோ அவர்களால் அனுபவிக்கப்பட்ட இதையே கண்ணுள்ளவர்களின் கண்களுடைய பலனுக எண்ணுகின்றோமேயொழிய பிறவற்றை எண்ணுகின்றோமில்லை. (7) மாந்தளிர், மயில் தோகை, பூங்கொத்து, நீலோத்பலம், தாமரைப்பூ இவற்றின் மாலைகளுடன் இடையிடையே கொஞ்சம் ஸம்பந்தித்த இடையிலுள்ள (நீலமாயும் பொன்நிறமாயுமுள்ள) வஸ்திரங்களினல் விசித்திரமான வேஷத்தையுடையவர்களும், கானஞ்செய்கின்றவர்களுமான ராம கிருஷ்ணர்கள் நாடக மேடையிலுள்ள சிறந்த

---

* இதுமுதல் 13 சுலோகங்களினல் கோபிகைகள் வேணுகானத்தை வர்ணிக்கும் முறை சொல்லப்படுகிறது.

पुन्यां रङ्गे यथा नटवरौ क्व च गायमानौ ॥ ८ ॥ गोप्यः किमाचरदयं कुशलं स्म वेणुर्दामोदराधरसुधामपि गोपिकानाम्। भुङ्क्ते स्वयं यदवशिष्टरसं ह्रदिन्यो हृष्यत्त्वचोऽश्रु मुमुचुस्तरवो यथार्याः ॥ ९ ॥

वृन्दावनं सखि भुवो वितनोति कीर्तिं यद्देवकीसुतपदाम्बुजलब्धलक्ष्मि। गोविन्दवेणुमनु मत्तमयूरनृत्यं प्रेक्ष्याद्रिसान्वपरतान्यसमस्तसत्त्वम् ॥१०॥ धन्याः स्म मूढमतयोऽपि हरिण्य एता या नन्दनन्दनमुपात्तविचित्र-

---

நடர்கள் போல ஒருஸமயம் கோபாலர்களின் கோஷ்டியின் நடுவில் மிக்க ப்ரகாசித்தனர். (8) ஹேகோபிகைகளே! கோபிகைகளுக்கு மட்டுமே போக்கியமான தாமோதரனுடைய அதராமிருதத்தைக்கூட ஸ்வதந்திரமாக கேவலம் ரஸம்மட்டும் மிச்சமாக இருக்கும்படி யாது காரணத்தினுல் அனுபவிக்கின்றதோ அக்காரணத்தினுல் இந்தவேணு வானது (பில்லாங்குழலானது) என்ன புண்ணியத்தைச்செய்ததோ. (இந்த வேணுவைத் தமது ஜலத்தினுல் வளர்த்த) மடுக்கள் (மலர்ந்த தாமரஸ புஷ்பங்களென்ற வியாஜத்தினுல்) சிலிர்த்த தோலேயுடைய னவாகவாயின. (இந்த வேணு எந்த மரங்களின் வகுப்பில் உண் டாயிற்ருே அந்த) மரங்கள் (1)மஹான்கள் கண்ணீரைப் போலத் தேனே வடியவிடுகின்றன. (9)

ஹே ஸகி! தேவகியின் புத்திரனுன கிருஷ்ணனுடைய பாதார விந்தத்தினுல் அடையப்பட்ட சோபையையுடையதும், கோவிந்த னுடைய வேணுகானத்தைக் கேட்டு (அதை மெதுவாகச் சப்திக் கின்ற மேகமாகவெண்ணிக்கொண்டு) அதையொட்டித் தோகையை விரித்தாடுகின்ற மதங்கொண்ட மயில்களின் நர்த்தனத்தைக் கண் ணுற்று மலேயினடிவாரத்தில் அசைவற்று நிற்கின்ற எல்லா ப்ராணி களேயுடையதுமான யாதொரு ப்ருந்தாவனமுண்டோ அது பூமிக் குக் கீர்த்தியை விருத்தி செய்கிறது. (10) செய்துகொள்ளப் பட்ட விசித்திரமான வேஷத்தையுடைய நந்தகோப புத்திரனுன கிருஷ்ணனேக்கண்டும் (அவன் செய்யும்) வேணுகானத்தைக் கேட்

---

(1) குலத்தில் பெரியோரான மஹான்கள் தமது வம்சத்தில் பக வத் ஸேவகனிருப்பதைக்கண்டு மயிர்க்கூச்சலேயுடையவர்களாகவும் ஆநந்த பாஷ்பத்தைப் பெருக்குகின்றவர்களாகவும் எவ்விதமாவரோ அவ்விதமி ருந்தது என்பது கருத்து.

वेषम्। आकर्ण्य वेणुरणितं सहकृष्णसाराः पूजां दधुर्विरचितां प्रणयावलोकैः॥११॥ कृष्णं निरीक्ष्य वनितोत्सवरूपशीलं श्रुत्वा च तत्कणितवेणुविचित्रगीतम्। देव्यो विमानगतयः स्मरनुन्नसारा भ्रश्यत्प्रसूनकबरा मुमुहुर्विनीव्यः॥ १२ ॥ गावश्च कृष्णमुखनिर्गतवेणुगीतपीयूषमुत्तभितकर्णपुटैः पिब-

டும் எந்தப் பெண்மான்கள் (1) ஆண்மான்களுடன் சேர்ந்து கொண்டு ப்ரீதியுடன் கூடின பார்வைகளினல் செய்யப்பட்ட பூஜையைச் செய்தனவோ மூடமான புத்தியுள்ளனவாயினும் இவைகளன்றே புண்ணியஞ்செய்தனவாகவாகின்றன. (11) (ஹே கோபிகைகாள்! ஆச்சரியத்தைக்கேளுங்கள். அதாவது:-)ஸ்திரீகளுக்குச் சந்தோஷத்தைத் தரக்கூடிய ரூபத்தையும் சீலத்தையுமுடைய ஸ்ரீ கிருஷ்ணனைப்பார்த்தும், அவரால் வாசிக்கப்பட்ட வேணுவினின்றுமுண்டாகும் விசித்திரமான கீதத்தைக்கேட்டும் விமானத்திற் செல்லுகின்ற தேவஸ்திரீகள் (தேவர்களின் மடியிலுட்கார்ந்திருந்தபோதிலுங்கூட) மன்மதனல் போக்கப்பட்ட தைரியத்தையுடையவர்களாகவும், நழுவின புஷ்பங்களையுடைய தலைமுடிச்சையுடையவர்களாகவும், *எக்குமுடிச்சையிழந்தவர்களாகவும் ஆகி மோஹத்தையடைந்தனர். (12) பசுக்களும், கன்றுகளும கோவிந்தனைக் கண்ணுகிற வழியினல் மனத்தில் ஆலிங்கனஞ்செய்துகொண்டும், கண்ணீரைப் பெருகவிட்டுக்கொண்டும், கிருஷ்ணனுடைய முகத்தினின்றும் வெளிவந்த வேணுகானமாகிற அமுதத்தை உயரத்தூக்கப்பட்ட தொன்னைபோன்ற காதுகளினல் குடிக்கின்றவைகளாகவும் (*)முகத்

(1) இம்மான்கள் தமது கணவனுடன் கூடவே இருந்துகொண்டு கிருஷ்ணனைப் பூஜிக்கின்றன. நமது பதிகளும் அற்பர்களுமான இந்தக் கோபாலர்களோ தமக்கெதிரில் நாம் கோபாலனைக் கண்ணெடுத்துப் பார்க்கக்கூட ஸஹிக்காதிருக்கின்றனரே இது நமது பாக்கியக்குறைவன்றோ என்று எண்ணினர் என்பது இதன் கருத்து.

* இடையில் புடவையைக் கட்டும்பொழுது அது அவிழ்ந்து போகாதிருப்பதற்காகப் போட்டுக்கொள்ளும் முடி நீவீ எனப்படும். இதை எக்குமுடிச்செனச் சொல்லுகின்றனர்.

(*) பால் குடிக்கவாரம்பித்த கன்றுகள் வேணுகானத்தைக் கேட்டதும் பால் முகத்தில் வழிந்தபோதிலுங்கூட அதை மறந்து கிருஷ்ணனை மனத்தில் தியானித்துக்கொண்டும் ஆனந்தபாஷ்பத்தைப் பெருகவிட்டுக்கொண்டும் நின்றன என்று கருத்து.

न्त्य:। शावा: स्नुतस्तनपय:कवला: स्म तस्थुर्गोविन्दमात्मनि दृशाश्रुकला: स्पृशन्त्य:॥ १३ ॥ प्रायो बताम्ब विहगा मुनयो वनेऽस्मिन्कृष्णेक्षितं तदुदितं कलवेणुगीतम्। आरुह्य ये द्रुमभुजान्रुचिरप्रवालान् शृण्वन्त्यमीलितदृशो विगतान्यवाच:॥ १४ ॥ नद्यस्तदा तदुपधार्य मुकुन्दगीतमावर्तलक्षितमनोभवभग्नवेगा:। आलिङ्गनस्थगितमूर्मिभुजैर्मुरारेर्गृह्णन्ति पादयुगलं कमलोपहारा: ॥ १५ ॥ दृष्ट्वातपे व्रजपशून्सहरामगोपै: सञ्चारयन्त-

---

தில் வழிந்தோடுகின்ற முலைப்பாலாஹாரத்தையுடையவைகளாகவும் இருந்தன. (13) ஹே அம்ப! இந்த ப்ருந்தாவனத்திலுள்ள எந்தப் பக்ஷிகள் (புஷ்பம், பழம் இவற்றால் மறைவேற்படாமல்) கிருஷ்ணனுடைய தரிசனம் ஏற்படும்படி அழகிய தளிர்களையுடைய மரக்கிளைகளிலேறிக்கொண்டு கண்களைமூடாமலும், வேறுவார்த்தை பேசாமலுமிருந்துகொண்டு அவரால் வெளியிடப்பட்ட அழகிய வேணுகானத்தைக் கேட்கின்றனவோ இவை பெரும்பாலும் (1)முனிகளேயாகுமன்றோ. (14) *அப்பொழுது நதிகள் அந்த முகுந்தனுடைய கீதத்தைக்கேட்டுச் சுழல்கள் மூலம் காணப்பட்ட காமனையால் குறைக்கப்பட்ட வேகத்தையுடையனவாகவாகி ஆலிங்கனத்தினால் மறைக்கப்பட்டிருக்கும்படி அலைகளாகிற கைகளினால் தாமரஸ புஷ்பங்களாகிற காணிக்கைகளைக் கொண்டுவருகின்றனவாய் முராரியினுடைய இருகால்களையும் பிடித்துக் கொள்ளுகின்றன. (15)

பலராமன் கோபாலர் இவர்களுடன் கூட வெய்யிலில் கோகுலத்திலுள்ள பசுக்களை மேய்கின்றவரும், அடிக்கடி வேணுவைக் கானஞ்செய்கின்றவருமான கிருஷ்ணனைப் பார்த்து மேகமானது

---

(1) முனிகள் கிருஷ்ணனது தரிசனம் ஏற்படவேண்டி வேதத்திற் சொல்லிய கர்மபலனைவிடுத்து வேதங்களாகிற மரக்கிளைகளிலேறிக்கொண்டு அழகிய தளிர் ஸ்தானத்திலுள்ள நிஷ்காமகர்மங்களையே செய்துகொண்டு சுகிகளாய் கிருஷ்ணனது கீதத்தையே கேட்கின்றனர். ஆனதுபற்றி இவைகளும் அவர்க்கொப்பாக இருப்பதால் முனிகளேயாகும் என்பது கருத்து.

* சேதனர்களைப்பற்றிய வார்த்தை இருக்கட்டும். அசேதனங்களின் நிலையைக் கேளுங்கள் எனச் சொல்லத்தொடங்குகின்றனர்.

मनुवेणुमुदीरयन्तम् । प्रेमप्रवृद्ध उदितः कुसुमावलीभिः सख्युर्व्यधा-
त्स्ववपुषाम्बुद आतपत्रम् ॥ १६ ॥ पूर्णाः पुलिन्द्य उरुगायपदाब्जरागश्रीकु-
ङ्कुमेन दयितास्तनमण्डितेन । तद्दर्शनस्मररुजस्तृणरूषितेन लिम्पन्त्य आ-
ननकुचेषु जहुस्तदाधिम् ॥ १७ ॥ हन्तायमद्रिरबला हरिदासवर्यो यद्राम-
कृष्णचरणस्पर्शप्रमोदः । मानं तनोति सहगोगणयोस्तयोर्यत्पानीयसूयवस-

அவாது தலைக்குமேல் உதயமாகி ப்ரேமையினால் நன்கு விருத்தியை
யடைந்ததாய்க் கொண்டு புஷ்பத்துக்கொப்பான ஜலத்துளிகளுடன்
கூட தனது சரீரத்தினால் தோழனான கிருஷ்ணனுக்குக் குடைபிடிக்
கின்றது.* (16) முதலில் ஸ்திரீகளின் ஸ்தனங்களில் பூசப்பட்டதும்,
(திரும்பவும் ரதிகேளி ஸமயத்தில்) உருகாயனான ஸ்ரீகிருஷ்ணனு
டைய சரணாரவிந்தங்களின் சிவப்பினாலுண்டான காந்தியையுடைய
தும், திரும்பவும் கிருஷ்ணன் வனப்ரதேசங்களில் ஸஞ்சரிக்குங்
கால் (ஆங்குள்ள) புற்களில் ஒட்டினதுமான (1) குங்குமத்தை
அத்தகைய குங்குமதர்சனத்தினாலேற்பட்ட மன்மததாபத்தையுடை
யவர்களான வேடுவஸ்திரீகள் முகங்களிலும் குசங்களிலும் பூசிக்
கொண்டு மன்மததாபத்தைப் போக்கிக்கொள்ளுகின்றனர். ஆனது
பற்றி அவர்கள் (2)புண்ணியமுள்ளவர்களேயாவர். (17) ஹே
தோழிகாள்! இந்தக்கோவர்த்தன பர்வதமானது யாதுகாரணத்தால்
ராமகிருஷ்ணர்களின் சரண ஸம்பந்தத்தால் ஸந்தோஷத்தையடைந்
ததாகவும், யாதுகாரணத்தால் பசுக்களுடனும், தோழக்கூட்டத்துட
னும் சேர்ந்திருக்கின்ற அவ்விருவருக்கும் ஜலங்களாலும், அழகிய
புற்களாலும், குஹைகளினாலும், கிழங்குகளினாலும், வேர்களினா

* கிருஷ்ணனுடைய வேணுகானத்தைக்கேட்டு ஜலமற்றசரத்காலத்
திய மேகங்கள்கூட ஜலம் நிறைந்தனவாகவாகி, கிருஷ்ணன் பூமியில் நிற்
குமிடத்துக்கு நேராக ஆகாசத்தில் இருந்துக்கொண்டு ஜலத்துளிகளை
வர்ஷித்தன என்பது கருத்து.

(1) उरुगायपदाब्जरागश्रीकुंकुमेन = என்றவிடத்தில் ஸமஸ்த பதத்து
டன் சேர்ந்த कुंकुमेन=என்பதைப் பிரித்து உரை எழுதியிருக்கிறோம்.

(2) இம்மாதிரியான மனோவியாதியின் நிவிருத்தியைக் கூட அடை
யாத நம்போன்றவர்களைச் சடவேண்டும் எனத் தங்களை நிந்தித்துக் கொ
ண்டனர் என்று கருத்து.

कन्दरकन्दमूलैः ॥ १८ ॥ गा गोपकैरनुवनं नयतोरुदारवेणुस्वनैः कलपदै-स्तनुभृत्सु सख्यः । अस्पन्दनं गतिमतां पुलकस्तरूणां निर्योगपाशकृत-लक्षणयोर्विचित्रम् ॥ १९ ॥ एवंविधा भगवतो या वृन्दावनचारिणः । वर्ण-यन्त्यो मिथो गोप्यः क्रीडास्तन्मयतां ययुः ॥ २० ॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्धे गोपीगीतं नाम
एकविंशोऽध्यायः ॥ २१ ॥

---

னும் (அவரவர்க்குத் தக்கபடி) பூஜையைச் செய்கின்றதோ, அக்காரணம் பற்றி ஹரிபக்தர்களுக்குள் சிறந்ததேயாகும். இது வெகு ஆஸ்சரியமன்றோ? (18) ஹே தோழிகாள்! கோபாலர்களுடன் கூட ஒவ்வொரு வனத்திலும் பசுக்களை மேய்க்கின்றவர்களும், (1)நிர்யோகங் (முட்டிக்காலில் மாட்டும் கயிறு) களினாலும் (2)பாசங்களி (துஷ்டமான பசுவைப் புணைப்பதற்குவேண்டிய புணையல் கயிற்றி) னாலும் செய்யப்பட்ட அடையாளமுள்ளவர்களுமான அந்த ராமகிருஷ்ணர்களுடைய அழகிய பதங்களமைந்த சிறந்த வேணுநாதங்களினால் சரீரத்தை எடுத்தவர்களுக்குள், நடக்கும் ப்ராணிகளுக்கு அசைவற்ற தன்மையும், மரங்களுக்கு (ஜங்கம தர்மமான) ரோமாஞ்சமும் ஏற்பட்டிருக்கிறது. இது விசித்திரமன்றோ?. (19) பிருந்தாவனத்தில் ஸஞ்சரிக்கின்றவரான பகவானுடைய இதுபோன்றவைகளான யாதொரு லீலைகளுண்டோ அவற்றைக் கோபிகைகள் ஒருவருக்கொருவர் வர்ணித்துக்கொண்டு பகவன் மயமாகவிருத்தலையடைந்தனர். (20) (எ-று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண தசமஸ்கந்த
பூர்வார்த்தத்தில் வேணுகீத வர்ணனம் என்ற இருபத்தோன்றுவது
அத்தியாயம் முற்றிற்று.

---

(1) நிர்யோகமென்ற முட்டிபோடும் கயிற்றைத் தலையிலும்.

(2) பாசமென்ற புணையல் கயிற்றைத் தோளிலும் தரித்துக்கொண்டு சிறந்த கோபாலர்களுக்குரிய சோபையுடன் விளங்கு கின்றனர் என்பது கருத்து.

## நாராயணீயம்.

त्वद्वपुर्नवकलायकोमलं प्रेमदोहनमशेषमोहनम् ।
ब्रह्मतत्वपरचिन्मुदात्मकं वीक्ष्य संमुमुहुरन्वहं स्त्रियः ॥ २२५ ॥

(ப-ரை) **नवकलायकोमलम्**=புதிதான நீருண்டமேகம்போல அழகு வாய்ந்ததும், **तत्वपरचिन्मुदात्मकम्**=ஸத்சிதாநந்தவுருவமுள்ளதும் **प्रेमदोहनम्**=ஆனந்தபற்றி ப்ரேமையை (ஆசையை) த்தருகின்றதும் **अशेषमोहनम्**=சேதனம் அசேதனம் ஆகிய யாவையும் மோஹிக்கச் செய்வதுமான **त्वद्वपुः**=உமது சரீரமான **ब्रह्म**=ப்ரம்ஹத்தை **अन्वहम्**=ஒவ்வொரு நாளும் **वीक्ष्य**=கண்ணுற்று **स्त्रियः**=கோபஸ்திரீகள் **संमुमुहुः**=நன்கு மோஹத்தை யடைந்தனர். (225) (எ-று)

मन्मथोन्मथितमानसाः क्रमात् त्वद्विलोकनरतास्ततस्ततः ।
गोपिकास्तव न सेहिरे हरे काननोपगतिमप्यहर्मुखे ॥ २२६ ॥

(ப-ரை) **हरे !**=ஹேகிருஷ்ண ! **मन्मथोन्मथितमानसाः**=மன்மதனால் கலக்கப்பட்ட சித்தத்தையுடையவர்களான **गोपिकाः**=கோபிகைகள் **ततस्ततः**=அடிக்கடி **क्रमात्**=ஒவ்வொருதினந்தோறும் **त्वद्वि-लोकनरताः**=உம்மைப்பார்ப்பதில் ஆவல்கொண்டவர்களாய் **अहर्मुखेपि**=விடியற்காலையில் கூட **तव**=உம்முடைய **काननोपगतिमपि**=காட்டி னருகில் செல்லுதலைக்கூட **न सेहिरे**=பொறுக்காதவராயினர். (226)

குறிப்பு—பொதுவாய் கோபிகைகள் ஒவ்வொருநாளும் யாதேனுமொரு காரியத்தைச்செய்வதும், அது முடிந்ததும் கிருஷ்ணனை வந்து பார்ப்பதும், பிறகு மற்றொருகாரியத்தைச்செய்வதும், அதன் முடிவில் கிருஷ்ணனைப் பார்ப்பதுமான வழக்கங்கொண்டிருந்தபடியால் விடியற்காலையில் சில நிமிஷங்கூட அதிலும் காட்டினோரத்தில் அவர் செல்லுவதைக்கூட ஸஹிக்காதவர்களாக இருக்கும்பொழுது பகல் முழுதும், அதிலும் காட்டில் வெகுதூரத்தில் செல்லுவதை எவ்விதம் அவர்கள் ஸஹிப்பர், ஒருபொழுதும் ஸஹிக்கமாட்டார் என்பது கருத்து. (எ-று)

निर्गते भवति दत्तदृष्टयस्त्वद्गतेन मनसा मृगेक्षणाः ।
वेणुनादमुपकर्ण्य दूरतस्त्वद्विलासकथयाऽभिरेमिरे ॥ २२७ ॥

(ப-ரை) **निर्गते**=வெளிக்கிளம்பின **भवति**=உம்மிடத்தில் **दत्त-दृष्टयः**=கொடுக்க (வைக்க) ப்பட்ட கண்களையுடையவர்களான **मृगे-**

க்ஷணா:=மானினதுபோன்ற கண்களையுடைய கோபஸ்திரீகள் त्वद्गतेन=உம்முடன் கூடச்சென்றதான मनसा=மனஸ்ஸினால் दूरत:=வெகுதூரத்திலிருப்பினுங்கூட वेणुनादम्=வேணுவின் சப்தத்தை उपकर्ण्य=தமதருகிலேயேகேட்டு त्वद्विलासकथया=உமது லீலையை ஒருவருக்கொருவர் சொல்லுவதன் மூலம் अभिरेमिरे=ஸந்தோஷமாகக் காலத்தைக் கழித்தனர். (227) (எ-று)

काननान्तमितवान् भवानपि स्निग्धपादपतले मनोरमे ।
व्यत्ययाकलितपादमास्थित: प्रत्यपूरयत वेणुनालिकाम् ॥ २२८ ॥

(ப-ரை) काननान्तम्=காட்டின் நடுவை इतवान्=அடைந்தவரான भवानपि=நீரும் मनोरमे=மனத்தைக்கவரத்தக்க स्निग्धपादपतले=அழகிய மரத்தினடியில் व्यत्ययाकलितपादम् = மாற்றிப்போட்டுக்கொள்ளப்பட்ட பாதத்தையுடையவராக இருக்கும்படி आस्थित:=உட்கார்ந்துகொண்டு (அல்லது நின்றுகொண்டு) वेणुनालिकाम्=வேணுவாத்தியத்தை प्रत्यपूरयत=சப்தத்தால் நிரப்பினீர். (228)

मारबाणधुतखेचरीकुलं निर्विकारपशुपक्षिमण्डलम् ।
द्रावणञ्च दृषदामपि प्रभो तावकं व्यजनि वेणुकूजितम् ॥ २२९ ॥

(ப-ரை) प्रभो !=ஹே ப்ரபுவே! तावकम् = உம்முடையதான वेणुकूजितम्=வேணுநாதமானது मारबाणधुतखेचरीकुलम्=காமபாணத்தால் கலக்கப்பட்ட தேவஸ்திரீகளின் கூட்டத்தையுடையதாகவும், निर्विकारपशुपक्षिमण्डलम्=எவ்வித சேஷ்டையுமற்ற பசுபக்ஷி இவற்றின் கூட்டத்தையுடையதாகவும் दृषदामपि=கற்களுக்குங்கூட द्रावणञ्च=உருக்கத்தைத்தருவதாகவும் व्यजनि=ஆயிற்று. (229) (எ-று)

वेणुरन्ध्रतरलाङ्गुलीदलं तालसञ्चलितपादपल्लवम् ।
तत्स्थितं तव परोक्षमप्यहो संविचिन्त्य मुमुहुर्व्रजाङ्गना: ॥ २३० ॥

(ப-ரை) वेणुरन्ध्रतरलाङ्गुलीदलम्=வேணுவினோட்டையில் இங்குமங்கும் செல்லுகின்ற விரல்களின் நுனியையுடையதும், तालसञ्चलितपादपल्लवम्=தாளப்போடவேண்டி அசைக்கப்பட்ட சரணபல்லவத்தை யுடையதுமான तव=உம்முடைய तत्=அந்த (மாற்றப்பட்டகாலையுடைய) स्थितमपि=இருப்பையும் परोक्षम्=வேறிடத்திலிருந்துகொண்டு संविचिन्त्य=நன்குமனத்தாலெண்ணிக்கொண்டு व्रजाङ्ग-

ना: =கோபஸ்திரீகள் संमुमुहु:= நன்கு மோஹத்தை யடைந்தனர். अहो=இது வெகு ஆச்சரியமாக விருந்தது. (230) (எ-று)

निर्विशङ्कभवदङ्गदर्शिनी: खेचरी: खगमृगान् पशूनपि ।
त्वत्पदप्रणयिकाननञ्च ता धन्यधन्यमिति नन्वमानयन् ॥ २३१ ॥

(ப-ரை) ननु=ஹே கிருஷ்ண! ता: = அந்தக் கோபஸ்திரீகள் निर्विशङ्कभवदङ्गदर्शिनी:=தங்குதடையின்றி உமது அங்கங்களைத் தரிசிக்கின்ற खेचरी:=தேவஸ்திரீகளையும், खगमृगान्=பக்ஷி, மான் இவைகளையும் पशूनपि=பசுக்களையும், त्वत्पदप्रणयि=உமது சரணத்தில் பிரியமுள்ள काननञ्च=பிருந்தாவனத்தையும் धन्यधन्यमिति=மிக்கமிக்கப் புண்ணியஞ்செய்ததென अमानयन्=கொண்டாடினர். (231)

आपिबेयमधरामृतं कदा वेणुभुक्तरसशेषमेकदा ।
दूरतो बत कृतं दुराशयेत्याकुला मुहुरिमा: समामुहन् ॥ २३२ ॥

(ப-ரை) वेणुभुक्तरसशेषम्=வேணுவினால் அனுபவிக்கப்பட்டதும் *ரஸத்தினால் (ருசியினால்) மட்டும் சேஷமுமான अधरामृतम्= அதராம்ருதத்தை एकदा=ஒருதடவையாவது कदा=எப்பொழுதாவது आपिबेयम्=பானஞ்செய்வேனோ? बत=கஷ்டம், (तत्=அவ்விதம் பானஞ்செய்வதென்பது, दूरत:=வெகுதொலையிலுள்ளது. (அதாவது: நமக்குக்கிட்டாது என்பது கருத்து) दुराशया=கெட்ட ஆசையினால் कृतम्=போதும் (வீணாக ஆசைப்படுவதில் யாதுபயன் என்பது கருத்து) इति=என आकुला:=கலங்கின इमा:=இந்தக் கோபிகைகள் संमुमुहु:=மயக்கத்தை யடைந்தனர். (232) (எ-று)

प्रत्यहञ्च पुनरित्थमङ्गनाश्चित्तयोनिजनितादनुग्रहात् ।
बद्धरागविवशास्त्वयि प्रभो नित्यमापुरिह कृत्यमूढताम् ॥ २३३ ॥

(ப-ரை) प्रभो!=ஹே ப்ரபுவான கிருஷ்ண! अङ्गना:=அந்தக் கோபிகைகள் प्रत्यहम्=ஒவ்வொருநாளும் इत्थम्=இவ்விதமே चित्त-योनिजनितात्=மன்மதனால் செய்யப்பட்ட अनुग्रहात्=அனுக்கிரஹத்

* வேணுவானது அதரத்திலுள்ள அமுதம் முழுதையும் பானஞ்செய்துவிட்டது. ஆயினும் அதிலொட்டின ரஸம் (ருசி) எஞ்சியிருக்குமாதலால் அதைமட்டுமாவது ஒருதடவையாவது எப்பொழுதாவது பானஞ்செய்யும் பாக்கியம் கிட்டுமோவெனவெண்ணினர்.

தினல் त्वयि=உம்மிடத்தில் पुनः=மறுபடியும் बद्धरागविवशाः=வைக்கப்பட்ட அனுராகவிசேஷத்தினல் பரவசப்பட்டவர்களாய்க் கொண்டு नित्यम्=எப்பொழுதுமே इह=இந்தக் கோகுலத்தில் कृत्यमूढताम्=தாம்செய்யவேண்டியகாரியத்தில் ஒன்றும் தெரியாதிருத்தலை आपुः=அடைந்தனர். (233) (எ-று)

रागस्तावज्जायते हि स्वभावान्मोक्षोपायो यत्नतः स्यान्न वा स्यात् ।
तासान्त्वेकं तद्द्वयं लब्धमासीत् भाग्यं भाग्यं पाहि मां मारुतेश ॥

(ப-ரை) ஸ்திரீகளுக்கோ புருஷர்களுக்கோ रागस्तावत्=ஒருவருக்கொருவரிடத்தில் ஆசையானது स्वभावात्=சென்ற ஜன்மங்களிற்செய்த புண்ணியபாபகர்ம வாஸனையையொட்டி जायते=உண்டாகிறது. हि=இது பிரஸித்தமாக இருக்கிறது. ஈய்வரனிடத்தில் ப்ரேமை செலுத்தல் என்ற मोक्षोपायः=மோக்ஷத்துக்குரிய உபாயமானது यत्नतः=முயற்சித்துங்கூட स्यात्=ஏற்படலாம். अथवा=அல்லது न स्यात्=ஏற்படாமலும் போகலாம். तासान्तु=அந்தக் கோபிகைகளுக்கோவெனில் तद्द्वयम्=அவ்விரண்டும் பர்த்தாவினிடத்தில் ஆசை, ஈய்வரனிடத்தில் ப்ரேமை செலுத்தல் என்ற மோக்ஷோபாயம் ஆகிய *இரண்டும் लब्धम्=அடையப்பட்டதாகவே आसीत्=ஆயிற்று. भाग्यं भाग्यम्=அவர்களுடைய பாக்கியமே பாக்கியம். मारुतेश!=குருவாயூரில் வஸிக்குமீச! माम्=என்னை पाहि=காப்பீராக.

இவ்விதம் வேணுகான வர்ணனம் என்ற ஐம்பத்தோன்பதாவது தசகம் முற்றிற்று.



## இருபத்திரண்டாவது அத்தியாயம்.

(அ-கை) गोपीनां कामतः कृष्णे निस्सीमप्रेमसङ्गमः ।
कात्यायन्यर्चनोद्भूततत्प्रसादमहोदयः ॥ १ ॥
द्वाविंशे गोपकन्यानां वस्त्राहरणलीलया ।
वरं दत्वा गतः कृष्णो यज्ञशालामितीर्यते ॥ २ ॥

* ஸ்ரீகிருஷ்ணனொருவரே அவர்களுக்குக் கணவனுகவும், ஈச்வரனுகவும் ஆனமையின் அவரிடத்தில் செய்யும் ப்ரேமை இரண்டுவிதமாகவுமாகிவிட்டது என்பது கருத்து.

## अथ द्वाविंशोऽध्यायः ॥

श्रीशुक उवाच—हेमन्ते प्रथमे मासि नन्दव्रजकुमारिकाः। चेरुर्हविष्यं भुञ्जानाः कात्यायन्यर्चनव्रतम् ॥ १ ॥ आप्लुत्याऽम्भसि कालिन्द्या जलान्ते चोदितेऽरुणे। कृत्वा प्रतिकृतिं देवीमानर्चुर्नृप सैकतीम् ॥ २ ॥ गन्धैर्माल्यैः सुरभिभिर्बलिभिर्धूपदीपकैः। उच्चावचैश्चोपहारैः प्रवालफलतण्डुलैः ॥ ३ ॥ कात्यायनि महामाये महायोगिन्यधीश्वरि। नन्दगोपसुतं देवि पतिं मे कुरु ते नमः। इति मन्त्रं जपन्त्यस्ताः पूजां चक्रुः कुमारिकाः ॥ ४ ॥ एवं मासं व्रतं चेरुः कुमार्यः कृष्णचेतसः। भद्रकालीं समानर्चुर्भू

---

(க—ரை) கோபிகைகளுக்குக் காமத்தினுல் கிருஷ்ணனிடத்தில் எல்லையற்ற ப்ரேமையின் ப்ராப்த்தியானது முன்னர் சொல்லப்பட்டது. காத்யாயனியின் அர்ச்சனத்தினுலுண்டான கிருஷ்ண ப்ரஸாதமென்ற மஹாபலனும், வஸ்திராஹரணமென்ற லீலையினுல் கோபிகைகளுக்கு வரனைக்கொடுத்து யக்ஞசாலைக்குக் கிருஷ்ணன் சென்ருர் என்பதும் இந்த இருபத்திரண்டாவது அத்தியாயத்திலுபதேசிக்கப்படுகிறது. (எ—று)

ஸ்ரீசுகர் சொல்லலுற்ருர்—ஹேமந்தருதுவின் முதல் மாதத்தில் (மார்கழிமாதத்தில்) நந்தவ்ரஜத்திலுள்ள குமாரிகைகள் (யௌவனத்தையடைந்த ஸ்திரீகள்) ஹவிஷ்யத்தை (யவம் முதலிய அன்னத்தை) ச்சாப்பிட்டுக்கொண்டு காத்யாயனி (பார்வதி) யினுடைய அர்ச்சனரூபமான நியமத்தை அனுஷ்டித்துவந்தனர். (1) ஹே ந்ருப! ஸூரியன் உதயமானதும் யமுனையின் ஜலத்தில் ஸ்னனஞ்செய்து ஜலத்தினருகில் மணலினுல் செய்யப்பட்ட மூர்த்தியைத் தயாரித்துக்கொண்டு சந்தனங்களினுலும், வாசனையுள்ள மாலைகளினுலும், பலிகளினுலும், தூபதீபங்களினுலும், அதிகங்களான உபஹாரங்களினுலும் (நிவேதனங்களினுலும்), தளிர் பழம் அரிசி இவற்றினுலும் தேவியைப் பூஜித்தனர். (2–3) "ஹே காத்யாயனி! மஹாமாயே! மஹா யோகினி! அதீஸ்வரி! ஹே தேவி! நந்தகோபர் புத்திரனை எனக்குப்பதியாகச்செய்வாயாக உனக்கு நமஸ்காரம்" என்ற மந்திரத்தை ஜபித்துக்கொண்டு அந்தக் குமாரிகைகள் பூஜை செய்தனர். (4) குமாரிகைகள் கிருஷ்ணனிடஞ்சென்ற மனமுடையவர்

यान्नन्दसुतः पतिः ॥ ५ ॥ उषस्युत्थाय गोत्रैः स्वैरन्योन्याबद्धबाहवः । कृष्णमुच्चैर्जगुर्यान्त्यः कालिन्द्यां स्नातुमन्वहम् ॥ ६ ॥ नद्यां कदाचिदागत्य तीरे निक्षिप्य पूर्ववत् । वासांसि कृष्णं गायन्त्यो विजह्रुः सलिले मुदा ॥ ७ ॥ भगवांस्तदभिप्रेत्य कृष्णो योगेश्वरेश्वरः । वयस्यैरावृतस्तत्र गतस्तत्कर्मसिद्धये ॥ ८ ॥ तासां वासांस्युपादाय नीपमारुह्य सत्वरः । हसद्भिः प्रहसन्बालैः परिहासमुवाच ह ॥ ९ ॥ अत्रागत्याबलाः कामं स्वं स्वं वासः प्रगृह्यताम् । सत्यं ब्रवाणि नो नर्म यद्यूयं व्रतकर्शिताः ॥ १० ॥ न मयोदित पूर्वं वा अनृतं तदिमे विदुः । एकैकशः प्रतीच्छध्वं सहैवोत सुमध्यमाः

---

களாய் மாஸம் முழுவதும் விரதத்தையனுஷ்டித்து நந்தகோபர் புத்திரன் பதியாகவாகவேண்டுமென பத்ரகாளியை நன்கு பூஜித்தனர். (5) *உஷ:காலத்தில் எழுந்து தத்தமது பெயர்களைச் சொல்லி ஒருவருக்கொருவர் அழைத்துக்கொண்டும் ஒருவருக்கொருவர் கைகோத்துக்கொண்டும், ஒவ்வொரு நாளும் யமுனையில் ஸ்நானஞ்செய்யச் செல்லுகின்றவர்களாய் கிருஷ்ணனைக்குறித்து உறத்து கானஞ்செய்தனர். (6) ஒருநாள் வழக்கம்போல கரையில் வஸ்திரங்களை வைத்துவிட்டு கிருஷ்ணனைக் குறித்துப்பாடுகின்றவர்களாய் யமுனையில் ஜலத்தில் சந்தோஷத்துடன் விளையாடினர். (7) யோகேஸ்வரர்களுக்கும் ஈஸ்வரனும் பகவானுமான கிருஷ்ணன் அதையறிந்து அந்தக் கர்மத்துக்குப் பலன்தரவேண்டி தோழர்களுடன் கூடினவராய் அங்கு சென்று வேகமாக அவர்களின்புடவைகளையெடுத்துக்கொண்டு அருகிலிருந்த நீபமரத்திலேறிக்கொண்டு சிரிக்கின்ற பாலர்களுடன் தானுஞ்சிரித்துக்கொண்டு பரிஹாஸவார்த்தையைச்சொல்லவாரம்பித்தார். (8–9)

“ஹேகுமாரிகைகளே! இங்குவந்து இஷ்டப்படி அவரவர் புடவையைப் பெற்றுக்கொள்ளுங்கள். சத்தியஞ்சொல்லுகிறேன். விளையாட்டுவார்த்தையல்ல. நீங்கள் விரதானுஷ்டானத்தினல் இளைத்தவர்களாகவன்றோ இருக்கின்றீர்கள். (10) ஹே அழகிய இடையையுடையவர்களே! என்னல் பொய்வார்த்தை முன்னர் சொல்லப்பட்

---

* ஸூரியனுதயமாவதற்கு நான்கு நாழிகைக்கு முந்தின காலம் உஷ:காலமெனப்படும்.

॥ ११ ॥ तस्य तत्क्ष्वेलितं दृष्ट्वा गोप्यः प्रेमपरिप्लुताः। व्रीडिताः प्रेक्ष्य चान्योन्यं जातहासा न निर्ययुः ॥ १२ ॥

एवं ब्रुवति गोविन्दे नर्मणाऽऽक्षिप्तचेतसः। आकण्ठमग्नाः शीतोदे वेपमानास्तमब्रुवन् ॥१३॥ माऽनयं भोः कृथास्त्वां तु नन्दगोपसुतं प्रियम्। जानीमोऽङ्ग व्रजश्लाघ्यं देहि वासांसि वेपिताः ॥ १४ ॥ श्यामसुन्दर ते दास्यः करवाम तवोदितम्। देहि वासांसि धर्मज्ञ नोचेद्राज्ञे ब्रुवामहे ॥१५॥ श्रीभगवानुवाच—भवत्यो यदि मे दास्यो मयोक्तं वा करिष्यथ। अत्रागत्य स्ववासांसि प्रतीच्छन्तु शुचिस्मिताः ॥ १६ ॥ ततो जलाशयात्सर्वा दा-

---

டதே இல்லை. அதை இவர்கள் (தோழர்கள்) அறிவர். ஒவ்வொருவராகவோ, சேர்ந்தோ வந்து (வஸ்திரத்தை) ப் பெற்றுக்கொள்ளுங்கள்" என்றார். (11) அவருடைய அந்தப் பரிஹாஸத்தைக் கண்டு கோபிகைகள் ப்ரேமரஸத்தில் முழுகினவர்களாய் வெட்கத்தையடைந்து ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டு உண்டான சிரிப்பையுடையவர்களாய் அங்கு செல்லாதிருந்தனர். (12) கோவிந்தன் இவ்விதம் சொல்லும்பொழுது விளையாட்டு வார்த்தையினால் இழுக்கப்பட்ட மனமுடையவர்களாய் குளிர்ந்த ஜலத்தில் கழுத்துவரை முழுகிக்கொண்டு நடுங்கினதேஹத்துடன் அவரைச் சொல்லத்தொடங்கினர். (13) ஓ அங்க! அன்னியாயத்தைச் செய்யாதே. உன்னையோ இடைச்சேரியில் சிறந்தவனும், ப்ரியனுமான நந்தகோபருடைய புத்திரனாக நாங்களறிவோம். நாங்கள் நடுக்கமெடுத்திருக்கின்றோம், வஸ்திரங்களைக் கொடுத்துவிடு. (14) ஹே ஶ்யாம! ஸுந்தர! ஹே தர்மக்ஞ! உனது தாஸிகளான நாங்கள் உனது வார்த்தைப்படி செய்கின்றோம். வஸ்திரங்களைக் கொடு. இல்லாவிடில் அரசனிடம் (நந்தகோபரிடம் அல்லது கம்ஸனிடம்) சொல்லுவோம் என்றனர். (15) ஸ்ரீபகவான் சொல்லலுற்றார்—நீங்கள் எனது தாஸிகளாக இருப்பதும் என்னால் சொல்லப்பட்டதைச் செய்வீர்கள் என்பதும் உண்மையானால் ஹே சுசிஸ்மிதா:! இங்கு வந்து சொந்தமான வஸ்திரங்களைப் பெற்றுக்கொள்ளுங்கள் என்றார். (16) பிறகு எல்லாக் குமாரிகைகளும் குளிரினால் நடுக்கமெடுத்தவர்களாய்க்கொண்டும் சீதத்தினால் கஷ்டத்தை யடைந்தவர்களாய்க்

रिकाः शीतवेपिताः । पाणिभ्यां योनिमाच्छाद्य प्रोत्तेरुः शीतकर्शिताः ॥ १७ ॥ भगवानाहता वीक्ष्य शुद्धभावप्रसादितः। स्कन्धे निधाय वासांसि प्रीतः प्रोवाच सस्मितम् ॥ १८ ॥ यूयं विवस्त्रा यदपो धृतव्रता व्यगाहतैतत्तदु देवहेलनम् । बद्ध्वाञ्जलिं मूर्ध्न्यपनुत्तयेंऽहसः कृत्वा नमोऽधोवसनं प्रगृह्यताम् ॥ १९ ॥ (एकेन पाणिना नेमुरेकेनाच्छाद्य चाङ्गनाः । ता वीक्ष्योवाच भगवान्भूयो धर्म्यमिदं वचः ॥ एकेन पाणिना यो वै प्रणमेद्देवमच्युतम् । तस्य दण्डः करच्छेद इति धर्मविदो विदुः॥ तस्मादु-

---

கொண்டும், கைகளினல் பெண்குறியை மறைத்துக்கொண்டும் கரையேறினர். (17) அவர்களின் சுத்தமான பாவத்தினல் (ப்ரேமையினல்) ப்ரஸாதத்தையடைந்த பகவான் ப்ரீதியையடைந்து *அற்பம் அக்ஷதயோனிகளான அவர்களைப்பார்த்து வஸ்திரங்களை ஸ்கந்தத்தில் (கிளை பிரியுமிடத்தில்) வைத்து சிரிப்புடன் கூட சொல்லவாரம்பித்தார். (18)

விரதானுஷ்டானஞ் செய்யும் நீங்கள் வஸ்திரமில்லாதவர்களாய் ஜலத்தில் முழுகினீர்களென்பது யாதுண்டோ இந்த அது ஜலாபிமானிதேவனை (வருணனை) ப்பரிஹஸித்ததாகும். அந்தப் பாபத்தைப் போக்குவதற்குவேண்டி தலையில் இருகைகளையும் கூப்பி அஞ்ஜலிசெய்து நமஸ்கரித்து இடையில் கட்டும் வஸ்திரத்தைப் பெற்றுக்கொள்ளுங்கள் என்ருர். (19) (†ஒருகையினல் பெண்குறியை மறைத்துக்கொண்டு ஒருகையைமட்டு முயரத்தூக்கித் தலையில் வைத்து வணங்கினர். அவர்கள் அவ்விதம் வணங்கினதைக்கண்டு பகவான் திரும்பவும் தர்மத்தைவிட்டு விலகாதவார்த்தையைச் சொல்லத்தொடங்கினர். எவன் ஒரேகையினல் அச்யுதனன தேவனை

---

* आहताः=என்பது மூலம். இதற்கு ईषदक्षतयोनीः=என ஸ்ரீதரர் வியாக்கியானம் செய்திருக்கிருர். இதற்கு வம்சிதரீய வியாக்கியானத்தில் कृताल्पनिधुवनाः=ஸ்வல்பம் சுரதபோகத்தைச் செய்தவர்கள் எனப்பொருள் கூறப்பட்டிருக்கிறது.

†மூலத்தில் 19-வதாவது சுலோகத்துக்குப்பிறகு இம்மூன்று சுலோகங்களும் வேறு சில புஸ்தகங்களில் காணப்படுவதால் அதற்கும் உரை எழுதப்பட்டது.

**भाभ्यां पाणिभ्यां प्रणमेत्स्वामिनं नरः। तथाच यूयं कुरुत तन्मे प्रियतरं भवेत् ॥) इत्यच्युतेनाभिहितं व्रजाबला मत्वा विवस्त्राप्लवनं व्रतच्युतिम्। तत्पूर्तिकामास्तदशेषकर्मणां साक्षात्कृतं नेमुरवद्यमृग्यतः॥२०॥ तास्तथाऽवनता दृष्ट्वा भगवान्देवकीसुतः। वासांसि ताभ्यः प्रायच्छत्करुणस्तेन तोषितः॥ २१ ॥ दृढं प्रलब्धास्त्रपया च हापिताः प्रस्तोभिताः क्रीडनवच्च कारिताः। वस्त्राणि चैवापहृतान्यथाप्यमुं ता नाभ्यसूयन्प्रियसङ्गनिर्वृताः ॥ २२ ॥ परिधाय स्ववासांसि प्रेष्ठसङ्गमसज्जिताः। गृहीतचित्ता नो चेलुस्तस्मिल्लज्जायितेक्षणाः॥ २३ ॥ तासां विज्ञाय भगवा-**

---

வணங்குவானே அவனது கையைவெட்டல் என்ற சிக்ஷை விதிக்கப்படும் எனத்தர்மமறிந்தவர் எண்ணுகின்றனர். ஆகையினால் மனிதன் ஸ்வாமியை இருகைகளாலும் நமஸ்கரிக்கவேண்டும். அவ்விதமே நீங்களும் செய்யுங்கள். அது எனக்கு மிக்க பிரியமாகும் என்றார்.) கோபஸ்திரீகள் இவ்விதம் அச்யுதனால் தோஷமுள்ளதாகச்சொல்லப்பட்ட இடையில் வஸ்திரமில்லாமல் ஸ்நானஞ்செய்தலை (தாங்கள் செய்த) வ்ரதத்தினுடைய பங்கத்துக்கு ஹேதுவாக எண்ணிக்கொண்டு அந்த வ்ரதத்தின் பூர்த்தியில் விருப்பமுள்ளவர்களாய் அவனே பாபத்தைப்போக்குபவனாகவுமிருப்பதுபற்றி அந்த வ்ரதத்துக்கும் மீதமுள்ள எல்லாக் கர்மங்களுக்கும் பலப்ரதனான அவனையே வணங்கினர். (20) தேவகீசுதனான பகவான் அவ்விதம் அவர்கள் வணங்கினதைக்கண்டு அதனால் சந்தோஷித்தவனாய்க் கருணையுடன் அவர்களிடம் வஸ்திரங்களைக் கொடுத்துவிட்டார். (21) அவர்கள் மிகவும் வஞ்சிக்கப்பட்டனர். ஸ்திரீகளுக்குரிய லஜ்ஜையினின்றும் விடுவிக்க (ப்போக்க) ப்பட்டனர். பரிஹஸிக்கப்பட்டனர். பொம்மைபோல ஆட்டிவைக்கப்பட்டனர். வஸ்திரங்களோ திருடப்பட்டன. ஆயினுங்கூட ப்ரியனான க்ருஷ்ணனுடைய ஸம்பாஷணரூபமான ஸங்கமத்தினால் ஆனந்தத்தையடைந்தவர்களாய்க் கொண்டு அவரிடத்தில் தோஷாரோபணஞ்செய்தார்களில்லை. (22) தத்தமது வஸ்திரங்களைக் கட்டிக்கொண்டு ப்ரேஷ்டனான க்ருஷ்ணனுடைய ஸங்கமத்தினால் பரவசப்பட்டவர்களாகவும், (ஆனதுபற்றி க்ருஷ்ணனால்) க்ரஹிக்கப்பட்ட சித்தமுள்ளவர்களாகவும், அவரிடத்தில் லஜ்ஜையினால் விளங்கும் பார்வையுள்ளவர்களாகவுமாகி அசையாது நின்றனர்.

न्स्वपादस्पर्शकाम्यया । धृतव्रतानां सङ्कल्पमाह दामोदरोऽबलाः ।' २४ ॥ सङ्कल्पो विदितः साध्व्यो भवतीनां मदर्चनम् । मयाऽनुमोदितः सोऽसौ सत्यो भवितुमर्हति ॥ २५ ॥ न मय्यावेशितधियां कामः कामाय कल्पते । भर्जिता क्वथिता धाना प्रायो बीजाय नेष्यते ॥२६॥ यातावला व्रजं सिद्धा मयेमा रंस्यथ क्षपाः । यदुद्दिश्य व्रतमिदं चेरुरार्यार्चनं सतीः ॥ २७ ॥

श्रीशुक उवाच—इत्यादिष्टा भगवता लब्धकामाः कुमारिकाः । ध्यायन्त्यस्तत्पदाम्भोजं कृच्छ्रान्निर्विविशुर्व्रजम् ॥ २८ ॥ अथ गोपैः परिवृतो भगवान्देवकीसुतः । बृन्दावनाद्गतो दूरं चारयन्गाः सहाग्रजः ॥ २९ ॥

---

தாமோதரனான பகவான் தனதுபாதஸம்பந்தத்தில் விருப்பங்கொண்டு விரதத்தையனுஷ்டித்த அவர்களின் ஸங்கல்பத்தை யறிந்து கோபிகைகளைப் பார்த்துச் சொல்லலானார். (24) ஹேஸாத்விகளே! என்னுடைய அர்ச்சனத்தைச்செய்த உங்களுடைய ஸங்கல்பம் என்னாலறியப்பட்டது. அது என்னால் அங்கீகரிக்கவும் பட்டது. இது ஸத்தியமாகவாவதற்குத் தகுதியுடையதே. (25) என்னிடத்தில் அர்ப்பணஞ்செய்யப்பட்ட புத்தியுள்ளவர்களுக்குண்டாகும் காமமானது திரும்பவும் காமபோகத்தையும் பொருட்டு ஆகமாட்டாது. வறுக்கப்பட்டோ வேகவைக்கப்பட்டோ உள்ள விதை திரும்பவும் முளையையடையக் கூடியதாகப் பெரும்பாலு மிச்சிக்கப்படுவதில்லையன்றோ. (26) ஹேபதிவ்ரதைகளான அபலைகளே! மனோரதம் நிறைவேறினவர்களாய்க் கோகுலஞ்செல்லுங்கள். எதையுத்தேசித்து காத்யாயனியின் அர்ச்சனரூபமான இந்த விரதத்தையனுஷ்டித்தீர்களோ அதன்பயனாக அடுத்துவரும் இரவுகள் முழுதும் என்னுடன் ரமிக்கப் போகின்றீர்கள் என்றார். (27)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—இவ்விதம் பகவானால் சொல்லப்பட்டவர்களும் அடையப்பட்ட காமனையையுடையவர்களுமான கோபகுமாரிகைகள் அவரது சரணாரவிந்தத்தைத் தியானஞ்செய்துகொண்டு வெகுகஷ்டப்பட்டுக் கோகுலத்தில் பிரவேசித்தனர். (28) பிறகு தேவகியின் புத்திரனானபகவான் தமயனான பலராமனுடன் கூட கோபாலர்களால் சூழப்பட்டவராய் பசுக்களை மேய்த்துக் கொண்டு பிருந்தாவனத்திலிருந்து வெகுதூரம் சென்றார். (29) உடம்

**निदाघार्कातपे तिग्मे छायाभिः स्वाभिरात्मनः। आतपत्रायितान्वीक्ष्य द्रुमानाह व्रजौकसः॥ ३०॥ हे स्तोककृष्ण हे अंशो श्रीदामन्सुबलार्जुन। विशालर्षभ तेजस्विन्देवप्रस्थ वरूथप॥ ३१॥ पश्यतैतान्महाभागान्परार्थैकान्तजीवितान्। वातवर्षातपहिमान्सहन्तो वारयन्ति नः॥ ३२॥ अहो एषां वरं जन्म सर्वप्राण्युपजीवनम्। सुजनस्येव येषां वै विमुखा यान्ति नार्थिनः॥ ३३॥ पत्रपुष्पफलच्छायामूलवल्कलदारुभिः। गन्धनिर्यासभस्मास्थितोक्मैः कामान्वितन्वते॥ ३४॥ एतावज्जन्मसाफल्यं देहिनामिह देहिषु। प्राणैरर्थैर्धिया वाचा श्रेय एवाचरेत्सदा॥ ३५॥ इति प्रवालस्तबकफलपुष्पदलोत्करैः। तरूणां नम्रशाखानां मध्येन यमुनां गतः॥ ३६॥**

---

பில் வியர்வையை யுண்டாக்குகின்ற சூரியனுடைய வெய்யில்காயும் பொழுது தமது நிழல்களினால் தனக்கு குடைபோலிருக்கின்றன வும் கோகுலத்தை யொட்டி முளைத்தனவுமான மரங்களைக் கண்ணு ற்றுச் சொல்லத்தொடங்கினர். (30) ஹேஸ்தோககிருஷ்ண! ஹே அம்சோ! ஹே ஸ்ரீதாமன்! ஹே சுபல! ஹே அர்ஜுன! ஹே விசால! ஹே ரிஷப! ஹே தேஜஸ்வின்! ஹே தேவப்ரஸ்த! ஹே வருதப!. பிறர்க்கு வேண்டியே முக்கியமாக ஜீவிக்கின்றனவும், மஹாபாக்கியசாலிகளுமான இந்த மரங்களைப் பாருங்கள். இவை காற்று மழை வெய்யில் பனி இவற்றைத் தாங்கள் பொறுத்துக் கொண்டு நமக்கு அவை வராமல் தடுக்கின்றன. (32) எல்லாப் பிராணிகளுக்கும் உபயோகப்படக்கூடிய இவற்றின் ஜன்மமன்றோ மேலானது. எவற்றினிடம் யாசிப்பவர் (வருபவர்) நல்லமனிதனி டம் யாசிப்பவர் போல பயனற்றவர்களாகத் திரும்பிச் செல்லுவ தில்லை. இலை, புஷ்பம், பழம், நிழல், வேர், பட்டை, கட்டை, மணம், பிசின், சாம்பல், (கரி எனலாம்) தோலில்லாதகட்டை, மொ க்கு, இவைளினால் அவரவர்களின் விருப்பங்களைப் பூர்த்திசெய்கின் றன. ஜீவர்கள் விஷயத்தில் ப்ராணன்களினாலோ, அர்த்தங்களினா லோ, புத்தியினாலோ, வாக்கினாலோ, எப்பொழுதுமே நன்மையை யே செய்யவேண்டும் என்பது யாதுண்டோ இவ்வளவேயன்றோ இங்குள்ள ஜீவர்களின் ஜன்மத்தை ஸபலமாக்கக்கூடும். (33–35) இவ்விதம் தளிர் பூங்கொத்து பழம் புஷ்பம் இலை இவற்றின் கூட்

तत्र गाः पाययित्वाऽपः सुमृष्टाः शीतलाः शिवाः। ततो नृप स्वयं गोपाः कामं स्वादु पपुर्जलम् ॥ ३७ ॥ तस्या उपवने कामं चारयन्तः पशून्नृप। कृष्णरामावुपागम्य क्षुधार्ता इदमब्रुवन् ॥ ३८ ॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्द्धे गोपीवस्त्रापहारोनाम द्वाविंशोऽध्यायः ॥ २२ ॥

---

டத்தினால் வணங்கின கிளைகளையுடைய மரங்களின் நடுவினால்(திரும்பவும்)யமுனையையடைந்தார். (36) ஹேந்ருப! அங்கு சுத்தமும் குளிர்ந்ததும் தெளிந்ததுமான ஜலத்தைப் பசுக்களைக் குடிக்கச் செய்து பிறகு கோபாலர்கள் தாங்களும் வேண்டியவளவு ருசியுள்ள ஜலத்தைக் குடித்தனர். (37) ஹேந்ருப! அந்த யமுனையினருகிலுள்ள வனத்தில் தமதிஷ்டப்படி பசுக்களை மேய்க்கின்ற கோபாலர்கள் பசியினால் பீடிக்கப்பட்டவர்களாய் ராமகிருஷ்ணர்களிடம் வந்து பின்வருமாறு சொல்லத்தொடங்கினர். (38) (எ—று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண தசமஸ்கந்த
பூர்வார்த்தத்தில் கோபீவஸ்திராபஹரணமென்ற
இருபத்திரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.



## நாராயணீயம்.

मदनातुरचेतसोऽन्वहं भवदङ्घ्रिद्वयदास्यकाम्यया।
यमुनातटसीम्नि सैकतीं तरलाक्ष्यो गिरिजां समार्चिचन् ॥ २३५ ॥

(ப—ரை) **तरलाक्ष्यः**=சஞ்சலமான கண்களையுடையவர்களான கோபிகைகள் **मदनातुरचेतसः**=மன்மதனால் கலங்கின சித்தமுள்ளவர்களாய்க்கொண்டு **भवदङ्घ्रिद्वयदास्यकाम्यया**=உமது இருசரணங்களுக்கும் பணிவிடைசெய்வதில் விருப்பத்துடன் **यमुनातटसीम्नि**=யமுனையின் கரைப்பிரதேசத்தில் **सैकतीम्**=மணலினால் தயாரிக்கப்பட்ட **गिरिजाम्**=பார்வதியை (பார்வதியின் ரூபத்தை) **अन्वहम्**=ஒவ்வொரு நாளும் **समार्चिचन्**=சிரத்தையுடன் அர்ச்சித்துவந்தனர். (235)

குறிப்பு—जामयो यानि गेहानि शपन्त्यप्रतिपूजिताः ।
तानि कृत्याहतानीव विनश्यन्ति समन्ततः ॥

ஸஹோதரீ முதலியோர் பூஜிக்கப்படாதவராய் எந்தவீட்டைச் சபிக்கின்றனரோ அந்தவீடு கிருத்யை என்ற தூர்த்தேவதையினல் கெடுக்கப்பட்டதுபோலப் பலவழியிலும் அழிந்துவிடும் என்ற மனு வசனப்படி விவாஹாதிகாலத்தில் ஸஹோதரிகளைப்பூஜித்தல் அவஶ்ய மானதுபற்றி பகவானைக்கணவனுக அடையவெண்ணங்கொண்ட கோபிகைகள் எவ்வித இடையூறும்நேராதபடி முன்னரே பகவத்ஸஹோதரியான காத்யாயனியைப் பூஜித்தனர் என்பது கருத்து.

तव नामकथारताः समं सुदृशः प्रातरुपागता नदीम् ।
उपहारशतैरपूजयन् दयितो नन्दसुतो भवेदिति ॥ २३६ ॥

(ப-ரை) सुदृशः = கோபஸ்திரீகள் समम् = யாவரும் ஒன்று சேர்ந்துகொண்டு तव=உம்முடைய नामकथारताः=பெயரிலும் கதையிலும் பற்றுள்ளவர்களாய் (அதாவது; நாமகீர்த்தனஞ்செய்வதிலும் கதையைச்சொல்லுவதிலும் பற்றுள்ளவர்களாய்) க்கொண்டு प्रातः= விடியற்காலையில் नदीम्=யமுனையை उपागताः=அடைந்தவர்களாய் उपहारशतैः=நூற்றுக்கணக்கான பூஜாத்திரவியங்களினுல் "नन्दसुतः= நந்தகோபருடைய புத்திரன் दयितः=நாயகனுக भवेत्=ஏற்படவேண்டும்" इति=என்று சொல்லிக்கொண்டு अपूजयन्=பார்வதியைப் பூஜித்தனர். (236) (எ-று)

इतिमासमुपाहितव्रतास्तरलाक्षीरभिवीक्ष्य ता भवान् ।
करुणामृदुलो नदीतटं समयासीत्तदनुग्रहेच्छया ॥ २३७ ॥

(ப-ரை) इति=இவ்விதம் मासम्=ஒருமாஸம் முழுதும் उपाहित-व्रताः=அனுஷ்டிக்கப்பட்ட விரதத்தையுடையவர்களான ताः=அந்த तरलाक्षीः=கோபிகைகளை अभिवीक्ष्य=கண்ணுற்று भवान्=நீர் करुणा-मृदुलः=கருணைக்கு வசப்பட்டவராய் तदनुग्रहेच्छया=அவர்களுக்கு அனுக்கிரஹம் செய்யவேண்டுமென்ற விருப்பத்துடன் नदीतटम्= யமுனையின் கரையை समयासीत्=அடைந்தீர். (237) (எ-று)

नियमावसितौ निजांबरं तटसीमन्यवमुच्य तास्तदा ।
यमुनाजलखेलनाकुलाः पुरतस्त्वामवलोक्य लज्जिताः ॥ २३८ ॥

(ப—ரை) नियमावसितौ=நியமத்தின் முடிவில் निजांबरम्=தமது வஸ்திரத்தை तटसीमनि=கரைப்பிரதேசத்தில் अवमुच्य=அவிழ்த்து வைத்துவிட்டு यमुनाजलखेलनाकुलाः=யமுனையின் ஜலத்தில் விளையாடுவதிலீடுபட்டவர்களான ताः=அந்தக் கோபிகைகள் तदा=அப்பொழுது पुरतः=எதிரில் त्वाम्=உம்மை अवलोक्य=பார்த்து लज्जिताः=வெட்கத்தையடைந்தனர். (238) (எ—று)

त्रपया नमिताननास्वथो वनितास्वम्बरजालमन्तिके ।
निहितं परिगृह्य भूरुहो विटपं त्वं तरसाधिरूढवान् ॥ २३९ ॥

(ப—ரை) अथो=பிறகு वनितासु=ஸ்திரீகள் त्रपया=வெட்கத்தினால் नमिताननासु=குனியப்பட்ட முகமுள்ளவர்களாக வானபொழுது अन्तिके=அருகில் निहितम्=வைக்கப்பட்ட अम्बरजालम्=துணிக்கூட்டத்தை परिगृह्य=எடுத்துக்கொண்டு त्वम्=நீர் भूरुहः=மரத்தினுடைய विटपम्=கிளையில் तरसा=ஒரேபாய்ச்சலாய் अधिरूढवान्=ஏறிக்கொண்டீர். (239) (எ—று)

इह तावदुपेत्य नीयतां वसनं वः सुदृशो यथायथम् ।
इति नर्ममृदुस्मिते त्वयि ब्रुवति व्यामुमुहे वधूजनैः ॥ २४० ॥

(ப—ரை) सुदृशः!=அழகியகண்களையுடைய ஹே ஸ்திரீகளே! इह=இவ்விடத்தில் तावत्=முதலில் उपेत्य=வந்து वः=உங்களுடைய वसनम्=வஸ்திரமானது यथायथम्=மாறிவிடாமல் नीयताम्=எடுத்துக்கொள்ளப்படட்டும் इति=என त्वयि=நீர் नर्ममृदुस्मिते=விளையாட்டினால் மெதுவானசிரிப்பையுடையவராக ब्रुवति=சொல்லும்பொழுது वधूजनैः=ஸ்திரீஜனங்களினால் व्यामुमुहे=*மயக்கமடையப்பட்டது.

अयि जीव चिरं किशोर नस्तव दासीरवशीकरोषि किम् ।
प्रदिशांवरमम्बुजेक्षणेऽत्युदितस्त्वं स्मितमेव दत्तवान् ॥ २४१ ॥

(ப—ரை) अयि किशोर!=அடே குழந்தாய்! चिरम्=வெகுகாலம் जीव=ஜீவித்திருப்பாயாக. तव=உன்னுடைய दासीः=வேலைக்காரிகளான नः=எங்களை किमवशीकरोषि=என் பரவசப்படுத்துகின்றனை? हे अम्बुजेक्षण!=ஹே தாமரைக்கண்ணா! अम्बरम्=வஸ்திரத்தை

---

* அவ்விதம் செய்வதற்கும், அவ்விதம் செய்யமாட்டோமென்று சொல்லுவதற்கும் முடியாமல் மயங்கி நின்றனர் என்று கருத்து.

प्रदिश=கொடுத்துவிடு. इति=என்று उदितः=சொல்லப்பட்ட त्वम्=நீர் स्मितमेव=புன்சிரிப்பையே दत्तवान्=கொடுத்தீர். (241) (எ—று)

குறிப்பு—अयिकिशोर!=மணம்புரியாதமணாள! तवदासीः=உனது ப்ரேமைக்குக் காத்திருக்கின்ற नः=எங்களை किमवशीकरोषि=ஏன் ஆட்டிவைக்கின்றனை? எங்களை மணந்துகொள். अम्बरम्प्रदिश=மணத்துக்குரிய வஸ்திரத்தைக்கொடு. எங்களுக்குப் பதி நீதான். हे अम्बुजेक्षण!=ஹே புண்டரீகாக்ஷ! உனது கடாக்ஷம் கிடைக்காத வரை நாங்கள் பிறர்க்கு (யமனுக்கு) அதீநமான ஜீவிதத்தையுடையவர்களாக வாகிவிடுவோம், நிஸ்சயமிது, என ஆழ்ந்தகருத்துடன் அவர்கள் சொன்னபடியால் स्मितमेव=அவர்களின் வார்த்தையை அங்கீகரித்ததற்கடையாளமான சிரிப்பையே दत्तवान्=கொடுத்தீர் அப்படியே செய்கிறேன் எனப் புன்சிரிப்பினால் சூசிப்பித்தீர் என்ற ஆழ்ந்தகருத்தும் இதனின்றும் வெளியாகிறது. (எ—று)

अधिरुह्य तटं कृताञ्जलीः परिशुद्धाः स्वगतीर्निरीक्ष्य ताः ।
वसनान्यखिलान्यनुग्रहं पुनरेवं गिरमप्यदा मुदा ॥ २४२ ॥

(ப—ரை) तटम्=கரையில் अधिरुह्य=ஏறி कृताञ्जलीः=இருகைகளையும் கூப்பினவர்களும் परिशुद्धाः=உம்மை நமஸ்கரித்ததிலிருந்து இடையில் வஸ்திரமில்லாமல் ஸ்னானஞ் செய்ததாலுண்டான தோஷத்தைப் போக்கிக்கொண்டவர்களும் स्वगतीः=உம்மைச் சரண் புகுந்தவர்களுமான ताः=அவர்களை निरीक्ष्य=கண்ணுற்று अखिलानि=எல்லா वसनानि=வஸ்திரங்களையும் अनुग्रहम्=அனுக்கிரஹரூபமான एवङ्गिरमपि=பின்வரும் வார்த்தையையும் मुदा=ஸந்தோஷத்துடன் अदाः=கொடுத்தீர். (242) (எ—று)

विदितं ननु वो मनीषितं वदितारस्त्विह योग्यमुत्तरम् ।
यमुनापुलिने सचन्द्रिकाः क्षणदा इत्यबलास्त्वमूचिवान् ॥ २४३ ॥

(ப—ரை) ननु=ஹேகோபிகைகளே! वः=உங்களுடைய मनीषितम्=ஸங்கல்பமானது विदितम्=என்னாலறியப்பட்டது. इह=இந்த ஸங்கல்பவிஷயத்தில் योग्यम्=பொருத்தமான उत्तरम्=பதிலை यमुनापुलिने=யமுனையின் மணற்றிட்டில் सचन्द्रिकाः=சந்திரிகையுடன் கூடின क्षणदाः=இரவுகள் वदितारः=சொல்லப்போகின்றன इति=என்று त्वम्=நீர் अबलाः=ஸ்திரீகளைக்குறித்து ऊचिवान्=சொன்னீர்.

## अथ त्रयोविंशोऽध्याय: ॥

गोपा ऊचु:—राम राम महावीर्य कृष्ण दुष्टनिबर्हण। एषा वै बाधते क्षुन्नस्तच्छान्तिं कर्तुमर्हथ: ॥ १ ॥ श्रीशुक उवाच—इति विज्ञापितो गोपै-

---

उपकर्ण्य भवन्मुखच्युतं मधुनिष्यन्दि वचो मृगीदृश: ।
प्रणयादयि वीक्ष्य वीक्ष्य ते वदनाब्जं शनकैर्गृहं गता: ॥ २४४ ॥

(ப-ரை) अयि=ஹே கிருஷ்ண! भवन्मुखच्युतम्=உமது வாயினின்றும் வழிந்ததும் मधुनिष्यन्दि=தேனைப் பெருகவிடுகின்றதுமான वच:=வார்த்தையை मृगीदृश:=கோபஸ்திரீகள் उपकर्ण्य=கேட்டு प्रणयात्=ப்ரீதியினால் ते=உம்முடைய वदनाब्जम्=முகாரவிந்தத்தை वीक्ष्य वीक्ष्य=அடிக்கடி பார்த்துக்கொண்டு शनकै:=மெள்ள மெள்ள गृहम्=வீட்டை गता:=அடைந்தனர். (244) (எ-று)

इति नन्वनुगृह्य वल्लवीर्विपिनान्तेषु पुरेव सञ्चरन् ।
करुणाशिशिरो हरे हर त्वरया मे सकलामयावलिम् ॥ २४५ ॥

(ப-ரை) ननु हरे!=ஹே கிருஷ்ண! करुणाशिशिर:=கருணையால் குளுமைவாய்ந்தவராய்க்கொண்டு इति=இவ்விதம் वल्लवी:=கோபஸ்திரீகளை अनुगृह्य=அனுக்கிரஹித்துவிட்டு पुरेव=முன்போலவே विपिनान्तेषु=பிருந்தாவனத்தின் மத்யப்ரதேசங்களில் सञ्चरन्=ஸஞ்சரித்த நீர் मे=என்னுடைய सकलामयावलिम्=எல்லாவியாதிக் கூட்டங்களையும் त्वरया=விரைவாக हर=போக்குவீராக. (245) (எ-று)

இவ்விதம் கோபீ வஸ்திராபஹார வர்ணனமென்ற அறுபதாவது தசகம் முற்றிற்று. இந்த தசகத்தில் ஒருசுலோகம் அதிகம்.



## இருபத்து மூன்றாவது அத்தியாயம்.

(அ-கை) त्रयोविंशे ततो गोपैरन्नयाच्ञापदेशत: ।
तत्पत्न्यनुग्रहात्कृष्णो दीक्षितानन्वतापयत् ॥ १ ॥

(க-ரை) கோபாலர்கள் அன்னத்தை யாசித்தனர் என்ற வியாஜமாக கிருஷ்ணன் தீக்ஷிதபத்னிகளுக்கு அனுக்கிரஹஞ்செய்து தீக்ஷிதர்களை பச்சாத்தாபப்படும்படி செய்தார் என இந்த இருபத்து மூன்றாவது அத்தியாயத்திலுபதேசிக்கப்படுகிறது—

भगवान्देवकीसुतः । भक्ताया विप्रभार्यायाः प्रसीदन्निदमब्रवीत् ॥ २ ॥ प्रयात देवयजनं ब्राह्मणा ब्रह्मवादिनः । सत्रमाङ्गिरसं नाम ह्यासते स्वर्गकाम्यया ॥ ३ ॥ तत्र गत्वौदनं गोपा याचतास्मद्विसर्जिताः । कीर्तयन्तो भगवत आर्यस्य मम चाभिधाम् ॥ ४ ॥ इत्यादिष्टा भगवता गत्वाऽयाचन्त ते तथा । कृताञ्जलिपुटा विप्रान्दण्डवत्पतिता भुवि ॥ ५ ॥ हे भूमिदेवाः शृणुत कृष्णस्यादेशकारिणः । प्राप्ताञ्जानीत भद्रं वो गोपान्नो रामचोदितान् ॥ ६ ॥ गाश्चारयन्ताववदूर ओदनं रामाच्युतौ वो लषतो बुभुक्षितौ । तयोर्द्विजा ओदनमर्थिनोर्यदि श्रद्धा च वो यच्छत धर्मवित्तमाः ॥ ७ ॥

---

கோபாலர்கள் சொல்லத்தொடங்கினர் — மஹா வீரியமுள்ள ஹேராம ஹேராம! துஷ்டர்களை யழிக்கும் ஹே கிருஷ்ண! இந்தப் பசி எங்களைப் பாதிக்கிறது. அதற்குச் சாந்தியைச் செய்வதற்கு யோக்கியர்களாகின்றீர்கள். (1) ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்— கோபாலர்களால் இவ்விதம் தெரிவித்துக் கொள்ளப்பட்ட தேவகி புத்திரனான பகவான் பக்தையான ப்ராம்ஹணபாரியைக்கு அனுக்கிரஹம் செய்யவேண்டிப் பின்வருமாறு சொல்லத்தொடங்கினர். (2) "தேவயஜனத்தை (யக்ஞசாலையை) குறித்துச் செல்லுங்கள். அங்கு ப்ரம்ஹவாதிகளான ப்ராம்ஹணர்கள் ஸ்வர்க்கத்தில் விருப்பத்துடன் ஆங்கிரஸம் என்று ப்ரஸித்தமான ஸத்திரயாகத்தை அனுஷ்டிக்கின்றனர். (3) ஹே கோபாலர்காள்! எம்மாலனுப்பப்பட்டவர்களாய் அங்கு சென்று பகவானான அண்ணாவினுடையவும், என்னுடையவும் பெயரைச் சொல்லிக் கொண்டு அன்னத்தை யாசியுங்கள்" என்றார். (4) இவ்விதம் பகவானான கிருஷ்ணனால் அனுப்பப்பட்ட அவர்கள் அவ்விதமே சென்று தண்டம் போலப் பூமியில் விழுந்து இருகைகளையும் கூப்பிக்கொண்டு "ஹே பூமி தேவர்களான ப்ராம்ஹணர்களே! கேளுங்கள். கோபாலர்களான எங்களைக் கிருஷ்ணனுடைய உத்திரவுப்படி நடக்கின்றவர்களாகவும், பலராமனால் அனுப்பப்பட்டவர்களாகவும் அறிந்து கொள்ளுங்கள். பசுக்களை மேய்த்துக்கொண்டு ஸமீபத்தி லிருக்கின்ற ராம கிருஷ்ணர்கள் சாப்பிட வெண்ணங் கொண்டவர்களாய் உங்களுடைய அன்னத்தை யாசிக்கின்றனர். தர்மமறிந்தவர்களுள் சிறந்த

**दीक्षायाः पशुसंस्थायाः सौत्रामण्याश्च सत्तमाः। अन्यत्र दीक्षितस्यापि नान्नमश्नन्हि दुष्यति ॥ ८ ॥ इति ते भगवद्याच्ञां शृण्वन्तोऽपि न शुश्रुवुः। क्षुद्राशा भूरिकर्माणो बालिशा वृद्धमानिनः ॥ ९ ॥ देशः कालः पृथग्द्रव्यं मन्त्रतन्त्रर्त्विजोऽग्नयः। देवता यजमानश्च क्रतुर्धर्मश्च यन्मयः ॥ १० ॥ तं**

---

வர்களான ஹே ப்ராம்ஹணர்காள்! உங்களுக்கு ஶ்ரத்தையிருக்கு மானல் யாசிக்கின்ற அவ்விருவருக்கும் அன்னத்தைக் கொடுங்கள். எந்த யாகத்திலும் தீக்ஷைதொடங்கி * அக்னீஷோமீய பசுவின் ஸம்ஜ்ஞபனத்துக்குப் பின்னரும், அவ்விதமே ஸௌத்ராமணி என்ற யாகத்தைவிட வேறுயாகத்திலும் தீக்ஷிதனுடைய (யாகம் செய்பவ னுடைய) அன்னத்தைச்சாப்பிடுபவன் தோஷத்தையடைய மாட் டான் அன்றோ? எனச் சொல்லிக்கொண்டு யாசித்தனர். (5–8)

க்ஷுத்திரமான ஸ்வர்க்காதிகளில் மட்டுமாசைகொண்டவர்க ளும், அதிகம் கிலேசம் வாய்ந்த கர்மங்களைச் செய்கின்றவர்களும், மூர்க்கர் (பிடிவாதக்காரர்) களும், அதாவது: மூடர்களும், தங்களை ஜ்ஞானவ்ருத்தர்களாக எண்ணினவர்களுமான அவர்கள் பகவானு டைய யாசனத்தைக் கேட்டபோதிலும் கூட அதைக்காதில் வாங்கி னரில்லை. (9) தேசம், காலம், சரு புரோடசாதியான த்ரவ்யம், மந்த்ரம், ப்ரயோகம், 16 ருத்விக்குகள், கார்ஹபத்யம், ஆஹவனீ யம், தக்ஷிணாக்னி, ஸப்யம், ஆவஸத்யம் ஆகிய ஐந்து அக்னிகள், இந்திராதிகளான தேவதைகள், யாகஞ்செய்யும் யஜமானன், அங்கி யான யாகம், அதனாலுண்டாகும் (*)அபூர்வமென்ற தர்மம் ஆகிய யாவும் எவரது ஸ்வரூபமோ, அந்தக் கிருஷ்ணனை சரீரத்திலாத்ம

---

* பொதுவாய் எந்த யாகத்திலும் தீக்ஷை தொடங்கி பசுவின் ஆலம் பலனம் ஆனபிறகு தீக்ஷிதனுடைய அன்னத்தைச் சாப்பிடுவது தோஷ மாகாது. உங்கள் யாகத்திலோ பசுவின் ஆலம்பனம் ஆகிவிட்டது. ஆக வே எங்களுக்குத் தடையில்லாமல் அன்னம் போடலாம். ஆனல் ஸௌ த்ராமணி என்றயாகமானலோ எப்பொழுதுமே அந்தயாகஞ்செய்பவரின் அன்னத்தைச் சாப்பிடலாகாது. இதுவோ ஸௌத்ராமணியாக மன்று என்று கருத்து. (*) கர்மானுஷ்டானத்துக்குப்பின்னரும் பலன் வருவ தற்கு முன்னருமுள்ள பொருள் அபூர்வமெனப்படும். செய்யப்பட்ட கர் மத்தின் ஸூக்ஷ்மாவஸ்தை அபூர்வமென வேதாந்தங்களின் கொள்கை.

ब्रह्म परमं साक्षाद्भगवन्तमधोक्षजम् । मनुष्यदृष्ट्या दुष्प्रज्ञा मर्त्यात्मानो न मेनिरे ॥११॥ न ते यदोमिति प्रोचुर्न नेति च परन्तप । गोपा निराशाः प्रत्येत्य तथोचुः कृष्णरामयोः॥१२॥ तदुपाकर्ण्य भगवान्प्रहस्य जगदीश्वरः। व्याजहार पुनर्गोपान्दर्शयल्लौकिकीं गतिम् ॥ १३ ॥ मां ज्ञापयत पत्नीभ्यः ससङ्कर्षणमागतम् । दास्यन्ति काममन्नं वः स्निग्धा मय्युषिता धिया ॥ १४ ॥ गत्वाथ पत्नीशालायां दृष्ट्वासीनाः स्वलङ्कृताः । नत्वा द्विजसतीर्गोपाः प्रश्रिता इदमब्रुवन् ॥ १५ ॥ नमो वो विप्रपत्नीभ्यो निबोधत वचांसि नः । इतोऽविदूरे चरता कृष्णेनेहेषिता वयम् ॥ १६ ॥ गाश्चारयन्स गोपालैः

---

புத்தியுள்ளவர்களும், ஆனதுபற்றியே கெட்ட அறிவுள்ளவர்களுமான அவர்கள் அதோக்ஷஜனும் ஸாக்ஷாத்பகவானுமான பரம்ப்ரம்ஹமாகவென்ருமல் மனுஷ்யன் என்றே எண்ணினர். (11) ஹே பரந்தப! அவர்கள் யாதுகாரணத்தால் தருகிறேமென்றும் சொல்லவில்லையோ, இல்லையென்றும் சொல்லவில்லையோ அக்காரணத்தால் கோபாலர்கள் ஆசையொழிந்தவர்களாய்த் திரும்பிவந்து நடந்தபடி கிருஷ்ணன் பலராமன் இவர்களிடம் சொல்லினர். (12) ஜகதீஸ்வரனை பகவான் அதைக்கேட்டுச் சிரித்துக்கொண்டு (*)உலகப்போக்கைக் காண்பிக்கின்றவராய்த் திரும்பவும் கோபாலர்களைச் சொல்லவாரம்பித்தார். (13) பலராமனுடன்கூட நான் இங்கு வந்திருப்பதை யக்ஞ பத்னிகளிடம் தெரிவியுங்கள். புத்தியினுல் என்னிடம் வசிப்பவர்களும், ப்ரேமையுள்ளவர்களுமான அவர்கள் உங்களுக்கு வேண்டிய அன்னத்தைக் கொடுக்கப்போகின்றனர் என்ருர். (14) பிறகு கோபாலர்கள் யக்ஞபத்னிகளுக்குரியவிடத்தில் இருப்பவர்களும், (யாகத்துக்குரிய) அலங்காரம் பெற்றவர்களுமான ப்ராம்ஹண பத்னிகளை நமஸ்கரித்து வணக்கத்துடன் பின்வருமாறு சொல்லத்தொடங்கினர். (15)

ப்ராம்ஹண பத்னிகளான உங்களுக்கு நமஸ்காரம். எங்களுடைய வார்த்தைகளை மனத்தில் வாங்குங்கள். இங்கிருந்து வெகு ஸமீபத்தில் ஸஞ்சரிக்கின்ற கிருஷ்ணனுல் நாங்கள் அனுப்பப்பட்டவர்கள். (16) அவர் பலராமனுடன் கூடவும், கோபாலர்களுடன்

---

(*) காரியத்தில் கண்ணுள்ளவர் வெறுப்பையடையார், யாசகனைவுள்ள எவன்தான் அவமானத்தையடையவில்லை என்றலோகானுபவத்தை

सरामो दूरमागतः। बुभुक्षितस्य तस्यान्नं सानुगस्य प्रदीयताम्॥ १७॥ श्रुत्वाच्युतमुपायान्तं नित्यं तद्दर्शनोत्सुकाः। तत्कथाक्षिप्तमनसो बभूवुर्जातसंभ्रमाः॥ १८॥ चतुर्विधं बहुगुणमन्नमादाय भाजनैः। अभिसस्रुः प्रियं सर्वाः समुद्रमिव निम्नगाः॥ १९॥ निषिध्यमानाः पतिभिर्भ्रातृभिर्बन्धुभिः सुतैः। भगवत्युत्तमश्लोके दीर्घश्रुतधृताशयाः॥ २०॥ यमुनोपवनेऽशोकनवपल्लवमण्डिते। विचरन्तं वृतं गोपैः साग्रजं ददृशुः स्त्रियः॥ २१॥ श्यामं हिरण्यपरिधिं वनमाल्यबर्हधातुप्रवालनटवेषमनुव्रतांसे। वि-

---

கூடவும் பசுக்களை மேய்த்துக்கொண்டு (வீட்டிலிருந்து) வெகுதூரம் வந்துவிட்டார். சாப்பிடவெண்ணங்கொண்டவரும், தோழர்களுடன் கூடினவருமான அவருக்கு அன்னத்தைக் கொடுங்கள் என்றனர். (17) அச்யுதன் அருகில் வந்ததைக்கேட்டு எப்பொழுதும் அவரது தர்சனத்திலாவல்கொண்டவர்களும், அவருடைய கதையினுலிழுக்கப்பட்ட மனதையுடையவர்களுமான அவர்கள் பரபரப்பை யடைந்தவர்களாகவாயினர். (18) பக்ஷ்யம், போஜ்யம், லேஹ்யம், சோஷ்யம் என நான்குவிதமானதும் வெகு குணமுள்ளதுமான அன்னத்தை *பாத்திரங்களினுலெடுத்துக்கொண்டு எல்லா ப்ராம்ஹண பத்னிகளும் பதிகளினுலும், ப்ராதாக்களினுலும், பந்துக்களினுலும், புத்திரர்களினுலும் தடுக்கப்படினுங்கூட (அதைப் பொருட்படுத்தாது) உத்தம ஶ்லோகனன பகவானிடத்தில் நீண்டகால ஶ்ரவணத்தினுல் வைக்கப்பட்ட சித்தத்தையுடையவர்களாக இருப்பதுபற்றி நதிகள் ஸமுத்திரத்தைக் குறித்துப்போல ப்ரியனன பகவானைக்குறித்து வேகமாக ஓடிவந்தனர். (19–20) (வந்த) ஸ்திரீகள் அசோகமரத்தின் புதிய தளிர்களினுல் அலங்கரிக்கப்பட்ட யமுனையினருகிலுள்ள உத்யானவனத்தில் ஸஞ்சரிக்கின்றவரும் தமயனுடன் கூடினவரும் கோபாலர்களால் சூழப்பட்டவரும் தங்கநிறமுள்ள இடையில்கட்டின வஸ்திரத்தை (பீதாம்பரத்தை) யுடையவரும், வனத்திலுள்ள புஷ்பமாலைகளினுலும் மயில் தோ

---

* அன்னத்தை எடுத்துக்கொண்டு வந்தனர் என்றதனுலேயே பாத்திரங்களினுலெடுத்துவந்தனர் என்பதுகிடைத்துவிடக்கூடியதாகவிருக்கத் திரும்பவும் பாத்திரங்களினுல் என்றதிலிருந்து சாப்பிடுவதற்குரிய இலைகளுடனும் வந்தனர் எனச்சிலர் பொருள் கூறுகின்றனர்.

**न्यस्तहस्तमितरेण धुनानमब्जं कर्णोत्पलालककपोलमुखाब्जहासम् ॥२२॥ प्रायः श्रुतप्रियतमोदयकर्णपूरैर्यस्मिन्निमग्नमनसस्तमथाक्षिरन्ध्रैः । अन्तः प्रवेश्य सुचिरं परिरभ्य तापं प्राज्ञं यथाऽभिमतयो विजहुर्नरेन्द्र ॥ २३ ॥ तास्तथा त्यक्तसर्वाशाः प्राप्ता आत्मदिदृक्षया । विज्ञायाखिलदृग्द्रष्टा प्राह प्रहसिताननः ॥ २४ ॥ स्वागतं वो महाभागा आस्यतां करवाम किम् ।**

---

கைகளினலும் நற்சங்குப் பொடிகளினலும் தளிர்களினலும் நட னுக்குரிய வேஷத்தைச் செய்துகொண்டவரும், நீருண்ட மேகம் போலக் கறுத்தவரும், தோழனுடைய தோளில் வைக்கப்பட்ட இடது கையையுடையவரும்,மற்ருெரு(வலது)கையினல் தாமரைப் பூவைச் சுழற்றுகின்றவரும், காதுகளில் நீலோத்பல புஷ்பத்தையும், இருகன்னங்களிலும் சுருட்டை மயிர்களையும், முகாரவிந்தத்தில் சிரிப்பையும் உடையவருமான ஸ்ரீகிருஷ்ணனைக்கண்டனர்.(21-22) ஹே நரேந்திர! வெகுகாலமாகக் கேட்கப்பட்ட மிக்க ப்ரியனை கிருஷ்ணனுடைய உத்கர்ஷங்களாகிற கர்ணுபரணங்களினல் எவரி டத்தில் மூழ்கின மனமுள்ளவர்களாக இருந்தனரோ அவரை இப் பொழுது கண்களின் துவாரங்களினல் உள்ளில் ப்ரவேசிக்கச் செய்து வெகுகாலம் ஆலிங்கனஞ் செய்துகொண்டு ஸுஷுப்திஸா க்ஷியான ஆத்மாவை அஹம்விருத்திகள் ஆலிங்கனஞ் செய்துகொ ண்டு அவ்வாத்மாவில் லயிப்பது (ஒடுங்குவது) போல * தாபத்தைப் போக்கிக் கொண்டனர். (23) எல்லாப் புத்திவிருத்திகளுக்கும் ஸாக்ஷியான ஸ்ரீகோபாலன் எல்லாவிதமான ஆசையையும் விட்டுத் தன்னைப் பார்க்கவேண்டுமென்ற விருப்பத்துடன் அவ்விதம் அவர் கள் வந்ததை அறிந்துகொண்டு சிரித்தமுகமுள்ளவராய்ச் சொல் லத்தொடங்கினர். (24)

ஹே மஹாபாகர்களே! நல்வரவா? உட்காருங்கள். உங்களுக்கு என்ன ப்ரியத்தைச் செய்யப்போகின்ருேம். எங்களைப் பார்க்க

---

* ஸுஷுப்தி ஸாக்ஷியான ஆத்மாவில் அஹம்விருத்திகள் ஒடுங் கினதும் ஜாக்கிரத்ஸ்வப்பினங்களிலேற்படும் சிரமம்யாவும் எவ்விதம் வில குமோ அவ்விதமே இவர்களுக்கும் பகவத்தரிசனத்தினல் அதுவரை இரு ந்ததாபங்கள்யாவும் நீங்கிவிட்டன என்பது கருத்து.

**यन्नो दिदृक्षया प्राप्ता उपपन्नमिदं हि वः ॥ २५ ॥ नन्वद्धा मयि कुर्वन्ति कुशला: स्वार्थदर्शना:। अहैतुक्यव्यवहितां भक्तिमात्मप्रिये यथा ॥२६॥ प्राण बुद्धिमनःस्वात्मदारापत्यधनादयः। यत्संपर्कात्प्रिया आसंस्ततः कोन्वपरः प्रियः ॥२७॥ तद्यात देवयजनं पतयो वो द्विजातयः। स्वसत्रं पारयिष्यन्ति युष्माभिर्गृहमेधिनः ॥ २८ ॥ पत्न्य ऊचुः—मैवं विभोऽर्हति भवान्गदितुं नृशंसं सत्यं कुरुष्व निगमं तव पादमूलम्। प्राप्ता वयं तुलसिदाम पदावसृष्टं केशैर्निवोढुमतिलङ्घ्य समस्तबन्धून् ॥ २९ ॥ गृह्णन्ति नो न पतयः पितरौ सुता वा न भ्रातृबन्धुसुहृदः कुत एव चान्ये। तस्माद्भवत्प्रपदयोः**

---

வேண்டுமென்ற எண்ணத்துடன் வந்தீர்களென்பது யாதுண்டோ இது உங்களுக்குப் பொருத்தமானதே. (25) குசலர் (விவேகி) களும், தனக்குப் புருஷார்த்தத்தை விரும்புகின்றவர்களுமான ஜனங்கள் ஆத்மாவும் ஆனதுபற்றியே ப்ரியனுமான என்னிடத்தில் பலாபேக்ஷயற்றதும் இடையறுததுமான பக்தியை உள்ளபடி நேரிலேயே செய்கின்றனரன்றோ. (26) ப்ராணன், புத்தி, மனஸ், க்ஞாதிகள், தேஹம், களத்திரம், குழந்தைகள், தனம் முதலியன எதனுடைய (ப்ரியனான ஆத்மாவினுடைய) ஸம்பந்தத்தினால் ப்ரியங்களாகவாகின்றனவோ அதைக்காட்டிலும் வேறு எது ப்ரியமாகவாகக்கூடும். (27) ஆகவே யக்ஞசாலைக்குப்போய்விடுங்கள். உங்களது பதிகளான ப்ராம்ஹணர்கள் உங்களால் பத்னிகளுடன் கூடினவர்களாகவாகி தங்களது ஸத்ரத்தை (யாகத்தை) ப்பூர்த்தி செய்து கொள்ளப் போகின்றனர் என்றார். (28) பத்னிகள் சொல்லத் தொடங்கினர்—ஹே விபோ! நீர் பருஷமான வார்த்தையைச்சொல்லுவது பொருந்தாது. (எனது பக்தன் நாசத்தையடையான்) என்ற உமது ப்ரதிக்ஞையைச் சத்தியமாகச்செய்யும். நாங்களோ எல்லாப் பந்துக்களையும் விட்டுவிட்டு உமது காலால் தள்ளப்பட்ட துளஸி மாலையைத் தலைமயிர்களினால் வஹிக்கவேண்டி உமது பாதமூலத்தை (வந்து) அடைந்தோம். (29) பதிகள் எங்களை ஏற்கமாட்டார்கள். மாதா பிதாக்களோ, புத்திரர்களோ ஏற்கமாட்டார்கள். இவ்விதமிருக்க பிராதாக்களோ, பந்துக்களோ, சுஹிருத்துக்களோ ஆகிய மற்றவர்கள் எவ்விதம் ஏற்கப்போகின்றனர். ஆனதுபற்றி

**पतितात्मनां नो नान्या भवेद्गतिररिन्दम तद्विधेहि ॥ ३० ॥ श्रीभगवानुवाच—पतयो नाभ्यसूयेरन्पितृभ्रातृसुतादयः । लोकाश्च वो मयोपेता देवा अप्यनुमन्वते ॥ ३१ ॥ न प्रीतयेऽनुरागाय ह्यङ्गसङ्गो नृणामिह । तन्मनो मयि युञ्जाना अचिरान्मामवाप्स्यथ ॥ ३२ ॥ (श्रवणाद्दर्शनाद्ध्यानान्मयि भावोऽनुकीर्तनात् । न तथा सन्निकर्षेण प्रतियात ततो गृहान् ॥)**

**श्रीशुक उवाच—इत्युक्ता मुनिपत्न्यस्ता यज्ञवाटं पुनर्गताः । ते चानसूयवः स्वाभिः स्त्रीभिः सत्रमपारयन् ॥ ३३ ॥ तत्रैका विधृता भर्त्रा भगवन्तं यथाश्रुतम् । हृदोपगुह्य विजहौ देहं कर्मानुबन्धनम् ॥ ३४ ॥ भग-**

---

ஹே அரிந்தம! உமது பாதங்களின் நுனிகளில் போடப்பட்ட தேஹத்தையுடைய எங்களுக்கு வேறு கதியானது (ஸ்வர்க்காதிகளில் புத்திகூட) ஏற்படப்போவதில்லை. ஆகவே எங்களை அடிமைகளாக்கிக் கொள்ளுவீராக என்றனர். (30) ஸ்ரீபகவான் சொல்லலுற்றார்—பதிகள் உங்களிடத்தில் தோஷங்கூறமாட்டார்கள். பிதா, ப்ராதா, புத்திரன் முதலிய ஜனங்களும், என்னால் ஆக்ஞாபிக்கப்பட்ட தேவர்களும் ஸம்மதிப்பர். (31) இவ்வுலகில் மனிதர்களுக்கு அங்கத்துடன் (தேஹத்துடன்) தேஹம் சேருதலானது சுகத்தையும் பொருட்டோ, ஸ்னேஹ விருத்தியையும் பொருட்டோ ஆவதில்லை. ஆகவே என்னிடத்தில் மனதைச் செலுத்தினவர்களாய் விரைவில் என்னையடைந்துவிடப் போகின்றீர்கள். (32) (ஶ்ரவணத்தினாலும், தரிசனத்தினாலும், த்யானத்தினாலும், அடிக்கடிசெய்யும் நாமகீர்த்தனத்தினாலும் என்னிடத்தில் எவ்விதம் பக்தியேற்படுமோ அவ்விதம் சேர்ந்து வசிப்பதனால் ஏற்படமாட்டாது. ஆனதுபற்றி வீடு போய்ச் சேருங்கள் என்றார்.)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—இவ்விதஞ் சொல்லப்பட்ட அந்த முனிபத்நிகள் திரும்பவும் யாகசாலையையடைந்தனர். அவர்களும் அஸூயை (தோஷாரோபம்) செய்யாதவர்களாய்த் தமது ஸ்திரீகளுடன் சேர்ந்து ஸத்திர (யாக) த்தைப் பூர்த்தி செய்தனர். (33) அவர்களுள் பர்த்தாவினால் (கையினால்) கெட்டியாகப் பிடித்துக்கொள்ளப்பட்ட ஒரு யக்ஞபத்நியானவள் பகவானை முன்னர் தான் ஶ்ரவணஞ் செய்தபடி மனத்தால் தியானித்து கர்மமூலம் ஏற்பட்ட தேஹத்தைப் பரித்தியாகஞ் செய்துவிட்டாள். (34) ப்ரபுவும் கோவிந்தனு

वानपि गोविन्दस्तेनैवान्नेन गोपकान्। चतुर्विधेनाशयित्वा स्वयं च बुभुजे प्रभुः ॥ ३५ ॥ एवं लीलानरवपुर्नृलोकमनुशीलयन्। रेमे गोगोपगोपीनां रमयन्रूपवाक्कृतैः ॥ ३६ ॥ अथानुस्मृत्य विप्रास्ते अन्वतप्यन्कृतागसः। यद्विश्वेश्वरयोर्याच्ञामहन्म नृविडम्बयोः ॥ ३७ ॥ दृष्ट्वा स्त्रीणां भगवति कृष्णे भक्तिमलौकिकीम्। आत्मानं च तया हीनमनुतप्ता व्यगर्हयन् ॥ ३८ ॥ धिग्जन्म नस्त्रिवृद्विद्यां धिग्व्रतं धिग्बहुज्ञताम्। धिक्कुलं धिक् क्रियादाक्ष्यं

---

மான பகவானும் நான்குவிதமான அதே அன்னத்தினல் கோபாலர்களுக்கு ஆஹாரம் (1)செய்துவைத்துப் பின்னர் தானும் சாப்பிட்டார். (35) லீலைக்குவேண்டி மனித சரீரமெடுத்தவரும் ஆனது பற்றியே மனிதவுலகை அனுஸரித்து நடப்பவருமான கிருஷ்ணன் ரூபம் வாக்கு சரித்திரம் இவற்றல் பசு கோபாலர் கோபிகைகள் இவர்களை ரமிக்கச் செய்துகொண்டு அதன் மூலம் (தானும்) ரமித்தார். (36) பிறகு அந்த ப்ராம்ஹணர்கள், மனிதன் போல நடிக்கின்றவர்களும் உண்மையில் விஶ்வேஶ்வரர்களுமான (ராமகிருஷ்ணர்களுடைய) யாசனையை எக்காரணத்தினல் மறுத்தோமோ அக்காரணத்தினல் குற்றவாளிகளாகவானேம் என வெண்ணினவர்களாய் அடிக்கடி தாபமுற்றனர். (37) பகவானன கிருஷ்ணனிடத்தில் ஸ்திரீகளுக்கேற்பட்ட லோகாதீதமான பக்தியைக் கண்டு (தங்கள் விஷயத்தில்) அனுதாபத்தையடைந்தவர்களாய் அந்தப் பக்தியில்லாத தன்னை நிந்தித்துக்கொண்டனர். (38) எந்த நாம் கிருஷ்ணனிடத்தில் விமுகர்களாகவானேமோ அந்த நமது மூன்றுவிதமான சுத்தியையுடைய (அதாவது: †சௌக்லம், *ஸாவித்ரம், (*)தைக்ஷம் என்ற சுத்திபெற்ற) பிறவியைச் சுடவேண்டும். வித்யையைச் சுடவேண்டும். ப்ரம்ஹசரியத்தைச் சுடவேண்டும். வெகு விஷயமறிந்

---

(1) பக்தப்ரியனன ஸ்ரீகோபாலன் தனது பக்தர்களான கோபாலர்களை வரிசையாக உட்காரவைத்துத் தனதுபக்தர்களான பத்நிகள் கொண்டுவந்த அந்த அன்னத்தைத் தன்கையினலெடுத்து அவர்களுக்குப்பரிமாறி அவர்களைப் புஜிக்கச்செய்துவிட்டு எஞ்ஜிய பாகவதசேஷத்தைத் தானும் புஜித்தார் என ஸம்பிரதாயமறிந்தவர்கள் சொல்லுகின்றனர்.

† சுத்த மாதா பிதாவினிடமிருந்துண்டாவது. * காயத்ர்யுபதேசத்தாலுண்டாவது. (*) யக்ஞதீக்ஷை மூலமுண்டாவது.

**विमुखा ये त्वधोक्षजे ॥ ३९ ॥ नूनं भगवतो माया योगिनामपि मोहिनी। यद्वयं गुरवो नृणां स्वार्थे मुह्यामहे द्विजाः ॥ ४० ॥ अहो पश्यत नारीणामपि कृष्णे जगद्गुरौ। दुरन्तभावं योऽविध्यन्मृत्युपाशान्गृहाभिधान् ॥४१॥ नासां द्विजातिसंस्कारो न निवासो गुरावपि। न तपो नात्ममीमांसा न शौचं न क्रियाः शुभाः ॥ ४२ ॥ अथापि ह्युत्तमश्लोके कृष्णे योगेश्वरेश्वरे। भक्तिर्दृढा न चास्माकं संस्कारादिमतामपि ॥ ४३ ॥ ननु स्वार्थविमूढानां प्रमत्तानां गृहेहया। अहो नः स्मारयामास गोपवाक्यैः सतां गतिः ॥ ४४ ॥ अन्यथा पूर्णकामस्य कैवल्याद्याशिषां पतेः। ईशितव्यैः**

---

திருத்தலேச் சுடவேண்டும். குலத்தைச் சுடவேண்டும். கர்மங்களிலுள்ள ஸாமர்த்தியத்தைச் சுடவேண்டும். (39) யாது காரணத்தால் ப்ராம்ஹணர்களும் மனிதர்களுக்கெல்லாம் குருக்களுமான நாம் சொந்தலாப விஷயத்தில் மோஹத்தையடைகின்றோமோ, அக்காரணத்தால் பகவானுடைய மாயையானது யோகிகளுக்குங்கூட மோஹத்தைத் தரக்கூடியதே. இது நிஸ்சயம். (40) எந்தப் பக்தியானது கிருஹமெனப்பெயரிய மிருத்யுபாசங்களே அறுத்துவிடுமோ, ஜகத்குருவான ஸ்ரீகிருஷ்ணனிடத்தில் ஸ்திரீகளுக்குக்கூட ஏற்பட்ட அத்தகைய நிலேத்த பக்தியைப்பாருங்கள். இது வெகு ஆஸ்சரியமானது. (41) இவர்களுக்கு உபநயனுதி ஸம்ஸ்காரமில்லே. குருகுல வாஸமுமில்லே. தபஸ்ஸில்லே. ஆத்மவிசாரமில்லே. சௌகமில்லே. ஸந்தியோபாஸனம் முதலிய சுபகர்மங்களில்லே. (42) அப்படியிருந்தும் உத்தமமான கீர்த்தியுள்ளவனும், யோகேஸ்வரர்களுக்கும் ஈஸ்வரனுமான ஸ்ரீகிருஷ்ணனிடத்தில் திருடமான பக்தி (அவர்களுக்கு) யேற்பட்டுவிட்டதேயொழிய (முற்கூறிய) ஸம்ஸ்காராதிகளுள்ளவர்களாயினுங்கூட நமக்கேற்படவில்லேயே. (43) சொந்த காரியத்தில் மிக்க முடர்களும், கிருஹஸ்தாஸ்ரமத்துக்குரிய சேஷ்டையினுல் மிக்க மதங்கொண்டவர்களுமான நம்மை ஸாதுக்களுக்குக் கதியான பகவான் கோபாலர்களின் வார்த்தை மூலம் ஞாபகப்படுத்தினரே? இது ஆஸ்சரியமன்றோ. (44) அவ்விதமில்லாவிடில் பூர்ணகாமனும், கைவல்யம் முதலிய பலன்களுக்குப் பதியுமான ஈஸனுக்கு நியம்யர்களான நம்மால் ஆகவேண்டியது என்னே? இது

**किमस्माभिरीशस्यैतद्विडम्बनम् । ४५ ॥ हित्वान्यान्भजते यं श्रीः पादस्पर्शाशयासकृत् । आत्मदोषापवर्गेण तद्याच्ञा जनमोहिनी ॥ ४६ ॥ देशः कालः पृथग्द्रव्यं मन्त्रतन्त्रर्त्विजोऽग्नयः । देवता यजमानश्च क्रतुधर्मश्च यन्मयः ॥ ४७ ॥ स एष भगवान्साक्षाद्विष्णुर्योगेश्वरेश्वरः । जातो यदुष्वित्यश्रृण्म ह्यपि मूढा न विद्महे ॥ ४८ ॥ अहो वयं धन्यतमा येषां नस्तादृशीः स्त्रियः । भक्त्या यासां मतिर्जाता अस्माकं निश्चला हरौ ॥ ४९ ॥ नमस्तुभ्यं भगवते कृष्णायाकुण्ठमेधसे । यन्मायामोहितधियो भ्रमामः कर्मवर्त्मसु ॥ ५० ॥ स वै न आद्यः पुरुषः स्वमायामोहितात्मनाम् ।**

---

வெறும் லீலையேயாகும். (45) லக்ஷ்மீதேவியானவள் தனக்குரிய சாஞ்சல்யம் கர்வம் முதலிய தோஷங்களைவிடுத்து அடிக்கடி பாதங்களைத் தொடுவதில் ஆவல்கொண்டு மற்றவர்களைவிடுத்து எவரைச் சேவிக்கின்றாளோ, அவருடைய யாசனையானது ஜனங்களை மோஹிக்கச்செய்யவேண்டியேயன்றோ? (46) தேசம், காலம், சரு, புரோடாசம் முதலிய பொருள், மந்திரம், தந்திரம் (பிரயோகம்), ருத்விக்குகள், அக்னிகள், தேவதை, யஜமானன், யாகம், அதனாலுண்டாகும் அபூர்வமென்ற தர்மம் யாவும் எவர் மயமானதோ, யோகேஶ்வரேஶ்வரனும் பகவானுமான அந்த இந்த விஷ்ணுவானவர் யதுக்களிடத்தில் பூர்ணஸ்வரூபத்துடன் அவதரித்திருக்கிறார் எனக்கேட்டிருக்கின்றோமே? அப்படியிருந்தும் மூடர்களான நாம் அறிந்தோமில்லையே? (47–48) எந்த நமக்கு அத்தகைய ஸ்திரீகளிருக்கின்றனரோ, எவர்களுடைய (பதிகளான) நமக்கு ஹரியினிடத்தில் நிஶ்சலமான புத்தியானது உண்டாயிற்றோ, அந்த நாம் மிக்கப்பாக்கியசாலிகளேயாவோம். இது வெகு ஆஶ்சரியம். (49) எவரது மாயையினால் மோஹிக்கப்பட்ட புத்தியையுடையவர்களாய் கர்மமார்க்கங்களில் (யஜனயாஜனாதி வழிகளில்) சுழலுகின்றோமோ குறைவற்ற க்ஞானத்தையுடையவரும் (ஸர்வக்ஞரும்) பகவானுமான அந்தக் கிருஷ்ணனுக்கு நமஸ்காரம். ஆத்யனும் புருஷனுமான அவரே தனது மாயையினால் மோஹத்தையடைந்த புத்தியுள்ளவர்களும் அறியாத (தனது) மஹிமையையுடையவர்களுமான நம்முடைய அபராதத்தைப் பொருத்துக்கொள்ளக்கடவர். (50–51) இவ்விதம்

अविज्ञातानुभावानां क्षन्तुमर्हत्यतिक्रमम् ॥ ५१ ॥ इति स्वाघमनुस्मृत्य कृष्णे ते कृतहेलनाः । दिदृक्षवोऽप्यच्युतयोः कंसाद्भीता न चाचलन् ॥ ५२ ॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्धे
यज्ञपत्न्युद्धरणं नाम त्रयोविंशोऽध्यायः ॥ २३ ॥



---

கிருஷ்ணனிடத்தில் செய்யப்பட்ட அபசாரத்தையுடையவர்களான அந்த ப்ராம்ஹணர்கள் தமது அபராதத்தை நினைத்துக்கொண்டு அச்யுதர்களான ராமகிருஷ்ணர்களைப் பார்க்கவெண்ணங்கொண்டன ராயினுங்கூட கம்ஸனிடமிருந்து பயந்தவர்களாய் (இருந்தவிடம் விட்டு) அசையாதிருந்தனர். (52) (எ—று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண தசமஸ்கந்த
பூர்வார்த்தத்தில் யக்ஞபத்நி உத்தரணமென்ற இருபத்துமூன்றுவது
அத்தியாயம் முற்றிற்று.



## நாராயணீயம்.

ततश्च वृन्दावनतोऽतिदूरतो वनं गतस्त्वं खलु गोपगोकुलैः ।
हृदन्तरे भक्ततरद्विजाङ्गनाकदम्बकानुग्रहणाग्रहं वहन् ॥ २४६ ॥

(ப—ரை) **ततश्च**=பிறகு **त्वम्**=நீர் **भक्ततरद्विजाङ्गनाकदंबकानुग्रहणाग्रहम्**=மிக்கப்பக்தியுள்ளவர்களான ப்ராம்ஹண பத்நிகளுடைய கூட்டத்துக்கு அனுக்கிரஹிப்பதில் ஆக்ரஹத்தை (தாத்பரியத்தை) **हृदन्तरे**=மனத்திலுள்ளில் **वहन्**=வஹித்துக்கொண்டு **गोपगोकुलैः**=கோபாலர் பசுக்கள் இவற்றின் கூட்டங்களுடன் கூட **वृन्दावनतः**=பிருந்தாவனத்திலிருந்து **अतिदूरतः**=மிகுதூரத்திலுள்ள **वनम्**=காட்டை **गतः खलु**=அடைந்தீரன்றோ. (246) (எ—று)

ततो निरीक्ष्याशरणे वनान्तरे किशोरलोकं क्षुधितं तृषाकुलम् ।
अदूरतो यज्ञपरान् द्विजान् प्रति व्यसर्जयो दीदिवियाचनाय तान् ॥

(ப—ரை) **ततः**=பிறகு **अशरणे**=வீடற்றதான **वनान्तरे**=காட்டின் நடுவில் **किशोरलोकम्** = குழந்தைகளின் ஸமூஹத்தை **क्षुधितम्**=

பசியால் பீடிக்கப்பட்டதாகவும் तृषाकुलम्=தாஹத்தினல் கலங்கின தாகவும் निरीक्ष्य=கண்டு तान्=அந்தக்கோபாலர்களை दीदिवियाचनाय= அன்னத்தையாசிக்கவேண்டி अदूरत:=அருகில் यज्ञपरान्=(பக்தியே அணுவுமின்றி) யாகத்திலீடுபட்டிருக்கின்ற द्विजान्प्रति=ப்ராம்ஹணர் களைக்குறித்து व्यसर्जय:=அனுப்பினீர். (247) (எ—று)

**गतेष्वथो तेष्वभिधाय तेऽभिधां कुमारकेष्वोदनयाचिषु प्रभो।**
**श्रुतिस्थिरा अप्यभिनिन्युरश्रुतिं न किञ्चिदूचुश्च महीसुरोत्तमा:॥**

(ப—ரை) प्रभो!=ஹே ப்ரபுவே! अथो=பிறகு गतेषु=சென்றவர் களான तेषु=அந்த कुमारकेषु=கோபகுமாரகர்கள் ते=உம்முடைய अभिधाम्=பெயரை अभिधाय=சொல்லிக்கொண்டு ओदनयाचिषु=அன் னத்தை யாசிக்குங்கால் महीसुरोत्तमा:=ப்ராம்ஹணோத்தமர்கள் श्रुतिस्थिरा अपि=ஶ்ருதியினல்=ஶ்ரோத்ரேந்திரியத்தினல், ஸ்திரர்க ளாக இருந்தபோதிலுங்கூட அதாவது:—நல்ல காதுள்ளவர்களாக இருந்தபோதிலுங்கூட என்று பொருள். (ஶ்ருதியில்=வேதத்தில், ஸ்திரர்களாக=நிஶ்சித புத்தியுள்ளவர்களாக இருந்தபோதிலுங்கூட என்ற வேறுபொருளும் கொள்க.) अश्रुतिम्=காதில்லாமையை (வேத தத்துவமறியாமையை) अभिनिन्यु:=அபிநயஞ்செய்தனரே அன்றி किञ्चित्=ஒன்றையும் (தருகிறேமென்றோ தரமாட்டோமென்றோ ஒன் றையும்) नोचुश्च=சொல்வுமில்லை. (248) (எ—று)

**अनादरात् खिन्नधियो हि बालका: समाययुर्युक्तमिदं हि यज्वसु।**
**चिरादभक्ता: खलु ते महीसुरा: कथंहि भक्तं त्वयि तैस्समर्प्यते॥**

(ப—ரை) बालका हि=கோபபாலகர்களோ अनादरात्=அன்புகாட் டாமைபற்றி खिन्नधिय:=கஷ்டத்தையடைந்த புத்தியுள்ளவர்களாக समाययु:=திரும்பினர். यज्वसु=பக்தியில்லாது கேவலகாம்ய கர்மா னுஷ்டானம் செய்யும் யாக்ஞிகர்களிடத்து इदम्=அன்பில்லாதிருத் தலானது युक्तं हि=பொருத்தமானதேயன்றோ. ते=அந்த महीसुरा:= பிராம்மணர்கள் चिरात्=வெகு ஜன்மங்களாக *अभक्ता: खलु=சித்தத் தில் பகவத்பக்தியென்ற அன்பில்லாதவர்களன்றோ? ஆனதுபற்றி

---

* இங்கு अभक्ता:=என்றதனல் தம்மிடம் அன்னமில்லாதவர் உமக்கு எங்கிருந்து भक्तम्=அன்னத்தைக் கொடுப்பர் என்ற பொரு ளும் தொக்கி நிற்கிறது.

## अथ सप्तविंशोऽध्यायः ॥

श्रीशुक उवाच--गोवर्धने धृते शैल आसाराद्रक्षिते व्रजे। गोलोकादाव्रजत्कृष्णं सुरभिः शक्र एव च ॥ १ ॥ विविक्त उपसङ्गम्य व्रीडितः कृतहेलनः। पस्पर्श पादयोरेनं किरीटेनार्कवर्चसा ॥ २ ॥ दृष्टश्रुतानुभावोऽस्य कृष्णस्यामिततेजसः। नष्टत्रिलोकेशमद इन्द्र आह कृताञ्जलिः ॥ ३ ॥ इन्द्र उवाच—विशुद्धसत्त्वं तव धाम शान्तं तपोमयं ध्वस्तरजस्तमस्कम्।

---

## இருபத்தேழாவது அத்தியாயம்.

(அ—கை) सप्तविंशे तदालक्ष्य कृष्णस्य प्राभवं परम्।
वर्ण्यते सुरभीन्द्राभ्यामभिषेकमहोत्सवः ॥ १ ॥

(க—ரை) ஸ்ரீகிருஷ்ணனுடைய மேலான அந்த ப்ராபவத்தைக் கண்டு காமதேனு இந்திரன் இவர்களாற்செய்யப்பட்ட கோவிந்த பட்டாபிஷேக மஹோத்ஸவமானது இந்த இருபத்தேழாவது அத்தியாயத்திலுபதேசிக்கப்படுகிறது. (1) (எ—று)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றூர்—கோவர்த்தன பர்வதம் தூக்கப்பட்டு மழையினின்றும் கோகுலமானது ரக்ஷிக்கப்பட்டதும் கோலோகத்திலிருந்து காமதேனுவும், இந்திரனுமே கிருஷ்ணனை வந்தடைந்தனர். (1) அவமரியாதை செய்தவனும், ஆனதுபற்றியே வெட்கத்தையடைந்தவனுமான இந்திரன் ஏகாந்தமான (தனித்த) விடத்தில் வந்து ஸூரியனுடையதுபோன்ற காந்தியுள்ள கிரீடத்தினுல் கால்களில் இவரைத்தொட்டான். (2) அதிகமான சக்தியுள்ளவரான இந்தக் கிருஷ்ணனுடைய மஹிமையை நேரில் கண்டும், கேட்டுமிருக்கின்ற இந்திரன் இருகைகளையும் கூப்பிக்கொண்டு மூவ்வுலகுக்குமீசன் என்ற கர்வத்தை இழந்தவனுய்ச் சொல்லத்தொடங்கினுன். (3) இந்திரன் சொல்லுகிறுன்—(ஹே கிருஷ்ண!) உமது ஸ்வரூபமானது விசுத்தமான ஸத்வகுணமுள்ளதாயும், சாந்தமாயும் (ஏகரூபமாயும்) ஆனதுபற்றியே அதிகம் க்ஞானமுள்ளதாயும் ரஜோகுண தமோகுணங்களற்றதாயுமிருக்கிறது. ஆனதுபற்றி அக்ஞானத்தினுல் உண்டாக்கப்படுவதும் மாயாமயமுமான குணப்ரவாஹரூபமான இந்த ஸம்ஸாரமானது (தேஹஸம்பந்தமானது) உமக்குக்

मायामयोऽयं गुणसंप्रवाहो न विद्यते तेऽग्रहणानुबन्धः ॥ ४ ॥ कुतो न तद्धेतव ईश तत्कृता लोभादयो येऽबुधलिङ्गभावाः । तथापि दण्डं भगवान्बिभर्ति धर्मस्य गुप्त्यै खलनिग्रहाय ॥ ५ ॥ पिता गुरुस्त्वं जगतामधीशो दुरत्ययः काल उपात्तदण्डः । हिताय स्वेच्छातनुभिः समीहसे मानं विधुन्वञ्जगदीशमानिनाम् ॥ ६ ॥ ये मद्विधाज्ञा जगदीशमानिनस्त्वां वीक्ष्य कालेऽभयमाशु तन्मदम् । हित्वार्यमार्गं प्रभजन्त्यपस्मया ईहा खलानामपि

---

கிடையாது. (4) ஆகவே ஹே ஈச! அந்தத் தேஹஸம்பந்தத்தினல் செய்யப்பட்டவைகளும், அம்மாதிரியான வேறு தேஹத்துக்குக் காரணங்களும், அறியாமையை விளக்குகின்றனவுமான எந்த லோபம் முதலியனவுண்டோ அவை எங்கிருந்து உண்டாகப்போகின்றன. அவ்விதமிருந்தபோதிலுங்கூட பகவானுன நீர் தர்மத்தை ரக்ஷிக்கவேண்டியும், துஷ்டர்களை அடக்கவேண்டியும் சிக்ஷையைத் தரிக்கின்றீர். (5) ஜகத்துக்குப் பிதாவும், குருவும், நியந்தாவும், அழிவற்ற காலரூபியுமான நீர் சிக்ஷையைக்கொடுத்துக் கொண்டும் ஜகதீசன் என்ற அஹம்பாவமுள்ளவர்களுடைய அஹங்காரத்தைப் போக்கிக்கொண்டும் நன்மைக்கு வேண்டி லீலாவதாரங்களினல் சேஷ்டித்துவருகின்றீர். (6) என்போன்றவர்களும் அறியாதவர்களுமான ஜகதீசன் என்ற அஹங்காரமுள்ளவர்கள் எவர்களுண்டோ அவர்கள், பயத்தையடையவேண்டிய காலத்திலுங்கூட பயத்தையடையாதவரான உம்மைக்கண்டு சீக்கிரமாக அந்த மதத்தைவிட்டு கர்வமற்றவர்களாய்க்கொண்டு உமது பக்திரூபமான *ஆர்யமார்க்கத்தை அடைகின்றனர். ஆகவே உமது லீலையே துஷ்டர்களுக்குச்

---

* "वेदोक्तं योऽनतिक्रम्य कर्माणि कुरुतेऽनिशम् । स आर्यः प्रोच्यते सद्भिरनार्यस्तु ततोऽन्यथा ॥ வேதத்தில் சொல்லியதை மீருது எப்பொழுதும் கர்மங்களைச் செய்பவன் ஆர்யனுவான். இதற்கு மாறுனவன் அனர்யனுவான் எனக் கௌசிக புராணத்திலும், चतुर्ष्वाश्रमवर्णेषु पूज्येषु वणिजां गणे । शिष्टाचाररते पुंसि स्यादार्यो गम्यपद्धतौ ॥ பூஜ்யங்களான நான்கு ஜாதிகளிலும், நான்கு ஆச்ரமங்களிலும், வியாபாரிகளின் கூட்டத்திலும், சிஷ்டாசாரத்தில் பற்றுள்ள புருஷனிடத்திலும், நடக்கத்தக்க வழியிலும் ஆர்ய என்ற பதம் பிரயோகிக்கப்படும் என மார்க்கண்டேய புராணத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

तेऽनुशासनम् ॥ ७ ॥ स त्वं ममैश्वर्यमदाप्लुतस्य कृतागसस्तेऽविदुषः प्रभावम् । क्षन्तुं प्रभोऽथार्हसि मूढचेतसो मैवं पुनर्भून्मतिरीश मेऽसती ॥ ८ ॥ तवावतारोऽयमधोक्षजेह स्वयंभराणामुरुभारजन्मनाम् । चमूपतीनामभवाय देव भवाय युष्मच्चरणानुवर्तिनाम् ॥ ९ ॥ नमस्तुभ्यं भगवते पुरुषाय महात्मने । वासुदेवाय कृष्णाय सात्त्वतां पतये नमः ॥ १० ॥ स्वच्छन्दोपात्तदेहाय विशुद्धज्ञानमूर्तये । सर्वस्मै सर्वबीजाय सर्वभूतात्मने नमः ॥ ११ ॥ मयेदं भगवन्गोष्ठनाशायासारवायुभिः । चेष्टितं विहते यज्ञे मानिना

---

சிக்ஷையாகவாகிறது. (7) ஹே ப்ரபோ! ஈச! அந்த நீர் ஐஸ்வரிய மதம் நிறைந்தவனும், உம்முடைய ப்ரபாவத்தையறியாதவனும், அனதுபற்றி அபராதஞ் செய்தவனும், மூடமான புத்தியுள்ளவனுமான என் விஷயத்தில் பொருத்துக்கொள்ளத்தக்கவராக இருக்கின்றீர். இரும்பவும் எனது புத்தியானது இவ்விதம் கெட்டதாகவாகா திருக்கும்படி அருள்புரிவீராக. (8)

ஹே அதோக்ஷஜ! தேவ! இவ்விடத்தில் உம்முடைய இந்த அவதாரமானது ஸ்வயம்பாரமாகவானவர்களும், அதிகச்சுமையான குமாரர்களை உண்டுபண்ணுகின்றவர்களுமான சேனுபதிகளை அழிப்பதற்கும், உமது சரணத்தைத் தியானிப்பவர்களைக் காப்பதற்கும் வேண்டியேயாகும். (9) புருஷனும்=ஸர்வாந்தர்யாமியும், மஹாத்மாவும்=எங்கும் நீக்கமற நிறைந்தவரும், பகவானும்=ஷட்குண பரிபூர்ணரும் ஆன உமக்கு நமஸ்காரம். வாஸுதேவனும்=ஸர்வத்துக்கும் நிவாஸ (அதிஷ்டான) பூதரும், யாதவர்களுக்குப் பதியுமான கிருஷ்ணனுக்கு நமஸ்காரம். (10) பக்தர்களின் இச்சையை யொட்டி யாதவவம்சத்தில் தேஹத்துடன் வெளியானவரும், விசுத்தமான க்ஞானத்தையே மூர்த்தியாகவுடையவரும், (மாயையினுல்) ஸர்வரூபமாகவுமிருப்பவரும், ஸர்வத்துக்கும் காரணமானவரும், அனதுபற்றியே ஸர்வ பூதங்களுக்கும் ஆத்மாவானவருமான உமக்கு நமஸ்காரம். (11) ஹே பகவன்! அஹங்காரமுள்ளவனும், தீவ்ரமான கோபமுள்ளவனுமான என்னுல் (என்னைக் குறித்துச் செய்யும்) யாகம் தடுக்கப்பட்டதும் மழைத்தாரைகளினுலும், வாயுக்களினுலும் கோகுல நாசத்துக்குவேண்டி இந்தக்காரியமானது செய்யப்

तीव्रमन्युना ॥ १२ ॥ त्वयेशानुगृहीतोऽस्मि ध्वस्तस्तम्भो वृथोद्यमः। ईश्वरं गुरुमात्मानं त्वामहं शरणं गतः ॥ १३ ॥

श्रीशुक उवाच—एवं सङ्कीर्तितः कृष्णो मघोना भगवानमुम्। मेघगम्भीरया वाचा प्रहसन्निदमब्रवीत् ॥१४॥ श्रीभगवानुवाच—मया तेऽकारि मघवन्मखभङ्गोऽनुगृह्णता। मदनुस्मृतये नित्यं मत्तस्येन्द्रश्रिया भृशम् ॥ १५ ॥ मामैश्वर्यश्रीमदान्धो दण्डपाणिं न पश्यति। तं भ्रंशयामि संपद्भ्यो यस्य चेच्छाम्यनुग्रहम् ॥ १६ ॥ गम्यतां शक्र भद्रं वः क्रियतां मेऽनुशासनम्। स्थीयतां स्वाधिकारेषु युक्तैर्वः स्तम्भवर्जितैः ॥ १७ ॥ अथाह सुर-

---

பட்டது. (12) ஹே ஈச! உம்மால் அனுக்கிரஹிக்கப்பட்டேன். போக்கப்பட்ட கர்வத்தையுடையவனும், வீண்போன முயற்சியையுடையவனுமான நான் குருவும் ஸர்வாத்மாவுமான உம்மைச் சரணமடைந்தேன் என்றான். (13) ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—இவ்விதம் இந்திரனால் சொல்லப்பட்ட பகவானான கிருஷ்ணன் சிரித்துக்கொண்டு மேகம்போலக் கம்பீரமான வார்த்தையினால் இந்திரனைப் பார்த்துப் பின்வருமாறு சொல்லவாரம்பித்தார். (14) ஸ்ரீபகவான் சொல்லுகிறார்—ஹே இந்திர! இந்திரப்பதவிக்குரிய ஐஸ்வரியத்தினால் மிகவும் மதங்கொண்ட உனக்கு எப்பொழுதும் என்னுடைய பக்தியுண்டாகவேண்டி அனுக்கிரஹிக்கவெண்ணங்கொண்ட என்னால் உனது யாகத்துக்குத் தடைசெய்யப்பட்டது. (15) ஐஸ்வரியம், ஸ்ரீ இவற்றின் மூலமேற்படும் மதத்தினால் குருடனாகவானவன் சிக்ஷகனான என்னைப் பார்க்க (நினைக்க) மாட்டான். (அத்தகைய) எவனுக்கு அனுக்கிரஹத்தைச் செய்யவிரும்புகின்றேனோ அவனை ஸம்பத்துக்களினின்றும் நழுவும்படி செய்கிறேன். (16) ஹே இந்திர! போகலாம். உங்களுக்கு க்ஷேமமுண்டாகட்டும். என்னுடைய ஆக்ஞை அனுஷ்டிக்கப்படட்டும். உங்களால் சொந்தமான அதிகாரங்களில் கர்வமற்றவர்களாகவும், தவறி நடக்காதவர்களாகவும் இருக்கப்படட்டும் என்றார். (17)

பிறகு நல்ல மனஸ்ஸுள்ள காமதேனுவானது தனது ஸந்ததிகளான பசுக்களுடன் கூட (ஹே கிருஷ்ண! ஹே கிருஷ்ண! என) அழைத்து கோபால ரூபமுள்ளவரும், ஈஸ்வரனுமான ஸ்ரீ கிருஷ்

भिः कृष्णमभिवन्द्य मनस्विनी । स्वसन्तानैरुपामन्त्र्य गोपरूपिणमीश्वरम् ॥ १८ ॥ सुरभिरुवाच— कृष्ण कृष्ण महायोगिन्विश्वात्मन्विश्वसंभव । भवता लोकनाथेन सनाथा वयमच्युत ॥ १९ ॥ त्वं नः परमकं दैवं त्वं न इन्द्रो जगत्पते । भवाय भव गोविप्रदेवानां ये च साधवः॥२०॥ इन्द्रं नस्त्वाभिषेक्ष्यामो ब्रह्मणा नोदिता वयम् । अवतीर्णोऽसि विश्वात्मन्भूमेर्भारापनुत्तये ॥ २१ ॥ श्रीशुक उवाच—एवं कृष्णमुपामन्त्र्य सुरभिः पयसात्मनः । जलैराकाशगङ्गाया ऐरावतकरोद्धृतैः ॥ २२ ॥ इन्द्रः सुरर्षिभिः साकं नोदितो देवमातृभिः। अभ्यषिञ्चत दाशार्हं गोविन्द इति चाभ्यधात् ॥ २३ ॥ (अह-

---

னைநமஸ்கரித்துச் சொல்லத்தொடங்கிற்று. (18) சுரபி சொல்லுகிறது—ஹே க்ருஷ்ண! ஹே க்ருஷ்ண! ஹே மஹாயோகின்! ஹே விஸ்வாத்மன்! விஸ்வத்தையுண்டாக்குகின்றவரே! ஹே அச்யுத! லோகநாதனுன உம்மால் நாங்கள் நாத (ரக்ஷக) னுள்ளவர்களாக இருக்கின்றேம். (19) ஹே ஜகத்பதே! நீரே எங்களுக்கு மேலான தைவம். பசு, ப்ராம்ஹணர், தேவர் இவர்களுடையவும், எவர்கள் ஸாதுக்களோ அவர்களுடையவும் க்ஷேமத்துக்குவேண்டி நீரே எங்களுக்கு இந்திரனுகவாகவேண்டும். (20) ப்ரம்ஹதேவனுல் ஆக்ஞாபிக்கப்பட்டவர்களான நாங்கள் உம்மையே எங்களது இந்திரனுகப் பட்டாபிஷேகஞ் செய்யப்போகின்றேம். ஹே விஸ்வாத்மன்! பூமியின் சுமையைப்போக்கவேண்டி அவதரித்திருக்கின்றீரன்றே? என்றது. (21) ஸ்ரீசுகர் சொல்லலுற்றுர்—காமதேனுவானது இவ்விதம் க்ருஷ்ணனையழைத்து தன்னுடைய பாலினுலும், தேவமாதாக்களால் ஏவப்பட்ட இந்திரன் ஐராவதத்தின் துதிக்கையினுல் கொண்டுவரப்பட்ட ஆகாசகங்கையின் ஜலங்களினுலும், தேவருஷிகளுடன் கூட தாசார்ஹனுன க்ருஷ்ணனை அபிஷேகம்செய்து *கோவிந்தன் என்றும் பெயரிட்டான். (22–23) (நானே தேவர்

---

* गाम्=பசுக்களை அல்லது பூமியை विन्दति=ஈஸ்வரனுகவிருத்தல்பற்றி அடைகிறுர் என்ற வ்யுத்பத்தியினுல் கோவிந்த என்றதால் எல்லாப் பசுக்களுக்கும் அல்லது ஸகல பூமிக்கும் அதிபதி என்றேற்பட்டது. இதிலிருந்து பூலோகவாஸிகள் யாவராலும் ஈச்வரனுக வுபாஸிக்கத்தக்கவன் ஸ்ரீக்ருஷ்ணனே என்பது பெறப்பட்டது.

मिन्द्रो हि देवानां त्वं गवामिन्द्रतां गतः । गोविन्द इति लोके त्वां गास्यन्ति भुवि मानवाः ॥ १ ॥) तत्रागतास्तुम्बुरुनारदादयो गन्धर्वविद्याधरसिद्धचारणाः । जगुर्यशो लोकमलापहं हरेः सुराङ्गनाः सन्ननृतुर्मुदान्विताः ॥ २४ ॥ तं तुष्टुवुर्देवनिकायकेतवो ह्यवाकिरंश्चाद्भुतपुष्पवृष्टिभिः । लोकाः परां निर्वृतिमाप्नुवंस्त्रयो गावस्तदा गामनयन्पयोद्रुताम् ॥ २५ ॥ नानारसौघास्सरितो वृक्षा आसन्मधुस्रवाः । अकृष्टपच्यौषधयो गिरयोऽबिभ्रदुन्मणीन् ॥२६॥ कृष्णेऽभिषिक्त एतानि सत्वानि कुरुनन्दन । निर्वैराण्यभवंस्तात क्रूराण्यपि निसर्गतः ॥२७॥ इति गोगोकुलपतिं गोविन्दमभिषिच्य सः । अनुज्ञातो ययौ शक्रो वृतो देवादिभिर्दिवम् ॥ २८ ॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्धे इन्द्रस्तुति गोविन्दाभिषेको नाम सप्तविंशोऽध्यायः ॥ २७ ॥



---

களுக்கு இந்திரன். நீர் பசுக்களுக்கு இந்திரனுகவிருத்தலையடைந்திருக்கிறீர். ஆகவே பூமியிலும், மற்றவுலகிலுமுள்ள ஜனங்கள் உம்மைக் கோவிந்தன் எனச் சொல்லப்போகின்றனர் என்றான்.) அங்கு வந்த தும்புரு, நாரதர் முதலியவர்களும், கந்தர்வர், வித்யாதரர், ஸித்தர், சாரணர் இவர்களும், லோகத்தின் அழுக்கை (பாபத்தை) ப் போக்கக்கூடிய ஸ்ரீகிருஷ்ணனுடைய யசஸ்ஸைக் கானஞ் செய்தனர். தேவஸ்திரீகள் சந்தோஷத்துடன் கூடினவர்களாய் நன்கு நர்த்தனஞ்செய்தனர். (24) அந்தக் கோவிந்தனைத் தேவ ஸமூஹங்களுள் முக்கியமானவர்களெல்லோரும் ஸ்தோத்திரஞ் செய்து அத்புதபுஷ்பவிருஷ்டிகளினுலும் வர்ஷித்தனர். மூன்று லோகங்களும் அப்பொழுது மேலான ஸந்தோஷத்தையடைந்தன. பசுக்கள் பூமியைப் பாலால் நனைத்தன. (25) நதிகள் க்ஷீராதிகளான பற்பல ரஸங்களை ஓடவிட்டன. மரங்கள் தேனை வடியவிட்டன. மலைகள் உழுது பயிரிடப்படாமலே பக்குவமடைந்த ஔஷதிகளையுடையனவாகவாகி (கர்ப்பத்திலுள்ள) மணி (ரத்தினங்) களைத் தமது சிகரங்களில் தரித்தன. (26) ஹே குருநந்தன ! ஹே தாத ! கிருஷ்ணன் அபிஷிக்தனுகவானதும் இயற்கையில் குரூரங்களான

अथ अष्टाविंशोऽध्यायः ॥

श्रीशुक उवाच—एकादश्यां निराहारः समभ्यर्च्य जनार्दनम् । स्नातुं नन्दस्तु कालिन्द्यां द्वादश्यां जलमाविशत् ॥ १ ॥ तं गृहीत्वाऽनयद्भृत्यो

இந்த ப்ராணிகள் கூட வைரத்தை விட்டவைகளாகவாயின. (27) அந்த இந்திரன் பசு, கோகுலம் இவற்றுக்குப்பதியான ஸ்ரீக்ருஷ்ண னுக்கு இவ்விதம் கோவிந்தபட்டாபிஷேகம் செய்துவிட்டு தேவாதி களால் சூழப்பட்டவனுய் பகவானிடம் விடைபெற்றுக்கொண்டு தேவலோகத்தையடைந்தான். (28) (எ-று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண தசமஸ்கந்த
பூர்வார்த்தத்தில் இந்திரஸ்துதி கோவிந்தபட்டாபிஷேகமென்ற
இருபத்தேழாவது அத்தியாயம் முற்றிற்று.



## இருபத்தெட்டாவது அத்தியாயம்.

(அ-கை) अष्टाविंशे ततो नन्दानयनं वरुणालयात् ।
वैकुण्ठदर्शनञ्चाथ गोपानामनुवर्ण्यते ॥ १ ॥
गोवर्धनं समुद्धृत्य वशे कृत्वाऽमरेश्वरम् ।
नन्दानयनतः कृष्णो वरुणञ्च वशेऽनयत् ॥ २ ॥

(க-ரை) பிறகு வருணலோகத்திலிருந்து பகவான் நந்தகோப ரைக் கொண்டுவந்ததும், கோபாலர்களுக்கு வைகுண்டத்தைக் காண்பித்ததும், கோவர்த்தனமலையை உயரத்தூக்கினதிலிருந்து தேவேந்திரனை வசப்படுத்திக்கொண்டு நந்தகோபரை அழைத்து வந் ததிலிருந்து வருணனையும் தன்வசப்படுத்திக்கொண்டார் என்பதும் இந்த இருபத்தெட்டாவது அத்தியாயத்திலுபதேசிக்கப்படுகிறது.

ஸ்ரீசுகர் சொல்லலுற்றுர் — நந்தகோபரோ ஏகாதசியன்று ஆஹாரமில்லாதவராக இருந்து ஜனார்த்தனனைப் பூஜித்து த்வாதசி யில் ஸ்னானஞ்செய்யவேண்டி யமுனையின் ஜலத்தில் பிரவேசித்தார். (1) *ஆஸுரவேளையையறியாது இரவில் ஜலத்தில் ப்ரவேசித்த

* यामौ द्वौ मध्यमौ रात्रेरासुरस्समयो मतः=ராத்திரியில் முதல்யாமத்துக் கும கடை யாமத்துக்கும் இடையிலுள்ள இரண்டு யாமங்கள் ஆஸுரஸம

वरुणस्यासुरोऽन्तिकम् । अविज्ञायासुरीं वेलां प्रविष्टमुदकं निशि ॥ २ ॥ चुक्रुशुस्तमपश्यन्तः कृष्ण रामेति गोपकाः । भगवांस्तदुपश्रुत्य पितरं वरुणाहृतम् । तदन्तिकं गतो राजन्स्वानामभयदो विभुः॥ ३ ॥ प्राप्तं वीक्ष्य हृषीकेशं लोकपालः सपर्यया । महत्या पूजयित्वाह तद्दर्शनमहोत्सवः ॥४॥ वरुण उवाच—अद्य मे निभृतो देहोऽद्यैवार्थोऽधिगतः प्रभो । त्वत्पादभाजो भगवन्नवापुः पारमध्वनः ॥ ५ ॥ नमस्तुभ्यं भगवते ब्रह्मणे परमात्मने ।

---

அந்த நந்தகோபரை வேலைக்காரனான அஸுரன் வருணனுடைய ஸமீபங்கொண்டுபோனான். (2) கோபாலர்கள் அவரைக் காணாதவர்களாய் ஹே கிருஷ்ண! ஹே பலராம! எனக்கதறினர். ஹேராஜன்! பக்தர்களுக்கு அபயத்தைத் தருகின்றவரும் ப்ரபுவுமான பகவான் அதைக்கேட்டு பிதாவான நந்தகோபரை வருணன் கொண்டு போனதைக் கண்டு வருணனுடைய ஸமீபத்தையடைந்தார். (3) லோகபாலனான வருணன் ஹ்ருஷீகேசன் வந்ததைக்கண்டு அவருடைய தரிசனத்தினால் அதிகம் ஸந்தோஷத்தையடைந்தவனாய் அதிகமான பூஜையைச் செய்து சொல்லத்தொடங்கினான். (4) வருணன் சொல்லுகிறான்—ஹே ப்ரபோ! பகவன்! இப்பொழுது தான் நான் தேஹம் எடுத்தவனானேன். இப்பொழுதுதான் அதன் பயனும் அடையப்பட்டது. உமது சரணத்தை யடைந்தவர்கள் மோக்ஷத்தை யடைகின்றனரன்றோ. (5) லோகரசனையைப் பலவிதமாகச் செய்கின்றமாயையானது எவரிடத்திலிருப்பதாகச் சுருதியில் கூறப்படவில்லையோ அந்த ஒப்புயர்வற்ற ஐஸ்வரியமுள்ளவரும், பூர்ணரும் (எங்கும் நீக்கமற நிறைந்தவரும்) ஸர்வஜீவநியந்

---

யம் எனப்படும். ஆயினும் மறுநாள் த்வாதசியானது ஒரு கலை மட்டும் எஞ்சியிருப்பதால் அதற்குள் பாரணை முடிக்கவேண்டுவது அவச்யமாவதை யொட்டி நந்தகோபர் "कलार्धां द्वादशीं दृष्ट्वा निशीथादूर्ध्वमेव हि । आमध्याह्नाः क्रियास्सर्वाः कर्तव्याः शंभुशासनात् ॥" "த்வாதசி கலையோ கலார்த்தமோ இருந்தால் பாதிராத்திரிக்குப்பின்னரே மறுதினம் நடுப்பகல்வரை செய்ய வேண்டிய காரியங்களைச் செய்யவேண்டும்" என்ற சம்பு மஹருஷியின் வசனரூபமான சாஸ்திரத்தையொட்டி அருணோதயத்துக்கு முந்தியே ஜலத்தில் ஸ்னானத்துக்கு இரங்கினர். அந்தச் சாஸ்திரமுறையறியாத அஸுரன் நந்தகோபரை வருணனிடம் கொண்டுபோய்விட்டான்,

**न यत्र श्रूयते माया लोकसृष्टिविकल्पना ॥ ६ ॥ अजानता मामकेन मूढेनाकार्यवेदिना। आनीतोऽयं तव पिता तद्भवान्क्षन्तुमर्हति ॥ ७ ॥ ममाप्यनुग्रहं कृष्ण कर्तुमर्हस्यशेषदृक्। गोविन्द नीयतामेष पिता ते पितृवत्सल ॥ ८ ॥ श्रीशुक उवाच—एवं प्रसादितः कृष्णो भगवानीश्वरेश्वरः। आदायागात्स्वपितरं बन्धूनां चावहन्मुदम् ॥ ९ ॥ नन्दस्त्वतीन्द्रियं दृष्ट्वा लोकपालमहोदयम्। कृष्णे च सन्नतिं तेषां ज्ञातिभ्यो विस्मितोऽब्रवीत् ॥ १० ॥ ते त्वौत्सुक्यधियो राजन्मत्वा गोपास्तमीश्वरम्। अपि नः स्वगतिं सूक्ष्मामुपाधास्यदधीश्वरः ॥ ११ ॥ इति स्वानां स भगवान्विज्ञायाखिलदृक् स्वयम्। सङ्कल्पसिद्धये तेषां कृपयैतदचिन्तयत् ॥ १२ ॥ जनो वै लोक**

---

தாவுமான உமக்கு நமஸ்காரம். (6) மூடனும் ஆனதுபற்றியே செய்யவேண்டியதை நன்கு அறியாதவனும், அக்ஞனுமான எனது வேலைக் காரனால் இந்த உமது பிதா கொண்டுவரப்பட்டார். அதை நீர் பொறுத்துக்கொள்ளவேண்டும். (7) பிதாவினிடத்தில் வாத்ஸல்யமுள்ள ஹேகோவிந்த! ஹேகிருஷ்ண! எல்லாவற்றுக்கும் ஸாக்ஷியான நீர் எனக்கும் அனுக்கிரஹத்தைச் செய்வீராக. இந்த உமது பிதாவை அழைத்துப்போகலாம் என்றான். (8)

ஸ்ரீசுகர்சொல்லலுற்றார்—இவ்விதம் வேண்டப்பட்டவரும், யோகேஸ்வரர்களுக்கும் ஈஸ்வரரும், பகவானுமான ஸ்ரீகிருஷ்ணன் பந்துக்களுக்குச் சந்தோஷத்தை யுண்டுபண்ணவேண்டி தனதுபிதாவை அழைத்துக் கொண்டு வந்தார். (9) நந்தகோபரோ முன்னர் காணப்படாத லோகபாலனுடைய ஐஸ்வரியத்தையும், கிருஷ்ணனிடத்தில் அவர்களின் வணக்கத்தையும் கண்டு ஆஸ்சரியத்தையடைந்தவராய் (அதை) ப்பந்துக் களிடத்தில் சொன்னார். (10) ஹேராஜன்! அந்தக் கோபாலர்களோ அவரை ஈஸ்வரனாக நிஸ்சயித்துக்கொண்டு "நியந்தாவான இவர் தனதுகதியை (வைகுண்டத்தையும், ஸூக்ஷ்மமான ப்ரம்ஹத்தையும்) நம்மையடையச் செய்வாரா?" என அவ்விஷயத்தில் ஆவல்கொண்ட புத்தியுள்ளவராகவாயினர். (11) ஸர்வத்துக்கும் ஸாக்ஷியான அந்தப் பகவான் பந்துக்களின் இத்தகைய ஸங்கல்பத்தைத் தானேயறிந்துகொண்டு அவர்களுடைய ஸங்கல்பஸித்திக்குவேண்டி கிருபையினால் பின்வருமாறு

एतस्मिन्नविद्याकामकर्मभिः। उच्चावचासु गतिषु न वेद स्वां गतिं भ्रमन्॥ १३॥ इति सञ्चिन्त्य भगवान्महाकारुणिको हरिः। दर्शयामास लोकं स्वं गोपानां तमसः परम्॥ १४॥ सत्यं ज्ञानमनन्तं यद्ब्रह्म ज्योतिः सनातनम्। यद्धि पश्यन्ति मुनयो गुणापाये समाहिताः॥ १५॥ ते तु ब्रह्महदं नीता

---

சிந்திக்கலானர். (12) தேஹாதிகளிலுள்ள அஹம் புத்தியாகிற அவித்தையினாலும், அதன் மூலமேற்படும் காமத்தினாலும், அதனா லேற்படும் கர்மங்களினாலும் உயர்வுதாழ்வுள்ள (தேவர்முதல் பசு வாதிவரையுள்ள) யோனிகளில் சுத்துகின்ற இவ்வுலகிலுள்ள ஜன மானது தன்னுடையதான கதியை (வைகுண்டத்தை=அல்லது ஸ்வ ரூபத்தை) யறியாதிருக்கின்றது. (13) என்று நன்கு ஆலோசித் துக்கொண்டு பகவானும் அதிகம் கருணையுள்ளவருமான ஹரியான வர் ப்ரகிருதிஸம்பந்தமற்றதும், ஸத்யமும்=முக்காலத்திலு மழிவுள் ளபொருளைவிட வேறானதும், ஜ்ஞானமும்=ஜடமாக இல்லாததும் அதாவது:—தனதுப்ரகாசத்துக்குப் பிறவற்றின் ப்ரகாசத்தை எதிர் பார்க்கும் பொருளைவிட வேறுபட்டதும், அனந்தமும்=தேசகால வஸ்து பரிச்சேதமற்றதும், ஸனாதனமும்=நித்யசித்தமும், ஜ்யோ திஸ்ஸுமும்=ஸ்வயம் ப்ரகாசமுமான யாதொரு ப்ரம்ஹமுண்டோ, எதை மனோஜயமுள்ள முனிகள் மாயாநிவிருத்தி யேற்பட்டதும் அபரோக்ஷமாக ஸாக்ஷாத்கரிக்கின்றனரோ அந்த ப்ரம்ஹ ஸ்வரூ பத்தையும், சொந்தமான லோக (வைகுண்ட) த்தையும் கோபாலர் களுக்குக் காண்பித்தார்*. (14-15) அந்தக் கோபாலர்கள் முதலில் ப்ரம்ஹமாகிற மடுவை (அதாவது: நிர்விசேஷப்ரம்ஹஸாக்ஷாத்காரத் தை) அடைவிக்கப்பட்டவர்களாய் அதில் மூழ்கினர். (அதாவது: ப்ரம்ஹமயமாகவே இருந்தனர் என்றும்) ஆனாலோ பின்னர் கிருஷ் ணனால் (ஸமாதி யிலிருந்துபோல அந்த நிர்க்குண ப்ரம்ஹானுபவத்

---

* இந்த 14-15-வது சுலோகங்களுக்கு ஸ்ரீதரீயவியாக்கியானத்தில் சொல்லியதை யொட்டி உரை எழுதப்பட்டிருக்கிறது. அந்த வியாக்கி யானப்படி ஸ்ரீகோபாலன் முதலில் நிர்விசேஷப்ரம்ஹஸாக்ஷாத்காரத்தை யுண்டுபண்ணிப் பிறகு வைகுண்டலோகத்தையும் காண்பித்தார் என்றே ற்படுகிறது. அடுத்த 16-வது சுலோகத்துக்கு அவ்விதமே ஸ்ரீதரீயத்தில் வியாக்கியானஞ் செய்யப்பட்டிருக்கிறது.

मग्नाः कृष्णेन चोद्धृताः । ददृशुर्ब्रह्मणो लोकं यत्राक्रूरोऽध्यगात्पुरा ॥ १६ ॥
नन्दादयस्तु तं दृष्ट्वा परमानन्दनिर्वृताः । कृष्णं च तत्र छन्दोभिः स्तूय-
मानं सुविस्मिताः ॥ १७ ॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्धे
वैकुण्ठप्रदर्शनं नाम अष्टाविंशोऽध्यायः ॥ २८ ॥

---

இலிருந்து) வெளியில் கொண்டுவரப்பட்டவர்களாய், ஸ்ரீகிருஷ்ணன் நிமித்தமாக இருக்கும்பொழுது எதை முன்னர் அக்ரூரர் கண்டாரோ அந்த ப்ரம்ஹத்தின் லோகத்தையும் (வைகுண்டத்தையும்) கண்டனர்*. (16) நிர்க்குண பரமானந்தானுபவத்தினல் சுகிதர்களான நந்தகோபர் முதலியோரோ அந்த வைகுண்டலோகத்தில் வேதங்களினல் ஸ்துதிக்கப்படுகின்ற அந்தக் கிருஷ்ணனைக் கண்டும், திரும்பவும் அவரே கோபரூபியாக இங்கு இருப்பதைக்கண்டும் மிக்கவாஶ்சரியத்தை யடைந்தனர். (17)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண தசமஸ்கந்த
பூர்வார்த்தத்தில் வைகுண்டப்ரதர்சனமென்ற
இருபத்தெட்டாவது அத்தியாயம் முற்றிற்று.

## நாராயணீயம்.

आलोक्य शैलोद्धरणादिरूपं प्रभावमुच्चैस्तव गोपलोकाः ।
विश्वेश्वरं त्वामभिमत्य विश्वे नन्दं भवज्जातकमन्वपृच्छन् ॥ २७६ ॥

(ப-ரை) विश्वे=ஸமஸ்தமான गोपलोकाः=கோபஜனங்களும் शैलोद्धरणादिरूपम्=மலையைத்தாங்கி நிற்றல் முதலிய ரூபமான तव=

---

* ஸ்ரீகிருஷ்ணன் தனதுபக்தர்களான கோபாலர்களுக்கு முதலில் நிர்விசேஷ ப்ரம்ஹஸாக்ஷாத்காரத்தைக் கொடுத்துப் பின்னர் அதனின்றும் திருப்பி வைகுண்டலோகத்தைக் காண்பித்தார் என்றதிலிருந்து நிர்க்குண ப்ரம்ஹானுபவரூபமான ஆனந்தத்துக்கும், ஸகுணபகவதனுபவரூபமான ஆனந்தத்துக்கும் பயனில் எவ்விதவேற்றுமையு மில்லை என்பது பெறப்பட்டது.

உம்முடைய **उच्चै:प्रभावम्**=மேலான ஸாமர்த்தியத்தை **आलोक्य**= கண்ணுற்று **त्वाम्**=உம்மை **विश्वेश्वरम्**=விஶ்வேஶ்வரனாக **अभिमत्य**= நிஶ்சயித்துக்கொண்டு **नन्दम्**=நந்தகோபரை **भवज्जातकम्**=உமது ஜாதகத்தை **अन्वपृच्छन्**=கேட்டனர். (276) (எ-று)

**गर्गोदितो निर्गदितो निजाय वर्गाय तातेन तव प्रभावः ।**
**पूर्वाधिकस्त्वय्यनुराग एषामैधिष्ट तावद्बहुमानभारः ॥ २७७ ॥**

(ப-ரை) **तातेन**=உமது பிதாவான நந்தகோபரால் **गर्गोदित:**= கர்க்கரால் சொல்லப்பட்ட **तव**=உம்முடைய **प्रभाव:**=மஹிமையானது **निजाय**=சொந்தமான **वर्गाय**=வகுப்பார்க்கு **निर्गदित:**=தெளிவாய்ச் சொல்லப்பட்டது. **एषाम्**=அதைக்கேட்ட இவர்களுக்கு **तावत्**=அப்பொழுது **त्वयि**=உம்மிடத்தில் **बहुमानभार:**=அதிகம் மரியாதையையுடைய **अनुराग:**=ப்ரீதியானது **पूर्वाधिक:**=முன்னிருந்ததைக்காட்டிலுமதிகமாக **ऐधिष्ट**=விருத்தியையடைந்தது. (277)

**ततोऽवमानोदिततत्त्वबोधः सुराधिराजः सह दिव्यगव्या ।**
**उपेत्य तुष्टाव स नष्टगर्वः स्पृष्ट्वा पदाब्जं मणिमौलिना ते ॥ २७८ ॥**

(ப-ரை) **तत:**=பிறகு **अवमानोदिततत्त्वबोध:**=அவமானத்தினுலுண்டுபண்ணப்பட்ட தத்துவக்ஞானத்தையுடையவனுன **स:**=அந்த **सुराधिराज:**=இந்திரன் **नष्टगर्व:**=கர்வமற்றவனுய் **दिव्यगव्यासह**=தேவலோகத்திலுள்ள காமதேனுவுடன்கூட **उपेत्य**=வந்து **मणिमौलिना**= மணிகளுடன் கூடின கிரீடத்தினுல் **ते**=உம்முடைய **पदाब्जम्**=சரணுரவிந்தத்தை **स्पृष्ट्वा**=தொட்டு (அதாவது: வணங்கி) **तुष्टाव**=ஸ்துதித்தான். (278) (எ-று)

**स्नेहस्नुतैस्त्वां सुरभिः पयोभिर्गोविन्दनामाङ्कितमभ्यषिञ्चत् ।**
**ऐरावतोपाहृतदिव्यगङ्गापाथोभिरिन्द्रोऽपि च जातहर्षः ॥ २७९ ॥**

(ப-ரை) **सुरभि:**=காமதேனு **स्नेहस्नुतै:**=ப்ரேமையினுல் பெருகின **पयोभि:**=பால்களினுல் **गोविन्दनामाङ्कितम्**=கோவிந்தன் என்ற பெயரினுல் அடையாளஞ்செய்யப்பட்ட **त्वाम्**=உம்மை **अभ्यषिञ्चत्**= அபிஷேகஞ்செய்தது. **इन्द्रोऽपि च**=இந்திரனும் **जातहर्ष:**=உண்டான சந்தோஷத்தையுடையவனுய் **ऐरावतोपाहृतदिव्यगङ्गापाथोभि:**=ஐராவதமென்ற யானையினுல் கொண்டுவரப்பட்ட தேவலோக கங்கையின் ஜலங்களினுல் **त्वाम्**=உம்மை **अभ्यषिञ्चत्**=அபிஷேகஞ்செய்தான்.

जगत्त्रयेशे त्वयि गोकुलेशतयाभिषिक्ते सति गोपवाटः ।
नाकेऽपि वैकुण्ठपदेऽप्यलभ्यां श्रियं प्रपेदे भवतः प्रसादात् ॥ २८० ॥

(ப–ரை) जगत्त्रयेशे=மூவுலகுக்குமீசனுன त्वयि=நீர் गोकुलेशतया=கோகுலேசனுக अभिषिक्ते सति=அபிஷேகஞ் செய்யப்பட்ட பொழுது गोपवाटः=கோபாலர்கள் வஸிக்குமிடமானது नाकेऽपि=தேவலோகத்திலும் वैकुण्ठपदेऽपि=வைகுண்ட ஸ்தானத்திலும் கூட अलभ्याम्=கிடைத்தற்கரிதான श्रियम्=சோபையை भवतः=உம்முடைய प्रसादात्=அனுக்கிரஹத்தினுல் प्रपेदे=அடைந்தது. (280)

कदाचिदन्तर्यमुनं प्रभाते स्नायन्पिता वारुणपूरुषेण ।
नीतस्तमानेतुमगाः पुरीं त्वं तां वारुणीं कारणमर्त्यरूपः ॥ २८१ ॥

(ப–ரை) कदाचित्=ஒருஸமயம் प्रभाते=நடுநிசியில் அதாவது: ஆஸுரவேளையில் अन्तर्यमुनम्=யமுனையின் நடுவில் स्नायन्=ஸ்நானஞ்செய்துகொண்டிருந்த पिता=உமது பிதாவான நந்தகோபர் वारुणपूरुषेण=வருணனுடைய தூதபுருஷனுல் वारुणीम्=வருணனுடையதான पुरीम्=பட்டினத்துக்கு नीतः=கொண்டு போகப்பட்டார். तम्=அவரை आनेतुम्=அழைத்துவரவேண்டி कारणमर्त्यरूपः=பூபாரஹரணமென்ற காரியத்துக்குவேண்டி மனிதருபமெடுத்த त्वम्=நீர் ताम्=அந்த வருணபட்டினத்தை अगाः=அடைந்தீர். (281) (எ–று)

ससंभ्रमं तेन जलाधिपेन प्रपूजितस्त्वं परिगृह्य तातम् ।
उपागतस्तत्क्षणमात्मगेहं पिताऽवदत्तच्चरितं निजेभ्यः ॥ २८२ ॥

(ப–ரை) तेन=அந்த जलाधिपेन=வருணனுல் ससंभ्रमम्=பரபரப்புடன் प्रपूजितः=நன்கு பூஜிக்கப்பட்ட त्वम्=நீர் तातम्=பிதாவான நந்தகோபரை परिगृह्य=பெற்றுக்கொண்டு तत्क्षणम्=அதே க்ஷணத்தில் आत्मगेहम्=சொந்தவீடான கோகுலத்தை उपागतः=அடைந்தீர். पिता=நந்தகோபர் तच्चरितम्=அந்த வருணனுடைய நடத்தையை (மரியாதையை) निजेभ्यः=தன்னைச் சேர்ந்தவர்களுக்கு अवदत्=சொன்னுர். (282) (எ–று)

குறிப்பு—இந்த ஶ்லோகத்தில் तच्चरितम्=என்றதற்குப் பதிலாக "त्वच्चरितम्=உமது சரித்திரத்தை" என்று பாடமிருக்கவேண்டுமென்று தோன்றுகிறது. ஆயினும் அச்சிட்ட புஸ்தகத்தில் तच्चरितम्=என்றும், அதன் வியாக்கியானத்தில் तच्चरितम्=नन्दहरणादि-

रूपम्=என்றும் காணப்படுகிறது. ஆயினும் வியாக்கியானத்தில் சொன்னபொருளைக் கொள்ளாமல் "வருணன் செய்த மரியாதையை" என நாம் உரை எழுதியிருக்கிறோம். (எ—று)

हरिं विनिश्चित्य भवन्तमेतान् भवत्पदालोकनबद्धतृष्णान् ।
निरीक्ष्य विष्णो परमं पदं तद्दुरापमन्यैस्त्वमदीदृशस्तान् ॥ २८३ ॥

(ப—ரை) भवन्तम्=உம்மை हरिम्=ஹரியாக विनिश्चित्य=நன்கு நிஶ்சயித்துக்கொண்டு एतान्=இவர்கள் भवत्पदालोकनबद्धतृष्णान्=உமது பதமான வைகுண்டத்தைக் காண்பதில் ஆவலுள்ளவர்களாகவிருப்பதை निरीक्ष्य=அறிந்துகொண்டு हे विष्णो!=விஷ்ணுவான ஹே கிருஷ்ண! त्वम्=நீர் अन्यैः=மற்றவர்களால் दुरापम्=அடைதற்கரிதான तत्=அந்த परमं पदम्=வைகுண்டத்தை तान्=அந்தப் பந்துக்களை अदीदृशः=பார்க்கச் செய்தீர். (283) (எ—று)

स्फुरत्परानन्दरसप्रवाहप्रपूर्णकैवल्यमहापयोधौ ।
चिरं निमग्नाः खलु गोपसङ्घास्त्वयैव भूमन् पुनरुद्धृतास्ते ॥ २८४ ॥

(ப—ரை) स्फुरत्परानन्दरसप्रवाहप्रपूर्णकैवल्यमहापयोधौ=பிரகாசிக்கின்ற பரமானந்தரஸப்பெருக்கினால் நிறைந்த கைவல்யமஹாஸமுத்திரத்தில் चिरम्=வெகுகாலம் निमग्नाः=மூழ்கினவர்களான ते=அந்த गोपसङ्घाः=கோபாலர்களின் கூட்டங்கள் भूमन्!=எங்கும் நீக்கமற நிறைந்த ஹே கிருஷ்ண! पुनः=மறுபடியும் त्वयैव=உம்மாலேயே उद्धृताः खलु=வெளியேற்றப்பட்டனரன்றோ? (284) (எ—று)

करबदरवदेवं देव कुत्रावतारे
निजपदमनवाप्यं दर्शितं भक्तिभाजाम् ।
तदिह पशुपरूपी त्वं हि सक्षात् * परात्मा
पवनपुरनिवासिन् पाहि मामामयेभ्यः ॥ २८५ ॥

(ப—ரை) देव!=ஹே கிருஷ்ண! कुत्र=எந்த अवतारे=அவதாரத்தில் अनवाप्यम्=அடைதற்கரிதான निजपदम्=தனது பதமானது एवम्=இவ்விதம் करबदरवत्=அங்கை இலந்தைப்பழம் போல भक्तिभा-

* அச்சிட்ட புஸ்தகத்தில் "परात्मन्" என வேறுபாடம் கொள்ளப்பட்டிருக்கிறது.

जाम् = பக்தியுள்ளவர்களுக்கு दर्शितम्=காண்பிக்கப்பட்டது? तत्= ஆனதுபற்றி इह=இந்தக் கோகுலத்தில் पशुपरूपी=கோபரூபமெடுத்த त्वम्=நீர் साक्षात्परात्मा हि=எவ்வித உபாதிஸம்பந்தமுமற்ற பரமாத்மாவன்றோ. ஆகவே पवनपुरनिवासिन्=குருவாயூரில் வஸிக்கும் ஹே கிருஷ்ண! माम्=என்னை आमयेभ्यः=ஸாம்ஸாரிகங்களான எல்லா ரோகங்களினின்றும் पाहि=காப்பீராக. (285) (எ—று)

குறிப்பு—283, 284, 285 ஆகிய மூன்று சுலோகங்களினாலும் சொல்லப்படும் பரமபதம் என்பதற்கு அத்வைதஸித்தாந்தத்தை யொட்டி அகண்ட சச்சிதானந்த ப்ரத்யக்ப்ரம்ஹைக்யத்தை என்று பொருள் கொள்ளலாமென்றும், அவ்விதமாயின் 285-வது சுலோகத்தின் உத்தரார்த்தத்திலுள்ள तदिह पशुपरूपी त्वं हि साक्षात्परात्मन् என அச்சிட்டபுஸ்தகத்திலுள்ள வேறுபாடத்திற்கு हेपरात्मन्=பராமாத்மாவான ஹே கிருஷ்ண! इह=இங்கு पशुपरूपी=கோபாலரூபமெடுத்த त्वम्=நீர் साक्षात् तद्धि=தத்பதலக்ஷ்ய நிர்விசேஷசின்மாத்ர பரப்ரம்ஹஸ்வரூபமேயன்றோ யாகின்றீர் என்றும் பெரியார் பொருள் கூறுகின்றனர். (எ—று)

இவ்விதம் கோவிந்தபட்டாபிஷேக வர்ணனம், வருணலோகத்தி
னின்றும் நந்தாநயன வர்ணனம் என்றுமான
அறுபத்துநான்காவது தசகம் முற்றிற்று.

## இருபத்தொன்பதாவது அத்தியாயம்.

(அ—கை) ऊनत्रिंशे तु रासार्थमुक्तिप्रत्युक्तयो हरेः ।
गोपीभी राससंरम्भे तस्य चान्तर्धिकौतुकम् ॥ १ ॥
ब्रह्मादिजयसंरूढदर्पकन्दर्पदर्पहा ।
जयति श्रीपतिर्गोपीरासमण्डलमण्डनः ॥ २ ॥

(க—ரை) பலர் சேர்ந்து நர்த்தனஞ்செய்வது ராஸம் எனப்படும். அத்தகைய ராஸக்ரீடைக்குவேண்டி கோபிகைகளுடன் ஹரியினது உக்தி (பூர்வபக்ஷம்) ப்ரத்யுக்திகளும், (ஸித்தாந்தங்களும்) ராஸக்ரீடாகாலத்தில் பகவானுடைய அந்தர்த்தான லீலையும், இந்த இருபத்தொன்பதாவது அத்தியாயத்திலுபதேசிக்கப்படுகிறது. மே

## अथ एकोनत्रिंशोऽध्यायः ॥

**श्रीशुक उवाच— भगवानपि ता रात्रीः शरदोत्फुल्लमल्लिकाः । वी-क्ष्य रन्तुं मनश्चक्रे योगमायामुपाश्रितः ॥ १ ॥ तदोडुराजः ककुभः करै-**

---

லும் ப்ரம்ஹதேவன் முதலியோரின் ஜயத்தினலுண்டான கொழுப்பையுடையவனுன மன்மதனுடைய தர்ப்பத்தை (மதத்தை) ப்போக்குகின்றவரும் கோபிகைகளின் ராஸமண்டலத்துக்கு அலங்காரமாக (நடுநாயகமணியாக) ஆனவருமான ஸ்ரீபதியானவர் ஸர்வோத்க்ருஷ்டராக விளங்குகிறுர் என்றும் இந்த அத்தியாயத்தில் சொல்லப்படுகிறது.

சங்கை—பிறர்பெண்டீரைச் சந்தோஷப்படுத்தி வைக்கவேண்டி மன்மதனே ஜயித்ததாக ஏற்படுவதால் இதுவிபரீதமாகவன்றோ தோன்றுகிறது எனின்?

உத்தரம்.—"**योगमायामुपाश्रितः**" (யோகமாயையை யாஶ்ரயித்தார்) என்றும், "**आत्मारामोऽप्यरीरमत्**" (ஆத்மாராமனுயினும்=பிறர் மூலம் தான்சந்தோஷத்தை யடையவேண்டியவராக இல்லாவிடினுங்கூட, அவர்களைச் சந்தோஷிக்கச் செய்தார்) என்றும் "**साक्षान्मन्मथमन्मथः**" ஸாக்ஷாத்தான மன்மதனுக்கும் மன்மதன்=உண்மையான மன்மதனுங் கண்டு மயங்கும்படியான ரூபமுடையவர்) என்றும் "**आत्मन्यवरुद्धसौरतः**" (தனது ஸ்ரீமூர்த்தியிலேயே அடக்கப்பட்ட வீர்யத்தை யுடையவரென்றும்) ஆங்காங்கு ஸ்வாதந்திரியம் சொல்லப்படுவதால் முற்கூறிய ஆசங்கைக்கிடமில்லை. ஆகவே ஸ்ரீகோபாலன் ராஸக்ரீடையை நடத்தினது தனது காமவிஜயத்தை ப்ரகடனப்படுத்த வேண்டியே என்பது தானுண்மை. மேலும், ராஸக்ரீடையை யுபதேசிக்கின்ற 29-வது அத்தியாயந்தொடங்கி 33-வது அத்தியாயம் முடியவுள்ள 5 அத்தியாயங்கள் சிருங்காரகதையைச் சொல்லும் வியாஜமாகக் காமநிவிருத்தியையே உபதேசிக்கின்றன. என்பதும் ஆங்காங்கு தெளிவாகவும் போகிறது. (எ—று)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றுர்—பகவானுயினுங்கூட யோகமாயையை ஆஶ்ரயித்தவராய் "என்னுடன்கூட இந்த ராத்ரிகளில் ரமிக்கப் போகின்றீர்கள்" என முன்னர் வாக்களிக்கப்பட்ட அந்தராத்ரிகள்

मुखं प्राच्या विलिम्पन्नरुणेन शन्तमैः । स चर्षणीनामुदगाच्छुचो मृज-न्प्रियः प्रियाया इव दीर्घदर्शनः ॥ २ ॥ दृष्ट्वा कुमुद्वन्तमखण्डमण्डलं रमा-ननाभं नवकुङ्कुमारुणम् । वनं च तत्कोमलगोभिरञ्जितं जगौ कलं वामदृशां

---

*சரத்காலத்தினுல் மலர்ந்த மல்லிகைகளுள்ளனவாக இருப்பதைக் கண்டு அவற்றில் ரமிப்பதற்கு எண்ணினர். (1) அதே க்ஷணத்தில் அந்த நக்ஷத்திர ராஜனுன சந்திரன் கிழக்கு திக்கினுடைய முகத்தை மிக்க சுகத்தைத் தருகின்ற கிரணங்களினுல் சிவந்ததாகச் செய்துகொண்டும், வெகு காலத்துக்குப் பிறகு பார்க்கப்பட்ட ப்ரியனுன நாயகன் ப்ரியையான நாயகியினுடைய முகத்தைச் சிவந்த குங்குமத்தினுல் பூசுகின்றவனுய் அவளது கண்ணீரைத் துடைப்பதுபோல உலகிலுள்ள ஜனங்களுக்கு (ஸூர்ய) தாபத்தாலேற்பட்ட ஶ்ரமத்தைப் போக்கிக் கொண்டும் உதயமானுன். (2) பூர்ணமான மண்டலமுள்ளவனும், லக்ஷ்மியின் முகத்தினுடையது போன்ற காந்தியுள்ளவனும், புதிதான குங்குமம்போலச் சிவந்த நிறமுள்ளவனுமான சந்திரனையும், அவனது அழகிய கிரணங்களினுல் சுற்றிலும் சிவந்ததாகச் செய்யப்பட்ட காட்டையும் கண்டு

---

* பொதுவாய் வஸந்தகாலத்தில் இரவில் மல்லிகைகள் மலரும் வழக்கமிருப்பினுங்கூட இங்கு அதற்குமாருக சரத்காலத்திலுங்கூட அவை மலருவதைக் கண்ணுற்று ஸனகாதி யோகிகளுங்கூடத் தனது தர்சனத்துக்குவேண்டி ஸமயத்தை எதிர்பார்த்துக் காத்திருக்கும் வழக்கமிருக்க அதைவிடுத்து "வராதே வராதே" எனத் தடுத்தும் கேளாது வீடுவீடாய் நுழைந்து கிளம்பும் தனது மாருன ஸ்வபாவத்துக்கொத்திருப்பதைக் கண்டு சந்தோஷித்தவராய் மாருன ஸ்வபாவம் வாய்ந்த இந்த சரத் ராத்ரிகளில் தாம் ரமிப்பது பொருத்தமானதே என எண்ணினர் என்றும், பகவாநபி—தான் யோகமாயைக்கு ஆச்ரயராக இருந்தபோதிலுங்கூட "யோகமாயாமுபாச்ரித:" தன்னையாச்ரயித்து ஸ்வரூபலாபத்தை யடையக்கூடிய யோகமாயைத் தானே போய் ஆச்ரயித்தார் என்றதனுல் தன்னைச் சராசராத்மகமான எல்லாவுலகமும் ஆச்ரயிக்கவேண்டியிருக்கத் தான்போய் பக்தர்களான நந்தகோபாதிகளை யாச்ரயிக்கும் மாருன ஸ்வபாவத்தை விளக்கித் தனது ஸௌலப்யத்தை வெளிக்காட்ட இதுதான் தக்கஸமயம் என எண்ணினுரென்றும் கருத்து.

**मनोहरम् ॥ ३ ॥ निशम्य गीतं तदनङ्गवर्धनं व्रजस्त्रियः कृष्णगृहीतमानसाः । आजग्मुरन्योन्यमलक्षितोद्यमाः स यत्र कान्तो जवलोलकुण्डलाः ॥ ४ ॥ दुहन्त्योऽभिययुः काश्चिद्दोहं हित्वा समुत्सुकाः । पयोऽधिश्रित्य**

---

*ஸ்திரீகளின் மனத்தைக் கவரும்படி மதுரமாக வேணுகானஞ் செய்தார். (3) கோபஸ்திரீகள் காமத்தை விருத்திசெய்கின்ற அந்தக் கீதத்தைக்கேட்டு கிருஷ்ணனால் கிரஹிக்கப்பட்ட மனஸ்ஸையுடையவர்களாகவும், ஒருவருக்கொருவர் அறிவிக்கப்படாத முயற்சியையுடையவர்களாகவும், வேகத்தினால் அசைகின்ற குண்டலங்களையுடையவர்களாகவும் காந்தனான அந்தக் கிருஷ்ணன் எங்கிருக்கின்றாரோ அங்கு வந்தனர். (4) (*)பால் கறந்துகொண்டிருக்கின்ற

---

* "क्लम्" "वामदृशां मनोहरम्" என்றவிடத்தில் वामदृशा, अंमनः, अहरम् என மூன்று பதங்களாகப் பிரித்துக்கொள்ளவேண்டும். அவற்றுள் वामदृक् என்ற பதத்துக்கு மந்திர சாஸ்திரப்படி ई காரம் என்று பொருள். अंमनः என்ற பதத்துக்கு अम्=வாஸுதேவனை मनयति=विज्ञापयति என்ற வியுத்பத்தியினால் ஸ்ரீவாஸுதேவன்தான் கானஞ்செய்கிறார் என அவரைத் தெரிவிப்பதும் என்று பொருள். अहरम् என்ற பதத்துக்கு अ என்ற எழுத்துக்களற்றது என்று பொருள். ஆகவே क, ल என்ற இரண்டு அக்ஷரங்களிலும் अ என்ற எழுத்துக்களை எடுத்துவிட்டால் क्ल् என்றேற்படும். இத்துடன் ई என்ற எழுத்தைச் சேர்த்தால் क्ली என்ற ரூபம் ஏற்படும். ஆகவே म् என்பதைச் சேர்த்துக்கொண்டால் क्लीम् என்ற காமபீஜமேற்படும். இந்தக் காமபீஜமானது ஸ்ரீகிருஷ்ணனால் கோபிகைகளை அழைக்கவேண்டி கானஞ்செய்யப்படுகிறது என்பதை விளக்கும். ஆகவே वामदृशां मनोहरम् என்றதனாலும் क्लम् என்றதனாலும் क्लीम् என்ற காமபீஜத்தைக் கானஞ்செய்தார் என்றேற்பட்டது. இவ்விதம் கூறினதிலிருந்து ஸ்ரீகோபாலன் விரஹத்தினாலுழப்பட்டதும், ப்ரேமையாகிற ஜலத்தினால் நனைக்கப்பட்டதுமான ஸ்ரீகோபிகைகளின் ஹிருதயமாகிற வயலில் க்லீம் என்ற காமபீஜத்தை விதைத்தார் என்றேற்பட்டது. இவ்விதம் விதைக்கப்பட்ட இந்த விதையானது முளைத்துக்கொடியாகி ஸ்ரீகோபாலனாகிற கொழுகொம்பில் படர்ந்து தக்கபலன் தரப்போகிறது என்பது பெறப்பட்டது.

(*) ஸ்ரீகிருஷ்ணனைச்சூசிப்பிக்கும் சப்தத்தைக்கேட்டு அதிலீடுபட்ட சித்தமுள்ளவர்களுக்கு அதேக்ஷணத்தில் தர்மார்த்தகாமங்களைத் தரும்

संयावमनुद्वास्यापरा ययुः ॥ ५ ॥ परिवेषयन्त्यस्तद्धित्वा पाययन्त्यः शिशून्पयः । शुश्रूषन्त्यः पतीन्काश्चिदश्नन्त्योऽपास्य भोजनम् ॥ ६ ॥ लिम्पन्त्यः प्रमृजन्त्योऽन्या अञ्जन्त्यः काश्च लोचने । व्यत्यस्तवस्त्राभरणाः काश्चित्कृष्णान्तिकं ययुः ॥ ७ ॥ ता वार्यमाणाः पतिभिः पितृभिर्भ्रातृबन्धुभिः । गोविन्दापहृतात्मानो न व्यवर्तन्त मोहिताः ॥ ८ ॥ अन्तर्गृहगताः काश्चिद्गोप्योऽलब्धविनिर्गमाः । कृष्णं तद्भावनायुक्ता दध्युर्मीलितलोच-

---

சிலர் ஆசைகொண்டவர்களாய் பால் கறப்பதை நிறுத்திவிட்டு ஓடிவந்தனர். மற்றும் சிலர் பாலைச் சட்டியில் கொட்டி அடுப்பில் தூக்கிவைத்து அது பொங்கிவழிந்துவிடுமே என்பதைக்கூட கவனியாது ஓடிவந்தனர். சிலர் பக்வமான ஸம்யாவத்தை=(கோதுமை நொய்ச்சாதத்தை) கீழில் இரக்கிவைக்காமல் ஓடிவந்தனர். (5) அன்னம் பரிமாரிக்கொண்டிருப்பவர் அதைவிடுத்தும், குழந்தைகளுக்குப் பால் கொடுத்துக்கொண்டிருப்பவர் அதைவிடுத்தும், கணவர்களுக்குப்பணிவிடைசெய்பவர் அதைவிடுத்தும், சாப்பிட்டுக்கொண்டிருக்கின்ற சிலர் போஜனத்தைவிடுத்தும், உடம்புக்கு எண்ணை தேய்த்துக்கொண்டிருப்பவர் அதைவிடுத்தும், உடம்பில் ஈரமில்லாமல் துணியினல் துவட்டிக்கொண்டிருப்பவரான சிலர் அதைவிடுத்தும், இருகண்களிலும் மைதீட்டிக்கொண்டிருப்பவர் அதைவிடுத்தும், சிலர் மாற்றித் தரித்துக்கொள்ளப்பட்ட வஸ்திரம் ஆபரணம் இவற்றையுடையவர்களாகவும் கிருஷ்ணனுடைய ஸமீபத்தையடைந்தனர். (6–7)

பதிகளாலும், பிதாமாதாக்களினுலும், ஸஹோதரர்களினுலும், பந்துக்களினுலும் தடுக்கப்படினுங்கூட கோவிந்தனுல் அபஹரிக்கப்பட்ட மனத்தையுடையவர்களும்,மோஹத்தையடைந்தவர்களுமான அவர்கள் திரும்பினரில்லை. (8) அப்பொழுது வீட்டின் உள்ளில் அடைக்கப்பட்டுவெளிவரமுடியாதிருந்த சிலகோபிகைகள் அவரிடத்திலேற்பட்ட பக்தி ஸம்ஸ்காரத்துடன் கூடினவர்களாய் கண்களை

---

கர்மங்களின் நிவிருத்தியேற்படும் என்பதைக் காட்டுபவர்கள் போல பாதி பூர்த்தியான கர்மத்தைவிடுத்து ஓடிவந்தனர் என இந்த சுலோகத்தினுலுபதேசிக்கப்படுகிறது.

ना: ॥ ९ ॥ दु:सहप्रेष्ठविरहतीव्रतापधुताशुभा: । ध्यानप्राप्ताच्युताश्लेषनिर्वृत्या क्षीणमङ्गला: ॥ १० ॥ तमेव परमात्मानं जारबुद्ध्यापि सङ्गता: । जहुर्गुणमयं देहं सद्य: प्रक्षीणबन्धना: ॥ ११ ॥ राजोवाच—कृष्णं विदु: परं कान्तं न तु ब्रह्मतया मुने । गुणप्रवाहोपरमस्तासां गुणधियां कथम् ॥

---

மூடிக்கொண்டு கிருஷ்ணனைத் தியானஞ்செய்தனர். (9) பொறுக்க முடியாததும் ப்ரியனானகிருஷ்ணனுடைய விரஹத்தினாலேற்பட்டதுமான தீவ்ரதாபத்தினால் நாசமடைந்த பாபகர்மங்களையுடையவர்களாகவும், தியானத்தினால் ப்ராப்தனான ஸ்ரீகிருஷ்ணனுடைய ஆலிங்கனத்தினாலேற்பட்ட சுகத்தினால் தேய்ந்த புண்ணிய கர்மங்களையுடையவர்களாகவும், முற்றிலும் நாசமடைந்த பந்த ஹேதுக்களான புண்ணிய பாபகர்மங்களையுடையவர்களாகவுமாகி பரமாத்மாவான அந்தக் கிருஷ்ணனையே ஜாரபுருஷன் என்ற புத்தியினாலடைந்தவர்களாகவாயினுங்கூட குணமயமான தேஹத்தை உடனேயே விட்டுவிட்டனர்.* அதாவது:—முக்தர்களாகவாகிவிட்டனர். (10-11) ராஜன் சொல்லலுற்றார்—ஹே முனே! கிருஷ்ணனைக் காந்தனாக (சோர நாயகனாக) மட்டுமெண்ணினரேயன்றி ப்ரம்ஹமாகவெண்ணவில்லை

---

* "पुण्येन पुण्यं लोकं नयति पापेन पापं उभाभ्यां मनुष्यलोकम् புண்ணியத்தினால் தேவாதிப்பிறவியையும், பாபத்தினால் பசு பக்ஷ்யாதிப்பிறவியையும், புண்ணியம் பாபம் இரண்டினாலும் மனிதப்பிறவியையும் அடைகிறான்" என்றபடி புண்ணியமோ, பாபமோ பிறவியை தரக்கூடியதாக இருப்பதுபற்றி இவர்களுக்குப் பகவத்விரஹத்தாலேற்பட்ட கடுமையான தாபத்தினால் பாபகர்மங்களும், தியான ப்ராப்த்த அச்யுதாலிங்கனஜன்ய சுகத்தினால் புண்ணியகர்மங்களும் தேய்ந்துபோகவே, பந்தஹேதுக்களான கர்மங்கள் எதுவுமில்லாமலாகிவிடவே பரமாத்மாவான வாஸுதேவனின் ஸாயுஜ்யத்தையடைந்தனர் என்றுகருத்து. ஆனால் இவன் ஈசுவரன் என்ற புத்தியில்லாமல் சோர புருஷன் என்ற எண்ணமன்றோ இவர்களுக்கிருந்தது என்றாலோ? விஷமென்று எண்ணிக்கொண்டு அமுதத்தைக்குடித்தபோதிலும் அந்த அமுதம் தனக்கியற்கையான நன்மையையே செய்வது போல பகவானை ஜாரனாக இவர்கள் எண்ணினராயினும் அவரது தியான மஹிமையால் முக்தியையேயடைந்துவிட்டனர் என்று கருத்து. வஸ்துவினுடைய சக்தியானது புத்தியை எதிர்பாராதிருப்பதே அதன் காரணமாகும் என்றும்.

**श्रीशुक उवाच--उक्तं पुरस्तादेतत्ते चैद्यः सिद्धिं यथा गतः। द्विषन्नपि हृषीकेशं किमुताधोक्षजप्रियाः ॥ १३ ॥ नृणां निःश्रेयसार्थाय व्यक्तिर्भगवतो नृप। अव्ययस्याप्रमेयस्य निर्गुणस्य गुणात्मनः ॥ १४ ॥ कामं क्रोधं भयं स्नेहमैक्यं सौहृदमेव च। नित्यं हरौ विदधतो यान्ति तन्मयतां**

---

யே? குணபுத்தியுள்ள அவர்களுக்கு குணப்ரவாஹத்தின் (பிறவியின்) நிவிருத்தியானது(மோக்ஷமானது)எவ்விதமேற்பட்டது? (12) ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—சிசுபாலன் ஹ்ருஷீகேசனைத் துவேஷித்தபோதிலும் (துவேஷங்கொண்ட புத்தியினுலெண்ணினபோதிலும்) கூட உள்ளபடிக்கான முக்தியை அடைந்தான் என்ற இது உனக்கு முன்னருபதேசிக்கப்பட்டிருக்கிறதே? அவ்விதமிருக்க ஸ்ரீகிருஷ்ணனிடத்தில் ப்ரீதியுள்ளவர்களான (ப்ரேமை நிறைந்த புத்தியினுல் ஸ்ரீகோபாலனை தியானிப்பவர்களான) கோபிகைகள் முக்தியையடைவதில் ஸந்தேஹிக்க இடமேது?* (13) ஹேநருப! மனிதர்களுக்கு மோக்ஷரூபமான புருஷார்த்தத்தைத் தரவேண்டியன்றோ அவ்யயனும், அப்ரமேயனும், உண்மையில் குண ஸம்பந்தமெதுவுமற்றவனும், குணங்களுக்கு நியந்தாவுமான பகவானுக்கு வியக்தியானது(யாவருமறியுமாறு தோன்றுதலானது) ஏற்பட்டிருக்கிறது. (14) ஆகவே எவர்கள் ஹரியான கிருஷ்ணனிடத்தில் எப்பொழுதும் காமத்தையோ=காந்தன் என்ற ப்ரேமையையோ, குரோதத்தையோ=துவேஷத்தையோ, (1)பயத்தையோ, அனுராகத்தை

---

* "तत्त्वमसि" அதாக நீ இருக்கின்றாய், "अहं ब्रह्मास्मि" நான் ப்ரம்ஹமாகவிருக்கின்றேன் என்றதாதி மஹாவாக்கியங்களினுல் சுத்தனான ப்ரத்யகாத்மாவும் உண்மையில் ப்ரம்ஹமேதானுயினும், அனுதிவாஸனு மூலம் ஜீவர்களிடத்துள்ள ப்ரம்ஹத்துவமானது ஆவிருதமாக (வெளிப்படாததாக) இருக்கிறது. ஸ்ரீகிருஷ்ணனே ஹ்ருஷீகேசனுக (ஸர்வாந்தர்யாமியாக) இருப்பதுபற்றி இவரிடத்தில் வாஸனையோ, அதன் மூலமேற்படும் ஆவரணமோ இல்லாமைபற்றி இவரைப் பரமாத்மாவாக எண்ணுவிடினும் அவரது ஸ்வரூப மஹிமையால் எவ்விதமெண்ணுபவர்க்கும் முக்தியேற்படுவதில் தடையெதுவுமில்லை என்பது கருத்து.

(1) இவன் எனக்கு மிருத்யுவெனவெண்ணி அதைப் போக்குவதற்குரிய சிந்தையையோ,

हि ते ॥ १५ ॥ न चैवं विस्मयः कार्यो भवता भगवत्यजे । योगेश्वरेश्वरे कृष्णे यत एतद्विमुच्यते ॥ १६ ॥ ता दृष्ट्वान्तिकमायाता भगवान्व्रजयोषितः । अवदद्वदतां श्रेष्ठो वाचः पेशैर्विमोहयन् ॥ १७ ॥ श्रीभगवानुवाच— स्वागतं वो महाभागाः प्रियं किं करवाणि वः । व्रजस्यानामयं कच्चिद्ब्रूतागमनकारणम् ॥ १८ ॥ रजन्येषा घोररूपा घोरसत्त्वनिषेविता । प्रतियात व्रजं नेह स्थेयं स्त्रीभिः सुमध्यमाः ॥ १९ ॥ मातरः पितरः पुत्रा भ्रातरः पतयश्च वः । विचिन्वन्ति ह्यपश्यन्तो मा कृढ्वं बन्धुसाध्वसम् ॥ २० ॥

---

யோ, ஸம்பந்தத்தையோ, பக்தியையோ செய்கின்றனரோ அவர்கள் அவரது ஸாயுஜ்யத்தையடைந்து விடுகின்றனரன்றோ. (15) எந்தக் கிருஷ்ணன் மூலம் ஸ்தாவராதிகள் கூட முக்தியையடைகிறதோ பகவானும், அஜனும், யோகேஸ்வரர்களுக்கும் ஈஸ்வரனுமான அந்த ஸ்ரீகிருஷ்ணன் விஷயத்தில் (கர்ப்பத்திலிருப்பது முதல் அவரது மஹிமையையறிந்த) நீ இவ்விதம் ஆஸ்சரியப்படுவது பொருந்தாது. (16) பேசுகின்றவர்களுக்குள் ஸ்ரேஷ்டரான பகவான் அருகில் வந்த கோபஸ்திரீகளைக்கண்டு அவர்களை வாக்விலாஸங்களினல் மோஹிக்க (தன்னிலையற்றவர்களாக) ச்செய்யவேண்டி பேசவாரம்பித்தார். (17)

ஸ்ரீபகவான் சொல்லலுற்ருர்—ஹே மஹாபாக்கியசாலிகளான கோபிகைகளே! காட்டில் நீங்கள் க்ஷேமமாக வந்தீர்களா! இங்கு வந்த உங்களுக்கு நான் என்ன ப்ரியத்தைச் செய்யப்போகின்றேன். கோகுலத்துக்கு க்ஷேமந்தானே? வந்த காரணத்தைச் சொல்லுங்கள். (18) இந்த ராத்திரியானது கோரமான ரூபமுள்ளதாகவும், கோரமான ப்ராணிகளினல் சேவிக்கப்பட்டதாகவுமிருக்கிறது. ஹே அழகிய இடையுள்ளவர்களே! கோகுலத்துக்குத் திரும்பிப் போய்விடுங்கள். ஸ்திரீகள் இங்கு வஸித்தல் கூடாது. (19) மேலும் மாதாக்கள், பிதாக்கள், புத்திரர்கள், பிராதாக்கள், பதிகள் இவர்கள் உங்களைக் காணுதவர்களாய்த் தேடுகின்றனர். பந்துக்களுக்குப் பயத்தையுண்டாக்காதீர்கள். (20) *பூர்ண சந்திரனுடைய கிரணங்

---

* இவ்விதம் பகவான் சொன்னதைக்கேட்டு ஸ்வல்பம் ப்ரணயகோபத்தினல் வேறிடத்தில் திருஷ்டியைச் செலுத்தின கோபிகைகளைப்பார்த்துச் சொல்லத்தொடங்குகிருர்.

**दृष्टं वनं कुसुमितं राकेशकररञ्जितम्। यमुनानिललीलैजत्तरुपल्लवशोभितम् ॥ २१ ॥ तद्यात मा चिरं गोष्ठं शुश्रूषध्वं पतीन्सतीः। क्रन्दन्ति वत्सा बालाश्च तान्पाययत दुह्यत ॥ २२ ॥ अथवा मदभिस्नेहाद्भवत्यो यन्त्रिताशयाः। आगता ह्युपपन्नं वः प्रीयन्ते मयि जन्तवः ॥ २३ ॥ भर्तुः शुश्रूषणं स्त्रीणां परो धर्मो ह्यमायया। तद्बन्धूनां च कल्याण्यः प्रजानां चानुपोषणम् ॥ २४ ॥ दुःशीलो दुर्भगो वृद्धो जडो रोग्यधनोऽपि वा। पतिः स्त्रीभिर्न हातव्यो लोकेप्सुभिरपातकी ॥ २५ ॥ अस्वर्ग्यमयशस्यं च फल्गु**

---

களினுல் சிவந்ததாகச் செய்யப்பட்டதும், யமுனையை ஸம்பந்தித்த காற்றின் மந்தகதியினுல் அசைகின்ற மரங்களின் தளிர்களினுல் சோபையுள்ளதாக்கப்பட்டதும், புஷ்பங்கள் நிறைந்ததுமான வனமானது பார்க்கப்பட்டதன்றோ? (21) ஹே ஸதிகளே! ஆனது பற்றி கோகுலஞ்செல்லுங்கள். தாமதிக்காதிர்கள். பதிகளுக்குப்பணிவிடை செய்யுங்கள். கன்றுகளும், குழந்தைகளும் கத்துகின்றன. அவற்றுக்குப் பால் கொடுங்கள். பாலைக்கறவுங்கள். (22) (*)அல்லது நீங்கள் என்னிடமுள்ள ஸ்னேஹத்தினுல் வசப்படுத்தப்பட்ட சித்தமுள்ளவர்களாக வந்திருப்பீர்கள். உங்களுக்கு இது பொருத்தமானதே. என்னிடத்தில் தேஹமெடுத்த ப்ராணிகள் யாவும் ப்ரீதியை யடைகின்றனவன்றோ. (23) (1)ஹே கல்யாணிகளே! பர்த்தா, அவரது பந்துக்கள் இவர்களுக்குக் கபடமின்றிச் செய்யப்படும்சுஶ்ரூஷணமும், ப்ரஜை (குழந்தை) களைப் பரிபாலிப்பதும் ஸ்திரீகளுக்கு மேலான தர்மமாகவாகுமன்றோ. (24) கெட்டவொழுக்கமுள்ளவனுயினும், அழகற்றவனுயினும், வயது முதிர்ந்தவனுயினும், ஜடனுயினும், ரோகியாயினும், தனமற்றவனுயினும், (2)பாதகியாக இல்லாத பதியானவன் உத்தம லோகத்தில் விருப்பங்கொண்டவர்களான ஸ்திரீகளினுல் விடத்தக்கவனல்லன். (25)

---

(*) கோபத்தினுல் கலங்கின கண்ணுள்ளவர்களான அவர்களைப் பார்த்துச் சொல்லுகிருர்.

(1) திருஷ்டமாயும் அதிருஷ்டமாயுமுள்ள பயத்தினுல் அவர்களைத் திருப்பவேண்டி இதுமுதல் மூன்று சுலோகங்களினுலுபதேசிக்கிருர்.

(2) आशुद्धेस्संप्रतीक्ष्यो हि पतिः पातकदूषितः பாதகாதி தோஷமுள்ளவனுகப் பதியிருப்பானுனல் அந்தத்தோஷம் அவனைவிட்டு விலகும்வரை

कृच्छ्रं भयावहम्। जुगुप्सितं च सर्वत्र औपपत्यं कुलस्त्रियः॥ २६॥ श्रवणाद्दर्शनाद्ध्यानान्मयि भावोऽनुकीर्तनात्। न तथा सन्निकर्षेण प्रतियात ततो गृहान्॥ २७॥

श्रीशुक उवाच—इति विप्रियमाकर्ण्य गोप्यो गोविन्दभाषितम्। विषण्णा भग्नसङ्कल्पाश्चिन्तामापुर्दुरत्ययाम्॥ २८॥ कृत्वा मुखान्यवशुचः श्वसनेन शुष्यद्बिम्बाधराणि चरणेन भुवं लिखन्त्यः। अस्त्रैरुपात्तमषिभिः कुचकुङ्कुमानि तस्थुर्मृजन्त्य उरुदुःखभराः स्म तूष्णीम्॥ २९॥ प्रेष्ठं प्रिये-

---

குல ஸ்திரீயுக்கு ஜாரபுருஷனுடைய சேர்க்கையானுண்டாகும் சுக மானது ஸ்வர்க்கத்தைக் கெடுப்பதாகவும், கீர்த்தியைப் போக்குவ தாகவும், பயனற்றதாகவும், வெகு சிரமப்பட்டு அடையவேண்டிய தாகவும், பயத்தைத் தருவதாகவும், எங்கும் வெறுக்கப்பட்டதாக வும் ஆகிறது. (26) மேலும் ஸ்ரவணத்தினாலும், தரிசனத்தினா லும், தியானத்தினாலும், அடிக்கடி எனது நாமங்களை கீர்த்தனஞ் செய்வதினாலும் எவ்விதம் என்னிடம் பக்தியுண்டாகுமோ அவ்வி தம் ஸமீபவாஸத்தினால் ஏற்படமாட்டாது. ஆனதுபற்றி வீடுபோய்ச் சேருங்கள் என்றார். (27)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—கோபிகைகள் இவ்விதம் மிக்க அப் ரியமான கோவிந்தனுடைய வார்த்தையைக் கேட்டு துக்கத்தை யடைந்தவர்களாகவும், முறிந்த ஸங்கல்பமுள்ளவர்களாகவுமாகி அழி யாக்கவலை கொண்டவராயினர். (28) *கோபிகைகள் சோகத்தினா லுண்டான பெருமூச்சினால் வற்றின கோவப்பழம்போன்ற உதட் டையுடையவைகளான முகங்களைக்கீழில் தொங்கவிட்டுக்கொண்டும், கால் கட்டைவிரலினால் பூமியைக் கீறிக்கொண்டும், கிரஹிக்கப்பட்ட மைகளையுடைய கண்ணீர்களினால் ஸ்தனங்களிலுள்ள குங்குமங்களை அலம்புகின்றவர்களாய்க்கொண்டும், அதிகமான துக்கபாரத்தையுடை யவர்களாய்க்கொண்டும் மௌனமாகவிருந்தனர். (29) சத்ருவைப் போல ப்ரதிகூலமாகப் பேசுகின்ற ப்ரியதமனான கிருஷ்ணனைப்

---

எதிர்பார்த்திருக்க வேண்டுமேயொழிய அவனுடன் சேருதல் கூடாது என்று சாஸ்திரமிருக்கிறது.

* கவலைகொண்டவர்களின் நிலையை இதனாலுபதேசிக்கிறார்.

तरमिव प्रतिभाषमाणं कृष्णं तदर्थविनिवर्तितसर्वकामाः। नेत्रे विमृज्य रुदितोपहते स्म किञ्चित्संरम्भगद्गदगिरोऽब्रुवतानुरक्ताः ॥ ३० ॥ गोप्य ऊचुः—मैवं विभोऽर्हति भवान्गदितुं नृशंसं संत्यज्य सर्वविषयांस्तव पादमूलम्। भक्ता भजस्व दुरवग्रह मा त्यजास्मान्देवो यथादिपुरुषो भजते मुमुक्षून् ॥ ३१ ॥ यत्पत्यपत्यसुहृदामनुवृत्तिरङ्ग स्त्रीणां स्वधर्म इति धर्मविदा त्वयोक्तम्। अस्त्वेवमेतदुपदेशपदे त्वयीशे प्रेष्ठो भवांस्तनुभृतां किल

---

பார்த்து ஸ்வல்பம் கோபாவேசத்தினுல் தழதழத்த வார்த்தையை யுடையவர்களும், அவனுக்குவேண்டி முற்றிலும் இழக்கப்பட்ட எல்லாக் காமனைகளையுமுடையவர்களும், (ஆயினும்) கிருஷ்ணனிடத்தில் பற்றுள்ளவர்களுமான கோபிகைகள் அழுதலினுல் க்லேசத்தையடைந்த கண்களைத் துடைத்துக்கொண்டு சொல்லத்தொடங்கினர். (30) கோபிகைகள் சொல்லலுற்றனர்—ஹே ஸ்வச்சந்தனே! (எவர்க்குமடங்காதவனே!) ஹே விபோ! நீ இவ்விதம் கொடூரமாகச் சொல்லத் தகுதியுடையவனல்லன். எல்லா விஷயங்களையும் விட்டு உன்னுடைய பாதமூலத்தையடைந்தவர்களான எங்களைத் தள்ளிவிடாதே. ஆதிபுருஷனுன தேவன் முமுக்ஷுக்களை எப்படி சேவிக்கின்ருனே அவ்விதம் எங்களை நீ அனுகுவாயாக. (31) மேலும் ஹே அங்க! "பதி, புத்திரன், மித்திரன் இவர்களின் அனுவிருத்தியானது (சுப்ஶ்ருஷணமானது) ஸ்திரீகளுக்குச் சொந்த தர்மம்" என்பதாய் தர்மமறிந்த உன்னுல் எது சொல்லப்பட்டதோ இவ்விதம் சொல்லப்பட்ட இது *உபதேசங்களுக்கு விஷயமானவ

---

* "तमेतं वेदानुवचनेन ब्राह्मणा विविदिषन्ति यज्ञेन दानेन तपसा अनाशकेन ப்ராம்ஹணர்கள் ப்ரம்ஹசர்ய தர்மத்தினுலும், யக்ஞம் தானம் என்ற கிருஹஸ்த தர்மத்தினுலும், தபஸ் என்ற வானப்ரஸ்த தர்மத்தினுலும், அநாசகம் என்ற ஸன்னியாஸ தர்மத்தினுலும் அந்த இந்த பரமாத்மாவையே அறியவிரும்புகின்றனர்" என்ற சுருதி வாக்கியத்தினுல் எல்லாத் தர்மங்களும் பரமாத்ம க்ஞானத்திலோ, அவரையறியவேண்டுமென்ற இச்சையிலோ உபயோகப்படுகின்றன என்று சொல்லப்பட்டிருக்கிறது. நாங்களோ இதுவரை பதி முதலியோரின் அனுவிருத்திருபமான ஸ்வதர்மத்தையனுஷ்டித்து வந்திருக்கிறோம். அந்தத் தர்மத்துக்குப் பரமாத்மாவையறிவதுபயனுனுல் நீயே பரமாத்மாவாகையால் எங்களுக்கு அனுஷ்டிதமான

बन्धुरात्मा ॥ ३२ ॥ कुर्वन्ति हि त्वयि रतिं कुशलाः स्व आत्मन्नित्यप्रिये पतिसुतादिभिरार्तिदैः किम्। तन्नः प्रसीद परमेश्वर मास्म छिन्द्या आशां भृतां त्वयि चिरादरविन्दनेत्र ॥ ३३ ॥ चित्तं सुखेन भवताऽपहृतं गृहेषु

னும் ஈசனுமான உன்னிடத்திலேயே இருக்கட்டும். நீர் ஜீவர்களுக்கு ப்ரியதமனான ஆத்மாவும் பந்துவுமன்றோ. அல்லது தர்மோபதேசஞ்செய்யும் ஸ்தானத்தில் நீர் இருந்து, நாங்களும் தர்மங்களை உம்மிடமறிய விருப்பமுள்ளவர்களாக இருக்குங்கால் ஸகல தர்ம ஸூக்ஷ்மங்களையுமறிந்த உன்னால் பதி முதலியோரை அனுவர்த்திப்பது ஸ்திரீகளுக்கு ஸ்வதர்மம் என எது சொல்லப்பட்டதோ இது இவ்விதமே இருக்கட்டும். (நீயோ தர்மோபதேசஞ்செய்யும் குருவன்று. நாங்களோ தர்மத்தையறியும் சிஷ்யர்களுமன்று. பின்னையோவெனில் ப்ரத்யகாத்மாவாகவன்றோ நீ இருக்கின்றனை.) அல்லது:—பதி முதலியோரின் சுஶ்ரூஷணமானது ஸ்திரீகளுக்கு ஸ்வதர்மமென்று தர்மமறிந்த உன்னால் எது சொல்லப்பட்டதோ இது உபதேசிக்கப்படுகின்றவர்களான பதி முதலியோருக்கு அதிஷ்டாதாவும் ஈஶ்வரனுமான உம்மிடத்திலேயே இருக்கட்டும். அதிஷ்டானமான பொருளைவிட வேறாய் பதியென்றும், புத்திரனென்றுமான பொருள் ஒன்றும் கிடையாதன்றோ?* (32)

ஹே அரவிந்தநேத்ர! ஹே பரமேஶ்வர! துக்கத்தைத் தரக்கூடியவைகளான பதி புத்திராதிகளினால் யாது பயன்? என அவற்றைவிடுத்து சாஸ்திரதத்துவமறிந்த பெரியோர்கள் நித்யனும், ப்ரியனும், சொந்த ப்ரத்யகாத்மாவுமான உன்னிடத்திலன்றோ பற்றுதலைச் செய்கின்றனர். ஆனதுபற்றி (பெரியாரின் வழக்கமிருப்பதுபற்றி) வெகு ஜன்மப்பழக்க மூலம் உம்மிடமேற்பட்ட ஆசையை அறுத்துவிடாதீர். எங்கள் விஷயத்தில் அருள்புரிவீராக. (33) எந்த எங்களுடைய சித்தமானது இவ்வளவுகாலம் சுகமாக வீட்டு வேலைகளில்

ஸ்வதர்மத்தினால் உன்னுடைய அறிவே உண்டாகவேண்டுவது அவச்யமாகிறது. ஆகவே நீ செய்த உபதேசமானது உன்னிடத்திலேயேதான் பொருந்துகிறது என்பது கோபிகைகளின் கருத்து.

* இந்த 32-வது சுலோகத்துக்கு ஸ்ரீதரீய வியாக்கியானத்தை யொட்டி மூன்று பொருள்கள் எழுதப்பட்டிருக்கின்றன.

यन्निर्विशत्युत करावपि गृह्यकृत्ये। पादौ पदं न चलतस्तव पादमूलाद्यामः कथं व्रजमथो करवाम किं वा ॥ ३४ ॥ सिञ्चाङ्ग नस्त्वदधरामृतपूरकेण हासावलोककलगीतजहृच्छयाग्निम्। नो चेद्वयं विरहजाग्न्युपयुक्तदेहा ध्यानेन याम पदयोः पदवीं सखे ते ॥ ३५ ॥ यर्ह्यम्बुजाक्ष तव पादतलं रमाया दत्तक्षणं क्वचिदरण्यजनप्रियस्य। अस्प्राक्ष्म तत्प्रभृति नान्यसमक्षमङ्ग स्थातुं

---

பிரவேசித்திருந்ததோ, அந்தச் சித்தமானது உன்னால் அபஹரிக்கப் பட்டுவிட்டது. எந்த எங்களுடைய கைகள் வீட்டுவேலையில் ப்ரவிருத்தித்தனவோ அவையுமுன்னாலபஹரிக்கப்பட்டுப்போயின. பாதங்களோ உனது பாதமூலத்திலிருந்து ஒரு அடி கூட அசையமாட்டோமென்கின்றன. எப்படி நாங்கள் கோகுலத்தையடைவோம். அங்குபோய் எதைத்தான் செய்வோம்.(*) (34) ஹே அங்க! ஹே ஸகே! சிரிப்புடன் கூடின உமது பார்வையினாலும், அழகிய கானத்தினாலும், எங்களுக்கேற்பட்ட காமாக்னியை உமது அதராமுதப் பெருக்கினால் அணைப்பீராக. இல்லையேல் நாங்கள் விரஹத்தாலேற்பட்ட அக்னியில் தேஹத்தை அர்ப்பணஞ்செய்து தியானத்தினால் உமது திருவடிகளின் ஸமீபத்தை அடைந்துவிடுவோம். (35) ஹே அம்புஜாக்ஷ! அங்க! லக்ஷ்மீதேவிக்குச் சந்தோஷத்தைக் கொடுத்ததும், (1)அரண்யத்திலுள்ள ஜனங்களை (தனக்கு வேண்டிய) ப்ரியர்களாகவுடைய உம்முடையதுமான பாததலத்தை என்று தொட்டோமோ, என்று உம்மால் ஆனந்தமடையும்படியும் செய்யப் பட்டோமோ அன்றுதொடங்கி மற்றவற்கெதிரில் நிற்பதற்குங்கூட

---

(*) பாணிபாதம் முதலிய இந்திரியங்களின் ப்ரவிருத்தியானது மனோதீனமாகவிருக்கிறது. மனதோ உன்னால் அபஹரிக்கப்பட்டுவிட்டது. ஆகவே நியந்தாவான மனதில்லாமல் நியம்யமான இந்திரியம் மட்டும் ஒரு வேலையையும் செய்யமாட்டாதென்பதை நீ அறியாததென்னையோ? அறிந்திலோம் என்பது கருத்து.

(1) நீர் அரண்யவாஸிகளான ஜனங்களை (க்ஞானிகளை) ப்ரியர்களாகக்கொண்டவர். ஆனதுபற்றி நாங்களும் அரண்யவாஸிகளாகையால் எங்களிடமும் உமக்கு ப்ரீதியிருக்கும் என்ற நம்பிக்கையால் என்று உமது சரணத்தைத் தொட்டோமோ அன்றுதொடங்கி வேறு எந்தப் பொருளிலும் எங்கள் மனம் செல்லவில்லை என்று கருத்து.

त्वयाऽभिरमिता बत पारयामः ॥ ३६ ॥ श्रीर्यत्पदाम्बुजरजश्चकमे तुलस्या लब्ध्वापि वक्षसि पदं किल भृत्यजुष्टम्। यस्याः स्ववीक्षणकृतेऽन्यसुरप्रयासस्तद्वद्वयं च तव पादरजः प्रपन्नाः ॥ ३७ ॥ तन्नः प्रसीद वृजिनार्दन तेऽङ्घ्रिमूलं प्राप्ता विसृज्य वसतीस्त्वदुपासनाशाः। त्वत्सुन्दरस्मितनिरीक्षणतीव्रकामतप्तात्मनां पुरुषभूषण देहि दास्यम् ॥ ३८ ॥

वीक्ष्यालकावृतमुखं तव कुण्डलश्रीगण्डस्थलाधरसुधं हसितावलोकम्। दत्ताभयं च भुजदण्डयुगं विलोक्य वक्षः श्रियैकरमणं च भवाम

---

முடியாதவர்களாகவிருக்கின்றோம். இது வெகு கஷ்டமன்றோ? (36) எந்த ஸ்ரீதேவியாரின் வீக்ஷணம் தமக்கேற்படவேண்டுமென மற்ற தேவர்கள் பாடுபடுகின்றனரோ அந்த ஸ்ரீதேவியானவள் மார்பில் சத்துருவற்ற ஸ்தானத்தை அடைந்தவளாக இருந்தபோதிலுங்கூட துளஸியாகிற சக்களத்தியுடன் கூட (1)பக்தர்களால் ஸேவிக்கப்பட்டதான உமது பாதாரவிந்த தூளியை எக்காரணத்தால் ஆசைப்படுகின்றாளோ அதே காரணத்தால் நாங்களும் உமது பாததூளியைச் சரண்புகுந்தவர்களாக இருக்கின்றோம். (37) ஆகவே துக்கத்தைப் போக்கும் ஹே புருஷபூஷண! உமது பஜனத்திலேயே ஆசையையுடையவர்களும், வீடுகளைவிடுத்து (யோகிகள் போல) உமது பாதமூலத்தையடைந்தவர்களுமான எங்கள் விஷயத்தில் அருள்புரிவீராக. உமது அழகிய புன்சிரிப்புடன் கலந்த பார்வையினுலேற்பட்ட தீவ்ரமான காமத்தினுல் தாபத்தையடைந்த சித்தமுள்ளவர்களான எங்களுக்குத் தாஸ்யத்தை (சரண கைங்கரியத்தை)த் தருவீராக. (38) குண்டலங்களின் சோபைநிறைந்த கன்னங்களுள்

---

(1) भृत्यजुष्टम्=என்பது மூலம், எல்லாப்பக்தர்களும் ப்ரீதியுடன் அதைச் சேவிக்கின்றனர் என்றேற்பட்டது. ஆகவே அந்த உமது பாத தூளியானது மிக்க ஸௌபாக்கியமுள்ளது என்பது நிச்சயமாகிறது. இல்லையேல் ஸ்ரீமஹாலக்ஷ்மியானவள் பிறர் போட்டியின்றி உம்முடைய மார்பில் வாஸத்தையடைந்தபோதிலும் அதைப் பொருட்படுத்தாது, ஒருபக்கத்தில் சக்களத்தியான துளஸி, எல்லாப் பக்கத்திலும் பக்தர்கள் என இவ்விதம் பலவிதப்போட்டி நிறைந்திருந்தபோதிலுங்கூட அதில் ஆசைப்பட இடமேது? என்பது கருத்து.

**दास्यः॥ ३९॥ का स्त्र्यङ्ग ते कलपदायतमूर्च्छितेन संमोहितार्यचरितान्न चलेत्त्रिलोक्याम्। त्रैलोक्यसौभगमिदं च निरीक्ष्य रूपं यद्गोद्विजद्रुममृगाः पुलकान्यबिभ्रन् ॥४०॥ व्यक्तं भवान्व्रजभयार्तिहरोऽभिजातो देवो यथादि-पुरुषः सुरलोकगोप्ता। तन्नो निधेहि करपङ्कजमार्तबन्धो तप्तस्तनेषु च शिरस्सु च किंकरीणाम्॥ ४१॥ श्रीशुक उवाच—इति विक्लवितं तासां**

---

ளதும், கிழுதட்டில் தேனையுடையதும், சிரிப்புடன் கூடின பார்வை யையுடையதுமான சுருட்டை மயிர்களால் மறைக்கப்பட்ட உமது முகத்தையும், (ஆஶ்ரிதர்களுக்கு) அபயதானஞ்செய்கின்ற இரண்டு புஜ தண்டங்களையும், ஸ்ரீதேவி ஒருத்திக்கே சந்தோஷத்தைத் தரு கின்ற மார்பையும் கண்ணுற்று நாங்கள் அடிமைப்பட்டவர்களாக வாகிவிட்டோம். (39) ஹே அங்க! பசுக்கள், பக்ஷிகள், மரங்கள், மான்கள் கூட எதனுல் மயிர்க்கூச்சலை அடைந்தனவோ அந்த உம் முடைய மிக்க இனிமைவாய்ந்த பதங்களையுடைய (1)நீண்ட ராகா லாப பேதத்தினுல் நன்கு மோஹத்தையடைந்த மூவ்வுலகிலு முள்ள எந்த (2)ஸ்திரீதான் மூவ்வுலகுக்கும் அழகைத் தரத்தக்க இந்த ரூபத்தையும் கண்ணுற்கண்டு நிஜதர்மத்தினின்றும் (3)சலிக் காதிருப்பாள்.(40) ஹே ஆர்த்தபந்தோ! ஆதிபுருஷனும் சுரலோக ரக்ஷகனுமான வாமனனுக முன்னர் எவ்விதமவதரித்திரோ அவ்வித மே கோகுலவாஸிகளின் பயம், கஷ்டம் இவற்றைப் போக்க வேண்டி அவதரித்திருக்கின்றீர். இதுநிஸ்சிதம். ஆனதுபற்றி உமது கரகமலத்தை கிங்கரிகளான எங்களுடைய தாபத்தையடைந்த *ஸ்த னங்களிலும், தலைகளிலும் வைத்து அருள்புரிவீராக என்றனர் (41)

---

(1) இதை ஸங்கீதமுறையில் நீண்டகாலம் கார்வை கொடுத்துப் பாடுதல் என்பர். (2) புருஷர்களே கர்மத்யாகம் செய்யுங்கால் ஸ்திரீகள் விஷயத்தில் சொல்லவும் வேண்டுமோ? (3) உம்மைச் சூசிப்பிக்கின்ற சப்த சிரவணமாத்திரத்தினுலேயே மூவ்வுலகிலுமுள்ள ஜீவர்களுக்கு நிஜ தர்ம த்யாகமானது யுக்தமாக இருக்கும்பொழுது இந்த உம்முடைய ஸ்வ ரூபதர்சனமுமேற்பட்ட பிறகு கர்மங்கள் விலகுவதில் என்னதடை என் பது கருத்து. * ஹிருதயத்தில் கையை வைத்து வெளிக்கிளம்பும் உயி ரை நிறுத்தியும், இம்மாதிரி உங்களை உபேக்ஷிப்பதில்லை எனத் தலையில டித்து ப்ரமாணஞ்செய்தும் தரவேண்டும் என்றனர் என்பது கருத்து.

कृष्णाया हस्ततरलाऽऽचितकोमलवालुकम् ॥१२॥ तद्दर्शनाह्लादविधूतहृद्रुजो मनोरथान्तं श्रुतयो यथा ययुः । स्वैरुत्तरीयैः कुचकुङ्कुमाङ्कितैरचीक्लपन्नासनमात्मबन्धवे ॥ १३ ॥ तत्रोपविष्टो भगवान्स ईश्वरो योगेश्वरान्तर्हृदि कल्पितासनः । चकास गोपीपरिषद्गतोऽर्चितस्त्रैलोक्यलक्ष्म्येकपदं वपुर्दधत् ॥ १४ ॥ सभाजयित्वा तमनङ्गदीपनं सहासलीलेक्षणविभ्रमभ्रुवा ।

---

அச்யுதனும் விபுவுமான பகவான் ஸத்வம் முதலிய சக்திகளினால் சூழப்பட்ட பரமாத்மாபோல அதிகமாகவிளங்கினார். (10–12)

கோபிகைகள் அவருடைய தரிசனத்தினாலேற்பட்ட ஸந்தோஷத்தினால் போக்கப்பட்ட மனோரோகத்தை யுடையவர்களாய் (1)வேதங்கள் போல் மனோரதங்களின் முடிவையடைந்து ஸ்தனங்களிலுள்ள குங்குமங்களினால் அடையாளஞ்செய்யப்பட்ட சொந்த உத்தரீயங்களினால் தமது பந்துவான கிருஷ்ணனுக்கு (2)ஆஸனத்தையமைத்தனர். (13) யோகேஸ்வரர்களின் ஹிருதயத்தினுள்ளில் அமைக்கப்பட்ட ஆஸனத்தையுடையவரும், ஆயினும் கோபிகைகளின் கூட்டத்தையடைந்து அங்கு உட்கார்ந்தவரும், அவர்களால் பூஜிக்கப்பட்டவரும், ஈஸ்வரனும் பகவானுமான அந்தக்கிருஷ்ணன் மூவ்வுலகங்களிலுமுள்ள அழகுக்கு முக்கிய இருப்பிடமான தனது சரீரத்தை யாவரும் காணும்படியாகச் செய்துகொண்டு விளங்கினார். (14) காமனைவிருத்திசெய்கின்ற அந்தக் கிருஷ்ணனுக்கு மரியாதைசெய்து பரிஹாஸ லீலையுடன் கூடின பார்வையின் விநோதத்தையுடைய புருவங்களுடன் கூடினவர்களாகவாகித் தமதுமடியில்

---

(1) கர்மகாண்டசுருதிகள் பரமேசுவரனைக் காணாதனவாய் அந்தந்தக் காமானுபந்தங்களினால் அபூர்ணங்கள் போலவாகின்றன. ஞான காண்ட சுருதிகளோ பரமேசுவரனைக்கண்டு அதனாலுண்டான ஸந்தோஷம் நிறைந்தனவாய் காமானுபந்தத்தை விடுகின்றன என்பது எவ்விதமோ அவ்விதமிருந்தது என்பதுகருத்து.

(2) கோபிகைகள் யமுனையிலுள்ள மணல்களைக் குவித்து அக்குவியலின்மேல் தமதுஸ்தனோத்தரீயங்களை ஒவ்வொருவரும் போட்டு அதன் மேல் ஸ்ரீகோபாலனைத் தமதுகைகளினால் பிடித்து உட்காரவைத்தனர் என்பதுகருத்து.

**संस्पर्शनेनाङ्कृताङ्घ्रिहस्तयोः संस्तुत्य ईषत्कुपिता बभाषिरे ॥ १५ ॥ गोप्य ऊचुः—भजतोऽनुभजन्त्येक एक एतद्विपर्ययम्। नोभयांश्च भजन्त्येक एतन्नो ब्रूहि साधु भोः ॥ १६ ॥**

**श्रीभगवानुवाच—मिथो भजन्ति ये सख्यः स्वार्थैकान्तोद्यमा हि ते। न तत्र सौहृदं धर्मः स्वार्थार्थं तद्धि नान्यथा ॥ १७ ॥ भजन्त्यभजतो ये**

---

கிருஷ்ணனால் போட்டுக்கொள்ளப்பட்ட அவரது (1)கால்களையும், கைகளையும் மெள்ளமெள்ளப் பிடித்துக்கொண்டு அற்பங்கோபத்தை யடைந்தவர்களாய்ச் சொல்லத்தொடங்கினர். (15)

கோபிகைகள் சொல்லலுற்றனர்.—*ஹே கிருஷ்ண! உலகில் சிலர் தம்மிடம் ப்ரேமை காட்டுவதற்கேற்பத்தாமும் ப்ரேமை காட்டுகின்றனர். வேறு சிலர் அதற்குமாறாகவிருக்கின்றனர். (அதாவது:—பிறரது ப்ரேமையை எதிர்பாராமலே தம்மிடம் ப்ரேமை காட்டாதவரிடத்துங்கூடத் தாம் ப்ரேமை காட்டுகின்றனர் என்றும்.) மற்றும் சிலரோ ப்ரேமை காட்டுபவரோ ப்ரேமை காட்டாதவரோ இருவரிடத்திலும் தாம் ப்ரேமை காட்டாதிருக்கின்றனர். இதில் எது நல்லது என்பதை எங்களுக்கு நீ சொல்லவேண்டும் என்றனர். (16) ஸ்ரீபகவான் சொல்லலுற்றார்—ஹே ஸகிகளான கோபிகைகளே! எவர்கள் ஒருவருக்கொருவர் ப்ரேமைகாட்டுகின்றனரோ அவர்கள் தமது சொந்த ப்ரயோஜனத்தில் முக்கியமான நோக்குடையவர்களேயாவர். ஆனதுபற்றி அவ்விருவரிடத்திலும ஸ்நேஹமுமில்லை. சுகமுமில்லை. ஆனதுபற்றித் தர்மமுமில்லை. பின்னையோவெனில் அது சொந்த ப்ரயோஜனத்துக்குவேண்டி ஏற்பட்ட

---

(1) वनिताशतयूथपः என்றவிடத்தில் நூறுகோடிகோபிகைகள் அங்கிருந்தனர் என்று கூறப்பட்டிருப்பதால் மடியில் போடப்பட்ட பகவானுடைய கால்களையும் பிடித்தனர் என்ற இதற்கு ஸ்ரீகோபாலன் அச்சமயம் தனது யோகமாயாவைபவத்தால் அத்துணை கிருஷ்ணனாக ரூபமெடுத்து அவரவர் மடியில் காலை வைத்திருப்பதான தோற்றத்தைத்தந்தார் என்பது கருத்து. *பகவானிடத்தில் செய்நன்றிமறவாமை என்பது அணுவுமில்லை என்பதை அவர்வாயினாலேயே வரும்படிசெய்யவேண்டுமென்ற ஆழ்ந்த கருத்துள்ளவர்களாய் அவரைப்பார்த்து பின்வருமாறு கேட்கத்தொடங்குகின்றனர்.

**वै करुणाः पितरो यथा। धर्मो निरपवादोऽत्र सौहृदं च सुमध्यमाः॥ १८॥ भजतोऽपि न वै केचिद्भजन्त्यभजतः कुतः। आत्मारामा ह्याप्तकामा अकृतज्ञा गुरुद्रुहः॥ १९॥ नाहं तु सख्यो भजतोऽपि जन्तून्भजाम्यमीषामनु-**

---

தாகவாகுமேயொழிய வேறு விதமாகவாகமாட்டாது. (17) எவர்கள் தம்மிடம் ப்ரேமை காட்டாதவர்களிடத்திற் கூடத் தாம் ப்ரேமை காட்டுகின்றனரோ அவர் தாய்தந்தையர்போல கருணை நிறைந்தவர்களேயாவர். அழகிய இடையையுடைய ஹே கோபிகைகளே! இவ்விடத்தில் சினேஹமும் அதன் மூலம் சுகமும் மறுக்கப்படாத தர்மமும் ஏற்படுவதில் தடையில்லை.* (18) சிலர் ப்ரேமையைக் காட்டுபவரிடத்திலேயே தாங்கள் ப்ரேமையைக் காட்டாதிருக்கின்றனர். இவ்விதமிருக்க ப்ரேமை காட்டாதவர்களிடத்தில் எங்கு ப்ரேமை காட்டப்போகின்றனர். ஆகவே இங்நிலையிலுள்ளவர்கள் ஆத்மாராமர் (வெளிநோக்கற்றவர்) களென்றும், ஆப்தகாமர் (விஷயதர்சனமுள்ளவர்களாயினுங் கூட பூர்ணகாமர்களாக இருப்பதுபற்றி போகேச்சையற்றவர்) களென்றும், அகிருதக்ஞர் (நல்ல மூடர்) களென்றும், (1) குருத்ரோஹிகள் (அதிகம்கடின சித்தமுள்ளவர்கள்) என்றும் நான்குவிதமாகச் சொல்லப்படுவர். (19) (2) ஹேஸகிகளே! நானோ ப்ரேமையைக் காட்டுகின்றவர்களான ஜந்துக்களிடத்திலுங்கூட (உடனேயே) ப்ரேமையைக் காட்டுவதில்

---

* ப்ரேமை காட்டாதவர்களிடத்திலுங்கூட எவர்கள் ப்ரேமையைக் காட்டுகின்றனரோ அவர்கள் இரண்டுவிதமாவர் அவர்களுள் ஒருவர் கருணையுள்ளவரும், மற்றவர் சினேஹிதருமாவர் என்பது கருத்து.

(1) "स पिता यस्तु पोषकः (எவன் போஷிப்பவனோ அவன் பிதாவாகிறான்) என்றபடி உபகாரஞ்செய்பவன் பிதிருதல்லியனாக வாவதால் அவ்வுபகாரஞ்செய்வனுக்கு த்ரோஹஞ்செய்வதுபற்றி இவர் குருத்ரோஹிகளாகின்றனர் என்பது கருத்து.

(2) இவர்களுள் நான்காவதாகச் சொல்லப்பட்டவகுப்பில் சேர்ந்திருப்பதாகத்தன்னை எண்ணிக்கொண்டு ஒருவருக்கொருவர் கண் ஜாடைகளினால் ஆழ்ந்த சிரிப்புடன் கூடினமுகமுள்ளவர்களான கோபிகைகளைப் பார்த்துதான் அவ்வகுப்பில் சேர்ந்தவனல்லன் என்பதைப் பகவான் சொல்லுகிறார்.

वृत्तिवृत्तये। यथाऽधनो लब्धधने विनष्टे तच्चिन्तयाऽन्यन्निभृतो न वेद ॥ २० ॥ एवं मदर्थोज्झितलोकवेदस्वानां हि वो मय्यनुवृत्तयेऽबलाः। मया परोक्षं भजता तिरोहितं मासूयितुं मार्हथ तत्प्रियं प्रियाः ॥ २१ ॥ न पारयेऽहं निरवद्यसंयुजां स्वसाधुकृत्यं विबुधायुषापि वः। या माऽभजन्दुर्जरगेहशृङ्खलाः संवृश्च्य तद्वः प्रतियातु साधुना ॥ २२ ॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्धे रासक्रीडायां
गोपीसान्त्वनं नाम द्वात्रिंशोऽध्यायः ॥ ३२ ॥

---

லை. ஏன்? இவர்களுக்கு என்னிடத்தில் இடையறாது தியானமேற்படுவதற்குவேண்டியேயாம். உலகில் மிக்க ஏழையான மனிதன் தனக்குத் தைவாதீனமாய்க்கிடைத்த தனம் நஷ்டமானபொழுது பிறவொன்றையுமறியாது அப்பணக்கவலை நிரம்பினவனாகவே இருப்பான் என்பது எவ்விதமோ அவ்விதமே இங்கும் காண்க. (20)

ஹே அபலைகளே! ஹே ப்ரியைகளே! இவ்விதம் எனக்குவேண்டி (தக்கது தகாதது இவற்றைக் கவனியாததுபற்றி) லோகத்தையும், (தர்மாதர்மங்களைக் கவனியாததுபற்றி) வேதத்தையும், (ஸ்நேஹத்தையிழந்ததுபற்றி) பந்துக்களையும், பரித்யாகஞ்செய்த உங்களுக்கு என்னிடத்தில் தொடர்ந்த ப்ரேமையேற்படவேண்டி உங்கள் கண்களுக்குப் புலப்படாதபடி மறைந்திருந்து உங்களது ப்ரேமை நிறைந்த வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டே நான் மறைந்திருந்தேன். ஆகவே ப்ரியனான என்னிடத்தில் ப்ரியைகளான நீங்கள் குற்றங்கூறத் தகுதியுடையவரல்லீர். (21) (இஃதிருக்கட்டும் உண்மையைச் சொல்லுகிறேன் கேளுங்கள்) எந்த நீங்கள் நீக்கவியலாத க்ருஹமாகிற சங்கிலிகளை நன்கு அறுத்துத்தள்ளி என்னைப் பஜித்தீர்களோ, அந்தக் கபடமற்ற ஸங்கமத்தை யுடையவர்களான உங்களுக்கு வெகு காலத்தினாலுங்கூடப் பதில் செய்வதற்கு நான் முடியாதவனாக இருக்கிறேன். ஆனதுபற்றி உங்களுடைய ஸாதுகிருத்யத்தினாலேயே உங்களுடைய ஸாதுகிருத்யத்துக்குப் பதில் செய்யப்பட்டதாகவாகட்டும். (22) (எ-று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண தசமஸ்கந்த
பூர்வார்த்தத்தில் ராஸக்ரீடையில் கோபிகைகளைத்தேற்றுதல் என்ற
முப்பத்திரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.

## நாராயணீயம்.

तव विलोकनाद्गोपिकाजनाः प्रमदसङ्कुलाः पङ्कजेक्षण।
अमृतधारया संप्लुता इव स्तिमिततां दधुस्त्वत्पुरोगताः॥ ३१५॥

(ப—ரை) **पङ्कजेक्षण!**=ஹே புண்டரீகாக்ஷ! **त्वत्पुरोगताः**=உமது எதிரிலிருக்கின்றவர்களான **गोपिकाजनाः**=கோபிகாஜனங்கள் **तव**=உம்முடைய **विलोकनात्**=பார்வையினுல் **प्रमदसङ्कुलाः**=அதிக ஸந்தோஷமுள்ளவர்களாகவும் **अमृतधारया**=அமுதப்பெருக்கினுல் **संप्लुता इव**=நனைக்கப்பட்டவர்கள் போலும் **स्तिमितताम्**=அசைவற்றிருத்தலை **दधुः**=அடைந்தனர். (315) (எ—று)

तदनु काचन त्वत्कराम्बुजं सपदि गृह्णती निर्विशङ्कितम्।
घनपयोधरे सन्निधाय सा पुलकसंवृता तस्थुषी चिरम्॥ ३१६॥

(ப—ரை) **तदनु**=பிறகு **काचन**=ஒரு **सा**=அந்த கோபிகை **सपदि**=உம்மைப் பார்த்தவுடனேயே **त्वत्कराम्बुजम्**=உமது கராம்புஜத்தை **निर्विशङ्कितम्**=எவ்வித சங்கையுமின்றி **गृह्णती**=பிடித்து **घनपयोधरे**=கெட்டியானஸ்தனத்தில் **सन्निधाय**=வைத்துக்கொண்டு **पुलकसंवृता**=மயிர்க்கூச்சலினுல் சூழப்பட்டவளாய்க் கொண்டு **चिरम्**=வெகுகாலம், **तस्थुषी**=இருந்தாள். (316) (எ—று)

तव विभो परा कोमलं भुजं निजगलान्तरे पर्यवेष्टयत्।
गळसमुद्गतं प्राणमारुतं प्रतिनिरुन्धतीवातिहर्षुला॥ ३१७॥

(ப—ரை) **विभो!**=ஹே விபோ! **परा**=மற்றொருத்தி **अतिहर्षुला**=மிக்கச் சந்தோஷமுள்ளவளாய் **गलसमुद्गतम्**=கழுத்தினின்றும் வெளிக்கிளம்பின **प्राणमारुतम्**=பிராண வாயுவை **निरुन्धतीव**=தடுப்பவள் போல **कोमलम्**=மெதுவான **तव**=உம்முடைய **भुजम्**=கையை **निजगलान्तरे**=தனது கழுத்தினுள்ளில் **पर्यवेष्टयत्**=சுத்திக்கொண்டாள்.

अपगतत्रपा कापि कामिनी तव मुखाम्बुजात्पूगचर्वितम्।
प्रतिगृह्य्य तद्वक्त्रपङ्कजे निदधती गता पूर्णकामताम्॥ ३१८॥

(ப—ரை) **कापि**=ஒரு **कामिनी**=ஸ்திரீயானவள் **अपगतत्रपा**=லஜ்ஜையற்றவளாய் **तव**=உம்முடைய **मुखाम्बुजात्**=முக கமலத்தினின்றும் **पूगचर्वितम्**=எச்சில் தாம்பூலத்தை **प्रतिगृह्य्य**=பெற்றுக்கொண்டு **तत्**=அதை **वक्त्रपङ्कजे**=தனது முகாரவிந்தத்தில் **निदधती**=வைத்துக்

கொண்டவளாய் **पूर्णकामताम्**=நிரம்பின காமமுள்ளவளாக இருத்தலை **गता**=அடைந்தாள். (314) (எ—று)

**विकरुणो वने संविहाय मामपगतोऽसि का त्वामिह स्पृशेत् ।**
**इति सरोषया तावदेकया सजललोचनं वीक्षितो भवान् ॥ ३१९ ॥**

(ப—ரை) **विकरुण:**=தயையற்றவனாய் **वने**=காட்டில் **माम्**=என்னை **संविहाय**=விட்டுவிட்டு **अपगत:**=மறைந்தவனாக **असि**=இருக்கின்றாய். **इह**=இப்பொழுது **त्वाम्**=உன்னை **का**=எவள் தான் **स्पृशेत्**=தொடுவாள் **इति**=என **सरोषया**=கோபமுள்ளவளான **एकया**=ஒருத்தியினால் **तावत्**=அப்பொழுது **सजललोचनम्**=ஜலத்துடன் கூடின நேத்திரமுள்ளவளாக இருக்கும்படி **भवान्**=நீர் **वीक्षित:**=பார்க்கப்பட்டீர். (319)

**इति मुदाकुलैर्वल्लवीजनैः सममुपागतो यामुने तटे ।**
**मृदुकुचाम्बरैः कल्पितासने घुसृणभासुरे पर्यशोभथाः ॥ ३२० ॥**

(ப—ரை) **इति**=இவ்விதம் **मुदाकुलै:**=ஸந்தோஷம் நிறைந்தவர்களான **वल्लवीजनै:**=கோபஸ்திரீ ஜனங்களுடன் **समम्**=கூட **यामुने**=யமுனையினுடையதான **तटे**=கரையில் **घुसृणभासुरे**=அவர்களின் குசகுங்குமங்களினால் ப்ரகாசிக்கின்ற **मृदुकुचाम्बरै:**=ஸ்தனங்களிலுள்ள மெதுவான வஸ்திரங்களினால் **कल्पितासने**=அமைக்கப்பட்ட ஆஸனத்தில் **पर्यशोभथा:**=நன்கு விளங்கினீர். (320) (எ—று)

**कतिविधा कृपा केऽपि सर्वतो धृतदयोदयाः केचिदाश्रिते ।**
**कतिचिदीदृशा मादृशेष्वपीत्यभिहितो भवान् वल्लवीजनैः ॥ ३२१ ॥**

(ப—ரை) **केऽपि**=சிலர் **सर्वत:**=எல்லா ஜனங்களிடத்திலும் **घनकृपोदया:**=அதிகமான தயையினுத்பத்தியுள்ளவர்களாக இருக்கின்றனர். **केचित्**=சிலர் **आश्रिते**=தன்னையண்டினவர்களிடத்தில் மட்டும் தயையுள்ளவர்களாக இருக்கின்றனர். **केचित्**=சிலர் **मादृशेष्वपि**=எங்கள் போன்றவர்களிடத்தில் கூட **ईदृशा:**=சற்றும் தயையற்றவர்களாய் அதாவது: கொடுமையான சித்தமுள்ளவளாய் இருக்கின்றனர். ஆகவே ஹே கிருஷ்ண! **कृपा**=தயையானது **कतिविधा**=எத்துணைவகைப்பட்டது சொல்லும் **इति**=என **भवान्**=நீர் **वल्लवीजनै:**=கோபஸ்திரீகளினால் **अभिहित:**=கேழ்க்கப்பட்டீர். (321) (எ—று)

**अयि कुमारिका नैव शङ्कयतां कठिनता मयि प्रेमकातरे ।**
**मयि तु चेतसो वोऽनुवृत्तये कृतमिदं मयेत्यूचिवान् भवान् ॥ ३२२ ॥**

(ப—ரை) **अयि कुमारिकाः**=ஹே கோபகுமாரிகைகளே! **प्रेम-कातरे**=ப்ரீதி குறைந்துவிடுமோவெனப் பயந்த **मयि**=என்னிடத்தில் **कठिनता** = கொடூரத் தன்மையானது **नैव शङ्क्यताम्** = சங்கிக்கப்பட வேண்டாம். **किन्तु**=ஆனால் **मयि**=என்னிடத்தில் **वः**=உங்களுடைய **चेतसः** = மனத்தினுடைய **अनुवृत्तये** = தொடர்பு ஏற்படவேண்டி **मया**=என்னால் **इदम्**=இது (மறைதலானது) **कृतम्**=செய்யப்பட்டது. **इति**=என **भवान्**=நீர் **ऊचिवान्**=பதில் சொன்னீர். (322) (எ—று)

**अयि निशम्यतां जीववल्लभाः प्रियतमो जनो नेदृशो मम ।**
**तदिह रम्यतां रम्ययामिनीष्वनुपरोधमित्यालपो विभो ॥ ३२३ ॥**

(ப—ரை) **अयि जीववल्लभाः !**=ப்ராண நாதைகளான ஹே கோபிகைகளே! **निशम्यताम्**=நான் சொல்லுவது உங்களால் கேட்கப் படட்டும். **मम**=எனக்கு **ईदृशः**=இம்மாதிரியான **प्रियतमः**=மிக்க ப்ரேமை பாத்திரமான **जनः**=ஜனமானது **न**=வேறு கிடையாது. **तत्**=ஆகவே **रम्ययामिनीषु**=அழகிய இரவுகளில் **अनुपरोधम्**=எவ்விதத் தடையுமின்றி **रम्यताम्**=உங்களால் ரமிக்கப்படட்டும் **इति**=என **विभो !**=ஹே கிருஷ்ண! **आलपः**=சொன்னீர். (323) (எ—று)

**इति गिराधिकं मोदमेदुरैर्व्रजवधूजनैस्साकमारमन् ।**
**कलितकौतुको रासखेलने गुरुपुरीपते पाहि मां गदात् ॥ ३२४ ॥**

(ப—ரை) **इति**=என்ற **गिरा**=வார்த்தையினால் **अधिकम्**=அதிகமாக இருக்கும்படி **मोदमेदुरैः**=ஸந்தோஷம் நிறைந்தவர்களான **व्रज-वधूजनैः**=கோகுல ஸ்திரீ ஜனங்களுடன் **साकम्**=கூட **रासखेलने**=ராஸக்ரீடையில் **कलितकौतुकः**=அடைந்த ஆவலுள்ளவராய் **आरमन्**=ரமித்தவரான நீர் **हे गुरुपुरीपते !**=குருவாயூருக்கீஶ! **माम्**=என்னை **गदात्**=வாதரோகத்தினின்றும் **पाहि**=காப்பீராக. (324)

இவ்விதம் ராஸக்ரீடையில் கோபிகைகளுக்கு பகவத்ஸமாகத்துக்குப் பிறகுண்டான பாரவஶ்யவர்ணனமும், ப்ரணயகோப வர்ணனமும், பகவத்க்ருத ஸாந்த்வ வர்ணனமுமென்ற அறுபத்தெட்டாவது தசகம் முற்றிற்று.



## अथ त्रयस्त्रिंशोऽध्यायः ॥

**श्रीशुक उवाच—इत्थं भगवतो गोप्यः श्रुत्वा वाचः सुपेशलाः। जहुर्विरहजं तापं तदङ्गोपचिताशिषः ॥ १ ॥ तत्रारभत गोविन्दो रासक्रीडामनुव्रतैः। स्त्रीरत्नैरन्वितः प्रीतैरन्योन्याबद्धबाहुभिः ॥ २ ॥ रासोत्सवः संप्रवृत्तो गोपीमण्डलमण्डितः। योगेश्वरेण कृष्णेन तासां मध्ये द्वयोर्द्वयोः।**

---

## முப்பத்துமூன்றுவது அத்தியாயம்.

(ஆ-கை) **त्रयस्त्रिंशे ततो गोपीमण्डलीमध्यगो हरिः।
प्रियास्ता रमयामास ह्लादिनीवनकेलिभिः ॥ १ ॥**

(க-ரை) பிறகு கோபஸ்திரீக்கூட்டத்தின் நடுவை அடைந்த ஸ்ரீகிருஷ்ணன் யமுனையின் கரையிலிருக்கின்ற அந்தக் கோபிகைகளை ஜலக்ரீடை, வனக்ரீடை, ஸ்தலக்ரீடை இவற்றால் ரமிக்கச்செய்தார் என இந்த முப்பத்துமூன்றுவது அத்தியாயத்தி லுபதேசிக்கப் படுகிறது. (1)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—ஹே அங்க! கோபிகைகள் இவ்விதம் பகவானுடைய அழகிய வார்த்தைகளைக் கேட்டு அப்பொழுது நிறைந்த காமனையை யுடையவர்களாய் விரஹத்தாலேற்பட்ட தாபத்தைவிட்டனர். (1) அந்த யமுனைக்கரையில் ஸ்ரீகோவிந்தன் தன்னை யனுஸரித்தவர்களும், ப்ரீதியுள்ளவர்களும், ஒருவருக்கொருவர் கோக்கப்பட்ட கையையுடையவர்களுமான ஸ்திரீரத்தினங்களுடன் கூடினவராய் ராஸக்ரீடையைச் செய்ய ஆரம்பித்தார். (2) மண்டலரூபமாக இருக்கின்றவர்களும், கழுத்தில் கிரஹிக்கப்பட்டவர்களும் (இருபக்கங்களிலும் ஆலிங்கனஞ் செய்யப்பட்டவர்களுமான) கோபிகைகளுக்குள் * இரண்டிரண்டு ஸ்திரீகளின் நடுவில்

---

* द्वयोर्द्वयोः प्रविष्टेन என்பது மூலம். இதற்கு இரண்டிரண்டு ஸ்திரீகளின் நடுவில் ப்ரவேசித்தவரும் எனவுரை எழுதப்பட்டது. அதன் முறையாவது:—ஒருகோபிகை, அவளுக்கடுத்தபடி ஸ்ரீகிருஷ்ணன், கிருஷ்ணனுக்கடுத்தபடி கோபிகை, என இவ்விதமாக இருந்துவந்தார் என்றும். இவ்விதம் இரண்டு ஸ்திரீகளின் நடுவிலிருக்கும் ஸ்ரீகிருஷ்ணன் இடதுகையை ஒருஸ்திரீயின் தோளிலும் வலதுகையை மற்றொருஸ்திரீ

**प्रविष्टेन गृहीतानां कण्ठे स्वनिकटं स्त्रियः॥ ३ ॥ यं मन्येरन्नभस्तावद्विमानशतसंकुलम्। दिवौकसां सदाराणामौत्सुक्यापहृतात्मनाम् ॥ ४ ॥ ततो दुन्दुभयो नेदुर्निपेतुः पुष्पवृष्टयः। जगुर्गन्धर्वपतयः सस्त्रीकास्तद्यशोऽमलम् ॥ ५ ॥ वलयानां नूपुराणां किङ्किणीनां च योषिताम्। स प्रियाणामभूच्छब्दस्तुमुलो रासमण्डले ॥६॥ तत्रातिशुशुभे ताभिर्भगवान्देवकीसुतः। मध्ये मणीनां हैमानां महामरकतो यथा ॥ ७ ॥ पादन्यासैर्भुजविधुतिभिः सस्मितभ्रूविलासैर्भज्यन्मध्यैश्चलकुचपटैः कुण्डलैर्गण्डलोलैः। स्विद्यन्मु-**

---

ப்ரவேசித்தவரும், எவரை எல்லாஸ்திரீகளும் தனது அருகில் மட்டுமே இருப்பவராக எண்ணினரோ அப்பேர்பட்டவரும், யோகேஶ்வரர்களுக்கு மீஶ்வருமான ஸ்ரீகிருஷ்ணனால் கோபஸ்திரீமண்டலத்தினால் அலங்கரிக்கப்பட்ட ராஸக்ரீடாமஹோத்ஸவமானது ஆரம்பிக்கப்பட்டது. (3) அதே க்ஷணத்தில் ஆகாசமானது ஆவல் நிறைந்த மனதுள்ளவர்களும், பத்தினிகளுடன் கூடினவர்களுமான தேவர்களுடைய நூற்றுக்கணக்கான விமானங்களால் சூழப்பட்டதாக வாயிற்று. (4) பிறகு தேவதுந்துபிவாத்தியங்கள் ஒலித்தன. புஷ்பமழைகள் பொழிந்தன. கந்தர்வபதிகள் ஸ்திரீகளுடன் கூடினவர்களாய் பரிசுத்தமான அவருடைய யசஸ்ஸைக் கானஞ்செய்தனர். (5) ராஸமண்டலத்தில் ப்ரியனான ஸ்ரீகிருஷ்ணனுடன் கூடினவர்களான கோபஸ்திரீகளின் வளையல்களுடையவும், பாதஸரங்களுடையவும், சலங்கைகளுடையவும் சப்தமானது பரவ ஆரம்பித்தது. (6) பொன்மயமான மணிகளின் நடுவிலுள்ள பெரிய நீலமணியானதுபோல அவ்விடத்தில் கோபஸ்திரீகளினால் தேவகீசுதனான பகவான் மிக்கவிளங்கினார். (7) அந்தக் கிருஷ்ணனைக் குறித்துப் பாடுகின்றவர்களான அந்த கிருஷ்ணஸ்திரீகள் பாதந்யாஸங்களுடனும், கைகளின் அசைத்தல்களுடனும், புன்சிரிப்புடன்

---

யின் தோளிலும் போட்டுக் கொண்டும் இருந்தாரென்று பெறப்பட்டது. இதனின்றும் ஒருஸ்திரீயுக்குப்பகவானுடைய வலதுகை இடதுதோளிலும் இடதுகை வலதுதோளிலும் ஸம்பந்தப்பட்டிருந்ததாகவேற்படும். அவ்விதமாயினும் பகவன்மாயையினால் அதை அவர்களறியாதிருந்தனர் என்றும் ஏற்பட்டது.

स्य: कबररशनाग्रन्थय: कृष्णवध्वो गायन्त्यस्तं तडित इव ता मेघचक्रे विरेजु:॥८॥ उच्चैर्जगुर्नृत्यमाना रक्तकण्ठ्यो रतिप्रिया:। कृष्णाभिमर्शमुदिता यद्गीतेनेदमावृतम् ॥ ९ ॥ काचित्समं मुकुन्देन स्वरजातीरमिश्रिता:। उन्निन्ये पूजिता तेन प्रीयता साधुसाध्विति। तदेव ध्रुवमुन्निन्ये तस्मै मानं च बह्वदात् ॥ १० ॥

---

கூடின புருவநெரிச்சல்களுடனும், கோணலாகவான இடுப்புகளுடனும், அசைகின்ற ஸ்தனங்களுடனும், வஸ்திரங்களுடனும், கன்னங்களிலசைகின்ற குண்டலங்களுடனும் கூடினவர்களாகவும் வியர்த்த முகத்தை யுடையவர்களாகவும், தலைப்பின்னலையும், இடையிலுள்ள ஒட்டியாணத்தையும் கெட்டியாகக் கட்டிக்கொண்டவர்களாகவும் ஆகி * மேகக்கூட்டத்திலுள்ள மின்னல்கள்போல விளங்கினர். (8) நர்த்தனம்செய்கின்ற கோபஸ்திரீகள் பற்பல ராகவிசேஷங்களினால் அழகுவாய்ந்த குரலையுடையவர்களாகவும், ரமிப்பதில் பற்றுள்ளவர்களாகவும், ஸ்ரீகிருஷ்ணனுடைய ஸம்ஸ்பரிசத்தினால் சந்தோஷத்தை யடைந்தவளாகவுமாகி உரத்துப்பாடினர். (9) எவர்களின் பாட்டினால் இந்த ப்ரபஞ்சமானது சூழப்பட்டதாகவாயிற்றோ? ஒருத்தி முகுந்தனுடன்கூட ஸ்வரஜாதிகளை (ஷட்ஜாதி ஸ்வராலாபகதிகளை) கிருஷ்ணனுடைய ஸ்வராலாபங்களுடன் கலக்காதனவாய் ஆலாபஞ்செய்தாள். அதைக்கேட்டு ப்ரீதியையடைந்த அந்த ஸ்ரீகிருஷ்ணனால் நல்லது நல்லது என ஸம்மானிக்கப்பட்டவளாய்க் கொண்டு முன்னர் செய்த ஸ்வராலாபத்தையே த்ருவம் என்றதாளவிசேஷத்தை யமைத்துப் பாடிக்காட்டினாள். அவ்விதம் பாடும் அவளுக்கு ஸ்ரீகோபாலன் அதிகமான ஸம்மானத்தைச் செய்தார்.

---

* அச்சமயம் பலசரீரமெடுத்த ஸ்ரீகிருஷ்ணன் மேகக்கூட்டம் போலும், அங்குள்ள கோபிகைகள் கொடிமின்னல்கள்போலும், அவர்கள் முகத்திலுண்டான வியர்வைத்துளிகள் மழைத்துளிகள்போலும், அவர்கள் செய்தகானம் மேககர்ஜிதம் போலுமிருந்தது. மேலும், कबररशनाग्रन्थय: என்பதுமூலம் இதற்கு कबररशनासु अग्रन्थय: எனப் பிரித்துக்கொண்டு நர்த்தனவசத்தால் அவிழ்ந்துபோன தலைப்பின்னலையும் இடையிலுள்ள ஒட்டியாணத்தையுமுடையவர்களாகவாயினர் என்றும் பொருள்கொள்ளலாமென ஸ்ரீதரீயவியாக்கியானத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

काचिद्रासपरिश्रान्ता पार्श्वस्थस्य गदाभृतः। जग्राह बाहुना स्कन्धं श्लथद्वलयमल्लिका ॥ ११ ॥ तत्रैकांऽसगतं बाहुं कृष्णस्योत्पलसौरभम्। चन्दनालिप्तमाघ्राय हृष्टरोमा चुचुम्ब ह ॥ १२ ॥ कस्याश्चिन्नाट्यविक्षिप्त-कुण्डलत्विषमण्डितम्। गण्डं गण्डे संदधत्या अदात्ताम्बूलचर्वितम् ॥१३॥ नृत्यन्ती गायती कापि कूजन्नूपुरमेखला। पार्श्वस्थाऽच्युतहस्ताब्जं श्रान्ताधात्स्तनयोः शिवम् ॥ १४ ॥ गोप्यो लब्ध्वाऽच्युतं कान्तं श्रिय एकान्त-वल्लभम्। गृहीतकण्ठ्यस्तद्दोर्भ्यां गायन्त्यस्तं विजह्रिरे ॥ १५ ॥ कर्णोत्पला-लकविटङ्ककपोलघर्मवक्त्रश्रियो वलयनूपुरघोषवाद्यैः। गोप्यः समं भगवता

---

ஒருத்தி ராஸக்ரீடையினுல் மிக்கக்களைத்தவளாயும், நழுவின கையிலுள்ள வளையல், தலையிலுள்ள மல்லிகை இவற்றையுடையவளாயுமாகி பக்கத்திலிருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணனுடைய தோளைத்தனது கையினுல் பிடித்துக்கொண்டாள். (11) அச்சமயத்தில் ஒருத்தி உத்பலத்தினுடையதுபோன்ற வாஸனையுள்ளதும், சந்தனத்தினுல் பூசப்பட்டதும், தனது தோளிலிருக்கின்றதுமான ஸ்ரீகிருஷ்ணனுடைய கையை முகர்ந்து மயிர்க்குச்சலையடைந்தவளாய் முத்தமிட்டாள். (12) நாட்டியத்தினுல் அசைகின்ற குண்டலங்களின் சோபையினுல் அலங்கரிக்கப்பட்ட கன்னத்தைத் தனது கன்னத்தில் சேர்த்தவளான ஒருத்திக்குத் தாம்பூலசர்வணத்தை ஸ்ரீகோபாலன் கொடுத்தார். (13) நர்த்தனஞ்செய்கின்றவளும், சப்திக்கின்ற பாதஸரம், ஒட்டியாணம் இவற்றையுடையவளும், பாடுகின்றவளுமான ஒருத்தி களைத்தவளாய் மங்களகரமான அச்யுதனுடைய ஹஸ்தாப்ஜத்தை ஸ்தனங்களில் வைத்துக்கொண்டாள். (14) இவ்விதமே மற்றுமுள்ள கோபிகைகளும் லக்ஷ்மியினுடைய முக்கிய நாயகனுன அச்யுதனைக் கணவனுக அடைந்து அவருடைய கைகளினுல் தழுவப்பட்ட கழுத்தையுடையவர்களாய்க் கொண்டும் அவரைக் குறித்துப் பாடுகின்றவர்களாய்க்கொண்டும் விளையாடினர். (15) கோபிகைகள் கர்ணோத்பலங்களினுலும், சுருட்டை மயிர்களினுலலங்கரிக்கப்பட்ட கன்னங்களினுலும், வியர்வைகளினுலும் ஏற்பட்ட முகசோபையையுடையவர்களாகவும், வளையல்கள், பாதஸரங்கள் இவற்றின் சப்தங்கள், வாதித்ரமென்ற வாத்தியங்கள் இவற்றுடன் கூடின

ननृतुः स्वकेशस्रस्तस्रजो भ्रमरगायकरासगोष्ठ्याम् ॥१६॥ एवं परिष्वङ्गकराभिमर्शस्निग्धेक्षणोद्दामविलासहासैः। रेमे रमेशो व्रजसुन्दरीभिर्यथाऽर्भकः स्वप्रतिबिम्बविभ्रमः॥ १७ ॥ तदङ्गसङ्गप्रमुदाकुलेन्द्रियाः केशान्दुकूलं कुचपट्टिकां वा। नाञ्जः प्रतिव्योढुमलं व्रजस्त्रियो विस्रस्तमालाभरणाः कुरूद्वह ॥ १८ ॥ कृष्णविक्रीडितं वीक्ष्य मुमुहुः खेचरस्त्रियः। कामा-

---

வர்களாகவும், தமது பின்னலிலிருந்து *நழுவின புஷ்பமாலையை யுடையவர்களாகவும் ஆகி வண்டுகளாகிற காயகர்களையுடைய ராஸ ஸபையில் பகவானுடன் கூட நர்த்தனஞ்செய்தனர். (16) இவ்வி தமே லக்ஷ்மீகாந்தனான பகவானும் (*)தனது ப்ரதிபிம்பங்களுடன் விளையாடுகின்ற குழந்தைபோல கோபஸ்திரீகளுடன் கூட ஆலிங் கனத்தினாலும், கையைப் பிடித்தலினாலும், அழகிய பார்வையினா லும், அதிகமான விலாஸங்களினாலும், சிரிப்புகளினாலும் விளையாடி னார். (17) ஹே குருத்வஹ! இவ்விதம் கோபஸ்திரீகள் அவரு டைய அங்கஸங்கத்தினாலேற்பட்ட அதிக ஸந்தோஷத்திலீடுபட்ட இந்திரியங்களையுடையவர்களாகவும், நழுவினமாலை ஆபரணம் இவற் றையுடையவர்களாகவுமாகி கேசங்களையோ, இடையிலுள்ள வெண் பட்டையோ, ஸ்தனோத்தரீயத்தையோ முன்போல அமைத்துக் கொள்ளச் சக்தியற்றவர்களாகவாயினர். (18) கிருஷ்ணனுடைய லீலையைக் கண்டு தேவஸ்திரீகள் காமத்தினால் பீடிக்கப்பட்டவர்க ளாய் மோஹத்தையடைந்தனர். சந்திரனும் தனது பரிவாரங்க ளான க்ரஹ நக்ஷத்திரங்களுடன் கூடினவனாய் (1)ஆய்சரியத்தை

---

* இதனால் தாளகதியினால் ஸந்தோஷத்தையடைந்த கேசங்கள் தலையையசைத்துப் பாதங்களில் பூமாரிபொழிந்தன போலிருந்தது என் பது கருத்து. (*) தனது சரீரத்திலுள்ள அழகைத் தனது ப்ரதிபிம்பத் தில் கண்டு ஸந்தோஷிக்கும் குழந்தைபோல ஸ்ரீகோபாலன் தனது கலா கௌசலத்தையும், லாவண்யம் முதலியவற்றையும் கோபிகைகளிடம் கொடுத்து அவற்றினால் தான் ஸந்தோஷித்தார் என்பது கருத்து.

(1) சந்திரன் ஆச்சரியத்தையடைந்து தனது கதியை மறந்ததும், அவனது பரிவாரங்களான கிரஹநக்ஷத்திரங்கள்யாவும் அசைவற்று நின்று விட்டன. ஆகவே வெகுநீண்டராத்திரிகளில் பகவான் அவர்களுடன் ரமித்தார் என்றேற்பட்டது.

दिता: शशाङ्कश्च सगणो विस्मितोऽभवत् ॥ १९ ॥ कृत्वा तावन्तमात्मानं यावतीर्गोपयोषित:। रेमे स भगवांस्ताभिरात्मारामोऽपि लीलया ॥ २० ॥ तासां रतिविहारेण श्रान्तानां वदनानि सः। प्रामृजत्करुणः प्रेम्णा शंतमेनाङ्ग पाणिना ॥ २१ ॥

गोप्य: स्फुरत्पुरटकुण्डलकुन्तलत्विड्गण्डश्रिया सुधितहाससनिरीक्षणेन । मानं दधत्य ऋषभस्य जगुः कृतानि पुण्यानि तत्कररुहस्पर्शप्रमोदा: ॥ २२ ॥ ताभिर्युत: श्रममपोहितुमङ्गसङ्गघृष्टस्रज: सकुचकुङ्कुमरञ्जिताया:। गन्धर्वपालिभिरनुद्रुत आविशद्वा: श्रान्तो गजीभिरिभराडिवभिन्नसेतु:॥२३॥

---

யடைந்தவனுகவானுன். (19) அந்தப் பகவான் ஆத்மாராமனுயினும் (பிறவற்றினுல் ஸந்தோஷத்தையடையவேண்டியவனுக இல்லாவிடினும்) எவ்வளவு கோபஸ்திரீகளுண்டோ அவ்வளவு ஸ்வரூபத்தைத் தான் எடுத்துக்கொண்டு அவர்களுடன் கூட லீலையினுல் ஸந்தோஷித்தார். (20) ஹே அங்க! கருணைநிறைந்த அந்தக்கிருஷ்ணன் ரதி விஹாரத்தினுல் களைத்த அந்தக் கோபஸ்திரீகளுடைய முகங்களை ப்ரேமையுடன் மிக்கச் சுகமயமான கையினுல் துடைத்தார்.

கோபிகைகள் அவருடையகைவிரல்களின் ஸ்பர்சத்தாலேற்பட்ட ஸந்தோஷத்தை யுடையவர்களாய்க்கொண்டு ப்ரகாசிக்கின்ற பொன்மயமான குண்டலங்களுடையவும், குந்தளங்களுடையவும், காந்தியினுலேற்பட்ட கன்னத்தின் சோபையினுலும், அமுதம் போன்றதும் மந்தஹாஸத்துடன் கூடினதுமான பார்வையினுலும் ஃப்ரேஷ்டனுன ஸ்ரீகோபாலனுக்கு மரியாதையைச் செய்கின்றவர்களாய்க்கொண்டு புண்ணியங்களான அவரது கர்மாக்களை (லீலைகளை) க் கானஞ்செய்தனர். (22) அந்தக் கிருஷ்ணன் பிளக்கப்பட்ட கரையையுடையதும், களைத்ததுமான கஜராஜன் பெண் யானைகளுடன் போல அந்தக் கோபஸ்திரீகளுடன் கூடினவராயும், ஸ்தனத்திலுள்ள குங்குமத்தினுல் சிவப்பாகச் செய்யப்பட்டதும், அங்கஸங்கத்தினுல் கசக்கப்பட்டதுமான மாலையில் ஸம்பந்திக்த வண்டுகளாகிற கந்தர்வபதிகளினுல் பின்தொடரப்பட்டவராயும், உலகமரியாதை, வேதமரியாதை இவற்றைக் கடந்தவராய்க்கொண்டும், ஃபரமத்தைப் போக்க வேண்டி யமுனையின் ஜலத்தில் பிரவேசித்தார். (23) ஹே அங்க!

सोऽम्भस्यलं युवतिभिः परिषिच्यमानः प्रेम्णेक्षितः प्रहसतीभिरितस्ततोऽङ्ग। वैमानिकैः कुसुमवर्षिभिरीड्यमानो रेमे स्वयं स्वरतिरत्र गजेन्द्रलीलः ॥ २४ ॥ ततश्च कृष्णोपवने जलस्थलप्रसूनगन्धानिलजुष्टदिक्तटे। चचार भृङ्गप्रमदागणावृतो यथा मदच्युद्‌द्विरदः करेणुभिः॥ २५ ॥ एवं शशाङ्कांशुविराजिता निशाः स सत्यकामोऽनुरताबलागणः। सिषेव आत्मन्यवरुद्धसौरतः सर्वाः शरत्काव्यकथा रसाश्रयाः॥२६॥ राजोवाच—

---

அந்தக் கிருஷ்ணன் பரிஹஸிக்கின்றவர்களான கோபயுவதிகளினால் நாலாபக்கத்திலும் நனைக்கப்பட்டவராயும், ப்ரேமையுடன் பார்க்கப்பட்டவராயும், புஷ்பங்களை வர்ஷிக்கின்ற விமானஸஞ்சாரிகளான தேவர்களினால் ஸ்துதிக்கப்படுகின்றவராயும், சிறந்த யானையினுடையதுபோன்ற லீலையையுடையவராயும் கொண்டு தான் ஆத்மாராமனாக இருந்தபோதிலுங்கூட இந்த யமுனையின் ஜலத்தில் (அவர்களுடன்) விளையாடினார். (24) பிறகு ஜலத்திலும் கரையிலுமுள்ள புஷ்பங்களின் நறுமணம் நிறைந்த காற்றினால் வீசப்பட்ட திக்குகளையும், கரையையுமுடையதான யமுனையினருகிலுள்ள பூந்தோட்டத்தில் பெண் யானைகளுடன் கூடினதும் மதப்பெருக்கையுடையதுமான ஆண்யானையானதுபோல வண்டுகள், ஸ்திரீகள் இவர்களின் கூட்டத்தினால் சூழப்பட்டவராய்க் கொண்டு ஸஞ்சரித்து வந்தார். (25) ஸத்யகாமனும், தன்னிடத்தில் ஆசையுள்ள கோபஸ்திரீகளின் கூட்டத்தை யுடையவருமான அந்தக் கிருஷ்ணன் தனது ஸ்ரீமூர்த்தியிலேயே தடுக்கப்பட்ட வீர்யத்தையுடையவராய்க் கொண்டு சந்திரனுடைய கிரணங்களினால் ப்ரகாசப்படுத்தப்பட்டனவும், *சரத்காலத்திலுள்ளனவும் காவ்யங்களில் சொல்லப்படுகின்றனவுமான ரஸங்களுக்கு ஆஸ்ரயபூதங்களான இரவுகளை இவ்விதம் ஸேவித்து வந்தார். (26) பரீக்ஷித் ராஜன் சொல்லுகிறார் — ஜகதீஸ்வரனை

---

* शरत्काव्यकथा रसाश्रयाः என்பது மூலம். இதை शरत्काव्यकथाः, रसाश्रयाः என இரண்டுபதங்களாகப் பிரித்துக்கொண்டு रसाश्रयाः=சிருங்காரரஸங்களுக்கு ஆஸ்ரயங்களான शरत्काव्यकथाः=சரத்காலத்தில் பிரஸித்தங்களும், காவ்யங்களில் சொல்லப்படுகின்றனவுமான கதைகளை (லீலைகளை) இரவுகள்முழுதும் செய்து வந்தார் என வேறுபொருளும் ஸ்ரீதரீயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

**संस्थापनाय धर्मस्य प्रशमायेतरस्य च। अवतीर्णो हि भगवानंशेन जगदीश्वरः॥ २७॥ स कथं धर्मसेतूनां वक्ता कर्ताऽभिरक्षिता। प्रतीपमाचरद्ब्रह्मन्परदाराभिमर्शनम्॥ २८॥ आप्तकामो यदुपतिः कृतवान्वै जुगुप्सितम्। किमभिप्राय एतं नः संशयं छिन्धि सुव्रत॥ २९॥**

**श्रीशुक उवाच—धर्मव्यतिक्रमो दृष्ट ईश्वराणां च साहसम्। तेजीयसां न दोषाय वह्नेः सर्वभुजो यथा॥ ३०॥ नैतत्समाचरेज्जातु मनसापि**

---

பகவான் தர்மஸம்ஸ்தாபனத்துக்குவேண்டியும், அதர்மத்தைச்சாந்தமாக்க (அழிக்க) வேண்டியும், அம்சத்துடன் (பலராமனுடன்) அவதரித்தவராகவன்றே இருக்கின்றார். (27) ஹே ப்ரம்ஹன்! தர்மஸேதுக்களை ஏற்படுத்தினவரும், உபதேசித்தவரும், ரக்ஷித்தவருமான அவர் பரதாராபிமர்சனமென்ற தவருன காரியத்தை ஏன் செய்தார். (28) ஹே ஸுவ்ரத! யதுபதியான கிருஷ்ணன் ஆப்தகாமனுக (பிறவற்றினுலடையவேண்டிய திருப்தியற்றவராக) இருப்பதுபற்றி அவர் விஷயத்தில் இது அதர்மமாகாது என்பீரேல்? என்ன எண்ணங்கொண்டு *வெறுக்கத்தக்க காரியத்தைச் செய்தார் என்ற இந்த எங்கள் ஸந்தேஹத்தைப் போக்கவேண்டும். (29)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றூர்—(*)ஈஸ்வரர்களான பெரியாரிடத்தில் தர்மத்தின் மாறுபாடும், ஸாஹஸமும் (சாஸ்திர விருத்தாசாரமும்) காணப்பட்டிருக்கிறது. எதையும் பொசுக்குகின்ற நெருப்புக்குப்போல தேஜஸ்விகளுக்கு அது தோஷத்தைத் தருவதாகவாக மாட்டாது.(1) (30) தபஸ் முதலிய சக்திவாய்ந்தவர்களால் செய்யப்

---

*ஆப்தகாமனுக இருப்பதுபற்றி அவருக்குத் தோஷமில்லாவிடினும் அவனுல் செய்யப்பட்ட இக்காரியம் தோஷமுள்ளதேயாகையால் இதைச் செய்த அவரின் கருத்துத்தான் என்னே? என்பது கருத்து. (*) பரமேச்வரனிடத்தில் தோஷம் ஸம்பவிக்க இடமேது? என்பதைக்காட்டிப் பொதுவாக மஹான்களான ஜீவர்களின் விருத்தாந்தத்தைச் சொல்லுகிறூர். (1) அதாவது:–ப்ரம்ஹதேவனுக்குத் தனதுபுத்திரியான ஸரஸ்வதியினிடம் பற்றும், இந்திரனுக்கு அஹல்யாகமனமும், சந்திரனுக்கு குருபார்யையான தாரையினிடம் பற்றும், விச்வாமித்திரருக்கு சாப்பிடத்தகாத மாம்ஸபக்ஷணப்ரவிருத்தியும் காணப்படுகிறது. ஆயினும் தவம்முதலிய ப்ரபாவத்தினுலுண்டான தேஜஸ்ஸினுல் சாஸ்திரவிருத்தாசார ஜன்ய

ह्यनीश्वरः। विनश्यत्याचरन्मौढ्याद्यथाऽरुद्रोऽब्धिजं विषम् ॥ ३१ ॥ ईश्वराणां वचः सत्यं तथैवाचरितं क्वचित्। तेषां यत्स्ववचो युक्तं बुद्धिमांस्तत्समाचरेत् ॥ ३२ ॥ कुशलाचरितेनैषामिह स्वार्थो न विद्यते। विपर्ययेण वाऽनर्थो निरहङ्कारिणां प्रभो ॥ ३३ ॥ किमुताखिलसत्त्वानां तिर्यङ्मर्त्यदि-

---

படுகின்ற இந்தக் காரியத்தை அவ்வித சக்தியற்றவன் மனத்தாலும் செய்தல் தகாது. மௌட்யத்தினல் செய்யத்தொடங்குகின்றவன் ஸமுத்திரத்தினின்றுமுண்டான காளகூட விஷத்தைக்குடிக்கும் ஸ்ரீமஹாதேவனல்லாதவொருவன் போல நாசத்தையடைந்துவிடுவான். (31) ஆகவே ஈச்வரர்களின் உபதேசமே ஸத்தியமாகும். (பின்பற்றக்கூடியதாகும்.) அதுபோல அவர்களின் அனுஷ்டானமானது ப்ரத்யக்ஷ சாஸ்திரமில்லாதவிடத்தில் நாம் பின்பற்றக்கூடியதாகவாகும். அவர்களின் சொந்தவுபதேசத்துக்கொத்த அனுஷ்டானம் எதுவோ அதையே புத்திமானுகவுள்ளவன் பின்பற்றவேண்டும். (32) ஹே ப்ரபோ! தேஹாதிகளில் அஹம்புத்தியற்றவர்களான அவர்களுக்குப் புண்ணிய கர்மானுஷ்டானத்தினுலேற்படவேண்டிய சொந்தப்பிரயோஜனமோ பாபகர்மானுஷ்டானத்தினல் அனர்த்தமோ கிடையாதன்றே. (33) இவ்விதமிருக்க நியம்யர்களான பசு மனிதர் தேவர் ஆகிய எல்லா ப்ராணிகளுக்கும் நியந்தாவான *ஈச்

---

தோஷமானது பொசுக்கப் பட்டுவிட்டபடியால் அது அவர்க்கு தோஷத்தைத் தருவதில்லை. ஆகவே உண்மையில் அதர்மமானகாரியமானது முற்கூறியவர்களிடத்தில் தனதுபலனுன துக்கத்தைத்தரக்கூடிய நிலையில்லாதபொழுது ஸர்வேச்வரனுன ஸ்ரீகோபாலன்விஷயத்தில் சொல்லவேண்டுவது என்ன இருக்கிறது என்பது கருத்து. ஆகவே உலகிலுள்ள சேதனர்களை, மனுஷ்யர், தேவர், தேவதாஸார்வபௌமனுன ஸ்ரீமன் நாராயணன் என மூன்றுவிதமாகப் பிரித்துகொண்டால் தேவர்களுக்குள் இந்திரன் முதலியோராலும், மனிதர்களுக்குள் விச்வாமித்திரன் முதலியோராலும் செய்யப்படும் அதர்மம் அவர்களுக்குத் தோஷத்தைத்தராதபொழுது தேவதாஸார்வபௌமன் விஷயத்தில் சொல்ல இடமேது என்பது கருத்து. * எந்த ஈச்வரப்ரஸாதத்தினுல் தேஹாத்யபிமானமற்றவர்க்குப் புண்ணியபாப கர்மஸம்பந்தமேற்படுவதில்லையோ அந்த ஈச்வரனுக்கு அவற்றின் ஸம்பந்தமேற்பட இடமேது? என்பது கருத்து.

वौकसाम् । ईशितुश्चेशितव्यानां कुशलाकुशलान्वयः ॥ ३४ ॥ यत्पादपङ्कजपरागनिषेवतृप्ता योगप्रभावविधुताखिलकर्मबन्धाः। स्वैरं चरन्ति मुनयोऽपि न नह्यमानास्तस्येच्छयात्तवपुषः कुत एव बन्धः ॥ ३५ ॥ गोपीनां तत्पतीनां च सर्वेषामेव देहिनाम् । योऽन्तश्चरति सोऽध्यक्षः क्रीडनेनेह देहभाक् ॥ ३६ ॥ अनुग्रहाय भूतानां मानुषं देहमास्थितः । भजते तादृशीः क्रीडा याः श्रुत्वा तत्परो भवेत् ॥ ३७ ॥ नासूयन्खलु कृष्णाय मोहितास्त-

---

வரனுக்கு நன்மை தீமைகளின் ஸம்பந்தமேற்பட இடமேது? (34) எவருடைய சரணாரவிந்த தூளியை ஸேவித்தவர்களும், ஆனந்தபற்றியே திருப்தியையடைந்தவர்களும், யோகப்ரபாவத்தினுல் போக்கப்பட்ட எல்லாக் கர்மபந்தங்களையுமுடையவர்களுமான முனிகள் பந்தத்தையடையாதவர்களாய்க்கொண்டு தமதிஷ்டப்படி ஸஞ்சரிக்கின்றனரோ, தனது இச்சையையொட்டித் தானே எடுத்துக்கொண்ட சரீரத்தையுடையவரான அந்தக்கிருஷ்ணனுக்கு கர்மமூலம் பந்தமானது ஏற்பட இடமேது? (35) (1) மேலும் கோபிகைகளுக்கும் அவர்களின் பதிகளுக்கும், மற்றுமுள்ள எல்லாஜீவர்களுக்கும் எவர் அந்தராத்மாவோ அவரே க்ரீடைக்கு வேண்டி இங்கு தேஹத்தையடைந்தவராகவன்றோ இருக்கிறார். (36) (2) எவருடைய எந்த லீலைகளை மனத்தாலெண்ணி அவரிடத்திலீடுபட்டவனுகவாவானோ அதற்குவேண்டி ப்ராணிகளை அனுக்கிரஹிக்கவெண்ணங்கொண்டு மானுஷமான தேஹத்தையாஸ்ரயித்த ஸ்ரீகோபாலன் அத்தகைய லீலைகளைச் செய்கிறார்.(3) (37) கோகுலத்தில் வசிக்கின்ற கோபா

---

(1) இதுவரை கோபிகைகளைப் பரதாரமாகவைத்துப் பதில் சொல்லப்பட்டது. இந்தச் சுலோகத்தினுல் ஸ்ரீகோபாலன் கோபிகைகளுக்கோ, அவர்களின் பதிகளுக்கோ அந்தர்யாமியாகவாவதால் ஸர்வாந்தர்யாமி ஸம்பந்தம் எவ்விதம் தோஷாவஹமன்றோ அவ்விதமே அவரே வெளிவந்தபொழுது நேர்ந்த தேஹஸம்பந்தமும் தோஷத்தைத் தருவதாகவாகாது என உபதேசிக்கப்படுகிறது. (2) பகவான் இம்மாதிரியான லீலைகளைச்செய்ததின் கருத்து இன்னதென்பதை இதனுலுபதேசிக்கிறார். (3) சிருங்கார ரஸத்திலீடுபட்ட சித்தமுள்ளவர்களும் ஆனந்தபற்றியே பஹிர்முகமான ப்ரவிருத்தியுள்ளவர்களுமானவர்களையும் கூட தன்னிடமீடுபடச்செய்யவேண்டியே இதைச் செய்தார் என்று கருத்து.

स्य मायया। मन्यमानाः स्वपार्श्वस्थान्स्वान्स्वान्दारान्व्रजौकसः॥ ३८॥ ब्रह्मरात्र उपावृत्ते वासुदेवानुमोदिताः। अनिच्छन्त्यो ययुर्गोप्यः स्वगृहान्भगवत्प्रियाः॥ ३९॥ विक्रीडितं व्रजवधूभिरिदं च विष्णोः श्रद्धान्वितोऽनुश्रृणुयादथ वर्णयेद्यः। भक्तिं परां भगवति प्रतिलभ्य कामं हृद्रोगमाश्वपहिनोत्यचिरेण धीरः॥ ४०॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्धे रासक्रीडावर्णनं नाम त्रयस्त्रिंशोऽध्यायः॥ ३३॥

---

லர்கள் அவருடைய மாயையினுல் மோஹத்தையடைந்தவர்களாய்க் கொண்டு தத்தமது பத்னிகளைத் தத்தமது பக்கத்திலிருப்பவர்களாகவே எண்ணிக்கொண்டனரே அன்றி ஸ்ரீகிருஷ்ணனிடம் தோஷங் கூறினரில்லை. (38) ப்ரம்ஹ ராத்திரமானது (ப்ராம்ஹ முஹூர்த்தமானது) வந்ததும் பகவத்ப்ரியர்களான கோபிகைகள் வாஸுதேவனுல் அனுப்பப்பட்டவர்களாய் செல்லமனமில்லாது தமது வீட்டையடைந்தனர். (39) கோபஸ்திரீகளுடன் செய்த ஸ்ரீகோபாலனுடைய இந்தலீலையை எவன் ப்ஸ்ரத்தையுடன் கூடினவனுய்க் கேட்பானே, எவன் அவ்விதம் உபதேசிப்பானே அவன் பகவானிடத்தில் மேலான பக்தியையடைந்து தீரனுகி மனோரோகமான காமத்தை வெகு சீக்கிரத்தில் போக்கினவனுகவாகிவிடுகிருன். (40) (எ—று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண தசமஸ்கந்த பூர்வார்த்தத்தில் ராஸக்ரீடா வர்ணனமென்ற முப்பத்துமூன்ருவது அத்தியாயம் முற்றிற்று.

## நாராயணீயம்.

केशपाशधृतपिञ्छिकावितति सञ्चलन्मकरकुण्डलं
हारजालवनमालिकाललितमङ्गरागघनसौरभम्।
पीतचेलधृतकाञ्चिकाञ्चितमुदञ्चदंशुमणिनूपुरं
रासकेलिपरिभूषितं तव हि रूपमीश कलयामहे॥ ३२५॥

(ப—ரை) ईश !=ஹே கிருஷ்ணா! केशपाशधृतपिञ्छिकावितति= மயிர்க்கூந்தலில் தரிக்கப்பட்ட மயில்தோகை ரூபமான அலங்காரத்

தையுடையதும், **सञ्चलन्मकरकुण्डलम्**=(கன்னப்பிரதேசத்தில்) அசைகின்ற மகராகுண்டலத்தையுடையதும், **हारजालवनमालिकाललितम्**=முத்துமாலைகளின் கூட்டத்தினுலும், வனமாலையினுலும் அழகு பொருந்தியதும், **अङ्गरागघनसौरभम्**=மேல் பூச்சுகளினுலேற்பட்ட அதிகமான நறுமணமுள்ளதும், **पीतचेलधृतकाञ्चिकाञ्चितम्**=பீதாம்பரத்தில் தரிக்கப்பட்ட மணிமயமான மேகலையினுல்(பெல்ட்டினுல்) அழகுபடுத்தப்பட்டதும், **उदञ्चदंशुमणिनूपुरम्**=உயரக்கிளம்புகின்ற காந்திகளையுடைய மணிமயமான கால் சலங்கைகளையுடையதும், **रासकेलिपरिभूषितम्**=ராஸக்ரீடைக்குவேண்டி செய்யப்பட்ட அலங்காரத்தையுடையதுமான **तव**=உம்முடைய **रूपम्**=ஸ்வரூபத்தை **कलयामहे**=இடைவிடாது உபாஸிக்கின்ரூேம். (325) (எ-று)

குறிப்பு—ஸர்வேஸ்வரனுன ஸ்ரீகோபாலன் செய்த லீலைகளுக்குள் சிரோமணியாய் விளங்கும் இந்த ராஸலீலையில் ஸௌலப்யம் என்ற தனது உத்தமகுணத்தை வெளிக்காட்டியிருப்பதால் ஸர்வ சுலபனுன ஸ்ரீகோபாலனை இந்த லீலா விசிஷ்டனுகத் தியானிப்பவர்க்குப் பரிபூர்ண பகவத்ப்ரஸாதமுண்டாவது நிஸ்சயமென்பதைக் கவி இதனுல் விளக்கினுர். (எ-று)

**तावदेव कृतमण्डने कलितकञ्चुलीककुचमण्डले**
**गण्डलोलमणिकुण्डले युवतिमण्डलेऽथ परिमण्डले।**
**अन्तरा सकलसुन्दरीयुगळमिन्दिरारमण सञ्चरन्**
**मञ्जुलां तदनु रासकेलिमयि कञ्जनाभ समुपादधाः ॥३२६॥**

(ப-ரை) **कञ्जनाभ !**=தாமரஸ புஷ்பத்தை உந்தியிலுடையவரான **अयि इन्दिरारमण!**=ஹே லக்ஷ்மீகாந்த! **अथ**=பிறகு **तावदेव**=நீர் ராஸக்ரீடைக்குவேண்டிய வேஷத்தை எவ்வளவுக்குள் தரித்தீரோ அவ்வளவுக்குள்ளேயே **कृतमण्डने** = செய்துகொள்ளப்பட்ட அலங்காரத்தையுடையதும், **कलितकञ्चुलीककुचमण्डले** = போட்டுக்கொள்ளப்பட்ட ரவிக்கையையுடைய ஸ்தனமண்டலத்தையுடையதும், **गण्डलोलमणिकुण्डले**=கன்னத்தில் அசைகின்ற மணிமயமான குண்டலத்தையுடையதும், **परिमण्डले**=ஸமமான தரையில் சுற்றிலும் வட்டமாக இருக்கின்றதுமான **युवतिमण्डले**=கோபிகைகளின் கூட்டத்தில் **सकलसुन्दरीयुगळं अन्तरा**=இரட்டை இரட்டையான எல்லா ஸ்திரீகளுடையவும் நடுவில் **सञ्चरन्**=ஸஞ்சரிக்கின்றவராய்க்

கொண்டு तदनु=பிறகு मञ्जुलाम्=அழகிய रासकेलिम्=ராஸக்ரீடையை समुपादधाः=தொடங்கினீர். (326) (ஏ-று)

वासुदेव तव भासमानमिह रासकेलिरससौरभं
दूरतोऽपि खलु नारदागदितमाकलय्य कुतुकाकुला।
वेषभूषणविलासपेशलविलासिनीशतसमावृता
नाकतो युगपदागता वियति वेगतोऽथ सुरमण्डली ॥ ३२७ ॥

(ப-ரை) वासुदेव!=ஹே வாஸுதேவ! इह=இந்தக் கோகுலத்தில் भासमानम्=பிரகாசிக்கின்ற तव=உம்முடைய रासकेलिरससौरभम्= ராஸக்ரீடையாகிற ரஸத்தின் மணத்தை दूरतोऽपिऽखलु=வெகு தூரத்திலிருந்தபோதிலுங்கூட नारदागदितम्=நாரதரால் சொல்லப்பட்டதை आकलय्य=கேட்டு कुतुकाकुला=பார்ப்பதிலாவல் நிறைந்ததும், वेषभूषणविलासपेशलविलासिनीशतसमावृता=வேஷம், அலங்காரம், விளையாட்டு இவற்றினல் அழகுவாய்ந்த நூற்றுக்கணக்கான ஸ்திரீகளினல் சூழப்பட்டதுமான सुरमण्डली=தேவக்கூட்டமானது अथ= பிறகு नाकतः=ஸ்வர்க்கத்தினின்றும் वियति=ஆகாசத்தில் युगपत्= ஒரே ஸமயத்தில் आगता=வந்து கூடிற்று. (327) (ஏ-று)

वेणुनादकृततानदानकलगानरागगतियोजना-
लोभनीयमृदुपादपातकृततालमेलनमनोहरम्।
पाणिसंकणितकङ्कणं च मुहुरंसलम्बितकराम्बुजं
श्रोणिबिम्बचलदम्बरं भजत रासकेळिरसडम्बरम् ॥ ३२८ ॥

(ப-ரை) वेणुनादकृततानदानकलगानरागगतियोजनालोभनीयमृदु-पादपातकृततालमेलनमनोहरम्-वेणुनाद=வேணுநாதத்தினல் कृत=செய்யப்பட்ட तानदान=கானத்துக்கு மூலகாரணமான ஸ்வரத்தைக் காட்டுதலால், कल=கண்டத்தினின்று முண்டானதுபற்றி மிக்க மதுரமான गान=ராக கதியின் योजना=யோஜனையினலும், ராக விசேஷத்தின் வழியின் சேர்க்கையினலும் लोभनीय=ஆசைப்படத்தகுந்த मृदुपादपात=மெதுவான அடிவைப்பினல் कृत=செய்யப்பட்ட ताल-मेलन=தாளத்தின் சேர்க்கையினல் मनोहरम्=மனத்தைக் கவருகின்றதும், पाणिसंकणितकङ्कणम्=கைகளில் நன்கு ஒலிக்கின்ற வளையல்களையுடையதும், मुहुः=அடிக்கடி, अंसलम्बितकराम्बुजम्=தோளில் தொங்கவிடப்பட்ட கராம்புஜத்தையுடையதும், श्रोणिबिम्बचलदम्ब-

रम्=இடைப்பிரதேசத்தினின்றும் நழுவின வஸ்திரத்தையுடையதுமான रासकेलिरसडम्बरम्=ராஸக்ரீடா ரஸத்தின் பெருக்கை भजत= பஜியுங்கள். (328) (எ–று)

श्रद्धया विरचितानुगानकृततारतारमधुरस्वरे
नर्तनेऽथ ललिताङ्गहारलुलिताङ्गहारमणिभूषणे ।
सम्मदेन कृतपुष्पवर्षमलमुन्मिषद्दिविषदां कुलं
चिन्मये त्वयि निलीयमानमिव सम्मुमोह सवधूकुलम् ॥३२९॥

(ப–ரை) अथ=பிறகு श्रद्धया=ச்ரத்தையுடன் கூட विरचितानुगानकृततारतारमधुरस्वरे = செய்யப்பட்ட பின்பாட்டினுலேற்பட்ட மிக்கமிக்க உறத்ததும் இனிதுமான குரலையுடையதும், ललिताङ्गहारलुलिताङ्गहारमणिभूषणे=அழகிய அங்க விக்ஷேபங்களினுல் தனது ஸ்தானத்தினின்றும் நழுவின அங்கங்களிலுள்ள முக்தாஹாரம் மணிமயமான பூஷணம் இவற்றையுடையதுமான नर्तने=ராஸ நர்த்தன காலத்தில் सम्मदेन=அதிகம் சந்தோஷத்தினுல் कृतपुष्पवर्षम्= செய்யப்பட்ட பூமாரியையுடையதும், अलम्=மிகவும், उन्मिषत्= பார்க்கவாவல்கொண்டதும், सवधूकुलम्=ஸ்திரீ ஸமூஹத்துடன் கூடினதுமான दिविषदाम्=தேவர்களின் कुलम्=கூட்டமானது, चिन्मये= சித்ரூபியான त्वयि=உம்மிடத்தில் निलीयमानमिव=லயத்தையடைந்ததுபோல सम्मुमोह=மோஹத்தை யடைந்தது. (32) (எ–று)

स्विन्नसन्नतनुवल्लरी तदनु कापि नाम पशुपाङ्गना
कान्तमंसमवलम्बते स्म तव तान्तिभारमुकुलेक्षणा ।
काचिदाचलितकुन्तला नवपटीरसारनवसौरभं
वञ्चनेन तव सञ्चुचुम्ब भुजमञ्चितोरुपुलकाङ्कुरम् ॥ ३३० ॥

(ப–ரை) तदनु=பிறகு कापि=ஒரு पशुपाङ्गनानाम=கோபஸ்திரீயோவெனில் स्विन्नसन्नतनुवल्लरी=வியர்த்தும் களைத்துமிருக்கின்ற கொடிபோன்ற தேஹத்தையுடையவளாய்க் கொண்டும், तान्तिभारमुकुलेक्षणा=அதிகம் களைப்பினுல் மூடின கண்களையுடையவளாய்க் கொண்டும் कान्तम्=அழகிய तव=உம்முடைய अंसम्=தோளை अवलम्बते स्म=பிடித்துக் கொண்டாள். काचित्=ஒருத்தியோ आचलितकुन्तला=அவிழ்ந்த கூந்தலையுடையவளாய்க் கொண்டு नवपटीरसारनवसौरभम्=புதிதான சந்தனக்குழம்பினதுபோன்ற புதுமாதிரியான

மணத்தையுடையதும் अश्रितोरुपुलकाङ्कुरम् = காணப்பட்ட அதிகமான மயிர்க்குச்சலையுடையதுமான तव=உம்முடைய भुजम्=தோளை चुम्बनेन=வியாஜத்தினால் सञ्चुचुम्ब=நன்கு முத்தமிட்டுக்கொண்டாள்.

कापि गण्डभुवि सन्निधाय निजगण्डमाकुलितकुण्डलं
पुण्यपूरनिधिरन्ववाप तव पूगचर्वितरसायनम् ।
इन्दिराविहृतिमन्दिरं भुवनसुन्दरं हि नटनान्तरे
त्वामवाप्य दधुरङ्गनाः किमु न सम्मदोन्मददशान्तरम् ॥३३१॥

(ப-ரை) पुण्यपूरनिधिः=புண்ணியக் கூட்டத்துக்கிருப்பிடமான कापि=ஒரு கோபஸ்திரீ आकुलितकुण्डलम्=அசைகின்ற குண்டலத்தையுடையதான निजगण्डम्=தன்னுடைய கன்னத்தை तव=உம்முடைய गण्डभुवि=கன்னப்ரதேசத்தில் सन्निधाय=நன்குசேர்த்துவைத்து पूगचर्वितरसायनम्=அமிருதமயமான தாம்பூலரஸத்தை अन्ववाप=பெற்றுக்கொண்டாள். इन्दिराविहृतिमन्दिरम्=லக்ஷ்மியின் விளையாட்டுக்குரிய வீடானவரும், भुवनसुन्दरम्=உலகுக்குள் மிக்க அழகுவாய்ந்தவருமான त्वाम्=உம்மை, नटनान्तरे=ந்ர்த்தனத்தினிடையில் अवाप्य=அடைந்து अङ्गनाः=கோபஸ்திரீகள் किमु=எந்த सम्मदोन्मदरसान्तरम्=ஆனந்தம், கர்வம் இவற்றின் ரஸாந்தரத்தைத்தான் न हि दधुः=அடைந்தனரில்லை. (பலவித ரஸ விசேஷத்தையடைந்தனர் என்பது கருத்து.) (331) (எ-று)

गानमीश विरतं क्रमेण किल वाद्यमेलनमुपारतं
ब्रह्मसम्मदरसाकुलाः सदसि केवलं ननृतुरङ्गनाः ।
नाविदन्नपिच नीविकां किमपि कुन्तलीमपि च कञ्चुलीं
ज्योतिषामपि कदम्बकं दिवि विलम्बितं किमपरं ब्रुवे ॥३३२॥

(ப-ரை) अङ्गनाः=கோபஸ்திரீகள் ब्रह्मसम्मदरसाकुलाःकेवलम्=ப்ரம்ஹானந்த ரஸத்திலீடுபட்டவர்களாய்க்கொண்டுமட்டும் सदसि=ஸபையில் ननृतुः=ந்ர்த்தனஞ்செய்தனர். ईश !=ஹேகிருஷ்ண ! गानम्=பாட்டு विरतम् = ஓயவாரம்பித்தது. वाद्यमेलनङ्किल=வாத்தியங்களை வாசித்தலோ क्रमेण=முறையே उपारतम्=ஓய்வையடைந்தது. अपि च=மேலும் नीविकाम्=அக்குமுடிச்சையோ, कुन्तलीमपि=அவிழ்ந்த மயிர்முடிச்சையோ, कञ्चुलीम्=ரவிக்கையையோ किमपि=ஒன்றையுமோ नाविदन्=கவனித்தனரில்லை. ज्योतिषाम्=கிரஹ நக்ஷத்திராதி

களுடைய कदम्बकमपि=கூட்டமுங்கூட दिवि=ஆகாசத்தில் विलम्बितम्=அசைவற்றுகின்றது. ஆகவே किमपरम्=வேறு எதை ब्रुवे=நான் சொல்லுவேன். (332) (எ-று)

मोदसीम्नि भुवनं विलाप्य विहृतिं समाप्य च ततो विभो
केलिसम्मृदितनिर्मलाङ्गनवघर्मलेशसुभगात्मनाम्।
मन्मथासहनचेतसां पशुपयोषितां सुकृतचोदित-
स्तावदाकलितमूर्तिरादधिथ मारवीरपरमोत्सवम्॥ ३३३॥

(ப-ரை) विभो!=ஹே விபோ! भुवनम्=உலகை मोदसीम्नि=ப்ரஹ்லானந்தத்தில் विलाप्य=முழுக்கியும், ततः=பிறகு विहृतिम्=விளையாட்டை समाप्य च=முடித்துக்கொண்டும், केलिसम्मृदितनिर्मलाङ्गनवघर्मलेशसुभगात्मनाम्=விளையாட்டினால் நன்கு களைக்கும்படி செய்யப்பட்டதும் நிர்மலமுமான அங்கத்திலுண்டான புதிய வியர்வைத்துளியால் அழகுவாய்ந்த சரீரத்தையுடையவர்களும் मन्मथासहनचेतसाम्=காமவேகத்தினால் காலதாமதத்தைப்பொறுக்காத சித்தமுள்ளவர்களுமான पशुपयोषिताम्=கோபஸ்திரீகளுடைய सुकृतचोदितः=புண்ணிய பரிபாகத்தாலேவப்பட்டவரான நீர் तावदाकलितमूर्तिः=எடுத்துக்கொள்ளப்பட்ட அத்தனை ஸ்ரீமூர்த்தியையுடையவராய் मारवीरपरमोत्सवम्=வீரனான மன்மதனுடைய உத்ஸவத்தை आदधिथ=செய்தீர். (333) (எ-று)

केलिभेदपरिलोलिताभिरतिलालिताभिरबलालिभिः
स्वैरमीश ननु सूरजापयसि चारु नाम विहृतिं व्यधाः।
काननेऽपि च विसारिशीतलकिशोरमारुतमनोहरे
सूनसौरभमये विलेसिथ विलासिनीशतमनोहरम्॥ ३३४॥

(ப-ரை) ईश!=ஹே ஈசா! केलिभेदपरिलोलिताभिः=கேளி பேதத்தினால் (ஆலிங்கனம், சும்பனம், ப்ரஹரணம், நகக்ஷதம், தந்தக்ஷதம், முதலியவற்றினால்) சலங்கினவர்களாகச் செய்யப்பட்டவர்களும், अतिलालिताभिः=அதிகம் ஸந்தோஷப்படுத்தப்பட்டவர்களுமான अबलालिभिः=ஸ்திரீக் கூட்டங்களுடன்கூட स्वैरम्=மனம்போனபடிக்கெல்லாம் सूरजापयसि=யமுனையின் ஜலத்தில் चारु=அழகாக இருக்கும்படி विहृतिम्=விளையாட்டை व्यधाः नाम=செய்தீரன்றோ. विसारिशीतलकिशोरमारुतमनोहरे=வீசுகின்றதும், குளிர்ந்தது

மான இளங்காற்றினால் மனத்தைக்கவருகின்றதும், **सूनसौरभगर्भे=** புஷ்பங்களின் மணங்கள் நிறைந்ததுமான **काननेऽपि च=**காட்டிலுங் கூட **विलासिनीशतमनोहरम्=**நூற்றுக்கணக்கான ஸ்திரீகளின் மனத்தைக் கவரத்தக்கபடி **विलेसिथ=**விளங்கினீர். (334) (எ-று)

**कामिनीरितिहि यामिनीषु खलु कामनीयकनिधे भवान्**
**पूर्णसम्मदरसार्णवं कमपि योगिगम्यमनुभावयन्।**
**ब्रह्मशङ्करमुखानपीह पशुपाङ्गनासु बहुमानयन्**
**भक्तलोकगमनीयरूप कमनीय कृष्ण परिपाहि माम्॥ ३३५॥**

. (ப-ரை) **कामनीयकनिधे!=**அழகுக்கிருப்பிடமானவரே! **भक्तलोकगमनीयरूप!=**பக்தஜனங்களால் அடையத்தகுந்த ரூபமுள்ளவரே! **कमनीय!=**இயற்கையிலழகுவாய்ந்தவரே! **कृष्ण!=**ஹேகிருஷ்ண! **कामिनीः=**கோபஸ்திரீகளை **इति=**இவ்விதம் **यामिनीषु=**இரவுகளில் **योगिगम्यम् =**யோகிகளாலடையத்தகுந்ததும் **कमपि=**சொல்லவியலாததுமான **पूर्णसम्मदरसार्णवम्=**பரிபூர்ணானந்த ரஸார்ணவத்தை **अनुभावयन्=**அனுபவிக்கச் செய்துகொண்டும் **ब्रह्मशङ्करमुखानपि=**ப்ரம்ஹதேவன், மஹாதேவன் முதலியோரையுங்கூட **इह=**இங்குள்ள **पशुपाङ्गनासु=**கோபஸ்திரீகள் விஷயத்தில் **बहुमानयन्=**வெகுமானமுள்ளவர்களாகச் செய்துகொண்டும் இருக்கும் **भवान्=**நீர் **माम्=**என்னை **परिपाहि=**காப்பீராக. (335) (எ-று)

இவ்விதம் ராஸக்ரீடையில் அழகிய ரூபத்தைத் தரித்தவரான
கோபாலனுடன் கூட கோபிகைகளின் நர்த்தனம் கீதம் முதலிய
விலாஸ வர்ணனம் என்ற அறுபத்தோன்பதாவது
தசகம் முற்றிற்று.

---

## முப்பத்துநான்காவது அத்தியாயம்.

(அ-கை) **चतुस्त्रिंशेऽहिनाग्रस्तं नन्दं हरिरमूमुचत्।**
**विद्याध्रश्चाङ्गिरश्शापाच्छङ्खचूडं तथावधीत्॥ १॥**
**रासापदेशतः कामं किङ्करीकृत्य कामतः।**
**अनुगृह्णन् वशं निन्ये तथाविद्याधराधिपम्॥ २॥**

(க-ரை) ஹரியானவர் மலைப்பாம்பினால் விழுங்கப்பட்ட நந்தகோபரை விடுவித்தார் என்றும், அவ்விதமே வித்யாதரனை அங்கிரஸ்

## अथ चतुस्त्रिंशोऽध्यायः ॥

श्रीशुक उवाच—एकदा देवयात्रायां गोपाला जातकौतुकाः । अनोभिरनडुद्युक्तैः प्रययुस्तेऽम्बिकावनम् ॥ १ ॥ तत्र स्नात्वा सरस्वत्यां देवं पशुपतिं विभुम् । आनर्चुरर्हणैर्भक्त्या देवीं च नृपतेऽम्बिकाम् ॥ २ ॥ गावो हिरण्यं वासांसि मधु मध्वन्नमाहृताः । ब्राह्मणेभ्यो ददुः सर्वे देवो नः प्रीयतामिति ॥ ३ ॥ ऊषुः सरस्वतीतीरे जलं प्राश्य धृतव्रताः । रजनीं तां महाभागा नन्दसनन्दकादयः ॥ ४ ॥ कश्चिन्महानहिस्तस्मिन्विपिनेऽतिबुभुक्षितः । यदृच्छयागतो नन्दं शयानमुरगोऽग्रसीत् ॥ ५ ॥ स चुक्रोशाहिना

---

என்ற மஹருஷியின் சாபத்தினின்றும் விடுவித்தாரென்றும், அவ்விதமே சங்கசூடன் என்ற வித்யாதரனைக் கொன்றாரென்றும், ராஸலீலை என்ற வியாஜமாக காமனை அடிமையாக்கி தனதிஷ்டப்படி வித்யாதராதிபனை அனுக்கிஹித்துத் தன் வசப்படுத்தினர் என்றும் இந்த முப்பத்துநான்காவது அத்தியாயத்திலுபதேசிக்கப்படுகிறது. (1–2) (எ–று)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—ஒரு ஸமயம் மஹாதேவனுடைய உத்ஸவத்தில் ஆசைகொண்ட அந்த கோபாலர்கள் காளைபூட்டின வண்டிகளிலேறிக்கொண்டு அம்பிகாவனத்தை அடைந்தனர். (1) ஹே ராஜன்! அங்கு ஸரஸ்வதிநதியில் ஸ்னானஞ்செய்து விபுவும் பசுபதியுமான மஹாதேவனையும், அம்பிகையான தேவியையும் பூஜாத்திரவியங்களினால் பக்தியுடன் பூஜித்தனர். (2) யாவரும் ஆதரவுள்ளவர்களாய் பசுக்களையும், ஸுவர்ணத்தையும், வஸ்திரங்களையும், மதுரமான தேன்கலந்த அன்னத்தையும் மஹாதேவன் எங்கள் விஷயத்தில் ப்ரீதியை அடையட்டுப் எனச்சொல்லிக்கொண்டு ப்ராம்ஹணர்களுக்குக் கொடுத்தனர். (3) நியமத்தைப் பின்பற்றினவர்களும் மஹாபாக்கியசாலிகளுமான நந்தர் ஸனந்தர் முதலியோர் ஜலத்தைக்குடித்து ஸரஸ்வதிநதிக்கரையில் அவ்விரவு முழுவதும் வாஸஞ்செய்தனர். (4) மிக்கப்பசியுள்ளதும் பெரிதுமான அந்தக்காட்டிலுள்ள ஒரு மலைப்பாம்பானது எதிருச்சையாக மாரினால் ஊர்ந்து வந்து படுத்திருக்கும் நந்தகோபரை விழுங்கவாரம்பித்தது. (5) பாம்பினால் விழுங்கப்பட்ட அந்த நந்தகோபர் ஹேகிருஷ்ண! கிருஷ்ண!

ग्रस्तः कृष्ण कृष्ण महानयम्। सर्पो मां ग्रसते तात प्रपन्नं परिमोचय ॥६॥ तस्य चाक्रन्दितं श्रुत्वा गोपालाः सहसोत्थिताः। ग्रस्तं च दृष्ट्वा विभ्रान्ताः सर्पं विव्यधुरुल्मुकैः ॥ ७ ॥ अलातैर्दह्यमानोऽपि नामुञ्चत्तमुरङ्गमः। तमस्पृशत्पदाऽभ्येत्य भगवान्सात्वतां पतिः ॥ ८ ॥ स वै भगवतः श्रीमत्पादस्पर्शहताशुभः। भेजे सर्पवपुर्हित्वा रूपं विद्याधरार्चितम् ॥ ९ ॥ तमपृच्छद्धृषीकेशः प्रणतं समुपस्थितम्। दीप्यमानेन वपुषा पुरुषं हेममालिनम् ॥ १० ॥ को भवान्परया लक्ष्म्या रोचतेऽद्भुतदर्शनः। कथं जुगुप्सितामेतां गतिं वा प्रापितोऽवशः ॥ ११ ॥

सर्प उवाच—अहं विद्याधरः कश्चित्सुदर्शन इति श्रुतः। श्रिया स्वरूपसंपत्त्या विमानेनाचरं दिशः॥ १२ ॥ ऋषीन्विरूपानङ्गिरसः प्राहसं

---

ஹேநாத! இந்தப் பெரிய பாம்பு என்னை விழுங்குகிறது. ப்ரபன்ன னான என்னை விடுவிப்பாயாக எனக்கதறினர். (6) அவரது அழுகுர லைக்கேட்டுக் கோபாலர்கள் விரைவாக எழுந்து நந்தகோபர் பாம்பி னால் விழுங்கப்பட்டதைக் கண்டு பரபரத்தவர்களாய் கொள்ளிக்கட் டைகளினால் பாம்பைச்சுட்டனர். (7) பாம்பானது கொள்ளிக்கட் டைகளினால் சுடப்படினுங்கூட அவரைவிடாதிருந்தது. ஸாத்வ தாம்பதியான பகவான் அருகில் வந்து காலினால் அந்தப் பாம்பைத் தொட்டார். (8) அந்தப் பாம்பானது பகவானுடைய சோபை நிறைந்த பாதத்தின் ஸ்பர்சத்தினால்போக்கப்பட்ட பாபத்தையுடைய தாய்க்கொண்டுபலைப்பாம்பின் சரீரத்தைவிடுத்து வித்யாதரர்களினால் பூஜிக்கப்பட்ட ரூபத்தை அடைந்தது. (9) ப்ரகாசிக்கின்ற சரீரத் துடன் ஸமீபத்தில் வந்தவனும், வணங்கினவனும், ஸ்வர்ணமாலை யணிந்தவனுமான அந்தப் புருஷனை ஹ்ருஷீகேசனான பகவான் கேட்கத்தொடங்கினர். (10) ஆச்சரியமான பார்வையையுடைய நீ யார்? மேலான காந்தியுடன் விளங்குகின்றனை. வெறுக்கத்தக்க இந்தக்கதியை அவசனாக எவ்விதமடைந்தனை? என்றார். (11)

பாம்பு சொல்லுகிறது—நான் ஸுதர்சனன் என ப்ரஸித்தி பெற்ற ஒரு வித்தியாதரன். ஐஸ்வரியத்துடனும் அழகிய ரூபத்துட னும் கூடினவனாய் விமானத்துடன் திக்குகளில் ஸஞ்சரித்து வந் தேன். (12) ரூபத்தால் கர்வத்தையடைந்தவனாய் ரூபமற்றவர்க

रूपदर्पितः । तैरिमां प्रापितो योनिं प्रलब्धः स्वेन पाप्मना ॥ १३ ॥ शापो मेऽनुग्रहायैव कृतस्तैः करुणात्मभिः । यदहं लोकगुरुणा पदा स्पृष्टो हताशुभः ॥ १४ ॥ तं त्वाऽहं भवभीतानां प्रपन्नानां भयापहम् । आपृच्छे शापनिर्मुक्तः पादस्पर्शादमीवहन् ॥ १५ ॥ प्रपन्नोऽस्मि महायोगिन्महापुरुष सत्पते । अनुजानीहि मां देव सर्वलोकेश्वरेश्वर ॥१६॥ ब्रह्मदण्डाद्विमुक्तोऽहं सद्यस्तेऽच्युत दर्शनात् । यन्नाम गृह्णन्नखिलान् श्रोतॄनात्मानमेव च । सद्यः पुनाति किं भूयस्तस्य स्पृष्टः पदा हि ते ॥१७॥ श्रीशुक उवाच—इत्यनुज्ञाप्य दाशार्हं परिक्रम्याभिवन्द्य च । सुदर्शनो दिवं यातः कृच्छ्रान्नन्दश्च मोचितः ॥१८

---

ளான அங்கிரஸ்ஸுகள் என்ற மஹாருஷிகளைப் பழித்தேன். சொந்தப் பாபத்தினல் வஞ்சிக்கப்பட்ட நான் அந்த மஹாருஷிகளால் இப்பிறவியை யடைவிக்கப்பட்டேன். (13) யாது காரணத்தால் லோக குருவான தங்களால் பாதத்தால் தொடப்பட்டுப் பாபமற்றவனுகவானேனே அக்காரணத்தினல் கருணைமூர்த்திகளான அவர்களால் என்னையனுக்கிரஹிக்கவேண்டியே சாபங்கொடுக்கப்பட்டதாகவாயிற்று. (14) பாபத்தைப் போக்கும ஹே கிருஷ்ண! உமது பாதஸம்பந்தத்தினல் சாபத்தினின்றும் விடுபட்டவனுன நான் பிறவியினின்றும் பயந்தவர்களான ப்ரபன்னர் (பக்தர்) களுக்கு அந்தப் பயத்தைப் போக்குகின்ற அந்த உம்மை சொந்தலோகஞ்செல்ல விடைதரும்படி வேண்டுகிறேன். (15) ஹே மஹாயோகின்! ஹே மஹாபுருஷ! ஹே ஸத்பதே! ஹே ஸர்வலோகேஸ்வரர்களுக்கும் ஈஸ்வர! ஹேதேவ! ப்ரபன்னனுக=சரண்புகுந்தவனுக இருக்கிறேன். எனக்கு விடையளிப்பீராக. (16) ஹே அச்யுத! உமது தர்சனத்தினல் நான் ப்ராப்ஹண சாபத்தினின்றும் உடனேயே விடுவிக்கப்பட்டேன். எந்த உமது திருநாமத்தை ஜபிப்பவன் அதைக் கேட்கும் யாவரையும், தன்னையுமே உடனேயே பரிசுத்தனுக்குவானே அந்த உமது பாதத்தினல் தொடப்பட்டவன் விஷயத்தில் திரும்பவும் சொல்லவேண்டுவது என்ன இருக்கிறது. (17)

ஸ்ரீசுகர் சொல்லலுற்ருர்—சுதர்சனன் இவ்விதம் தாசார்ஹனிடம் விடைபெற்றுக்கொண்டும், வலம் வந்து வணங்கியும் ஸ்வர்க்கத்தையடைந்தான். நந்தகோபரும் கஷ்டத்தினின்றும் விடுவிக்கப்

निशाम्य कृष्णस्य तदात्मवैभवं व्रजौकसो विस्मितचेतसस्ततः। समाप्य तस्मिन्नियमं पुनर्व्रजं नृपाऽऽययुस्तत्कथयन्त आदृताः ॥ १९ ॥ कदाचिदथ गोविन्दो रामश्चाद्भुतविक्रमः। विजह्रतुर्वने रात्र्यां मध्यगौ व्रजयोषिताम् ॥ २० ॥ उपगीयमानौ ललितं स्त्रीजनैर्बद्धसौहृदैः। स्वलङ्कृतानुलिप्ताङ्गौ स्रग्विणौ विरजोऽम्बरौ ॥ २१ ॥ निशामुखं मानयन्तावुदितोडुपतारकम्। मल्लिकागन्धमत्तालिजुष्टं कुमुदवायुना ॥ २२ ॥ जगतुः सर्वभूतानां मनःश्रवणमङ्गलम्। तौ कल्पयन्तौ युगपत्स्वरमण्डलमूर्च्छितम् ॥ २३ ॥ गोप्यस्तद्गीतमाकर्ण्य मूर्च्छिता नाविदन्नृप। स्रंसद्दुकूलमात्मानं स्रस्तकेशस्रजं ततः ॥ २४ ॥

---

பட்டார். (18) ஹே ந்ருப! கோகுலவாஸிகள் கிருஷ்ணனுடைய அந்த ஆத்மவைபவத்தைக் கண்ணுற்று ஆஶ்சரியத்தையடைந்த புத்தியையுடையவர்களாய் அவ்விடத்திலுள்ள நியமத்தை முடித்துக் கொண்டு ஆதரவுடன் அதைச்சொல்லிக்கொண்டு அங்கிருந்து திரும்பவும் கோகுலத்தையடைந்தனர். (19) பிறகு ஒருநாள் கோவிந்தனும், ஆஶ்சரியமான பராக்கிரமமுள்ள பலராமனும் கோபஸ்திரீகளுடைய நடுவையடைந்தவர்களாய்க் காட்டில் ராத்திரியில் விளையாடினர். (20) அதிகம் ஸ்னேஹமுள்ளவர்களான கோபஸ்திரீ ஜனங்களினால் அருகிலிருந்து அழகாகக் கொண்டாடப்படுகின்றவர்களும், நன்கு அலங்கரிக்கப்பட்டவர்களும், சந்தனத்தினால் பூசப்பட்ட சரீரத்தையுடையவர்களும், மாலையையணிந்தவர்களும், அழுக்கற்ற வஸ்திரங்களையணிந்தவர்களுமான அவர்கள் உதயமடைந்த சந்திரன் நக்ஷத்திரங்கள் இவற்றையுடையதும்,ஆம்பல் பூவில் ஸம்பந்தித்த வாயுவினாலும், மல்லிகையின் நறுமணத்தினாலும் மதங்கொண்ட வண்டுகளாலும் ஸேவிக்கப்பட்டதுமான இரவின் தொடக்கத்தைக் கொண்டாடுகின்றவர்களாய் ஒரே ஸமயத்தில் ஸ்வரமண்டலத்தின் கானத்தைக் கல்பித்துக்கொண்டு எல்லாப் பிராணிகளுடையவும் மனது காது இவற்றுக்குச் சந்தோஷத்தைத் தரும்படி கானஞ்செய்தனர். (21-23) ஹே ந்ருப! பிறகு அந்தக் கானத்தைக் கேட்டு மோஹத்தையடைந்த கோபிகைகள் நழுவின வெண்பட்டையுடைய சரீரத்தையோ, தலையினின்றும் நழுவின புஷ்பமாலையையோ அறிந்

एवं विक्रीडतोः स्वैरं गायतोः संप्रमत्तवत्। शङ्खचूड इति ख्यातो धनदानुचरोऽभ्यगात् ॥ २५ ॥ तयोर्निरीक्षतो राजंस्तन्नाथं प्रमदाजनम्। क्रोशन्तं कालयामास दिश्युदीच्यामशङ्कितः ॥ २६ ॥ क्रोशन्तं कृष्ण रामेति विलोक्य स्वपरिग्रहम्। यथा गा दस्युना ग्रस्ता भ्रातरावन्वधावताम् ॥ २७ ॥ मा भैष्टेत्यभयारावौ सालहस्तौ तरस्विनौ। आसेदतुस्तं तरसा त्वरितं गुह्यकाधमम् ॥ २८ ॥ स वीक्ष्य तावनुप्राप्तौ कालमृत्यू इवोद्विजन्। विसृज्य स्त्रीजनं मूढः प्राद्रवज्जीवितेच्छया ॥ २९ ॥ तमन्वधावद्गोविन्दो यत्र यत्र स धावति। जिहीर्षुस्तच्छिरोरत्नं तस्थौ रक्षन्स्त्रियो बलः॥ ३० ॥ अविदूर इवाभ्येत्य शिरस्तस्य दुरात्मनः। जहार मुष्टिनैवाङ्ग सहचूडामणिं

---

தனரில்லை. (24) இவ்விதம் அவர்கள் ஸ்வச்சந்தமாக விளையாடும் பொழுதும் மதங்கொண்டவர் போலக் கானஞ்செய்யும்பொழுதும் சங்கசூடன் எனப் பிரவிித்திபெற்ற குபேரனுடைய வேலைக்காரன் அங்குவந்து சேர்ந்தான். (25) ஹேராஜன்! அவ்விருவரும் பார்த்துக் கொண்டிருக்கும்பொழுதே கொஞ்சமும் சங்கையற்றவனாய் அவர்களால் ரக்ஷிக்கப்படுவதும் சத்துகின்றதுமான ஸ்திரீஜனத்தை வடக்கு திக்கைநோக்கி விரட்டிக்கொண்டு சென்றான். (26) தனது ஸ்திரீஜனமானது புலியினால் விழுங்கப்படும் பசுக்கள்போல ஹே கிருஷ்ண! ஹேராம! எனக் கத்துவதைக் கண்ணுற்று ராம கிருஷ்ணர்களிருவரும் “பயப்படாதீர்” என அபயதானஞ் செய்து கொண்டும், தேக்குமரத்தைக் கையில் தாங்கிக்கொண்டும் அதிகம் வேகமுள்ளவர்களாகக் கொண்டும் வேகமாகச்செல்லும் அந்தக் குஹ்யகாதமனைப் பின்சென்று அடைந்தனர். (27-28) அந்த மூடன் காலமிருத்யுக்கள்போலப் பின்தொடர்ந்துவந்த அவர்களைப் பார்த்துப் பயந்தவனாய் ஸ்திரீஜனங்களை விட்டுவிட்டு உயிரிலாசை கொண்டு ஓட்டம்பிடித்தான். (29) ஸ்ரீகோவிந்தன் அவனுடைய தலையிலுள்ள ரத்தினத்தைக் கிரஹிக்க வெண்ணங்கொண்டவராய் எங்கெங்கு அவன் ஓடினனோ அங்கங்கு அவனைப் பின்தொடர்ந்தார். பலராமன் ஸ்திரீகளை ரக்ஷித்துக் கொண்டு நின்றுவிட்டார். (30) ஹே அங்க! விபுவான கிருஷ்ணன் அருகிலேயே அவனை யடைந்து சூடாமணியுடன் கூடினதுராத்மாவான அவனது தலையை

विभुः ॥ ३१ ॥ शङ्खचूडं निहत्यैवं मणिमादाय भास्वरम्। अग्रजायाददत्प्रीत्या पश्यन्तीनां च योषिताम् ॥ ३२ ॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्धे शङ्खचूडवधो नाम चतुस्त्रिंशोऽध्यायः ॥ ३४ ॥



முஷ்டியினுலேயே அபஹரித்தார். (31) இவ்விதம் சங்கசூடனைக் கொன்று ப்ரகாசிக்கின்ற மணியைத் தலையினின்றும் எடுத்து ஸ்திரீகள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே ப்ரீதியுடன் தமையனை பலராமனுக்குக் கொடுத்தார். (32) (எ-று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண தசமஸ்கந்தபூர்வார்த்தத்தில் சங்கசூடவதம் என்ற முப்பத்துநான்காவது அத்தியாயம் முற்றிற்று.



## நாராயணீயம்.

इति त्वयि रसाकुलं रमितवल्लभे वल्लवाः
कदापि पुनरम्बिकाकमितुरम्बिकाकानने।
समेत्य भवता समं निशि निषेव्य दिव्योत्सवं
सुखं सुषुपुरग्रसीद्व्रजपमुग्रनागस्तदा ॥ ३३६ ॥

(ப-ரை) इति=இவ்விதம் त्वयि=நீர் रसाकुलम्=ஸந்தோஷரஸம் நிறைந்திருக்கும்படி रमितवल्लभे=ஸந்தோஷப்படுத்தப்பட்ட ஸ்திரீஜனங்களையுடையவராக இருக்கும்பொழுது वल्लवाः पुनः=கோபாலர்களோவெனில் कदापि=ஒருநாள் अम्बिकाकानने=அம்பிகாவனமென்ற க்ஷேத்திரத்தில் भवता समम्=உம்முடன்கூட समेत्य=சேர்ந்து अम्बिकाकमितुः=பரமேஸ்வரனுடைய दिव्योत्सवम्= அழகிய திருவிழாவை निषेव्य=ஸேவித்துவிட்டு निशि=இரவில் सुखम्=சுகமாக सुषुपुः=தூங்கினர். तदा=அப்பொழுது उग्रनागः=பெரிய மலைப்பாம்பானது व्रजपम्=நந்தகோபரை अग्रसीत्=விழுங்கிற்று. (336) (எ-று)

समुन्मुखमथोल्मुखैरभिहतेऽपि तस्मिन्बला-
दमुञ्चति भवत्पदे न्यपति पाहि पाहीति तैः।

तदा खलु पदा भवान् समुपगम्य पस्पर्श तं
　　बभौ स च निजां तनुं समुपसाद्य वैद्याधरीम् ॥ ३३७ ॥

(ப-ரை) அத=பிறகு तस्मिन=அந்த மலைப்பாம்பானது समुन्मुखम्=நேரிலேயே उल्मुकैः=கொள்ளிக்கட்டைகளினால் बलात्=வலுவாக अभिहतेऽपि=அடிக்கப்படினுங்கூட अमुञ्चति सति=நந்தகோபரை விடாதபொழுது तैः=அவர்களால் पाहि पाहीति=காரும் காருமென भवत्पदे=உமது சரணத்தில் न्यपति=விழப்பட்டது. அதாவது:—அவர்கள் உமது சரணத்தில் விழுந்து வேண்டினர் என்றும். भवान् खलु=நீரோ समुपगम्य=ஸமீபத்தில் வந்து तदा=அப்பொழுது तम्=அந்தப் பாம்பை पदा=காலினால் पस्पर्श=தொட்டீர். सच=அந்தப் பாம்பும் निजाम्=சொந்தமான वैद्याधरीम=வித்யாதரஸம்பந்தியான तनुम्=சரீரத்தை समुपसाद्य=அடைந்து बभौ=விளங்கிற்று. (337)

सुदर्शनधर प्रभो ननु सुदर्शनाख्योऽस्म्यहं
　　मुनीन् क्वचिदपाहसं त इह मां व्यधुर्वाहसम् ।
भवत्पदसमर्पणादमलतां गतोऽस्मीत्यसौ
　　स्तुवन्निजपदं ययौ व्रजपदञ्च गोपा मुदा ॥ ३३८ ॥

(ப-ரை) सुदर्शनधर !=சுதர்சனமென்ற சக்கிராயுதத்தைத் தரிக்கின்ற प्रभो !=ஓ ப்ரபுவே! अहम्=நான் सुदर्शनाख्यः=சுதர்சனன் என்ற பெயருள்ளவனாக अस्मि ननु=இருக்கின்றேனன்றோ. क्वचित्=ஒருஸமயம் मुनीन्=மஹருஷிகளை उपाहसम्=பரிஹஸித்தேன். ते=அவர்கள் माम्=என்னை इह=இங்கு वाहसम्=மலைப்பாம்பாக व्यधुः=செய்தனர். भवत्पदसमर्पणात्=உமது சரணாரவிந்த ஸம்பந்தத்தால் अमलताम=தோஷமற்றவனாக இருத்தலை गतः=அடைந்தவனாக अस्मि=இருக்கிறேன் इति=என்று असौ=இவன் स्तुवन्=ஸ்துதித்துக்கொண்டு निजपदम्=தனது ஸ்தானத்தை ययौ=அடைந்தான். गोपाश्च=கோபாலர்களும் व्रजपदम्=கோகுலத்தை मुदा=ஸந்தோஷத்துடன் (ययुः=அடைந்தனர்.) (338) (எ-று)

कदापि खलु सीरिणा विहरति त्वयि स्त्रीजनै
　　र्जहार धनदानुगः स किल शङ्खचूडोऽबलाः ।
अतिद्रुतमनुद्रुतस्त्वमथ मुक्तनारीजनं
　　रुरोजिथ शिरोमणिं हलभृते च तस्याददाः ॥ ३३९ ॥

(ப-ரை) कदापि=ஒருநாள் त्वयि=நீர் सीरिणा=பலராமனுடனும், स्त्रीजनैः=கோபஸ்திரீகளுடனும் विहरति=விளையாடுங்கால் धनदानुगः=குபேரனுடைய வேலைக்காரனான सः=அந்த शङ्खचूडः किल=சங்கசூடனே अबलाः=ஸ்திரீகளை जहार खलु=எடுத்துச் சென்றானன்றோ. अथ=பிறகு मुक्तनारीजनम्=விடப்பட்ட ஸ்திரீஜனங்களையுடைய तम्=அந்த சங்கசூடனை अतिद्रुतम्=அதிகவேகமாக अनुद्रुतः=பின்தொடர்ந்தவராய் तस्य=அவனுடைய शिरोमणिम्=சிரோரத்தினத்தை करोजिथ=பிடுங்கிக்கொண்டீர். हलभृते=பலராமனையும் பொருட்டு अददाश्च=கொடுக்கவும் கொடுத்தீர். (339) (எ-று)

दिनेषु च सुहृज्जनैः सह वनेषु लीलापरं
मनोभवमनोहरं रसितवेणुनादामृतम् ।
भवन्तममरीदृशाममृतपारणादायिनं
विचिन्त्य किमु नालपन् विरहतापिता गोपिकाः ॥ ३४० ॥

(ப-ரை) दिनेषु च=பகற்காலங்களில் सुहृज्जनैस्सह = கோபக்குழந்தைகளுடன் கூட वनेषु=காடுகளில் लीलापरम्=விளையாட்டிலீடுபட்டவரும் मनोभवमनोहरम् = மன்மதனைக்காட்டிலும் அழகு வாய்ந்தவரும், அல்லது மன்மதனுடைய மனதையும் கவருகின்றவரும் रसितवेणुनादामृतम्=ருசிபார்க்கப்பட்ட வேணுநாதமாகிற அமுதத்தையுடையவரும் अमरीदृशाम्=தேவஸ்திரீகளின் கண்களுக்கு अमृतपारणादायिनम्=தனது ஸ்வரூபாமுதத்தைப் பானம் செய்துவைப்பவருமான भवन्तम्=உம்மை विचिन्त्य=மனதாலெண்ணி विरहतापिताः=விரஹத்தினால் பீடிக்கப்பட்ட गोपिकाः=கோபஸ்திரீகள் किमुनालपन्=எதைத்தான் புலம்பாதிருந்தனர். உமது அந்தந்த நிலையை மனத்தாலெண்ணிக்கொண்டு வாய்விட்டுப்புலம்பினர் என்பது கருத்து. (340) (எ-று)

भोजराजभृतकस्त्वथ कश्चित्कष्टदुष्टपथदृष्टिररिष्टः ।
निष्ठुराकृतिरपष्ठुनिनादस्तिष्ठते स्म भवते वृषरूपी ॥ ३४१ ॥

(ப-ரை) अथ=பிறகு भोजराजभृतकः=கம்ஸனுடைய வேலைக்காரனும் कष्टदुष्टपथदृष्टिः= கஷ்டத்தைத்தருகின்ற (அதாவது: பிறருக்கு ஹிம்ஸையைத் தருகின்ற) துஷ்டமான வழியில் புத்தியைச் செலுத்தினவனுமான अरिष्टः=அரிஷ்டன் என்ற कश्चित्=ஒருவனே

निष्ठुराकृतिः=கொடூரமான வடிவத்தையுடையவனுகவும், अपष्ठुनिनादः=கொடூரமான சப்தத்தையுடையவனுகவும் वृषरूपी=காளையின் ரூபமுள்ளவனுகவும் கொண்டு भवते=உம்மையும் பொருட்டு तिष्ठते स्म=தன்னைப் பிரகாசப்படுத்திக்கொண்டான். (341) (எ-று)

शाकरोऽथ जगतीधृतिहारी मूर्तिमेष बृहतीं प्रदधानः।
पङ्क्तिमाशु परिघूर्ण्य पशूनां छन्दसां निधिमवाप भवन्तम् ॥३४२॥

(ப-ரை) अथ=பிறகு शाकरः=காளை உருவமெடுத்தவனும் जगतीधृतिहारी=பூமியினுடைய ஸ்தைர்யத்தை போக்கும் சிலமுள்ளவனுமான एषः=இவன் बृहतीम्=பெரிய मूर्तिम्=சரீரத்தை प्रदधानः=தரித்துக்கொண்டு पशूनाम्=பசுக்களின் पङ्क्तिम्=கூட்டத்தை आशु=சிக்கிரமாக परिघूर्ण्य=விரட்டி छन्दसाम्=வேதங்களுக்கு निधिम्=இருப்பிடமான भवन्तम्=உம்மை अवाप=அடைந்தான். (342)

तुङ्गशृङ्गमुखमाश्वभियन्तं संगृहय्य रभसादभियं तम् ।
भद्ररूपमपि दैत्यमभद्रं मर्दयन्नमदयः सुरलोकम् ॥ ३४३ ॥

(ப-ரை) तुङ्गशृङ्गमुखम्=உன்னதமான கொம்புகளை முகத்திலுடையவனும், आशु=வேகமாக अभियन्तम्=எதிர்த்து ஓடிவருகின்றவனும், अभियम्=பயமற்றவனும், भद्ररूपमपि=மங்களகரமான விருஷபத்தின் உருவமுள்ளவனுயினுங்கூட अभद्रम्=துஷ்டனுமான तम्=அந்த दैत्यम्=அஸுரனை रभसात्=வேகமாக संगृहय्य=பிடித்துக்கொண்டு मर्दयन्=நசுக்கின்றவராய் सुरलोकम् = தேவலோகத்தை अमदयः=ஸந்தோஷிக்கச்செய்தீர். (343) (எ-று)

चित्रमद्य भगवन् वृषघातात्सुस्थिराऽजनि वृषस्थितिरुर्व्याम् ।
वर्धते च वृषचेतसि भूयान्मोद इत्यभिनुतोऽसि सुरैस्त्वम् ॥ ३४४ ॥

(ப-ரை) भगवन्!=ஹே பகவன்! अद्य=இப்பொழுது वृषघातात्=தர்மத்தினுடைய (விருஷபரூபியான அரிஷ்டாஸுரனுடைய) வதத்தினுல் उर्व्याम्=பூமியில் वृषस्थितिः=தர்மத்தின் நிலையானது सुस्थिरा=நன்கு நிலைத்ததாக अजनि=ஆயிற்று என்பதும் वृषचेतसि=இந்திரனுடைய புத்தியில் அல்லது தர்மபுத்தியுள்ள ஸஜ்ஜனங்களிடத்தில் भूयान्=அதிகமான मोदः=சந்தோஷமானது वर्धते च=விருத்தியையும் அடைகிறது என்பதும் चित्रम्=ஆச்சரியம் इति=என त्वम्=

## अथ पञ्चत्रिंशोऽध्यायः ॥

श्रीशुक उवाच—गोप्यः कृष्णे वनं याते तमनुद्रुतचेतसः । कृष्णलीलाः प्रगायन्त्यो निन्युर्दुःखेन वासरान् ॥ १ ॥ गोप्य ऊचुः—वामबाहु-

---

நீர் सुरैः=தேவர்களால் अभिनुतः=ஸ்துதிக்கப்பட்டவராக असि=ஆனீர். (344) (எ–று)

औक्षकाणि परिधावत दूरं वीक्ष्यतामयमिहोक्षविभेदी ।
इत्थमात्तहसितैस्सह गोपैर्गेहगस्त्वमव वातपुरेश ॥ ३४५ ॥

(ப–ரை) वातपुरेश !=குருவாயூருக்கு ஈசனான ஹே கிருஷ்ண! औक्षकाणि=ஹே விருஷபக்கூட்டங்களே! दूरं परिधावत=நீங்கள் வெகுதூரம் ஓடிவிடுங்கள். इह=இங்கு अयम्=இந்த उक्षविभेदी=காளையைக் கொல்லுபவனிருக்கிறான் वीक्ष्यताम्=பார்க்கப்படட்டும் इत्थम्=என आत्तहसितैः=சொல்லப்பட்ட பரிஹாஸ வார்த்தையையுடையவர்களான गोपैस्सह=கோபாலர்களுடன்கூட गेहगः=வீட்டையடைந்த त्वम्=நீர் अव=என்னைக்காரும். (345) (எ–று)

இவ்விதம் ஸுதர்சனன் என்ற வித்யாதரனுடைய சாபமோக்ஷ வர்ணனமும், சங்கசூடவத வர்ணனமும், விருஷபாஸுரவத வர்ணனமும் என்ற எழுபதாவது தசகம் முற்றிற்று.



### முப்பத்தைந்தாவது அத்தியாயம்.

(அ–கை) पञ्चत्रिंशे वनं याते कृष्णे गोकुलयोषितः ।
युग्मश्लोकानुगीतेन निन्युर्दुःखेन वासरान् ॥ १ ॥

(க–ரை) கிருஷ்ணன் காட்டை யடைந்ததும் கோகுலத்திலுள்ள ஸ்திரீகள் இரண்டுஸ்லோகமமைந்த கீதத்தினால் பகற்காலங்களைக் கஷ்டத்துடன் கழித்தனர் என இந்த முப்பத்தைந்தாவது அத்தியாயத்தி லுபதேசிக்கப்படுகிறது. (எ–று)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—கிருஷ்ணன் காட்டிற்குச் சென்றதும் கோபிகைகள் அவரைப் பின்தொடர்ந்தோடின சித்தமுள்ளவர்களாகவும் கிருஷ்ணலீலைகளைக் கானஞ்செய்கின்றவர்களாகவுங் கோ

कृतवामकपोलो वल्गितभ्रुरधरार्पितवेणुम्। कोमलाङ्गुलिभिराश्रितमार्गं गोप्य ईरयति यत्र मुकुन्दः ॥ २॥ व्योमयानवनिताः सह सिद्धैर्विस्मितास्तदुपधार्य सलज्जाः। काममार्गणसमर्पितचित्ताः कश्मलं ययुरपस्मृतनीव्यः ॥ ३ ॥ हन्त चित्रमबलाः शृणुतेदं हारहास उरसि स्थिरविद्युत्।

---

ண்டு துக்கத்துடன் பகற்காலங்களைக் கழித்தனர். (1) கோபிகைகள் சொல்லலுற்றனர்—*ஹே கோபிகைகளே! ஸ்ரீமுகுந்தன் எப்பொழுது இடததோளில் வைக்கப்பட்ட இடதுகன்னத்தையுடையவராகவும் நர்த்தனஞ்செய்கின்ற புருவங்களையுடையவராகவும் கோமளங்களான விரல்களினால் ஆஸ்ரயிக்கப்பட்ட ஏழுஸ்வர ஒட்டைகளையுடையதும் கீழுதட்டில் வைக்கப்பட்டதுமான வேணுவைவாசிக்கின்றாரோ அப்பொழுது ஆகாசயானத்தில் ஸஞ்சரிக்கின்ற ஸித்தர்களின் ஸ்திரீகள் ஸித்தர்களான தமது பர்த்தாக்களுடன் கூடினவர்களாக இருந்தபோதிலுங்கூட அந்த வேணுகீதத்தைக்கேட்டு முதலில் ஆஸ்சரியத்தையடைந்து பிறகு மன்மத பாணங்களுக்கு அர்ப்பணஞ்செய்யப்பட்ட சித்தத்தையுடையவர்களாய்க்கொண்டும், லஜ்ஜையுடன் கூடினவர்களாய்க்கொண்டும், அவிழ்ந்த நீவியை (எக்குமுடிச்சை) மறந்தவர்களாய்க்கொண்டும் மோஹத்தையடைந்தனர்.(*) (2–3) ஹே அபலைகாள்! இப்பொழுதுள்ள இந்த ஆஸ்சரியத்தைக் கேளுங்கள். தெளிவான மந்தஹாஸத்தையுடையவனும், அல்லது முக்தாஹாரம்போலமாரில் பிரகாசிக்கின்ற சிரிப்பையுடையவனும், மாரில் நிலைத்த மின்னல்போன்ற லக்ஷ்மியையுடையவனும், துக்கிதர்களான ஜனங்களுக்குச் சுகத்தைத்தருகின்றவனுமான இந்த நந்தகோபர்புத்திரன் எப்பொழுது வேணுவைச் சப்

---

* வாமபாஹுக்ருத என்றுதொடங்கி இரண்டிரண்டு ஸ்லோகங்களால் கோபாலன் செய்யும் வேணுகானத்தைக் கோபிகைகள் வர்ணிக்கும் முறையுபதேசிக்கப்படுகிறது. இவ்விடத்தில் பன்னிரண்டு இரட்டை ச்லோகங்களால் அம்முறை சொல்லப்படுகிறது. ஆகவே இவற்றுக்குக் கோபிகாயுகளகீதமெனப் பெயரிடப்பட்டிருக்கிறது.

(*) ஆகவே இவ்விதமிருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணனுடைய விரஹத்தை நாம் எவ்விதம் பொறுப்போம் என எல்லாவிடங்களிலும் சேர்த்துப் பொருள் காணவேண்டும்.

नन्दसूनुरयमार्तजनानां नर्मदो यर्हि कूजितवेणुः ॥४॥ वृन्दशो व्रजवृषा मृगगावो वेणुवाद्यहृतचेतस आरात्। दन्तदष्टकवला धृतकर्णा निद्रिता लिखितचित्रमिवासन्॥५॥ बर्हिणस्तबकधातुपलाशैर्बद्धमल्लपरिबर्हविडम्बः। कर्हिचित्सबल आलि स गोपैर्गाः समाह्वयति यत्र मुकुन्दः ॥६॥ तर्हि भग्नगतयः सरितो वै तत्पदाम्बुजरजोऽनिलनीतम्। स्पृहयतीर्वयमिवाबहुपुण्याः प्रेमवेपितभुजाः स्तिमितापः॥७॥ अनुचरैः समनुवर्णितवीर्य आदिपूरुष इवाचलभूतिः। वनचरो गिरितटेषु चरन्तीर्वेणुनाह्वयति गाः स यदा

---

திக்கச் செய்கின்றானோ அப்பொழுது கோகுலத்திலுள்ள விருஷபங்களும், மான்களும், பசுக்களும் கூட்டங்கூட்டமாக வேணுவாத்தியத்தினால் அபஹரிக்கப்பட்ட சித்தத்தையுடையனவாயும், வெகு தூரத்திலேயே பற்களினால் கடிக்கப்பட்ட ஆஹாரத்தையுடையனவாயும், உயரத்தூக்கப்பட்ட காதுகளையுடையனவாயும் ஆகி நித்திரையையடைந்தனபோலும், கையினாலெழுதப்பட்ட சித்திரம்போலும் இருந்தன.* (4–5) ஹேஸகி! ஒருஸமயம் மயில் தோகையினாலும், நற்சங்குப் பொடியினாலும், தளிர்களினாலும் செய்துகொள்ளப்பட்ட மல்லனுடைய வேஷத்தை அனுகரிக்கின்றவனான அந்த முகுந்தன் பலராமனுடன் கூடவும், கோபாலர்களுடன் கூடவும் (வேணுவினால்) எப்பொழுது பசுக்களைக் கூப்பிடுகின்றானோ, அப்பொழுது காற்றினால் கொண்டுவரப்பட்ட அவரது பாதாரவிந்த தூளியை விரும்புகின்றவைபோல இழந்த கதியையுடையவைகளான நதிகள் நாம்போன்று அதிகம் புண்ணியஞ் செய்யாதனவாகி கேவலம் ப்ரேமையினால் அசைகின்ற அலைகளையுடையனவாகவும், அசைவற்ற ஜலத்தையுடையனவாகவும் இருக்கின்றன.(*) (6–7) பின்தொடர்ந்து வருகின்ற கோபாலர்களாலும் அல்லது தேவர்களாலும், நன்கு வர்ணிக்கப்பட்ட வீர்யத்தையுடையவனும், ஆதி புருஷன் (நாராயணன்) போல அசைவற்ற லக்ஷ்மியையுடையவ

---

* அற்ப அறிவுள்ள பசு முதலியவற்றுக்குள்ள இது வெகு ஆச்சரியமன்றோ என்பது பொருள்.

(*) கோபிகைகளும் கண்களில் தேங்கின ஜலமுள்ளவர்களாகவாகின்றனர். இதனால் அசேதனங்களான நதிகளிடம் காணப்படும் இது வெகு ஆச்சரியமென்பது உபதேசிக்கப்பட்டது.

हि ॥ ८ ॥ वनलतास्तरव आत्मनि विष्णुं व्यञ्जयन्त्य इव पुष्पफलाढ्याः । प्रणतभारविटपा मधुधाराः प्रेमहृष्टतनवः सस्रुजुः स्म ॥ ९ ॥ दर्शनीयतिलको वनमालादिव्यगन्धतुलसीमधुमत्तैः । अलिकुलैरलघुगीतमभीष्टमाद्रियन्यर्हि सन्धितवेणुः ॥ १० ॥ सरसि सारसहंसविहङ्गाश्चारुगीतहृत-

---

லும், காட்டில் ஸஞ்சரிக்கின்றவனுமான அந்தக் கோபாலன் மலைச் சாரல்களில் ஸஞ்சரிக்கின்ற பசுக்களை வேணுவினால் எப்பொழுது கூப்பிடுகின்றானோ, அப்பொழுது வனத்திலுள்ள *கொடிகளும் மரங்களும் தம்மிடம் பிரகாசிக்கின்ற விஷ்ணுவை ஸூசிப்பிக்கின்றவை போலப் புஷ்பம் பழம் இவை நிறைந்தனவாகவும் சுமையினால் வணங்கின கிளைகளையுடையனவாகவும், ப்ரேமையினால் தளிர்த்த சரீரங்களையுடையனவாகவுமாகி மதுதாரைகளைப் பெருகவிட்டன.

பார்க்கத்தகுந்த திலகத்தை (நெற்றியிலுள்ள ஊர்த்துவபுண்ட்ரத்தை) யுடைய, அல்லது கண்கொண்டு பார்க்கத்தக்கனவற்றுள் சிறந்தவரான ஸ்ரீகிருஷ்ணன் வனமாலையிலுள்ளதும், திவ்விய கந்தமமைந்ததுமான துளஸியின் தேனினால் மதங்கொண்ட வண்டுகளினால் உரத்துப்பாடப்பட்ட அனுகூலமான கீதத்தை ஆதரவுடன் க்ரஹித்துக்கொண்டு எப்பொழுது (உதட்டில்) வேணுவை வைத்துப் பாடுகின்றாரோ அப்பொழுது ஸாரஸப், ஹம்ஸம், மற்றுமுள்ள பக்ஷிகள் யாவும் அழகிய கானத்தினால் இழுக்கப்பட்டசித்தமுள்ளனவாய் அருகில் வந்து அவைகள் அடக்கப்பட்ட சித்தமுள்ளனவாகவும் சப்தஞ்செய்யாதனவாகவும் மூடப்பட்டகண்களையுடையனவாகவும் ஆகி கிருஷ்ணனை உபாஸித்தன. (*)இது வெகு

---

* இந்த சுலோகத்தில் வனலதைகள் மரங்கள் என்றதால் லதைகளை ஸ்திரீகளாகவும், மரங்களை அவற்றின் பதிகளாகவும் வைத்துக்கொண்டு அவற்றின் நிலையுபதேசிக்கப்படுவதாகக் கொள்ளவேண்டும். ஆகவே तरवश्च तथा = तत्पतीनामपि तथैवानन्दः என ஸ்ரீதரீயவியாக்கியானத்தில் तत्पतीनाम्=கொடிகளின் பர்த்தாக்களான மரங்களுக்கும் கூட அவ்விதமே ஆனந்தமுண்டாயிற்று என்று சொல்லப்பட்டது.

(*) பக்ஷிகள்கூடத் தமது ஸ்வபாவத்தைவிடுத்து அவரதருகில் வீற்றிருக்க தமக்கு அவ்விதபாக்கியம் கிடைக்கவில்லையே எனவெண்ணிக் கஷ்டத்தையடைந்தனர் என்று கருத்து.

चेतस एत्य । हरिमुपासत ते यतचित्ता हन्त मीलितदृशो धृतमौनाः ॥११॥ सहबलः स्रगवतंसविलासः सानुषु क्षितिभृतो व्रजदेव्यः । हर्षयन्यर्हि वेणुरवेण जातहर्ष उपरम्भति विश्वम् ॥१२॥ महदतिक्रमणशङ्कितचेता मन्दमन्दमनुगर्जति मेघः । सुहृदमभ्यवर्षत्सुमनोभिश्छायया च विदधत्प्रतपत्रम् ॥१३॥ विविधगोपचरणेषु विदग्धो वेणुवाद्य उरुधा निजशिक्षः । तव सुतः सति यदाऽधरबिम्बे दत्तवेणुरनयत्स्वरजातीः ॥१४॥ सवनशस्तदुपधार्य सुरेशाः शक्रशर्वपरमेष्ठिपुरोगाः । कवय आन-

---

கஷ்டமானது. (10-11) ஹே கோபிகைகளே! கிருஷ்ணன் பலராமனுடன் கூட மாலைகளினால் செய்யப்பட்ட கர்ணாபரணங்களின் சோபையை யுடையவராய்க்கொண்டும் மலையின் தாழ்வரைகளிலிருந்து கொண்டும் ஸந்தோஷத்தையடைந்தவராய் வேணுவின் சப்தத்தினால் உலகைச்சந்தோஷப்படுத்தவேண்டி எப்பொழுது கானஞ் செய்கின்றாரோ, அப்பொழுது மேகமானது மஹானான ஸ்ரீகிருஷ்ணனுடைய (*) அதிக்கிரமணத்தில் சங்கையையடைந்த சித்தமுள்ளதாய் மெள்ள மெள்ள வேணுவின் சப்தத்தையொத்துத் தானும் கர்ஜிக்கிறது. மேலும் தனது நிழலினால் குடைபிடித்துக்கொண்டு புஷ்பங்களினால் (ஜலத்துளிகளினால்) தனது தோழனான கிருஷ்ணனைச் சுற்றிலும் வர்ஷிக்கிறது பாருங்கள். (12-13) ஹே யசோதே! உனது புத்திரன் கோபாலர்களுக்குரிய பற்பல லீலைகளில் ஸமர்த்தனாகவும், வேணுவாதன விஷயத்தில் சொந்தமாகவே ஏற்பட்ட பலவித சிக்ஷைகளையுடையவனாகவும், கோவைப்பழம்போன்ற உதட்டில் வைக்கப்பட்ட வேணுவையுடையவனாகவும், (ரிஷபம், காந்தாரம் முதலிய) ஸ்வரஜாதிகளை எப்பொழுது கானஞ்செய்கிறானோ, அப்பொழுது அந்த ஸ்வரஜாதிகளை மந்த்ரம், மத்யமம், தாரம் என்ற காலபேதத்துடன் மனத்தில் வாங்கி இந்திரன், மஹாதேவன், ப்ரம்ஹா முதலிய அறிஞர்களான தேவஸ்ரேஷ்டர்கள் பாட்டு வரும் வழியை நோக்கி வணங்கின கழுத்து மனஸ் இவற்றையுடைய

---

(*) மேகமானது கிருஷ்ணனுக்கு முந்திப்போகாமலும், ஆகாசத்திலசையாமலும், உரத்து கர்ஜிக்காமலும் இருந்துகொண்டு வேணுவின் நாதத்தையொத்தே சப்தித்தது என்று கருத்து.

तकन्धरचित्ताः कश्मलं ययुरनिश्चिततत्त्वाः ॥ १५ ॥ निजपदाब्जदलैर्ध्वज-
वज्रनीरजाङ्कुशविचित्रललामैः । व्रजभुवः शमयन्खुरतोदं वर्ष्मधुर्यगति
रीडितवेणुः ॥ १६ ॥ व्रजति तेन वयं सविलासवीक्षणार्पितमनोभववेगाः ।
कुजगतिं गमिता न विदामः कश्मलेन कबरं वसनं वा ॥ १७ ॥ मणिधरः
क्वचिदागणयन्गा मालया दयितगन्धतुलस्याः । प्रणयिनोऽनुचरस्य कदां
ऽसे प्रक्षिपन्भुजमगायत यत्र ॥ १८ ॥ क्वणितवेणुरववञ्चितचित्ताः कृष्ण-
मन्वसत कृष्णगृहिण्यः । गुणगणार्णमनुगत्य हरिण्यो गोपिका इव विमुक्त-
गृहाशाः ॥ १९ ॥ कुन्ददामकृतकौतुकवेषो गोपगोधनवृतो यमुनायाम् ।

---

வர்களாய்க்கொண்டு அதன் தத்துவத்தை நிஶ்சயிக்கமுடியாதவர்க
ளாய் பயக்கத்தையடைந்தனர். (14–15) த்வஜரேகை, வஜ்ர
ரேகை, அப்புஜரேகை அங்குச ரேகை, இவைகளாகிற விசித்திரங்
களான அலங்காரங்களையுடையவைகளான சொந்தப்பாதங்களாகிற
அப்ஜதளங்களினால் கோகுலத்திலுள்ள பூமிக்கு மாட்டுக்குளப்புகளி
னாலேற்பட்ட வலியைப் போக்குகின்றவரும், யானையினதுபோன்ற
நடையையுடையவருமான கிருஷ்ணன் சப்திக்கும்படி செய்யப்
பட்ட வேணுவையுடையவராய் நடக்கிறார் என்பதுயாதுண்டோ,
அதநிமித்தமாக விலாஸத்துடன்கூடின வீக்ஷணத்தினால் உண்டுபண்
ணப்பட்ட காமவேகத்தையுடையவர்களான நாம் மரங்களுக்குற்ற
கதியை யடைவிக்கப்பட்டவர்களாய்க் கொண்டு மயக்கத்தினால் தலை
முடிச்சையோ இடையிலுள்ள வஸ்திரத்தையோ அறிந்திலோம்.

கிருஷ்ணன் பசுக்களை எண்ணுவதற்குவேண்டி கோக்கப்பட்ட
மணிகளைத் தரித்துக்கொண்டும், ஒருதேசத்தில் பசுக்களை எண்ணிக்
கணக்கிட்டுக் கொண்டும், பிடித்தமணமுள்ள துளஸியின் மாலை
யுடன்கூடினவராய்க் கொண்டும், ஒருஸமயம் ப்ரியனான தோழனு
டைய தோளில் கையைப்போட்டுக்கொண்டும் எப்பொழுது கானஞ்
செய்கின்றாரோ, அப்பொழுது சப்திக்கப்பட்ட வேணுவின் நாதத்
தினால் அபஹரிக்கப்பட்ட சித்தமுடையவைகளும் மானின் பத்னி
களுமான பெண்மான்கள் கிருஹப்பற்றை யொழித்தவர்களான
கோபிகைகள்போல குணக்கூட்டங்களுக்கு ஸமுத்திரமான கிருஷ்
ணனையடைந்து அவரையே சூழ்ந்துகொண்டன. (18–19) குற்ற

नन्दसूनुरनघे तव वत्सो नर्मदः प्रणयिनां विजहार ॥ २० ॥ मन्दवायुरुप-
वात्यनुकूलं मानयन्मलयजस्पर्शेन । वन्दिनस्तमुपदेवगणा ये वाद्यगीतबलि-
भिः परिवव्रुः ॥ २१ ॥ वत्सलो व्रजगवां यदगध्रो वन्द्यमानचरणः पथि
वृद्धैः । कृत्स्नगोधनमुपोह्य दिनान्ते गीतवेणुरनुगेडितकीर्तिः ॥२२॥ उत्सवं
श्रमरुचापि दृशीनामुन्नयन्खुररजश्छुरितस्रक् । दित्सयैति सुहृदाशिष एष

---

மற்றொரு யசோதே! குந்தப்பூமாலையினால் செய்யப்பட்ட வேடிக்கையான வேஷத்தையுடையவரும், கோபாலர் பசு இவற்றுடன் கூடினவரும் *நந்தகோபரின் புத்திரருமான உனது குழந்தை சிநேஹிதர்களுக்கு ஸந்தோஷத்தை தருகின்றவராய் எப்பொழுது யமுனையில் விளையாடினாரோ, அப்பொழுது சந்தனத்தினுடையது போன்று மணமுள்ளதும் குளுந்ததுமான ஸ்பர்சத்தினால் இளங்காற்றானது அந்தக் கிருஷ்ணனைப் பூஜித்துக்கொண்டு அனுகூலமாகவிருக்கும்படி அருகில் வீசுகிறது. கந்தர்வாதியரின் கூட்டங்கள் எவருண்டோ அவர்கள் ஸ்துதிபாடகர்கள்போல வாத்தியம், கீதம், பூமாரி இவற்றுடன் அவரைச்சுற்றிலும் சூழ்ந்து கொண்டனர். (20-21) (*)கோகுலத்திலுள்ள பசுக்களான நம்மிடத்து வாத்ஸல்யமுள்ளவனும், முன்னர் மலையைத்தாங்கி நம்மைக்காற்றவனும், வரும்வழியில் ப்ரம்ஹதேவன் முதலியபெரியோர்களால் (1)வணங்கப்படுகின்ற சரணத்தையுடையவனும், எல்லாப்பசுக்களையும் ஒன்றாகக் கூட்டிக்கொண்டு மாலையில் வாசிக்கப்பட்ட வேணுவையுடையவனும், பின்வருவோரால் கொண்டாடப்பட்ட கீர்த்தியையுடையவனும், களைப்பாலுண்டான காந்தியினாலுங்கூடக் கண்களுக்குச் சந்தோஷத்தைத்தருகின்றவனும், குளப்படிகளினின்றுமுண்டான புழுதிகள்படிந்த மாலையையுடையவனும், தேவகியின் வயிற்றினின்

---

* இச்சமயம் பலர் ஒன்றாகூடிப்பேசுவதால் சிலர் நந்தகோபரின் புத்திரன் என்றும், சிலர் உனது குழந்தை என்றும் கிருஷ்ணனைச் சொல்லினர் என்ற வேறு பொருளும் கொள்ளலாம். (*) வீட்டை நோக்கிவரும் கிருஷ்ணனைக்கண்டு சந்தோஷித்தவர்களாய் ஒருவருக்கொருவர் சொல்லிக் கொள்ளுகின்றனர். (1) வேகமாக மாலையில் கூட வீடுவரவிடாமல் இவர்கள் ஏன் தடுக்கின்றனர் என அவர்களிடம் பொறுமை கொண்டனர் என்பது கருத்து.

देवकीजठरभूरुडुराजः ॥ २३ ॥ मदविघूर्णितलोचन ईषन्मानदः स्वसुहृदां वनमाली। बदरपाण्डुवदनो मृदुगण्डं मण्डयन्कनककुण्डललक्ष्म्या ॥ २४ ॥ यदुपतिर्द्विरदराजविहारो यामिनीपतिरिवैष दिनान्ते। मुदितवक्त्र उपयाति दुरन्तं मोचयन्व्रजगवां दिनतापम् ॥ २५ ॥ श्रीशुक उवाच—एवं व्रजस्त्रियो राजन्कृष्णलीलानुगायतीः। रेमिरेऽहःसु तच्चित्तास्तन्मनस्का महोदयाः॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्धे वृन्दावनक्रीडायां गोपिकायुगलगीतं नाम पञ्चत्रिंशोऽध्यायः ॥ ३५ ॥



---

றுமுண்டானவனுமான இந்தச்சந்திரன் ஸௌஹிருத்துக்களான நம்முடைய மனோரதத்தைப் பூர்த்திசெய்யவேண்டி இதோவருகிறுன். (22–23) ஸ்வல்ப மதத்தினுல் கலங்கின நேத்திரங்களை யுடையவனும், தனது ஸௌஹிருத்துக்களான நமக்குச் சந்தோஷத்தை தருபவனும், வனமாலையை யணிந்தவனும், ஸ்வல்பம் பழுத்த இலந்தைப் பழம்போன்று வெளுத்த முகமுள்ளவனும், பொன்மயமான குண்டலத்தின் காந்தியினுல் மெதுவான கன்னங்களைப் பிரகாசப்படுத்திக்கொண்டிருப்பவனும், சிறந்த யானையினுடையதுபோன்ற நடையையுடையவனும், தெளிந்த முகமுள்ளவனும் யாதவர்களின் பதியுமான இந்தக் கிருஷ்ணன் இரவுக்குப் பதியான சந்திரன் போல கோகுலத்திலுள்ள பசுக்களான நம்முடைய கடக்கவியலாத பகற்காலத்திய தாபத்தைப் போக்கவேண்டி மாலையில் நமதருகில் வருகிறுன். (24–25) ஸ்ரீசுகர் சொல்லலுற்றுர்—ஹே ராஜன்! இவ்விதம் கோபஸ்திரீகள் கிருஷ்ணனுடைய லீலைகளைக் கானஞ்செய்கின்றவர்களாகவும், அவரிடம் சென்ற ஜீவிதத்தை யுடையவர்களாகவும், அவரையே மனத்தால் ஸங்கற்பிக்கின்றவர்களாகவும், அதன் மூலமேற்பட்ட சந்தோஷத்தை யுடையவர்களாகவும் கொண்டு பகற்காலங்களில் சந்தோஷித்து வந்தனர். (26) (எ–று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண தசமஸ்கந்த பூர்வார்த்தத்தில் பிருந்தாவனக்ரீடையில் கோபிகாயுகளகீதம் என்ற முப்பத்தைந்தாவது அத்தியாயம் முற்றிற்று.



## अथ षट्त्रिंशोऽध्यायः ॥

श्रीशुक उवाच—अथ तर्ह्यागतो गोष्ठमरिष्टो वृषभासुरः। महीं महाककुत्कायः कम्पयन्खुरविक्षताम् ॥ १ ॥ रम्भमाणः खरतरं पदा च विलिखन्महीम्। उद्यम्य पुच्छं वप्राणि विषाणाग्रेण चोद्धरन् ॥ २ ॥ किञ्चित्किञ्चिच्छकृन्मुञ्चन्मूत्रयंस्तब्धलोचनः। यस्य निर्ह्रादितेनाङ्ग निष्ठुरेण गवां नृणाम् ॥ ३ ॥ पतन्त्यकालतो गर्भाः स्रवन्ति स्म भयेन वै। निर्विशन्ति

---

### முப்பத்தாறுவது அத்தியாயம்.

(ஆ-கை) षट्त्रिंशे तु हतेऽरिष्टे नारदोक्त्या बलाच्युतौ।
वसुदेवसुतौ ज्ञात्वा कंसोऽक्रूरं समादिशत् ॥ १ ॥
गोपीरासान्तरायातं शङ्खचूडं निहत्य सः।
अहन् गोपीमहानन्दासहं दुष्टमरिष्टकम् ॥ २ ॥

(த-ரை) அரிஷ்டன் கொல்லப்பட்டதும், கம்ஸன் நாரதருடைய வார்த்தையினால் ராமகிருஷ்ணர்களை வசுதேவருடைய புத்திரர்களாக அறிந்துகொண்டு அக்ரூரரை அனுப்பினான். அந்தக் கிருஷ்ணன் கோபிகைகளின் ராஸக்ரீடையின் நடுவில்வந்தவனான சங்கசூடனைக் கொன்றுவிட்டுக் கோபிகைகளுக்கேற்பட்ட அதிக ஆனந்தத்தைப் பொறுக்காதவனான துஷ்ட அரிஷ்டாசுரனையும் கொன்றார் என இந்த முப்பத்தாறுவது அத்தியாயத்தினுபதேசிக்கப்படுகிறது. (1-2)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—பிறகு அப்பொழுது விருஷபத்தினுடைய ஸ்வரூபமுள்ள அரிஷ்டன் என்ற அசுரன் பெரியகொண்டையையும் சரீரத்தையு முடையவனும், குளம்பினால் பிளக்கப்பட்ட பூமியை அசையச் செய்கின்றவனும், பயங்கரமாக இருக்கும்படி கர்ஜிக்கின்றவனும், காலினால் பூமியைக் கீறிக்கொண்டும், வாலை உயரதூக்கிக்கொண்டும் கரைகளைக் கொம்பின் நுனியினால் பெயர்த்துக் கொண்டும், கொஞ்சம் கொஞ்சம் சாணம் போட்டுக் கொண்டும், மூத்திரம் விட்டுக்கொண்டும் கோகுலத்தை வந்தடைந்தான். ஹே அங்க! கொடூரமான எவனுடைய கர்ஜனத்தினாலுண்டான பயத்தினால் பசுக்களுடையவும், ஸ்திரீகளுடையவும் ஐங்

घना यस्य ककुद्यचलशङ्कया ॥ ४ ॥ तं तीक्ष्णशृङ्गमुद्वीक्ष्य गोप्यो गोपाश्च तत्रसुः । पशवो दुद्रुवुर्भीता राजन्सन्त्यज्य गोकुलम् ॥ ५ ॥ कृष्ण कृष्णेति ते सर्वे गोविन्दं शरणं ययुः । भगवानपि तद्वीक्ष्य गोकुलं भयविद्रुतम् ॥ ६ ॥ मा भैष्टेति गिराश्वास्य वृषासुरमुपाह्वयत् । गोपालैः पशुभिर्मन्द त्रासितैः किमसत्तम ॥ ७ ॥ बलदर्पहाऽहं दुष्टानां त्वद्विधानां दुरात्मनाम् । इत्यास्फोट्याच्युतोऽरिष्टं तलशब्देन कोपयन् ॥ ८ ॥ सख्युरंसे भुजाभोगं प्रसार्यावस्थितो हरिः । सोऽप्येवं कोपितोऽरिष्टः खुरेणावनिमुल्लिखन् । उद्यत्पुच्छभ्रमन्मेघः क्रुद्धः कृष्णमुपाद्रवत् ॥ ९ ॥ अग्रन्यस्तविषाणाग्रः स्तब्धासृग्लोचनोऽच्युतम् । कटाक्षिप्याद्रवत्तूर्णमिन्द्रमुक्तोऽशनिर्यथा ॥ १० ॥

---

தாறுமாதத்திய கர்ப்பங்கள் உடனேவெளியில் விழுந்தும், நான்கு மாதங்களுக்குட்பட்ட கர்ப்பங்கள் ஸ்ரவித்தும் (கலைந்தும்) போயின வோ, எவனது கொண்டையில் மேகங்கள் மலையென்ற சங்கை யுடன் ப்ரவேசித்தனவோ கூர்மையான கொம்புள்ள அவனைக் கண்டு ஹே ராஜன்! கோபாலர்களும் கோபிகைகளும் நடுங்கினர். பசுக்கள் பயந்தனவாய்க் கோகுலத்தைவிட்டு ஓட்டம் பிடித்தன. (1–5) அவர்கள் யாவரும் ஹே கிருஷ்ண! ஹே கிருஷ்ண! எனக் கதறிக்கொண்டு கோவிந்தனைச் சரண்புகுந்தனர். பகவானும் பயத் தாலோடும் அந்தக் கோகுலத்தைக் கண்ணுற்று பயப்படாதீர் என வார்த்தையினால் தேற்றி 'ஹே அஸத்தம! ஹே மந்த! பயந்த கோ பாலர்களாலும் பசுக்களாலும் யாதுபயன்' என விருஷபாஸுரனை யழைத்தார். (6–7) 'நான் அன்றோ உன்போன்றவர்களும் கெட்ட எண்ணமுள்ளவர்களுமான துஷ்டர்களின் பலம் கொழுப்பு இவற் றை யழிப்பவன்' என்று சொல்லிக்கொண்டும் கையினால் தோளைத் தட்டிக்கொண்டும், அரிஷ்டனைக் கோபிக்கச் செய்துகொண்டும் அச் யுதனான ஹரியானவர் தோழனுடைய தோளில் கையைத் தொங்க விட்டுக்கொண்டும் நின்றார். இவ்விதம் கோபமூட்டப்பட்ட அந்த அஸுரனும் கோபங்கொண்டு, குளம்பின் நுனியினால் பூமியைக் கிறிக்கொண்டும், உயரத்தூக்கப்பட்ட வாலினால் சுத்தும்படி செய் யப்பட்ட மேகங்களையுடையவனாய்க் கொண்டும் கிருஷ்ணனைக் குறித்து ஓடிவந்தான். (8–9)

गृहीत्वा शृङ्गयोस्तं वा अष्टादश पदानि सः। प्रत्यपोवाह भगवान्गजः प्रतिगजं यथा ॥ ११ ॥ सोऽपविद्धो भगवता पुनरुत्थाय सत्वरः। आपतत्स्विन्नसर्वाङ्गो निःश्वसन्क्रोधमूर्छितः ॥ १२ ॥ तमापतन्तं स निगृह्य शृङ्गयोः पदा समाक्रम्य निपात्य भूतले। निष्पीडयामास यथार्द्रमम्बरं कृत्वा विषाणेन जघान सोऽपतत् ॥ १३ ॥ असृग्वमन्मूत्रशकृत्समुत्सृजन्क्षिपंश्च पादाननवस्थितेक्षणः। जगाम कृच्छ्रं निरृतेरथ क्षयं पुष्पैः किरन्तो हरिमीडिरे सुराः ॥ १४ ॥

एवं ककुद्मिनं हत्वा स्तूयमानः स्वजातिभिः। विवेश गोष्ठं सबलो गोपीनां नयनोत्सवः॥१५॥ अरिष्टे निहते दैत्ये कृष्णेनाद्भुतकर्मणा। कंसा-

---

எதிரில் நீட்டப்பட்ட கொம்பின் நுனியையுடையவனுய்க் கொண்டும், அசைவற்றதும் ரக்தத்துக்கொப்பானதுமான கண்களையுடையவனுய்க் கொண்டும், இந்திரனுல் விடப்பட்ட வஜ்ராயுதம் போல கடைக்கண்ணினுல் குறுக்காகப்பார்த்துக்கொண்டும் அச்யுதனைக்குறித்து ஓடிவந்தான். (10) பகவானுன அந்தக கிருஷ்ணன் அவனை இருகொம்புகளிலும் பிடித்துக்கொண்டு யானையானது சத்துரு யானையைப்போல பதினெட்டடிதூரம் பின்னுல் தள்ளினுர். (11) பகவானுல் தள்ளப்பட்ட அவன் திரும்பவும் எழுந்து வியர்த்த எல்லா அங்கங்களையு முடையவனுகவும், பெருமூச்சு விடுகின்றவனுகவும் கோபத்தினுல் கலங்கினவனுகவுமாகி வேகமாக ஓடிவந்தான். (12) ஓடிவருகின்ற அவனைக் கிருஷ்ணன் இருகொம்புகளிலும் பிடித்து பூமியில் தள்ளிக் காலினுல் துகைத்து நனைந்ததுணியைப் போலக்கசக்கி அவனது கொம்பைப் பிடுங்கிக்கொண்டு அக்கொம்பினுல் அடித்தார். அவனும் விழுந்தான். (13) ரக்தத்தைக் கக்கிக்கொண்டும், மூத்திரம் சாணம் இவற்றை வெளிப்படுத்திக் கொண்டும், கால்களை உதறிக்கொண்டும், அசைகின்ற கண்ணுள்ளவனுய்க் கொண்டும் கஷ்டத்தை யடைந்து யமனுடைய வீட்டையடைந்தான். பிறகு தேவர்கள் புஷ்பங்களை வாரி இறைக்கின்றவர்களாய் கிருஷ்ணனை ஸ்துதித்தனர். (14)

இவ்விதம் விருஷபாசுரனைக் கொன்று தனது ஜாதி ஜனங்களால் ஸ்துதிக்கப்படுகின்றவராய் பலராமனுடன் கூட கோபிகை

**याथाह भगवान्नारदो देवदर्शनः॥ १६ ॥ यशोदायाः सुतां कन्यां देवक्याः कृष्णमेव च। रामं च रोहिणीपुत्रं वसुदेवेन बिभ्यता॥ १७॥ न्यस्तौ स्वमित्रे नन्दे वै याभ्यां ते पुरुषा हताः। निशम्य तद्भोजपतिः कोपात्प्रचलितेन्द्रियः॥ १८ ॥ निशातमसिमादत्त वसुदेवजिघांसया। निवारितो नारदेन तत्सुतौ मृत्युमात्मनः ॥ १९ ॥ ज्ञात्वा लोहमयैः पाशैर्बबन्ध सह भार्यया। प्रतियाते तु देवर्षौ कंस आभाष्य केशिनम्॥ २० ॥ प्रेषयामास हन्येतां**

---

களின் கண்களுக்கு உருவமெடுத்த உத்ஸவரூபரான கிருஷ்ணன் கோகுலத்தில் பிரவேசித்தார். (15) அத்புதமான கர்மாவையுடையவரான கிருஷ்ணனுல் அரிஷ்டன் என்ற அஸுரன் கொல்லப்பட்டதும், பிறகு ஈஸ்வரனுடைய ஸங்கல்பமறிந்தவரும் பகவானுமான நாரதர் கம்ஸனிடம் வந்து தேவகியின் எட்டாவது கர்ப்பமாகப் பிரசித்தியை யடைந்த கன்னிகை யசோதையின் பெண் என்பதையும், யசோதையின் புத்திரனுகப் பிரஸித்திபெற்ற கிருஷ்ணன் தேவகியின் புத்திரன் என்பதையும், * ரோஹிணியின் புத்திரனுகச் சொல்லப்படும் பலராமன் தேவகியின் ஏழாவது கர்ப்ப மென்பதையும், எந்த இருவர்களால் உனது வேலைக்காரர்கள் கொல்லப்பட்டனரோ அவ்விருவரும் உன்னிடமிருந்து பயந்தவரான வசுதேவரால் தனதுமித்திரனன நந்தகோபரிடத்தில் அடைக்கலமாக வைக்கப்பட்டனர் என்பதையும் சொன்னுர். கம்ஸன் அதைக்கேட்டுக் கோபத்தினுல் கலங்கின இந்திரியங்களை யுடையவனுய் வசுதேவரைக் கொல்லவேண்டுமென்ற விருப்பத்துடன் கூர்மையான கத்தியைக் கையிலெடுத்தான். நாரதரால் தடுக்கப்பட்டவனுய் அவரது புத்திரர்களைத் தனக்கு மிருத்யுக்களாக அறிந்துகொண்டு இரும்புமயங்களான சங்கிலிகளினுல் பாரியையுடன்கூட வசுதேவரைக் கட்டினுன். (16–19) நாரதர் திரும்பிப்போனதும் கம்ஸன் கேசி என்ற அஸுரனை அழைத்து உன்னுல் ராமகிருஷ்ணர்கள் கொல்லப்படவேண்டும் என்று சொல்லியனுப்பினுன். (20) பிறகு போஜராஜ

---

* நந்தகோபரின் புத்திரனுக எண்ணப்படும் பலராமன் வசுதேவரின் பாரியையான ரோஹிணியின் புத்திரன் என்பதையும் என வேறுபொருளும் ஸ்ரீதரீயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

भवता रामकेशवौ। ततो मुष्टिकचाणूरशलतोशलकादिकान् ॥२१॥ अमात्यान्हस्तिपांश्चैव समाहूयाऽह भोजराट्। भो भो निशम्यतामेतद्वीरचाणूरमुष्टिकौ ॥२२॥ नन्दव्रजे किलासाते सुतावानकदुन्दुभेः। रामकृष्णौ ततो मह्यं मृत्युः किल निदर्शितः॥२३॥ भवद्भ्यामिह संप्राप्तौ हन्येतां मल्ललीलया। मञ्चाः क्रियन्तां विविधा मल्लरङ्गपरिश्रिताः। पौरा जानपदाः सर्वे पश्यन्तु स्वैरसंयुगम् ॥ २४ ॥ महामात्र त्वया भद्र रङ्गद्वार्युपनीयताम्। द्विपः कुवलयापीडो जहि तेन ममाहितौ ॥ २५ ॥ आरभ्यतां धनुर्यागश्चतुर्दश्यां यथाविधि। विशसन्तु पशून्मेध्यान्भूतराजाय मीढुषे ॥ २६ ॥

इत्याज्ञाप्यार्थतन्त्रज्ञ आहूय यदुपुङ्गवम्। गृहीत्वा पाणिना पाणिं ततोऽक्रूरमुवाच ह ॥ २७ ॥ भो भो दानपते मह्यं क्रियतां मैत्रमादृतः।

---

ஞன கம்ஸன் முஷ்டிகன், சாணூரன், சலன், தோசலகன் முதலிய மந்திரிகளையும், யானைப்பாகர்களையும் அழைத்து ஹே வீரர்களான சாணூர முஷ்டிகர்களே! கேளுங்கள். வஸுதேவருடைய புத்திரர்களான ராமகிருஷ்ணர்கள் நந்தகோகுலத்திலிருக்கின்றனரன்றோ. அவர்களாலன்றோ எனக்கு மரணமானது முன்னர் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இவ்விடம் வந்த அவர்கள் மல்ல லீலையினுல் உங்களால் கொல்லப்படவேண்டும். (21–23) மல்லர்கள் விளையாடுவதற்குப் பொருத்தங்களான பற்பல மஞ்சங்கள் (காலரிகள்) செய்யப்படவேண்டும். பட்டினத்திலும் தேசத்திலுமுள்ள ஜனங்கள் யாவரும் ஸ்வச்சந்தமான சண்டையைப் பார்க்கட்டும். (24) ஹேமஹாமாத்ர! ஹே பத்ர! உன்னுல் குவலயாபீடமென்ற யானையானது நர்த்தனசாலையின் வாயிற்படியில் கொண்டுவந்து நிறுத்தப்படட்டும். அந்த யானையினுல் எனது சத்ருக்களைக்கொல்லுவாயாக. (25) சதுர்த்தசியன்று தனுர்யாகமானது முறைப்படி ஆரம்பிக்கப்படட்டும். வேண்டியவரைத் தருகின்ற பூதராஜனையும் பொருட்டு பரிசுத்தங்களான பசுக்களைக்கொல்லுங்கள். (26) என அர்த்த தந்திரமறிந்தவனுன கம்ஸன் ஆக்ஞையிட்டுப் பிறகு யாதவஸ்ரேஷ்டரான அக்ரூரரை அழைத்துத் தனது கையினுல்அவரது கையைப் பிடித்துச் சொல்லத்தொடங்கினுன். (27)

नान्यस्त्वत्तो हिततमो विद्यते भोजवृष्णिषु ॥ २८ ॥ अतस्त्वामाश्रितः सौम्य कार्यगौरवसाधनम् । यथेन्द्रो विष्णुमाश्रित्य स्वार्थमध्यगमद्विभुः ॥२९॥ गच्छ नन्दव्रजं तत्र सुतावानकदुन्दुभेः । आसाते ताविहानेन रथेनानय मा चिरम् ॥ ३० ॥ निसृष्टः किल मे मृत्युर्देवैर्वैकुण्ठसंश्रयैः । तावानय समं गोपैर्नन्दाद्यैः साभ्युपायनैः ॥ ३१ ॥ घातयिष्य इहानीतौ कालकल्पेन हस्तिना । यदि मुक्तौ ततो मल्लैर्घातये वैद्युतोपमैः ॥ ३२ ॥ तयोर्निहतयोस्तप्तान्वसुदेवपुरोगमान् । तद्बन्धून्निहनिष्यामि वृष्णिभोजदशार्हकान् ॥३३॥ उग्रसेनं च पितरं स्थविरं राज्यकामुकम् । तद्भ्रातरं देवकं च ये चान्ये विद्विषो मम ॥ ३४ ॥ ततश्चैषा मही मित्र भवित्री नष्टकण्टका । जरासन्धो

---

ஓ அக்ரூரரே! என் விஷயத்தில் ஆதரவுடன் மித்திரனுக்குரிய காரியம் செய்யப்படவேண்டும். போஜர்களுக்குள்ளோ, யாதவர்களுக்குள்ளோ உம்மைக்காட்டிலும் மிக்க ஹிதத்தைச்செய்பவன் ஒருவனுமில்லையன்றோ. (28) ஆகவே ஹே ஸௌம்ய! விபுவான இந்திரன் விஷ்ணுவை யாஶ்ரயித்துத் தனது ப்ரயோஜனத்தை எவ்விதமடைந்தானோ அவ்விதம் பெரியகாரியத்தை முடித்தலானது உம்மையாஶ்ரயித்திருக்கிறது. ஆகவே நந்தகோகுலம் செல்லும். அங்கு வஸுதேவரின் புத்திரர்களிருக்கின்றனர். அவர்களை இந்தத் தேரினல் இங்கு அழைத்துவாரும். தாமதிக்காதீர். விஷ்ணுவையாஶ்ரயித்தவர்களான தேவர்களினல் அவர்கள் எனக்கு மிருத்யுக்களாக ஸிருஷ்டிக்கப்பட்டிருக்கின்றனர். ஆகவே உபாயனங்களுடன் கூடினவர்களான நந்தகோபர் முதலிய கோபாலர்களுடன் கூட அவர்களை அழைத்துவாரும். (29–31) இங்கு அழைத்துவரப்பட்ட அவர்களை யமனுக்கொப்பான யானையினல் கொல்ல ஏற்பாடு செய்கிறேன். அதனின்றும் தப்புவார்களாயின் இடிக்கொப்பானவர்களான மல்லர்களினல் கொல்லமுயர்ச்சிக்கிறேன். (32) அவ்விருவரும் கொல்லப்பட்டதும் தாபத்தையடைந்தவர்களான வஸுதேவர் முதலியோர்களையும், யாதவர், போஜர், தசார்ஹகர் ஆகிய அவர்களின் பந்துக்களையும், ராஜ்யத்திலாசைகொண்டவனும் கிழவனுமான பிதாவான உக்ரசேனனையும், அவனது ப்ராதாவான தேவகனையும், பின்னும் எனது சத்துருக்கள் எவர்களோ அவர்களையும்

मम गुर्द्विविदो दयितः सखा ॥ ३५ ॥ शम्बरो नरको बाणो मय्येव कृतसौहृदाः । तैरहं सुरपक्षीयान्हत्वा भोक्ष्ये महीं नृपान् ॥ ३६ ॥ एतज्ज्ञात्वाऽऽनय क्षिप्रं रामकृष्णाविहार्भकौ । धनुर्मखनिरीक्षार्थं द्रष्टुं यदुपुरश्रियम् ॥३७॥ अक्रूर उवाच—राजन्मनीषितं सध्र्यक् तव स्वावद्यमार्जनम् । सिद्ध्यसिद्ध्योः समं कुर्याद्दैवं हि फलसाधनम् ॥ ३८ ॥ मनोरथान्करोत्युच्चैर्जनो दैवहतानपि । युज्यते हर्षशोकाभ्यां तथाप्याज्ञां करोमि ते ॥ ३९ ॥ श्रीशुक उवाच—एवमादिश्य चाक्रूरं मन्त्रिणश्च विसृज्य सः । प्रविवेश गृहं कंसस्तथाक्रूरः स्वमालयम् ॥ ४० ॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्धेऽक्रूरसंप्रेषणं नाम षट्त्रिंशोऽध्यायः ॥ ३६ ॥

—•—

நாசஞ்செய்துவிடுகிறேன். (33–34) ஹே மித்ர! பிறகு இந்தப் பூமியானது சத்ருவற்றதாகவாகிவிடும். ஜராஸந்தனே எனது மாமனார். த்விவிதனே எனக்குவேண்டிய தோழன். சம்பரன், நரகன், பாணன் ஆகியவர்கள் என்னிடமே அதிகம் ஸ்நேஹமுடையவர்கள். நான் அவர்களைக்கொண்டு தேவவகுப்பைச் சேர்ந்தவர்களைக்கொன்று பூமியையும் அரசர்களையும் ஆளப்போகின்றேன். (35–36) இதை மனத்தில் வைத்துக்கொண்டு குழந்தைகளான ராமகிருஷ்ணர்களை தனுர்யாகத்தைப் பார்க்கவேண்டியும், யதுபுரத்தின் அழகைப் பார்க்கவேண்டியுமாக இங்கு சீக்கிரமழைத்து வருவீராக. (37) அக்ரூரர் சொல்லலுற்றார்—ஹே ராஜன்! உன்னுடைய எண்ணமும், தனக்குவரும் மரணத்தைத் தடுப்பதும் போற்றற்குரியதே. ஆனால் காரியத்தின் ஸித்தி அஸித்தி இவ்விரண்டிலும் புத்திமான் ஸாம்யத்தைச் செய்யவேண்டும். தைவமன்றோ பலன் தரக்கூடியதாகவிருக்கிறது. (38) ஜனமானது தைவத்தினால் கெடுக்கப்படினுங்கூட மேலான மனோரதங்களைச் செய்கிறது. அதனால் சந்தோஷம் துக்கம் இவற்றுடனும் கூடுகிறது. ஆயினும் உமது ஆக்ஞையை நான் செய்கிறேன் என்றார். (39) அந்தக் கம்ஸன் அக்ரூரரையும், மந்திரிகளையும் இவ்விதமாக்ஞாபித்தனுப்பிவிட்டுத் தனது வீட்

## अथ सप्तत्रिंशोऽध्यायः ॥

श्रीशुक उवाच—केशी तु कंसप्रहितः खुरैर्महीं महाहयो निर्जरयन्मनोजवः। सटावधूताभ्रविमानसङ्कुलं कुर्वन्नभो हेषितभीषिताखिलः ॥१॥

டில் ப்ரவேசித்தான். அவ்விதமே அக்ரூரரும் தனதிருப்பிடத்தை யடைந்தார். (40) (எ-று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண தசமஸ்கந்த
பூர்வார்த்தத்தில் அக்ரூர ஸம்ப்ரேஷணம் என்ற முப்பத்தாறுவது
அத்தியாயம் முற்றிற்று.



## முப்பத்தேழாவது அத்தியாயம்.

(அ-கை) सप्तत्रिंशे हते केशिन्यच्युतो भाविकर्मभिः।
नारदेन स्तुतः क्रीडन् व्योमासुरमथावधीत् ॥ १ ॥
वृषवेषासुरं यद्वत्केशिनं हयवेषिणम् ।
कंसप्राणसखं हत्वा कंसं व्यसुमिवाकरोत् ॥ २ ॥

(க-ரை) கேசி என்ற அஸுரன் கொல்லப்பட்டதும் எதிர்காலத்திய கர்மங்களைக்காட்டி ஸ்ரீநாரதரால் ஸ்துதிக்கப்பட்டவரும் விளையாடிக்கொண்டிருப்பவருமான ஸ்ரீக்ருஷ்ணன் பிறகு வ்யோமன் என்ற அஸுரனைக் கொன்றார். விருஷபவேஷங்கொண்ட அஸுரனை எவ்விதம் கொன்றாரோ அவ்விதமே குதிரைவேஷங் கொண்டவனும், கம்ஸனுடைய உயிர்த்தோழனுமான அஸுரனைக் கொன்று கம்ஸனை உயிரற்றவன் போலச் செய்துவிட்டார் என இந்த முப்பத்தேழாவது அத்தியாயத்திலுபதேசிக்கப்படுகிறது.

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—கம்ஸனால் அனுப்பப்பட்டவனும், பெரிய குதிரையின் ரூபமுள்ளவனும், மனோவேகமுள்ளவனும், ஆகாசத்தைப் பிடரிமயிரினால் அசைக்கப்பட்ட மேகங்கள் விமானங்கள் இவை நிறைந்ததாகச் செய்கின்றவனும், விசாலமான நேத்திரங்களுள்ளவனும், பயங்கரமான வாயினோட்டையை யுடையவனும், பெரிய கழுத்தையுடையவனும், கருத்த பெரியமேகத்துக்

(विशालनेत्रो विकटास्यकोटरो बृहद्गलो नीलमहाम्बुदोपमः। दुराशयः कंसहितं चिकीर्षुर्व्रजं स नन्दस्य जगाम कम्पयन् ॥) तं त्रासयन्तं भगवान्स्वगोकुलं तद्धेषितैर्वालविघूर्णिताम्बुदम्। आत्मानमाजौ मृगयन्तमग्रणीरुपाह्वयत्स व्यनदन्मृगेन्द्रवत् ॥ २ ॥ स तं निशाम्याभिमुखो मुखेन खं पिबन्निवाभ्यद्रवदत्यमर्षणः। जघान पद्भ्यामरविन्दलोचनं दुरासदश्चण्डजवो दुरत्ययः ॥ ३ ॥ तद्वञ्चयित्वा तमधोक्षजो रुषा प्रगृह्य दोर्भ्यां परिविध्य पादयोः। सावज्ञमुत्सृज्य धनुःशतान्तरे यथोरगं तार्क्ष्यसुतो व्यवस्थितः॥ ४ ॥ स लब्धसंज्ञः पुनरुत्थितो रुषा व्यादाय केशी तरसापतद्ध-

---

கொப்பானவனும், கெட்ட எண்ணமுள்ளவனும், கம்ஸனுக்கு நன்மையைச் செய்யவிருப்பமுள்ளவனுமான கேசியென்ற அந்த அஸுரனேவெனில் கனைப்பினல் உலகம் யாவையும்பயமுறுத்திக்கொண்டும், குளம்புகளினல் பூமியைப் பிளந்துகொண்டும், யாவையும் நடுங்கும்படி செய்துகொண்டும் நந்தகோபருடைய வ்ரஜத்தைக் குறித்துவந்தான். (1) அத்தகைய கனைப்புகளினல் தனது கோகுலத்தை நடுங்கும்படி செய்கின்றவனும், வாலினல் அசைக்கப்பட்ட மேகங்களையுடையவனும், தன்னைப் போர்செய்வதற்காகத் தேடுகின்றவனுமான அந்தக் கேசியை பகவானுன அந்தக்கோபாலன் எதிர்த்துச்சென்று தனது ஸமீபம்வரும்படி அழைத்தார். அவன் ஸிம்ஹம்போலக் கர்ஜித்தான். (2) பிறகு மிக்கக் கோபங்கொண்டவனும், பிறரால் அவமதிக்கமுடியாதவனும், உக்கிரமான வேகமுள்ளவனும், அதிக்கிரமிக்கமுடியாதவனுமான (அவன் கிருஷ்ணனைக் கண்டு) முகத்தால் ஆகாசத்தைக்குடிப்பவன்போல வாயைத்திறந்துகொண்டு எதிர்த்து ஓடிவந்து புண்டரீகாக்ஷனை பின்கால்களினுலுதைத்தான். (3) அதோக்ஷஜனுன கிருஷ்ணன் அந்தஉதைபடாது விலகிக்கொண்டு அவனைக்கொல்லவேண்டி கைகளினல் அவனது பின்புறத்திலுள்ள கால்களில் பிடித்துக்கொண்டு சுழற்றி பாம்பைக் க்ருடன்போல அலக்ஷியமாக நூறுவிற்கடைதூரம் வீசியெறிந்துவிட்டு அவ்விடத்திலேயே நின்றார். (4) அந்தக் கேசியானவன் ப்ரக்ஞையையடைந்து எழுந்து வாயைத்திறந்துகொண்டு திரும்பவும் ஹரியைக்குறித்து வேகமாகவோடிவந்தான். அவரும் சிரித்துக்

रिम्। सोऽप्यस्य वक्त्रे भुजमुत्तरं स्मयन्प्रवेशयामास यथोरगं बिले ॥ ५ ॥ दन्ता निपेतुर्भगवद्भुजस्पृशस्ते केशिनस्तप्तमयस्पृशो यथा। बाहुश्च तद्देहगतो महात्मनो यथाऽऽमयः संववृधे उपेक्षितः॥६॥ समेधमानेन स कृष्णबाहुना निरुद्धवायुश्चरणांश्च विक्षिपन्। प्रस्विन्नगात्रः परिवृत्तलोचनः पपात लेण्डं विसृजन्क्षितौ व्यसुः॥ ७ ॥ तद्देहतः कर्कटिकाफलोपमाद्व्यसोरपाकृष्य भुजं महाभुजः। अविस्मितोऽयत्नहतारिरुत्स्मयैः प्रसूनवर्षैर्दिविषद्भिरीडितः॥ ८ ॥

देवर्षिरुपसङ्गम्य भागवतप्रवरो नृप। कृष्णमक्लिष्टकर्माणं रहस्येतदभाषत ॥९॥ कृष्ण कृष्णाप्रमेयात्मन्योगेश जगदीश्वर। वासुदेवाखिलावास

---

கொண்டு புற்றில் பாம்பைப்போல இவனுடைய வாயில் இடது கையை நுழைத்தார். (5) பகவானுடைய புஜஸம்பந்தம்பெற்ற கேசியினுடைய அந்தப்பற்கள் பழுக்கக் காய்ச்சின இரும்பினுல் தொடப்பட்டவைபோல உதிர்ந்துவிட்டன. அவனது வாயில் நுழைந்த மஹாத்மாவான ஸ்ரீகிருஷ்ணனுடைய கையும் அலக்ஷியஞ்செய்யப்பட்ட ஜலோதரரோகம்போல வளரவாரம்பித்தது. (6) அவன் நன்கு வளர்ந்த ஸ்ரீகிருஷ்ணனுடைய கையினுல் தடுக்கப்பட்ட மூச்சுக்காற்றையுடையவனுய்க்கொண்டும், கால்களை உதறிக்கொண்டும், வியர்த்த சரீரமுள்ளவனுய்க்கொண்டும், சுழலுகின்ற கண்களையுடையவனுய்க்கொண்டும், சாணத்தைப் போட்டுக்கொண்டும் உயிரையிழந்து பூமியில் விழுந்தான். (7) கர்க்காரிப்பழத்துக்கொப்பானதும், உயிரற்றதுமான அவனது தேஹத்திலிருந்து கையை இழுத்துக்கொண்டு அனுயாஸமாகச் சத்துருவைக் கொன்றவரும் மஹாபுஜருமான ஸ்ரீகிருஷ்ணன் ஆச்சரியத்தையடைந்தவர்களும், பூமாரி பொழிகின்றவர்களுமான தேவர்களால் ஸ்துதிக்கப்படுகின்றவராய் அவ்விடத்திலிருந்தார். (8)

ஹே ந்ருப! பகவத்பக்தர்களுக்குள் சிறந்தவரான நாரதர் கிலேசமின்றி சத்துருநாசனரூபமான காரியத்தைச்செய்த ஸ்ரீகிருஷ்ணனிடம் வந்து ரஹஸ்யத்தில் பின்வருமாறு சொல்லத்தொடங்கினர். (9) ஹே கிருஷ்ண! கிருஷ்ண! அளக்கவியலாத ஸ்வரூபமுடையவரே! ஹே யோகேஶ! ஹே ஜகதீஶ்வர! ஹே வாஸு-

सात्वतां प्रवर प्रभो ॥१०॥ त्वमात्मा सर्वभूतानामेको ज्योतिरिवैधसाम्। गूढो गुहाशयः साक्षी महापुरुष ईश्वरः॥ ११॥ आत्मनात्माश्रयः पूर्वं मायया ससृजे गुणान्। तैरिदं सत्यसङ्कल्पः सृजस्यत्स्यवसीश्वरः॥१२॥ स त्वं भूधरभूतानां दैत्यप्रमथरक्षसाम्। अवतीर्णो विनाशाय सेतूनां रक्षणाय च ॥१३॥ दिष्ट्या ते निहतो दैत्यो लीलयायं हयाकृतिः। यस्य हेषितसंत्रस्तास्त्यजन्त्यनिमिषा दिवम्॥ १४॥ चाणूरं मुष्टिकं चैव मल्लानन्यांश्च हस्तिनम्। कंसं च निहतं द्रक्ष्ये परश्वोऽहनि ते विभो॥ १५॥ तस्यानु शङ्खयवनमुराणां नरकस्य च। पारिजातापहरणमिन्द्रस्य च पराजयम् ॥१६॥ उद्वाहं वीर कन्यानां वीर्यशुल्कादिलक्षणम्। नृगस्य मोक्षणं पापाद्द्वारकायां जगत्पते॥ १७॥ स्यमन्तकस्य च मणेरादानं सह भार्यया।

---

தேவ! ஸகலத்துக்கும் இருப்பிடமானவரே! யாதவர்களுக்குள் சிறந்தவரே! ஹே ப்ரபோ! நீர் ஒருவரே எல்லா ப்ராணிகளுக்கும் ஆத்மாவும், விறகுகளுக்குள் நெருப்புப்போல மறைந்து ஹிருதய குஹையில் வஸிப்பவரும், ஸர்வஸாக்ஷியும், மஹாபுருஷனுமான ஈச்வரனுவீர். பிறவற்றினுதவியின்றி ஸ்வதந்திரராகவே முன்னர் மாயையினுல் குணங்களை ஸிருஷ்டிக்கின்றீர். ஸத்யஸங்கல்பரும் ஈச்வரனுமான நீர் அந்தக் குணங்களைக்கொண்டு இந்த ப்ரபஞ்சத்தை ஸிருஷ்டிக்கின்றீர், காக்கின்றீர், அழிக்கின்றீர். அந்த நீர் அரசர்களாக ஜனித்த தைத்தியர், ப்ரமதர், ராக்ஷஸர் இவர்களை நாசமாக்கவேண்டியும், தர்மமார்க்கங்களின் ரக்ஷணத்துக்குவேண்டியும் அவதரித்திருக்கின்றீர். (10–13) எவனது கனைப்பினுல் பயந்த தேவர்கள் தேவலோகத்தை விட்டோடுகின்றனரோ குதிரைவடிவமுள்ள இந்த தைத்தியன் அதிருஷ்ட வசத்தால் உம்மால் விளையாட்டாகவே கொல்லப்பட்டான். (14) ஹே விபோ! நாளை நீக்கி மறுதினத்தில் உம்மால் கொல்லப்பட்ட சாணூரனையும், முஷ்டிகனையும் நான் பார்க்கப்போகின்றேன். (15) அவனுக்குப் பிறகு சங்கன், காலயவனன், முரன், நரகாஸுரன் இவர்களின் வதத்தையும், பாரிஜாதாபஹரணத்தையும், இந்திரனுடைய பராஜயத்தையும், ஹே வீர! வீர்யமாகிற சுல்கத்தையும் கன்னிகைகளின் பக்திமுதலியவற்றையும் நிமித்தமாகக்கொண்ட கன்னிகைகளின் விவாஹத்தை

मृतपुत्रप्रदानं च ब्राह्मणस्य स्वधामतः ॥ ॥ १८ ॥ पौण्ड्रकस्य वधं पश्चात्काशिपुर्याश्च दीपनम् । दन्तवक्त्रस्य निधनं चैद्यस्य च महाक्रतौ ॥ १९ ॥ यानि चान्यानि वीर्याणि द्वारकामावसन्भवान् । कर्ता द्रक्ष्याम्यहं तानि गेयानि कविभिर्भुवि ॥ २० ॥ अथ ते कालरूपस्य क्षपयिष्णोरमुष्य वै । अक्षौहिणीनां निधनं द्रक्ष्याम्यर्जुनसारथेः ॥ २१ ॥ विशुद्धविज्ञानघनं स्वसंस्थया समाप्तसर्वार्थममोघवाञ्छितम् । स्वतेजसा नित्यनिवृत्तमायागुणप्रवाहं भगवन्तमीमहि ॥ २२ ॥ त्वामीश्वरं स्वाश्रयमात्ममायया विनिर्मिता-

---

யும், ஹே ஜகத்பதே! துவாரகையில் பாபத்தினின்றும் நிருகன் என்ற அரசனுடைய மோக்ஷணத்தையும், பாரியையுடன் கூட ஸ்யமந்தகம் என்ற மணியைப் பெறுவதையும், இறந்த ப்ராம்ஹண புத்திரர்களை மஹாகாலபுரத்தினின்றும் திருப்பிக்கொண்டுவந்து கொடுத்ததையும், பிறகு பௌண்ட்ரக வாஸுதேவனுடைய வதத்தையும், காசிபட்டினத்தை எரித்ததையும், பெரிய ராஜஸூய யாகத்தில் சிசுபாலன், தந்தவக்த்ரன் இவர்களின் வதத்தையும், துவாரகையில் வஸிக்கும் நீர் பூமியில் கவிகளினால் கானம்பண்ணத்தகுந்த மற்றும் எந்த லீலைகளைச் செய்யப்போகின்றீரோ அவற்றையும் நான் காணப்போகின்றேன். (16–20)

பிறகு காலரூபியும், இந்தப் பூபாரத்தைக் குறைக்கவெண்ணங்கொண்டவரும் அர்ஜுன ஸாரதியுமான நீர் அக்ஷௌஹிணிகளைக் கொல்லுவதையும் நான் பார்க்கப்போகின்றேன். (21) விசுத்தவிக்ஞானகனரும் (க்ஞானைக மூர்த்தியும்) பரமானந்தரூபமான ஸ்வரூபஸ்திதியினால் எல்லாப்பொருளையுமடைந்தவரும், ஸத்யஸங்கல்பரும், சொந்தமான சித்சக்தியினால் நித்யநிவிருத்தமான மாயாகார்யரூப குணப்ரவாஹத்தையுடையவரும் பகவானுமான உம்மைச் சரணமடைகின்றோம். (22) ஈஸ்வரனும், (யாவையும் தன்வசமாக்குகின்றவரும்) தன்னையே ஆஸ்ரயமாகவுடையவரும் (பிறவற்றையாஸ்ரயிக்காதவரும்) தனக்கு வசப்பட்ட மாயையினால் நிர்மாணஞ் செய்யப்பட்ட மஹத்தத்துவம் முதலியவற்றையுடையவரும், க்ரீடைக்குவேண்டி இப்பொழுது ஸ்வீகரிக்கப்பட்ட மனுஷ்ய சரீரத்தையுடையவரும், யாதவர் விருஷ்ணிகள் ஆகிற பக்தர்களுக்குள் ஸ்ரேஷ்

**शेषविशेषकल्पनम् । क्रीडार्थमद्यात्तमनुष्यविग्रहं नतोऽस्मि धुर्यं यदुवृष्णिसात्वताम् ॥ २३ ॥**

**श्रीशुक उवाच—एवं यदुपतिं कृष्णं भागवतप्रवरो मुनिः। प्रणिपत्याभ्यनुज्ञातो ययौ तद्दर्शनोत्सवः॥ २४ ॥ भगवानपि गोविन्दो हत्वा केशिनमाहवे। पशूनपालयत्पालैः प्रीतैर्व्रजसुखावहः॥ २५ ॥ एकदा ते पशून्पालांश्चारयन्तोऽद्रिसानुषु। चक्रुर्निलायनक्रीडाश्चोरपालापदेशतः ॥ २६ ॥ तत्रासन्कतिचिच्चोराः पालाश्च कतिचिन्नृप। मेषायिताश्च तत्रैके विजह्रुरकुतोभयाः॥ २७ ॥ मयपुत्रो महामायो व्योमो गोपालवेषधृक्। मेषायितानपोवाह प्रायश्चोरायितो बहून्॥ २८ ॥ गिरिदर्यां विनिक्षिप्य नीतं नीतं महासुरः। शिलया पिदधे द्वारं चतुःपञ्चावशेषिताः॥ २९ ॥ तस्य तत्कर्म**

---

டருமான உம்மை வணங்கினவனுகவிருக்கின்றேன். (23) ஸ்ரீசுகர் சொல்லுகின்றார்—பாகவதர்களுக்குள் சிறந்தவரும் அவரது தரிசனத்தினல் ஸந்தோஷத்தையடைந்தவருமான நாரதர் இவ்விதம் சொல்லி யதுபதியான கிருஷ்ணனை வணங்கி விடைபெற்றுக்கொண்டு தன திருப்பிடத்தையடைந்தார். (24) பகவானுன ஸ்ரீகோவிந்தனும் யுத்தத்தில் கேசி என்ற அஸுரனைக்கொன்று கோகுலத்துக்குச் சுகத்தையுண்டுபண்ணுகின்றவராய்க் கொண்டு ப்ரீதியையடைந்த கோபாலர்களுடன் கூடப் பசுக்களைக் காப்பாற்றிவந்தார். (25)

ஒரு ஸமயம் கோபாலர்கள் மலைச்சாரல்களில் பசுக்களைமேய்த்துக்கொண்டு திருடன் என்றும், காப்பவன் என்றுமான வியாஜமாக ஒளித்துப்பிடிக்கும் விளையாட்டுகளைச் செய்துவந்தனர். (26) ஹே ந்ருப! அவர்களுள் சிலர் திருடர்களாகவும், சிலர் காப்பவர்களாகவுமாயினர். அச்சமயம் சிலர் ஆட்டைப்போல வேஷம்போட்டுக்கொண்டு எங்கிருந்தும் பயமற்றவர்களாய் விளையாடினர். (27) மயனுடைய புத்திரனும், மஹாமாயாவியுமான வ்யோமன் என்ற பெரிய அஸுரன் கோபாலர்களின் வேஷத்தைத் தரிக்கின்றவனுய்த் திருடர் வகுப்பில் சேர்ந்து ஆட்டைப்போல வேஷம்போட்டுக்கொண்ட பலரைப் பெரும்பாலும் திருடினன். ஒவ்வொருவராகக் கொண்டுவந்து மலையின் குஹையில் வைத்து குஹாத்வாரத்தை பெரிய பாறையினுல் மறைத்தான். நாலைந்து பெயர்களே வெளியில்

विज्ञाय कृष्णः शरणदः सताम्। गोपान्नयन्तं जग्राह वृकं हरिरिवौजसा ॥ ३० ॥ स निजं रूपमास्थाय गिरीन्द्रसदृशं बली। इच्छन्विमोक्तुमात्मानं नाशक्नोद्ग्रहणातुरः॥ ३१ ॥ तं निगृह्याच्युतो दोर्भ्यां पातयित्वा महीतले। पश्यतां दिवि देवानां पशुमारममारयत् ॥ ३२ ॥ गुहापिधानं निर्भिद्य गोपान्निःसार्य कृच्छ्रतः। स्तूयमानः सुरैर्गोपैः प्रविवेश स्वगोकुलम् ॥३३॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्धे व्योमासुरवधोनाम सप्तत्रिंशोऽध्यायः ॥ ३७ ॥



---

மீதமிருந்தனர். (28–29) ஸாதுக்களுக்கு ரக்ஷணத்தைத்தருகின்ற ஸ்ரீகிருஷ்ணன் அவனுடைய அந்தக்காரியத்தை யறிந்து கோபாலர்களைத் தூக்கிச்செல்லுகின்ற அவனைக் சிங்கம் தனதுவலுவினால் செந்நாயைப் போலப் பிடித்தார். (30) பலமுள்ளவனான அவன் பெரியமலைக்கொப்பான தனது ரூபத்தையடைந்து தன்னைவிடுவித்துக்கொள்ள விருப்பினானாயினும் அவரது பிடிப்பினால் கலங்கினவனாய் அவ்விதம் விடுவிக்கமுடியாதவனாயினான். (31) அச்யுதனான ஸ்ரீகிருஷ்ணன் அவனைப் பிடித்துப் பூமியில்தள்ளி ஆகாசத்தில் தேவர்கள் பார்த்துக்கொண்டிருக்குங்கால் பசுவைக் கொல்லுவதற்கொப்பாகக்கொன்றார். (32) குஹையின் மூடியைப் பிளந்து கஷ்டத்துடன் கோபாலர்களை வெளியேற்றித் தேவர்களாலும் கோபாலர்களாலும் ஸ்துதிக்கப்படுகின்றவராய்த் தனது கோகுலத்தை யடைந்தார். (33) (எ–று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவதமஹாபுராண தசமஸ்கந்த
பூர்வார்த்தத்தில் கேசி வ்யோமாஸுர வதம் என்ற
முப்பத்தேழாவது அத்தியாயம் முற்றிற்று.



## நாராயணீயம்.

यत्नेषु सर्वेष्वपि नावकेशी केशी स भोजेशितुरिष्टबन्धुः।
त्वं सिन्धुजावाप्य इतीव मत्वा सम्प्राप्तवान् सिन्धुजवाजिरूपः॥

(ப-ரை) सर्वेषु=எல்லாவிதமான यत्नेष्वपि = முயர்ச்சிகளிலும் नावकेशी=வீண்போகாதவனும் भोजेशितुः=கம்ஸனுக்கு इष्टबन्धुः=இஷ்டனை பந்துவுமான सः=அந்த केशी=கேசி என்ற அஸுரன் त्वम्=நீர் सिन्धुजावाप्त्यः=ஸிந்துவினின்று முண்டானவளால் (ஸமுத்திரத்தினின்றுமுண்டான லக்ஷ்மியினால்) அடையத்தகுந்தவர் इति=என मत्वेव=எண்ணங்கொண்டவன் போல सिन्धुजवाजिरूपः=ஸிந்து தேசத்திலுண்டான குதிரையின் ரூபமுள்ளவனாய் सम्प्राप्तवान्= வந்து சேர்ந்தான். (346) (எ-று)

गन्धर्वतामेष गतोऽपि रूक्षैर्नादैः समुद्वेजितसर्वलोकः ।
भवद्विलोकावधि गोपवाटीं प्रमर्द्य पापः पुनरापतत्त्वाम् ॥ ३४७ ॥

(ப-ரை) पापः=பாபியான एषः=இவன் गन्धर्वताम्=கந்தர்வத் தன்மையை (குதிரையாகவிருத்தலை) गतोऽपि=அடைந்திருந்தபோதிலுங்கூட रूक्षैः=கொடூரங்களான (காதைத்துளைக்கின்ற) नादैः=சப்தங்களினால் समुद्वेजितसर्वलोकः=நன்கு நடுங்கும்படிசெய்யப்பட்ட எல்லாவுலகங்களையு முடையவனாய் भवद्विलोकावधि=உம்மைப்பார்க்கும் வரை गोपवाटीम्=கோகுலத்தை प्रमर्द्य=கலக்கி पुनः=மறுபடியும் त्वाम्=உம்மைக் குறித்து आपतत्=ஓடிவந்தான். (347) (எ-று)

तार्क्ष्यार्पिताङ्घ्रेस्तव तार्क्ष्य एष चिक्षेप वक्षोभुवि नाम पादम् ।
भृगोः पदाघातकथां निशम्य स्वेनापि शक्यं तदितीव मोहात् ॥

(ப-ரை) तार्क्ष्यार्पिताङ्घ्रेः=கருடனிடத்தில் வைக்கப்பட்ட சரணத்தை யுடையவரான तव=உமமுடைய वक्षोभुवि=மார்பிரதேசத்தில் भृगोः=பிருகு என்ற மஹருஷியினுடைய पदाघातकथाम्=காலாலுதைத்த கதையை निशम्य=கேட்டு स्वेनापि=தன்னாலும் तत्=காலாலுதைத்தல் शक्यम्=செய்யக்கூடியதே इति=என मोहात्=மயக்கத்தினால் मत्वेव=எண்ணினவன்போல एषः=இந்த तार्क्ष्यः=அஸுரன் पादम्=காலை चिक्षेप नाम=வைத்தான் போலும் அதாவது: உதைத்தான்.

प्रवञ्चयन्नस्य खुराञ्चलं द्रागमुञ्च चिक्षेपिथ दूरदूरम् ।
संमूर्छितोऽपि ह्यतिमूर्छितेन क्रोधोष्मणा खादितुमाद्रुतस्त्वाम् ॥

(ப-ரை) अस्य=இவனுடைய खुराञ्चलम्=குளம்பின் நுனியை प्रवञ्चयन्=படாதபடி ஏமாற்றி द्राक्=சீக்கிரமாக अमुञ्च=இவனையும்

दूरदूरम्=வெகுதொலையில் चिक्षेपिथ=வீசி எரிந்தீர். संमूर्छितोऽपि=நன்குமோஹத்தை யடைந்தபோதிலுங்கூட अतिमूर्छितेन=அதிகம் விருத்தியையடைந்த क्रोधोष्मणा=கோபத்தின் வேகத்துடன் त्वाम्=உம்மை खादितुम्=சடிப்பதற்கு வேண்டி आद्रुतो हि=ஓடிவந்தானன்றோ. (349) (எ-று)

त्वं वाहदण्डे कृतधीश्च वाहादण्डं न्यधास्तस्य मुखे तदानीम् ।
तद्वृद्धिरुद्धश्वसनो गतासुः सप्तीभवन्नप्ययमैक्यमागात् ॥ ३५० ॥

(ப-ரை) वाहदण्डे=குதிரையைச் சிக்ஷிப்பதில் कृतधीः=செய்யப்பட்ட புத்தியையுடையவரான त्वञ्च=நீரும் तदानीम्=அப்பொழுது तस्य=அவனுடைய मुखे=வாயில் वाहादण्डम्=பாகுதண்டத்தை न्यधाः=நுழைத்தீர். तद्वृद्धिरुद्धश्वसनः=அந்தப் பாகுதண்டத்தின் வளர்ச்சியினால் வெளிவரமுடியாதபடி தடுக்கப்பட்ட மூச்சையுடைவனாகி गतासुः=உயிரையிழந்தவனான अयम्=இவன் सप्तीभवन्नपि=ஏழாகவானபோதிலும்கூட (குதிரையுருவ மெடுத்திருப்பினுங்கூட) ऐक्यम्=ஒன்றாக இருத்தலை (பகவானுடன் ஐக்கியத்தை) आगात्=அடைந்தான். (350) (எ-று)

आलम्भमात्रेण पशोः सुराणां प्रसादके नूत्न इवाश्वमेधे ।
कृते त्वया हर्षवशात्सुरेन्द्रास्त्वां तुष्टुवुः केशवनामधेयम् ॥ ३५१ ॥

(ப-ரை) पशोः=அஸ்வமாகிற பசுவினுடைய आलम्भमात्रेण=ஹிம்ஸையினால் மட்டும் सुराणाम्=தேவர்களுக்கு प्रसादके=திருப்தியையுண்டுபண்ணுகின்றதும், नूत्न इव=புதுமாதிரியாகவுள்ளதுபோன்றதுமான अश्वमेधे=அஸ்வமேதமென்ற யாகமானது त्वया=உம்மால் कृते सति=செய்யப்பட்டதும் सुरेन्द्राः=தேவஸ்ரேஷ்டர்கள் केशवनामधेयम्=கேசவன் என்ற பெயருள்ள त्वाम्=உம்மை हर्षवशात्=ஸந்தோஷத்தை முன்னிட்டு तुष्टुवुः=ஸ்தோத்திரஞ் செய்தனர். (351)

குறிப்பு—பொதுவாய் உலகில் அஸ்வமாகிற பசுவை ஹிம்ஸித்து அதன் வபையைக் கொண்டு ஹோமஞ்செய்வதாலேயே அஸ்வமேதமென்ற யாகஞ்செய்யப்பட்டதாகவாகிறது என்பதும், அவ்விதயாகத்தினாலேயே தேவர்கள் ப்ரீதியடைகின்றனர் என்பதும் பழைமையான வழக்கமாக விருக்கிறது. இவ்விதமிருக்க இப்பொழுது நீர் அஸ்வத்தின் ஹிம்ஸையைமட்டும் செய்தீரே அன்றி

அதைக்கொண்டு யாகம் ஒன்றையும் செய்யவில்லை. அவ்விதமிருந்தும் இந்தப் புதுமையான அஸ்வமேதத்தால் தேவர்கள் திருப்தியை யடைந்து உம்மைத்துதித்தனர். ஏன்? நீர் கேசவனாக क=ப்ரம்ஹதேவன், ईश=பரமசிவன் இவர்களுக்கும் व=நியந்தாவாக விருப்பதுபற்றி ஸர்வதேவதாஸார்வபௌமனாகையால் புதுமாதிரியான இந்த உமது அஸ்வமேதத்தினால் தேவர்கள் ப்ரீதியடைந்தனர் போலும் என்பது கருத்து. (எ—று)

कंसाय ते शौरिसुतत्वमुक्त्वा तं तद्वधोत्कं प्रतिरुध्य वाचा ।
प्राप्तेन केशिक्षपणावसाने श्रीनारदेन त्वमभिष्टुतोऽभूः ॥ ३५२ ॥

(ப—ரை) ते=நீர் शौरिसुतत्वम्=வஸுதேவரின் புத்திரன் என்பதை कंसाय=கம்ஸனுக்கு उक्त्वा=சொல்லியும், तद्वधोत्कम्=அந்த வசுதேவரைக் கொல்லமுயன்ற तम्=அந்தக்கம்ஸனை वाचा=வாக்கினால் प्रतिरुद्ध्य=தடுத்தும் केशिक्षपणावसाने=கேசியென்ற அஸுரனை அழித்தமுடிவில் प्राप्तेन=வந்தவரான श्रीनारदेन=ஸ்ரீநாரதரால் त्वम्=நீர் अभिष्टुतः=ஸ்தோத்திரஞ்செய்யப்பட்டவராக अभूः=ஆனீர்.

कदापि गोपैस्सह काननान्ते निलायनक्रीडनलोलुपं त्वाम् ।
मयात्मजः प्राप दुरन्तमायो व्योमाभिधो व्योमचरोपरोधी ॥ ३५३ ॥

(ப—ரை) कदापि=ஒருநாள் काननान्ते=காட்டின்நடுவில் गोपैस्सह=கோபாலர்களுடன்கூட निलायक्रीडनलोलुपम्=ஒளிந்துவிளையாடுவதி லீடுபட்டிருந்த त्वाम्=உம்மை दुरन्तमायः=முடிவற்ற மாயையையுடையவனும், व्योमचरोपरोधी=தேவதைகளுக்குச் சத்துருவும், मयात्मजः=மயன் என்ற அஸுரனின் புத்திரனுமான व्योमाभिधः=வ்யோமன் எனப்பெயருள்ள அஸுரன் प्राप=அடைந்தான்.

स चोरपालायितवल्लवेषु चोरायितो गोपशिशून्पशूंश्च ।
गुहासु कृत्वा पिदधे शिलाभिस्त्वया च बुध्वा परिमर्दितोऽभूत् ॥

(ப—ரை) चोरपालायितवल्लवेषु=திருடர்களாகவும், காப்பவர்களாகவுமான கோபாலர்களுள் चोरायितः=திருடனாகவான सः=அவன் गोपशिशून्=கோபக்குழந்தைகளையும் पशूंश्च=பசுக்களையும் गुहासु=குஹைகளில் कृत्वा=வைத்து शिलाभिः=கற்பாறைகளினால் पिदधे=மறைத்தான். त्वया=உம்மால் बुध्वा=அறிந்துகொண்டு परिमर्दितः=நாசமாக்கப்பட்டவனாக अभूत्=ஆனான். (354) (எ—று)

## अथ अष्टत्रिंशोऽध्यायः ॥

श्रीशुक उवाच—अक्रूरोऽपि च तां रात्रिं मधुपुर्यां महामतिः । उषित्वा रथमास्थाय प्रययौ नन्दगोकुलम् ॥ १ ॥ गच्छन्पथि महाभागो भगव-

---

एवं विधैश्चाद्भुतकेलिभेदैरानन्दमूर्छामतुलां व्रजस्य ।
पदेपदे नूतनयन्नसीमां परात्मरूपिन् पवनेश पायाः ॥ ७१० ॥

(ப—ரை) परात्मरूपिन्!=பரமாத்மரூபியான! पवनेश!=குருவாயூரில் வஸிக்குமீசனே! एवंविधैः=இப்மாதிரிகளான अद्भुतकेलिभेदैः=ஆஶ்சரிங்களான லீலாபேதங்களினுல் व्रजस्य=கோகுலத்துக்குண்டான अतुलाम्=ஒப்பற்ற आनन्दमूर्छाम्=ஆனந்தத்தின் நிறைவை असीमम्=எல்லே யற்றதாய் पदे पदे=அடிக்கடி नूतनयन्=புதிப்பிப்பவராக இருக்கின்ற நீர் पायाः=ரோகத்தினின்றும் காப்பீராக.

இவ்விதம்கேசிவதவர்ணனமும்வ்யோமாசுரவதவர்ணனமும் என்ற எழுபத்தோன்ருவது தசகம் முற்றிற்று.



### முப்பத்தெட்டாவது அத்தியாயம்.

(அ—கை) अष्टत्रिंशे यथा ध्यायन्नक्रूरो गोकुलं गतः ।
तथैव रामकृष्णाभ्यां गृहं नीत्वा सुसत्कृतः ॥ १ ॥
प्रातः केशिवधे वृत्ते द्वादश्यां निर्गते मुनौ ।
ततो व्योम्नि हतेऽक्रूरः सायं गोकुलमागमत् ॥ २ ॥

(க—ரை) அக்ரூரர் வழியில் எவ்விதம் தியானித்துக் கொண்டு கோகுலத்தை யடைந்தாரோ அவ்விதமே வீட்டுக்கிட்டுச் சென்று ராமகிருஷ்ணர்களால் நன்குமரியாதை செய்யப்பட்டார். காலேயில் கேசியின்வதமானது முடிந்து நாரதர் தனது இருப்பிடஞ்சென்றதும், பிறகு வ்யோமாஸுரன் கொல்லப்பட்டதும் அக்ரூரர் துவாதசியில் கிளம்பி மாலேயில் கோகுலத்தை யடைந்தார் என இந்த முப்பத்தெட்டாவது அத்தியாயத்தி லுபதேசிக்கப்படுகிறது—

ஸ்ரீசுகர் சொல்லலுற்ருர்—(இவ்விதம் நாரதரால் கம்ஸவதம் முதலிய காரியமானது அறிவுறுத்தப்பட்டதும் ஸ்ரீகிருஷ்ணன் மதுரைக்குச் செல்லமுயற்சி யுடையவரானுர்) மஹாமதியான அக்ரூர

त्यम्बुजेक्षणे। भक्तिं परामुपगत एवमेतदचिन्तयत् ॥ २ ॥ किं मयाचरितं भद्रं किं तप्तं परमं तपः। किं वाथाप्यर्हते दत्तं यद्द्रक्ष्याम्यद्य केशवम् ॥३॥ ममैतद्दुर्लभं मन्य उत्तमश्लोकदर्शनम्। विषयात्मनो यथा ब्रह्मकीर्तनं शूद्रजन्मनः ॥ ४ ॥ मैवं ममाधमस्यापि स्यादेवाच्युतदर्शनम्। ह्रियमाणः कालनद्या क्वचित्तरति कश्चन ॥ ५ ॥ ममाद्यामङ्गलं नष्टं फलवांश्चैव मे भवः। यन्नमस्ये भगवतो योगिध्येयाङ्घ्रिपङ्कजम् ॥६॥ कंसो बताद्याकृत मेऽत्यनुग्रहं

ரும் அந்தராத்திமுழுவதும் மதுராபட்டினத்தில் வஸித்து(காலையில்) தேரிலேறிக்கொண்டு நந்தகோகுலத்தைக் குறித்துக் கிளம்பினர். (1) வழியிற் செல்லுகின்ற மஹாபாக்கியசாலியான அக்ரூரர் புண்டரிகாக்ஷனனபகவானிடத்தில் மேலான பக்தியை யடைந்தவராய் இதைப் பின்வருமாறு சிந்திக்கத் தொடங்கினர். (2) நான் யாது காரணத்தினல் கேசவனை நேரில் காணப்போகின்றேனே அக்காரணத்தினல் என்னுற் செய்யப்பட்ட புண்ணியந்தான் என்னையோ? என்னுற் செய்யப்பட்ட மேலான தவந்தான் என்னையோ? அல்லது மஹான்களுக்குக் கொடுக்கப்பட்ட தானந்தான் என்னையோ? (3) விஷயத்தில் புத்தியைச் செலுத்தின எனக்கு உத்தமஸ்லோகனை ஸ்ரீகிருஷ்ணனுடைய இந்தத்தரிசனமானது சூத்திரப்பிறவியை யடைந்தவனுக்கு வேதோச்சாரணமானது போல கிடைத்தற்கறிதானது என்றே எண்ணுகிறேன். (4) இவ்விதமெண்ணுவது பொருந்தாது. தாழ்ந்தவனுயினும் எனக்கு அச்யுதனுடையதரிசனம் நிஸ்சயமாகக் கிடைக்கும். என்? * காலமாகிற நதியினல் அடித்துக்கொண்டு போகப்படும் ஒருவன் ஒருஸமயம் கரையேறக் கூடுமன்ருே. (5) இப்பொழுது எனது அமங்களம் நஷ்டமாகிவிட்டது. எனதுபிறவியும் பயனுள்ளதாக வாகிவிட்டது. என்? பகவானுடைய யோகித்யேயமான சரணரவிந்தத்தை நமஸ்கரிக்கப் போகின்றேனன்ருே? (6) கம்ஸன் இப்பொழுது எனக்கு அதிக

* நதியினல் அடித்துக்கொண்டு போகப்படுகின்ற துரும்புகளுள் யாதேனுமொன்று நதியின் கரையில் ஒதுங்கக்கூடுமென்ருே? அதுபோல கர்மவசத்தால் காலத்தினல் கொண்டுபோகப்படுகின்ற ஜீவர்களின் நடுவில் ஒருவன் அதைக்கடக்கவும்கூடும். ஆனதுபற்றி எனக்கும் ஸ்ரீகோபாலனுடைய தரிசனம்கிடைத்துவிடலாமென எண்ணினர் என்றுகருத்து.

द्रक्ष्येऽङ्घ्रिपद्मं प्रहितोऽमुना हरेः। कृतावतारस्य दुरत्ययं तमः पूर्वेऽतरन्यन्नखमण्डलत्विषा ॥ ७ ॥ यदर्चितं ब्रह्मभवादिभिः सुरैः श्रिया च देव्या मुनिभिःससात्वतैः। गोचारणायानुचरैश्चरद्वने यद्गोपिकानां कुचकुङ्कुमाङ्कितम् ॥ ८ ॥ द्रक्ष्यामि नूनं सुकपोलनासिकं स्मितावलोकारुणकञ्जलोचनम्। मुखं मुकुन्दस्य गुडालकावृतं प्रदक्षिणं मे प्रचरन्ति वै मृगाः॥९॥ अप्यद्य विष्णोर्मनुजत्वमीयुषो भारावताराय भुवो निजेच्छया। लावण्य-

---

மான அனுக்கிரஹத்தைச் செய்திருக்கிறுன். இது வெகு ஆஸ்சரியமானது. நான் இவனுல் அனுப்பப்பட்டவனுய் எந்தத்திருவடியிலுள்ள நகமண்டலத்தின் காந்தியினுல் முன்னுள்ளோர் தாண்டவியலாத தமஸ்ஸை (ஸம்ஸாரத்தைத்) தாண்டினரோ எந்தச்சரணமானது ப்ரம்ஹதேவன், (1)மஹாதேவன் முதலிய தேவர்களாலும், (2) ஸ்ரீதேவியினுலும், பக்தர்களுடன் கூடின ( ) முனிகளாலும் பூஜிக்கப்பட்டதோ, எந்தச்சரணமானது பசுக்களைமேய்க்கவேண்டிக் (4) கோபாலர்களுடன் கூட காட்டில் ஸஞ்சரிக்கின்றதோ, எது (5) கோபிகைகளின் குசகுங்குமங்களினுல் அலங்கரிக்கப்பட்டதோ. அவதரித்த ஸ்ரீஹரியினுடைய அந்தச் சரணுரவிந்தத்தையன்றே பார்க்கப்போகின்றேன். (7–8) (எ–று)

அழகிய கன்னம் மூக்கு இவற்றையுடையதும், புன்சிரிப்புடன் கூடின பார்வையுள்ளதும், செந்தாமரை போன்ற நேத்திரங்களுள்ளதும், சுருட்டை மயிர்களால் மறைக்கப்பட்டதுமான முகுந்தனுடைய முகத்தைப் பார்க்கப்போகின்றேன் என்பது நிஸ்சயம். மிருகங்கள் எனக்கு வலதுபக்கமாகவன்றே ஸஞ்சரிக்கின்றன. (9) பூமியின் பாரத்தை இரக்கவேண்டித் தனது இச்சையை யொட்டி மனுஷ்யத்தன்மையை யடைந்தவரும், அழகுக்கு இருப்பிடமானவருமான விஷ்ணுவினுடைய தரிசனமானது இப்பொழுது எனக்கு ஏற்படப்போகிறது. அப்படியானுல் எனது நேத்திரத்துக்கு அனுயா

---

(1) இதனுல் பாரமைச்வரியமும், (2) இதனுல் ஸௌபாக்கியாதிசயமும், (3) இதனுல் பரமபுருஷார்த்தத்தன்மையும், (4) இதனுல் கிருபாளுத்வமும், (5) இதனுல் ப்ரேமைக்குமட்டும் சுலபமாக வசப்படக்கூடியது என்பதும் உபதேசிக்கப்பட்டது.

धाम्नो भवितोपलम्भनं मह्यं न न स्यात्फलमञ्जसा दृशः॥ १० ॥ य ईक्षि-
ताऽहंरहितोऽप्यसत्सतोः स्वतेजसाऽपास्ततमोभिदाभ्रमः। स्वमायया-
त्मन्रचितैस्तदीक्षया प्राणाक्षधीभिः सदनेष्वभीयते ॥ ११ ॥ यस्याखिला-
मीवहभिः सुमङ्गलैर्वाचो विमिश्रा गुणकर्मजन्मभिः। प्राणन्ति शुम्भन्ति
पुनन्ति वै जगद्यास्तद्विरक्ताः शवशोभना मताः॥ १२॥ स चावतीर्णः

---

ஸமாகப் பலன்கிடைக்காமல் போகமாட்டாதன்றோ. (10) *எவர் காரியகாரணங்களை ஈக்ஷணமாத்திரத்தினுல் ஸிருஷ்டித்தபோதிலும் அஹங்காரமற்றவரோ, அவ்விதமே நித்யமான ஸ்வரூபஸாக்ஷாத்காரத்தினுல் போக்கப்பட்ட அஜ்ஞானம் அதன்மூலமேற்படும் பேதம் அதனுலேற்படும் அபிநிவேசம் முதலிய ப்ரமம் இவற்றையுடையவரோ, தனக்கு வசப்பட்ட மாயையினுலும் அந்தப் பகவானுடைய ஈக்ஷணத்தினுலும் ப்ராணன் இந்திரியம் புத்தி இவற்றுடன் கூடினவர்களும் சொந்த ஸ்வரூபத்திலேயே (பழுதையில் பாம்புபோல) ப்ரகாசப்படுத்தப்பட்டவர்களுமான ஜீவர்களுடன் கூட பிருந்தாவனத்திலுள்ள மரங்களிலும் கோபிகைகளின் வீடுகளிலும் லீலையுடன் கர்மங்களைச் செய்துகொண்டு பற்றுள்ளவர்போலத் தோற்றத்தை யடைகின்ருரோ, (11) எல்லாப் பாபங்களையும் போக்குகின்றனவும் சோபனங்களான மங்களங்களைத் தருகின்றனவுமான எவருடைய குணங்களுடனும், கர்மாக்களுடனும் அவதாரங்களுடனும் கலந்த வார்த்தைகள் ஜகத்தைப் பிழைப்பிக்கின்றனவோ, சோபையுள்ளதாக்குகின்றனவோ, பரிசுத்தமாக்குகின்றனவோ, பகவத்குணகர்மாவதாரஸம்பந்தம் பெருத எந்தவாக்குகள் (நல்ல அலங்காரமுள்ளனவாயினுங்கூட) அலங்கரிக்கப்பட்ட சவம்போல் சோபிப்பனவாக எண்ணப்படுகின்றனவோ. (12) அந்த ஈஶ்வரன் தன்னுற் செய்யப்பட்ட ஸேதுக்களை (வர்ணுஶ்ரமதர்மங்களைப்)

---

* श्लोक एकेन, युग्मं हि द्वाभ्यां, वैशेषिकं त्रिभिः। कालापकं चतुर्भिः स्यात्, कुलकन्तु ततः परैः॥ ஒன்றினுல் சுலோகமென்றும், இரண்டினுல் யுக்மம் என்றும், மூன்றினுல் வைசேஷிகம் என்றும், நான்கினுல் காலாபகம் என்றும், அதற்கு மேலுள்ளவற்ருல் குளகம் என்றும் சொல்லப்படும் என்றபடி 11–12–13–14 ஆகியநான்குசுலோகங்கள் கொண்டகாலாபகம் என்றமுறையினுல் பகவத்ஸ்வருப முபதேசிக்கப்படுகிறது.

किल सात्वतान्वये स्वसेतुपालामरवर्यशर्मकृत्। यशो वितन्वन्व्रज आस्त ईश्वरो गायन्ति देवा यदशेषमङ्गलम् ॥ १३ ॥ तं त्वद्य नूनं महतां गतिं गुरुं त्रैलोक्यकान्तं दृशिमन्महोत्सवम्। रूपं दधानं श्रिय ईप्सितास्पदं द्रक्ष्ये ममासन्नुषसः सुदर्शनाः ॥ १४ ॥

अथावरूढः सपदीशयो रथात्प्रधानपुंसोश्चरणं स्वलब्धये। धिया धृतं योगिभिरप्यहं ध्रुवं नमस्य आभ्यां च सखीन्वनौकसः॥ १५ ॥ अप्यङ्घ्रिमूले पतितस्य मे विभुः शिरस्यधास्यन्निजहस्तपङ्कजम्। दत्ताभयं का-

---

பாலனஞ்செய்கின்ற தேவஸ்ரேஷ்டர்களுக்குச் சுகத்தைச் செய்கின்றவராய்க் கொண்டும், ஸ்ரோதா, வக்தா இருவர்க்கும் மங்களத்தைத் தருகின்ற எந்த யசஸ்ஸைத் தேவர்கள் கானஞ்செய்கின்றனரோ அந்தயஸஸ்ஸை விஸ்தாரப்படுத்திக்கொண்டும் யாதவகுலத்தில் அவதரித்தவராய் இப்பொழுது கோகுலத்தில் வஸித்துவருகிறார் அன்றோ. (13)

மஹான்களுக்கு அடைவிடமானவரும், குருவும், மூவ்வுலகுக்குள்ளும் ஒரே அழகுவாய்ந்தவரும், கண்ணுள்ளவர்களுக்கு அதிகஸந்தோஷத்தைத் தரக்கூடியவரும், லக்ஷ்மீதேவிக்குப் பிடித்த ஆஸ்பதமான (தங்குமிடமான) ரூபத்தைத் தரித்தவருமான அவரை இப்பொழுது கண்ணுற் பார்க்கப்போகின்றேன். எனக்கு பொழுது விடியும் ஸமயங்கள் மிக்கத்தெளிந்த தர்சனமுள்ளனவாக இருந்தனவன்றோ? (14) பிறகு தேரினின்றும் இறங்கி உடனே யோகிகளால் கூட புத்தியினால் மட்டும் தியானிக்கப்பட்டதான ப்ரதானர்களும்(முக்கியமானவர்களும்)புருஷர்களுமான ஈஸ்வரர்(ராமகிருஷ்ணர்)களுடைய சரணத்தையும், இவர்களுடன் கூடவிருக்கின்ற தோழர்களான கோபாலர்களையும் ஆத்மலாபத்துக்குவேண்டி நான் நமஸ்கரிக்கப்போகின்றேன். இதுநிஸ்சயம். (15) விபுவான கிருஷ்ணனும் காலடியில் விழுந்தவனான என்னுடைய தலையில் காலனாகிற பாம்பின் வேகத்தினால் மிக்கப்பயத்தை யடைந்தவர்களும் சரணத்தை (ரக்ஷணத்தை) விரும்புகின்றவர்களுமான மனிதர்களுக்கு அபயப்ரதானஞ்செய்கின்றதும், இந்திரனும், அதுபோல பலிசக்கிரவர்த்தியும் எந்தஹஸ்தாரவிந்தத்தில் பூஜையைச்செய்து மூவ்வுலகுக்

लभुजङ्गरंहसा प्रोद्गजितानां शरणैषिणां नृणाम् ॥१६॥ समर्हणं यत्र निधाय कौशिकस्तथा बलिश्चाप जगत्त्रयेन्द्रताम्। यद्वा विहारे व्रजयोषितां श्रमं स्पर्शेन सौगन्धिकगन्धयपानुदत् ॥ १७ ॥ न मय्युपैष्यत्यरिबुद्धिमच्युतः कंसस्य दूतः प्रहितोऽपि विश्वदृक्। योऽन्तर्बहिश्चेतस एतदीहितं क्षेत्रज्ञ ईक्षत्यमलेन चक्षुषा ॥ १८ ॥ अप्यङ्घ्रिमूलेऽवहितं कृताञ्जलिं मामीक्षिता सस्मितमार्द्रया दृशा। सपद्यपध्वस्तसमस्तकिल्बिषो वोढा मुदं वीतविशङ्क ऊर्जिताम् ॥ १९ ॥ सुहृत्तमं ज्ञातिमनन्यदैवतं दोर्भ्यां बृहद्भ्यां परिरप्स्यतेऽथ माम्। आत्मा हि तीर्थीक्रियते तदैव मे बन्धश्च कर्मात्मक उच्छ्-

---

கும் இந்திரனாகவிருத்தலையடைந்தனரோ, ஸௌகந்திக புஷ்பத்தின் மணமுள்ள எந்த ஹஸ்தபங்கஜமானது ராஸக்ரீடா காலத்தில் கோபஸ்திரிகளுடைய ஶ்ரமத்தை ஸ்பர்சத்தினல் போக்கிற்றோ அத்தகையதுமான தனது ஹஸ்தபங்கஜத்தை வைக்கப்போகிறார். (16–17) க்ஷேத்ரக்ஞரான எந்தக் கிருஷ்ணன் *மனதுக்கு உள்ளிலும் வெளியிலுமுள்ள இந்த சேஷ்டிதத்தை குற்றமற்ற க்ஞானத்தால் அறிவாரோ, ப்ரபஞ்சாந்தர்யாமியான அந்தக்கிருஷ்ணன் நான் கம்ஸனுல் அனுப்பட்டவனும் அவனுடைய தூதனுமாக இருந்தபோதிலுங்கூட என்னிடத்தில் சத்துரு என்ற எண்ணத்தை யடையப் போவதில்லை. (18)

சரணமூலத்தில் இருகைகளையும் கூப்பிக்கொண்டு அடங்கியிற்கும் என்னை புன்சிரிப்புடன் கூடியிருக்கும்படி குளிர்ந்தபார்வையினல் பார்ப்பாரானல் அப்பொழுதே போக்கப்பப்பட்ட எல்லாப் பாபங்களையு முடையவனாகவும் சங்கையை இழந்தவனாகவுமாகி நிலைத்த ஸந்தோஷத்தையடையப் போகின்றேன். (19) பின்னர் மிக்க சுஹிருத்தும், க்ஞாதியும் வேறுதேவதையை மனத்தாலெண்ணுதவனுமான என்னைப் பெரியதோள்களினல் தழுவிக்கொள்ளப் போகிறார். அப்பொழுதே எனது தேஹமானது மிக்கப்பரிசுத்தமாகச் செய்யப்படப் போகிறது. கர்மரூபமான பந்தமும் இந்தத்

---

* இந்த அக்ரூரன் மனத்துக்கு வெளியில் கம்ஸனை யனுவர்த்திக்கிருனேயொழிய உள்ளில் நம்மையே தியானிக்கிறன் என்பது அவருக்குத்தெரியும் என்பது கருத்து.

सित्यतः ॥ २० ॥ लब्धाङ्गसङ्गं प्रणतं कृताञ्जलिं मां वक्ष्यतेऽक्रूर ततेत्युरुश्रवाः । तदा वयं जन्मभृतो महीयसा नैवादृतो यो धिगमुष्य जन्म तत् ॥ २१ ॥ न तस्य कश्चिद्दयितः सुहृत्तमो न चाप्रियो द्वेष्य उपेक्ष्य एव वा । तथापि भक्तान्भजते यथा तथा सुरद्रुमो यद्वदुपाश्रितोऽर्थदः ॥ २२ ॥ किञ्चाग्रजो माऽवनतं यदूत्तमः स्मयन्परिष्वज्य गृहीतमञ्जलौ । गृहं प्रवेश्याप्तसमस्तसत्कृतं संप्रक्ष्यते कंसकृतं स्वबन्धुषु ॥ २३ ॥ श्रीशुक उवाच— इतिसञ्चिन्तयन्कृष्णं श्वफल्कतनयोऽध्वनि । रथेन गोकुलं प्राप्तः सूर्यश्चास्तगिरिं नृप ॥२४॥ पदानि तस्याखिललोकपालकिरीटजुष्टामलपादरेणोः ।

---

தேஹத்திலிருந்து நழுவிவிடப்போகிறது. (20) அங்கஸங்கத்தை யடைந்தவனும், வணங்கினவனும், இருகைகளையும் கூப்பினவனுமான என்னை அதிகம் கீர்த்திவாய்ந்த ஸ்ரீகிருஷ்ணன் ஹே அக்ரூர! அப்பனே! எனச் சொல்லப்போகிறார். அப்பொழுதுதான் நாம் பிறவியை யடைந்தவர்களாவோம். மஹானான ஸ்ரீகிருஷ்ணனால் எவன் ஆதரிக்கப்படவில்லையோ இவனது பிறவியைச் சுடவேண்டும். (21) அவருக்கு ப்ரியனொருவனுமில்லை. மிக்கவேண்டியவனுமில்லை. அப்ரியனோ, த்வேஷிக்கத்தக்கவனோ, உபேக்ஷிக்க (விலக்கத்) தக்கவனோ கிடையாது. அவ்விதமிருந்தபோதிலும் கல்பகவிருக்ஷமானது அருகில்வந்து ஆஶ்ரயிக்கப்பட்டதாய்க் கொண்டு வேண்டுவனவற்றை எவ்விதம் கொடுக்கின்றதோ அவ்விதமே எந்தப் பக்தர்கள் எவ்விதம் பஜிக்கின்றனரோ அவ்விதமே அந்தப்பக்தர்களைப் பஜிக்கின்றார். (22) மேலும், யதூத்தமனான பலராமன் சிரித்துக்கொண்டு வணங்கினவனும், அஞ்ஜலியில் பிடிக்கப்பட்டவனுமான என்னை ஆலிங்கனஞ்செய்துகொண்டு வீட்டில்பிரவேசிக்கச்செய்து எல்லாவிதமான மரியாதையையுஞ்செய்து தனது பந்துக்களிடத்தில் கம்ஸனாற் செய்யப்பட்டதைக் கேட்கப்போகிறார்.

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்.—ஹே ந்ருப! ஶ்வபல்கரின் புத்திரரான அக்ரூரர் வழியில் இவ்விதம் கிருஷ்ணனைச் சிந்தித்துக்கொண்டு தேருடன்கோகுலத்தை யடைந்தார். சூரியனும் அஸ்தமய பர்வதத்தையடைந்தார். (24) எல்லாலோகபாலர்களினாலும் கிரீடங்களில் தரித்துக்கொள்ளப்பட்டதும் பரிசுத்தமுமான பாததூளியை

ददर्श गोष्ठे क्षितिकौतुकानि विलक्षितान्यब्जयवाङ्कुशाद्यैः ॥ २५ ॥ तद्दर्शनाह्लादविवृद्धसंभ्रमः प्रेम्णोर्ध्वरोमाऽश्रुकलाकुलेक्षणः । रथादवस्कन्द्य स तेष्वचेष्टत प्रभोरमून्यङ्घ्रिरजांस्यहो इति ॥ २६ ॥

देहंभृतामियानर्थो हित्वा दम्भं भियं शुचम् । सन्देशाद्यो हरेर्लिङ्गदर्शनश्रवणादिभिः ॥ २७ ॥ ददर्श कृष्णं रामं च व्रजे गोदोहनं गतौ । पीतनीलाम्बरधरौ शरदम्बुरुहेक्षणौ ॥ २८ ॥ किशोरौ श्यामलश्वेतौ श्रीनिकेतौ बृहद्भुजौ । सुमुखौ सुन्दरवरौ बालद्विरदविक्रमौ ॥ २९ ॥ ध्वजवज्राङ्कुशाम्भोजैश्चिह्नितैरङ्घ्रिभिर्व्रजम् । शोभयन्तौ महात्मानौ सानुक्रोशस्मितेक्षणौ ॥ ३० ॥ उदाररुचिरक्रीडौ स्रग्विणौ वनमालिनौ । पुण्यगन्धानुलिप्ताङ्गौ

---

யுடையவரான அந்தக் கிருஷ்ணனுடையதும் பூமிக்கு அலங்காரங்களாகவானதும், அப்ஜரேகை யவரேகை அங்குசரேகை முதலியவற்றினால் தனித்துவிளக்கப்பட்டனவுமான அடிவைப்புகளைக் கோகுலத்தில் கண்டார். (25) அந்த அக்ரூரர் அவ்வடிகளைக் கண்ணுற்றதாலுண்டான ஸந்தோஷத்தினால் நன்குவிருத்தியடைந்த பரபரப்பையுடையவராயும், ப்ரேமையினாலேற்பட்ட மயிர்க்குச்சலையுடையவராயும், கண்ணீரினால் கலங்கின கண்களையுடையவராயும் கொண்டு தேரினின்றும் தாவிக்குதித்து அந்தோ? இவை எனது ப்ரபுவின் பாததூளிகளன்றோ எனச் சொல்லிக்கொண்டு அவற்றில் புரண்டார். (26) கம்ஸனுடைய உத்தரவு ஏற்பட்டது முதல் ஹரியினது லிங்கதர்சனம் ஶ்ரவணம் முதலியவற்றால் தம்பம், பயம், சோகம் இவற்றைவிடுத்து யாதொரு இந்த அக்ரூரருடைய நடத்தைவர்ணிக்கப்பட்டதோ இதுவே தேஹமெடுத்தவர்க்குற்ற பயனாகும். (27) ஹே ராஜன்! அக்ரூரர் மாடுகறக்குமிடத்திலிருப்பவர்களும், பீதாம்பரத்தையும் நீலாம்பரத்தையும் தரித்தவர்களும், சரத்காலத்திலுள்ள தாமரைபுஷ்பம்போன்ற நேத்திரங்களை யுடையவர்களும், யௌவனத்தையடையாதவர்களும், கருப்பும் வெளுப்புமான நிறமுள்ளவர்களும், லக்ஷ்மிக்கு ஆஶ்ரயமானவர்களும், பெரியதோளுள்ளவர்களும், அழகியமுகமுள்ளவர்களும், மிக்கவழகுவாய்ந்தவர்களும், இளம் யானைக்குட்டிகளுடையது போன்ற நடையை யுடையவர்களும்,

स्नातौ विरजवाससौ॥३१॥ प्रधानपुरुषावाद्यौ जगद्धेतू जगत्पती। अवतीर्णौ जगत्यर्थे स्वांशेन बलकेशवौ ॥३२॥ दिशो वितिमिरा राजन्कुर्वाणौ प्रभया स्वया। यथा मारकतः शैलो रौप्यश्च कनकाचितौ ॥ ३३ ॥ रथात्तूर्णमवप्लुत्य सोऽक्रूरः स्नेहविह्वलः। पपात चरणोपान्ते दण्डवद्रामकृष्णयोः॥ ३४॥ भगवद्दर्शनाह्लादबाष्पपर्याकुलेक्षणः। पुलकाचिताङ्ग औत्कण्ठ्यात्स्वाख्याने नाशकन्नृप ॥ ३५ ॥ भगवांस्तमभिप्रेत्य रथाङ्गाङ्कितपाणिना। परिरेभेऽभ्युपाकृष्य प्रीतः प्रणतवत्सलः॥ ३६॥ सङ्कर्षणश्च प्रणतमुपगुह्य

---

த்வஜரேகை வஜ்ரரேகை அங்குசரேகை அம்போஜரேகை இவைகளால் அலங்கரிக்கப்பட்ட பாதங்களினல் கோகுலத்தைச் சோபையுள்ள தாக்குகின்றவர்களும், மஹாத்மாக்களும், தயையுடன் கூடின புன்சிரிப்பு நிறைந்தபார்வை யுள்ளவர்களும், காம்பீர்யமும் அழகும் வாய்ந்த க்ரீடையையுடையவர்களும், ரத்தினமாலை யணிந்தவர்களும், வனமாலையைத் தரித்தவர்களும், புண்ணியமான மணமுள்ள சந்தனத்தினல் பூசப்பட்ட அங்கத்தை யுடையவர்களும், ஸ்னனஞ் செய்தவர்களும், அழுக்கற்ற வஸ்திரத்தைத் தரித்தவர்களும், முக்கியமான புருஷர்களும், எதற்கும் ஆதியிலுள்ளவர்களும், ஜகத்துக்குக் காரணமானவர்களும், ஜகத்துக்குப் பதியானவர்களும், பூமியின் சுமையைப் போக்கவேண்டி மூர்த்திபேதத்துடன் ராமகிருஷ்ணர்களாக அவதரித்தவர்களும், சொந்தமான காந்தியினல் திக்குகளை இருளற்றதாகச் செய்கின்றவர்களும், பொன்னல் அலங்கரிக்கப்பட்ட மரகதமலைபோலும் வெள்ளிமலை போலுமிருப்பவர்களுமான ராமகிருஷ்ணர்களைக் கோகுலத்தில் கண்டார். (28–33)

அந்த அக்ரூரர் ஸ்னேஹத்தினல் கலங்கினவராய் தேரிலிருந்து சீக்கிரமாகக் குதித்து ராமகிருஷ்ணர்களுடைய சரணஸமீபத்தில் தண்டம்போல விழுந்தார். (34) ஹேஙருப! பகவானுடைய தரிசனத்தினலுண்டான ஸந்தோஷத்தினலேற்பட்ட கண்ணீரினல் கலங்கின கண்களையுடையவராகவும், மயிர்க்குச்சல் நிறைந்த அங்கமுள்ளவராகவுமாகி ப்ரேமாதிசயத்தினல் தனதுபெயரைச் சொல்லச் சக்திபற்றவரானர். (35) வணங்கினவர்களிடத்து வாத்ஸல்யமுள்ளவரான பகவான் அதையறிந்து சக்கிரம்தாங்கிவமும்பேறின

महामनाः । गृहीत्वा पाणिना पाणी अनयत्सानुजो गृहम् ॥ ३७ ॥ पृष्ट्वाथ स्वागतं तस्मै निवेद्य च वरासनम् । प्रक्षाल्य विधिवत्पादौ मधुपर्कार्हणमाहरत् ॥ ३८ ॥ निवेद्य गां चातिथये संवाह्य श्रान्तमादृतः । अन्नं बहुगुणं मेध्यं श्रद्धयोपाहरद्विभुः ॥ ३९ ॥ तस्मै भुक्तवते प्रीत्या रामः परमधर्मवित् । मुखवासैर्गन्धमाल्यैः परां प्रीतिं व्यधात्पुनः॥ ४० ॥ पप्रच्छ सत्कृतं नन्दः कथं स्थ निरनुग्रहे । कंसे जीवति दाशार्ह सौनपाला इवावयः॥४१॥ योऽवधीत्स्वस्वसुस्तोकान्क्रोशन्त्या असुतृप्खलः । किं नु स्वित्तत्प्रजानां

---

கையினல் இழுத்த ப்ரீதியுடன் ஆலிங்கனஞ் செய்துகொண்டார். (36) பெரியமனதுள்ள பலராமனும் வணங்கின அக்ரூரை ஆலிங் கனஞ்செய்துகொண்டு தனதுகையினல் அவரதுகைகளைப் பிடித்துக் கொண்டு தம்பியுடன் கூட வீட்டுக்கிட்டுச் சென்றார். (37) பிறகு நல்வரவைக்கேட்டு சிறந்த ஆஸனத்தையும் கொடுத்து முறைப்படிக் கால்களை அலம்பி * மதுபர்க்கபூஜையைச் செய்தார். (38) விபு வான பலராமன் ஆதாவுடன் அதிதியான அக்ரூருக்குப் பசுவை ஸமர்ப்பித்து களைத்த அவரைப் பிடித்துவிட்டு வெகு குணங்கள மைந்ததும் பரிசுத்தமுமான அன்னத்தைச் சிரத்தையுடன் கொடுத் தார். (39) சாப்பிட்டு முடித்த அவருக்கு மேலான தர்மத்தையறிந் தவரான பலராமன் இரும்பவும் பச்சைக் கர்ப்பூரங்கலந்த தாம்பூ லங்களினுலும், சந்தனம் மாலை இவற்றினுலும் மேலான ஸந்தோ ஷத்தை யுண்டுபண்ணினர். (40) இவ்விதம் பூஜிக்கப்பட்ட அக் ரூரைப் பார்த்து நந்தகோபர் ஹே தாசார்ஹ! தயவற்றவனன கம் ஸன் உயிருடனிருக்கும்பொழுது பசுவைக் கொல்லுபவனல் காப் பாற்றப்படுகின்ற ஆடுகள்போல அவனிடம் எவ்விதமிருக்கின்றீர்கள்! (41) தனது உயிரையே திருப்திசெய்துவைப்பவனும் துஷ்டனு மான எவன் தனதுதங்கை அழுவதையும் பொருட்படுத்தாது அவ ளது குழந்தைகளைக் கொன்றனே அவனது ப்ரஜைகளான உங்களு டைய க்ஷேமத்தை எவ்விதம் விசாரிப்போம். (42) இவ்விதம் மிக்க

---

* मधुपर्कघृतक्षौद्रदधिभिः संभवेन्मुने (நெய் தேன் தயிர் இவற்றைக் கலந்துமந்திரபூர்வமாய் அதிதிக்குக் கொடுப்பது மதுபர்க்கமெனப்படும் என வேறுபுராண வசனமிருக்கிறது.

व: कुशलं विमृशामहे ॥ ४२ ॥ इत्थं सूनृतया वाचा नन्देन सुसभाजित:। अक्रूर: परिपृष्टेन जहावध्वपरिश्रमम् ॥ ४३ ॥

॥ इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्धेऽक्रूरागमनं नामाऽष्टत्रिंशोऽध्याय: ॥ ३८ ॥



---

ப்ரியமான வார்த்தையினல் நந்தகோபரால் நன்கு பூஜிக்கப்பட்டவரான அக்ரூரர் குடும்பஸமாசாரங்களைப் பற்றின கேழ்விகளால் (ஸம்ஸார) மார்க்க ஸம்பந்தமான கஷ்டத்தைவிட்டார். (43)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவதமஹாபுராண தசமஸ்கந்த பூர்வார்த்தத்தில் அக்ரூரர் கோகுலம் செல்லுதல் என்ற முப்பத்தெட்டாவது அத்தியாயம் முற்றிற்று.



## நாராயணீயம்.

कंसोऽथ नारदगिरा व्रजवासिनं त्वा-
माकर्ण्य दीर्णहृदय: स हि गान्दिनेयम् ।
आहूय कार्मुकमखच्छलतो भवन्त-
मानेतुमेनमहिनोदहिनाथशायिन् ॥ ३५६ ॥

(ப-ரை) अहिनाथशायिन्!=சேஷசாயியான ஹேபகவன்! अथ= பிறகு स:=அந்த कंसो हि=கம்ஸனே त्वाम्=உம்மை व्रजवासिनम्= கோகுலத்தில் வஸிப்பவராக नारदगिरा=நாரதருடைய வார்த்தையினல் आकर्ण्य=கேட்டு दीर्णहृदय:=பயந்தபுத்தியுள்ளவனுய்க் கொண்டு गान्दिनेयम्=அக்ரூரரை आहूय=அழைத்து कार्मुकमखच्छलत:=தனுர் யாகமென்ற வியாஜமாக भवन्तम्=உம்மை आनेतुम्=வரவழைப்பதற்குவேண்டி एनम्=இவரை अहिनोत्=அனுப்பினன் (356) (எ-று)

अक्रूर एष भवदङ्घ्रिपरश्चिराय त्वद्दर्शनाक्षममना: क्षितिपालभीत्या ।
तस्याज्ञयैव पुनरीक्षितुमुद्यतस्त्वामानन्दभारमतिभूरितरं बभार ॥

(ப-ரை) चिराय=வெகுகாலமாக भवदङ्घ्रिपर:=உமது சரணப் பற்றுள்ளவரான एष:=இந்த अक्रूर:=அக்ரூரர் क्षितिपालभीत्या=கம்ஸ

விடமிருந்து பயத்தினால் त्वद्दर्शनाक्षममनाः=உம்மைப் பார்க்கமுடியாதவன் என்ற மனத்தையுடையவராயும் तस्य=அந்தக் கம்ஸனுடைய आज्ञयैव=கட்டளையினாலேயே त्वाम्=உம்மை ईक्षितुम्=பார்ப்பதற்கு पुनः=மறுபடியும் उद्यतः=முயன்றவராயும் கொண்டு अतिभूरितरम्=மிகவும் அதிகமான आनन्दभारम्=சந்தோஷமாகிற சுமையை बभार=வஹித்தார். (357) (எ-று)

सोऽयं रथेन सुकृती भवतो निवासं
गच्छन्मनोरथगणांस्त्वयि धार्यमाणान् ।
आस्वादयन् मुहुरपायभयेन दैवं
संप्रार्थयन् पथि न किञ्चिदपि व्यजानात् ॥ ३५८ ॥

(ப-ரை) सुकृती=புண்யசாலியான सोऽयम्=அந்த இந்த அக்ரூரர் भवतः=உம்முடைய निवासम्=வாஸஸ்தானமான கோகுலத்தைக் குறித்து गच्छन्=போய்க்கொண்டு त्वयि=உமதுவிஷயத்தில் धार्यमाणान्=மனத்தால் தரிக்கப்பட்ட मनोरथगणान्=உம்மைப் பார்த்தல், உம்மை ஸ்பர்சித்தல் முதலியரூபமான விருப்பங்களை आस्वादयन्=அனுபவித்துக்கொண்டும், अपायभयेन=கம்ஸனுடைய பிருத்யன் என்ற காரணத்தால் பகவானின் தர்சனம் கிடைக்காதோ என்ற பயத்தால் मुहुः=அடிக்கடி दैवम्=தைவத்தை संप्रार्थयन्=பிரார்த்திக்கொண்டிருந்ததால் पथि=செல்லும் பாதையில் किञ्चिदपि=வேறு எதையும் न व्यजानात्=அறிந்தாரில்லை. (358) (எ-று)

द्रक्ष्यामि वेदशतगीतगतिं पुमांसं
स्प्रक्ष्यामि किंस्विदपिनाम परिष्वजेय ।
किं वक्ष्यते स खलु मां क्वनु वीक्षितस्स्या
दित्थं निनाय स भवन्मयमेव मार्गम् ॥ ३५९ ॥

(ப-ரை) वेदशतगीतगतिम्=நூற்றுக்கணக்கான உபநிடதங்களால் நிரூபிக்கப்பட்ட ஸ்வரூபத்தை யுடையவரான पुमांसम्=ஆதிபுருஷனான கிருஷ்ணனை किं स्विद्द्रक्ष्यामि=பார்ப்பேனோ? किं स्वित्स्प्रक्ष्यामि=தொடுவேனோ? अपिनामपरिष्वजेय=ஆலிங்கனம் செய்துகொள்வேனோ? सखलु=அந்தக் கிருஷ்ணன் माम्=என்னைப்பார்த்து किं वक्ष्यते=பேசுவாரா? (सः=அந்தக்கிருஷ்ணன்) क्वनु=எந்தவிடத்தில் वीक्षितः=பார்க்கப்பட்டவராக स्यात्=ஆவார். इत्थम्=இவ்விதம் सः=

அவர் मार्गम्=வழியை भवन्मयमेव=உமது ஸ்வரூபமாகவே பாவித்துக்கொண்டு निनाय=கழித்தார். (359) (எ—று)

भूयः क्रमादभिविशन्भवदङ्घ्रिपूतं वृन्दावनं हरविरिञ्चसुराभिवन्द्यम् ।
आनन्दमग्न इव लग्न इव प्रमोहे किं किं दशान्तरमवाप न पङ्कजाक्ष!॥

(ப—ரை) पङ्कजाक्ष !=ஓ தாமரைக்கண்ணனான கிருஷ்ணா! (सः=அந்த அக்ரூரர்) भवदङ्घ्रिपूतम्=உமது சரணத்தினால் பரிசுத்தமாக்கப்பட்டதும் हरविरिञ्चसुराभिवन्द्यम्=மஹாதேவன், ப்ரம்ஹதேவன் முதலிய தேவர்களால் நமஸ்கரிக்கத்தகுந்ததுமான वृन्दावनम्=பிருந்தாவனத்தில் क्रमात्=முறையே अभिविशन्=பிரவேசித்தவராய்க்கொண்டு भूयः=மறுபடியும், आनन्दमग्न इव=ஆனந்தத்தில் மூழ்கினவர் போலும் प्रमोहे=மிருந்த மோஹத்தில் लग्न इव=சிக்கிக்கொண்டவர்போலும் किं किम्=எந்தெந்தவிதமான दशान्तरम्=நிலையைத்தான் नावाप=அடைந்தாரில்லை. (360) (எ—று)

पश्यन्नवन्दत भवद्विहृतिस्थलानि पांसुष्ववेष्टत भवच्चरणाङ्कितेषु ।
किं ब्रूमहे बहुजना हि तदापि जाता एवं तु भक्तितरला विरलाः परात्मन् ॥

(ப—ரை) परात्मन्=ஹே பரமாத்மாவான கிருஷ்ணா! (सः=அந்த அக்ரூரர்) भवद्विहृतिस्थलानि=உமது விளையாட்டுப் பிரதேசங்களை पश्यन्=பார்த்துக்கொண்டு अवन्दत=நமஸ்கரித்தார். भवच्चरणाङ्कितेषु=உமது பாதத்தினால் அடையாளம் செய்யப்பட்ட पांसुषु=தூளிகளில் अवेष्टत=விழுந்து புரண்டார். किं ब्रूमहे=அக்ரூரரின் பக்தியின் பெருமையைப் பற்றி நாம் என்ன சொல்லுவோம். हि=ஏனென்றால் तदा=உமது அவதாரகாலத்தில் बहुजनाः=அநேகம் ஜனங்கள் जाता अपि=பிறந்திருந்தபோதிலும் एवम्=இவ்விதம் भक्तितरलाः=பக்திக்குப் பரவசப்பட்டவர்கள் विरलाः=குறைவாகவே இருந்தனர். (361) (எ—று)

सायं स गोपभवनानि भवच्चरित्र-
गीतामृतप्रसृतकर्णरसायनानि ।
पश्यन् प्रमोदसरितेव किलोह्यमानो गच्छन्
भवद्भवनसन्निधिमन्वयासीत् ॥ ३६२ ॥

(ப—ரை) सः=அந்த அக்ரூரர் सायम्=ஸாயங்காலத்தில் भवच्चरित्रगीतामृतप्रसृतकर्णरसायनानि=உமது சரித்திரங்களைப் பற்றிய

தேங்களாகிற அமிருத ப்ரவாஹத்தின் பெருக்காகிற காதுகளுக்கு ஆனந்தத்தைத்தரும் ரஸாயனத்தையுடையவைகளான **गोपभवनानि**= கோபாலர்களின் வீடுகளை **पश्यन्**=பார்த்துக்கொண்டு **प्रमोदसरिता-किल**=ஆனந்தமாகிற நதியினால் **उह्यमान इव**=சுமந்து செல்லப்படுபவர் போல, **गच्छन्**=சென்றுகொண்டு **भवत्सन्निधिम्**=உமது ஸந்நிதியை **अन्वयासीत्**=அடைந்தார். (362) (எ—று)

> तावद्ददर्श पशुदोहविलोकलोलं
> भक्तोत्तमागतिमिव प्रतिपालयन्तम् ।
> भूमन् भवन्तमयमग्रजवन्तमन्त
> र्ब्रह्मानुभूतिरससिन्धुमिवोद्वमन्तम् ॥ ३६३ ॥

(ப—ரை) **भूमन्**=ஹே பரமாத்மாவே! **तावत्** = அப்பொழுது **पशुदोहविलोकलोलम्**=பால்கறப்பதைப் பார்ப்பதில் ஆவல் கொண்டவரும் **भक्तोत्तमागतिम्**=சிறந்த பக்தரான அக்ரூரரின் வரவை **प्रति-पालयन्तमिव**=எதிர் பார்த்திருப்பவர்போலும் **उद्वमन्तम्**=அக்ரூரரின் ஹிருதயத்தினின்றும் வெளிவந்த **ब्रह्मानुभूतिरससिन्धुमिव**=ப்ரம்ஹானுபவத்தாலுண்டான ஆனந்தமாகிற ஸமுத்திரம் போலும் (**स्थि-तम्**=இருக்கின்றவரும்) **अग्रजवन्तम्**=அண்ணாவான பலராமனுடன் கூடியிருப்பவருமான **भवन्तम्**=உம்மை **अयम्**=இந்த அக்ரூரர் **ददर्श**= பார்த்தார். (363) (எ—று)

> सायन्तनाप्लवविशेषविविक्तगात्रौ
> द्वौ पीतनीलरुचिराम्बरलोभनीयौ ।
> नातिप्रपञ्चधृतभूषणचारुवेषौ
> मन्दस्मितार्द्रवदनौ स युवां ददर्श ॥ ३६४ ॥

(ப—ரை) **सः**=அந்த அக்ரூரர் **सायन्तनाप्लवविशेषविविक्तगात्रौ**= ஸந்தியாகாலத்திய ஸ்நானத்தினால் மிகவும் சுத்தமான சரீரத்தையுடையவர்களும், **पीतनीलरुचिराम्बरलोभनीयौ**=பொன்னிறமாயும், நீலநிறமாயுமிருக்கின்ற அழகிய வஸ்திரத்தினால் மனத்தைக்கவருகின்றவர்களும் **नातिप्रपञ्चधृतभूषणचारुवेषौ**=அதிகமாக இல்லாமலிருக்கும்படி தரிக்கப்பட்ட ஆபரணங்களால் செய்யப்பட்ட அழகான வேஷத்தையுடையவர்களும் **मन्दस्मितार्द्रवदनौ**=புன்சிரிப்பினால் குளுமை பொருந்திய முகத்தையுடையவர்களுமான **युवाम् द्वौ**=உங்களிருவரையும் **ददर्श**=பார்த்தார். (364) (எ—று)

दूराद्रथात्समवरुह्य नमन्तमेन-
मुत्थाप्य भक्तकुलमौलिमथोपगूहन् ।
हर्षान्मिताक्षरगिरा कुशलानुयोगी
पाणिं प्रगृह्य सबलोऽथ गृहं निनेथ ॥ ३६५ ॥

(ப-ரை) दूरात्=தூரத்திலேயே रथात्=தேரிலிருந்து समवरुह्य=இறங்கி नमन्तम्=நமஸ்கரிக்கின்ற भक्तकुलमौलिम्=பக்தஸமூஹத்துக்கு சிகரமாயிருக்கின்ற एनम्=இந்த அக்ரூரரை उत्थाप्य=தூக்கி अथ=பிறகு हर्षात्=ஸந்தோஷத்தினுல் उपगूहन्=ஆலிங்கனம் செய்துகொண்டவராயும், मिताक्षरगिरा=ஸ்வல்பமான எழுத்துக்களையுடைய வார்த்தையினுல் कुशलानुयोगी=க்ஷேமத்தை கேட்கின்றவராயும் கொண்டு अथ=பிறகு सबल:=பலராமனுடன் கூடின நீர் पाणिम्=அக்ரூரரின் கையை प्रगृह्य=பிடித்து गृहम्=வீட்டிற்கு निनेथ=அழைத்துச்சென்றீர்.

नन्देन साकममितादरमर्चयित्वा
तं यादवं तदुदितां निशमय्य वार्ताम् ।
गोपेषु भूपतिनिदेशकथां निवेद्य
नानाकथाभिरिह तेन निशामनैषी: ॥ ३६६ ॥

(ப-ரை) तं यादवम्=அந்த அக்ரூரரை नन्देन साकम्=நந்தகோபருடன் கூட अमितादरम्=மிகுந்த ப்ரேமையுடன் கூடியிருக்கும்படி अर्चयित्वा=பூஜித்து तदुदिताम्=அந்த அக்ரூரரால் சொல்லப்பட்ட वार्ताम्=ஸமாசாரத்தை निशमय्य=கேட்டு गोपेषु=கோபாலர்களிடம் भूपति निदेशकथाम्=ராஜஞன கம்ஸனின் உத்தரவாகிற ஸமாசாரத்தை निवेद्य=தெரிவித்து इह=இந்த ஸமயத்தில் तेन=அந்த அக்ரூரருடன் नानाकथाभि:=பலவிதமான வார்த்தைகளினுல் निशाम्=இரவை अनैषी:=கழித்தீர். (366) (எ-று)

चन्द्रागृहे किमुत चन्द्रभगागृहे नु
राधागृहे नु भवने किमु मैत्रविन्दे ।
धूर्तो विलम्बत इति प्रमदाभिरुच्चै-
राशङ्कितो निशि मरुत्पुरनाथ पाया: ॥ ३६७ ॥

(ப-ரை) मरुत्पुरनाथ=குருவாயூரில் வஸிக்கும் ஹே க்ருஷ்ணா! चन्द्रागृहे किमुत=சந்திரை என்ற கோபிகையின் க்ருஹத்திலோ, चन्द्रभगागृहे नु=சந்திரபகை என்ற கோபிகையின் வீட்டிலோ राधा-

## अथ एकोनचत्वारिंशोऽध्यायः ॥

श्रीशुक उवाच—सुखोपविष्टः पर्यङ्के रामकृष्णोरुमानितः। लेभे मनोरथान्सर्वान्पथि यान्स चकार ह ॥ १ ॥ किमलभ्यं भगवति प्रसन्ने श्रीनिकेतने। तथापि तत्परा राजन्नहि वाञ्छन्ति किञ्चन ॥ २ ॥ सायन्तनाशनं

---

गृहे नु=ராதையின் வீட்டிலோ, मैत्रविन्दे भवने=மித்திர விந்தையின் வீட்டிலோ भूर्तः=ஏமாற்றக்காரனுன கிருஷ்ணன் विलसते=தாபவிக்கிறன் इति=என்று निशि=இரவில் प्रमदाभिः=ஸ்திரீகளால் उच्चैः=அதிகமாய் आशङ्कितः=ஸந்தேஹிக்கப்பட்ட நீர் पायाः=ரோகத்தினின்றும் காப்பாற்றுவீராக. (367)

இவ்விதம் அக்ரூரரின் கோகுல யாத்திரா வர்ணனம், ப்ருந்தாவன ப்ராப்தி வர்ணனம், பகவத்ஸமாகம ப்ராப்தி வர்ணனம், பகவானுல் செய்யப்பட்ட பூஜாதி வர்ணனம் என்ற எழுபத்திரண்டாவது தசகம் முற்றிற்று.



## முப்பத்தொன்பதாவது அத்தியாயம்.

(அ-கை) नवत्रिंशे पुरीङ्गच्छत्यच्युते गोपिकोक्तयः।
अक्रूरेणाथ कालिन्द्यां विष्णुलोकस्य दर्शनम् ॥ १ ॥

(க-ரை) ஸ்ரீகிருஷ்ணன் மதுராபுரிக்குச் செல்லுங்கால் கோபிகைகள் சொல்லும் வார்த்தைகளும், பின்னர் அக்ரூரரால் யமுனையில் விஷ்ணுலோகத்தின் தர்சனமும் இந்த முப்பத்தொன்பதாவது அத்தியாயத்திலுபதேசிக்கப்படுகிறது—

ஸ்ரீசுகர் சொல்லலுற்ருர்—அந்த அக்ரூரர் வழியிற் செல்லுங்கால் எந்த மனோரதங்களைச் செய்தாரோ அவையாவையும் கட்டிலில் சுகமாக உட்கார்ந்துகொண்டு ராமகிருஷ்ணர்களால் அதிகம் ஸன்மானிக்கப்பட்டவராய் அடைந்தார். (1) ஹே ராஜன்! ஸ்ரீதேவியாருக்கிருப்பிடமான பகவான் ப்ரஸன்னராகவிருக்கும்பொழுது கிடைக்கக்கூடாதது என்னவிருக்கிறது. ஆயினும் பகவத்பக்தர்கள் ஒன்றையும் விரும்பார். (2) தேவகி புத்திரனுன பகவான் ஸாயங்கால போஜனத்தைமுடித்துக்கொண்டு ஸுஹ்ருத்துக்களிடத்தில்

कृत्वा भगवान्देवकीसुतः। सुहृत्सु वृत्तं कंसस्य पप्रच्छान्यच्चिकीर्षितम् ॥ ३॥ श्रीभगवानुवाच—तात सौम्यागतः कच्चित्स्वागतं भद्रमस्तु वः। अपि स्वज्ञातिबन्धूनामनमीवमनामयम् ॥ ४ ॥ किं नु नः कुशलं पृच्छे एधमाने कुलामये। कंसे मातुलनाम्न्यङ्ग स्वानां नस्तत्प्रजासु च ॥ ५ ॥ अहो अस्मदभूद्भूरि पित्रोर्वृजिनमार्ययोः। यद्धेतोः पुत्रमरणं यद्धेतोर्बन्धनं तयोः॥ ६ ॥ दिष्ट्याद्य दर्शनं स्वानां मह्यं वः सौम्य काङ्क्षितम्। सञ्जातं वर्ण्यतां तात तवागमनकारणम् ॥ ७ ॥ श्रीशुक उवाच—पृष्टो भगवता सर्वं वर्णयामास माधवः। वैरानुबन्धं यदुषु वसुदेववधोद्यमम् ॥ ८ ॥ यत्संदेशो यदर्थं वा दूतः संप्रेषितः स्वयम्। यदुक्तं नारदेनास्य स्वजन्मान

---

கம்ஸனுடைய நடத்தையையும் அவனால் செய்யவிரும்பப்பட்ட பிற வற்றையும் கேட்கத்தொடங்கினார். (3) ஸ்ரீபகவான் சொல்லுகி ரூர்—ஹே தாத! ஹே ஸௌம்ய! நல்வரவாக வந்திரா? உங்க ளுக்கு க்ஷேமமுண்டாகட்டும். ஸுஹிருத்துக்கள், ஞ்ஞாதிகள், பந்துக்கள் இவர்களுக்கு சுகமும், ஆரோக்யமும் உண்டா? (4) ஹே அங்க! அம்மான் எனப்பெயரிய நமது குலவியாதியான கம் ஸன் விருத்தியடைந்து வருங்கால் நமது க்ஞாதிகளுக்கும் அவனது ப்ரஜைகளிடத்திலும் என்ன க்ஷேமத்தை நான் கேட்பேன். (5) என்னிமித்தமாக பூஜ்யர்களான தாய் தந்தையர்க்கு வெகு கஷ்டம் நேர்ந்திருக்கிறது. என்னிமித்தமாகவே புத்திரர்களின் மரணமும் என்னிமித்தமாகவே அவர்களுக்குப் பந்தனமும் (சிறைவாஸமும்) நேர்ந்திருக்கிறது. (6) ஹே ஸௌம்ய! பந்துக்களான உங்களு டைய விரும்பப்பட்ட தரிசனமானது தைவாதீனமாக இப்பொழுது எனக்கு உண்டாகி இருக்கிறது. ஹே தாத! இங்குவந்த காரணம் சொல்லப்படட்டும். (7) ஸ்ரீசுகர் சொல்லலுற்றார் — பகவானால் கேட்கப்பட்டவரும் மதுவம்சத்திற் பிறந்தவருமான அக்ரூரர் யாத வர்களிடத்தில் வைரத்தின் தொடர்பையும், வஸுதேவரைக் கொல் லுவதற்குச் செய்த முயற்சியையும், எந்த தனுர் யாகத்தை வியாஜ மாகக்கொண்டு சாணூராதிகளைக்கொண்டு கொல்லவேண்டி தான் தூதனாக அனுப்பப்பட்டாரோ அதையும், இந்தக் கிருஷ்ணன் வஸு தேவரிடத்துப்பிறந்தவர் என நாரதரால் எது சொல்லப்பட்டதோ

कदुन्दुभेः॥९॥ श्रुत्वाऽक्रूरवचः कृष्णो बलश्च परवीरहा। प्रहस्य नन्दं पितरं राज्ञादिष्टं विजज्ञतुः॥ १० ॥ गोपान्समादिशत्सोऽपि गृह्यतां सर्वगोरसः। उपायनानि गृह्णीध्वं युज्यन्तां शकटानि च ॥ ११ ॥ यास्यामः श्वो मधुपुरीं दास्यामो नृपते रसान्। द्रक्ष्यामः सुमहत्पर्व यान्ति जानपदाः किल। एवमाघोषयत्क्षत्रा नन्दगोपः स्वगोकुले ॥ १२ ॥ गोप्यस्तास्तदुपश्रुत्य बभूवुर्व्यथिता भृशम्। रामकृष्णौ पुरीं नेतुमक्रूरं व्रजमागतम् ॥ १३ ॥ काश्चित्तत्कृतहृत्तापश्वासम्लानमुखश्रियः। स्रंसद्दुकूलवलयकेशग्रन्थ्यश्च काश्चन ॥१४॥ अन्याश्च तदनुध्याननिवृत्ताशेषवृत्तयः। नाभ्यजान-

---

அதையும் உள்ளபடி கிருஷ்ணனிடத்தில் தெரிவித்தார். (8–9) சத்துரு வீரர்களைக் கொல்லுகின்ற பலராமனும் கிருஷ்ணனும் அக்ரூருடைய வார்த்தையைக்கேட்டுச் சிரித்துப்பிதாவான நந்தகோபரிடம் ராஜாவான கம்ஸனால் சொல்லப்பட்டதைத் தெளிவாய்த் தெரிவித்தனர். (10)

அந்த நந்தகோபரும் கோபாலர்களுக்கு பின்வருமாறு உத்திரவிட்டார். அதாவது:—பால் முதலிய யாவும் எடுத்துக்கொள்ளப்படட்டும். ராஜனுக்குரிய காணிக்கைகளை எடுத்துக்கொள்ளுங்கள். வண்டிகள் பூட்டப்படட்டும். (11) நாளை மதுரைக்குச் செல்லப்போகிறோம். ராஜனான கம்ஸனுக்கு நெய் முதலிய ரஸங்களைக் கொடுக்கப்போகிறோம். பெரிய திருவிழாவைப் பார்க்கப் போகிறோம். தேசத்திய ஜனங்கள் யாவரும் செல்லுகின்றனரன்றோ என இவ்விதம் கோகுல ரக்ஷணத்தில் அதிகாரம் பெற்ற சூதனைக் கொண்டு தனது கோகுலத்தில் பறைபறைவித்தார். (12) கிருஷ்ணனையே முக்கிய ஜீவனமாகக்கொண்ட அந்தக் கோபிகைகள் ராம கிருஷ்ணர்களை மதுராபுரிக்கு அழைத்துச் செல்ல வேண்டி அக்ரூரர் நந்தகோகுலம் வந்ததைக்கேட்டு அப்பொழுதே மிகவும் கஷ்டத்தையடைந்தவர்களாகவாயினர். (13) சில கோபிகைகள் அதைக்கேட்டதனாலேற்பட்ட மனஸ்தாபத்தாலுண்டான ச்வாஸத்தினால் வாடின முககாந்தியையுடையவர்களாகவாயினர். சில கோபிகைகள் நழுவின இடையிலுள்ள வெண்பட்டு, கையிலுள்ள வளை, தலையிலுள்ள மயிர் முடிச்சு இவற்றையுடையவர்களாக வாயினர். (14) மற்ற கோபிகைகள் அந்தக் கிருஷ்ணனுடைய

र्निमं लोकमात्मलोकं गता इव ॥१५॥ स्मरन्त्यश्चापराः शौरेरनुरागस्मितेरिताः। हृदिस्पृशश्चित्रपदा गिरः संमुमुहुः स्त्रियः॥१६॥ गतिं सुललितां चेष्टां स्निग्धहासावलोकनम्। शोकापहानि नर्माणि प्रोद्दामचरितानि च ॥ १७ ॥ चिन्तयन्त्यो मुकुन्दस्य भीता विरहकातराः। समेताः संघशः प्रोचुरश्रुमुख्योऽच्युताशयाः॥ १८ ॥

गोप्य ऊचुः—अहो विधातस्तव न क्वचिद्दया संयोज्य मैत्र्या प्रणयेन देहिनः। तांश्चाकृतार्थान्वियुनङ्क्ष्यपार्थकं विक्रीडितं तेऽर्भकचेष्टितं यथा ॥ १९ ॥ यस्त्वं प्रदर्श्यासितकुन्तलावृतं मुकुन्दवक्त्रं सुकपोलमुन्नसम्।

---

தியானத்தினுல் விலகின கண் முதலியவற்றின் விருத்திகளையுடையவர்களாய்க் கொண்டு ஆத்மலோகத்தை (ஜீவன் முக்தியை) அடைந்தவர்கள் போல இந்தச் சரீரத்தையறிந்தனரில்லை. (15) வேறு கோபஸ்திரீகள் ப்ரேமையினுலேற்பட்ட புன்சிரிப்புடன் சொல்லப்பட்டனவும், மனதுக்குப் பிடித்தனவும், விசித்திரங்களான பதங்களையுடையனவுமான முகுந்தனுடைய வார்த்தைகளை நினைத்துக்கொண்டு நன்கு மோஹத்தையடைந்தனர் (16) விட்டுப் பிரிதலினுல் கலங்கினவர்களும், அச்யுதனிடத்தில் சித்தத்தைச் செலுத்தினவர்களுமான ஸ்திரீகள் முகுந்தனுடைய அழகிய நடையையும், அழகிய சேஷ்டையையும், அழகிய மந்தஹாஸத்துடன் கூடின பார்வையையும், சோகத்தைப் போக்குகின்ற ப்ரியமான வார்த்தைகளையும், கம்பீரமான (பல கருத்தமைந்த) சரித்திரங்களையும், மற்றுமுள்ள லீலைகளையும் தியானித்துக் கொண்டும், கண்ணீர் வடிகின்ற முகத்தையுடையவர்களாய்க்கொண்டும் கூட்டமாகக் கூடிக்கொண்டு சொல்லத்தொடங்கினர். (17)

கோபிகைகள் சொல்லலுற்றனர்—அடே ப்ரம்ஹதேவனே! உனக்கு ஒருவிடத்திலும் தயைகிடையாது. ஜீவர்களை ஹிதாசரணத்துடனும், ஸ்னேஹத்துடன் சேர்த்துவைத்துப் பின்னர் அவர்களை போகத்தையடையாதவர்களாகவே பிரித்துவிடுகின்றனே. ஆகவே உன்னுடைய விளையாட்டானது குழந்தைகளின் சேஷ்டிதம் போலப் பயனற்றதேயாகும். (19) யாதொரு நீ கருத்த சுருட்டைமயிர்களால் மறைக்கப்பட்டதும், அழகிய கன்னங்களையுடையதும்,

**शोकापनोदस्मितलेशसुन्दरं करोषि पारोक्ष्यमसाधु ते कृतम् ॥ २० ॥ क्रूरस्त्वमक्रूरसमाख्यया स्म नश्चक्षुर्हि दत्तं हरसे बताज्ञवत् । येनैकदेशेऽखिलसर्गसौष्ठवं त्वदीयमद्राक्ष्म वयं मधुद्विषः ॥ २१ ॥ न नन्दसूनुः क्षणभङ्गसौहृदः समीक्षते नः स्वकृतातुरा बत । विहाय गेहान्स्वजनान्सुतान्पतींस्तद्दास्यमद्धोपगता नवप्रियः ॥ २२ ॥ सुखं प्रभाता रजनीयमाशिषः सत्या बभूवुः पुरयोषितां ध्रुवम् । याः संप्रविष्टस्य मुखं व्रजस्पतेः पास्यन्त्यपाङ्गोत्कलितस्मितासवम् ॥ २३ ॥ तासां मुकुन्दो मधुमञ्जुभाषि-**

---

எடுப்பான மூக்கையுடையதும், சோகத்தைப்போக்கும் இளம் மந்தஹாஸத்தினால் அழகுவாய்ந்ததுமான முகுந்தனுடைய முகத்தைக் காட்டிப் பிறகு அதை மறைக்கின்றனையோ ஆனதுபற்றி உனது செய்கையானது நிந்திக்கத்தக்கதேயாகும். (20) நாங்கள் உனது பூர்ணமான படைப்புத்திறமையை ஸ்ரீகிருஷ்ணனுடைய முகம் கண் முதலிய சிலவற்றில் எந்தக்கண்ணால் கண்டோமோ முன்னர் கொடுக்கப்பட்ட எங்களுடைய அந்தக்கண்ணை க்ரூரனான நீ அக்ரூரன் என்ற பெயருடன் கூடினவனாய் அறியாதவன்போலப் பிடுங்குகின்றனையே? இது வெகு கஷ்டமன்றோ. (21) புதிது புதிதானவற்றில் ப்ரீதியையுடையவனும், க்ஷணத்தில் அழியும் ஸ்னேஹமுள்ளவனுமான நந்தகோபபுத்திரன் அவனது செய்கையினாலேயே தாபத்தையடைந்தவர்களும், வீடுகளையும், சொந்த ஜனங்களையும், புத்திரர்களையும், பதிகளையும் விட்டுவிட்டு நேரில் அவரது அடிமைத் தன்மையையடைந்தவர்களுமான நம் யாவரையும் திரும்பிப்பார்க்கின்றானில்லை. (22) எவர்கள் (நகரத்தில்) நன்கு ப்ரவேசித்த ஸ்ரீ கிருஷ்ணனுடைய கடைக்கண்ணினால் விருத்தியையடைந்த புன்சிரிப்பாகிற ரஸத்தையுடையதான முகத்தைப் பானஞ்செய்யப்போன்றனரோ அந்தப் பட்டினத்து ஸ்திரீகளுடைய "இந்த இரவு சுகமாய் விடிந்தது" என்ற ப்ரார்த்தனைகள் உண்மைகளாகவே ஆயின. இது நிஸ்சயம். (23) ஹே அபலைகளே! முகுந்தன் நல்ல மனஸ்ஸுள்ளவனாயினுங்கூட தேன் போல இனிமைவாய்ந்த அந்த நகர ஸ்திரீகளின் வார்த்தைகளினால் இழுக்கப்பட்ட சித்தமுள்ளவனாகவும் அவர்களின் லஜ்ஜையுடன் கூடின லீலைகளினால் மயங்கினவனாகவு

तैर्गृहीतचित्तः परवान्मनस्व्यपि। कथं पुनर्नः प्रतियास्यतेऽबला ग्राम्याः सलज्जस्मितविभ्रमैर्भ्रमन्॥ २४॥ अद्य ध्रुवं तत्र दृशो भविष्यते दाशार्ह-भोजान्धकवृष्णिसात्वताम्। महोत्सवः श्रीरमणं गुणास्पदं द्रक्ष्यन्ति ये चाध्वनि देवकीसुतम्॥२५॥ मैतद्विधस्याकरुणस्य नाम भूदक्रूर इत्येतद-तीव दारुणः। योऽसावनाश्वास्य सुदुःखितं जनं प्रियात्प्रियं नेष्यति पार-मध्वनः॥ २६॥ अनार्द्रधीरेष समास्थितो रथं तमन्वमी च त्वरयन्ति

---

மாகி பிதா முதலியோருக்கு அடங்கினவனுக இருந்தபோதிலுங்கூட திரும்பவும் பட்டினத்துப் பழக்கந்தெரியாத நம்மை எவ்விதம் வந்தடையப் போகிருன். (24) மேலும் அந்தப்பட்டினத்தில் வஸிக்கும் தாசார்ஹர், போஜர், அந்தகர், விருஷ்ணிகள், ஸாத்வதர் இவர்களுடைய திருஷ்டிக்கும், எவர்கள் வழியில் ஸ்ரீரமணனும், எல்லா நற்குணங்களுக்குமிருப்பிடமானவனுமான தேவகீசுதனைப் பார்க்கப் போகின்றனரோ அவர்களுடைய திருஷ்டிக்கும் பெரிய ஸந்தோஷமானது ஏற்படப்போகிறது. (25) இம்மாதிரியான செய்கையையுடையவனும் தயையற்றவனுமான இவனுக்கு அக்ரூரன் என்ற இந்தப்பெயரானது ஏற்படவேண்டுவதில்லை. யாதொரு இவன் (எக்காரணம்பற்றி) மிக்க துக்கத்தையடைந்த ஜனத்தைச் சமாதானப்படுத்தாமல் ப்ராணனைக் காட்டிலுங்கூட ப்ரியதரனுன ஸ்ரீகிருஷ்ணனை நமது கண்ணுக்கெட்டாதவெகுதூரதேசத்துக்குக் கொண்டு போகின்ருனே அதனுல் இவன் மிக்கக் கொடூரம் வாய்ந்தவனேயாவான். (26)

கடினபுத்தியுள்ளவனுன இந்தக் கிருஷ்ணன் தேரிலேறிவிட்டான். கெட்ட மதங்கொண்டவர்களான இந்தக் கோபாலர்கள் வண்டிகளுடன் கூட அவனையனுஸரித்துத் துரைப்படுத்துகின்றனர். (இவனது வணங்காத்தன்மையைக் கண்டு) கிழவர்கள் விலகி நிற்கின்றனர். இப்பொழுது தைவமுங்கூட நம் விஷயத்தில் *ப்ரதிகூல

---

* தைவானுகூல்யமிருக்குமாயின் இவர்களுக்குள் யாதாவதொருவன் இடையூறுகளாற்தடுக்கப்படலாம். அல்லது இடியாவது கோபாலர்கள் தலையில் விழலாம். யாதேனும் வேறு அரிஷ்டமாவது உண்டாகலாம். ஒன்றும் நிகழவில்லையே எனவெண்ணினர்,

दुर्मदाः। गोपा अनोभिः स्थविरैरुपेक्षितं दैवं च नोऽद्य प्रतिकूलमीहते ॥ २७ ॥ निवारयामः समुपेत्य माधवं किं नोऽकरिष्यन्कुलवृद्धबान्धवाः। मुकुन्दसङ्गान्निमिषार्धदुस्त्यजाद्दैवेन विध्वंसितदीनचेतसाम् ॥२८॥ यस्यानुरागललितस्मितवल्गुमन्त्रलीलावलोकपरिरम्भणरासगोष्ठ्याम् । नीताः स्म नः क्षणमिव क्षणदा विना तं गोप्यः कथं न्वतितरेम तमो दुरन्तम् ॥ २९ ॥ योऽह्नःक्षये व्रजमनन्तसखः परीतो गोपैर्विशन्खुररजश्छुरितालकस्रक्। वेणुं क्वणन्स्मितकटाक्षनिरीक्षणेन चित्तं क्षिणोत्यमुमृते नु कथं भवेम ॥ ३० ॥

श्रीशुक उवाच—एवं ब्रुवाणा विरहातुरा भृशं व्रजस्त्रियः कृष्णविषक्तमानसाः। विसृज्य लज्जां रुरुदुः स्म सुस्वरं गोविन्द दामोदर माधवेति॥३१॥

---

மாகவே சேஷ்டிக்கிறது. (27) மாதவனையணுகிப் போகவிடாமல் தடுத்துவிடுவோம். அரை நிமிஷங்கூட விடமுடியாததான முகுந்தனுடைய ஸங்கத்தினின்றும் தைவவசமாகப் பிரிக்கப்பட்டனவும், அனதுபற்றியே தீனங்களுமான சித்தங்களையுடையவர்களான நம் விஷயத்தில் வம்சவிருத்தர்களும், பந்துக்களும் யாது செய்யக்கூடும். (28) ஹே கோபிகைகளே! எவருடைய ப்ரேமையினலேயே ஏற்பட்ட அழகிய புன்சிரிப்பும், இனிமையான ஸங்கேத வார்த்தையும், லீலையுடன் கூடின பார்வையும், ஆலிங்கனமும் வாய்ந்த எந்த ராஸ கோஷ்டியில் நம்மால் அனேகம் இரவுகள் ஒரு க்ஷணம் போலப் போக்கப்பட்டனவோ அந்தக் கிருஷ்ணனில்லாமல் தாண்டுதற்கரிய விரஹதுக்கத்தை எவ்விதம் கடக்கப்போகின்றோம். (29) மேலும் எந்தக் கிருஷ்ணன் மாலைவேளையில் பலராமனை ஸகாவாகக் கொண்டும், கோபர்களால் சூழப்பட்டுக்கொண்டும், குளம்பினலுண்டான புழுதிகள் படர்ந்த சுருட்டை மயிர், மாலை இவற்றையுடையவனுய்க் கொண்டும், வேணுவை வாசித்துக்கொண்டும், கோகுலத்தில் நுழைந்தவனுய் புன்சிரிப்புடன் கூடின கடாக்ஷவீக்ஷணத்தினுல் நம்முடைய சித்தத்தைக் கவர்ந்தானே இவனில்லாமல் நாம் எவ்விதம் ஜீவித்திருப்போம். (30) ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—கிருஷ்ணனிடத்தில் மிக்கப்பற்றுதலையடைந்த மனஸ்ஸையுடையவர்களாய் இவ்விதம் பேசுகின்றவர்களும், விரஹத்தினின்றும் மிக்கப்

स्त्रीणामेवं रुदन्तीनामुदिते सवितर्यथ। अक्रूरश्चोदयामास कृतमैत्रादिको रथम्॥ ३२॥ गोपास्तमन्वसज्जन्त नन्दाद्याः शकटैस्ततः। आदायोपायनं भूरि कुम्भान्गोरससंभृतान्॥ ३३॥ गोप्यश्च दयितं कृष्णमनुव्रज्यानुरञ्जिताः। प्रत्यादेशं भगवतः काङ्क्षन्त्यश्चावतस्थिरे॥ ३४॥ तास्तथा तप्यतीर्वीक्ष्य स्वप्रस्थाने यदूत्तमः। सान्त्वयामास सप्रेमैरायास्य इति दौत्यकैः॥ ३५॥ यावदालक्ष्यते केतुर्यावद्रेणू रथस्य च। अनुप्रस्थापितात्मानो लेख्यानीवोपलक्षिताः॥ ३६॥ ता निराशा निववृतुर्गोविन्दविनिवर्तने। विशोका अहनी निन्युर्गायन्त्यः प्रियचेष्टितम्॥ ३७॥ भगवा-

---

பீடையையடைந்தவர்களுமான கோபஸ்திரீகள் லஜ்ஜையைவிட்டு ஹே கோவிந்த! ஹே தாமோதர! ஹே மாதவ! எனச் சொல்லிக் கொண்டு நல்ல குரலுடன் வாய்விட்டுக்கதறினர். (31) இவ்விதம் ஸ்திரீகள் அழுவதைப் பொருட்படுத்தாது ஸூரியனுதயமான பின்னர் செய்யப்பட்ட ஸந்தியோபாஸனம் முதலிய கர்மங்களையுடைய அக்ரூரர் தேரை ஓட்டவாரம்பித்தார். (32) பிறகு நந்தகோபர் முதலிய கோபாலர்கள் அதிகமான காணிக்கைப்பொருளையும், பால் தயிர் நெய் நிறைந்த குடங்களையும் எடுத்துக்கொண்டு வண்டிகளுடன் கூட அவரைப் பின்தொடர்ந்தனர். (33) கோபிகைகளும் தயிதனுன கிருஷ்ணனைப் பின்தொடர்ந்து திரும்பிப்பார்த்தல் முதலியவற்றால் அற்பம் ஸந்தோஷப்படுத்தப்பட்டவர்களாய்க்கொண்டு பகவானிடமிருந்து வரவேண்டாமென்ற மறுப்பை எதிர்பார்த்து நின்றனர். (34) தான் கிளம்பினபொழுது அவ்விதம் தாபத்தை யடைகின்ற அவர்களைக்கண்டு யதூத்தமனுன ஸ்ரீகிருஷ்ணன் 'சீக்கிரம் வரப்போகிறேன்' என ப்ரேமை நிரம்பின தூத வாக்கியங்களினுல் தேற்றினர். (35) எதுவரை கொடிமரம் காணப்படுகின்றதோ, எதுவரை தேரின் புழுதி காணப்படுகின்றதோ அதுவரை தொடர்ந்து அனுப்பப்பட்ட மனஸ்ஸையுடையவர்களாய் சித்திரத்திலெழுதின பொம்மைகள் போல அசைவற்று நின்றனர். (36) அவர்கள் கோவிந்தனைத் திருப்புவதில் ஆசையொழிந்தவர்களாய் வீட்டை நோக்கித் திரும்பினர். ப்ரியனுன ஸ்ரீகிருஷ்ணனுடைய லீலையைக் கானஞ்செய்துகொண்டு சோகமற்றவர்களாய் இரவு பகல்களைப் போக்கினர். (37)

नपि संप्राप्तो रामाक्रूरयुतो नृप। रथेन वायुवेगेन कालिन्दीमघनाशिनीम् ॥ ३८ ॥ तत्रोपस्पृश्य पानीयं पीत्वा मृष्टं मणिप्रभम्। वृक्षषण्डमुपव्रज्य सरामो रथमाविशत् ॥ ३९ ॥ अक्रूरस्तावुपामन्त्र्य निवेश्य च रथोपरि। कालिन्द्या ह्रदमागत्य स्नानं विधिवदाचरत् ॥ ४० ॥ निमज्य तस्मिन्सलिले जपन्ब्रह्म सनातनम्। तावेव ददृशेऽक्रूरो रामकृष्णौ समन्वितौ ॥ ४१ ॥ तौ रथस्थौ कथमिह सुतावानकदुन्दुभेः। तर्हि स्वित्स्यन्दने न स्त इत्युन्मज्ज्य व्यचष्ट सः ॥ ४२ ॥ तत्रापि च यथापूर्वमासीनौ पुनरेव सः। न्यमज्जद्दर्शनं यन्मे मृषा किं सलिले तयोः ॥ ४३ ॥

भूयस्तत्रापि सोऽद्राक्षीत्स्तूयमानमहीश्वरम्। सिद्धचारणगन्धर्वैरसुरैर्नतकन्धरैः ॥ ४४ ॥ सहस्रशिरसं देवं सहस्रफणमौलिनम्। नीलाम्बरं

---

ஹே ந்ருப! பகவானும், பலராமன் அக்ரூரர் இவர்களுடன் கூட வாயுவேகமுள்ள தேரினால் பாபத்தைப் போக்குகின்ற யமுனையை அடைந்தார். (38) அந்த யமுனையில் நீலமணிக்கொப்பான காந்தியையுடையதும், சுத்தமுமான ஜலத்தை ஆசமனஞ்செய்து குடித்துவிட்டு மரக்கூட்டத்தினருகையடைந்து பலராமனுடன் கூடத் தேரிலேறிக்கொண்டார். (39) அக்ரூரர் அவர்களைத் தேரின் மேல் வைத்து அவர்களிடம் விடைபெற்றுக்கொண்டு யமுனையின் மடுவிலிறங்கி முறைப்படி ஸ்னானஞ்செய்யத் தொடங்கினார். (40) பழமையான வேதத்தை (ஸாவித்ரீ மந்திரத்தை) ஜபித்துக்கொண்டு முழுகின அக்ரூரர் அந்த ஜலத்தில் சேர்ந்திருக்கின்ற அதே ராம க்ருஷ்ணர்களைக் கண்டார். (41) தேரிலிருக்கின்ற வஸுதேவரின் புத்திரர்கள் இங்கு எவ்விதம் வந்தனர், அங்ஙனமாயின் தேரில் தானில்லையோ எனவெண்ணிக்கொண்டு அவர் ஜலத்தினின்றும் வெளியில் தலையைத் தூக்கிப்பார்த்தார். (42) அத்தேரில் முன் போலவே அவர்களிருப்பதைக்கண்ட அவர் ஜலத்தில் எனக்கேற்பட்ட அவர்களின் தரிசனம் பொய்யோ எனவெண்ணித் திரும்பவும் ஜலத்தில் மூழ்கினார். (43) அந்த அக்ரூரர் திரும்பவும் அந்த ஜலத்தில் வணங்கின கழுத்துள்ள சித்தர், சாரணர், கந்தர்வர் இவர்களாலும், அஸுரர்களாலும் ஸ்துதிக்கப்படுகின்றவரும், ஆயிரம் தலைகளையுடையவரும், ஆயிரம் படங்களில் கிரீடங்களையுடையவரும்,

बिसश्वेतं शृङ्गैः श्वेतमिव स्थितम् ॥ ४५ ॥ तस्योत्सङ्गे घनश्यामं पीतकौशेयवाससम्। पुरुषं चतुर्भुजं शान्तं पद्मपत्रारुणेक्षणम् ॥ ४६ ॥ चारुप्रसन्नवदनं चारुहासनिरीक्षणम्। सुभ्रून्नसं चारुकर्णं सुकपोलारुणाधरम् ॥ ४७ ॥ प्रलम्बपीवरभुजं तुङ्गांसोरस्स्थलश्रियम्। कम्बुकण्ठं निम्ननाभिं वलिमत्पल्लवोदरम् ॥ ४८ ॥ बृहत्कटितटश्रोणिकरभोरुद्वयान्वितम्। चारुजानुयुगं चारु जङ्घायुगलसंयुतम् ॥ ४९ ॥ तुङ्गगुल्फारुणनखव्रातदीधितिभिर्वृतम्। नवाङ्गुल्यङ्गुष्ठदलैर्विलसत्पादपङ्कजम् ॥ ५० ॥ सुमहार्हमणिव्रात

---

கறுத்த வஸ்திரத்தையணிந்தவரும், தாமரைத்தண்டுபோல வெளுத்த தேஹத்தையுடையவரும், கொடிமுடிகளுடன் கூடின கைலாஸ பர்வதம்போலிருப்பவரும் தேவனுமான ஆதிசேஷனைக் கண்டார்.

அந்த ஆதிசேஷனுடைய சுருட்டிக்கொண்ட தேஹத்தின் நடுவில் நீருண்ட மேகம்போலக் கறுத்த நிறமுள்ளவரும், பொன்னிறமான பட்டை வஸ்திரமாக அணிந்தவரும், நான்கு கைகளுள்ளவரும், சாந்தரும், தாமரை இதழ் போன்று சிவந்த கண்ணுள்ளவரும், தெளிந்தும் அழகுள்ளதுமான முகத்தையுடையவரும், அழகிய மந்தஹாஸத்துடன் கூடின பார்வையையுடையவரும், அழகிய புருவங்களையுடையவரும், உயர்ந்த மூக்குகளையுடையவரும், அழகிய காதுகளையுடையவரும், அழகிய கன்னங்களையும் சிவந்த உதட்டையுமுடையவரும், மிக்கத் தொங்குகின்றனவும் பெருத்தனவுமான கைகளையுடையவரும், உயர்ந்த தோள் மார்ப்ரதேசம் இவற்றின் சோபையையுடையவரும், சங்குபோன்ற கழுத்தையுடையவரும், வயிற்றுடன் ஒட்டின உந்தியையுடையவரும், மடிப்புள்ளதும் தளிர் போன்றதுமான வயிற்றையுடையவரும், பெரிதான இடுப்பு ப்ரதேசம் பின்தட்டு, கைநுனிபோன்றுகரைவான இருதொடை இவற்றையுடையவரும், அழகிய இரு முழங்கால்களையுடையவரும், அழகிய இரு கணுக்கால்களையுடையவரும், ஸ்வல்பம உயர்ந்த குதிகால்களுடையவும் சிவந்த நகங்களின் கூட்டங்களுடையவும காந்திகளுடன் கூடினவரும், அழகிய விரல்களும் கட்டைவிரல்களுமாகிற இதழ்களினால் விளங்குகின்ற திருவடித்தாமரையை யுடையவரும், மிக்க விலையுயர்ந்த ரத்தினக்கூட்டங்களையுடைய கிரீடம, கைவளை,

किरीटकटकाङ्गदैः। कटिसूत्रब्रह्मसूत्रहारनूपुरकुण्डलैः॥ ५१ ॥ भ्राजमानं पद्मकरं शङ्खचक्रगदाधरम्। श्रीवत्सवक्षसं भ्राजत्कौस्तुभं वनमालिनम् ॥ ५२ ॥ सुनन्दनन्दप्रमुखैः पार्षदैः सनकादिभिः। सुरेशैर्ब्रह्मरुद्राद्यैर्नवभिश्च द्विजोत्तमैः॥ ५३ ॥ प्रह्लादनारदवसुप्रमुखैर्भागवतोत्तमैः। स्तूयमानं पृथग्भावैर्वचोभिरमलात्मभिः॥ ५४ ॥ श्रिया पुष्ट्या गिरा कान्त्या कीर्त्या तुष्ट्येलयोर्जया। विद्ययाऽविद्यया शक्त्या मायया च निषेवितम् ॥ ५५ ॥

---

தோள்வளை இவைகளினாலும், அரைஞாண், பூணூல், முக்தாஹாரம், பாதஸரம், குண்டலம் இவைகளினாலும் ப்ரகாசிக்கின்றவரும், கையில் தாமரைப்பூவையுடையவரும், சங்கம் சக்கிரம் கதை இவற்றைத் தரிப்பவரும், மார்பில் ஸ்ரீவத்ஸமென்ற மருவையுடையவரும், விளங்கும் கௌஸ்துபமணியையுடையவரும், வனமாலையையணிந்தவரும், ஸுநந்தர் நந்தர் முதலிய பார்ஷதர்களாலும், ஸனகாதிகளினாலும், ப்ரம்ஹதேவன் மஹாதேவன் முதலிய தேவஸ்ரேஷ்டர்களாலும், மரீசி, அத்ரி, அங்கிரஸ், புலஸ்த்யர், புலஹர், க்ரது, ப்ருகு, வஸிஷ்டர், தக்ஷர் ஆகிய ஒன்பது ப்ராம்ஹணோத்தமர்களாலும், ப்ரஹ்லாதர், நாரதர், உபரிசரர் என்ற வசு இவர்களை முதன்மையாகக் கொண்டவர்களும், சுத்தமான மனஸ்ஸையுடையவர்களுமான பாகவதோத்தமர்களினாலும், வேறு வேறு கருத்தமைந்த வார்த்தைகளினால் ஸ்துதிக்கப்படுகின்றவரும், *ஸ்ரீயினாலும்=ஐஸ்வர்யத்தினாலும், புஷ்டியினாலும்=பலத்தினாலும், கிரினாலும்=ஞானத்தினாலும், கீர்த்தியினாலும்=யஸஸ்ஸினாலும், சோபையினாலும், துஷ்டியினாலும்=வைராக்யத்தினாலும், இளையினாலும்=பூசக்தியினாலும், ஊர்ஜையினாலும்=துளஸிக்கு முதற்காரணமான சக்தியினாலும், (*)வித்யா சக்தியினாலும், அவித்யா சக்தியினாலும், அவற்றுக்கு மூலகாரணமான மாயாசக்தியினாலும் ஸேவிக்கப்பட்டவ

---

* பகவான் என்றவிடத்திலுள்ள பக என்ற பதத்தாற் சொல்லப்படும் ஆறு சக்திகளே மூலத்திலுள்ள श्रिया पुष्ट्या गिरा कान्त्या कीर्त्या तुष्ट्या என்ற பதங்களாற் சொல்லப்பட்டன.

(*) ஜீவனது முக்திக்குக் காரணமான சக்தி வித்யா சக்தியென்றும், பந்தத்துக்குக் காரணமான சக்தி அவித்யா சக்தியென்றும் சொல்லப்படும்.

विलोक्य सुभृशं प्रीतो भक्त्या परमया युतः। हृष्यत्तनूरुहो भावपरिक्लिन्नात्मलोचनः॥५६॥ गिरा गद्गदयाऽस्तौषीत्सत्त्वमालम्ब्य सात्वतः। प्रणम्य मूर्ध्नावहितः कृताञ्जलिपुटः शनैः॥ ५७॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्धेऽक्रूरप्रतियाने भगवत्प्रयाणनिरूपणं नाम एकोनचत्वारिंशोऽध्यायः ॥ ३९ ॥



---

ரும், புருஷசப்த வாச்யருமான பகவானைக்கண்டு மிக்க ப்ரீதியை யடைந்தவராயும், மேலான பக்தியுடன் கூடினவராயும், சிலிர்த்த உரோமங்களையுடையவராயும், பரம ப்ரேமை காரணமாயுண்டான ஆனந்தாஸ்ருவினுல் நனைந்த தனது நேத்திரங்களையுடையவராயும் செய்யப்பட்ட அஞ்ஜலி பந்தத்தையுடையவராயும், ஸாவதான சித்த ராயும், ஸாத்வதராயுமிருக்கிற அக்ரூரர் தலையினுல் வணங்கி தைரியத்தைப் பற்றிக்கொண்டு தழுதழுத்த வார்த்தையுடன் மெதுவாக ஸ்துதிக்கவாரம்பித்தார். (46-57) (எ-று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண தசமஸ்கந்த பூர்வார்த்தத்தில் அக்ரூரர் திரும்புங்கால் பகவத்ப்ரயாண நிருபணம் என்ற முப்பத்தோன்பதாவது அத்தியாயம் முற்றிற்று.



## நாராயணீயம்.

निशमय्य तवाथ यानवार्तां भृशमार्ताः पशुपालबालिकास्ताः।
किमिदं किमिदं कथं न्वितीमाः समवेताः परिदेवितान्यकुर्वन्॥३६८॥

(ப-ரை) अथ=பிறகு ताः=அந்த पशुपालबालिकाः=கோபஸ்திரீகள் तव=உம்முடைய यानवार्ताम्=மதுராபுரீ செல்லும் ஸமாசாரத்தை निशमय्य=கேட்டு इमाः=இவர்கள் भृशम्=மிகவும் आर्ताः=பீடிக்கப்பட்டவர்களாயும், समवेताः=ஒன்று கூடினவர்களாயும் கொண்டு किमिदं, किमिदम्=அமிருதத்தை ருசி பார்க்குங்கால் விஷபானம் போல இஃதென்ன கஷ்டம் நேர்ந்தது இஃதென்ன கஷ்டம் நேர்ந்தது कथं नु=எதனுல் நேர்ந்தது इति=என்று परिदेवितानि=அழுகைகளை अकुर्वन्=செய்தார்கள். (368) (எ-று)

करुणानिधिरेष नन्दसूनुः कथमस्मान्विसृजेदनन्यनाथाः ।
बत नः किमु दैवमेवमासीदितिताास्त्वद्गतमानसा विलेपुः ॥ ३६९ ॥

(ப-ரை) करुणानिधिः=தயவுக்கு இருப்பிடமான एषः=இந்த नन्दसूनुः=நந்தரின் புதல்வனுன க்ருஷ்ணன் अनन्यनाथाः=வேறு நாதர்களற்ற अस्मान्=எங்களை कथम्=எவ்விதம் विसृजेत्=விட்டுவிடுவார். नः=நம்முடைய दैवम्=பாக்கியமானது एवम्=இவ்விதம் மேலான ஸுகத்தைத் தருவதாகவும், உடனே நாசத்தையடைந்ததாகவும் आसीत्, किमु=ஆயிற்றுபோலும்? बत=மிகவும் கஷ்டம் इति=என்று ताः=அந்த கோபிகைகள் त्वद्गतमानसाः=உம்மிடம் பற்றின மனத்தையுடையவர்களாய்க் கொண்டு विलेपुः=கதறினர். (369)

चरमप्रहरे प्रतिष्ठमानः सह पित्रा निजमित्रमण्डलैश्च ।
परितापभरं नितंबिनीनां शमयिष्यन् व्यमुचः सखायमेकम् ॥३७०॥

(ப-ரை) चरमप्रहरे=இரவின் நான்காவது யாமத்தில் पित्रा=தகப்பனுருடனும் निजमित्रमण्डलैश्च=தனது ஸ்னேஹிதர்களின் கூட்டங்களுடனும் सह=கூட प्रतिष्ठमानः=புறப்படுகின்ற நீர் नितंबिनीनाम्=கோபிகைகளுடைய परितापभरम्=துக்கமாகிற பளுவை शमयिष्यन्=குறைக்கப்போகின்றவராய்க்கொண்டு एकम्=ஒரு सखायम्=தோழனை व्यमुचः=அனுப்பினீர். (370) (எ-று)

अचिरादुपयामि सन्निधिं वो भविता साधु मयैव सङ्गमश्रीः ।
अमृतांबुनिधौ निमज्जयिष्ये द्रुतमित्याश्वसिता वधूरकार्षीः ॥ ३७१ ॥

(ப-ரை) वः=உங்களுடைய सन्निधिम्=ஸமீபத்துக்கு अचिरात्=சீக்கிரத்தில் उपयामि=வருகிறேன் मयैव=என்னுடன் கூடவே सङ्गमश्रीः=ஸம்போக ஸௌக்யமானது भविता = நேரப்போகிறது. अमृतांबुनिधौ=மோக்ஷ ஸுகமாகிற ஸமுத்திரத்தில் द्रुतम्=சீக்கிரமாகவே निमज्जयिष्ये=முழுக்குகிறேன் इति=என்ற வார்த்தையினுல் वधूः=கோபிகைகளை आश्वसिताः=ஸமாதானமடைந்தவர்களாக अकार्षीः=செய்தீர். (371) (எ-று)

सविषादभरं सयाच्ञमुच्चैरतिदूरं वनिताभिरीक्ष्यमाणः ।
मृदु तद्दिशि पातयन्नपाङ्गान् सबलोऽक्रूररथेन निर्गतोऽभूः ॥३७२॥

(ப-ரை) वनिताभिः=கோபிகைகளால் उच्चैः=மிகவும் सविषादभरम्=துக்கத்தின் பளுவுடன் கூடியிருக்கும்படியும், सयाच्ञम्=நீர்

வாத்தாமதித்தால் எங்கள் பிராணன்கள் சென்றுவிடும். ஆதலால் சீக்கிரமாகவே திருப்பிவந்துவிடவேண்டும் என்ற யாசனையுடன் கூடியிருக்கும்படியும் ईक्ष्यमाण:=பார்க்கப்படுகின்ற நீர் तद्दिशि=அந்தக் கோபிகைகளிருக்கும் திசையில் अपाङ्गान्=கடைக்கண் பார்வைகளை मृदु=மெதுவாய் पातयन्=விழ்த்திக்கொண்டும் सबल:=பலராமனுடன் கூட अक्रूररथेन=அக்ரூரர் கொண்டுவந்த தேரினுல் निर्गत:= கோகுலத்தினின்றும் வெளிக்கிளம்பினவராக अभू:=ஆனீர். (372)

अनसा बहुलेन वल्लवानां मनसाचाऽनुगतोऽथ वल्लभानाम् ।
वनमार्तमृगं विषण्णवृक्षं समतीतो यमुनातटीमयासी: ॥ ३७३ ॥

(ப-ரை) अथ=பிறகு वल्लवानाम्=கோபாலர்களுடைய बहुलेन= அநேகம் अनसा=வண்டியினுலும், वल्लभानाम्=கோபிகைகளுடைய मनसा च=மனத்தினுலும் अनुगत:=பின்தொடரப்பட்ட நீர் आर्तमृगम्=துக்கமடைந்த மிருகங்களையுடையதும், विषण्णवृक्षम्=துக்கமடைந்த (வாடின) மரங்களையுடையதுமான वनम्=காட்டை समतीत:=கடந்தவராய்க்கொண்டு यमुनातटीम्=யமுனு நதிக்கரையை अयासी:=அடைந்தீர். (373) (எ-று)

नियमाय निमज्ज्य वारिणि त्वामभिवीक्ष्याथ रथेऽपि गान्दिनेय: ।
विवशोऽजनि किन्विदं विभोस्ते ननु चित्रं त्ववलोकनं समन्तात् ॥

(ப-ரை) गान्दिनेय:=அக்ரூரர் नियमाय = ஸந்தியாவந்தனுதிகளைச் செய்வதற்காக वारिणि=ஜலத்தில் निमज्ज्य=மூழ்கி (तत्र=அங்கு) त्वाम्=உம்மை अभिवीक्ष्य=கண்டு अथ=மூழ்கி எழுந்தபிறகு रथेऽपि= தேரிலும் (अभिवीक्ष्य=கண்டு) विवश:=ஸ்வாதீனமற்றவராக अजनि= ஆனுர். ननु=ஹே கிருஷ்ண विभो:=எங்கும் வியாபித்திருக்கின்ற ते=உம்விஷயத்தில் समन्तात्=நான்கு பக்கங்களிலும் इदमवलोकनम्= அக்ரூரர் கண்ட இந்தக் காக்ஷியானது किन्नु चित्रम्=என்ன ஆஸ்சரியம்? ஆஸ்சரியப்பட இடமில்லை என்று கருத்து. (374)

पुनरेष निमज्ज्य पुण्यशाली पुरुषं त्वां परमं भुजङ्गभोगे ।
अरिकंबुगदांबुजै: स्फुरन्तं सुरसिद्धौघपरीतमालुलोके ॥ ३७५ ॥

(ப-ரை) पुण्यशाली=புண்யஞ்செய்தவரான एष:=இந்த அக்ரூரர் पुन:=மறுபடியும் निमज्ज्य=ஜலத்தில் முழுகி (तत्र=அங்கு) त्वाम्=

உம்மை **अरिकंबुगदांबुजैः**=சக்கிரம், சங்கம், கதை, தாமரைப்புஷ்பம் இவைகளால் **स्फुरन्तम्**=பிரகாசிப்பவரும், **सुरसिद्धौघपरीतम्**=தேவர்கள், ஸித்தர்கள் இவர்களின் கூட்டத்தினுல் சூழப்பட்டவருமான **परमं पुरुषम्**=பரமபுருஷனுக, ஸ்ரீநாராயணனுக **भुजङ्गभोगे**=ஆதிசேஷ. னின் உடலில் (ஆதிசேஷ சயனத்தில்) **आलुलोके**=கண்டார். (375)

**स तदा परमात्मसौख्यसिंधौ विनिमग्नः प्रणुवन् प्रकारभेदैः।**
**अविलोक्य पुनश्च हर्षसिंधोरनुवृत्त्या पुलकावृतो ययौ त्वाम् ॥**

(ப–ரை) **सः**=அந்த அக்ரூரர் **तदा**=அப்பொழுது **परमात्मसौख्यसिंधौ**=ப்ரம்ஹானந்தமாகிற ஸமுத்திரத்தில் **विनिमग्नः**=மூழ்கினவராயும், **प्रकारभेदैः**=ஸகுணம், நிர்க்குணம் என்ற பேதங்களால் **प्रणुवन्**=ஸ்துதிக்கின்றவராயும் **अविलोक्य**=அந்தப் பரமாத்மரூபத்தைக்காணுமல் **पुनश्च**=திரும்பவும் **हर्षसिंधोः**=ஆனந்த ஸமுத்திரத்தின் **अनुवृत्त्या**=தொடர்பினுல் **पुलकावृतः**=மயிர்க்குச்சலால் சூழப்பட்டவராயும் கொண்டு **त्वाम्**=உம்மை **ययौ**=அடைந்தார். (376)

**किमु शीतलिमा महान् जले यत्पुलकोऽसाविति चोदितेन तेन।**
**अतिहर्षनिरुत्तरेण सार्धं रथवासी पवनेश पाहि मां त्वम् ॥ ३७७ ॥**

(ப–ரை) **पवनेश**=ஹே குருவாயூருக்கு நாதனுன கிருஷ்ண! **यत्**=எக்காரணத்தினுல் **असौ**=நேரில் காணப்படுகின்ற இந்த **पुलकः**=மயிர்க்குச்சல் உமது சரீரத்தில் ஏற்பட்டிருக்கின்றதோ (**तत्**=அக்காரணத்தினுல்) **जले**=ஜலத்தில் **महान्**=அதிகமான **किमु शीतलिमा**=குளுமை இருக்கின்றதா என்னே? **इति**=என்று **चोदितेन**=உம்மால் கேட்க்கப்பட்டவரும், **अतिहर्षनिरुत्तरेण**=மிகுந்த ஸந்தோஷத்தினுல் பதில் சொல்லாமலிருப்பவருமான **तेन**=அந்த அக்ரூரருடன் **सार्धम्**=கூட **रथवासी**=ரதத்தில் வஸித்தவரான **त्वम्**=நீர் **माम्**=என்னே **पाहि**=ரோகத்தினின்றும் காப்பாற்றுவீராக. (377) (எ–று)

இவ்விதம் பகவான் மதுரைக்குப் புறப்படுவதை வர்ணித்தல்
யமுனையின் ஜலத்தில் அக்ரூரருக்கு பகவத்ஸ்வரூப
ஸாக்ஷாத்காராதிகளை வர்ணித்தல் என்ற
எழுபத்துமூன்றுவது தசகம் முற்றிற்று.



## अथ चत्वारिंशोऽध्यायः ॥

अक्रूर उवाच—नतोऽस्म्यहं त्वाऽखिलहेतुहेतुं नारायणं पूरुषमाद्यमव्ययम् । यन्नाभिजातादरविन्दकोशाद्ब्रह्माविरासीद्यत एष लोकः ॥ १ ॥ भूस्तोयमग्निः पवनः खमादिर्महानजादिर्मन इन्द्रियाणि । सर्वेन्द्रियार्था विबुधाश्च सर्वे ये हेतवस्ते जगतोऽङ्गभूताः ॥२॥ नैते स्वरूपं विदुरात्मनस्ते ह्यजादयोऽनात्मतया गृहीताः । अजोऽनुबद्धः स गुणैरजाया गुणात्परं वेद न ते स्वरूपम् ॥ ३ ॥ त्वां योगिनो यजन्त्यद्धा महापुरुषमीश्वरम् ।

---

### நாற்பதாவது அத்தியாயம்.

(அ—கை) चत्वारिंशे ततोऽक्रूरः कृष्णं मत्वेश्वरेश्वरम् ।
प्रणम्य भक्त्या तुष्टाव सगुणागुणभेदतः ॥ १ ॥

(க—ரை) பிறகு அக்ரூரர் ஸ்ரீக்ருஷ்ணனை ஈஸ்வரர்களுக்குமீஸ்வரனுகவெண்ணிக்கொண்டு வணங்கி பக்தியுடன் கூட ஸகுண நிர்க்குண பேதத்தினுல் ஸ்துதித்தார் என இந்த நாற்பதாவது அத்தியாயத்திலுபதேசிக்கப்படுகிறது. (1) (எ—று)

அக்ரூரர் சொல்லலுற்றூர்—ஹே க்ருஷ்ண! காரணப்பொருள் யாவற்றுக்கும் காரணமானவரும், புருஷசப்தவாச்யரும், ஆத்யரும், அழிவற்றவரும், எவரது உந்தியினின்றுண்டான தாமரை மொக்கிலிருந்து ப்ரம்ஹ தேவனுண்டானுரோ, எந்த ப்ரம்ஹ தேவனிடமிருந்து இந்த லோகமுண்டாயிற்றே அத்தகைய நாராயணனுமான உம்மை நான் வணங்கினவனுக இருக்கின்றேன். (1) பூமி, ஜலம், நெருப்பு, காற்று, ஆகாசம், அஹங்தத்த்வம், மஹத்தத்த்வம், ப்ரக்ருதி, புருஷன், ஸமஷ்டி மனஸ், இந்திரியங்கள், அவற்றின் எல்லா விஷயங்கள், அவற்றின் அபிமானி தேவதைகள் ஆகிய ஜகத்துக்குக் காரணங்களான பொருள் எவையுண்டோ அவையாவும் உமது ஸ்ரீ மூர்த்தியினின்று முண்டானவைகளேயாகும். (2) ஜடமாக இருப்பதுபற்றி ப்ரத்யக்ஷம்முதலிய ப்ரமாணங்களால் அறியப்பட்ட இந்த ப்ரக்ருதி முதலிய பொருள்கள் ப்ரத்யகாத்மாவான உம்முடைய ஸ்வரூபத்தையறியமாட்டா. ப்ரக்ருதியின் குணங்களுடன் ஸம்பந்தத்தையடைந்த (ஸர்வஜீவ ஸமஷ்டியான) ப்ரம்ஹதேவனும்

साध्यात्मं साधिभूतं च साधिदैवं च साधवः ॥ ४ ॥ त्रय्या च विद्यया केचित्त्वां वै वैतानिका द्विजाः । यजन्ते विततैर्यज्ञैर्नानारूपामराख्यया ॥५॥ एके त्वाखिलकर्माणि संन्यस्योपशमं गताः । ज्ञानिनो ज्ञानयज्ञेन यजन्ति ज्ञानविग्रहम् ॥६॥ अन्ये च संस्कृतात्मानो विधिनाऽभिहितेन ते । यजन्ति त्वन्मयास्त्वां वै बहुमूर्त्येकमूर्तिकम् ॥ ७ ॥ त्वामेवान्ये शिवोक्तेन मार्गेण शिवरूपिणम् । बह्वाचार्यविभेदेन भगवन्समुपासते ॥ ८ ॥ सर्व एव यजन्ति

---

குணாதீதமான உமது ஸ்வரூபத்தையறிவதில்லை. (3) *பொருத்தமான அனுஷ்டானத்திலீடுபட்ட ஹிரண்யகர்ப்போபாஸகாதிகளான யோகிகள் அத்யாத்மம், அதிபூதம், அதிதைவம் இவற்றுக்கு ஸாக்ஷியும், அவற்றுக்கு அந்தர்யாமியும் நியந்தாவுமான உம்மைப் பூஜிக்கின்றனர். (4) கர்மயோகானுஷ்டானஞ் செய்கின்ற சில ப்ராம்ஹணர்கள் ருக் யஜுஸ் ஸாம என்ற மூன்று வேதங்களை ப்ரமாணங்களாகக்கொண்டு பற்பல ரூபங்கள் வாய்ந்த தேவர்களின் பெயருடன் விரிவான யாகங்களினால் உம்மையே பூஜிக்கின்றனர். (5) க்ஞான மார்க்கத்திலீடுபட்ட சிலர் எல்லாக் கர்மங்களையும் விடுத்து ஸன்யாஸத்தையடைந்தவர்களாய்க் கொண்டு க்ஞான யக்ஞத்தினால் (ஸமாதியினால்) சைதன்ய சரீரியான உம்மைத் தியானிக்கின்றனர். (6) மற்றும் சிலர் சைவ வைஷ்ணவ தீக்ஷைபெற்றவர்களாய்க் கொண்டும், உம்மாலுபதேசிக்கப்பட்ட பாஞ்சராத்ரம் பாசுபதம் முதலிய விதியினால் உம்மயமாகத் தங்களைச் சிந்திக்கின்றவர்களாய்க் கொண்டும் வாஸுதேவன், ஸங்கர்ஷணன், ப்ரத்யும்னன், அநிருத்தன் என்ற பேதத்தால் வெகு மூர்த்தியுள்ளவரும், நாராயண ரூபத்தால் ஒரே மூர்த்தியுள்ளவருமாக உம்மையே பூஜிக்கின்றனர். (7) ஹே பகவன்! மற்றும் சிலர் சிவனாலுபதேசிக்கப்பட்ட வழியைப் பின்பற்றி பற்பல பேதமமைந்த சைவபாசுபதாதி மார்க்கத்தினால் சிவஸ்வரூபியான உம்மையே உபாஸிக்கின்றனர். (8) ஸர்வதேவதாஸ்வரூபியான ஹே க்ருஷ்ண! ஹே ப்ரபோ! எவர்கள் அன்னிய

---

* வெருமறியாவிடில் ஜீவர்களுக்கு ஸம்ஸாரநிவிருத்தி வருவதெப்படி எனின்? நேரில் அறியமுடியாவிடினும் யாதேனும் ஒருவழியைப் பின்பற்றி பக்திசெய்கின்றவர்க்கு நீர் அறியக்கூடியவராகிறீர் என ஸாங்கிய யோகங்களை ஒன்றுபடுத்தி இந்த சுலோகத்தாலுபதேசிக்கப்படுகிறது.

त्वां सर्वदेवमयेश्वरम्। येऽप्यन्यदेवताभक्ता यद्यप्यन्यधियः प्रभो ॥ ९ ॥ यथाऽद्रिप्रभवा नद्यः पर्जन्यापूरिताः प्रभो। विशन्ति सर्वतः सिन्धुं तद्व त्वां गतयोऽन्ततः॥ १० ॥ सत्त्वं रजस्तम इति भवतः प्रकृतेर्गुणाः। तेषु हि प्राकृताः प्रोता आब्रह्मस्थावरादयः॥ ११ ॥ तुभ्यं नमस्तेऽस्त्वविषक्तदृष्टये सर्वात्मने सर्वधियां च साक्षिणे। गुणप्रवाहोऽयमविद्यया कृतः प्रवर्तते देवनृतिर्यगात्मसु ॥ १२ ॥ अग्निर्मुखं तेऽवनिरङ्घ्रिरीक्षणं सूर्यो नभो

---

தேவதா பக்தர்களோ அவர்கள் யாவருமே வேறிடத்திற்சென்ற புத்தியுள்ளவர்களாக இருப்பினுங்கூட ஸர்வேஸ்வரரான உம்மையே பூஜிக்கின்றவர்களாகவாகின்றனர்.* (9) ஹே ப்ரபோ! மலையினருகினின்றும் நாலா பக்கங்களிலும் பெருகி ஓடுகின்ற நதிகள் மேகத்தினுல் நிரப்பப்பட்டனவாய்க்கொண்டு பற்பல வழிகளினுல் முடிவில் ஸமுத்திரத்தையே அடைகின்றன என்பதுபோல (ஒழுங்காயும் கோணலாயுமிருக்கின்ற) பஜன மார்க்கங்கள் யாவும் முடிவில் உம்மையே அடைகின்றன. (10) ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற இம் மூன்றும் உமது சக்தியான ப்ரகிருதியின் குணங்களாகும். ஆகவே ப்ரகிருதியின் காரியத்தை உபாதியாகவுடையவர்களான ஸ்தாவரந் தொடங்கி ப்ரம்ஹதேவனீருகவுள்ள ஜீவர்கள் யாவரும் அந்தக் குணங்களின் ஸம்பந்தம் பெற்றவர்களேயாவர்.(*) (11) அழியாத க்ஞானத்தையுடையவரும், எல்லாவற்றுக்கும் ஆத்மாவாகவானவரும், ஸகல புத்தி விருத்திகளுக்கும் ஸாக்ஷியுமான அந்த உமக்கு நமஸ்காரமிருக்கட்டும். உமது அவித்யையினுற் செய்யப்பட்ட இந்தக்குண ப்ரவாஹ (ஸம்ஸார) மானது தேவர் மனிதர் பசுவாதிய சரீரங்களில் ஆத்மாபிமானமுள்ளவர்களிடத்திற்ருனேற்படுகிறது.

அக்னியானது உமது முகமாகவாகிறது. பூமியானது பாதமாகவும், ஸூரியன் கண்ணுகவும், ஆகாசம் உந்தியாகவும், திக்கு

---

* அவர்களுடைய புத்தியில் மட்டும் பேதமேயொழிய அவர்களால் சிந்திக்கப்படும் பொருளில் யாதும் பேதமில்லை என்பது பெறப்பட்டது.

(*) அந்த ஸத்வாதி குணங்கள் ப்ரகிருதியிலும் அந்த ப்ரகிருதி உமது ஸ்வரூபத்திலும் ஒடுங்குகின்றது. ஆகவே முறையே உபாதி லயத்தினுல் யாவரும் உம்மையே ப்ரவேசிக்கின்றனர் என்று கருத்து.

नाभिरथो दिशः श्रुतिः । द्यौः कं सुरेन्द्रास्तव बाहवोऽर्णवाः कुक्षिर्मरुत्प्राण बलं प्रकल्पितम् ॥ १३ ॥ रोमाणि वृक्षौषधयः शिरोरुहा मेघाः परस्यास्थिनखानि तेऽद्रयः । निमेषणं रात्र्यहनी प्रजापतिर्मेढ्रस्तु वृष्टिस्तव वीर्यमिष्यते ॥ १४ ॥ त्वय्यव्ययात्मन्पुरुषे प्रकल्पिता लोकाः सपाला बहुजीव संकुलाः । यथा जले संजिहते जलौकसोऽप्युदुम्बरे वा मशका मनोमये ॥ १५ ॥ यानि यानीह रूपाणि क्रीडनार्थं बिभर्षि हि । तैरामृष्टशुचो लोका मुदा गायन्ति ते यशः ॥ १६ ॥

नमः कारणमत्स्याय प्रलयाब्धिचराय च । हयशीर्ष्णे नमस्तुभ्यं मधुकैटभमृत्यवे ॥ १७ ॥ अकूपाराय बृहते नमो मन्दरधारिणे । क्षित्यु-

---

கள் ச்ரோத்ரமாகவும், த்யுலோகமானது தலையாகவும், தேவச்ரேஷ்டர்கள் உமது கைகளாகவும், ஸமுத்திரங்கள் வயிறாகவும், வாயு ப்ராணனாகவும் பலமாகவும் கல்பிக்கப்பட்டிருக்கிறது. (13) மரங்களும் கொடிகளும் உரோமங்களாகவும், மேகங்கள் தலை மயிர்களாகவும், மலைகள் பரனான உம்முடைய எலும்புகளாகவும் நகங்களாகவும், ராத்ரியும் பகலும் இமைக்கொட்டலாகவும், ப்ரம்ஹதேவன் ஆண் குறியாகவும், மழை உமது வீர்யமாகவும் விரும்பப்படுகிறது. (14) அழிவற்ற ஸ்வரூபத்தையுடைய ஹே கிருஷ்ணா! மனோ விருத்தியினால் ப்ரகாசப்படுத்தப்படுகின்றவரும் புருஷசப்த வாச்யருமான உம்மிடத்தில் வெகு ஜீவர்களடர்ந்தனவும், பாலகர்களுடன் கூடினவுமான லோகங்கள் கல்பிக்கப்பட்டனவாய் ஜலத்தில் ஸூக்ஷ்மமான புழுக்கள் போலும், அத்திக்காயில் வெகு நுட்பங்களான புழுக்கள் போலும் ஸஞ்சரிக்கின்றன. (15) ஆகவே விளையாட்டுக்குவேண்டி எந்த எந்த ரூபங்களைத் தரிக்கின்றீரோ அந்த ரூபங்களால் உலகங்கள் போக்கப்பட்ட சோகங்களையுடையனவாய்க் கொண்டு ஸந்தோஷத்துடன் உமது யசஸ்ஸைப்பாடுகின்றன. (16) ப்ரளய ஸமுத்திரத்தில் ஸஞ்சரிக்கின்ற காரணமத்ஸ்யரான உமக்கு நமஸ்காரம். மது கைடபன் இருவருக்கும் ம்ருத்யுவும், ஹயக்ரீவ ரூபியுமான உமக்கு நமஸ்காரம். (17) மந்தரமலையைத் தாங்கின பெரிய கூர்ம (ஆமை) ரூபியான உமக்கு நமஸ்காரம். பூமியைத் தூக்குவதை விளையாட்டாகக்கொண்ட வராஹமூர்த்தியான உமக்கு




द्धारविहाराय नमः सूकरमूर्तये ॥ १८ ॥ नमस्तेऽद्भुतसिंहाय साधुलोक-भयापह । वामनाय नमस्तुभ्यं क्रान्तत्रिभुवनाय च ॥ १९ ॥ नमो भृगूणां पतये दृप्तक्षत्रवनच्छिदे । नमस्ते रघुवर्याय रावणान्तकराय च ॥ २० ॥ नमस्ते वासुदेवाय नमः सङ्कर्षणाय च । प्रद्युम्नायानिरुद्धाय सात्वतां पतये नमः ॥ २१ ॥ नमो बुद्धाय शुद्धाय दैत्यदानवमोहिने । म्लेच्छप्रायक्षत्रहन्त्रे नमस्ते कल्किरूपिणे ॥ २२ ॥ भगवञ्जीवलोकोऽयं मोहितस्तव मायया । अहं ममेत्यसद्ग्राहो भ्राम्यते कर्मवर्त्मसु ॥ २३ ॥ अहं चात्मात्मजागारदा-रार्थस्वजनादिषु । भ्रमामि स्वप्नकल्पेषु मूढः सत्यधिया विभो ॥ २४ ॥ अनित्यानात्मदुःखेषु विपर्ययमतिर्ह्यहम् । द्वन्द्वारामस्तमोविष्टो न जाने

---

நமஸ்காரம். (18) ஸாது லோகங்களுக்குப் பயத்தைப் போக்கு கின்றவரே! ஆஸ்சரியம் வாய்ந்த ஸிம்ஹரூபியான உமக்கு நமஸ் காரம். மூவ்வுலகங்களையும் காலினலளந்த வாமனரூபியான உமக்கு நமஸ்காரம். (19) கொழுத்த க்ஷத்திரிய வனத்தைவெட்டின ப்ரு குக்களின் பதி (பரசுராம) யான உமக்கு நமஸ்காரம். ராவண னுக்கு நாசத்தைச்செய்த ரகு ஸ்ரேஷ்டனுன உமக்கு நமஸ்காரம். (20) வாஸுதேவனுன உமக்கு நமஸ்காரம். ஸங்கர்ஷணரான உமக்கு நமஸ்காரம். ப்ரத்யும்னரும், அநிருத்தரும், ஸாதுக்களுக் குப்பதியுமான உமக்கு நமஸ்காரம். (21) தைத்யர், தானவர் இவர் களை மயங்கச்செய்யவேண்டி சுத்தரான புத்தராக அவதரித்த உமக்கு நமஸ்காரம். ம்லேச்ச (துருஷ்க) ப்ராயர்களான க்ஷத்ரியர்களைக் கொல்லுகின்ற கற்கிரூபியான உமக்கு நமஸ்காரம். (22) ஹே பக வன்! இந்த ஜீவ ஸமூஹமானது உமது மாயையினுல் மோஹத்தை யடைந்ததாய்க்கொண்டு நான் என்றும் என்னுடையது என்றுமா கப் பொய்யானவெண்ணங்கொண்டதாய் கர்மவழிகளில் சுழண்டு கொண்டிருக்கிறது. (23) ஹே விபோ! மூடனுன நானும் ஸ்வப் பினத்துக்கொப்பான தேஹம், புத்திரன், வீடு, மனையாள், பணம், சொந்த ஜனம் இவற்றில் ஸத்ய புத்தியுடன் கூட மயங்கிக்கிடக்கின் றேன். (24) நானே அநித்யத்தில் நித்யபுத்தியுள்ளவனுயும், அநாத்ம பதார்த்தத்தில் ஆத்மபுத்தியுள்ளவனுயும், துக்கத்தில் சுகபுத்தியுள் ளவனுயும் கொண்டு இரட்டையான சிதம், உஷ்ணம், சுகம், துக்கம்,

त्वात्मन: प्रियम् ॥ २५ ॥ यथाबुधो जलं हित्वा प्रतिच्छन्नं तदुद्भवैः।
अभ्येति मृगतृष्णां वै तद्वत्त्वाहं पराङ्मुखः॥ २६ ॥ नोत्सहेऽहं कृपणधीः
कामकर्महतं मनः। रोद्धुं प्रमाथिभिश्चाक्षैर्ह्रियमाणमितस्ततः॥ २७ ॥
सोऽहं तवाङ्घ्र्युपगतोऽस्म्यसतां दुरापं तच्चाप्यहं भवदनुग्रह ईश मन्ये।
पुंसो भवेद्यर्हि संसरणापवर्गस्त्वय्यब्जनाभ सदुपासनया मतिः स्यात्
॥ २८ ॥ नमो विज्ञानमात्राय सर्वप्रत्ययहेतवे। पुरुषेशप्रधानाय ब्रह्मणेऽनन्त
शक्तये ॥ २९. ॥ नमस्ते वासुदेवाय सर्वभूतक्षयाय च। हृषीकेश नमस्तु-
भ्यं प्रपन्नं पाहि मां प्रभो ॥ ३० ॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्धेऽक्रूरस्तुतिर्नाम
चत्वारिंशोऽध्यायः ॥ ४० ॥

---

பசி, தாஹம் முதலியவற்றிலேயே பற்றுள்ளவனும், தமோகுணம் நிறைந்தவனும் கொண்டு ஆத்மப்ரியனான உம்மை உள்ளபடி அறிகின்றேனில்லை. (25) மூடனாயுள்ளவன் ஜலக்கரையிலுள்ள மரங்களால் மறைக்கப்பட்ட ஜலத்தை விடுத்துக் கானல் நீரை நாடி ஓடுவதுபோல நான் உம்மைவிடுத்து வெளிப்பொருளில் பற்றுள்ளவனாக விருக்கிறேன். (26) விஷயவாஸனை நிறைந்த புத்தியையுடைய நான் காமத்தாலும், கர்மத்தாலும் கெடுக்கப்பட்டதும் அழிக்குமியல்புடைய இந்திரியங்களால் இங்குமங்குமிழுக்கப்படுகின்றதுமான மனஸ்ஸை அடக்குவதற்குச் சக்திபெறாதவனாக இருக்கின்றேன். (27) அந்த நான் அஸாதுக்களுக்கடைதற்கரிதான உமது சரணத்தைச் சரணமாக அடைந்தேன். ஹே ஈஶ! அதுவும் உமது அனுக்ரஹமென்றே எண்ணுகிறேன். ஹே அப்ஜநாப! புருஷனுக்கு எதுபோழ்து ஸம்ஸாரத்தின் முடிவு ஏற்படுமோ அப்பொழுது ஸாதுக்களின் உபாஸனத்தினால் உம்மிடத்தில் புத்தியானது உண்டாகும். (28) விக்ஞானத்தையே மூர்த்தியாக உடையவரும், எல்லாக்ஞானத்துக்கும் காரணமானவரும், ஜீவனுக்கு சுகதுக்கங்களைத் தருகின்ற காலம் கர்மம் ஸ்வபாவம் முதலியவற்றுக்கு நியந்தாவும், எங்கும் நீக்கமற நிறைந்தவரும், அனந்தமான சக்திகளுள்ளவருமான

## अथ एकचत्वारिंशोऽध्यायः ॥

श्रीशुक उवाच—स्तुवतस्तस्य भगवान्दर्शयित्वा जले वपुः। भूयः समाहरत्कृष्णो नटो नाट्यमिवात्मनः॥ १ ॥ सोऽपि चान्तर्हितं वीक्ष्य

---

உமக்கு நமஸ்காரம், (29) (1)எல்லா ப்ராணிகளுக்கும் ஆஸ்ரய பூதரும், (2)வாஸுதேவருமான உமக்கு நமஸ்காரம். (3)ஹே ஹ்ருஷீகேச! உமக்கு நமஸ்காரம். ஹே ப்ரபோ! சரணாகதனான என்னைக் காப்பீராக. (30) (எ–று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண தசமஸ்கந்த
பூர்வார்த்தத்தில் அக்ரூரஸ்துதி என்ற நாற்பதாவது
அத்தியாயம் முற்றிற்று.

—••×••—

## நாற்பத்தொன்றுவது அத்தியாயம்.

(அ–கை) एकचत्वारिंशकेऽहन्व्रजकं प्रविशन्पुरीम् ।
ततो वरानदात्तुष्टः सुदाम्नो वायकस्य च ॥ १ ॥
सशङ्कमक्रूरमनः प्रमोद्य स्वधामसन्दर्शनसत्कृपातः।
स्वराजधानीं मथुरामपश्यदलंकृतानन्तमहोत्सवाढ्याम् ॥

(க–ரை) பட்டினத்தில் பிரவேசித்தவராய் வண்ணானைக்கொன்றுரென்றும், பிறகு ஸந்தோஷத்தையடைந்தவராய் ஸுதாமன் என்ற துணி நெய்பவனுக்கு வேண்டிய வரன்களைக்கொடுத்தார் என்றும், தனது லோகத்தைக்காண்பித்துக் கருணைபுரிதல் மூலம் சங்கை கொண்ட அக்ரூரரது மனத்தைச் சந்தோஷப்படுத்தி, அலங்கரிக்கப் பட்டதும், அனேகம் மஹோத்ஸவம் நிறைந்ததும், தனது ராஜதானியுமான மதுரா பட்டினத்தைக் கண்ணுற்றுர் என்றும் இந்த நாற்பத்தொன்றுவது அத்தியாயத்திலுபதேசிக்கப்படுகிறது (எ–று)

---

(1) இதனுல் அஹங்காராதிஷ்டாதாவான ஸங்கர்ஷண ஸ்வரூபமும், (2) இதனுல் சித்தாதிஷ்டாதாவான வாஸுதேவ ஸ்வரூபமும், (3) இதனுல் புத்தி, மனது இவற்றுக்கு அதிஷ்டாதாக்களான ப்ரத்யும்னன், அனிருத்தன் இவர்களின் ஸ்வரூபமும் குறிக்கப்படுவதாய் ஸ்ரீதரீயத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

जलादुन्मज्य सत्वरः। कृत्वा चावश्यकं सर्वं विस्मितो रथमागमत् ॥ २ ॥ तमपृच्छद्धृषीकेशः किं ते दृष्टमिवाद्भुतम्। भूमौ वियति वा तोये तथा त्वां लक्षयामहे ॥ ३ ॥ अक्रूर उवाच—अद्भुतानीह यावन्ति भूमौ वियति वा जले। त्वयि विश्वात्मके तानि किं मेऽदृष्टं विपश्यतः॥ ४ ॥ यत्राद्भुतानि सर्वाणि भूमौ वियति वा जले। तं त्वानुपश्यतो ब्रह्मन्किं मे दृष्टमिहाद्भुतम् ॥ ५ ॥ इत्युक्त्वा चोदयामास स्यन्दनं गान्दिनीसुतः। मथुरामनयद्रामं कृष्णं चैव दिनात्यये ॥ ६ ॥ मार्गे ग्रामजना राजंस्तत्रतत्रोपसंगताः। वसुदेवसुतौ वीक्ष्य प्रीता दृष्टिं न चाऽऽददुः॥७॥ तावद्व्रजौकसस्तत्र

---

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—அந்த அக்ரூரர் ஸ்துதித்துக்கொண்டிருக்கும்பொழுது பகவானான ஸ்ரீகிருஷ்ணன் நடன் தனது நாட்டியத்தைப்போல ஜலத்தில் சரீரத்தைக் காண்பித்துத் திரும்பவும் மறைத்துக்கொண்டார். (1) அந்த அக்ரூரரும் சரீரம் மறைந்ததைக் கண்டு வேகமாக ஜலத்தினின்றும் வெளியேறி அவஸ்யம் செய்ய வேண்டியவை யாவையுஞ்செய்துவிட்டு ஆஸ்சரியத்தையடைந்தவராய் தேரில் ஏறிக்கொண்டார். (2) 'பூமியிலோ ஆகாசத்திலோ ஜலத்திலோ உம்மால் பார்க்கப்பட்ட ஆஸ்சரியமென்னை? அவ்விதமே உம்மை நாமெண்ணுகின்றோம்' என அந்த அக்ரூரரை ஹ்ருஷீகேசனான பகவான் கேட்டார். (3) அக்ரூரர் சொல்லலுற்றார்—இங்கு பூமியிலோ ஆகாசத்திலோ ஜலத்திலோ அத்புதங்கள் எவ்வளவுண்டோ அவையாவும் விஸ்வாத்மகனான உம்மிடத்திலேயே இருக்கின்றன. அந்த உம்மைப்பார்க்கின்ற என்னால் என்ன அத்புதந்தான் பார்க்கப்பட்டதாகவாகமாட்டாது. (4) ஹே ப்ரம்ஹன்! எந்த உம்மிடத்தில் எல்லா அத்புதங்களுமிருக்கின்றனவோ அந்த உம்மைப்பார்க்கின்ற எனக்கு பூமியிலோ ஆகாசத்திலோ ஜலத்திலோ உள்ள எந்த ஆஸ்சரியந்தான் பார்க்கப்படவில்லை. (5) என்று சொல்லிவிட்டு காந்தினியின் புத்திரரான அக்ரூரர் தேரையோட்டத் தொடங்கி மாலைப்பொழுதில் பலராமனையும் கிருஷ்ணனையும் மதுரையில் கொண்டுவந்து சேர்த்தார். (6) ஹே ராஜன்! வழியிலாங்காங்கு வந்து கூடின க்ராம ஜனங்கள் வஸுதேவரின் புத்திரர்களைக்கண்டு ப்ரீதியையடைந்தவர்களாய் அவர்களிடமிருந்து கண்ணை

नन्दगोपादयोऽग्रतः। पुरोपवनमासाद्य प्रतीक्षन्तोऽवतस्थिरे ॥ ८ ॥ तान्स-मेत्याह भगवानक्रूरं जगदीश्वरः। गृहीत्वा पाणिना पाणिं प्रश्रितं प्रहसन्निव ॥९॥ भवान्प्रविशतामग्रे सहयानः पुरीं गृहम्। वयं त्विहावमुच्याथ ततो द्रक्ष्यामहे पुरीम् ॥१०॥ अक्रूर उवाच—नाहं भवद्भ्यां रहितः प्रवेक्ष्ये मथुरां प्रभो। त्यक्तुं नार्हसि मां नाथ भक्तं ते भक्तवत्सल ॥ ११ ॥ आगच्छ याम गेहान्नः सनाथान्कुर्वधोक्षज। सहाग्रजः सगोपालैः सुहृद्भिश्च सुहृत्तम ॥१२॥ पुनीहि पादरजसा गृहान्नो गृहमेधिनाम्। यच्छौचेनानुतृप्यन्ति पितरः साग्नयः सुराः॥१३॥ अवनिज्याङ्घ्रियुगलमासीच्छ्लोक्यो बलिर्महान्। ऐश्वर्य-मतुलं लेभे गतिं चैकान्तिनां तु या ॥१४॥ आपस्तेऽङ्घ्र्यवनेजन्यस्त्रींल्लोकान्

---

யெடுத்தனரில்லை. (7) அவ்வளவுக்குள் கோகுலவாசிகளான நந்த கோபர் முதலியோர் அப்பொழுது முன்னரே பட்டினத்துப் பூந் தோட்டத்தையடைந்து அவர்களை எதிர்பார்த்து நின்றனர். (8) ஜகதீஸ்வரனான பகவான் அவர்களையடைந்து வணங்கின அக்ரூ ரைத் தனதுகையினால் கையில் பிடித்துக்கொண்டு சிரித்துக்கொண்டு நீர் தேருடன்கூட முதலில் பட்டினத்திலுள்ள வீட்டையடைவீராக. நாமோ இங்கு தங்கிவிட்டுப் பிறகு அங்கிருந்து கிளம்பிப் பட்டினத் தைப் பார்க்கப்போகின்றோம் என்றார். (9-10)

அக்ரூரர் சொல்லலுற்றார்—ஹே ப்ரபோ! நாத! ஹே பக்த வத்ஸல! நான் தாங்களில்லாமல் மதுரையில் பிரவேசிக்கமாட்டேன். உமது பக்தனான என்னைத் தள்ளிவிடத் தகுதியுடையீரல்லீர். (11) ஹே அதோக்ஷஜ! ஹே ஸுஹ்ருத்தம! தமையனுடன் கூடவும், மிக்க ஸ்னேஹிதர்களான கோபாலர்களுடன் கூடவும் எங்கள் வீட் டையடைந்து எங்களை நாதனுள்ளவர்களாகச் செய்வீராக. (12) எந்தப் பாததூளியை அலம்பின தீர்த்தத்தினால் க்ருஹஸ்தாஸ்ரமி களின் பிதிருக்களும், அக்னிகளுடன் கூடின தேவர்களும் திருப்தி யையடைகின்றனரோ அந்தப் பாததூளியினால் எங்களுடைய வீட் டைப் பரிசுத்தமாக்குவீராக. (13) மஹானான பலியானவர் இரு சரணங்களையும் அலம்பிப் புண்யமான கீர்த்திக்கு அர்ஹனாகவான துடன் ஒப்பற்ற ஐஸ்வரியத்தையும், ஏகாந்த பக்தர்களுக்குரிய கதி யையும் அடைந்தார். (14) எந்தத் தீர்த்தங்களை ஸ்ரீமஹாதேவன்

शुचयोऽपुनन्। शिरसाधत्त याः शर्वः स्वर्याताः सगरात्मजाः॥ १५॥ देवदेव जगन्नाथ पुण्यश्रवणकीर्तन। यदूत्तमोत्तमश्लोक नारायण नमोऽस्तु ते॥

श्रीभगवानुवाच—आयास्ये भवतो गेहमहमार्यसमन्वितः। यदुचक्रद्रुहं हत्वा वितरिष्ये सुहृत्प्रियम्॥ १७॥ श्रीशुक उवाच—एवमुक्तो भगवता सोऽक्रूरो विमना इव। पुरीं प्रविष्टः कंसाय कर्माऽऽवेद्य गृहं ययौ॥१८॥ अथापराह्णे भगवान्कृष्णः सङ्कर्षणान्वितः। मथुरां प्राविशद्गोपैर्दिदृक्षुः परिवारितः॥ १९॥ ददर्श तां स्फाटिकतुङ्गगोपुरद्वारां बृहद्धेमकपाटतोरणाम्। ताम्रारकोष्ठां परिखादुरासदामुद्यानरम्योपवनोपशोभिताम्॥ २०॥

---

தலையினால் தரித்தாரோ, ஸகரபுத்திரர்களும் எவற்றால் ஸ்வர்க்கத்தையடைந்தனரோ மிக்கச் சுத்தங்களான உமது சரணங்களையலம்பின அத்தீர்த்தங்கள் மூவுலகங்களையும் பரிசுத்தங்களாக்கின. (15) ஹே தேவதேவ! ஹே ஜகன்னாத! ஹே புண்யச்ரவணகீர்த்தன! ஹே யதூத்தம! ஹே உத்தமச்லோக! ஹே நாராயண! உமக்கு நமஸ்காரமிருக்கட்டும். (16) ஸ்ரீபகவான் சொல்லலுற்றார்—யாதவ ஸமூஹத்துக்கு த்ரோஹஞ்செய்கின்ற கம்ஸனைக் கொன்றுவிட்டு அண்ணாவுடன் கூடினவனாய் உம்முடைய வீட்டுக்கு வருகிறேன் ஸுஹ்ருத்துக்களுக்குப் பிரியத்தையும் தரப்போகிறேன். (17) ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—இவ்விதம் பகவானாற்சொல்லப்பட்ட அக்ரூரர் மனமொடிந்தவர்போலவாகி பட்டினத்தில் நுழைந்து கம்ஸனிடம் நடந்தகாரியத்தைத் தெரிவித்துவிட்டுத் தனது வீட்டையடைந்தார். (18) பிறகு பகவானான கிருஷ்ணன் பலராமனுடன்கூட கோபாலர்களால் சூழப்பட்டவராய்க்கொண்டு பார்க்கவெண்ணங்கொண்டவராய் மதுரையில் பிரவேசித்தார். (19) ஸ்படிகத்தாலானவும் உன்னதங்களுமான கோபுரங்களையும், வீட்டின் வாயிற்படிகளையுமுடையதும், பெரிதும் தங்கத்தால் கட்டப்பட்டனவுமான கதவு தோரணம் இவற்றையுடையதும், தாம்பிரத்தினாலும் பித்தளையினாலும் கட்டப்பட்ட நெற்களஞ்சியம் குதிரைக்கொட்டகை முதலியவற்றையுடையதும், சுற்றிலுமுள்ள அகழ்களால் சுலுவில் அடைய முடியாததும், வெகுதூரத்திலுள்ள உத்யானங்களினாலும், அருகிலுள்ள அழகிய பூந்தோட்டங்களினாலும் அலங்கரிக்கப்பட்டதும்,

**सौवर्णशृङ्गाटकहर्म्यनिष्कुटैः श्रेणीसभाभिर्भवनैरुपस्कृताम्। वैदूर्यवज्रामलनीलविद्रुमैर्मुक्ताहरिद्भिर्वलभीषु वेदिषु ॥ २१ ॥ जुष्टेषु जालामुखरन्ध्रकुट्टिमेष्वाविष्टपारावतबर्हिनादिताम्। संसिक्तरथ्यापणमार्गचत्वरां प्रकीर्णमाल्याङ्कुरलाजतण्डुलाम् ॥ २२ ॥ आपूर्णकुम्भैर्दधिचन्दनोक्षितैः प्रसूनदीपावलिभिः सपल्लवैः। सवृन्तरम्भाक्रमुकैः सकेतुभिः स्वलंकृतद्वारगृहां सपट्टिकैः॥ २३ ॥ तां संप्रविष्टौ वसुदेवनन्दनौ वृतौ वयस्यैर्नरदेववर्त्मना।**

---

பொன்னிழைத்த நாச்சந்திகளினாலும், மாடி வீடுகளினாலும், வீட்டைச் சுற்றிலுமுள்ள தோட்டங்களினாலும், ஒரேமாதிரியான தொழில்களினால் ஜீவிப்பவர்களின் ஸபைகளினாலும், மற்றுமுள்ள வீடுகளினாலும் அலங்கரிக்கப்பட்டதும், வைடூர்யம், வஜ்ரம், ஸ்படிகம், நீலரத்தினம், பவழம் இவைகளினாலும், முத்து, மரகதப்பச்சை இவைகளினாலும் இழைக்கப்பட்ட *வலபிகளிலும், அந்த வலபிகளுக்குக் கீழிலுள்ள வேலைப்பாடான மரத்தூண்களிலும், ஜன்னல்களிலுள்ள ஓட்டைகளிலும், அங்கு அழகாக அமைக்கப்பட்ட இடங்களிலும் உள்ள மாடப்புறு, மயில் இவற்றால் சப்திக்கப்பட்டதும், ஜலந்தெளிக்கப்பட்ட ராஜவீதிகள், கடைத்தெருவுகள், மற்றுமுள்ள வழிகள், நாற்சந்துகள் இவற்றையுடையதும், இறைக்கப்பட்ட பூமாலை, முளை, பொரி, சோபனாக்ஷதங்கள் இவற்றையுடையதும், வாயிற்படியின் இருபுறங்களிலுமுள்ள திண்ணைகளில் அரிசிகளைப்போட்டு அதன்மேல் ஜலம் நிறைந்த கும்பங்களை வைத்து அக்கும்பங்களைச் சுற்றிலும் புஷ்பங்களினால் அலங்கரித்து கும்பங்களின் கழுத்தில் பட்டுகளைக்கட்டி அவற்றின் வாயில் மாந்தளிர் முதலியவற்றை வைத்து அதையொட்டித் தீபங்களை ஏற்றிவைத்து அவற்றினருகில் வாழைக்கொலைகளைக் கட்டிப் பாக்குக் கொலைகளையும் தொங்கவிட்டு கொடிமரங்கள் அமைத்து அவைகளில் தோரணங்களும் அமைத்து அலங்கரிக்கப்பட்ட வாயிற்படிகளையுடைய வீடுகள் நிறைந்ததுமான மதுராபட்டினத்தைக் கண்டார். (20–23)

ஹே ந்ருப! ராஜவீதியினால் அப்பட்டினத்தில் பிரவேசித்தவர்களும், தோழர்களால் சூழப்பட்டவர்களுமான வஸுதேவ புத்தி

---

* வீட்டுக்கு முன் பக்கங்களில் வேலைப்பாடுள்ள மரங்கள் கொண்டு கட்டப்பட்ட இடம் வலபிகள் எனப்படும். இதைக் கொடுங்கை என்பர்.

द्रष्टुं समीयुस्त्वरिताः पुरस्त्रियो हर्म्याणि चैवारुरुहुर्नृपोत्सुकाः ॥ २४ ॥ काश्चिद्विपर्यग्धृतवस्त्रभूषणा विस्मृत्य चैकं युगलेष्वथापराः। कृतैकपत्रश्रवणैकनूपुरा नाङ्क्त्वा द्वितीयं त्वपराश्च लोचनम् ॥ २५ ॥ अश्नन्त्य एकास्तदपास्य सोत्सवा अभ्यज्यमाना अकृतोपमज्जनाः। स्वपन्त्य उत्थाय निशम्य निःस्वनं प्रपाययन्त्योऽर्भमपोह्य मातरः ॥ २६ ॥ मनांसि तासामरविन्दलोचनः प्रगल्भलीलाहसितावलोकैः। जहार मत्तद्विरदेन्द्रविक्रमो दृशां ददच्छ्रीरमणात्मनोत्सवम् ॥ २७ ॥ दृष्ट्वा मुहुः श्रुतमनुद्रुतचेतसस्तं

ரர்களான ராம கிருஷ்ணர்களைப் பார்ப்பதற்குவேண்டி. ஆவல் கொண்ட பட்டினத்து ஸ்திரீகள் வேகமாக ஓடிவந்தனர். சிலர் மாடியிலுமேறிக் கொண்டனர். (24) சிலர் வஸ்திரம், ஆபரணம் இவற்றை மாற்றித் தரித்துக்கொண்டும், மற்றும் சிலர் இரண்டிடங் களில் தரிக்கவேண்டிய வளை, காதோலை முதலியவற்றுள் ஒன்றை மறந்து ஒன்றைமட்டும் தரிக்கின்றவர்களாகவும், ஒரே ஓலையைக் காதிலணிந்துகொண்டும், ஒரே பாதஸரத்தை காலில் போட்டுக் கொண்டும், இரண்டாவது கண்ணில் மை திட்டாமல் ஒரே கண் ணில் மட்டும் மை திட்டிககொண்டும், சாப்பிடுகின்ற சிலர் அதை எறிந்துவிட்டும், தோழிகளினுல் எண்ணெ தேய்த்துவிடப்படுகின்ற சிலர் அரப்புத்தேய்த்து ஸ்னானஞ்செய்யாதவர்களாகவும், தூங்கும் சிலர் சப்தத்தைக்கேட்டு எழுந்தும், பால் கொடுக்கும் தாய்மார்கள் குழந்தையை விட்டுவிட்டும் ஸந்தோஷத்துடன் கூடினவர்களாய் ஓடிவந்தனர். (25-26) மதங்கொண்ட சிறந்த யானைபோல நடப் பவரும் புண்டரீகாக்ஷனுமான பகவான் அழகிய லீலைகளினுலும், மந்தஹாஸங்களினுலும், பார்வைகளினுலும், லக்ஷ்மீதேவியாரை ரமிக்கச்செய்கின்ற தனது ஸ்ரீமூர்த்தியினுல் அவர்களின் கண்க ளுக்கு ஸந்தோஷத்தைக் கொடுததுக்கொண்டு அவர்களின் மனஸ் ஸுகளைக் கவர்ந்தார். (27) *ஹே அரிந்தம! அடிக்கடி கேள்விப் பட்டிருப்பதிலிருந்து அவரிடஞ்சென்ற மனத்தையுடையவர்களும், தற்சமயம் அவரை நேரில் கண்டு அவரது பார்வை புன்சிரிப்பு

* அரிந்தம !-காமத்தை ஜயித்தவனே ! என்று அழைத்ததிலிருந்து ச்ருங்காரரஸத்தில் மூழ்கிவிடாதே என்பது பெறப்பட்டது.

तन्प्रेक्षणोत्स्मितसुधोक्षणलब्धमानाः। आनन्दमूर्तिमुपगुह्य दृशात्मलब्धं हृष्यत्त्वचो जहुरनन्तमरिंदमाधिम् ॥२८॥ प्रासादशिखरारूढाः प्रीत्युत्फुल्लमुखाम्बुजाः। अभ्यवर्षन्सौमनस्यैः प्रमदा बलकेशवौ ॥ २९ ॥ दध्यक्षतैः सोदपात्रैः स्रग्गन्धैरभ्युपायनैः। तावानर्चुः प्रमुदितास्तत्र तत्र द्विजातयः ॥३०॥ ऊचुः पौरा अहो गोप्यस्तपः किमचरन्महत्। या ह्येतावनुपश्यन्ति नरलोकमहोत्सवौ ॥ ३१ ॥

रजकं कञ्चिदायान्तं रङ्गकारं गदाग्रजः। दृष्ट्वायाचत वासांसि धौतान्यत्युत्तमानि च ॥३२॥ देह्यावयोः समुचितान्यङ्ग वासांसि चार्हतोः।

---

இவையாகிற அமுதத்தினலேற்பட்ட நனைவினல் அடையப்பட்ட மரியாதையையுடையவர்களுமான அந்த ஸ்திரீகள் திறக்கப்பட்ட கண் வாயிலாக மனத்தில் ப்ராப்தரான ஆனந்த மூர்த்தியான ஸ்ரீ கிருஷ்ணனைத் தழுவிக்கொண்டு ரோமாஞ்சத்தையடைந்தவர்களாய் அவரையடையாததாலேற்பட்ட அதிகமான மனோ துக்கத்தைப் போக்கிக்கொண்டனர். (28) அந்த ஸ்திரீகள் மாடியின் நுனியிலேறிக்கொண்டும், ப்ரீதியினல் மலர்ந்த முகாரவிந்தத்தையுடையவர்களாய்க் கொண்டும், பலராமனையும், கிருஷ்ணனையும் புஷ்ப ஸமூஹங்களினல் மூடினர். (29) ஆங்காங்கு ஸந்தோஷத்தையடைந்தவர்களான ப்ராம்ஹணர்கள் தயிரினலும், அக்ஷதங்களினலும், ஜல பாத்திரங்களுடன் கூடின பூமாலைகளினலும், சந்தனங்களினலும், உபவீதம் (பூநூல்) பழம் இவற்றினலும், அந்த ராம கிருஷ்ணர்களைப் பூஜித்தனர். (30) மனிதவுலகுக்கு அதிகம் ஸந்தோஷத்தைத் தருகின்ற இவர்களை எவர்கள் அடிக்கடி பார்க்கின்றனரோ அந்தக் கோபிகைகள் அதிகமாக என்ன தவஞ்செய்தனரோ ஆச்சரியமிது எனப்பட்டினத்து ஜனங்கள் சொல்லினர். (31)

வஸ்திரங்களுக்குச் சாயந்தோய்க்கின்றவனும், எதிரில் வருகின்றவனுமான வண்ணனொருவனைக்கண்டு ஸ்ரீ கிருஷ்ணன் வெளுத்தவைகளும், மிக்க உத்தமங்களுமான வஸ்திரங்களை யாசித்தார் (32) ஹே அங்க! தரிக்கத் தகுதியுடையவர்களான எங்களுக்கு மிக்கப் பொருத்தமான வஸ்திரங்களைக் கொடுப்பாயாக. கொடுக்கும் உனக்கு மேலான ச்ரேயஸ்ஸானது உண்டாகப்போகிறது. இதில் ஸந்

भविष्यति परं श्रेयो दातुस्ते नात्र संशयः॥ ३३ ॥ स याचितो भगवता परिपूर्णेन सर्वतः। साक्षेपं रुषितः प्राह भृत्यो राज्ञः सुदुर्मदः॥ ३४ ॥ ईदृशान्येव वासांसि नित्यं गिरिवनेचराः। परिधत्त किमुद्वृत्ता राजद्रव्याण्यभीप्सथ ॥ ३५ ॥ यताशु बालिशा मैवं प्रार्थ्यं यदि जिजीविषा। बध्नन्ति घ्नन्ति लुम्पन्ति दृप्तं राजकुलानि वै ॥ ३६ ॥ एवं विकत्थमानस्य कुपितो देवकीसुतः। रजकस्य कराग्रेण शिरः कायादपातयत् ॥ ३७ ॥ तस्यानुजीविनः सर्वे वासःकोशान्विसृज्य वै। दुद्रुवुः सर्वतो मार्गं वासांसि

---

தேவையில்லை. (33) எல்லாவற்றிலும் நிறைவுபெற்றவரான பகவானால் யாசிக்கப்பட்டவனும், மிக்கக்கெட்ட மதங்கொண்டவனும், கம்ஸனுடைய வேலைக்காரனுமான அந்த வண்ணான் கோபத்தையடைந்தவனாய் மறுத்துக்கூறத் தொடங்கினான். (34) ஹே கொழுப்பேறினவர்களே! எப்பொழுதும் மலையிலும், காட்டிலும் ஸஞ்சரிக்கின்றவர்களான நீங்கள் இதே மாதிரியான வஸ்திரங்களையே தான் கட்டுகின்றீர்கள் போலும். ராஜனுக்குரிய பொருள்களை யாசிக்கின்றீர்களன்றோ. (35) ஹே மூடர்காள்! சீக்கிரம் ஓடிவிடுங்கள். உயிருடனிருக்க விருப்பமாயின் இவ்விதம் கேட்காதீர். ராஜனைச் சேர்ந்தவர்கள் கொழுப்புள்ள மனிதனைக் கட்டுவர். அல்லது அடிப்பர். அல்லது அவனது பொருள்களைப் பிடுங்கிக்கொண்டு விடுவர். (36) வண்ணான் இவ்விதம் தற்புகழ்ச்சி செய்து கொள்ளுங்கால் தேவகி புத்திரனான கிருஷ்ணன் கோபத்தையடைந்தவராய் கையின் நுனியினால் அவனது தலையை உடலினின்றும் கீழில் தள்ளிவிட்டார். (37) அவனையண்டிப் பிழைக்கும் மற்றவர் யாவரும் துணி மூட்டைகளைப் போட்டுவிட்டு நாலாவழியிலும் ஓட்டம் பிடித்தனர். அச்யுதனான கிருஷ்ணன் (வேண்டிய) *வஸ்திரங்களை

---

* ஒருவன் கட்டின வஸ்திரத்தை மற்றவன் கட்டலாகாது என்ற சாஸ்திரமிருந்தபோதிலும் ஸ்ரீகோபாலன் கம்ஸனது வஸ்திரங்களை எடுத்துக்கொண்டதின் கருத்து பின்வருமாறு—தனக்கென வஸ்திரமில்லாதவன் வேறு வழியில்லாமல் ஸமயம் வரும்பொழுது பிறர் வஸ்திரத்தையேனுமணிந்துகொண்டு பாடுபடுவதை உலகில் காண்கிறோம். வேதாந்தங்கள் பொதுவாய் சரீரங்களை வஸ்திரங்களாகச் சொல்லுவது வழக்கம்.

**जगृहेऽच्युतः॥ ३८ ॥ वसित्वात्मप्रिये वस्त्रे कृष्णः संकर्षणस्तथा। शेषाण्यादत्त गोपेभ्यो विसृज्य भुवि कानिचित्॥ ३९ ॥ ततस्तु वायकः प्रीतस्तयोर्वेषमकल्पयत्। विचित्रवर्णैश्चैलेयैराकल्पैरनुरूपतः॥ ४० ॥ नाना लक्षणवेषाभ्यां कृष्णरामौ विरेजतुः। स्वलंकृतौ बालगजौ पर्वणीव सितेतरौ॥ ४१ ॥ तस्य प्रसन्नो भगवान्प्रादात्सारूप्यमात्मनः। श्रियं च परमां लोके बलैश्वर्यस्मृतीन्द्रियम्॥ ४२ ॥ ततः सुदाम्नो भवनं मालाकारस्य जग्मतुः। तौ दृष्ट्वा स समुत्थाय ननाम शिरसा भुवि॥४३॥ तयोरासनमानीय पाद्यं चार्घ्यार्हणादिभिः। पूजां सानुगयोश्चक्रे स्रक्ताम्बूलानुलेपनैः॥ ४४ ॥ प्राह नः सार्थकं जन्म पावितं च कुलं प्रभो। पितृदेवर्षयो मह्यं**

---

எடுத்துக்கொண்டார். (38) கிருஷ்ணனும், அவ்விதமே பலராமனும் தமக்கு ப்ரியங்களான வஸ்திரங்களைத் தரித்துக்கொண்டும், சிலவற்றைப் பூமியிலெறிந்தும், மீதமுள்ளவற்றைக் கோபாலர்களுக்கும் கொடுத்தனர். (39) பிறகு நூல் நெய்யும் சேணியனொருவன் ப்ரீதியுள்ளவனாய் பலநிறமமைந்தனவும், வஸ்திர மயங்களுமான பூஷணங்களினால் அவ்விருவருக்கும் பொருத்தமானபடி அலங்காரத்தைச் செய்தான். (40) பல லக்ஷணமுள்ள வேஷங்களினால் அலங்கரிக்கப்பட்ட கிருஷ்ண ராமர்கள் திருவிழாக்காலத்தில் நன்கு அலங்கரிக்கப்பட்ட கருப்பும் வெளுப்புமான யானைகள் போல விளங்கினர். (41) ப்ரஸன்னனான பகவான் அந்தச் சேணியனுக்கு தனது ஸாரூப்யத்தையும், உலகில் மேலான ஸம்பத்தையும், பலம், ஐஶ்வரியம், ஸ்மிருதி, இந்திரியங்களின் ஸாமர்த்யம் இவற்றையும் கொடுத்தார். (42) அங்கிருந்து மாலை கட்டுகின்றவனான ஸுதாமா என்பவனுடைய வீட்டையடைந்தனர். அவன் அவர்களைக் கண்டு வேகமாக எழுந்து பூமியில் விழுந்து தலையால் வணங்கினான். (43) தோழர்களுடன் கூடின அவ்விருவருக்கும் ஆஸனத்தையும், பாத்யத்தையும் கொடுத்தப்பிறகு பூஜாத்திரவ்யங்களினாலும், மாலை, தாம்பூலம், சந்தனம் இவற்றாலும் பூஜையைச்செய்தான். (44)

---

பகவான் தனக்கென வஸ்திரமாகிற சரீரமுண்மையிலில்லாவிட்டாலும் ஜீவனுக்குரிய வஸ்திரமாகிற சரீரத்தை எடுத்துப் பாடுபடுகிறார் என்பதை விளக்கவேண்டியே பகவான் இவ்விதம் செய்தாரென ஸம்ப்ரதாயமறிந்த பெரியார் கூறுகின்றனர்.

तुष्टा ह्यागमनेन वाम् ॥ ४५ ॥ भवन्तौ किल विश्वस्य जगतः कारणं परम्। अवतीर्णाविहांशेन क्षेमाय च भवाय च ॥ ४६ ॥ नहि वां विषमा दृष्टिः सुहृदोर्जगदात्मनोः। समयोः सर्वभूतेषु भजन्तं भजतोरपि ॥ ४७ ॥ तावाज्ञापयतं भृत्यं किमहं करवाणि वाम्। पुंसोऽत्यनुग्रहो ह्येष भवद्भिर्यन्नियुज्यते ॥ ४८ ॥ इत्यभिप्रेत्य राजेन्द्र सुदामा प्रीतमानसः। शस्तैः सुगन्धैः कुसुमैर्माला विरचिता ददौ ॥ ४९ ॥ ताभिः स्वलंकृतौ प्रीतौ कृष्णरामौ सहानुगौ। प्रणताय प्रपन्नाय ददतुर्वरदौ वरान् ॥५०॥ सोऽपि वव्रेऽचलां भक्तिं तस्मिन्नेवाखिलात्मनि। तद्भक्तेषु च सौहार्दं भूतेषु च

---

ஹே ப்ரபோ! தங்களுடையவரவினால் எங்களுடைய ஜன்மம் ஸபலமாயிற்று. குலமும் பரிசுத்தமாயிற்று. பிதிருக்கள், தேவர்கள், மஹருஷிகள் இவர்கள் என் விஷயத்தில் ஸந்தோஷத்தை யடைந்தவர்களாகவே ஆயினர். (45) எல்லா ஜகத்துக்கும் மேலான காரணமான நீங்களோவெனில் இப்புவியில் அபயமளிக்கவேண்டியும், க்ஷேமத்தைத் தரவேண்டியும் அம்சத்துடன் அவதரித்தீர்கள். (46) ஜகத்துக்கு அந்தர்யாமியானவர்களும், ஸுஹிருத்துக்களும், ஸர்வப்ராணிகளிடத்தும் ஸமமானவர்களும், பஜிப்பவனைப் பஜிப்பவர்களுமான உங்களுக்கு விஷமமான (வேண்டியவன் என்றும், வேண்டாதவன் என்றுமான) எண்ணமானது கிடையாது.(47) அந்த நீங்கள் வேலைக்காரனான என்னைக் கட்டளையிடுவீர்களாக. உங்களுக்கு நான் எதைச் செய்யப்போகிறேன். உங்களால் ஏவப்படுவதென்பது யாதுண்டோ இது புருஷனுக்கு மேலான அனுக்கிரஹமாகவன்றோ ஆகின்றது. (48) ஹே ராஜேந்திர! ஸுதாமாவானவன் ப்ரீதமான மனஸ்ஸுள்ளவனாய் இவ்விதம் தெரிவித்து பகவன் மதத்தைத் தெரிந்துகொண்டு சிறந்தனவும், நறுமணமுள்ளனவுமான புஷ்பங்களினால் கட்டப்பட்ட மாலைகளைக்கொடுத்தான். (49) அந்த மாலைகளினால் நன்கு அலங்கரிக்கப்பட்டவர்களும், தோழர்களுடன் கூடினவர்களும், வேண்டினவரனைத் தருகின்றவர்களுமான ராம கிருஷ்ணர்கள் வணங்கினவனும் ப்ரபன்னனுமான ஸுதாமாவுக்கு வேண்டிய வரன்களைக்கொடுத்தனர். (50) அவனும் அகிலத்துக்கும் ஆத்மாவான அவரிடத்திலேயே அசையாத பக்தியையும்,

दयां पराम् ॥ ५१ ॥ इति तस्मै वरं दत्वा श्रियं चान्वयवर्धिनीम् । बलमायु र्यशः कान्ति निर्जगाम सहाग्रजः॥ ५२ ॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्धे पुरप्रवेशो नाम एकचत्वारिंशोऽध्यायः ॥ ४१ ॥



---

அவருடைய பக்தர்களிடத்தில் ஸ்னேஹத்தையும் பிராணிகளிடத்தில் மேலான தயையையும் வரனாகக் கேட்டுக்கொண்டான். (51) இவ்விதம் அவனுக்கு வரனையும், அவனது வம்சத்தில் விருத்தியடைந்துவருகின்ற ஐஸ்வரியத்தையும், சரீரபலம், ஆயுள், யசஸ், கீர்த்தி, காந்தி இவற்றையும் கொடுத்துவிட்டு தமையனான பலராமனுடன் கூட வெளிக்கிளம்பினார். (52) (எ–று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண தசமஸ்கந்த பூர்வார்த்தத்தில் பட்டினப்பிரவேசம் என்ற நாற்பத்தோன்றாவது அத்தியாயம் முற்றிற்று.



## நாற்பத்திரண்டாவது அத்தியாயம்.

(அ–கை) स्वैरं चरन्मथुपुरे रजकं निकृत्य
कृष्णः प्रदाय च वरानथ वायकाय ।
मालाकृतं समनुकंप्य चकार कुब्जा-
मृज्वीं धनुश्च सहसोन्नमयन् बभूव ॥ १ ॥

द्विचत्वारिंशके कुब्जोन्नमनं धनुषो भिदा ।
वधस्तद्रक्षिणां कंसारिष्टं रङ्गोत्सवादि च ॥ २ ॥

(க–ரை) ஸ்ரீகிருஷ்ணன் மதுராபட்டினத்தில் தனதிஷ்டப்படி ஸஞ்சரிக்கின்றவராய் வண்ணானைக்கொன்று நூல் நெய்பவனுக்கும் வரன்களைக்கொடுத்து, மாலை கட்டுபவனையும் நன்கு அனுக்கிரஹித்தார் எனவுபதேசித்து பிறகு கூனியை ஒழுங்காக்கி விரைவாக வில்லையும் வளைத்தார் என்றும், கூனியை நிமிர்த்த பின்னர் வில்லை முறித்தாரென்றும், வில்லைக் காப்பவர்களைக் கொன்றாரென்றும், கம்ஸனுக்கு அரிஷ்டம் (அசுபக்குறிகள்) தோன்றிற்றென்றும், நர்த்தன

## अथ द्विचत्वारिंशोऽध्यायः ॥

श्रीशुक उवाच—अथ व्रजन्राजपथेन माधवः स्त्रियं गृहीताङ्गविलेपभाजनाम् । विलोक्य कुब्जां युवतीं वराननां पप्रच्छ यान्तीं प्रहसन्रसप्रदः ॥ १ ॥ का त्वं वरोर्वेतदुहानुलेपनं कस्याङ्गने वा कथयस्व साधु नः । देह्यावयोरङ्गविलेपमुत्तमं श्रेयस्ततस्ते न चिराद्भविष्यति ॥ २ ॥ सैरन्ध्र्युवाच—दास्यस्म्यहं सुन्दर कंससंमता त्रिवक्रनामा ह्यनुलेपकर्मणि । मद्भावितं भोजपतेरतिप्रियं विना युवां कोऽन्यतमस्तदर्हति ॥ ३ ॥ रूपपेशलमाधुर्यहसितालापवीक्षितैः । धर्षितात्मा ददौ सान्द्रमुभयोरनुलेपनम् ॥४॥

---

சாலையில் செய்த சந்தோஷகரமான காரியங்களும் இந்த நாற்பத்திரண்டாவது அத்தியாயத்தில் உபதேசிக்கப்படுகின்றன. (1–2)(எ–று)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—பிறகு ஸுகத்தைத் தருபவரான மாதவன் ராஜ வீதியினல் செல்லுகின்றவராய் கையிலெடுக்கப்பட்ட சந்தனபாத்திரத்தையுடையவளும், கூனியும் ஆயினும் யுவதியும், அழகிய முகமுள்ளவளும், நடந்து செல்லுகின்றவளுமான ஸ்திரீயைப் பார்த்துச் சிரித்துக்கொண்டு கேட்கத்தொடங்கினர். (1) ஹே அழகிய துடையுள்ளவளே! ஹே அங்கனே! நீ யார்? இந்தச் சந்தனம் யாருக்கு? எங்களுக்குத் தெளிவாகச் சொல்லுவாயாக. சிறந்த இந்தச் சந்தனத்தை எங்களுக்குக் கொடுப்பாயாக. அதனின்றும் உனக்கு நன்மை வெகு சீக்கிரத்திலுண்டாகப்போகின்றது. (2) ஸைரந்த்ரீ சொல்லலுற்றாள்—ஹே ஸுந்தர! நான் சந்தனம் சேர்க்கும் விஷயத்தில் கம்ஸனுக்குப் பிடித்தவளும் *த்ரிவக்ரா என்ற பெயரையுடையவளுமான தாஸியாவேன். போஜராஜனை கம்ஸனுக்கு மிக்கப்பிரியமான என்னால் கூட்டப்பட்ட அந்தச் சந்தனத்தை உங்களிருவரையும் தவிர்த்து வேறு எவன் அடையத் தகுந்தவனுவான். (3) சரீர அழகினுலும், சுகுமாரத்தன்மையினுலும், ரஸிகத்தன்மையினுலும், சிரிப்பினுலும், வார்த்தையினுலும், பார்வையினுலும் மயக்கப்பட்ட சித்தமுடையவளான அவள் குழம்பான சந்தனத்தை அவ்விருவருக்கும் கொடுத்தாள். (4) பிறகு அவ்விரு

---

* கழுத்து, மார்பு, இடுப்பு இம்மூன்றிடங்களிலும் கோணல் வாய்ந்திருப்பதுபற்றி இவளுக்கு த்ரிவக்ரா எனக் காரணப்பெயரிடப்பட்டது.

ततस्तावङ्गरागेण स्ववर्णेतरशोभिना । संप्राप्तपरभागेन शुशुभातेऽनुरञ्जितौ ॥ ५ ॥ प्रसन्नो भगवान्कुब्जां त्रिवक्रां रुचिराननाम् । ऋज्वीं कर्तुं मनश्चक्रे दर्शयन्दर्शने फलम् ॥ ६ ॥ पद्भ्यामाक्रम्य प्रपदे द्व्यङ्गुल्युत्तानपाणिना । प्रगृह्य चुबुकेऽध्यात्ममुदनीनमदच्युतः ॥ ७ ॥ सा तदर्जुसमानाङ्गी बृहच्छ्रोणिपयोधरा । मुकुन्दस्पर्शनात्सद्यो बभूव प्रमदोत्तमा ॥ ८ ॥ ततो रूपगुणौदार्यसंपन्ना प्राह केशवम् । उत्तरीयान्तमाकृष्य स्मयन्ती जातहृच्छया ॥ ९ ॥ एहि वीर गृहं यामो न त्वां त्यक्तुमिहोत्सहे । त्वयोन्मथितचित्ताया: प्रसीद पुरुषर्षभ ॥ १० ॥ एवं स्त्रिया याच्यमान: कृष्णो रामस्य पश्यत: । मुखं वीक्ष्यानुगानांच प्रहसंस्तामुवाच ह ॥ ११ ॥

---

வரும் தமது நிறத்துக்கு மாருன நிறத்திஞல் விளங்குகின்றதும், உந்திக்கு மேலுள்ளவிடத்தையடைந்ததுமான சந்தனத்திஞல் பூசப்பட்டவர்களாய் மிக்க விளங்கினர். (5) தனது தரிசனத்திலுள்ள பலனைக் காண்பிக்கவெண்ணங்கொண்டவரும், ப்ரஸன்னருமான பகவான் அழகிய முகமுள்ளவளும், மூன்றிடங்களில் வக்ரையுமான கூனியை ஒழுங்கானவளாகச் செய்யவேண்டி மனங்கொண்டார்.(6) அச்யுதஞன பகவான் தனது கால்களிஞல் அவளுடைய கால் நுனிகளை மிதித்துக்கொண்டு மேல் தூக்கப்பட்ட இரண்டு விரல்களையுடைய கையிஞல் மோவாய்க்கட்டையில் பிடித்துக்கொண்டு தேஹத்தை ஒழுங்காகத் தூக்கிஞர். (7) அவள் அப்பொழுதே கோணலற்றதும், ஸமானமாகவானதுமான அங்கத்தையுடையவளாகவும், பெரிய பின்தட்டு ஸ்தனம் இவற்றையுடையவளாகவுமாகி உடனேயே சிறந்த ஸ்திரீயாக ஆகிவிட்டாள். (8) பிறகு ரூபம், குணம், ஔதார்யம் இவற்றுடன் கூடினவளாயும், மனத்தில் காமனையையுடையவளாயுமாகிச் சிரித்துக்கொண்டு மேல் வஸ்திரத்தின் நுனியைக் கையாலிழுத்துக் கொண்டு கிருஷ்ணனைச் சொல்லத்தொடங்கிஞள். (9) ஹே வீர! ஹே புருஷர்ஷப! இங்கு வா, வீட்டையடைவோம். இங்கு உன்னை விட்டுவிட மனமில்லாதவளாக இருக்கின்றேன். உன்ஞல் கலக்கப்பட்ட சித்தமுள்ளவளான என் விஷயத்தில் தயை செய்வாயாக. (10) பலராமன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே இவ்விதம் ஸ்திரீயிஞல் யாசிக்கப்படுகின்ற ஸ்ரீகிருஷ்

पश्यामि ते गृहं सुभ्रूः पुंसामाधिविकर्शनम्। साधितार्थोऽगृहाणां नः पान्थानां त्वं परायणम् ॥ १२ ॥ विसृज्य माध्व्या वाण्या तां व्रजन्मार्गे वणिक्पथैः। नानोपायनताम्बूलस्रग्गन्धैः साग्रजोऽर्चितः॥ १३ ॥ तद्दर्शनस्मरक्षोभादात्मानं नाविदन्स्त्रियः। विस्रस्तवासःकबरवलयालेख्यमूर्तयः॥

ततः पौरान्पृच्छमानो धनुषः स्थानमच्युतः। तस्मिन्प्रविष्टो ददृशे धनुरैन्द्रमिवाद्भुतम् ॥१५॥ पुरुषैर्बहुभिर्गुप्तमर्चितं परमर्द्धिमत्। वार्यमाणो नृभिः कृष्णः प्रसह्य धनुराददे ॥ १६ ॥ करेण वामेन सलीलमुद्धृतं सज्यं च कृत्वा निमिषेण पश्यताम्। नृणां विकृष्य प्रबभञ्ज मध्यतो यथेक्षुदण्डं

---

னன் தோழர்களின் முகத்தையும் பார்த்துச் சிரித்துக்கொண்டு அவ ளைச் சொல்லத்தொடங்கினர். (11) ஹே அழகிய புருவமுள்ள வளே! செய்யவேண்டிய காரியத்தைச் செய்து முடித்துவிட்டு புரு ஷர்களின் மனப்பிடைக்குச் சாந்தியைத்தருகின்ற உனது வீட்டைப் பின்னர் அடையப்போகின்றேன். பத்னீயற்று எப்பொழுதும் வழி நடந்து செல்லுபவர்க்கு நீ மேலான ஆஶ்ரயமன்றோ? (12) (இவ் விதம்) இனிமையான வார்த்தையினல் அவளை விட்டுவிட்டு வழியில் தமையனுடன் செல்லுகின்ற ஸ்ரீகிருஷ்ணன் பலவித காணிக்கைகள், தாம்பூலங்கள், பூமாலைகள், சந்தனங்கள் இவற்றையுடையவர்களான வியாபாரிகளினுல் பூஜிக்கப்பட்டார். (13)

மதுரையிலுள்ள ஸ்திரீகள் அவரது தரிசனத்தினுலுண்டான மன்மதனது பாதையால் நழுவின வஸ்திரம் கூந்தல் வளையல் இவற் றையுடையவர்களாகவும், எழுதப்பட்ட பொம்மைபோலவுமாகி தங் களது தேஹத்தை யறிந்தனரில்லை. (14) பிறகு அச்யுதன் பட் டினத்து ஜனங்களிடம் வில்லிருக்குமிடத்தைக் கேட்டுக்கொண்டு அங்கு ப்ரவேசித்தவராய் இந்திரனுடையதுபோல மிக்கவாஶ்சரிய கரமான வில்லைக்கண்ணுற்றார். (15) வெகு புருஷர்களால் ரக்ஷிக் கப்பட்டதும், விலையுயர்ந்த பூஷணம் முதலியவற்றால் அலங்கரிக்கப் பட்டதும், பூஜிக்கப்பட்டதுமான வில்லை ரக்ஷக மனிதர்களால் தடுக்கப்படினுங்கூட அதைப் பொருட்படுத்தாமல் ஸ்ரீகிருஷ்ணன் கையிலெடுத்துக்கொண்டார். (16) உருக்ரமனுன ஸ்ரீகிருஷ்ணன் இடதுகையினுல் விளையாட்டாக எடுக்கப்பட்ட வில்லை நாணுடன்

मदकर्युरुक्रमः॥ १७ ॥ धनुषो भज्यमानस्य शब्दः खं रोदसी दिशः। पूरयामास यं श्रुत्वा कंसस्त्रासमुपागमत् ॥ १८ ॥ तद्रक्षिणः सानुचराः कुपिता आततायिनः। ग्रहीतुकामा आवव्रुर्गृह्यतां वध्यतामिति ॥ १९ ॥ अथ तान्दुरभिप्रायान्विलोक्य बलकेशवौ। क्रुद्धौ धन्वन आदाय शकले तांश्च जघ्नतुः॥ २० ॥ बलं च कंसप्रहितं हत्वा शालामुखात्ततः। निष्क्रम्य चेरतुर्हृष्टौ निरीक्ष्य पुरसंपदः॥ २१ ॥ तयोस्तदद्भुतं वीर्यं निशाम्य पुरवासिनः। तेजःप्रागल्भ्यं रूपं च मेनिरे विबुधोत्तमौ । २२ ॥ तयोर्विचरतोः स्वैरमादित्योऽस्तमुपेयिवान्। कृष्णरामौ वृतौ गोपैः पुराच्छकटमी-

---

கூடினதாகச் செய்து ஜனங்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே வெகு விரைவாக இழுத்து மதங்கொண்ட யானையானது கருப்பங் கழியைப்போல நடுவில் முறித்துவிட்டார் (17) முறிக்கப்படுகின்ற வில்லின் சப்தமானது ஆகாசத்தையும், பூலோக அந்தரிக்ஷ லோகங் களையும், திக்குகளையும், பூர்ணமாகப் பரவி நின்றது. இந்த சப் தத்தைக் கேட்டுக் கம்ஸன் பயத்தையடைந்தான். (18) அந்தவில்லை ரக்ஷிப்பவர்கள் கோபங்கொண்டவர்களாகவும், வேலைக்காரர்களு டன் கூடினவர்களாகவும் வதஞ்செய்யவிருப்பங் கொண்டவர்களாக வுமாகி "பிடியுங்கள் கொல்லுங்கள்" எனச் சொல்லிக்கொண்டு கிருஷ்ணனைப் பிடிக்கவெண்ணங்கொண்டவர்களாய் நாலாபக்கத்தி லும் சூழ்ந்து கொண்டனர். (19) பிறகு பலராமனும் கிருஷ்ண னும் கோபத்தையடைந்தவர்களாய் அவர்கள் கெட்ட எண்ணங் கொண்டவர்களாக இருப்பதை யறிந்து ஒடிந்தவில்லின் துணுக்கு களினால் அவர்களை அடித்தனர். (20) பிறகு கம்ஸனால் அனுப்பப் பட்ட ஸைன்னியத்தையும் கொன்றுவிட்டு பிறகு அந்த வில்லறையி லிருந்து வெளிக்கிளம்பி பட்டினத்தின் அழகுகளைப் பார்த்துக் கொண்டு ஸந்தோஷிதவர்களாய் ஸஞ்சரித்தனர். (21) அவர் களின் அந்த அத்புதமான வீர்யத்தையும் ப்ரபாவத்தையும், தைரி யத்தையும், ரூபத்தையும் கண்ணுற்று பட்டினத்தில்வஸிக்கும் ஜனங்கள் அவர்களைத் தேவஸ்ரேஷ்டர்களாக எண்ணினர். (22) அவ்விருவரும் தமதிஷ்டப்படி ஸஞ்சரிக்குங்கால் சூரியன் அஸ்த மனத்தை யடைந்தான். கிருஷ்ணனும் பலராமனும் கோபாலர்

यतुः ॥ २३ ॥ गोप्यो मुकुन्दविगमे विरहातुरा या आशासताऽशिष ऋता मधुपुर्यभूवन्। संपश्यतां पुरुषभूषणगात्रलक्ष्मीं हित्वेतरान्नु भजतश्चकमेऽयनं श्रीः॥ २४ ॥ अवनिक्ताङ्घ्रियुगलौ भुक्त्वा क्षीरोपसेचनम्। ऊषतुस्तां सुखं रात्रिं ज्ञात्वा कंसचिकीर्षितम्॥ २५ ॥

कंसस्तु धनुषो भङ्गं रक्षणां स्वबलस्य च। वधं निशम्य गोविन्दरामविक्रीडितं परम्॥ २६ ॥ दीर्घप्रजागरो भीतो दुर्निमित्तानि दुर्मतिः। बहून्यचष्टोभयथा मृत्योर्दौत्यकराणि च॥ २७ ॥ अदर्शनं स्वशिरसः प्रतिरूपे च सत्यपि। असत्यपि द्वितीये च द्वैरूप्यं ज्योतिषां तथा॥ २८ ॥

---

களாற் சூழப்பட்டவர்களாய்க் கொண்டு பட்டினத்திலிருந்து தாங்கள் தங்கின இடத்துக்கு வந்துசேர்ந்தனர். (23) முகுந்தனை விட்டுப் பிரியுங்கால் விரஹத்தால் பீடிக்கப்பட்ட கோபிகைகள் எந்த ப்ரார்த்தனைகளைச் செய்தனரோ தன்னைப் பஜிக்கின்ற ப்ரம்ஹாதி தேவர்களையுங்கூடப் பொருட்படுத்தாது ஸ்ரீதேவியானவள் எவரது அப்ரயத்தையே ஆசைப்பட்டாளோ அந்தப் புருஷ பூஷணனுடைய சரீரசோபையைப்பார்க்கின்ற ஜனங்களின் விஷயத்தில் அந்த ப்ரார்த்தனைகள் மதுராபுரியில் ஸத்தியங்களாகவே ஆயின. (24) அலம்பப்பட்ட இருகால்களையுமுடையவர்களாய் பாலுடன்கலந்த அன்னத்தைச் சாப்பிட்டுவிட்டு கம்ஸனால் செய்யவிருப்பப்பட்டதை யறிந்துகொண்டு அந்த இராவுமுழுதும் சுகமாக வசித்துவந்தனர்.

கெட்ட புத்தியுள்ள கம்ஸனோவெனில் கோவிந்தன் பலராமன் இவர்களின் கேவலம் விளையாட்டான தனுர்பங்கத்தையும், ரக்ஷகர்களுடையவும், சொந்த ஸைன்யத்தினுடையவும், வதத்தையும் கேட்டு நீண்டகாலம் தூக்கம் வாராதவனாய் ஜாகரிததத்திலும், ஸ்வப்பினத்திலுமாக இரண்டிடத்திலும் யமனுக்குத் தூதகாரியத்தைச் செய்கின்ற வெகு அசுபக்குறிகளைக்கண்டான். (27) அவையாவன—ஜலம் முதலியவற்றில் தனது பிரதிபிம்பம் காணப்படினுங்கூட த[illegible] தலையை மட்டும் அங்கு காணாமையும், அதுபோல இரண்டாவது இல்லாவிடினுங்கூட கண்களை கைவிரல்களால் மறைக்கும்பொழுது சந்திரன் முதலியவற்றின் இரட்டையைக்காணுதலும், தனதுபிரதிபிம்பத்தில் ஓட்டையிருப்பதாகக் காணுதலும், இருகாதுகளையும் கைகளினால்

छिद्रप्रतीतिश्छायायां प्राणघोषानुपश्रुतिः। स्वर्णप्रतीतिर्वृक्षेषु स्वपदानामदर्शनम् ॥ २९. ॥ स्वप्ने प्रेतपरिष्वङ्गः खरयानं विषादनम्। यायान्नलदमाल्येकस्तैलाभ्यक्तो दिगम्बरः ॥ ३० ॥ अन्यानि चेत्थंभूतानि स्वप्नजागरितानि च। पश्यन्मरणसन्त्रस्तो निद्रां लेभे न चिन्तया ॥ ३१ ॥ व्युष्टायां निशि कौरव्य सूर्ये चाद्भ्यः समुत्थिते। कारयामास वै कंसो मल्लक्रीडामहोत्सवम् ॥३२॥ आनर्चुः पुरुषा रङ्गं तूर्यभेर्यश्च जघ्निरे। मञ्चाश्चालङ्कृताः स्रग्भिः पताकाचेलतोरणैः॥ ३३ ॥ तेषु पौरा जानपदा ब्रह्मक्षत्रपुरोगमाः। यथोपजोषं विविशू राजानश्च कृतासनाः॥ ३४ ॥ कंसः परिवृतोऽमात्यै

---

பொத்துங்கால் உள்ளில் கேட்கப்படும் ப்ராணகோஷரூபமான சப்தத்தைக் கேளாமையும், மரங்களில் தங்கநிறத்தின் தோற்றமும், பொடிகளிலோ, சேறுகளிலோ தனது அடியைக்காணாமையும், ஸ்வப்பினத்தில் பிணத்தைத்தழுவுதலும், கழுதைமீதேறிச்செல்லுதலும், விஷத்தைச் சாப்பிடுதலும், செம்பரத்தைப் பூமாலையையணிந்துகொண்டும் எண்ணெ தேய்த்துக்கொண்டும் இடையில் வஸ்திரமில்லாமலும் தனித்தும் செல்லுதல் என்பது யாதுண்டோ இதுவும் மற்றும் இவைபோன்று ஸ்வப்பின ஜாகரிதங்களிலுண்டானவைகளுமான துர்நிமித்தங்களைப் பார்த்துக்கொண்டு மரணத்தினின்றும் பயத்தையடைந்தவனாய் கவலையினால் தூக்கத்தையடைந்தானில்லை. (28–31) ஹே கௌரவ்ய! பொழுதுவிடிந்து ஸூரியனும் ஜலத்தினின்றும் வெளிவந்ததும் கம்ஸன் மல்லர்கள் விளையாடுதல் என்ற மஹோத்ஸவத்தை நடத்த ஏற்பாடுசெய்தான். (32) வேலைக்காரர்கள் நர்த்தனசாலையை அலங்கரித்தனர். தூர்யம் என்றும், பேரி என்றுமான வாத்யங்கள் வாசிக்கப்பட்டன. *மஞ்சங்களும், பூமாலைகளினாலும், கொடிமரங்களினாலும், வஸ்திரங்களினாலும், தோரணங்களினாலும் அலங்கரிக்கப்பட்டன. (33) அந்த மஞ்சங்களில் ப்ராம்ஹணர் க்ஷத்திரியர் இவர்களை முன்னிட்டவர்களான பட்டினத்து ஜனங்களும், தேசத்திய ஜனங்களும், மற்றுமுள்ள அரசர்களும் செய்துகொள்ளப்பட்ட ஆஸனத்தையுடையவர்களாய் உட்கார்ந்தனர். (34)

---

* வேடிக்கை பார்க்கும் ஜனங்கள் உட்காரும் காலரிகள் மஞ்சங்களெனப்படும்.

राजमञ्च उपाविशत्। मण्डलेश्वरमध्यस्थो हृदयेन विदूयता ॥ ३५ ॥ वाद्यमानेषु तूर्येषु मल्लतालोत्तरेषु च। मल्लाः स्वलंकृता दृप्ताः सोपाध्यायाः समासत ॥ ३६ ॥ चाणूरो मुष्टिकः कूटः शलस्तोशल एव च। त आसेदुरुपस्थानं वल्गुवाद्यप्रहर्षिताः ॥ ३७ ॥ नन्दगोपादयो गोपा भोजराज समाहुताः। निवेदितोपायनास्त एकस्मिन्मञ्च आविशन् ॥ ३८ ॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्धे कुब्जास्वरूपदानं मल्लरङ्गोपवर्णनं नाम द्विचत्वारिंशोऽध्यायः ॥ ४२ ॥



---

சிற்றரசர்களின் நடுவிலிருப்பவனும், மந்திரிகளால் சூழப்பட்டவனுமான கம்ஸன் கவலையையடைகின்ற மனஸ்ஸுடன் கூட ராஜமஞ்சத்திலுட்கார்ந்தான். (35) மல்லர்களின் தாளத்வனியைத் தமக்கு மேலாகவுடைய தூர்யமென்ற வாத்யங்கள் வாசிக்கப்படுங்கால் நன்கு அலங்கரிக்கப்பட்டவர்களும் கொழுப்பேறினவர்களுமான மல்லர்கள் தமது மல்லாசிரியர்களுடன் கூட அங்கு வந்து சேர்ந்தனர். (36) சாணூரன், முஷ்டிகன், கூடன், சலன், தோசலன் ஆகிய அவர்களும், அழகிய வாத்தியங்களினால் ஸந்தோஷப்படுத்தப்பட்டவர்களாய்க்கொண்டு மல்லரங்கத்தை வந்தடைந்தனர். (37) போஜராஜனால் அழைக்கப்பட்ட நந்தகோபர் முதலிய அந்தக் கோபாலர்கள் தாம் கொண்டு வந்த காணிக்கைகளைத் தெரிவித்தவர்களாய் ஒரே மஞ்சத்திலுட்கார்ந்தனர். (38) (எ-று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண தசமஸ்கந்த பூர்வார்த்தத்தில் கூனிக்கு நல்லருபம் கொடுத்தல், மல்லர்களின் ரங்கத்தை வர்ணித்தல் என்ற நாற்பத்திரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.



## நாராயணீயம்.

संप्राप्तो मथुरां दिनार्धविगमे तत्रान्तरस्मिन्वस-
न्नारामे विहिताशनः सखिजनैर्यातः पुरीमीक्षितुम्।
प्राप्तो राजपथं चिरश्रुतिधृतव्यालोककौतूहल-
स्त्रीपुंसोद्यदगण्यपुण्यनिगलैराकृष्यमाणो नु किम् ॥ ३७८ ॥

(ப–ரை) मथुराम्=மதுரா பட்டினத்தை संप्राप्तः=அடைந்தவரும், तत्र=அந்த மதுரையில் अन्तरस्मिन्=பட்டினத்துக்கு வெளியிலுள்ள आरामे=தோட்டத்தில் वसन्=வஸித்தவரும், विहिताशनः=செய்யப்பட்ட போஜனத்தையுடையவரும், दिनार्धविगमे=பகலின் பாதி பாகம் சென்றபிறகு पुरीम्=பட்டினத்தை ईक्षितुम्=பார்ப்பதற்காக सखिजनैः=தோழ ஜனங்களுடன் यातः=சென்றவருமான நீர் चिरश्रुतिधृतव्यालोककौतूहलस्त्रीपुंसोद्यदगण्यपुण्यनिगलैः — चिरश्रुति=வெகுகாலமாய் கேட்டதால் धृत=வஹிக்கப்பட்ட व्यालोक कौतूहल=பார்ப்பதில் ஆவலையுடைய स्त्रीपुंस=ஸ்திரீ புருஷர்களிடமிருந்து उद्यदगण्यपुण्य=மேலோன்முகமாயான எண்ணமுடியாத புண்யமாகிற निगलैः=சங்கிலிகளால் आकृष्यमाणः=இழுக்கப்படுகின்றவராய் राजपथम्=ராஜவீதியை प्राप्तः किन्नु=அடைந்தீர் போலும். (378) (எ–று)

त्वत्पादद्युतिवत्सरागसुभगास्त्वन्मूर्तिवद्योषितः
संप्राप्ता विलसत्पयोधररुचो लोला भवद्दृष्टिवत् ।
हारिण्यस्त्वदुरस्स्थलीवदयि ते मन्दस्मितप्रौढिव-
न्नैर्मल्योल्लसिताः कचौघरुचिवद्राजत्कलापाश्रिताः ॥ ३७९ ॥

(ப–ரை) अयि!=ஹே கிருஷ்ண! त्वत्पादद्युतिवत्=உமது சரண காந்திபோல सरागसुभगाः=ராகத்துடனும், (சிவப்புடனும், காமத்துடனும்) அழகுடனும் கூடினவர்களும், त्वन्मूर्तिवत्=உமது சரீரம் போல विलसत्पयोधररुचः-विलसत्=விளங்குகின்ற पयोधर=நீருண்ட மேகத்தினுடைய, ஸ்தனங்களுடைய रुक्=காந்தியையுடையவர்களும் भवद्दृष्टिवत्=உமது நேத்திரங்கள் போல लोलाः=இங்குமங்கு மோடுகின்றவர்களும், त्वदुरस्स्थलीवत्=உமது மார்புப்ரதேசம்போல हारिण्यः=ஹாரமுள்ளவர்களும், மனதைக்கவருகின்றவர்களும், ते=உமது मन्दस्मितप्रौढिवत्=மந்தஹாஸத்தின் பெருமைபோல नैर्मल्योल्लसिताः—नैर्मल्य=தெளிவினால், அழுக்கற்ற சரீரத்தினால், சுத்த மனத்தினால் उल्लसिताः=விளங்குகின்றவர்களும், कचौघरुचिवत्=தலைமுடிச்சின் காந்திபோல राजत्कलापाश्रिताः—राजत्=விளங்குகின்ற कलाप=மயில் தோகையை, ஆபரணத்தை आश्रिताः=அடைந்தவர்களுமான योषितः=ஸ்திரீகள் संप्राप्ताः=வந்து கூடினார். (379)

तासामाकलयन्नपाङ्गवलनैर्मोदं प्रहर्षाद्भुत-
व्यालोलेषु जनेषु तत्र रजकं कञ्चित्पटीं प्रार्थयन् ।

कस्ते दास्यति राजकीयवसनं याहीति तेनोदितः
सद्यस्तस्य करेण शीर्षमहृथाः सोऽप्याप पुण्यां गतिम् ॥३८०॥

(ப-ரை) तासाम्=அந்த நகரத்திலுள்ள ஸ்திரீகளுக்கு आपाङ्ग-चलनैः=கடைக்கண் பார்வைகளால் मोदम्=ஸந்தோஷத்தை आकलयन्=செய்தவரும், जनेषु=ஜனங்கள் प्रहर्षाद्भुतव्यालोलेषु=மிகுந்த ஸந்தோஷம், ஆச்சரியம் இவற்றால் கலங்கினவர்களாகவிருக்கும்பொழுது तत्र=அந்த ராஜவிதியில் कश्चिद्रजकम्=ஒரு வண்ணானை पटीम्=வஸ்திரத்தை प्रार्थयन्=யாசித்தவரும், "राजकीयवसनम्=ராஜாவின் வஸ்திரத்தை कः=யார் ते=உனக்கு दास्यति=கொடுப்பான்" इति=என்று तेन=அந்த வண்ணானால் उदितः=சொல்லப்பட்டவருமான நீர் सद्यः=உடன் करेण=கையினால் तस्य=அந்த வண்ணானுடைய शीर्षम्=தலையை अहृथाः=அறுத்தீர். सोऽपि=அந்த வண்ணானும் पुण्याङ्गतिम्=மோக்ஷத்தை आप=அடைந்தான். (380) (எ-று)

भूयो वायकमेकमायतमतिं तोषेण वेषोचितं
दाश्वांसं स्वपदं निनेथ सुकृतं को वेद जीवात्मनाम् ।
मालाभिः स्तवकैस्स्तवैरपि पुनर्मालाकृता मानितो
भक्तिं तेन वृतां दिदेशिथ परां लक्ष्मीञ्च लक्ष्मीपते ॥ ३८१ ॥

(ப-ரை) लक्ष्मीपते=ஹே லக்ஷ்மீபதியான கிருஷ்ணா! भूयः=மறுபடியும், आयतमतिम्=விசாலமான சித்தமுள்ளவனும், वेषोचितम्=அலங்காரத்துக்குப் பொருத்தமானவற்றை அதாவது: பலநிறமுள்ள வெண்பட்டு முதலியவற்றை तोषेण = ஸந்தோஷத்துடன் दाश्वांसम्=கொடுத்தவனுமான एकम्=ஒரு वायकम्=துணி நெய்பவனை स्वपदम्=வைகுண்டத்தை निनेथ=அடைவித்தீர். जीवात्मनाम्=ஜீவாத்மாக்களுடைய सुकृतम्=புண்யத்தை कः=எவன் वेद=அறிவான். पुनः=மறுபடியும் मालाकृता=மாலைகட்டுபவனால் मालाभिः=பூமாலைகளாலும், स्तवकैः=பூங்கொத்துகளாலும், स्तवैः=ஸ்தோத்திரங்களாலும், मानितः=பூஜிக்கப்பட்டவராய்க்கொண்டு तेन=அந்தமாலைக்காரனால் वृताम्=வேண்டப்பட்ட पराम्=மேலான भक्तिम्=ப்ரேமை ரூபமான பக்தியையும், लक्ष्मीञ्च=ஐஸ்வர்யத்தையும் दिदेशिथ=கொடுத்தீர். (381)

कुब्जामम्बुजविलोचनां पथि पुनर्दृष्ट्वाऽङ्गरागे तया
दत्ते साधु किलाङ्गरागमददास्तस्या महान्तं हृदि ।

चित्तस्थामृजुतामथ प्रथयितुं गात्रेऽपि तस्याः स्फुटं
गृह्णन्मञ्जु करेण तामुदनयस्तावज्जगत्सुन्दरीम् ॥ ३८२ ॥

(ப-ரை) पुनः=பிறகு अब्जविलोचनाम् = தாமரைப் புஷ்பம் போன்ற கண்ணையுடையவளான कुब्जाम्=கூனியை पथि=வழியில் दृष्ट्वा=பார்த்து तया=அவளால் अङ्गरागे=சந்தனமானது दत्ते=கொடுக்கப்பட்டதும் तस्याः=அவளுடைய हृदि=மனதில் महान्तम्=அதிகமான अङ्गरागम्=உமது ஸ்ரீமூர்த்தியில் ஆசையை साधु=நன்றாய் अददाः किल=கொடுத்தீர்போலும்? अथ=பிறகு तस्याः=அவளுடைய चित्तस्थाम्=மனத்தில் மறைந்திருக்கின்ற ऋजुताम=ஒழுங்கான தன்மையை गात्रेऽपि=சரீரத்திலும், प्रथयितुम् = வெளிப்படுத்துவதற்குவேண்டி. जगत्सुन्दरीम्=ஜகத்துக்குள் அழகு பொருந்திய ताम्=அவளை करेण=கையினால் मञ्जु=மெதுவாக गृह्णन्=பிடித்துக்கொண்டு तावत्=அப்பொழுது उदनयः=ஒழுங்காக்கினீர். அதாவது:—தேஹத்திலுள்ள கோணலைமட்டும் போக்கினீர் என்பது கருத்து. स्फुटम्=நிப்ஸம்சிதம்.

तावन्निश्चितवैभवास्तव विभो ! नात्यन्तपापा जना
यत्किञ्चिद् ददते स्म शक्त्यनुगुणं ताम्बूलमाल्यादिकम् ।
गृह्णानः कुसुमादि किञ्चन तदा मार्गे निबद्धाञ्जलि-
र्नातिष्ठं बत हा यतोऽद्य विपुलामार्तिं व्रजामि प्रभो ॥ ३८३ ॥

(ப-ரை) विभो !=ஸர்வசக்தனான ஹேகிருஷ்ணா ! तावत्=அந்த ஸமயத்தில் तव=உம்முடைய निश्चितवैभवाः=தீர்மானிக்கப்பட்டவரதான சக்தியையுடைய नात्यन्तपापाः=மிகுந்த பாபமில்லாத जनाः=ஜனங்கள் शक्त्यनुगुणम्=அவரவர்களின் சக்திக்குத் தகுந்தபடி ताम्बूलमाल्यादिकम्=வெற்றிலை, பூமாலை முதலியதான यत्किञ्चित्=ஏதாவது ஒருபொருளை ददते स्म=கொடுத்தனர். कुसुमादि=புஷ்பம் முதலான किञ्चन=ஏதாவதொரு பொருளை गृह्णानः=கையில் தரித்துக்கொண்டும் निबद्धाञ्जलिः=அஞ்ஜலி பந்தம் செய்துகொண்டும் तदा=நீர் மதுராபுரி வீதியில் செல்லும்பொழுது मार्गे=வழியில் नातिष्ठम्=இருந்தேனில்லை. हा बत=மிகுந்த கஷ்டம். यतः=அவ்விதமில்லாமலிருந்ததால் प्रभो !=ஹே கிருஷ்ணா ! विपुलाम्=அதிகமான आर्तिम्=வியாதியினால் பீடையை अद्य=இப்பொழுது व्रजामि=அடைகிறேன். (383)

पश्यामीति विमुक्तयापि भगवन्नालेपदात्र्या तया
दूरात् कातरया निरीक्षितगतिस्त्वं प्राविशो गोपुरम् ।

आघोषानुमितत्वदागममहाहर्षोल्ललद्देवकी-
वक्षोजप्रगलत्पयोरसमिषात्त्वत्कीर्तिरन्तर्गता ॥ ३८४ ॥

(ப-ரை) भगवन्=ஹே க்ருஷ்ண! पश्चामि=பின்னர் உனது திருவுறம் வரப்போகிறேன் इति=என்று சொல்லி विमुक्तयापि=அனுப்பப்பட்டிருந்தபோதிலும்கூட कातरया=உமது விரஹத்தினின்றும் பயந்தவளான आलेपदाच्या=சந்தனம் கொடுத்த तया=அந்த த்ரிவக்ரையினால் दूरात्=வெகுதூரம் வரையில் निरीक्षितगतिः=பார்க்கப்பட்ட நடையையுடையவரான त्वम्=நீர் गोपुरम्=பட்டினத்தின் வாயிற்படியில் प्राविशः=நுழைந்தீர். आघोषानुमितत्वदागममहाहर्षोल्ललद्देवकीवक्षोजप्रगलत्पयोरसमिषात् — आघोष=உம்மைப்பார்ப்பதில் பிரவிருத்தித்த பட்டினத்து ஜனங்களின் நாலாபக்கத்திலுமுண்டான இரைச்சலால் अनुमित=ஊஹிக்கப்பட்ட त्वदागम=உமது வரவினாலுண்டான महाहर्ष=மிகுந்த ஸந்தோஷத்தினால் उल्ललत्=கலங்கின देवकीवक्षोज=தேவகியின் ஸ்தனங்களினின்றும், प्रगलत्=பெருகின पयोरसमिषात्=பால் என்ற வியாஜமாய் त्वत्कीर्तिः=உமது கீர்த்தியானது अन्तर्गता=பட்டினத்துக்குள் சென்றது. நீர் மதுராபுரம் வந்திருப்பதைத் தேவகி கேட்டு மிகவும் ஸந்தோஷமடைந்தாள் என்பது கருத்து.

आविष्टो नगरीं महोत्सववतीं कोदण्डशालां व्रजन्
माधुर्येण नु तेजसा नु पुरुषैर्दूरेण दत्तान्तरः ।
स्रग्भिर्भूषितमर्चितं वरधनुर्मामेति वादात्पुरः
प्रागृह्णाः समरोपयः किल समाक्राक्षीरभांक्षीरपि ॥ ३८५ ॥

(ப-ரை) महोत्सववतीम् = மிகுந்த உத்ஸவத்துடன் கூடின नगरीम्=பட்டினத்தில் आविष्टः=பிரவேசித்தவரும், (பிறகு.) कोदण्डशालाम्=தனுஸ்ஸுகள் வைத்திருக்குமிடத்துக்கு व्रजन्=சென்றவருமான நீர் माधुर्येण नु=உமது ஸ்ரீமூர்த்தியின் அழகினாலோ तेजसा नु=காந்தியினாலோ அல்லது பிறரால் தடுக்கமுடியாத் தன்மையினாலோ पुरुषैः=காவல்காரர்களால் दूरेण=வெகுதூரத்திலேயே दत्तान्तरः=கொடுக்கப்பட்ட மார்க்கத்தையுடையவராய்க் கொண்டு मामा=வில்லைத்தொடாதே வில்லைத்தொடாதே इति=என்ற वादात्=ஸேவகர்களின் வார்த்தைக்கு पुरः=முன்னமே स्रग्भिः=மாலைகளால் भूषितम्=அலங்கரிக்கப்பட்டதும், अर्चितम्=பூஜை செய்யப்பட்டதுமான वरधनुः=சிறந்தவில்லை प्रागृह्णाः=எடுத்தீர் समरोपयः=நாண் ஏற்றினீர் समा-

क्षी:=ஞான்கயிற்றை இழுத்தீர் अभाङ्क्षीः अपि किल=முறிக்கவும் செய்தீரன்றோ. (385) (ஏ—று)

श्वः कंसक्षपणोत्सवस्य पुरतः प्रारंभतूर्योपम-
चापध्वंसमहाध्वनिस्तव विभो देवानरोमाञ्चयत् ।
कंसस्यापि च वेपथुस्तदुदितः कोदण्डखण्डद्वयी-
चण्डाभ्याहतरक्षिपूरुषरवैरुत्कूलितोऽभूत्त्वया ॥ ३८६ ॥

(ப—ரை) श्वः=நாளை தினம் நடக்கப்போகின்ற कंसक्षपणोत्सवस्य=கம்ஸவதமாகிற உத்ஸவத்துக்கு पुरतः=முன்னால் प्रारम्भतूर्योपमः=துவக்கத்தில் வாசிக்கப்படுகின்ற தூர்யம் என்ற வாத்யத்தின் சப்தத்துக்கொப்பான तव = உம்முடைய चापध्वंसमहाध्वनिः=வில் முறித்தலாலுண்டான பெரிய சப்தமானது विभो !=ஸர்வசக்தனான ஹே கிருஷ்ண ! देवान्=தேவர்களை अरोमाञ्चयत्=மயிர்கூச்சலடையும்படி செய்தது. तदुदितः=முறிந்த வில்லின் சப்தத்தைக் கேட்டதாலுண்டான कंसस्य=கம்ஸனுடைய वेपथुरपि=நடுக்கமும், कोदण्डखण्डद्वयीचण्डाभ्याहतरक्षिपूरुषरवैः=முறிந்த வில்லின் இரண்டு துண்டுகளால் நன்கு அடிக்கப்பட்ட ஸேவகர்களின் அழுகை சப்தங்களால் त्वया = உம்மால் उत्कीलितः=விருத்திசெய்யப்பட்டதாக अभूत् = ஆயிற்று. (386) (ஏ—று)

शिष्टैर्दुष्टजनैश्च दृष्टमहिमा प्रीत्या च भीत्या ततः
संपश्यन् पुरसंपदं प्रविचरन् सायं गतो वाटिकाम् ।
श्रीदाम्ना सह राधिकाविरहजं खेदं वदन् प्रस्वप-
न्नानन्दन्नवतारकार्यघटनाद्वातेश संरक्ष माम् ॥ ३८७ ॥

(ப—ரை) वातेश=குருவாயுக்கு ஈசனான ஹே கிருஷ்ண ! ततः=பிறகு शिष्टैः=நல்லோர்களால் प्रीत्या=பிரீதியுடனும், दुष्टजनैश्च=துஷ்டஜனங்களால் भीत्याच=பயத்துடனும் दृष्टमहिमा=காணப்பட்ட மஹிமையையுடையவராயும், पुरसंपदम्=பட்டினத்தின் சோபையை संपश्यन्=பார்த்துக்கொண்டு प्रविचरन्=ஸஞ்சரித்தவராயுங்கொண்டு सायम्=ஸாயங்காலத்தில் वाटिकाम्=தங்குமிடத்தை गतः=அடைந்தவரும் श्रीदाम्ना सह=ஸ்ரீதாமா என்ற தனது ஸ்னேஹிதனுடன் राधि-

---

* प्रशब्दोऽत्र निषेधार्थकः । "नायमर्थः प्रस्मर्तव्यः" इत्यादिभाष्यप्रयोगेषु तथा दर्शनात् ॥

## अथ त्रिचत्वारिंशोऽध्यायः ॥

श्रीशुक उवाच—अथ कृष्णश्च रामश्च कृतशौचौ परंतप । मल्लदुन्दुभिनिर्घोषं श्रुत्वा द्रष्टुमुपेयतुः ॥१॥ रङ्गद्वारं समासाद्य तस्मिन्नागमवस्थि-

---

**कायिरहजम्**=ராதையின் பிரிவினாலுண்டான **खेदम्**=துக்கத்தை **वदन्**=சொல்லிக்கொண்டு ***प्रस्वपन्**=நன்கு தூங்காதவரும், **अवतारकार्यघटनात्**=தான் அவதரித்தது எக்கார்யத்துக்காகவோ அக்கார்யம் கைகூடினதால் **आनन्दन्**=ஸந்தோஷித்தவருமான நீர் **माम्** = என்னை **संरक्ष**=காப்பாற்றும். (387) (எ—று)

இவ்விதம் பகவான் மதுராபட்டினத்தில் பிரவேசித்தல், வண்ணானை நிக்ரஹித்தல், சேணியன், மாலைக்காரன், கூனி இவர்களை அனுக்கிரஹித்தல், வில் முறித்தல் முதலியவற்றை வர்ணித்தலென்ற எழுபத்துநான்காவது தசகம் முற்றிற்று.

—•∘※∘•—

## நாற்பத்துமூன்றாவது அத்தியாயம்.

(அ—கை) त्रिचत्वारिंशके हत्वा गजेन्द्रं रामकृष्णयोः ।
रङ्गप्रवेशसौभाग्यं चाणूरेण च भाषणम् ॥ १ ॥

(க—ரை) கஜேந்திரனைக் கொன்றுவிட்டு ராம கிருஷ்ணர்கள் ரங்கத்தில் பிரவேசித்ததின் அழகும், சாணூரனுடன் வார்த்தையாடுதலும், இந்த நாற்பத்துமூன்றாவது அத்தியாயத்திலுபதேசிக்கப்படுகிறது. (1) (எ—று)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—ஹே பரந்தப! பிறகு கிருஷ்ணனும், பலராமனும் செய்யப்பட்ட *சுத்தியையுடையவர்களாய்க் கொண்டு மல்லர்களுடையவும், துந்துபி வாத்தியத்திலுடையவும்

---

* அதாவது: வில்லை முறித்தல் முதலியவற்றால் நாம் நமது ஐச்வரியத்தைக் காட்டின பிறகுங்கூட நமது மாதா பிதாக்களைக் கட்டினின்றும் விடாததுடன் நம்மையுமே கொல்லவிரும்புகிறான். ஆகவே அம்மானாயினுங்கூட இவனைக் கொல்லுவதில் நமக்குத் தோஷம் அணுவளவும் வரமாட்டாது எனத் தமது அபராதத்துக்குப்பரிஹாரம் தேடிக்கொண்டனர் என்பது கருத்து.

तम्। अपश्यत्कुवलयापीडं कृष्णोऽम्बष्ठप्रचोदितम् ॥ २ ॥ बद्ध्वा परिकरं शौरिः समुह्य कुटिलालकान्। उवाच हस्तिपं वाचा मेघनादगभीरया ॥३॥ अम्बष्ठाम्बष्ठ मार्गं नौ देह्यपक्रम मा चिरम्। नोचेत्सकुञ्जरं त्वाद्य नयामि यमसादनम् ॥ ४ ॥ एवं निर्भर्त्सितोऽम्बष्ठः कुपितः कोपितं गजम्। चोदयामास कृष्णाय कालान्तकयमोपमम् ॥५॥ करीन्द्रस्तमभिद्रुत्य करेण तरसाऽग्रहीत्। कराद्विगलितः सोऽमुं निहत्याङ्घ्रिष्वलीयत ॥ ६ ॥ संक्रुद्धस्तमचक्षाणो घ्राणदृष्टिः स केशवम्। परामृशत्पुष्करेण स प्रसह्य विनिर्गतः ॥७॥ पुच्छे प्रगृह्यातिबलं धनुषः पञ्चविंशतिम्। विचकर्ष यथा नागं

---

சப்தத்தைக் கேட்டு அவ்விடத்தைப் பார்க்கவேண்டிச் சென்றனர். (1) ஸ்ரீகிருஷ்ணன் நார்த்தனசாலையின் வாயிலையடைந்து அவ்விடத்திலிருக்கின்றதும், யானைப்பாகனுலோட்டப்பட்டதும், குவலயாபீடமெனப் பெயருள்ளதுமான யானையைக்கண்டார். (2) சௌரியானவர் போருக்குத் தக்கதான கட்டைக்கட்டிக்கொண்டு சுருட்டை மயிர்களைக் கையினுலொதுக்கிக்கொண்டு மேகநாதம்போலக் கம்பீரமான வார்த்தையினுல் யானைப்பாகனைச் சொல்லலுற்ருர். (3) அடே! யானைப்பாகனே! விலகு. எங்களுக்கு வழியைவிடு. தாமதிக்காதே. இல்லாவிடில் யானையுடன்கூட இப்பொழுது உன்னை யமன் வீட்டுக்கு அனுப்புவேன். (4) இவ்விதம் அதட்டப்பட்ட யானைப்பாகன் கோபத்தையடைந்தவனுய் கோபமூட்டப்பட்டதும், மிருத்யுவுக்கும் அதற்குக் காரணமான யமனுக்கும் ஒப்பானதுமான யானையைக் கிருஷ்ணனையும் பொருட்டுத் தூண்டினுன். (5) சிறந்த யானையானது ஓடிவந்து துதிக்கையினுல் வேகமாக அவரைப்பிடித்தது. அவர் துதிக்கையினின்று விடுபட்டு முஷ்டியினுல் இந்த யானையைக் குத்திவிட்டு அதன் நான்கு கால்களுக்குள் மறைந்துகொண்டார். (6) முகர்தலினுல் விஷயங்களை யறிந்துகொள்ளுமியல்பையுடைய அந்த யானையானது அவரைக்காணுது நன்கு கோபங்கொண்டு துதிக்கையினுல் கேசவனைப்பிடித்துக்கொண்டது. கருடன்போன்ற அவர் அகப்படாது ஏமாற்றிவிட்டு வெளிவந்தவராய் பாம்பைப் போன்று அதிகம் பலமுள்ள யானையை வாலில் பிடித்து இருபத்தைந்து விற்கடை தூரம் (அதாவது: நூறு முழம்) விளையாட்டாகப்

सुपर्ण इव लीलया ॥८॥ स पर्यावर्तमानेन सव्यदक्षिणतोऽच्युतः। बभ्राम भ्राम्यमाणेन गोवत्सेनेव बालकः॥ ९ ॥ ततोऽभिमुखमभ्येत्य पाणिनाहत्य वारणम्। प्राद्रवन्पातयामास स्पृश्यमानः पदे पदे ॥१०॥ स धावन्क्रीडया भूमौ पतित्वा सहसोत्थितः। तं मत्वा पतितं क्रुद्धो दन्ताभ्यां सोऽहनत्क्षितिम् ॥११॥ स्वविक्रमे प्रतिहते कुञ्जरेन्द्रोऽत्यमर्षितः। चोद्यमानो महामात्रैः कृष्णमभ्यद्रवद्रुषा ॥ १२ ॥ तमापतन्तमासाद्य भगवान्मधुसूदनः। निगृह्य पाणिना हस्तं पातयामास भूतले ॥ १३ ॥ पतितस्य पदाक्रम्य मृगेन्द्र इव लीलया। दन्तमुत्पाट्य तेनेभं हस्तिपांश्चाहनद्धरिः॥ १४ ॥ मृतकं द्विपमुत्सृज्य दन्तपाणिः समाविशत्। अंसन्यस्तविषाणोऽसृङ्मदबिन्दुभिर-

---

பின் னுக்கிழுத்தார். (7–8) அந்த அச்யுதன் இடசாரி வலசாரியாகச் சுற்றுகின்ற அந்த யானையுடன் சுற்றுகின்ற பசுங்கன்றுடன் சிறு குழந்தைபோலச் சுற்றிவந்தார். (9) பிறகு எதிரில் வந்து கையி ஞல் யானையை அடித்துவிட்டு ஓடுகின்றவராயும், அடிக்கடி பிடிபடு கின்றவராயுங்கொண்டு யானையைக்கீழில் விழும்படி செய்தார். (10) ஓடுகின்ற அந்தக் கிருஷ்ணன் விளையாட்டாகப் பூமியில் விழுந்து விரைவாக எழுந்தார். கோபங்கொண்ட அந்த யானையானது அவ ரைப் பூமியில் விழுந்தவராக எண்ணிக்கொண்டு தந்தங்களிஞல் பூமியைக் குத்திற்று. (11) தனது பராக்கிரமமானது பயன்படாது போனதும், கஜேந்திரமானது மிக்கக் கோபத்தையடைந்ததாயும், யானைப்பாகர்களால் தூண்டப்பட்டதாயும் கொண்டு கோபத்துடன் கிருஷ்ணனை விரட்டவாரம்பித்தது. (12) மதுஸூதனனுன பக வான் ஓடிவருகின்ற அதையடைந்து கையிஞல் துதிக்கையைப் பிடித்து பூதலத்தில் வீழ்த்தினுர். (13) விழுந்த யானையினுடைய காலினுல் சிங்கம்போலத்தலையிலேறிக்கொண்டு விளையாட்டாக அதன் தந்தத்தைப் பிடுங்கிக்கொண்டு அந்தத் தந்தத்திஞல் யானையையும், யானைப்பாகர்களையும் அடித்துக்கொன்ருர். (14) (எ–று)

உயிரிழந்த யானையை விட்டுவிட்டுத் தந்தத்தைக் கையில் எடுத் துக்கொண்டும் கொம்பின் நுனி தோளில்படும்படி வைத்துக்கொண் டும், ரக்தம், மதம் இவற்றின் பிந்துக்களிஞல் அடையாளஞ்செய்யப் பட்டவராய்க்கொண்டும், உண்டான வியர்வைத் துளிகளுடன்

ह्वितः। विरूढस्वेदकणिकावदनाम्बुरुहो बभौ ॥ १५ ॥ वृतौ गोपैः कतिपयैर्बलदेवजनार्दनौ। रङ्गं विविशतू राजन्गजदन्तवरायुधौ ॥ १६ ॥

मल्लानामशनिर्नृणां नरवरः स्त्रीणां स्मरो मूर्तिमान्गोपानां स्वजनोऽसतां क्षितिभुजां शास्ता स्वपित्रोः शिशुः। मृत्युर्भोजपतेर्विराडविदुषां तत्त्वं परं योगिनां वृष्णीनां परदेवतेति विदितो रङ्गं गतः साग्रजः॥ १७ ॥ हतं कुवलयापीडं दृष्ट्वा तावपि दुर्जयौ। कंसो मनस्व्यपि तदा भृशमुद्वि-

---

கூடின முகாரவிந்தத்தையுடையவராய்க் கொண்டும், ரங்கத்தில் பிரவேசித்து வீரலக்ஷ்மியுடன் விளங்கினார். (15) ஹே ராஜன்! சில கோபாலர்களால் சூழப்பட்டவர்களும், யானையின் தந்தத்தைச் சிறந்த ஆயுதமாகக்கொண்டவர்களுமான ராமகிருஷ்ணர்கள் ரங்கத்தில் (மல்ல யுத்தம் நடக்குமிடத்தில்) பிரவேசித்தனர். (16) *சாணூரன் முதலிய மல்லர்களுக்கு இடியாகவும், மனிதர்களுக்குப் புருஷப்ஶ்ரேஷ்டனாகவும், ஸ்திரீகளுக்குச் சரீரமெடுத்த மன்மதனாகவும், கோபாலர்களுக்குச் சொந்த ஜனமாகவும், அசாதுக்களான அரசர்களுக்குச் சிக்ஷகனாகவும், தனது மாதா பிதாக்களுக்குக் குழந்தையாகவும், கம்ஸனுக்கு மிருத்யுவாகவும், அறியாதவர்களுக்கு அவரவர்க்குத்தக்கபடி பலவாறு தோன்றுகின்றவராகவும், யோகிகளுக்குப் பரதத்துவமாகவும், விருஷ்ணிகளுக்கு பரதேவதையாகவும், தோற்றப்படுகின்ற ஸ்ரீகிருஷ்ணன் பலராமனுடன் கூட இவ்விதம் (முற்கூறியபடி) ரங்கத்தையடைந்தார். (17) ஹே ந்ருப! கம்ஸன்

---

* இந்த சுலோகத்தில் முறையே ரௌத்ரம், அத்புதம், ஶ்ருங்காரம், ஹாஸ்யம், வீரம், தயை, பயானகம், பீபத்ஸம், சாந்தம், ப்ரேமபக்தி எனப் பத்துவிதங்களான ரஸங்கள் சொல்லப்பட்டன. அவையாவன—मल्लानामशनिः என்றதால் ரௌத்ர ரஸமும், नृणां नरवरः என்றதால் அத்புத ரஸமும், स्त्रीणां स्मरो मूर्तिमान् என்றதால் ஶ்ருங்கார ரஸமும், गोपानां स्वजनः என்றதால் ஹாஸ்ய ரஸமும், असतां क्षितिभुजां शास्ता என்றதால் வீர ரஸமும், स्वपित्रोः शिशुः என்றதால் தயா ரஸமும், मृत्युर्भोजपतेः என்றதால் பயானக ரஸமும், विराडविदुषाम् என்றதால் பீபத்ஸ ரஸமும், तत्त्वं परं योगिनाम् என்றதால் சாந்த ரஸமும், वृष्णीनां परदेवता என்றதால் ப்ரேமையுடன் கூடின பக்தி ரஸமும் சொல்லப்பட்டன என்றும்.

विजे नृप ॥ १८॥ तौ रेजतू रङ्गगतौ महाभुजौ विचित्रवेषाभरणस्रगम्बरौ। यथा नटावुत्तमवेषधारिणौ मनः क्षिपन्तौ प्रभया निरीक्षताम् ॥ १९ ॥ निरीक्ष्य तावुत्तमपूरुषौ जना मञ्चस्थिता नागरराष्ट्रका नृप। प्रहर्षवेगोत्कलितेक्षणानना: पपुर्न तृप्ता नयनैस्तदाननम् ॥ २० ॥ पिबन्त इव चक्षुर्भ्यां लिहन्त इव जिह्वया। जिघ्रन्त इव नासाभ्यां श्लिष्यन्त इव बाहुभि:॥ २१ ॥ ऊचुः परस्परं ते वै यथादृष्टं यथा श्रुतम्। तद्रूपगुणमाधुर्यप्रागल्भ्यस्मारिता इव ॥२२॥ एतौ भगवतः साक्षाद्धरेर्नारायणस्य हि। अवतीर्णाविहांशेन वसुदेवस्य वेश्मनि ॥ २३ ॥ एष वै किल देवक्यां जातो नीतश्च गोकुलम्।

---

மிக்கத் தைரியமுள்ளவனுயினுங்கூட குவலயா பீடம் என்ற யானை கொல்லப்பட்டதையும், அவர்கள் ஜயிக்கமுடியாதவர்களாக இருப்பதையும் கண்டு அப்பொழுது மிக்கப்பயந்தவனுக ஆனன். (18) மல்ல யுத்தசாலையையடைந்தவர்களும், பெரியதோளுள்ளவர்களும், விசித்திரமான வேஷம், ஆபரணம், மாலை, வஸ்திரம், இவற்றையுடையவர்களுமான அவ்விருவரும் சிறந்த வேஷத்தைத்தரிக்கின்றவர்களான நடர்கள் போலக் காந்தியினுல் பார்க்கின்றவர்களின் மனத்தைக் கவருகின்றவர்களாக விளங்கினர். (19) ஹே ந்ருப! மஞ்சத்திலிருக்கின்ற நகர வாஸிகளும், தேசவாஸிகளுமான ஜனங்கள் உத்தம புருஷர்களான அவ்விருவரையும் பார்த்து ஸந்தோஷத்தின் வேகத்தினுல் மலர்ந்த கண், முகம் இவற்றையுடையவர்களாகவாகிக் கண்களினுல் அவர்களின் முகத்தைப்பார்த்துத் திருப்தியையடைந்தனரில்லை. (20) கண்களினுல் குடிப்பவர்கள் போலும், நாக்கினுல் நக்குகின்றவர்கள் போலும், மூக்கினுல் முகருகின்றவர்கள் போலும், தோள்களினுல் தழுவிக்கொள்ளுகின்றவர்கள் போலும் காணப்பட்டவர்களாய் நேரில் காணப்பட்ட தனுர்பங்கத்துக்கொத்தபடியும், காதினுல் கேட்கப்பட்ட கோவர்தனேத்தாரணத்துக்கொத்தபடியும், அவர்களுடைய யானைத்தந்தத்துடன் கூடின ரூபம், சௌர்யாதியான குணம், சிரிப்பு, வார்த்தை முதலியவற்றின் இனிப்பு, தைரியம் இவற்றினுல் நினைவூட்டப்பட்டவர் போல் ஒருவருக்கொருவர் சொல்லிக்கொள்ளத் தலைப்பட்டனர். (21-22) இவர்கள் பகவானும் ஹரியுமான நாராயணனுடைய அம்சத்தினுல் இங்கு நேரில் வஸு-

कालमेतं वसन्गूढो ववृधे नन्दवेश्मनि ॥ २४ ॥ पूतनानेन नीतान्तं चक्रवातश्च दानवः। अर्जुनौ गुह्यकः केशी धेनुकोऽन्ये च तद्विधाः॥२५॥ गावः सपाला एतेन दावाग्नेः परिमोचिताः। कालियो दमितः सर्प इन्द्रश्च विमदः कृतः॥ २६ ॥ सप्ताहमेकहस्तेन धृतोऽद्रिप्रवरोऽमुना। वर्षवाताशनिभ्यश्च परित्रातं च गोकुलम् ॥ २७ ॥ गोप्योऽस्य नित्यमुदितहसितप्रेक्षणं मुखम्। पश्यन्त्यो विविधांस्तापांस्तरन्ति स्माश्रमं मुदा ॥ २८ ॥ वदन्त्यनेन वंशोऽयं यदोः सुबहुविश्रुतः। श्रियं यशो महत्त्वं च लप्स्यते परिरक्षितः॥ २९ ॥ अयं चास्याग्रजः श्रीमान्रामः कमललोचनः। प्रलम्बो निहतो येन वत्सको ये बकादयः ॥ ३० ॥

---

தேவருடைய வீட்டில் அவதரித்தவர்களன்றோ? (23) இந்தக் கிருஷ்ணனே தேவகியினிடம் பிறந்து கோகுலத்துக்குக் கொண்டுபோகப் பட்டவனாய் இவ்வளவுகாலம் மறைந்து வஸித்து நந்தகோபருடைய வீட்டில் வளர்ந்து வந்தான். (24) இந்தக் கிருஷ்ணனால் பூதனை நாசஞ்செய்யப்பட்டாள். சுழற்காற்று ரூபமான அஸுரன் கொல்லப் பட்டான். மருதை மரங்களும், சங்கசூடனும், கேசி என்ற அஸுர னும், அவன்போன்ற அகாஸுரன் முதலியோரும் கொல்லப்பட்ட னர். (25) இந்தக் கிருஷ்ணனால் கோபாலர்களுடன் கூடின பசுக் கள் காட்டுத்தீயினின்றும் விடுவிக்கப்பட்டன. காளியன் என்ற பாம்பும் அடக்கப்பட்டது. இந்திரனும் கொழுப்பற்றவனாகச் செய் யப்பட்டான். (26) இந்தக் கிருஷ்ணனால் ஏழு நாள் முழுதும் ஒரே கையினால் சிறந்த கோவர்த்தன மலையானது தூக்கப்பட்டது. மழை, காற்று, இடி இவற்றினின்றும் கோகுலமானது காப்பாற்றப் பட்டது. (27) கோபிகைகள் எப்பொழுதும் ஸந்தோஷத்தை யடைந்ததும், புன்சிரிப்புள்ள பார்வையையுடையதுமான இவரு டைய முகத்தைப் பார்க்கின்றவர்களாய் ஸந்தோஷத்துடன் ச்ரம மின்றிப் பற்பல கஷ்டங்களையும் கடந்தனர். (28) இவரால் பல வழியிலும் ரக்ஷிக்கப்பட்ட யதுவின் வம்சமானது நன்கு ப்ரஸித்தி பெற்றதாய்க்கொண்டு ஐஶ்வரியத்தையும், யசஸ்ஸையும், மஹத்வத் தையும் அடையப்போகின்றது என்றும் சொல்லுகின்றனர். (29) ஸ்ரீமானும், கமலக்கண்ணனுமான இந்தப் பலராமன் இந்தக் கிருஷ்

जनेष्वेवं ब्रुवाणेषु तूर्येषु निनदत्सु च। कृष्णरामौ समाभाष्य चाणूरो वाक्यमब्रवीत् ॥ ३१ ॥ हे नन्दसूनो हे राम भवन्तौ वीरसंमतौ। नियुद्ध-कुशलौ श्रुत्वा राज्ञाहूतौ दिदृक्षुणा ॥ ३२ ॥ प्रियं राज्ञः प्रकुर्वन्त्यः श्रेयो विन्दन्ति वै प्रजाः। मनसा कर्मणा वाचा विपरीतमतोऽन्यथा ॥ ३३ ॥ नित्यं प्रमुदिता गोपा वत्सपाला यथा स्फुटम्। वनेषु मल्लयुद्धेन क्रीडन्त-श्चारयन्ति गाः ॥ ३४ ॥ तस्माद्राज्ञः प्रियं यूयं वयं च करवामहे। भूतानि नः प्रसीदन्ति सर्वभूतमयो नृपः ॥ ३५ ॥ तन्निशम्याब्रवीत्कृष्णो देशका-लोचितं वचः। नियुद्धमात्मनोऽभीष्टं मन्यमानोऽभिनन्द्य च ॥ ३६ ॥ प्रजा

---

னுடைய தமையனுவான். இந்தப் பலராமனுல் ப்ரலம்பன் கொல்லப்பட்டான். வத்ஸாஸுரன் கொல்லப்பட்டான். *பகன் முதலிய அஸுரர்களும் கொல்லப்பட்டனர். (30) ஜனங்கள் இவ்விதம் சொல்லும்பொழுதும், தூர்யம் என்ற வாத்யங்கள் சப்திக்கும்பொழுதும், சாணூரன் ராம கிருஷ்ணர்களையழைத்து வார்த்தையைச் சொல்லவாரம்பித்தான். (31)

ஹே நந்தஸூநோ! ஹே பலராம! நீங்களிருவரும் வீரர்களாலொப்பப்பட்டவர்களென்றும், கைச்சண்டையில் தேர்ந்தவர்களென்றும் கேட்டு அதை நேரில் பார்க்கவெண்ணங்கொண்ட போஜ ராஜனுல் அழைக்கப்பட்டீர்கள். (32) மனத்தினுலும், கர்மத்தினுலும், வாக்கினுலும் அரசனுக்குப்ரியத்தைச்செய்கின்ற ப்ரஜைகளே க்ஷேமத்தையடைகின்றனர். மாறுனவர்கள் நாசத்தைபடைகின்றனர். (33) இடையர்களும், கன்றுமேய்ப்பவர்களும், எப்பொழுதும் மிக்கச் சந்தோஷத்தையடைந்தவர்களாய்க் காடுகளில் மல்ல யுத்தத்துடன் உள்ளபடி விளையாடிக்கொண்டு பசுக்களை மேய்க்கின்றனர் என்பது வெளிப்படை. (34) ஆனதுபற்றி நீங்களும், நாமும் அரசனுக்கு ப்ரியத்தைச் செய்வோமாக. அரசன் ஸர்வபூதமயனுகையிருப்பதால் பூதங்கள் யாவும் நம்விஷயத்தில் ப்ரீதியுள்ளனவாகவுமாகும். (35) ஸ்ரீகிருஷ்ணன் அதைக்கேட்டு கைச்சண்டையைத் தனக்கு இஷ்டமானதாக என்னுகின்றவராய் ஸந்தோஷித்துக்

---

* பகனைக்கொன்றது ஸ்ரீ கிருஷ்ணனுயினும் உண்மையறியாது ஜனங்கள் மாற்றிக்கூறிக்கொண்டனர் என்று கொள்ளவும்.

भोजपतेरस्य वयं चापि वनेचराः। करवाम प्रियं नित्यं तन्नः परमनुग्रहः॥ ३७॥ बाला वयं तुल्यबलैः क्रीडिष्यामो यथोचितम्। भवेन्नियुद्धं माऽधर्मः स्पृशेन्मल्लसभासदः॥ ३८॥ चाणूर उवाच—न बालो न किशोरस्त्वं बलश्च बलिनां वरः। लीलयेभो हतो येन सहस्रद्विपसत्त्वभृत्॥ ३९॥ तस्माद्भवद्भ्यां बलिभिर्योद्धव्यं नाऽनयोऽत्र वै। मयि विक्रम वार्ष्णेय बलेन सह मुष्टिकः॥ ४०॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्धे कुवलयापीडवधो रङ्गभूमिप्रवेश निरूपणं नाम त्रिचत्वारिंशोऽध्यायः॥ ४३॥



---

கொண்டு தேசம், காலம் இவற்றுக்குப் பொருத்தமான வார்த்தையைச் சொல்லத்தொடங்கினர். (36) இந்த ப்ரஜைகளும், காட்டில் ஸஞ்சரிக்கின்றவர்களான நாமும் இந்தப் போஜராஜனுக்கு எப்பொழுதும் ப்ரியத்தைச் செய்வோமாக. அது நமக்கு மேலான அனுக்ரஹமன்றோ. (37) இளம் வயதுள்ளவர்களான நாங்கள் எங்களுக்கொத்த பலமுள்ளவர்களுடன் விளையாடப்போகின்றோம். அப்பொழுதுதான் பொருத்தத்துக்கொத்ததான கைச்சண்டை ஏற்பட்டதாகவாகும் மல்லர்களின் சபையிலுள்ளவர்களை அதர்மம் ஸம்பந்திக்காமலுமிருக்கும். (38) சாணூரன் சொல்லலுற்றான்—ஆயிரம் யானையின் வலுவுள்ளதான குவலயாபீடமென்றயானையானது எந்த உன்னால் விளையாட்டாகக் கொல்லப்பட்டதோ அந்த நீபாலனன்று. பலசாலிகளுள் சிறந்தபலராமன் இளம்வயதுள்ளவனுமன்று. (39) ஆகவே பலமுள்ளவர்களுடன் நீங்களிருவரும் கைச்சண்டையிடலாம். இவ்விஷயத்தில் அன்னியாயமேற்படவே மாட்டாது. ஹே கிருஷ்ண! நீ என்னிடத்தில் சண்டைக்குவா. முஷ்டிகன் பலராமனுடன் சண்டையிடட்டும் என்றான். (40) (எ—று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவதமஹாபுராண தசமஸ்கந்த பூர்வார்த்தத்தில்
குவலாபீடவதம், ரங்கபூமிப்ரவேசநிரூபணம் என்ற
நாற்பத்துமூன்றாவது அத்தியாயம் முற்றிற்று.



## अथ चतुश्चत्वारिंशोऽध्यायः ॥

श्रीशुक उवाच—एवं चर्चितसङ्कल्पो भगवान्मधुसूदनः। आससादाथ चाणूरं मुष्टिकं रोहिणीसुतः॥ १ ॥ हस्ताभ्यां हस्तयोर्बद्ध्वा पद्भ्यामेव च पादयोः। विचकर्षतुरन्योन्यं प्रसह्य विजिगीषया ॥ २ ॥ अरत्नी द्वे अरत्निभ्यां जानुभ्यां चैव जानुनी। शिरः शीर्ष्णोरसोरस्तावन्योन्यमभिजघ्नतुः॥ ३ ॥ परिभ्रमणविक्षेपपरिरम्भावपातनैः। उत्सर्पणापसर्पणैश्चान्योन्यं प्रत्यरुन्धताम् ॥ ४ ॥ उत्थापनैरुन्नयनैश्चालनैः स्थापनैरपि।

---

## நாற்பத்து நான்காவது அத்தியாயம்.

(அ-கை) चतुश्चत्वारिंशके तु मल्लकंसादिमर्दनम् ।
कंसयोषित्समाश्वासस्ताभ्यां पित्रोश्च दर्शनम् ॥ १ ॥

(க-ரை) சாணூராதிகளான மல்லர்கள், கம்ஸன் முதலியோர் இவர்களைக் கொல்லல், கம்ஸனின் ஸ்திரீகளைத்தேற்றல், ராம கிருஷ்ணர்களால் தேவகீ வாஸுதேவர்களின் தர்சனம் ஆகிய இவை இந்த நாற்பத்துநான்காவது அத்தியாயத்திலுபதேசிக்கப்படுகின்றன.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்—இவ்விதம் நிச்சிதமான ஸங்கல்பத்தையுடையவரும் மதுஸூதனனுமான பகவான் பிறகு சாணூரனையும், ரோஹிணீ புத்திரரான பலராமன் முஷ்டிகனையும் எதிர்த்தனர். (1) கைகளினால் கைகளிலும், கால்களினால் கால்களிலுமே கட்டி ஜயிக்கவேண்டுமென்ற எண்ணத்துடன் ஒருவருக்கொருவர் வலுவாக இழுத்துக்கொண்டனர். (2) அரத்நிகளால் இரண்டு *அரத்நிகளையும், முழங்கால்களினால் முழங்கால்களையும், தலையினால் தலையையும், மார்பினால் மார்பையும் ஒருவருக்கொருவர் முட்டிக் கொண்டனர். (3) கைகளில் பிடித்துச் சுற்றுதல், பின்னுக்குத் தள்ளுதல், தோள்களினால் தோள்களை மோதல், கீழில் தள்ளுதல், விட்டு விட்டு முன்னாலோடல், பின்பாகத்திலோடல் இவற்றால் ஒருவரையொருவர் தாக்கினர். (4) முழங்கால்களையும் பாதங்களையும் மடக்கிக்கொண்டு கீழ்விழுந்தவனைப் பெயர்த்துத்தள்ளல், கிழுட்

---

* கைவிரல்களை நீட்டிக்கொண்டு ஒருவர் கையை மற்றவர் பிடித்தனர் என்று கருத்து.

परस्परं जिगीषन्तावपचक्रतुरात्मनः ॥ ५ ॥ तद्बलाबलवद्युद्धं समेताः सर्वयोषितः। ऊचुः परस्परं राजन्सानुकम्पा वरूथशः॥६॥ महानयं बताधर्म एषां राजसभासदाम्। ये बलाबलवद्युद्धं राज्ञोऽन्विच्छन्ति पश्यतः ॥ ७ ॥ क्व वज्रसारसर्वाङ्गौ मल्लौ शैलेन्द्रसन्निभौ। क्व चातिसुकुमाराङ्गौ किशोरौ नाप्तयौवनौ ॥ ८ ॥ धर्मव्यतिक्रमो ह्यस्य समाजस्य ध्रुवं भवेत्। यत्राधर्मः समुत्तिष्ठेन्न स्थेयं तत्र कर्हिचित् ॥९॥ न सभां प्रविशेत्प्राज्ञः सभ्यदोषाननुस्मरन्। अब्रुवन्विब्रुवन्नज्ञो नरः किल्बिषमश्नुते ॥ १० ॥ वल्गतः शत्रु-

---

கார்ந்தவனை கைகளினால் உயரக்கிளப்புதல், கழுத்தில் கட்டிக்கொண்டவனை உதறுதல், கைகால்களைப் பிண்டமாக்குதல், இவற்றாலும் ஒருவரையொருவர் ஜயிக்கவெண்ணங்கொண்டவர்களாய் தேஹத்தைப் பிடித்தனர். (5) ஹேராஜன்! பலமுள்ளவனுக்கும் பலமற்றவனுக்கும் நடக்கும் அந்தச் சண்டையைக் கண்டு கூடியிருந்த எல்லாஸ்திரீகளும் தயையுடன் கூடினவர்களாய்க் கொண்டு “பலமுள்ளவனுக்கும் பலமற்றவனுக்கும் நிகழ்ந்த யுத்தத்தை அரசன் பார்ப்பானாயின் ஸபையிலுள்ளோர்களால் அரசன் தடுக்கப்பட வேண்டுவது அவச்யமானது. இவ்விதமிருக்க அரசன் பார்க்குங்கால் ஸபையிலுள்ளோர்கள் இதை ஸம்மதிக்கின்றனர் என்பது யாதுன்டோ இது இந்த ராஜஸபையிலிருக்கின்றவர்களுக்குப்பெரிய அதர்மமாகும். இது வெகுகஷ்டம்”. என ஒருவருக்கொருவர் கூட்டமாகச் சொல்லத் தலைப்பட்டனர். (6–7) வஜ்ரம்போலக் கடினமான ஸர்வாங்கங்களையுமுடையவர்களும், பெரியமலைக் கொப்பானவர்களுமான மல்லர்கள் எங்கே? மிக்கச்சுகுமாரமான அங்கங்களையுடையவர்களும் யௌவனத்தையடையாதவர்களுமான குழந்தைகள் எங்கே? (8) இக்கூட்டத்துக்குத் தர்மநாசம் வருவதுநிச்சயம். எங்கு அதர்மம் ஏற்படுமோ அங்கு ஒருபொழுது மிருக்கலாகாது. (9) ஸபையிலுள்ளவர்க்குவரும் தோஷங்களை மனத்தால் எண்ணும் புத்திமான் ஸபையில் பிரவேசிக்கமாட்டான். தோஷமென்றறிந்தும் அதைச்சொல்லாதவனும், தோஷத்தைக்குணமாகச் சொல்லுகின்றவனும், எனக்கு ஒன்றுமே தெரியாது என்கின்றவனுமான மனிதன் பாபத்தையடைவான். (ஆதலாற்றான் புத்திமான் அங்கு ப்ரவேசிப்பதில்லை.) (10)

मभितः कृष्णस्य वदनाम्बुजम्। वीक्ष्यतां श्रमवार्युप्तं पद्मकोशमिवांबुभिः ॥११॥ किं न पश्यत रामस्य मुखमाताम्रलोचनम्। मुष्टिकं प्रति सामर्षं हाससंरम्भशोभितम् ॥ १२ ॥ पुण्या बत व्रजभुवो यदयं नृलिङ्गगूढः पुराणपुरुषो वनचित्रमाल्यः। गाः पालयन्सहबलः क्वणयंश्च वेणुं विक्रीडयाऽञ्चति गिरित्ररमार्चिताङ्घ्रिः॥१३॥ गोप्यस्तपः किमचरन्यदमुष्य रूपं लावण्यसारमसमोर्ध्वमनन्यसिद्धम्। दृग्भिः पिबन्त्यनुसवाभिनवं दुरापमेकान्तधाम यशसः श्रिय ऐश्वरस्य ॥१४॥ या दोहनेऽवहनने मथनोपलेपप्रेङ्खे-

---

சத்துருவுக்கு நாலாபக்கத்திலும் துள்ளிக்குதிக்கின்ற கிருஷ்ணனுடைய முகாம்புஜமானது ஜலங்களினால் தாமரைபுஷ்பமானதுபோல வியர்வையினால் நனைந்திருக்கிறது பாருங்கள். (11) ஸ்வல்பம் சிவந்த கண்களையுடையதும் முஷ்டிகனைக்குறித்துக் கோபங்கொண்டதும் சிரிப்பினுலுண்டான ஆவேசத்தினுல் விளங்குகின்றதுமான பலராமனுடைய முகத்தை நீங்கள் பார்க்கவில்லையா? (12) எந்தப் பூப்பிரதேசங்களில் மனுஷ்ய தேஹத்தினல் மறைக்கப்பட்டவனும், புராண புருஷனுமான இந்தக் கிருஷ்ணன் காட்டிலுள்ள விசித்திரமான மாலைகளை யணிந்தவனாய்க்கொண்டும், பலராமனுடன் கூட பசுக்களை மேய்த்துக்கொண்டும், வேணுவை வாசித்துக்கொண்டும், மஹாதேவன் மஹாலக்ஷ்மீ இவர்களாற் பூஜிக்கப்பட்ட சரணங்களையுடையவனாய்க்கொண்டும், லீலையுடன் ஸஞ்சரித்தானோ அந்தக் கோகுலத்தையொட்டியுள்ள பூப்பிரதேசங்கள் வெகு புண்ணியமுள்ளனவாகும்.* (13) எந்தக் கோபிகைகள் லாவண்யத்தினுல் சிறந்ததும், ஒப்புயர்வற்றதும், இயற்கையிலமைந்ததும், ஒவ்வொரு நிமிஷத்திலும் புதிது புதிதாகத் தோற்றுகின்றதும், அடைதற்கரிதானதும், யசஸ்ஸுக்கும், காந்திக்கும், ஐஸ்வரியத்துக்கும் முக்கியமான உறைவிடமானதுமான இந்தக் கிருஷ்ணனுடைய ஸ்ரீமூர்த்தியை நேத்திரங்களினுல் பானஞ்செய்த

---

* இந்த ஸபையை நிந்திக்கவேண்டும். இங்கு ஸ்ரீ கிருஷ்ணன் பரிபவத்தையன்றோ அடைகிறுர். கோகுலத்தைச் சுற்றியுள்ளவிடங்களிலோ பற்பல விளையாட்டுடன் ஆனந்தமாக ஸஞ்சரித்தார். ஆனது பற்றி அவைகளே புண்ணியஞ்செய்தனவாகும் எனச் சிலர் எண்ணினர்.

नार्भरुदितोक्षणमार्जनादौ। गायन्ति चैनमनुरक्तधियोऽश्रुकण्ठ्यो धन्या व्रजस्त्रिय उरुक्रमचित्तयानाः॥ १५॥ प्रातर्व्रजाद्व्रजत आविशतश्च सायं गोभिः समं क्वणयतोऽस्य निशम्य वेणुम्। निर्गम्य तूर्णमबलाः पथि भूरिपुण्याः पश्यन्ति सस्मितमुखं सदयावलोकम्॥ १६॥

एवं प्रभाषमाणासु स्त्रीषु योगेश्वरो हरिः। शत्रुं हन्तुं मनश्चक्रे भगवान्भरतर्षभ॥ १७॥ सभयाः स्त्रीगिरः श्रुत्वा पुत्रस्नेहशुचातुरौ। पितरावन्वतप्येतां पुत्रयोरबुधौ बलम्॥ १८॥ तैस्तैर्नियुद्धविधिभिर्विविधै

---

னரோ, மேலும் பாக்கியசாலிகளான எந்தக் கோபிகைகள் மாடு கறக்கும்பொழுதும், நெல் குத்தும்பொழுதும், தயிர் கடையும் பொழுதும், வீட்டை மொழுகும்பொழுதும், தொட்டிலையாட்டும் பொழுதும், குழந்தைகள் அழும்பொழுதும், சாணந் தெளிக்கும் பொழுதும், வீட்டைப் பெருக்கும்பொழுதும், மற்றுமிதுபோன்ற ஸமயத்திலும், ப்ரேமை நிறைந்த சித்தமுள்ளவர்களாகவும், தழதழத்த குரலுள்ளவர்களாகவும், உருக்கிரமனை பகவானிடத்தில் சென்ற சித்தத்தினால் எல்லா விஷயங்களையுமடைந்தவர்களாகவும் ஆகி இந்தக்கிருஷ்ணனையே பாடினரோ, அதிகம் புண்ணியஞ்செய்த எந்தக்கோபிகைகள் காலையில் பசுக்களுடன் கோகுலத்தைவிட்டு வெளியேறுகின்றவரும், மாலையில் பசுக்களுடன் கூட கோகுலத்தில் பிரவேசிக்கின்றவரும், வேணுவைக் கானஞ்செய்கின்றவருமான இந்த ஸ்ரீகிருஷ்ணனுடைய வேணுகானத்தைக்கேட்டு வீட்டைவிட்டு வேகமாக வெளிவந்து வழியில் தயையுடன் கூடின பார்வையையுடைய புன்சிரிப்புள்ள முகத்தைப்பார்த்தனரோ அந்தக் கோபிகைகள் செய்த தவந்தான் என்னையோ? (14–16)

ஹே பரதர்ஷப! ஸ்திரீகள் இவ்விதம் பேசுங்கால் யோகேஸ்வரனும், ஹரியுமான பகவான் சத்துருவைக் கொல்லவெண்ணங் கொண்டார். (17) பயத்துடன் கூடின ஸ்திரீகளின் வார்த்தையைக் கேட்டு புத்திரர்களிடமுள்ள ஸ்னேஹத்தினாலேற்பட்ட சோகத்தினால் கலங்கினவர்களும், புத்திரர்களின் பலத்தையறியாதவர்களுமான தாய் தந்தையர்கள் வருத்தமுற்றனர்.(18) அச்யுதனும், சாணூரனும் பலதறப்பட்ட அந்தந்த மல்லயுத்த முறைகளினால் எவ்விதம்

रच्युतेतरौ। युयुधाते यथान्योन्यं तथैव बलमुष्टिकौ॥ १९॥ भगवद्गात्रनिष्पातैर्वज्रनिष्पेषनिष्ठुरैः। चाणूरो भज्यमानाङ्गो मुहुर्ग्लानिमवाप ह ॥ २०॥ स श्येनवेग उत्पत्य मुष्टीकृत्य करावुभौ। भगवन्तं वासुदेवं क्रुद्धो वक्षस्यबाधत॥ २१॥ नाचलत्तत्प्रहारेण मालाहत इव द्विपः। बाह्वोर्निगृह्य चाणूरं बहुशो भ्रामयन्हरिः॥ २२॥ भूपृष्ठे पोथयामास तरसा क्षीणजीवितम्। विस्रस्ताकल्पकेशस्रगिन्द्रध्वज इवापतत्॥ २३॥ तथैव मुष्टिकः पूर्वं स्वमुष्ट्याभिहतेन वै। बलभद्रेण बलिना तलेनाभिहतो भृशम्॥ २४॥ प्रवेपितः स रुधिरमुद्वमन्मुखतोऽर्दितः। व्यसुः पपातोर्व्युपस्थे वाताहत इवाङ्घ्रिपः॥ २५॥ ततः कूटमनुप्राप्तं रामः प्रहरतां वरः। अवधीलीलया

---

போர் புரிந்தனரோ அவ்விதமே பலராமனும், முஷ்டிகனும் போர் புரிந்தனர். (19) இடி விழுவதுபோலக் கொடூரங்களான பகவானுடைய காத்திரங்களின் தாக்குதல்களினால் முறிக்கப்படுகின்ற அங்கங்களையுடையவனான சாணூரன் அடிக்கடி வாட்டத்தையடைந்தான். (20) பருந்துக்கொப்பான வேகமுள்ள அந்தச் சாணூரன் கோபங்கொண்டவனாய் இரண்டு கைகளையும் சேர்த்து மடக்கிக் கொண்டு ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து பகவானான வாஸுதேவனை மார்பில் அடித்தான். (21) மாலையினாலடிக்கப்பட்ட யானைபோல அந்த அடியினால் ஹரியானவர் அசைந்தாரில்லை. சாணூரனை இரு கைகளிலும், கெட்டியாகப் பிடித்துக்கொண்டு வெகுவாகச் சுழற்றுகின்றவராய் உயிரையிழந்த அவனை வலுவாகத் தரையில் அறைந்தார். நழுவின ஆபரணம், தலையிலுள்ள மாலை இவற்றையுடையவனாய் *இந்திரத்வஜம்போல பூமியில் விழுந்தான். (22-23) அவ்விதமே அந்த முஷ்டிகனும் முன்னர் தனது முஷ்டியினாலடிக்கப்பட்டவரும், பலசாலியுமான பலராமனால் கையினாலடிக்கப்பட்டவனும், மிகவும் ஆட்டமெடுத்தவனும், பிடிக்கப்பட்டவனும், வாயினின்றும் ரக்தத்தைக் கக்குகின்றவனும் கொண்டு உயிரையிழந்தவனாய்

---

* இந்திரத்வஜம்—வஜ்ரம். அல்லது கௌடர்கள் ஏதோ ஒரு உத்ஸவத்தில் புருஷனுடைய உருவமுள்ளதாயும், கொடியினால் அலங்கரிக்கப்பட்டதாயுமுள்ள பெரிய ஸ்தம்பம் ஒன்றை நாட்டுகின்றனர். அது இந்திரத்வஜம் எனப்படும்.

राजन्सावशं वाममुष्टिना ॥ २६ ॥ तर्ह्येव हि शलः कृष्णपदापहतशीर्षकः। द्विधाविदीर्णस्तोशलक उभावपि निपेततुः॥ २७॥ चाणूरे मुष्टिके कूटे शले तोशलके हते। शेषाः प्रदुद्रुवुर्मल्लाः सर्वे प्राणपरीप्सवः॥ २८॥ गोपान्वयस्यानाकृष्य तैः संसृज्य विजह्रतुः। वाद्यमानेषु तूर्येषु वल्गन्तौ रुतनूपुरौ॥ २९॥ जनाः प्रजहृषुः सर्वे कर्मणा रामकृष्णयोः। ऋते कंसं विप्रमुख्याः साधवः साधुसाध्विति॥ ३०॥ हतेषु मल्लवर्येषु विद्रुतेषु च भोजराट्। न्यवारयत्स्वतूर्याणि वाक्यं चेदमुवाच ह॥ ३१॥ निःसारयत दुर्वृत्तौ वसुदेवात्मजौ पुरात्। धनं हरत गोपानां नन्दं बध्नीत दुर्मतिम्॥ ३२॥

---

காற்றினாலடிக்கப்பட்ட மரம்போல பூமியின்மீது விழுந்தான். (24-25) ஹே ராஜன்! பிறகு போர்புரிபவருள் சிறந்தவரான பலராமன் கூடன் என்பவனை அடைந்து இடதுகைக்குத்தினால் அலக்ஷியமாக விளையாட்டுடன் கொன்றார். (26) அப்பொழுதே கிருஷ்ணனுடைய பாதத்தினால் போக்கப்பட்ட தலையையுடைய சலன் என்பவனும், இரண்டாகப் பிளக்கப்பட்ட தோசலகன் என்பவனும் ஆகிய இருவரும் பூமியில் விழுந்தனர். (27) சாணூரனும், முஷ்டிகனும், கூடனும், சலனும், தோசலகனும் கொல்லப்பட்டதும் எஞ்ஜியமல்லர்யாவரும் ப்ராணனைகாப்பாற்ற வெண்ணங்கொண்டவர்களாய் ஓட்டம் பிடித்தனர். (28)

அந்த ராமகிருஷ்ணர்கள் வாத்யங்கள் வாசிக்கப்படுங்கால் அதற்கேற்ப நர்த்தனஞ்செய்கின்றவர்களாகவும், சப்திக்கின்ற பாதசலங்கைகளை யுடையவர்களாகவும் கொண்டு தோழர்களான கோபாலர்களை இழுத்து அவர்களுடன் சேர்ந்துகொண்டு விளையாடினர். (29) ராமகிருஷ்ணர்களுடைய அந்தக்காரியத்தினால் கம்ஸனைத் தவிர்த்து எல்லாஜனங்களும் ஸந்தோஷித்தனர். ப்ராம்ஹணர்களை முக்கியமாகக்கொண்ட ஸாதுக்கள் நல்லது நல்லது எனக் கொண்டாடினர். (30) சிறந்த மல்லர்கள் கொல்லப்பட்டுப், ஓடியும் போனதும் போஜராஜனான கம்ஸன் தனது தூர்யவாத்தியங்களை நிறுத்திப் பின்வரும் வார்த்தையையும் சொல்லத்தொடங்கினன். (31) கெட்ட நடத்தையுள்ளவர்களான வஸுதேவனின் புத்திரர்களை பட்டினத்தினின்றும் விரட்டுங்கள். கோபாலர்களின் பணத்தைக்

वसुदेवस्तु दुर्मेधा हन्यतामाश्वसत्तमः । उग्रसेनः पिता चापि सानुगः परपक्षगः ॥ ३३ ॥

एवं विकत्थमाने वै कंसे प्रकुपितोऽव्ययः । लघिम्नोत्पत्य तरसा मञ्चमुत्तुङ्गमारुहत् ॥ ३४ ॥ तमाविशन्तमालोक्य मृत्युमात्मन आसनात् । मनस्वी सहसोत्थाय जगृहे सोऽसिचर्मणी ॥ ३५ ॥ तं खड्गपाणिं विचरन्तमाशु श्येनं यथा दक्षिणसव्यमम्बरे । समग्रहीद्दुर्विषहोग्रतेजा यथोरगं तार्क्ष्यसुतः प्रसह्य ॥ ३६ ॥ प्रगृह्य केशेषु चलत्किरीटं निपात्य रङ्गोपरि तुङ्गमञ्चात् । तस्योपरिष्टात्स्वयमब्जनाभः पपात विश्वाश्रय आत्मतन्त्रः ॥ ३७ ॥ (कंसोऽपि कृष्णेन जगत्त्रयैकनिवासभूतेन निपात्य सोऽधः । तेनात्मतन्त्रेण च पीडितोऽसूंस्तत्याज राजन्निमिषान्तरेण ॥)

---

கொன்னேயடியுங்கள். கெட்டபுத்தியுள்ள நந்தகோபனைக் கட்டுங்கள். (32) கெட்டபுத்தியுள்ளவனும் மிக்க அஸாதுவுமான வசுதேவனும், சத்துருபக்ஷத்தைச் சேர்ந்தவனும் எனதுபிதாவுமான உக்கிரசேனனும் அவனைச் சேர்ந்தவர்களுடன் கூடக் கொல்லப்படட்டும். (33) என இவ்விதம் கம்ஸன் பிதற்றுங்கால் ப்ரமமற்ற ஸ்ரீகிருஷ்ணன் கோபத்தை யடைந்தவராய் லாகவமாக உன்னதமான மஞ்சத்தில் வனுவாய்த் தாவி ஏறிக்கொண்டார். (34) தாவியோடிவருகின்ற தனது மிருத்யுவான அந்தக் கிருஷ்ணனைக் கண்டு மிக்கப் பயந்தவனுன அந்தக் கம்ஸன் ஆஸனத்தினின்றும் விரைவாக எழுந்து கத்தியையும் தோலையும் கையிலெடுத்தான். (35) கத்தியைக் கையிற்றாங்கி ஆகாசத்தில் பருந்துபோல வலசாரி இடசாரியாக வேகமாகச் சுற்றுகின்ற அந்தக் கம்ஸனைக் கருடன் பாம்பைப்போல பொறுக்க வியலாததும் உக்கிரமுமான சக்தியுள்ளவரான கிருஷ்ணன் பலாத்காரமாகப் பிடித்துக்கொண்டார். (36) கிரீடம் நழுவும்படி தலைமயிர்களில் பிடித்துக்கொண்டு உயர்ந்த மஞ்சத்திலிருந்து நர்த்தனபூமியின்மேல் தள்ளி அப்ஜநாபனும் ப்ரபஞ்சத்துக்கு ஆஶ்ரயனும் ஸ்வதந்திரனுமான ஸ்ரீகிருஷ்ணன் அவன் மேல் விழுந்தார். (37) (ஹே ராஜன்! அந்தக் கம்ஸனும் மூன்றுலகங்களுக்கும் முக்கிய இருப்பிடமானவரும் ஸ்வதந்திரருமான அந்தக் ஸ்ரீகிருஷ்ணனுல் கீழிற்றள்ளி பிடிக்கப்பட்டவனுய் நிமிஷ

**तं संपरेतं विचकर्ष भूमौ हरिर्यथेभं जगतो विपश्यतः। हाहेति शब्दः सुमहांस्तदाभूदुदीरितः सर्वजनैर्नरेन्द्र ॥ ३८ ॥ स नित्यदोद्विग्नधिया तमीश्वरं पिबन्वदन्वा विचरन्स्वपञ्छ्वसन्। ददर्श चक्रायुधमग्रतो यतस्तदेव रूपं दुरवापमाप ॥३९॥ तस्यानुजा भ्रातरोऽष्टौ कङ्कन्यग्रोधकादयः। अभ्यधावन्नभिक्रुद्धा भ्रातुर्निर्वेशकारिणः ॥ ४० ॥ तथातिरभसांस्तांस्तु संयत्तान्रोहिणीसुतः। अहन्परिघमुद्यम्य पशूनिव मृगाधिपः ॥ ४१ ॥ नेदुर्दुन्दुभयो व्योम्नि ब्रह्मेशाद्या विभूतयः। पुष्पैः किरन्तस्तं प्रीताः शशंसुर्ननृतुः स्त्रियः॥ ४२ ॥ तेषां स्त्रियो महाराज सुहृन्मरणदुःखिताः। तत्राभीयुर्वि-**

---

காலத்துக்குள் உயிரைவிட்டான்) ஹே நரேந்திர! ஸ்ரீகிருஷ்ணன் உயிரையிழந்த அவனை சிங்கமானது யானையைப்போல ஜகத்தானது பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே பூமியிலிழுத்தார். அப்பொழுது எல்லாஜனங்களாலுஞ் சொல்லப்பட்டதும் பெரிதுமான ஹா! ஹா! என்ற அந்தச் சப்தமானது உண்டாயிற்று. (38) அந்தக் கம்ஸன் எப்பொழுதும் பயந்தபுத்தியுடன் குடிக்கும்பொழுதும், பேசும்பொழுதும், ஸஞ்சரிக்கும்பொழுதும், தூங்கும்பொழுதும், மூச்சுவிடும்பொழுதும் சக்கிராயுதனும் ஈச்வரனுமான அவரை யாதுகாரணத்தால் நேரில் பார்த்தானோ அதேகாரணத்தால் அடைதற்கரிதான அதே ரூபத்தையடைந்தான். (39)

அவனுடைய பிராதாக்களான கங்கன் ந்யக்ரோதன் முதலிய எட்டுப்பேர்களும் மிக்கக்கோபத்தை யடைந்தவர்களாகவும், பிராதாவின் கடனைத்தீர்க்க வெண்ணங்கொண்டவர்களாகவுங் கொண்டு எதிர்த்து ஓடிவந்தனர். (40) அவ்விதம் அதிகம் வேகமுள்ளவர்களும் சண்டைக்கு முயர்ச்சித்தவர்களுமான அவர்களைப் பலராமன் இருப்புலக்கையைக் கையில் தூக்கிக்கொண்டு சிங்கமானது பசுக்களைப் போலக் கொன்றார். (41) ஆகாசத்தில் துந்துபிவாத்தியங்கள் முழங்கின. ப்ரம்ஹதேவன் மஹாதேவன் முதலியவிபூதிகள் (தேவதைகள்) புஷ்பங்களினலிரைக்கின்றவர்களாய் ப்ரீதியுடன் அவரைப் புகழ்ந்தனர். ஸ்திரீகள் கூத்தாடினர். (42) ஹேமஹாராஜ! அவர்களின் ஸ்திரீகள் பர்த்ருமரணத்தினல் துக்கத்தை யடைந்தவர்களாகவும், கண்ணில் ஜலத்தைவடியவிட்டுக்கொண்டும்

निघ्नन्त्यः शीर्षाण्यश्रुविलोचनाः ॥ ४३ ॥ शयानान्वीरशय्यायां पतीनालिङ्ग्य शोचतीः । विलेपुः सुस्वरं नार्यो विसृजन्त्यो मुहुः शुचः ॥ ४४ ॥ हा नाथ प्रिय धर्मज्ञ करुणानाथवत्सल । त्वया हतेन निहता वयं ते सगृहप्रजाः ॥ ४५ ॥ त्वया विरहिता पत्या पुरीयं पुरुषर्षभ । न शोभते वयमिव निवृत्तोत्सवमङ्गला ॥ ४६ ॥ अनागसां त्वं भूतानां कृतवान्द्रोहमुल्बणम् । तेनेमां भो दशां नीतो भूतध्रुक्को लभेत शम् ॥ ४७ ॥ सर्वेषामिह भूतानामेष हि प्रभवाप्ययः । गोप्ता च तदवध्यायी न क्वचित्सुखमेधते ॥ ४८ ॥ श्रीशुक उवाच—राजयोषित आश्वास्य भगवांल्लोकभावनः । यामाहुर्लौकिकीं संस्थां हतानां समकारयत् ॥ ४९ ॥ मातरं पितरं चैव मोच-

---

தலையில் அடித்துக்கொண்டும் அங்கு ஓடிவந்தனர். (43) அந்த ஸ்திரீகள் வீரர்க்குரிய படுக்கையில் படுத்திருக்கின்றவர்களான பதிகளைக் கட்டிக்கொண்டும் கண்ணீரை அடிக்கடி பெருகவிட்டுக் கொண்டும் துக்கிக்கின்றவர்களாய் நல்லகுரலுடன் அழத்தொடங்கினர். (44) ஹே நாத! ஹே ப்ரிய! ஹே தர்மக்ஞ! ஹே கருணை! ஹே அநாதவத்ஸல! கொல்லப்பட்டவனான உன்னால் உனது பத்னிகளும் ப்ரஜைகளுமான நாங்கள் கொல்லப்பட்டவர்களானோம். (45) ஹே புருஷர்ஷப! இந்தப் பட்டிணமானது பர்த்தாவான நீ இல்லாமல் நாங்கள்போலவே ஸந்தோஷம் மங்களம் இவையற்றதாய்க் கொண்டு சோபையையடையவில்லை. (46) ஹே நாத! நீ குற்றமற்றப்ராணிகளுக்கு அதிகமான த்ரோஹத்தைச்செய்தனை. அதனாற்றான் இந்த நிலையையடைந்தாய். ப்ராணிகளுக்குத் த்ரோஹஞ்செய்யும் எவன்தான் க்ஷேமத்தை யடைவான். (47) இந்தக் கிருஷ்ணனே இங்குள்ள எல்லா ப்ராணிகளையும் உத்பத்திசெய்பவனும் அழிப்பவனும் ரக்ஷிப்பவனுமாவான். அந்தக்கிருஷ்ணனை அவமதிக்கும் ஸ்வபாவமுடையவன் ஒருபொழுதும் சுகத்தை யடையமாட்டான். (48) ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—லோககர்த்தாவான பகவான் ராஜஸ்திரீகளைத் தேற்றி கொல்லப்பட்டவர்களுக்கு லோகப்ராப்திஹேதுவாக எந்த ஸம்ஸ்காரத்தைப் பெரியார் சொல்லுகின்றனரோ அதை நன்குசெய்யும்படி செய்தார். (49) பிறகு ராமகிருஷ்ணர்கள் மாதாவான தேவகியையும் பிதாவான வஸுதே

यित्वाथ बन्धनात् । कृष्णरामौ ववन्दाते शिरसाऽऽस्पृश्य पादयोः ॥५०॥ देवकी वसुदेवश्च विज्ञाय जगदीश्वरौ । कृतसंवन्दनौ पुत्रौ सस्वजाते न शङ्कितौ ॥ ५१ ॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्धे कंसादिवधनिरूपणं नाम चतुश्चत्वारिंशोऽध्यायः॥ ४४ ॥

---

வரையும் காராக்ருஹத்தினின்றும் விடுவித்து கால்களில் தலையினால் ஸ்வல்பம் தொட்டு வணங்கினர். (50) தேவகியும் வஸுதேவரும் நமஸ்காரத்தைச் செய்தவர்களான புத்திரர்களை ஜகதீஸ்வரர்களாக அறிந்து கொண்டு சங்கைகொண்டவர்களாய் ஆலிங்கனஞ்செய்து கொள்ளாதிருந்தனர். (51) (எ–று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவதமஹாபுராண தசமஸ்கந்த பூர்வார்த்தத்தில் கம்ஸாதிவதநிருபணம் என்ற நாற்பத்துநான்காவது அத்தியாயம் முற்றிற்று.

## நாராயணீயம்.

प्रातस्सन्त्रस्तभोजक्षितिपतिवचसा प्रस्तुते मल्लतूर्ये
सङ्घे राज्ञां च मञ्चानभिययुषि गते नन्दगोपेऽपि हर्म्यम् ।
कंसे सौधाधिरूढे त्वमपि सहबलः सानुगश्चारुवेषो
रङ्गद्वारं गतोऽभूः कुपितकुवलयापीडनागावलीढम् ॥ ३८८ ॥

(ப–ரை) प्रातः=மறுதினம் காலையில் सन्त्रस्तभोजक्षितिपतिवचसा=நன்கு பயந்த கம்ஸனுடைய வார்த்தையினால் मल्लतूर्ये=மல்லர்களின் க்ரீடைக்கு ஒத்த தூர்யம் என்ற வாத்யமானது प्रस्तुते=வாசிக்க ஆரம்பிக்கப்பட்டதும், राज्ञाम्=ராஜாக்களுடைய सङ्घच=கூட்டமும், मञ्चान्=ஊஞ்சல்களை (காலரிகளை) अभिययुषि=ஏறினதும் नन्दगोपेऽपि=நந்தகோபரும், हर्म्यम्=மாடியை (காலரியை எனலாம்.) गते=அடைந்ததும், कंसे=கம்ஸன் सौधाधिरूढे=மாடிபோல் உயரமான ஆஸனத்தில் ஏறினதும், त्वमपि=நீரும், सहबलः=பலராமனுடன் கூடினவராயும், सानुगः=பின்தொடர்ந்துவரும் கோபாலர்களுடன் கூடினவ

ளாயும், चारुवेष:=அழகிய வேஷமுள்ளவராயும் கொண்டு कुपितकुव-लयापीडनागावलीढप्र=கோபங்கொண்ட குவலயாபீடம் என்ற யானையினால் தடைசெய்யப்பட்ட ப்ரவேசத்தையுடையதான रङ्गद्वारम्=மல்ல யுத்தம் நடைபெறும் இடத்தின் வாயிற்படியை गत:=அடைந்தவராக अभू:=ஆனீர். (388) (எ—று)

पापिष्ठाऽपेहि मार्गाद्द्रुतमिति वचसा निष्ठुरक्रुद्धबुद्धे-
रम्बष्ठस्य प्रणोदादधिकजवजुषा हस्तिना गृह्यमाण: ।
केलीमुक्तोऽथ गोपीकुचकलशचिरस्पर्धिनं कुम्भमस्य
व्याहत्यालीयथास्त्वं चरणभुवि पुनर्निर्गतो वल्गुहासी ॥३८९॥

(ப—ரை) पापिष्ठ=மிகுந்த துஷ்டனே ! द्रुतम्=வேகமாய் मार्गात्=வழியினின்றும் अपेहि=போ इति=என்ற वचसा=உமது வார்த்தையினால் निष्ठुरक्रुद्धबुद्धे:=இயற்கையிலேயே கொடூரத் தன்மையுள்ளதாயும், தற்சமயம் கோபமடைந்ததாயுமிருக்கின்ற புத்தியையுடையவனை अम्बष्ठस्य=யானைப்பாகனுடைய प्रणोदात्=தூண்டுதலால் अधिकजवजुषा=மிகுந்த வேகத்தையடைந்த हस्तिना=யானையினால் गृह्यमाण:=பிடிக்கப்படுகின்றவராயும், अथ=பிறகு केलीमुक्त:=விளையாட்டாகவே யானையின் துதிக்கையினின்றும் நழுவினவராயுமிருக்கின்ற त्वम्=நீர் अस्य=இந்த யானையினுடைய गोपीकुचकलशचिरस्पर्धिनम्=கோபிகையின் ஸ்தனகும்பத்தோடு வெகுகாலமாய் பொறாமை கொண்ட कुम्भम्=மஸ்தகத்தை व्याहत्य=கையினால் குத்தி चरणभुवि=அந்த யானையின் நான்கு கால்களுக்குமிடையில் अलीयथा:=பதுங்கினீர். पुन:=மறுபடியும் वल्गुहासी=அழகாய் சிரித்துக்கொண்டு निर्गत:=வெளிவந்தீர். (389) (எ—று)

हस्तप्राप्योऽप्यगम्यो झटिति मुनिजनस्येव धावन् गजेन्द्रं
क्रीडन्नापत्य भूमौ पुनरभिपततस्तस्य दन्तं सजीवम् ।
मूलादुन्मूल्य तन्मूलगमहितमहामौक्तिकान्यात्ममित्रे
प्रादास्त्वं हारमेभि:र्ललितविरचितं राधिकायै दिशेति ॥

(ப—ரை) हस्तप्राप्योऽपि=துதிக்கையினால் தொடக்கூடியவராயினும் கூட मुनिजनस्येव=ருஷிஜனத்துக்குப்போல अगम्य:=பிடிக்க முடியாதவராய் झटिति=வேகமாய் गजेन्द्रम्=யானைக்கு நான்கு பக்கங்களிலும் धावन्=ஓடிக்கொண்டு क्रीडन्=விளையாடுகின்ற त्वम्=நீர்

भूमौ=பூமியில் आपत्य=விழுந்து पुन:=பிறகு अभिपतत:=தந்தங்களால் பூமியில் குத்துகின்ற तस्य=அந்த யானையினுடைய दन्तम्=தந்தத்தை मूलात्=வேருடன் सजीवम्=உயிருடன் கூட उन्मूल्य=பிடுங்கி तन्मूलगमहितमहामौक्तिकानि=அந்த தந்தத்தின் அடிபாகத்திலிருந்த சிறந்த பெரிய முத்துகளை एभि:=இந்த முத்துக்களால் ललितविरचितम्=அழகாகத் தயாரிக்கப்பட்ட हारम्=மாலையை राधिकायै=ராதைக்கு दिश=கொடு इति=என்று (उक्त्वा=சொல்லி) आत्ममित्रे=தனது ஸ்னேஹிதனை ஸ்ரீதாமாவினிடம் प्रादा:=கொடுத்தீர். (390)

गृह्णानन्दन्तमंसे युतमथ हलिना रङ्गमङ्गाऽऽविशन्तं
त्वां मङ्गल्याङ्गभङ्गीरभसहृतमनोलोचना वीक्ष्य लोका:
हंहो धन्यो नु नन्दो नहि नहि पशुपालाङ्गना नो यशोदा
नो नो धन्येक्षणा: स्मस्त्रिजगति वयमेवेति सर्वे शशंसु: ॥

(ப-ரை) अङ्ग=ஹே கிருஷ்ணா! अथ=பிறகு दन्तम्=தந்தத்தை अंसे=தோளில் गृह्णानम्=தரிப்பவரும் हलिना=பலராமனுடன் युतम्=கூடினவரும், रङ्गम्=மல்லயுத்தம் நடைபெறுமிடத்தை आविशन्तम्=பிரவேசிப்பவருமான त्वाम्=உம்மை मङ्गल्याङ्गभङ्गीरभसहृतमनोलोचना:=சோபனமான சரீரத்தின் அமைப்பினுல் வேகமாய் இழுக்கப்பட்ட மனது, கண் இவற்றையுடையவர்களான लोका:=ஜனங்கள் वीक्ष्य=பார்த்து हंहो=ஹே ஜனங்களே नन्द:=நந்தகோபர் धन्य:=பாக்கியம் செய்தவர். नु=நிச்சயம். नहि नहि=இல்லை, இல்லை. पशुपालाङ्गना:=கோபிகைகள் (धन्या:=பாக்கியசாலிகள்) नो=அவர்களும் பாக்கியசாலிகளில்லை. यशोदा=யசோதை धन्या=பாக்கியம் செய்தவள். नो नो=அவளும் பாக்கியசாலியில்லை. அவளும் பாக்கியசாலியில்லை. त्रिजगति=மூன்று லோகத்திலும் वयमेव=நாம்தான் धन्येक्षणा:, स्म:=பாக்கியம் செய்த கண்ணுள்ளவர்களாகவிருக்கிறோம். इति=என்று सर्वे=யாவரும் शशंसु:=ஸ்துதித்தனர். (391) (எ-று)

पूर्णं ब्रह्मैव साक्षान्निरवधिपरमानन्दसान्द्रप्रकाशं
गोपेषु त्वं व्यलासीर्न खलु बहुजनैस्तावदावेदितोऽभू:।
दृष्ट्वाथ त्वां तदेदं प्रथममुपगते पुण्यकाले जनौघा:
पूर्णानन्दा विपापा: सरसमभिजगुस्त्वत्कृतानि स्मृतानि ॥

(ப-ரை) पूर्णम्=எங்கும் நீக்கமற நிறைந்திருக்கின்றதும் निरवधिपरमानन्दसान्द्रप्रकाशम्=நித்யமாயும், பரமானந்த ரூபமாயும்,

விக்ஞானகனமாயும், साक्षात्=நிருபாதிகமாயுமிருக்கின்ற ब्रह्मैव=ப்ரம்ஹமாகிவே त्वम्=நீர் गोपेषु=கோபாலர்களிடத்தில் व्यलासीः=விளங்கினீர். (अथापि=ஆயினும்) बहुजनैः=அநேகம் ஜனங்களால் तावत्=அவ்வளவாக—அதாவது: நிருபாதிகப்ரம்ஹமாக आवेदितः=அறியப்பட்டவராக नाभूः=ஆகவில்லை. खलु=இது நிஸ்சயம். अथ=பிறகு पुण्यकाले=புண்ய பரிபாககாலமானது उपगते=வந்தபொழுது जनौघाः=மற்ற ஜன ஸமூஹங்கள் त्वाम्=உம்மை इदं प्रथमम्=இதே முதலாக दृष्ट्वा=பார்த்து तदा=அப்பொழுது विपापाः=பாபமற்றவர்களாயும், पूर्णानन्दाः=நிறைந்த ஆனந்தத்தையுடையவர்களாயும் கொண்டு स्मृतानि=நினைக்கப்பட்ட त्वत्कृतानि=உம்மால் செய்யப்பட்ட லீலைகளை सरसम्=ஆனந்தத்துடன் अभिजगुः=கானஞ்செய்தனர். (392)

चाणूरो मल्लवीरस्तदनु नृपगिरा मुष्टिको मुष्टिशाली
त्वां रामं चाभिपेदे झटझटिति मिथो मुष्टिपातातिरूक्षम्।
उत्पातापातनाकर्षणविविधरणान्यासतां तत्र चित्रं
मृत्योः प्रागेव मल्लप्रभुरगमदयं भूरिशो बन्धमोक्षान् ॥ ३९३ ॥

(ப—ரை) तदनु=பிறகு नृपगिरा=ராஜனான கம்ஸனுடைய வார்த்தையினால் मल्लवीरः=மல்லர்களுள் வீரனான चाणूरः=சாணூரன், त्वाम्=உம்மையும், मुष्टिशाली=முஷ்டியினால் விளங்குகிற मुष्टिकः=முஷ்டிகன் रामञ्च=பலராமனையும் अभिपेदे=குஸ்திச் சண்டை போடுவதற்காக வந்தடைந்தான். झटझटिति=சடசட என்று मुष्टिपातातिरूक्षम्=குத்து விழுவதால் மிகவும் பயங்கரமாக இருக்கும்படி. मिथः=ஒருவருக்கொருவர் செய்த उत्पातापातनाकर्षण विविधरणानि=மேலே கிளப்புதல், பூமியில் விழுதல், இழுத்தல் ரூபமான பலவிதமான சண்டைகள் आसताम्=இருக்கட்டும். मल्लप्रभुः=மல்லயுத்தத்தில் ஸமர்த்தனான अयम्=இந்தச் சாணூரன் तत्र=அந்த யுத்தத்தில் मृत्योः=மரணத்துக்கு प्रागेव=முன்னமேயே भूरिशः=பலதடவை बन्धमोक्षान्=பந்தமோக்ஷங்களை (கை கால்களால் கட்டுதல், விடுதல் இவற்றை) अगमत्=அடைந்தான். (इदम्=இது) चित्रम्=ஆச்சரியமாக இருந்தது. (393) (எ—று)

குறிப்பு—பந்தமோக்ஷ என்ற வார்த்தைக்கு “ஸம்ஸாரத்தினின்றும் நிவிருத்தி அதாவது: மோக்ஷம்” என்றும், “கட்டுதல் விடுதல்” என்றும் இரண்டு பொருளுண்டாகையால் இரண்டு பொ

ருவேயும் சிலேஷையினுல் ஒன்ருகக்கருதி மரணத்துக்குப் பிறகு ஏற்படப்போகின்ற பந்த நிவிருத்தியை மரணத்துக்கு முன்னமே அடைந்ததாய் வர்ணிக்கப்படுவதிலிருந்து மரணத்துக்குப் பிறகு மோக்ஷத்தையடைந்தான் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ என்ற கருத்து ஏற்படுகிறது.

हाधिक्कष्टं कुमारौ सुललितवपुषौ मल्लवीरौ कठोरौ
न द्रक्ष्यामो व्रजामस्त्वरितमिति जने भाषमाणे तदानीम् ।
चाणूरं तं कराद्भ्रामणविगलदसुं पोथयामासिथोर्व्यां
पिष्टोऽभून्मुष्टिकोऽपि द्रुतमथ हलिना नष्टशिष्टैर्दधावे ॥ ३९४ ॥

(ப—ரை) **हाधिक्कष्टम्**=ஐயோ! இது மிகுந்தகஷ்டம் **कुमारौ**=குழந்தைகள் **सुललितवपुषौ**=மிகவும் ஸுகுமாரமான சரீரத்தையுடையவர்கள். **मल्लवीरौ**=மல்ல வீரர்களான சாணூர முஷ்டிகர்கள் **कठोरौ**=மிகவும் கடின சரீரத்தையுடையவர்கள். **न द्रक्ष्यामः**=நாம் (போரைப்) பார்க்கமாட்டோம். **त्वरितम्**=வேகமாய் **व्रजामः**=ஓடிவிடுவோம். **इति**=என்று **जने**=ஜனமானது **तदानीम्**=அப்பொழுது **भाषमाणे**=பேசுங்கால் **कराद्भ्रामणविगलदसुम्** = கையினுல் சுற்றுவதால் வெளியேறின ப்ராணனையுடையவனுன **तम्**=அந்த **चाणूरम्**=சாணூரனை **उर्व्याम्**=பூமியில் **पोथयामासिथ**=அறைந்தீர். **अथ**=பிறகு **हलिना**=பலராமனுல் **मुष्टिकोऽपि**=முஷ்டிகனும், **द्रुतम्**=சீக்கிரமாய் **पिष्टः**=பொடியாக்கப்பட்டவனுக **अभूत्**=ஆனுன். **नष्टशिष्टैः**=நாசமடைந்தவர்களைக் காட்டிலும் மீதமானவர்களால் **दधावे**=ஓடப்பட்டது. (394)(ஏ—று)

कंसः संवार्य तूर्यं खलमतिरविदन् कार्यमार्यान् पितॄंस्ता-
नाहन्तुं व्याप्तमूर्तेस्तव च समशिषद्दूरमुत्सारणाय ।
रुष्टो दुष्टोक्तिभिस्त्वं गरुड इव गिरिं मञ्चमञ्चन्नुदञ्च-
त्खड्गव्यावल्गदुःसङ्ग्रहमपि च हठात्प्राग्रहीरौग्रसेनिम् ॥ ३९५ ॥

(ப—ரை) **खलमतिः**=துஷ்டமான புத்தியையுடைய **कंसः**=கம்ஸன் **तूर्यम्**=தூர்யம் என்ற வாத்தியத்தை **संवार्य**=தடுத்து **कार्यम्**=உமது காலில் விழுதல் ரூபமான கார்யத்தை **अविदन्**=அறியாதவனுய்க் கொண்டு **आर्यान्**=பூஜிக்கத்தகுந்த **तान्**=அந்த **पितॄन्**=வஸுதேவர், நந்தகோபர், உக்கிரஸேனன் முதலியவர்களை **आहन्तुम्**=கொல்லுவதற்காகவும், **व्याप्तमूर्तेः**=எங்கும் நிறைந்திருக்கின்ற சரீரத்

னையுடைய तवच=உம்முடைய दूरम्=வெகுதூரத்தில் उत्सारणायच= விரட்டுவதற்குவேண்டியும் समशिषत्=உத்தரவிட்டான். दुरोक्तिभिः= துஷ்டனை கம்ஸனுடைய வார்த்தைகளால் रुष्टः=கோபமடைந்த त्वम्=நீர் गरुडः=கருடன் गिरिमिव=மலையில் போல் मञ्चम्=ஸிம்ஹா ஸனத்தில் अञ्चन्=தாவிக்கொண்டு उदञ्चत्खड्गव्यवलगदुःसङ्ग्रहमपि= உயர்த்தூக்கப்பட்ட கத்தியின் சுழட்டலினால் பிடிக்கமுடியாதவனா யினுங்கூட हठात्=பலாத்காரமாய் औग्रसेनिम्=உக்ரஸேனனின் பிள் ளையான கம்ஸனை प्राग्रहीः=நன்கு பிடித்தீர். (395) (எ-று)

सद्यो निष्पिष्टसन्धिं भुवि नरपतिमापात्य तस्योपरिष्टात्
त्वय्यापात्ये तदैव त्वदुपरि पतिता नाकिनां पुष्पवृष्टिः।
किं किं ब्रूमस्तदानीं सततमपि भिया त्वद्गतात्मा स भेजे
सायुज्यं त्वद्वधोत्था परम परमियं वासना कालनेमेः॥

(ப-ரை) सद्यः=உடனேயே निष्पिष्टसन्धिम्=நன்கு நொறுங் கின பூட்டுகளையுடைய नरपतिम्=கம்ஸனை भुवि=பூமியில் आपात्य= தள்ளி तस्य=அந்தக் கம்ஸனுடைய उपरिष्टात्=மேலே त्वयि=நீர் आ-पात्ये=விழும்பொழுது तदैव=அப்பொழுதே त्वदुपरि=உம்மீது नाकि-नाम्=தேவர்களுடைய पुष्पवृष्टिः=பூமாரியானது पतिता=விழுந்தது. किं किं ब्रूमः=எதை எதைத்தான் சொல்லுவோம். तदानीम्=அந்த ஸமயத்தில் भिया=பயத்தினால் सततमपि=எப்பொழுதும் त्वद्गतात्मा= உம்மையடைந்த மனத்தையுடைய सः=அந்தக் கம்ஸன் सायुज्यम्= ஸாயுஜ்யத்தை भेजे=அடைந்தான். परम = ஸர்வோத்க்ருஷ்டனை ஹே க்ருஷ்ணா! कालनेमेः=காலநேமி என்ற அஸுரனுக்கு इयं वासना=இந்த வாஸனையானது (பயத்தினாலும் உம்மைப்பற்றிய இந்த நினைவானது) त्वद्वधोत्था परम्=முற்பிறவியில் உம்மால் செய்யப் பட்ட வதத்தினின்றுமுண்டானதேயாகும். இந்தக் கம்ஸனே முந் தின ஜன்மாவில் காலநேமி என்ற அஸுரனாகப்பிறந்திருந்தான். அப் பொழுதும் பகவானே அவனை ஸம்ஹாரம் செய்தார். அதுமுதல் அவனுக்கு பயத்தினால் பகவத்ஸ்மரணமே இருந்துவந்தது. அத னால் அவன் இப்பிறவியில் ஸாயுஜ்ய முக்தியை அடைந்தான் என் பது கருத்து. (396) (எ-று)

तद्भ्रातॄनष्ट पिष्ट्वा द्रुतमथ पितरौ सन्नमन्नुग्रसेनं
कृत्वा राजानमुच्चैर्यदुकुलमखिलं मोदयन् कामदानैः।

॥ अथ पञ्चचत्वारिंशोऽध्यायः ॥

श्रीशुक उवाच—पितरावुपलब्धार्थौ विदित्वा पुरुषोत्तमः । मा भूदिति निजां मायां ततान जनमोहिनीम् ॥ १ ॥ उवाच पितरावेत्य सा-

---

भक्तानामुत्तमं चोद्धवममरगुरोराप्तनीतिं सखायं
लब्ध्वा तुष्टो नगर्यां पवनपुरपते हन्धि मे सर्वरोगान् ॥ ३९९ ॥

(ப—ரை) पवनपुरपते=குருவாயூருக்கு நாதனான ஹே கிருஷ்ணா! तद्भ्रातॄन्=அந்தக் கம்ஸனின் ஸஹோதரர்களான अष्ट=எட்டுபேர்களையும் द्रुतम्=சீக்கிரமாய் पिष्ट्वा=பொடி செய்து अथ=பிறகு पितरौ=தாய் தகப்பனுர்களான தேவகி வஸுதேவர்களை सन्नमन्=நமஸ்கரித்தவராயும் उग्रसेनम्=உக்கிரஸேனனை राजानम्=ராஜாவாக कृत्वा=செய்து अखिलम्=எல்லா यदुकुलम्=யது வம்சத்தையும் कामदानैः=விருப்பிய பொருள்களைக் கொடுப்பதால் उच्चैः=அதிகமாய் मोदयन्=ஸந்தோஷப்படுத்தினவராயும் भक्तानाम्=பக்தர்களுள் उत्तमम्=சிறந்தவரும் अमरगुरोः=பிருஹஸ்பதியினிடமிருந்து आप्तनीतिम्=அடையப்பட்ட (கற்கப்பட்ட) நீதிசாஸ்திரத்தையுடையவருமான उद्धवञ्च=உத்தவரையும் सखायम्=தோழனாக लब्ध्वा=அடைந்து तुष्टः=ஸந்தோஷமடைந்தவரும் नगर्याम्=மதுராபட்டினத்தில் (वसन्=வஸித்தவருமான நீர்) मे=என்னுடைய सर्वरोगान्=எல்லா ரோகங்களையும் हन्धि=தடைசெய்வீராக. (397) (எ—று)

இவ்விதம் குவலயாபீடவதம், மல்லரங்கப்ரவேசம், மல்லயுத்தம், மல்லவதம், கம்ஸவதம் இவற்றை வர்ணித்தலென்ற எழுபத்தைந்தாவது தசகம் முற்றிற்று.



## நாற்பத்தைந்தாவது அத்தியாயம்.

(அ—கை) पञ्चचत्वारिंशकेऽथ पितृनन्दादिसान्त्वनम् ।
उग्रसेनाभिषेकश्च गुरौ वासात्पुरागमः ॥ १ ॥

(க—ரை) பிறகு பிதாவான வஸுதேவர், நந்தகோபர் முதலியோரைத்தேற்றுதலும், உக்கிரஸேனனுக்குப் பட்டாபிஷேகமும், குருவான ஸாந்தீபினியினிடம் வாஸஞ்செய்தபின்னர் பட்டினத்துக்

अग्रजः सात्त्वतर्षभः। प्रश्रयावनतः प्रीणन्नम्ब तातेति सादरम् ॥२॥ नास्मत्तो युवयोस्तात नित्योत्कण्ठितयोरपि। बाल्यपौगण्डकैशोराः पुत्राभ्यामभवन्क्वचित् ॥ ३ ॥ न लब्धो दैवहतयोर्वासो नौ भवदन्तिके। यां बालाः

---

குத் திரும்புதலும் இந்த நாற்பத்தைந்தாவது அத்தியாயத்திலுபதே சிக்கப்படுகிறது. (1) (எ—று)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—தாய்தந்தையர்களான தேவகீ வஸுதேவர்கள் தன்னைப்பற்றிய உண்மையான க்ஞானத்தை அடைந்ததைப் புருஷோத்தமனான கிருஷ்ணன் தெரிந்துகொண்டு அவ்வறிவு இவர்களுக்குண்டாகவேண்டாமெனவெண்ணி ஜனங்களை மயக்குகின்றதும், தனக்கு வசப்பட்டதுமான மாயையை விஸ்தாரப்படுத்தினார்.*(1) யாதவ ஶ்ரேஷ்டனான ஸ்ரீகிருஷ்ணன் தமையனுடன்கூட தாய் தந்தையரையடைந்து விநயத்துடன் வணங்கினவராய் ஹே அம்ப! ஹே தாத! என ஆதரவுடன் அவர்களைச் சந்தோஷப்படுத்திக்கொண்டு சொல்லத்தொடங்கினார். (2) ஹேதாத! எங்கள் நிமித்தமாக நீங்கள் எப்பொழுதும் மிக்க ஆவல்கொண்டவர்களாகவிருப்பினுங்கூட புத்திரர்களான எங்கள் மூலம் பால்யாவஸ்தை, பௌகண்டாவஸ்தை, கைசோராவஸ்தை இவற்றின் அனுபவத்தாலேற்பட வேண்டிய சுகங்கள் உங்களுக்குஏற்படாது போயின. (3) தைவத்தால் கெடுக்கப்பட்ட எங்களுக்கு உங்களருகில் வாஸமும் ஏற்படவில்லை. தாய் தந்தையரின் வீட்டிலிருக்கும் பாலர்கள் அவர்களால் லாளனைச்செய்யப்பட்டவர்களாய் எந்த ஸந்தோஷத்தையடைவரோ

---

* தேவகீ வஸுதேவர்களுக்குப் புத்திர புத்தியினாலேற்படும் ஸாம்ஸாரிக பரம ஸுகானுபவத்துக்கு முன்னரே ராமகிருஷ்ணர்கள் ஈசுவரர்கள் என தத்வக்ஞானமேற்பட்டதைக் கண்ணுற்று நான் ப்ரஸன்னனாகவிருக்கும்பொழுது இவர்களுக்கு அத்தகைய க்ஞானமொருபொழுதும் துர்லபமாகாது. பின்னையோவெனில் என்னிடத்தில் புத்திரன் என்ற ப்ரேமைதான் துர்லபமானது. புத்திரனாகவெண்ணுவதால் எத்துணை ப்ரேமையேற்படுமோ அத்துணை ப்ரேமை ஈசுவரனாகவெண்ணுவதாலேற்படமாட்டாது. ஆகவே இதற்குள்ளேயே அந்தப் பரமக்ஞானமிவர்களுக்குண்டாகவேண்டாமெனக் கருதி ஸ்ரீகோபாலன் அவர்களிடம் தனது மாயையை வீசினார் என்பது கருத்து.

पितृगेहस्था विन्दन्ते लालिता मुदम् ॥ ४ ॥ सर्वार्थसंभवो देहो जनितः पोषितो यतः। न तयोर्याति निर्वेशं पित्रोर्मर्त्यः शतायुषा ॥ ५ ॥ यस्तयोरात्मजः कल्प आत्मना च धनेन च। वृत्तिं न दद्यात्तं प्रेत्य स्वमांसं खादयन्ति हि ॥ ६ ॥ मातरं पितरं वृद्धं भार्यां साध्वीं सुतं शिशुम्। गुरुं विप्रं प्रपन्नं च कल्पोऽबिभ्रच्छ्वसन्मृतः॥ ७ ॥ तन्नावकल्पयोः कंसान्नित्यमुद्विग्नचेतसोः। मोघमेते व्यतिक्रान्ता दिवसा वामनर्चतोः॥ ८ ॥ तत्क्षन्तुमर्हथस्तात मातर्नौ परतन्त्रयोः। अकुर्वतोर्वां शुश्रूषां क्लिष्टयोर्दुर्हृदा भृशम् ॥९॥

---

அதுவும் எங்களுக்கு ஏற்படாமல்போயிற்று. (4) *அறம் முதலிய எல்லாப் புருஷார்த்தங்களையும் தருகின்ற தேஹமானது எவர்களா லுண்டுபண்ணப்பட்டுப் போஷிக்கவும்பட்டதோ அந்தத் தாய்தந்தையரின் கடனை அழியுமியல்லையுடைய மனிதன் நூறுண்டுமட்டு மிருக்கின்ற ஆயுளினாலும் தீர்க்கமுடியாதவனாகிறான். (5) எந்தப் புத்திரன் பிதாவைக்காட்டிலும் ஸமர்த்தனாகவிருப்பினுங்கூட தேஹத்தினாலும் தனத்தினாலும் தாய் தந்தையர்க்குப் பிழைத்தற்குரியவற்றைத் தேடித்தரவில்லையோ அவனை வேறு லோகத்தில் யமதூதர்கள் தனது மாம்ஸத்தையே தின்னும்படியன்றோ செய்கின்றனர்.(6) மேலும் ஸமர்த்தனாகவுள்ள எவன் தாயையும், வயது முதிர்ந்த தந்தையையும், பதிவ்ரதையான பார்யையையும், சிசுவான புத்திரனையும், குருவான ப்ராம்ஹணனையும், ஆபத்தையடைந்தவனையும் ரக்ஷிக்கவில்லையோ அவன் மூச்சுள்ளவனாயினுங்கூட பிணமேயாவான். (7) ஆனதுபற்றிக் கம்ஸனிடமிருந்து எப்பொழுதும் பயந்த சித்தமுள்ளவர்களும், ஆனதுபற்றியே அஸமர்த்தர்களும் உங்களைப் பூஜிக்காதவர்களுமான எங்களுக்கு இந்நாட்கள் வீணே கழிந்தன. (8) ஆகவே ஹே தந்தையே! ஹே தாயே! பிறர்க்கடங்கியிருந்தவர்களும், உங்களுக்குப் பணிவிடை செய்யாதவர்களும், கெட்ட சித்தமுள்ள கம்ஸனால் எப்பொழுதுமே கிலேசத்தையடைந்தவர்களுமான எங்கள் விஷயத்தில் பொறுத்துக்கொள்ளுவீர்களாக. (9)

---

* தாய் தந்தையர்களான உங்களுக்கும், புத்திரர்களான எங்களிருவருக்கும், அவச்யம் கிடைக்கவேண்டிய இஷ்டம் பூர்த்தியாகாமற்போயிற்று என இரண்டு சுலோகங்களினாலுபதேசித்து உங்களுக்குப் பணிவிடை செய்யாமை மூலம் எங்கட்கு தர்மநாசமுண்டாகி இருக்கிறது என இந்த ஐந்தாவது சுலோகத்தாற் தெரிவிக்கிறார்.

श्रीशुक उवाच—इति मायामनुष्यस्य हरेर्विश्वात्मनो गिरा। मोहितावङ्कमारोप्य परिष्वज्यापतुर्मुदम्॥ १०॥ सिञ्चन्तावश्रुधाराभिः स्नेहपाशेन चावृतौ। न किञ्चिदूचतू राजन्बाष्पकण्ठौ विमोहितौ॥ ११॥ एवमाश्वास्य पितरौ भगवान्देवकीसुतः। मातामहं तूग्रसेनं यदूनामकरोन्नृपम्॥ १२॥ आह चास्मान्महाराज प्रजाश्चाज्ञप्तुमर्हसि। ययातिशापाद्यदुभिर्नासितव्यं नृपासने॥१३॥ मयि भृत्य उपासीने भवतो विबुधादयः। बलिं हरन्त्यवनताः किमुताऽन्ये नराधिपाः॥ १४॥ सर्वान्स्वज्ञातिसंबन्धान्दिग्भ्यः कंसभयाकुलान्। यदुवृष्ण्यन्धकमधुदाशार्हकुकुरादिकान्॥ १५॥ सभाजितान्समाश्वास्य विदेशावासकर्शितान्। न्यवासयत्स्व-

---

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—மாயாமனுஷ்யனும், (உண்மையில்) விஸ்வாத்மாவுமான ஸ்ரீக்ருஷ்ணனுடைய இம்மாதிரியான வார்த்தையினால் மோஹத்தையடைந்தவர்களான தாய் தந்தையர்கள் அவர்களை மடியிலேற்றி வைத்துக்கொண்டும், தழுவிக்கொண்டும் ஸந்தோஷத்தையடைந்தனர். (10) ஹே ராஜன்! கண்ணீர்த் தாரைகளினால் நனைக்கின்றவர்களும் ஸ்னேஹமாகிற கயிற்றினால் சூழப்பட்டவர்களும், மிக்க மோஹத்தையடைந்தவர்களுமான அவ்விருவரும் தழதழுத்த குரலுள்ளவர்களாகவாகி ஒன்றுஞ்சொல்லாதிருந்தனர். (11) தேவகி புத்திரனான பகவான் இவ்விதம் தாய் தந்தையரைத் தேற்றி மாதாமஹனான உக்ரஸேனனை யாதவர்களுக்கு அரசனாகச் செய்து 'ஹே மஹாராஜ! யயாதியின் சாபத்தினால் யாதவர்கள் ராஜாஸனத்திலிருத்தலாகாது. ஆகவே ப்ரஜைகளான எங்களைக் கட்டளையிடுவதற்குத் தகுதியுடையவராகிறீர்' என்றும் சொன்னார். (12–13) நான் உமது வேலைக்காரனாக அருகில் வீற்றிருக்குங்கால் தேவர் முதலியோரே வணங்கினவர்களாய்க் கப்பத்தைச் செலுத்துவர் என்றால் மற்ற அரசர்கள் விஷயத்தில் சொல்லவும் வேண்டுமோ. (14) கம்ஸனிடமிருந்துண்டான பயத்தினால் கலங்கினவர்களும், தனக்கு க்ஞாதிகளும், ஸம்பந்திகளுமான யாதவர், விருஷ்ணிகள், அந்தகர், மதுக்கள், தாசார்ஹர், குகுரர் முதலியோர்களைத் திக்குகளினின்றும் தருவித்து வேறு தேசவாஸத்தினால் களைத்த அவர்களை விஸ்வகர்த்தாவான பகவான் பூஜித்துத்தேற்

**गेहेषु वित्तैः सन्तर्प्य विश्वकृत् ॥ १६ ॥ कृष्णसङ्कर्षणभुजैर्गुप्ता लब्धमनोरथाः। गृहेषु रेमिरे सिद्धाः कृष्णरामगतज्वराः॥ १७ ॥ वीक्षन्तोऽहरहः प्रीता मुकुन्दवदनाम्बुजम्। नित्यं प्रमुदितं श्रीमत्सदयस्मितवीक्षणम् ॥१८॥ तत्र प्रवयसोऽप्यासन्युवानोऽतिबलौजसः। पिबन्तोऽक्षैर्मुकुन्दस्य मुखाम्बुजसुधां मुहुः॥ १९ ॥**

**अथ नन्दं समासाद्य भगवान्देवकीसुतः। सङ्कर्षणश्च राजेन्द्र परिष्वज्येदमूचतुः॥ २० ॥ पितर्युवाभ्यां स्निग्धाभ्यां पोषितौ लालितौ भृशम्। पित्रोरभ्यधिका प्रीतिरात्मजेष्वात्मनोऽपि हि ॥२१॥ स पिता सा च जननी**

---

றியும், பணங்களினால் திருப்தி செய்வித்தும் சொந்த வீடுகளில் வஸிக்கச்செய்தார். (15–16) கிருஷ்ணன் பலராமன் இவர்களின் புஜங்களினால் ரக்ஷிக்கப்பட்டவர்களும், மனோரதத்தையடைந்தவர்களுமான அவர்கள் கிருஷ்ணன் ராமன் இவர்களால் விலகின தாபத்தையுடையவர்களாய்க்கொண்டு *ஜீவன் முக்தர்கள் போல வீடுகளில் ரமித்தனர். (17) அந்த மதுரையிலுள்ளவர்கள் நித்யமாகச் சந்தோஷத்தையடைந்ததும், சோபையுள்ளதும் தயையுடன் கூடின புன்சிரிப்பு, வீக்ஷணம் இவற்றையுடையதுமான ஸ்ரீகிருஷ்ணனுடைய முகாரவிந்தத்தை ஒவ்வொரு நாளும் கண்ணுற்கண்டு ப்ரீதியையடைந்தனர். மிக்க வயது முதிர்ந்தவர்களுங்கூட முகுந்தனுடைய முகாரவிந்தத்திலுள்ள தேனை அடிக்கடி கண்களினால் குடித்து யுவர்களாகவும், அதிகமான சரீரபலம் சக்தி இவையுள்ளவர்களாகவும் ஆயினர். (18–19) ஹே ராஜேந்திர! பிறகு தேவகீஸுதனான பகவானும், பலராமனும் நந்தகோபரையடைந்து ஆலிங்கனஞ்செய்துகொண்டு பின்வருமாறு சொல்லத்தொடங்கினர். (20)

ஹே பிதாவே! தாய் தந்தையர்களான உங்களால் நாங்கள் மிகவும் போஷிக்கவும் கொண்டாடவும்பட்டோம். மாதா பிதாக்களுக்குத் தமது குழந்தைகளிடத்தில் தமது தேஹத்தைக் காட்டிலுங்கூட அதிகமான ப்ரீதியுண்டாவது இயல்பன்றோ. (21)

---

* सिद्धाः என்பது மூலம். பூர்ணர்களாய் என ஸ்ரீதரர் பொருள் கூறியிருக்கிறார். ஜீவன் முக்தர்கள் போல என வம்சீதரீய வியாக்கியானத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

यौ पुष्णीतां स्वपुत्रवत्। शिशून्बन्धुभिरुत्सृष्टानकल्पैः पोषरक्षणे॥ २२॥ यात यूयं व्रजं तात वयं च स्नेहदुःखितान्। ज्ञातीन्वो द्रष्टुमेष्यामो विधाय सुहृदां सुखम्॥ २३॥ एवं सान्त्वय्य भगवान्नन्दं सव्रजमच्युतः। वासोलङ्कारकुप्याद्यैरर्हयामास सादरम्॥ २४॥ इत्युक्तस्तौ परिष्वज्य नन्दः प्रणयविह्वलः। पूरयन्नश्रुभिर्नेत्रे सहगोपैर्व्रजं ययौ॥ २५॥ अथ शूरसुतो राजन्पुत्रयोः समकारयत्। पुरोधसा ब्राह्मणैश्च यथावद्द्विजसंस्कृतिम्॥२६॥ तेभ्योऽदाद्दक्षिणा गावो रुक्ममालाः स्वलङ्कृताः। स्वलङ्कृतेभ्यः संपूज्य सवत्साः क्षौममालिनीः॥ २७॥ या कृष्णरामजन्मर्क्षे मनोदत्ता महामतिः।

---

வளர்ப்பதிலும், காப்பதிலும் திறனற்றவர்களான பந்துக்களினுல் விடப்பட்டவர்களான குழந்தைகளை எவர்கள் தமது புத்திரர்களைப் போலப் போஷிக்கின்றனரோ அவரே பிதாவும் அவளே பெற்றதாயும் ஆவர். (22) ஹே தாத! நீங்கள் கோகுலத்தையடையுங்கள் ஸுஹ்ருத்துக்களுக்கு ஸுகத்தை உண்டாக்கிவிட்டு ஸ்னேஹத்திஞல் துக்கத்தையடைந்தவர்களும், ஞாதிகளுமான உங்களைப்பார்ப்பதற்குவேண்டி வரப்போகிறோம். (23) அச்யுதனை பகவான் கோகுல வாஸிகளுடன் கூடின நந்தகோபரை இவ்விதம் தேற்றி வஸ்திரம், ஆபரணம், பித்தளைப்பாத்திரம் முதலியவற்ருல் ஆதரவுடன் பூஜித்தார். (24) இவ்விதம் சொல்லப்பட்ட நந்தகோபர் அவர்களைத் தழுவிக்கொண்டு ப்ரீதியினுல் கலங்கினவராய் கண்ணீர்களினுல் கண்களை நிரப்பிக்கொண்டு கோபாலர்களுடன் கூட கோகுலத்தையடைந்தார். (25) ஹே ராஜன்! பிறகு சூரருடைய புத்திரரான வஸுதேவர், புரோஹிதரான கர்க்கரைக்கொண்டும், ப்ராம்ஹணர்களைக்கொண்டும் புத்திரர்களுக்கு த்விஜர் (க்ஷத்திரியர்) களுக்குரிய ஸம்ஸ்காரத்தை உள்ளபடி நன்கு செய்வித்தார். (26) பொன்மாலையணிந்தனவும், நன்கு அலங்கரிக்கப்பட்டனவும், கன்றுகளுடன் கூடினவும், வெண்பட்டு மாலையையணிந்தனவுமான பசுக்களை அந்த ப்ராம்ஹணர்களுக்குத் தக்ஷிணையாகக் கொடுத்தார். (27) பெரிய புத்தியையுடைய வஸுதேவர் கிருஷ்ணன் பலராமன் இவர்கள் பிறந்தகாலத்தில் எந்தப்பசுக்கள் மனத்தினுல் தானஞ்செய்யப்பட்டனவோ அவற்றை நினைத்துக்கொண்டு கம்ஸனுல் அதர்மத்தி

ताभ्याददादनुस्मृत्य कंसेनाधर्मतो हृताः ॥ २८ ॥ ततश्च लब्धसंस्कारौ द्विजत्वं प्राप्य सुव्रतौ । गर्गाद्यदुकुलाचार्याद्गायत्रं व्रतमास्थितौ ॥ २९ ॥ प्रभवौ सर्वविद्यानां सर्वज्ञौ जगदीश्वरौ । नान्यसिद्धामलज्ञानं गूहमानौ नरेहितैः ॥ ३० ॥ अथो गुरुकुले वासमिच्छन्तावुपजग्मतुः । काश्यं सान्दीपनिं नाम ह्यवन्तीपुरवासिनम् ॥ ३१ ॥ यथोपसाद्य तौ दान्तौ गुरौ वृत्तिमनिन्दिताम् । ग्राहयन्तावुपेतौ स्म भक्त्या देवमिवादृतौ ॥ ३२ ॥ तयोर्द्विजवरस्तुष्टः शुद्धभावानुवृत्तिभिः । प्रोवाच वेदानखिलान्साङ्गोपनिषदो गुरुः ॥ ३३ ॥ सरहस्यं धनुर्वेदं धर्मान्न्यायपथांस्तथा । तथा चान्वी-

---

ளுல் அபஹரிக்கப்பட்ட பசுக்களை (இப்பொழுது) தானஞ்செய்தார். (28) அதன் பிறகு அடையப்பட்ட ஸம்ஸ்காரத்தையுடையவர்களான அவ்விருவரும் எல்லா வித்யைகளையும் உண்டுபண்ணுகின்றவர்களும், ஸர்வக்ஞர்களும், ஜகத்துக்கு ஈப்ஸ்வரர்களுமாக இருந்தபோதிலும் கூட பிறராலேற்படாததும், நிர்துஷ்டமுமான க்ஞானத்தை நரசேஷ்டைகளினுல் மறைக்கின்றவர்களாய்க்கொண்டு த்விஜத்வத்தையடைந்து நல்ல விரதானுஷ்டானமுள்ளவர்களாய் யதுகுலத்துக்காசிரியரான கர்க்கரிடமிருந்து காயத்ர விரதத்தை (ப்ரம்ஹசர்யத்தை) அடைந்தனர். (29–30)

பிறகு குருகுலவாஸத்தில் விருப்பங்கொண்டவர்களாய் காசியில் பிறந்தவரும், அவந்திபுரத்தில் வஸிப்பவருமான ஸாந்தீபனி என்றவரையடைந்தனர். (31) அவ்விருவரும் முறைப்படி அடைந்து புறக்கரணங்களையடக்கினவர்களாயும், குற்றமில்லாது குருவினிடத்தில் நடக்கவேண்டிய முறையை (தமது அனுஷ்டான மூலம்) பிறரைக் கிரஹிக்கச் செய்கின்றவர்களாயும் ஆதரவுடன் கூடினவர்களாயும் கொண்டு ஈப்ஸ்வரனைப்போலக்குருவைப்பக்தியுடன் சேவித்தனர். (32) ப்ராம்ஹண ஶ்ரேஷ்டரான குருவானவர் குற்றமற்ற பக்திநிறைந்த கைங்கரியங்களினுல் ஸந்தோஷத்தையடைந்தவராய்க்கொண்டு *அங்கங்கள் உபநிடதங்கள் இவற்றுடன் கூடின எல்லா வேதங்களையும் அவ்விருவர்க்குமுபதேசித்தார். (33) மந்திரம் அவற்றின் தேவதை

---

* சிக்ஷை, வியாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் என வேதாங்கங்கள் ஆறு.

क्षिकीं विद्यां राजनीतिं च षड्विधाम् ॥ ३४ ॥ सर्वे नरवरश्रेष्ठौ सर्वविद्या-
प्रवर्तकौ। सकृन्निगदमात्रेण तौ सञ्जगृहतुर्नृप ॥३५॥ अहोरात्रैश्चतुःषष्ट्या

---

இவற்றைப்பற்றின க்ஞானத்துடன் கூடின தனுர்வேதத்தையும், மனுஸ்ம்ருதி முதலிய தர்மசாஸ்திரங்களையும், அதுபோல மீமாம்ஸை முதலியவற்றையும், அதுபோல தர்க்கவித்யையையும், ஸந்தி, விக்ரஹம், யானம், ஆஸனம், த்வைதம், ஆச்ரயம் என ஆறுவிதங்களான ராஜநீதியையும், (உபதேசித்தார்.) (34) ஹே ந்ருப! ஸர்வவித்யைகளையும் உண்டுபண்ணுகின்றவர்களும் சிறந்த மனிதர்களுக்குள் ச்ரேஷ்டர்களுமான அவ்விருவரும் ஒரேதடவை யுபதேசித்தமாத்திரத்தினலேயே(அவற்றை)நன்கு க்ரஹித்துக்கொண்டுவிட்டனர். (35) ஹே ந்ருப! அறுபத்துநான்கு தினங்களினல் (*)அறுபத்துநான்கு கலைக

---

அறுபத்துநான்கு கலைகளின் பெயர்களும், அவற்றின் ஸ்வரூபமும்.—(१) गीतम्=கானஞ்செய்தல் (1) वाद्यम्=இது ததம் என்றும், ஆனத்தம் என்றும், ஸுஷிரம் என்றும், கனம் என்றும் நான்கு வகைப்படும். அவற்றுள் வீணைமுதலியவாத்யம் ததமென்றும், முரஜம் முதலிய வாத்யம் ஆனத்தமென்றும், பில்லாங்குழல் முதலியன ஸுஷிரமென்றும்,வெண்கலதாளம் முதலியன கனமென்றும் சொல்லப்படும். (2) नृत्यम्=அங்கங்களை தாளாதிகளை யொட்டி அசக்குதல். இது தாண்டவமென்றும், ஸ்தாலிவாக்யமென்றும் இருவகைப்படும். (3) नाट्यम्=வாக்யங்களின் பொருளை அபிநயமூலம் வெளிப்படுத்தல் (4) आलेख्यम्=புஸ்தகம் எழுதுதல், சித்திரம் முதலியனவெழுதுதல்.(5) विशेषकच्छेद्यम्=கேஸரீ கஸ்தூரி முதலியவற்றின் ரஸங்களைக்கொண்டு ஸ்திரீகளின் ஸ்தனங்களில் பலதறப்பட்ட வுருவமமைத்தெழுதுதல்.(6) तण्डुलकुसुमबलिविकाराः=அரிசிகளினலும்,புஷ்பங்களினலும் பூஜைக்குவேண்டியபடி பொருளையமைத்தல்.(7) पुष्पास्तरणम्=புஷ்பங்களினல் படுக்கைதயாரித்தல் (8) दशनवसनांगरागाः=பற்களுக்கும், துணிகளுக்கும் உடம்புக்கும் நல்லநிறமேற்றும் முறை.(9) मणिभूमिकाकर्म=பாண்டவர்களின் ஸபையில் போல மணிகளைக்கொண்டு பூமியில் விசித்திரமான வேலைசெய்தல். (10) शयनरचनम्=மெத்தை தலையணை இவற்றை அவரவர்க்குத்தக்கபடி தயாரித்தல். (11) उदकवाद्यं, उदकघातः, उदकयानम्=ஜலதரங்கம் என்றவாத்யம் வாசித்தல், ஜலஸ்தம்பம் செய்

தல் அதாவது: படுக்கையில்போல ஜலத்தின் மீது படுத்திருக்தல் முதலியன. ஜலத்தில் நடத்தல்.(12) चित्रयोगाः=அனேக அற்புதங்களைக் காட்டுவதற்குரிய வுபாயங்கள். (13) माल्यग्रथनविकल्पाः=புஷ்பங்களைக் கொண்டு பலவிதமான மாலைதயாரித்தல், புஷ்பச்சட்டை தயாரித்தல் முதலியன. (14) शेखरापीडयोजनम्=புஷ்பங்களைக்கொண்டு காதுக்கும் தலைக்கும் பலவிதமான ஆபரங்களைத் தயாரித்தல். (15) नेपथ्ययोगाः=புஷ்பங்களைக் கொண்டே பலவிதமான அலங்காரங்களை யமைத்தல். (16) वर्णपत्रभंगाः=கர்ணபத்திரங்களில் பலவிசேஷங்களை யமைத்தல். (17) सुगन्धयुक्तिः=தசாங்கம் வாசனைப்பொடி முதலியன தயாரித்தல். (18) भूषणयोजनम्=தட்டாரவேலை செய்தல். (19) ऐन्द्रजालम्=மண்ணைப் பொன்னாகக் காட்டுதல் முதலியன. (20)

कौचमारयोगाः=இதை வலைபின்னலென்றும், குசமாரர் என்ற மஹருஷியாலுபதேசிக்கப்பட்ட எவ்வளவு குரூபனையும் நல்லரூபமுள்ளவனாக்கும் முறையென்றும், ஸ்திரீகளுடைய ஸ்தனங்கள் தொங்கிப்போனால் அதைத்தொங்காமல் முன்போல் கெட்டியாக்கும் முறையென்றும் சொல்லுகின்றனர். (21) हस्तलाघवम्=சிரமமின்றி சஸ்திராஸ்திரங்களை விடும் முறை. (22) चित्रशाकापूपभक्ष्यविकारक्रिया=பலவித விசித்திரமான கறிகாய் அப்பம், பக்ஷணம் முதலியவற்றைச்சமைத்தல் (23) पानकरसरागासवयोजनम्=பானகங்களில் (த்ரவமாயும், கடினமாயுமிருக்கின்ற பொருள்களில்) வேறுமாதிரியான ருசியையும் நிறத்தையும், மதசக்தியையுமுண்டாக்குதல். (24) सूचीवायकर्म=ஊசியைக் கொண்டு புஷ்பத்தாற் செய்தமூர்த்திபாதிரி தயாரித்தல். (25) सूत्रक्रीडा=நூலைக் கட்டி அதில் பொம்மையைத்தானாக ஏறும்படி செய்தல், அல்லது சிறுகயிற்றின்மேல் பிடிப்பின்றி நடத்தல். (26) वीणाडमरुकवाद्यानि=வீணை டமருகம் முதலியவாத்யங்களைக்கற்றல். (27) प्रहेलिका=இதைப் புதிர்போடுதல் என்பர். அதாவது: முகம் கருப்பு பூனையுமன்று. நாக்கு இரண்டு பாம்புமன்று. பர்த்தாக்கள் ஐந்து ஆனால் திரௌபதியுமன்று. இதை எவனறிவானோ அவன் பண்டிதன் என்பதே புதிர் போடுதல் எனப்படும். இங்கு எழுதுகோல்=பேனா என்பது பதில். (28) प्रतिमाला=அந்தாதிகூறல். (29) दुर्वचकयोगाः=படிக்கவோ பொருள்கொள்ளவோ முடியாதபடி சுலோகம் கூறல்.(30) पुस्तकवाचनम्=புஸ்தகத்திலுள்ளவற்றை ஸந்தர்ப்பத்துக்கேற்றபடி ராகமமைத்து

வாசித்தல். (31) नाटकाख्यायिकादर्शनम्=பொதுவாய் நாடகத்தைப்பற்றிய வும், அதன் விசேஷத்தைப்பற்றியவுமான அறிவு. (32) काव्यसमस्या- पूरणम्=காவ்ய ச்லோகத்தின் ஏகதேசம் கொடுக்கப்படில் மீதமுள்ள வற்றைப்பூர்த்திசெய்தல். (33) पट्टिकावेत्रबाणविकल्पाः=பலவிதமான பட்டி கைகளையும், பிறப்புகளையும், பாணங்களையும் தயாரிக்கும் முறையறி தல். (34) तर्ककर्माणि=லௌகிகங்களும், சாஸ்திரியங்களுமான பலவித ஊஹாபோஹ காரியங்களைச்செய்தல். (35) तक्षणम्=தச்சுவேலைசெய் தல். (36) वास्तुविद्या=வீடுகட்டும் முறையைப்பற்றிய க்ஞானம். (37) सुवर्णरूप्यरत्नादिपरीक्षा=பொன், வெள்ளி, ரத்தினம் முதலியவற்றின் குண தோஷமறிதல். (38) धातुवादः=இருப்புமுதலியவற்றைப் பொன்னுக்கு தல் (39) मणिरागज्ञानम्=ரத்தினங்களின் நிறத்தையறிதல். (40) आकरज्ञानम्= தங்கம் விளையுமிடங்காணல். (41) वृक्षायुर्वेदयोगाः=மரங்களுக்கு வைத்தி யஞ்செய்தல். (42) मेषकुक्कुटलावकयुद्धविधिः=ஆடு, கோழி, லாவகம் என்ற பக்ஷி இவற்றின் சண்டை முறையறிதல். (43) शुकसारिकाप्रलापनम्=கிளி, நாணத்தான்குருவி இவற்றை மனிதன்போல் பேசும்படி செய்தல் (44) उत्सादनम्=கால் பிடித்துவிடல், உடம்பில் மற்றவிடங்களைப் பிடித்தல், தலைக்கு எண்ணெய் தேய்த்துவிடல் இவற்றையறிதல் (45) केशमार्जन- कौशलम्=தலைவாரிப் பின்னிவிடும் முறையறிதல். (46) अक्षरमुष्टिकाकथनम्= முதலிலுள்ள எழுத்துக்களைக்கொண்டு அவ்வெழுத்துக்கள் ஸம்பந் தித்த பதங்களைக்காணல். அதாவது:—ஒரு திருடன் ஒரு பண்டி தனைக் கொல்லமுயன்றான். அதுபோழ்து அப்பண்டிதன் அத்திருட னிடம் अ, रा, शि, ख என்ற எழுத்துக்களை எழுதிக்கொடுத்து இதை மட்டும் என்னைக்கொன்ற பிறகு என் பிதாவினிடம் கொடுத்துவிடு என்று வேண்டினன். திருடனும் அப்படியே செய்தான். அவன் பிதா அவ்வக்ஷரங்கள் மூலம் திருடனைப் பிடித்துக்கொண்டான். अ=अनेन=இவனால் रा=रात्रौ=ராத்ரியில் शि=शिरः=தலை ख=खण्डितम्=வெட் டப்பட்டது என்பது அதன் பொருள் என்றும். (47) म्लेच्छितकुतर्क- विकल्पाः=தெளிவாகவில்லாத சப்தங்களைக்கொண்டு பொருளை விளக்கு தல். (48) देशभाषाज्ञानम्=அந்தந்த தேசத்துக்குரிய பாஷைகளையறி தல். (49) पुष्पशकटिकानिमित्तज्ञानम्=புஷ்பங்களைக்கொண்டும், அவற்றின் நிறங்களைக்கொண்டும், அவ்வப்பொழுது நிகழும் நிமித்தங்களைக் கொண்டும், இனிவரும் சுபாசுபங்களைக்கூறல். (50) यन्त्रमातृकाधारणम्=

**संयत्तौ तावतीः कलाः। गुरुदक्षिणयाऽऽचार्यं छन्दयामासतुर्नृप ॥ ३६ ॥ द्विजस्तयोस्तं महिमानमद्भुतं संलक्ष्य राजन्नतिमानुषीं मतिम्। संमन्त्र्य पत्न्या स महार्णवे मृतं बालं प्रभासे वरयांबभूव ह ॥ ३७ ॥ तथेत्यथारुह्य**

---

ஆயும் க்ரஹித்துக்கொண்டவர்களாய் குரு தக்ஷிணையைப்பெறும் படி ஆசிரியனைக் கட்டாயப்படுத்தினர். (36) ஹே ராஜன்! அந்த குருவான ப்ராம்ஹணன் அவர்களுடைய அத்புதமான மஹிமையை யும், மனிதர்களிடம் காணமுடியாத புத்தியையும் நன்கு கவனித்துக் கொண்டும், மனையாளுடன் கலந்தாலோசித்துக்கொண்டும், பெரிய ஸமுத்திரத்தில் ப்ரபாஸம் என்றவிடத்தில் இறந்துபோன குழந்தை யை (உயிர்ப்பித்துத் தருதலை) வரனாகக்கேட்டார். (37) அப்படியே ஆகட்டுமென்று சொல்லிவிட்டுப் பிறகு முடிவற்ற பராக்கிரமமுள்ள

---

யுத்த சாஸ்திரத்திற்சொல்லிய முறைப்படி ஜீவனுள்ளதும் ஜீவனற் றதுமான யந்திரங்களைத்தரிக்கும் முறையறிதல். (51) मातृकासंवाच्यम्= பலர் சேர்ந்தவிடத்தில் படித்ததையோ, காதால் கேட்டதையோ ஒருவன் சொல்லும்பொழுது கேட்கவோ, படிக்கவோ, இல்லாத விஷயங்களையும் மற்றவன் சொல்லல். (52) मानसीकाव्यक्रिया=மனத்தி லுள்ள சிந்தையையறிதல், காவ்யத்தைச் செய்தல். (53) अभिधान-कोशाः=அமரம் முதலிய நிகண்டுக்களையறிதல். (54) छन्दोज्ञानम्=வ்ருத்த சாஸ்திரமறிதல். (55) क्रियाविकल्पाः=ஶ்ரௌத ஸ்மார்த்த கர்மபேதங் களைச் சொல்லும் ப்ரயோகக்கிரந்தங்களையறிதல். (56) छलितकयोगाः= மாறுவேஷம் போடும் முறையறிதல். (57) वस्त्रगोपनानि=பெரிய வஸ் திரத்தைச் சின்னதாகக் காட்டல், நூலாலானதைப் பட்டு வஸ்திரம் போல் காட்டுதல் முதலியவற்றையறிதல். (58) द्यूतविशेषाः=சூதாடும் முறையறிதல் (59) आकर्षक्रीडा=பட்டம் பறக்கவிடுதல். (60) बालक्रीड-नकानि=குழந்தைகள் விளையாடுவதற்குரிய ஸாமான்களைத் தயாரித் தல். (61) वैनायिकीनाम्=யானை முதலியவற்றைப் பழக்குதல். (62) वैजयिकीनाम्=அஸ்த்ர ஜயம் முதலியவற்றையறிதல். (63) वैतालिकीनाञ्च-विद्यानां ज्ञानम्=வேதாளத்தையடக்கும் முறையறிதல் அல்லது व्यायामकी-नाम्=என வேறுபாடங்கொண்டு தேஹத்துக்குப் பலந்தரும் பயிற்சி செய்யும் முறையறிதல். (64) ஆகிய இவை அறுபத்துநான்கு வித் தைகளாகும்.

महारथौ रथं प्रभासमासाद्य दुरन्तविक्रमौ । वेलामुपव्रज्य निषीदतुः क्षणं सिन्धुर्विदित्वाऽर्हणमाहरत्तयोः॥३८॥ तमाह भगवानाशु गुरुपुत्रः प्रदीयताम् । योऽसाविह त्वया ग्रस्तो बालको महतोर्मिणा ॥ ३९ ॥

समुद्र उवाच—नैवाहार्षमहं देव दैत्यः पञ्चजनो महान् । अन्तर्जलचरः कृष्ण शङ्खरूपधरोऽसुरः॥ ४० ॥ आस्ते तेनाहृतो नूनं तच्छ्रुत्वा सत्वरं प्रभुः । जलमाविश्य तं हत्वा नापश्यदुदरेऽर्भकम् ॥ ४१ ॥ तदङ्गप्रभवं शङ्खमादाय रथमागमत् । ततः संयमनीं नाम यमस्य दयितां पुरीम् ॥४२॥ गत्वा जनार्दनः शङ्खं प्रदध्मौ सहलायुधः । शङ्खनिर्ह्रादमाकर्ण्य प्रजासंयमनो यमः॥ ४३ ॥ तयोः सपर्यां महतीं चक्रे भक्त्युपबृंहिताम् । उवाचा-

---

வர்களும், மஹாரதர்களுமான அவ்விருவரும் தேரிலேறிக்கொண்டு ப்ரபாஸத்தையடைந்து க்ஷணகாலம் அங்கு உட்கார்ந்தனர். ஸமுத்திர ராஜன் அதை அறிந்து கரையிலோடிவந்து அவர்களுக்குப் பூஜையைச் செய்தான். (38) இங்கு உன்னால் பெரிய அலையினால் எந்தப் பாலகனுன குருபுத்திரன் கொண்டுபோகப்பட்டானே அவன் சீக்கிரம் கொடுக்கப்படட்டும் என அந்த ஸமுத்திர ராஜனைப்பார்த்துப் பகவான் சொன்னர். (39)

ஸமுத்திர ராஜன் சொல்லுகிறான்—ஹே தேவ! கிருஷ்ண! நான் அபஹரிக்கவில்லை. ஜலத்துக்குள் ஸஞ்சரிப்பவனும், சங்கின் உருவத்தைத் தரிப்பவனும், பஞ்சஜனன் என்ற பெயருள்ளவனுமான பெரிய அஸுரன் இங்கு வஸிக்கின்றான். அவனாலேயே அபஹரிக்கப்பட்டான் என்பது நிச்சயம் என்றான். அதைக் கேட்டதும் ப்ரபுவான கிருஷ்ணன் வேகமாக ஜலத்தில் பிரவேசித்து அவ்வஸுரனைக்கொன்று அவனது வயிற்றில் குழந்தையைக் கண்டாரில்லை. (40-41) அவ்வஸுரனது அங்கத்தினின்றுமுண்டான சங்கைக் கையிலெடுத்துக்கொண்டு தேரிலேறினர். அங்கிருந்து யமனுக்குப் பிடித்தமான ஸம்யமனீ என்ற பட்டினத்தையடைந்து ஜனார்த்தனனான கிருஷ்ணன் பலராமனுடன்கூடச் சங்கை ஊதினர். ப்ரஜைகளையழிப்பவனான யமன் சங்கின் ஒலியைக்கேட்டு அவ்விருவர்க்கும் பக்தியுடன் கூடின பெரிய பூஜையைச்செய்தான். எல்லாப் பிராணிகளுடையவும் ஹிருதயத்தை வீடாகக்கொண்டவரான

वनतः कृष्णं सर्वभूताशयालयम्। लीलामनुष्य हे विष्णो युवयोः करवाम किम्॥ ४४॥ श्रीभगवानुवाच—गुरुपुत्रमिहानीतं निजकर्मनिबन्धनम्। आनयस्व महाराज मच्छासनपुरस्कृतः॥ ४५॥ तथेति तेनोपानीतं गुरुपुत्रं यदूत्तमौ। दत्वा स्वगुरवे भूयो वृणीष्वेति तमूचतुः॥ ४६॥ गुरुरुवाच— सम्यक्संपादितो वत्स भवद्भ्यां गुरुनिष्क्रयः। को नु युष्मद्विधगुरोः कामानामवशिष्यते॥ ४७॥ गच्छतं स्वगृहं वीरौ कीर्तिर्वामस्तु पावनी। छन्दांस्ययातयामानि भवन्त्विह परत्र च॥ ४८॥ गुरुणैवमनुज्ञातौ रथेनानिलरंहसा। आयातौ स्वपुरं तात पर्जन्यनिनदेन वै॥४९॥ समनन्दन्प्रजाः सर्वा दृष्ट्वा रामजनार्दनौ। अपश्यन्त्यो बह्वहानि नष्टलब्धधना इव॥ ५०॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्धे गुरुपुत्रानयनं नाम पञ्चचत्वारिंशोऽध्यायः॥ ४५॥



---

ஸ்ரீகிருஷ்ணனை வணங்கி ஹேலீலாமனுஷ்ய! ஹேவிஷ்ணோ! உங்களுக்கு நாம் செய்யக்கூடியது என்ன இருக்கிறது என்றான். (42–44) ஸ்ரீபகவான் சொல்லலுற்றார்—ஹே மஹாராஜ! சொந்த கர்மங்காரணமாய் இங்கு கொண்டுவரப்பட்ட எமது குரு புத்திரனை எனது ஆணையை முன்னிட்டுக்கொண்டு இங்கு தருவிப்பீராக என்றார்.(45) அவ்விதமேயாகுகவென்று அவனால் கொண்டுவரப்பட்ட குரு புத்திரனை யதூத்தமர்களான ராம கிருஷ்ணர்கள் தமது குருவையும் பொருட்டுக் கொடுத்துத் திரும்பவும் வேண்டுவனவற்றைக் கேளுங்கள் என அவரைச் சொல்லினர். (46) குரு சொல்லலுற்றார்—ஹே குழந்தாய்! உங்களிருவராலும் குரு தக்ஷிணையானது நன்கு கொடுக்கப்பட்டுவிட்டது உங்கள் போன்ற சிஷ்யர்கள் வாய்ந்த குருவுக்கு காமங்களுக்குள் எந்தக்காமந்தான் எஞ்சியிருக்கப் போகிறது. (47) ஹே வீரர்காள்! சொந்தவீடு போய்ச்சேருங்கள். உங்களுக்குப் பரிசுத்தமான கீர்த்தியானது உண்டாகட்டும். வேதங்கள் இங்கும் பரலோகத்திலும் மறவாதனவாக இருக்கட்டும் என்றார் (48) ஹே தாத! குருவினால் இவ்விதம் விடையளிக்கப்பட்டவர்களாய் மேகம்போலொலிக்கின்றதும், காத்துக்கொப்பான வேகமுள்ளதுமான தேருடன் சொந்தப்பட்டினத்தை வந்தடைந்தனர். (49)

॥ अथ षट्चत्वारिंशोऽध्यायः ॥

श्रीशुक उवाच—वृष्णीनां प्रवरो मन्त्री कृष्णस्य दयितः सखा।
शिष्यो बृहस्पतेः साक्षादुद्धवो बुद्धिसत्तमः ॥ १ ॥ तमाह भगवान्प्रेष्ठं

---

வெகு தினங்கள் பார்க்காதிருந்தவர்களான எல்லா ப்ரஜைகளும் ராம கிருஷ்ணர்களைக் கண்டு முதலில் நஷ்டமாகிப் பின்னர் அடையப்பட்ட தனமுள்ளவர்கள் போல மிக்க ஸந்தோஷித்தனர். (50)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண தசமஸ்கந்த
பூர்வார்த்தத்தில் குருபுத்திரானயனம் என்ற நாற்பத்தைந்தாவது
அத்தியாயம் முற்றிற்று.



## நாற்பத்தாறுவது அத்தியாயம்.

(ஆ-கை) षट्चत्वारिंशके घोषमुद्धवं प्रेष्य तद्गिरा ।
यशोदानन्दयोश्चक्रे कृष्णः शोकापनोदनम् ॥ १ ॥
कामचारं द्विजातिस्सन् परित्यज्यातिसंयतः।
गुरोर्ज्ञानमनुप्राप्य सख्या गोपीरुपादिशत् ॥ २ ॥

(க-ரை) ஸ்ரீகிருஷ்ணன் உத்தவரைக் கோகுலத்துக்கனுப்பி அவரது வார்த்தையினால் யசோதை நந்தகோபர் இவர்களுக்குச் சோகநிவிருத்தியைச் செய்தானென்றும், த்விஜாதியாக இருந்து கொண்டு அதாவது: உபநயனஞ்செய்துகொண்டு, காமசாரத்தை (யதேஷ்டாசரணத்தை) விலக்கிக்கொண்டு ஜிதேந்திரியனாகி குருவினிடமிருந்து க்ஞானத்தையடைந்து தோழனான உத்தவர் மூலம் கோபிகைகளுக்கு உபதேசம் செய்தார் என்றும் இந்த நாற்பத்தாறுவது அத்தியாயத்தினுபதேசிக்கப்படுகிறது. (1–2) (எ-று)

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்—யாதவர்களுக்குச் *சிறந்த மந்திரியும், நேரில் ப்ருஹஸ்பதிக்குச்சிஷ்யரும், புத்தியில் சிறந்தவருமான உத்தவர் கிருஷ்ணனுக்குப் பிடித்த ஸகாவாக இருந்தார். (1)

---

* கோபாலனிடத்திற்பேரன்பு கொண்டவர்களான கோபிகைகளைத் தேற்றுவது சிறந்த மந்திரியினாற்றான் செய்தல் கூடும் என்பதைக் காட்ட வேண்டி உத்தவரின் பெருமையை இதனால் விளக்குகிறார்.

भक्तमेकान्तिनं क्वचित् । गृहीत्वा पाणिना पाणिं प्रपन्नार्तिहरो हरिः ॥ २ ॥ गच्छोद्धव व्रजं सौम्य पित्रोर्नौ प्रीतिमावह । गोपीनां मद्वियोगाधिं मत्सन्देशैर्विमोचय ॥ ३ ॥ ता मन्मनस्का मत्प्राणा मदर्थे त्यक्तदैहिकाः । ये त्यक्तलोकधर्माश्च मदर्थे तान्बिभर्म्यहम् ॥ ४ ॥ मयि ताः प्रेयसां प्रेष्ठे दूरस्थे गोकुलस्त्रियः । स्मरन्त्योऽङ्ग विमुह्यन्ति विरहौत्कण्ठ्यविह्वलाः ॥ ५ ॥ धारयन्त्यतिकृच्छ्रेण प्रायः प्राणान्कथञ्चन । प्रत्यागमनसन्देशैर्बल्लव्यो मे मदात्मिकाः ॥ ६ ॥ श्रीशुक उवाच—इत्युक्त उद्धवो राजन्सन्देशं भर्तुरादृतः ।

---

பகவானும், ப்ரபன்னர்களின் கஷ்டத்தைப்போக்குகின்றவருமான ஹரியானவர் மிக்க ப்ரேமைவாய்ந்தவரும் குழந்தைப்பருவம் முதற்கொண்டே பகவத்பக்தி செய்துவருபவரும், கிருஷ்ணனையே எவ்வழியிலும் நம்பியிருப்பவருமான அந்த உத்தவரைக்கையினால் கையில் பிடித்துக்கொண்டு ஒருஸமயம் சொல்லத்தொடங்கினார். (2) ஹே ஸௌம்ய! உத்தவ! கோகுலத்துக்குச்சென்று எங்கள் தாய் தந்தையர்க்கு ப்ரீதியைச் செய்துவைப்பாயாக. கோபிகைகளுக்கு எனது பிரிவாலேற்பட்ட மனோவேதனையை எனது வாய்மொழிகளினால் போக்குவாயாக. (3) அவர்களோ என்னிடம் பதிந்த மனதுள்ளவர்களாகவும், என்னையே உயிராகக்கொண்டவர்களாகவும், எனக்காகவேண்டி பதிபுத்திராதிகளை யிழந்தவர்களாகவுமிருக்கின்றனர். நானே எவர்கள் எனக்காகவேண்டி இம்மை மறுமைச் சுகங்களையும் அதன் ஸாதனங்களையுமிழக்கின்றனரோ அவர்களைக் காப்பவனாகவிருக்கின்றேன். (4) ஹே அங்க! ப்ரேமைக்குப் பாத்திரமானவற்றைக் காட்டிலும் மிக்க ப்ரேமைபாத்திரமான நான் வெகு தொலையிருக்குங்கால் விரஹத்தினாலேற்பட்ட ஆசையினால் பரவசப்பட்டவர்களாய்க்கொண்டும், என்னையே நினைத்துக்கொண்டும், அந்தக் கோபிகைகளோ, மிக்க மோஹத்தையடைகின்றனர். (5) என்னிடம் * அர்ப்பணஞ்செய்யப்பட்ட ஆத்மாவையுடையவர்களான எனது கோபிகைகள் 'திரும்பி வருகிறேன்' என்ற வாய்மொழிகள்

---

* அவர்களுடைய ஆத்மா அவர்களுடைய தேஹத்தில் மட்டுமிருக்குமாயின் என்னைப் பிரிந்தவுடனேயே விரஹதாபத்தினால் உயிரையே இழந்திருப்பர். அந்த ஆத்மா என்னிடமிருப்பதால்தான் அவர்கள் ஒருவாறு சிரமத்தினால் ஜீவிக்கின்றனர் என்பது கருத்து.

**आदाय रथमारुह्य प्रययौ नन्दगोकुलम् ॥ ७ ॥ प्राप्तो नन्दव्रजं श्रीमान्नि-
म्लोचति विभावसौ । छन्नयानः प्रविशतां पशूनां खुररेणुभिः ॥ ८ ॥
वासितार्थेऽभियुध्यद्भिर्नादितं शुष्मिभिर्वृषैः । धावन्तीभिश्च वास्राभिरूधो-
भारैः स्ववत्सकान् ॥ ९ ॥ इतस्ततो विलङ्घद्भिर्गोवत्सैर्मण्डितं सितैः ।
गोदोहशब्दाभिरवं वेणूनां निःस्वनेन च ॥१०॥ गायन्तीभिश्च कर्माणि शुभानि
बलकृष्णयोः । स्वलङ्कृताभिर्गोपीभिर्गोपैश्च सुविराजितम् ॥ ११ ॥ अग्न्यर्का-
तिथिगोविप्रपितृदेवार्चनान्वितैः । धूपदीपैश्च माल्यैश्च गोपावासैर्मनोर-
मम् ॥१२॥ सर्वतः पुष्पितवनं द्विजालिकुलनादितम् । हंसकारण्डवाकीर्णैः**

---

மூலம் அதிகம் கஷ்டத்துடன் பெரும்பாலு முயிர்களைத்தரிக்கின்ற
னர். (6) ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—ஹே ராஜன்! இவ்விதஞ் சொல்
லப்பட்டவரும், ஆதரவு காட்டப்பட்டவருமான உத்தவர் பர்த்தா
வான ஸ்ரீகிருஷ்ணனுடைய வாய்மொழியைப் பெற்றுக்கொண்டு
தேரிலேறி நந்தகோகுலத்துக்குப் பயணமானார். (7) ஸ்ரீமானான
உத்தவர் வீட்டுக்குத் திரும்புகின்ற பசுக்களின் குளம்புப்பொடிக
ளினால் மறைக்கப்பட்ட தேரையுடையவராய் புஷ்பவதிகளான பசுக்
கள் நிமித்தமாக நாலாபக்கங்களிலும் சண்டையிடுகின்றனவும், மதங்
கொண்டனவுமான காளைகளின் சப்தம் நிறைந்ததும், மடியின்
சுமைகளுடன் தத்தமது கன்றுகளை நோக்கி வேகமாகவோடுகின்ற
பசுக்களினாலும், இங்குமங்கும் துள்ளிக் குதிக்கின்றனவும், வெண்
ணிறமுள்ளனவுமான பசுங்கன்றுகளினாலும், பசுக்கறக்கும் சப்தங்
களினாலும், வேணுக்களின் நாதங்களினாலும் அலங்கரிக்கப்பட்ட
தும், மிக்கப்பரிசுத்தங்களான ராமகிருஷ்ணர்களின் லீலைகளைக் கா
னஞ்செய்கின்றவர்களும், நன்கு அலங்கரிக்கப்பட்டவர்களுமான
கோபிகைகளினாலும் கோபாலர்களினாலும் நன்கு விளங்கச்செய்யப்
பட்டதும், அக்னி, ஸூரியன், அதிதி, பசு, ப்ராம்ஹணன், பிதி
ருக்கள், தேவர், இவர்களின் பூஜையுடன் கூடின இடையர்களின்
வீடுகளினாலும், தூபதீபங்களினாலும், மாலைகளினாலும் மனத்தைக்
கவருகின்றதும், எங்கும் புஷ்பித்த காட்டையுடையதும், பறவை
வண்டு இவற்றின் கூட்டத்தினால் சப்திக்கப்பட்டதும், ஹம்ஸம்,
நீர் காக்கை இவைகள் நிறைந்த தாமரஸப் புஷ்பக்கூட்டங்களினால்

पद्मषण्डैश्च मण्डितम् ॥ १३ ॥ तमागतं समागम्य कृष्णस्यानुचरं प्रियम् । नन्दः प्रीतः परिष्वज्य वासुदेवधियार्चयत् ॥ १४ ॥ भोजितं परमान्नेन संविष्टं कशिपौ सुखम् । गतश्रमं पर्यपृच्छत्पादसंवाहनादिभिः ॥ १५ ॥

कच्चिदङ्ग महाभाग सखा नः शूरनन्दनः। आस्ते कुशल्यपत्याद्यैर्युक्तो मुक्तः सुहृद्वृतः॥१६॥ दिष्ट्या कंसो हतः पापः सानुगः स्वेन पाप्मना । साधूनां धर्मशीलानां यदूनां द्वेष्टि यः सदा ॥ १७ ॥ अपि स्मरति नः कृष्णो मातरं सुहृदः सखीन् । गोपान्व्रजं चात्मनाथं गावो वृन्दावनं गिरिम् ॥१८॥ अप्यायास्यति गोविन्दः स्वजनान्सकृदीक्षितुम् । तर्हि द्रक्ष्याम तद्वक्त्रं

---

அலங்கரிக்கப்பட்டதுமான நந்தகோகுலத்தை ஸூரியன் மறையும் ஸமயத்தில் அடைந்தார். (8-13)

கிருஷ்ணனுடைய ப்ரிய பக்தனை அவர் வந்ததை நந்தகோபர் அறிந்து ப்ரீதியுள்ளவராய் ஆலிங்கனஞ் செய்துகொண்டு வாஸுதேவன் என்ற எண்ணத்துடன் அவரைப் பூஜைசெய்தார். (14) பரமான்னத்தினல் போஜனஞ் செய்விக்கப்பட்டவரும் மெத்தையில் சுகமாக உட்கார்ந்தவரும் கால் பிடித்தல் முதலியவற்றுல் களை நீங்கினவருமான உத்தவரைக் கேட்கத்தொடங்கினர். (15) ஹே அங்க! ஹே மஹாபாக! எங்கள் தோழரான வஸுதேவர் கட்டினின்றும் விடுபட்டவராயும், குழந்தை முதலியோருடன் கூடினவராயும், சினேஹிதர்களால் சூழப்பட்டவராயும் கொண்டு க்ஷேமமாக இருக்கின்ருரா என்ன? (16) சாதுக்களும் தர்மசிலர்களுமான யாதவர்களை எவன் எப்பொழுதும் த்வேஷித்தானே அந்தப் பாபியான கம்ஸன் சொந்தமான பாபத்தினல் பரிவாரங்களுடன் கூட கொல்லப்பட்டான் என்பது தைவாதீனமேயாகும். (17) கிருஷ்ணன் எங்களையும், தாயையும், மித்திரர்களையும், தோழர்களான கோபாலர்களையும், தன்னையே நாதனாகவுடைய கோகுலத்தையும், பசுக்களையும், பிருந்தாவனத்தையும், கோவர்த்தனமலையையும் நினைப்பதுண்டா? (18) கோவிந்தன் சொந்த ஜனங்களை (எங்களை)ப் பார்ப்பதற்கு வேண்டி ஒருதடவையாவது வருவானேயானல் அப்பொழுது அழகிய மூக்குள்ளதும், அழகிய சிரிப்பு, கண் இவற்றையுடையதுமான அவரதுமுகத்தை நாம்பார்ப்போம். (19) மஹாத்மாவான ஸ்ரீகிருஷ்

सुनलं सुस्मितेक्षणम् ॥ १९ ॥ दावाग्नेर्वातवर्षाच्च वृषसर्पाच्च रक्षिताः। दुरत्ययेभ्यो मृत्युभ्यः कृष्णेन सुमहात्मना ॥ २० ॥ स्मरतां कृष्णवीर्याणि लीलापाङ्गनिरीक्षितम्। हसितं भाषितं चाङ्ग सर्वा नः शिथिलाः क्रियाः॥२१॥ सरिच्छैलवनोद्देशान्मुकुन्दपदभूषितान्। आक्रीडानीक्षमाणानां मनो याति तदात्मताम् ॥ २२ ॥ मन्ये कृष्णं च रामं च प्राप्ताविह सुरोत्तमौ। सुराणां महदर्थाय गर्गस्य वचनं यथा ॥ २३ ॥ कंसं नागायुतप्राणं मल्लौ गजपतिं तथा। अवधिष्टां लीलयैव पशूनिव मृगाधिपः ॥ २४ ॥ तालत्रयं महासारं धनुर्यष्टिमिवेभराट्। बभञ्जैकेन हस्तेन सप्ताहमदधाद्गिरिम् ॥ २५ ॥ प्रलम्बो धेनुकोऽरिष्टस्तृणावर्तो बकादयः। दैत्याः सुरासुरजितो हता येनेह लीलया ॥ २६ ॥ श्रीशुक उवाच—इति संस्मृत्य

---

லுல் காட்டுத்தீயினின்றும் காற்றுடன் கூடின மழையினின்றும் விருஷபம், பாம்பு இவற்றினின்றும், தாண்டுதற்கரிய மிருத்யுக்களினின்றும் நாங்கள் ரக்ஷிக்கப்பட்டோமன்றோ. (20) ஹே அங்க! கிருஷ்ணனுடைய வீரியங்களையும் விளையாட்டாகச் செய்யப்படும் கடைக்கண் பார்வையையும், சிரிப்பையும், வார்த்தையையும், நினைக்கின்ற எங்களுடைய எல்லாக் கிரியைகளும் நிலைகுலைந்துவிடுகின்றன. (21) முகுந்தனுடைய அடிவைப்பினால் அலங்கரிக்கப்பட்டவைகளான யமுனை, கோவர்த்தனமலை இவற்றின் பிரதேசங்களையும், மற்றுமுள்ள விளையாடுமிடங்களையும் பார்க்கின்ற எங்களுடைய மனதானது முகுந்தரூபமாக இருத்தலை அடைகின்றதே. (22) கிருஷ்ணனையும், பலராமனையும் தேவர்களின் பெரிய பயனுக்குவேண்டி இங்கு அவதரித்த தேவஶ்ரேஷ்டர்களாக கர்க்கர் சொல்லியபடியே (நானும்) எண்ணுகின்றேன். (23) பதினாயிரம் யானைகளின் பலமுள்ள குவலயாபீடமென்ற யானையையும், கம்ஸனையும், சாணூரன் முஷ்டிகன் என்ற மல்லர்களையும், சிங்கமானது பசுக்களைப்போல விளையாட்டாகவே கொன்றுவிட்டனரே. (24) மூன்றுபனையுயரமுள்ளதும், அதிகம் வலுவுள்ளதுமான வில்லைச் சிறந்த யானையானது கழியைப்போல முறித்தெறிந்தாரே. ஏழுதினங்கள் முழுதும் ஒரே கையினால் கோவர்த்தன மலையைத் தூக்கினாரன்றோ. (25) எவரால் இங்கு ப்ரலம்பன், தேனுகன், அரிஷ்டன், திருணாவர்த்தன் இவர்

संस्मृत्य नन्दः कृष्णानुरक्तधीः। अत्युत्कण्ठोऽभवत्तूष्णीं प्रेमप्रसरविह्वलः॥ २७ ॥ यशोदा वर्ण्यमानानि पुत्रस्य चरितानि च। शृण्वन्त्यश्रूण्यवास्राक्षीत्स्नेहस्नुतपयोधरा॥२८॥ तयोरित्थं भगवति कृष्णे नन्दयशोदयोः। वीक्ष्याऽनुरागं परमं नन्दमाहोद्धवो मुदा॥ २९ ॥

उद्धव उवाच—युवां श्लाघ्यतमौ नूनं देहिनामिह मानद। नारायणेऽखिलगुरौ यत्कृता मतिरीदृशी॥ ३० ॥ एतौ हि विश्वस्य च बीजयोनी रामो मुकुन्दः पुरुषः प्रधानम्। अन्वीय भूतेषु विलक्षणस्य ज्ञानस्य चेशात इमौ पुराणौ॥ ३१ ॥ यस्मिञ्जनः प्राणवियोगकाले क्षणं समावेश्य

---

களும், ஸுரர் அஸுரர் இவர்களை ஜயித்த பகாஸுரன் முதலிய அஸுரர்களும் விளையாட்டாகவே கொல்லப்பட்டனரோ. (26)

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்—இவ்விதம் நந்தகோபர் நினைத்து நினைத்து கிருஷ்ணனிடத்தில் பற்றின சித்தமுள்ளவராயும், ப்ரேமையின் பெருக்கினால் கலங்கினவராயும், அதிகம் உத்கண்டையை (பேராவலை) அடைந்தவராயுமாகி மௌனமாக இருந்துவிட்டார். (27) வர்ணிக்கப்படுகின்ற புத்திரனுடைய சரிதங்களைக்கேட்ட யசோதையும் ஸ்னேஹத்தினால்பெருகின ஸ்தனங்களையுடையவளாய் கண்ணில் நீரைவடியவிட்டாள். (28) அந்தநந்தகோப யசோதைகளுக்குப் பகவானான கிருஷ்ணனிடமுள்ள இத்தகைய மேலான அனுராகத்தைக்கண்டு உத்தவர் ஸந்தோஷத்துடன் நந்தகோபரைச் சொல்லத்தொடங்கினார். (29) உத்தவர் சொல்லுகிறார்—ஹே மானத! அகிலத்துக்கும் குருவான ஸ்ரீமன் நாராயணனிடத்தில் யாது காரணத்தினால் இத்தகைய புத்தியானது செய்யப்பட்டதோ அக்காரணத்தினால் தேஹமெடுத்தவர்களுக்குள் நீங்களே புகழத்தக்கவர்களாவீர். இது நிச்சயம். (30) பலராமனென்றும் கிருஷ்ணனென்றுமான இவ்விருவரும் உலகுக்கு நிமித்தகாரணமும், உபாதான காரணமும் ஆவர். அம்சபூதனான புருஷனும், சக்திபூதமான ப்ரதானமும் இவர்களேயாவர். புராண புருஷர்களான இவர்களே ப்ராணிகளிடத்தில் ப்ரவேசித்துப்பூதங்களுக்கும் அவற்றுடன்கூடின பற்பல பேதங்களுக்கும், ஜ்ஞான ரூபியான ஜீவனுக்கும் நியந்தாக்களாகவாகின்றனர். (31) ஜனமானது ப்ராணனை விடும் ஸமயத்தில்

मनो विशुद्धम्। निर्हृत्य कर्माशयमाशु याति परां गतिं ब्रह्ममयोऽर्कवर्णः ॥ ३२ ॥ तस्मिन्भवन्तावखिलात्महेतौ नारायणे कारणमर्त्यमूर्तौ। भावं विधत्तां नितरां महात्मन्किंवावशिष्टं युवयोः सुकृत्यम् ॥ ३३ ॥ आगमिष्यत्यदीर्घेण कालेन व्रजमच्युतः। प्रियं विधास्यते पित्रोर्भगवान्सात्वतां पतिः ॥ ३४ ॥ हत्वा कंसं रङ्गमध्ये प्रतीपं सर्वसात्वताम्। यदाह वः समागत्य कृष्णः सत्यं करोति तत् ॥ ३५ ॥ मा खिद्यतं महाभागौ द्रक्ष्यथः कृष्णमन्तिके। अन्तर्हृदि स भूतानामास्ते ज्योतिरिवैधसि ॥ ३६ ॥ न ह्यस्यास्ति प्रियः कश्चिन्नाप्रियो वास्त्यमानिनः। नोत्तमो नाधमो वापि समानस्यासमोऽपि वा ॥ ३७ ॥ न माता न पिता तस्य न भार्या न सुतादयः।

---

மிக்கச் சுத்தமான மனத்தை எவரிடத்தில் க்ஷணகாலம் செலுத்திக் கர்மவாஸனையைப் போக்கிக்கொண்டு ஸ்வரூபஜ்ஞானமுள்ளதாகவும், சுத்த ஸத்வ மூர்த்தியுள்ளதாகவுமாகி மேலான கதியை (அவரது பதத்தை) அடைகிறதோ, எல்லாவற்றுக்கும் ஆத்மாவும், காரணமுமானவரும், காரணத்துக்கு வேண்டி மனித சரீரமெடுத்தவரும், நாராயணனும், மஹாத்மாவுமான அந்தக் கிருஷ்ணனிடத்தில் நீங்கள் மிகவும் பக்தியைச் செய்கின்றீர்கள். ஆனதுபற்றி உங்களுக்குச் செய்யவேண்டிய வேறு நல்ல காரியம் யாதிருக்கின்றது. (32-33) யாதவர்களுக்குப் பதியும் பகவானுமான அச்யுதன் ஸ்வல்பகாலத்துக்குள் கோகுலம் வரப்போகிறார். தாய்தந்தையர்களான உங்களுக்கு ப்ரியத்தைச்செய்யவும்போகிறார். (34) ஸ்ரீகிருஷ்ணன் ஸர்வ யாதவர்களுக்கும் தீங்கிழைத்துவந்த கம்ஸனை ரங்கத்தின் நடுவில் கொன்று உங்களருகில் வந்து எதைச் சொன்னாரோ அதைச் சத்தியமாகவே செய்வார். (35) ஹே மஹாபாக்யசாலிகளான யசோதாநந்தகோபர்களே! துக்கத்தையடையாதீர். கிருஷ்ணனை ஸமீபகாலத்தில் பார்க்கப்போகின்றீர். *மரத்தில் நெருப்பானதுபோல அவர் பூதங்களின் உள்ளில் மனத்தில் இருந்துகொண்டே இருக்கிறார். (36)

---

* வன்னிமரம் முளைத்த அரசமரத்திலிருக்கும் நெருப்பைக்கடைந்தாலல்லாது காணமுடியாதிருப்பதுபோல பக்திசெய்தால் அல்லாது உள்ளில் மனத்திலிருக்கும் ஸ்ரீகிருஷ்ணனைக்காணவியலாது என்பதுகருத்து.

नात्मीयो न परश्चापि न देहो जन्म एव च ॥ ३८ ॥ न चास्य कर्म वा लोके सदसन्मिश्रयोनिषु । क्रीडार्थं सोऽपि साधूनां परित्राणाय कल्पते ॥३९॥ सत्त्वं रजस्तम इति भजते निर्गुणो गुणान् । क्रीडन्नतीतोऽत्र गुणैः सृजत्यवति हन्त्यजः॥ ४० ॥ यथा भ्रमरिकादृष्ट्या भ्राम्यतीव महीयते । चित्ते कर्तरि तत्रात्मा कर्तेवाहंधिया स्मृतः॥ ४१ ॥

युवयोरेव नैवायमात्मजो भगवान्हरिः। सर्वेषामात्मजो ह्यात्मा पिता माता स ईश्वरः॥ ४२ ॥ दृष्टं श्रुतं भूतभवद्भविष्यत्स्थास्नुश्चरिष्णुर्महदल्पकं

---

(*)ராகாதிகளற்றவரும், எதிலும் அபிமானமற்றவருமான அவருக்கு மிக்க ப்ரியமானவனோ, மிக்க ப்ரியமில்லாதவனோ கிடையாது. மேலானவனுமில்லை. தாழ்ந்தவனும் கிடையாது. ஒப்பில்லாதவனும் கிடையாது. (37) அவனுக்குத் தாய் இல்லை. தந்தையில்லை. மனையாளில்லை புத்திராதிகளில்லை. வேண்டியவனில்லை. சத்ருவில்லை. தேஹமில்லை. ஆனதுபற்றிப்பிறவியுமே இல்லை. (38) இவருக்கு உலகில் (தனக்கெனச்) செய்யவேண்டிய காரியமெதுவுமில்லை. ஸாதுக்களை ரக்ஷிப்பதற்குவேண்டி ஸாத்விக ராஜஸ தாமஸ யோனிகளில் அவர் அவதாரத்தையடைகிறார். (39) அஜனும், நிர்க்குணனுமான அவர் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்களை அடைகிறார். கிரீடையைக் கடந்தவராயினுங்கூட கிரீடிக்கின்றவராய் குணங்களைக்கொண்டு இவ்விஷயத்தில் ஸிருஷ்டிஸ்திதி ஸம்ஹாரம் இவற்றைச் செய்து வருகிறார். (40) பித்தத்தினலைமந்தசுற்றுதலுடன் கூடின திருஷ்டியினால் பூமியும் கூடச்சுத்துவதுபோல எவ்விதம் காணப்படுகிறதோ இவ்விதமே சித்தமானது கர்த்தாவாக இருக்கும்பொழுது அந்தச் சித்தத்தில் அஹம் புத்தி (நான் என்ற புத்தி) ஏற்பட்டமையின் ஆத்மாவும் கர்த்தா போல எண்ணப்படுகிறான். (41) †பகவானும் ஹரியுமான இந்தக்கிருஷ்ணன் உங்களுக்குமட்டுமே ஆத்மஜனன்று. பின்னேயோவெனில் அவர் எல்லாருக்குமே ஆத்மஜனாகவும், ஆத்மா

---

(*) மதுரையிலுள்ள தேவகீ வஸுதேவர்களை விட்டு இங்கு வருவதற்கு இடமேது ? என்பீரேல் சொல்லுகிறேன் கேளுங்கள் எனச் சொல்லுகிறார். †உண்மையில் பார்க்குங்கால் ஜீவனுக்கே கர்த்திருத்வம் கிடையாதிருக்க ஸர்வேசுவரனுக்கு எங்கிருந்து அது ஏற்படும் என்பது கருத்து.

च। विनाच्युताद्वस्तु तरां न वाच्यं स एव सर्वं परमार्थभूतः॥४३॥ एवं निशा सा ब्रुवतोर्व्यतीता नन्दस्य कृष्णानुचरस्य राजन्। गोप्यः समुत्थाय निरूप्य दीपान्वास्तून्समभ्यर्च्य दधीन्यमन्थन्॥ ४४॥ ता दीपदीप्तैर्मणिभिर्विरेजू रज्जूर्विकर्षद्भुजकङ्कणस्रजः। चलन्नितम्बस्तनहारकुण्डलत्विषत्कपोलारुणकुङ्कुमाननाः॥ ४५॥ उद्गायतीनामरविन्दलोचनं व्रजाङ्गनानां दिवमस्पृशद्ध्वनिः। दध्नश्च निर्मन्थनशब्दमिश्रितो निरस्यते येन दिशाममङ्गलम्॥ ४६॥ भगवत्युदिते सूर्ये नन्दद्वारि व्रजौकसः। दृष्ट्वा रथं शात-

---

வாகவும், பிதாவாகவும், மாதாவாகவும், ஈஶ்வரனுகவுமன்றே இருக்கிறுர். (42) நேரில் காணப்பட்டது, காதால் கேட்கப்பட்டது, சென்ற காலத்திலுள்ளது, நிகழ் காலத்திலுள்ளது, இனி வரப்போகின்றது, ஸ்தாவரமாயுள்ளது, ஜங்கமமாயுள்ளது, பெரிதாயுள்ளது, அற்பமாயுள்ளது ஆகிய எல்லாப்பொருளும் அச்யுதனுன ஸ்ரீகிருஷ்ணனைவிட வேறுபட்டதென நிஸ்சயமாகச் சொல்லமுடியாது. அந்தக் கிருஷ்ணனே உண்மையிலிருக்கும் பொருளாக ஆகிறுர். (43) ஹே ராஜன்! நந்தகோபரும், கிருஷ்ணபக்தரான உத்தவரும் இவ்விதம் பேசிக்கொண்டிருக்கும்பொழுது அந்த இரவு(மட்டும்)சென்றுவிட்டது. கோபிகைகள் எழுந்து தீபங்களைப்பற்றவைத்துக்கொண்டும் வாஸ்து பூஜைகளைச்செய்துகொண்டும் தயிர்களைக்கடைந்தனர்.(44) தயிர்களை இழுக்கின்ற கைகளில் கங்கணங்களின் மாலைகளையுடையவர்களாகவும், அசைகின்ற பின்தட்டுகள், ஸ்தனங்கள், முக்தாஹாரங்கள் இவற்றையுடையவர்களாகவும், குண்டலங்களினுல் விளங்குகின்ற கன்னங்களையுடையவர்களாகவும், சிவந்த குங்குமங்களையுடைய முகங்களையுடையவர்களாகவுமிருக்கின்ற அந்தக் கோபிகைகள் தீபப்ரகாசங்களினுல் பிரகாசிக்கின்ற பணிகளினுல் மிக்க விளங்கினர். (45) புண்டரீகாக்ஷனைக் குறித்து உறத்துப்பாடுகின்ற கோபஸ்திரிகளுடைய த்வனியானது தயிர் கடைவதாலுண்டான சப்தத்துடன் கலந்ததாய்க்கொண்டு ஆகாசத்தைபளாவிற்று. இந்தச்சப்தத்தினுல் திக்குகளின் அமங்களமும் நீக்கப்பட்டது. (46) ஸூரிய பகவான் உதயமானதும் கோகுலவாசிகளான கோபிகைகள் நந்தகோபருடைய வாயிலில் பொன்மயமான தேரைக்கண்டு இது யாருடையது எனச்சொல்லிக்கொண்டனர். (47) எவன் கம்ஸனுடைய

कौम्भं कस्यायमिति चाब्रुवन् ॥ ४७ ॥ अक्रूर आगतः किं वा यः कंसस्यार्थसाधकः। येन नीतो मधुपुरीं कृष्णः कमललोचनः॥ ४८ ॥ किं साधयिष्यत्यस्माभिर्भर्तुः प्रीतस्य निष्कृतिम्। इति स्त्रीणां वदन्तीनामुद्धवोऽगात्कृताह्निकः॥ ४९ ॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्धे नन्दशोकापनयनं नाम षट्चत्वारिंशोऽध्यायः ॥ ४६ ॥



॥ अथ सप्तचत्वारिंशोऽध्यायः ॥

श्रीशुक उवाच—तं वीक्ष्य कृष्णानुचरं व्रजस्त्रियः प्रलम्बबाहुं नवकञ्जलोचनम्। पीताम्बरं पुष्करमालिनं लसन्मुखारविन्दं परिमृष्टकुण्ड

---

கார்யத்தைச்சாதிப்பவனே, கமலலோசனனை கிருஷ்ணன் எவனால் மதுரைக்கு அழைத்துச்செல்லப்பட்டானே அந்த அக்ரூரன் வந்துவிட்டானு என்னே? (48) நம்மைக்கொண்டு இறந்துபோன கம்ஸனுக்கு என்னதைச் சாதிக்கப்போகின்றானே? என ஸ்திரீகள் சொல்லிக் கொண்டிருக்கும்பொழுது உத்தவர் காலைக்கடனை முடித்துக் கொண்டு வந்து சேர்ந்தார். (49) (எ-று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண தசமஸ்கந்த பூர்வார்த்தத்தில் நந்தகோபரின் சோகாபநயனம் என்ற நாற்பத்தாறுவது அத்தியாயம் முற்றிற்று.



## நாற்பத்தேழாவது அத்தியாயம்.

(அ-கை) सप्तचत्वारिंशकेऽथ कृष्णादेशेन गोपिकाः।
बोधयित्वोद्धवस्तत्त्वमनुज्ञाप्यागमत्पुरीम् ॥ १ ॥

(க-ரை) பிறகு உத்தவர் கிருஷ்ணனுடைய உத்திரவுப்படி கோபிகைகளுக்குத் தத்துவத்தையுபதேசித்து அவர்களிடம் விடைபெற்றுக்கொண்டு மதுரையையடைந்தார் என இந்த நாற்பத்தேழாவது அத்தியாயத்திலுபதேசிக்கப்படுகிறது. (1) (எ-று)

लम् ॥ १ ॥ शुचिस्मिताः कोऽयमपीच्यदर्शनः कुतश्च कस्याच्युतवेषभूषणः। इति स्म सर्वाः परिवव्रुरुत्सुकास्तमुत्तमश्लोकपदाम्बुजाश्रयम् ॥ २ ॥ तं प्रश्रयेणावनताः सुसत्कृतं सव्रीडहासेक्षणसूनृतादिभिः। रहस्यपृच्छन्नुपविष्टमासने विज्ञाय सन्देशहरं रमापतेः॥ ३ ॥ जानीमस्त्वां यदुपतेः पार्षदं समुपागतम्। भर्त्रेह प्रेषितः पित्रोर्भवान्प्रियचिकीर्षया ॥४॥ अन्यथा

---

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்.—எல்லா கோபஸ்திரீகளும் முழங்கால்வரை தொங்குகின்ற கைகளையுடையவரும், அன்றுமலர்ந்த தாமரைபுஷ்பம் போன்ற கண்களையுடையவரும், பொன்னிறமான வஸ்திரத்தையணிந்தவரும் * துளஸிமாலையையணிந்தவரும், ப்ரகாசிக்கின்ற முகாரவிந்தத்தையுடையவரும், சுத்தமான குண்டலத்தையணிந்தவருமான அந்த உத்தவரைக்கண்டு சுத்தமான புன்சிரிப்புடன் கூடினவர்களாயும் 'அழகிய பார்வையையுடையவனும், அச்யுதனுடையதுபோன்ற வேஷம் பூஷணம் இவற்றையுடையவனுமான இந்தப் புருஷன்யார்? எங்கிருந்து வந்தான்? யாரைச்சார்ந்தவன்' எனச் சொல்லுகின்றவர்களாயும் ஆவல்கொண்டவர்களாயும் கொண்டு உத்தமச்லோகனான ஸ்ரீகிருஷ்ணனுடைய பாதாரவிந்தத்தை யாச்ரயித்தவரான உத்தவரைச் சூழ்ந்துகொண்டனர். (1–2) பிறகு அந்த உத்தவரை ரமாபதியான ஸ்ரீகிருஷ்ணனுடைய வாய்மொழியைக் கொண்டுவந்தவராக அறிந்துகொண்டு (பூஜைக்கு வேண்டித் தங்களால் கொடுக்கப்பட்ட) ஆஸனத்திலுட்கார்ந்தவரும், வெட்கத்துடனும் சிரிப்புடனும் கூடின பார்வை, ப்ரியமான வார்த்தை முதலியவற்றால் நன்கு மரியாதை செய்யப்பட்டவருமான அவரை வினயத்துடன் வணங்கினவர்களான கோபிகைகள் தனித்த இடத்திலிருந்து கேட்கத் தொடங்கினர். (3) இங்குவந்த உம்மை யதுபதியான ஸ்ரீகிருஷ்ணனுடைய பார்ஷத (ஸேவக) னாக நாங்களறிகின்றோம். நீர் அவரது தாய்தந்தைகளுக்கு ப்ரியத்தைச் செய்யும் விருப்பத்துடன் உங்கள் யஜமானனால் இங்கு அனுப்பப்பட்

---

* पुष्करमालिनम्=என்பதுமூலம் இதற்குத் துளஸிமாலையென்றும், தாமரைமணி மாலையென்றும், நவரத்ன மாலையென்றும் பலவாறு பொருள் கூறுகின்றனர்.

गोव्रजे तस्य स्मरणीयं न चक्ष्महे। स्नेहानुबन्धो बन्धूनां मुनेरपि सुदुस्त्यजः॥ ५॥ अन्येष्वर्थकृता मैत्री यावदर्थविडम्बनम्। पुम्भिः स्त्रीषु कृता यद्वत्सुमनःस्विव षट्पदैः॥ ६॥ निःस्वं त्यजन्ति गणिका अकल्पं नृपतिं प्रजाः। अधीतविद्या आचार्यमृत्विजो दत्तदक्षिणम्॥ ७॥ खगा वीतफलं वृक्षं भुक्त्वा चातिथयो गृहम्। दग्धं मृगास्तथारण्यं जारो भुक्त्वा रतां स्त्रियम्॥ ८॥ इति गोप्यो हि गोविन्दे गतवाक्कायमानसाः। कृष्णदूते व्रजं याते उद्धवे त्यक्तलौकिकाः॥ ९॥ गायन्त्यः प्रियकर्माणि

---

டிருப்பீர். (4) இல்லையேல் அந்தக் கிருஷ்ணனுக்குக் கோகுலத்தில் நினைக்கவேண்டிய பொருளொன்றிருப்பதாக நாங்கள் காணவில்லை. பந்துக்களுடைய ஸ்னேஹப்பற்றானது முனிக்கும் விடவியலாத தன்றோ? (5) தாய்தந்தையர்களைத் தவிர்த்து மற்றவிடத்தில் செய்யப்படும் சினேஹமானது புருஷர்களால் ஸ்திரீகளிடத்தில் செய்யப்பட்ட சினேஹம்போலும், வண்டுகளால் புஷ்பங்களிடத்தில் செய்யப்பட்டஸ்னேஹம்போலும் கார்யத்துக்குவேண்டியே ஏற்படுவதால் ப்ரயோஜனம் கிடைக்கும்வரையில்தான் நடிக்கப்படுகின்றது. (6) வேசையர் பணமற்றவனையும், ப்ரஜைகள் அசக்தனான அரசனையும், வித்தைகற்றுமுடிந்தவர் ஆசிரியரையும், ருத்விக்குகள் தக்ஷிணை கொடுத்த யஜமானனையும், பறவைகள் பழங்களற்ற மரத்தையும், அதிதிகள் போஜனஞ்செய்தபின்னர் அவ்வீட்டையும், மான்கள் காட்டுத்தீயினால் எரிக்கப்பட்ட அரண்யத்தையும், அதுபோலவே சோரபுருஷன் அனுபவித்தபின்னர் தன்னிடம் பற்றுள்ள ஸ்திரீயையும் தள்ளிவிடுகின்றனர். (7-8) எனக் கோபிகைகள் கோவிந்தனிட மீடுபட்ட வாக்குசரீரம் மனது இவற்றையுடையவர்களாய்க் கொண்டும் கிருஷ்ணதூதரான உத்தவர் கோகுலம்வந்ததும் லோகவியவஹாரத்தை இழந்தவர்களாய்க் கொண்டும், ப்ரியனான ஸ்ரீகிருஷ்ணனுடைய லீலைகளைக் கானஞ்செய்து கொண்டும், அழுதுகொண்டும், * கைசோராவஸ்தையிலும் பால்யாவஸ்தையிலுமுள்ள அந்தக்

---

* 1முதல் 5வயதுவரை பால்யமென்றும், 5முதல் 10வயதுவரை பௌகண்டமென்றும், 10முதல் 15வயதுவரை கைசோராவஸ்தை என்றும் சொல்லப்படும்.

**स्त्यश्च गतह्रियः। तस्य संस्मृत्य संस्मृत्य यानि कैशोरबाल्ययोः॥१०॥ काचिन्मधुकरं दृष्ट्वा ध्यायन्ती कृष्णसङ्गमम्। प्रियप्रस्थापितं दूतं कल्पयित्वेदमब्रवीत्॥ ११॥**

**गोप्युवाच—मधुप कितवबन्धो मा स्पृशाङ्घ्रिं सपत्न्याः कुचविलुलितमालाकुङ्कुमश्मश्रुभिर्नः। वहतु मधुपतिस्तन्मानिनीनां प्रसादं यदुसदसि विडम्ब्यं यस्य दूतस्त्वमीदृक्॥ १२॥ सकृदधरसुधां स्वां मोहिनीं पाययित्वा सुमनस इव सद्यस्तत्यजेऽस्मान्भवादृक्। परिचरति कथं तत्पाद-**

---

க்ருஷ்ணனுடைய லீலைகள் எவையுண்டோ அவற்றை அடிக்கடி நினைத்துக் கொண்டும், லஜ்ஜை யற்றவர்களாகவுமாகி அவனைக் கேட்கத் தொடங்கினர். (9–10) ஒருகோபிகை வண்டைக்கண்டு க்ருஷ்ணனுடைய சேர்க்கையைத் தியானித்தவளாய் (அந்த வண்டை) ப்ரியனான க்ருஷ்ணனால் அனுப்பப்பட்ட தூதனாகக் கல்பித்துக் கொண்டு இதைச் சொல்லத்தொடங்கினாள். (11)

கோபிகை சொல்லத்தொடங்கினாள்.—(*)ஹே மதுப! ஹே கிதவனுடைய (தூர்த்தனான க்ருஷ்ணனுடைய) பந்துவே! சக்களத்தியின் ஸ்தனங்களினால் நன்கு கசக்கப்பட்ட க்ருஷ்ணனுடைய வனமாலையில்பற்றின அந்தஸ்திரீயினுடைய குங்குமங்களுடன்கூடின மீசைகளையுடைய நீ எனது காலைத்தொடாதே. எவருடைய தூதனான நீ இவ்வளவு அவிவேகியாக இருக்கின்றனையோ அந்த யதுபதியானவர் யதுக்களின் ஸபையில் பரிஹஸிக்கத்தகுந்த அந்த ஸ்திரீகளின் ப்ரஸாதத்தையே வஹிக்கட்டும். (எங்களுடைய ப்ரஸாதத்தினால் அவருக்கு ஆகவேண்டுவது என்னை.) (12) *உன்போன்ற அதாவது: கருநிறமுள்ளவனும் கெட்டமனதுள்ளவனுமான க்ருஷ்ணன் நீ புஷ்பங்களை விட்டுவிடுவதுபோல மோஹத்தைத் தருகின்றதும், சொந்தமுமான அதராம்ருதத்தை ஒரேதடவைப் பானஞ்செய்துவைத்து உட

---

(*) गोप्य ऊचुः=கோபிகைகள் சொல்லத்தொடங்கினர் என்று வேறு பாடமும் காணப்படுகிறது. 12-வது சுலோகம் முதல் 21-வது சுலோகம் முடியவுள்ள 10 சுலோகங்கள் ப்ரமரகீதம் எனப்படும். இந்த 10 சுலோகங்களிலும் சித்ரஜல்பம் என்ற முறையினால் சொல்லுகின்றனர். *ஏன் அவரை இவ்விதமவமதிக்கின்றீர்கள். அவர் செய்த குற்றம் யாதெனின்? அதை இந்த 13-வது சுலோகத்தினாற் சொல்லுகின்றனர்.

यदं तु यथा ह्यपि बत हृतचेता उत्तमश्लोकजल्पैः ॥ १३ ॥ किमिह बहु षडङ्घ्रे गायसि त्वं यदूनामधिपतिमगृहाणामग्रतो नः पुराणम् । विजयसख सखीनां गीयतां तत्प्रसङ्गः क्षपितकुचरुजस्ते कल्पयन्तीष्टमिष्टाः ॥ १४ ॥ दिवि भुवि च रसायां काः स्त्रियस्तद्दुरापाः कपटरुचिरहासभ्रूविजृम्भस्य

னேயே எங்களை விலக்கிவிட்டான். செய்நன்றி மறந்தவனுன அவனுடைய சரணாரவிந்தத்தை லக்ஷ்மியானவள் ஏன் ஸேவிக்கின்ருளோ தெரியவில்லையே? உத்தமப்லோகன் என்ற பொய்க்கதைகளிஞல் இழுக்கப்பட்ட சித்தமுள்ளவளாக அவள் ஆகியிருக்கவேண்டும். அந்தோ! இது வெகு கஷ்டம்.(*) (13) †ஆறுகாலுள்ள ஹே வண்டே! வெகுதடவை எங்களால் அனுபவிக்கப்பட்டவனும், யாதவர்களுக்கு அதிபதியுமான ஸ்ரீகிருஷ்ணனைக்குறித்து இங்கு வீடற்றவர்களான எங்கள் முன்னிலையில் வெகுவாக ஏன் நீ பாடுகின்றனை? ஸ்ரீகிருஷ்ணனுக்கு இதுபோழ்துள்ள தோழிகளின் முன்னிலையில் உனதுபாட்டைப்பாடு. (அதாவது: நீ சொல்லவேண்டிய வார்த்தையைச் சொல்லு.) கிருஷ்ணனுக்கு நிரம்பவும் ப்ரியர்களான அவர்கள் அவரது ஆலிங்கனத்தினுல் போக்கப்பட்ட ஸ்தனங்களிலுள்ள காமவிகாரத்தையுடையவர்களாயிருப்பதுபற்றி உனக்கு வேண்டுவனவற்றைக் கொடுப்பர். போகலாம். (14) ‡ஹே கபடியே! தேவலோகத்திலும், பூமியிலும், பாதாளத்திலும் எந்த ஸ்திரீகளிருக்கின்றனரோ அவர்களுள் எவர்கள்தான் அழகிய சிரிப்புடன் புருவத்தை நெரிக்கும் அந்தக் கிருஷ்ணனுக்கு அடைதற்கரிதானவர்கள். எவனது சரணதூளியை லக்ஷ்மீதேவிகூட உபாஸிக்கின்ருளோ அவனுக்கு நாங்கள் எம்மாத்திரம். இவ்விதமிருந்தபோதி

(*) நாங்கள் லக்ஷ்மீபோலப் பொய்க்கதைகளினுல் மோசம் போகக்கூடியவர்களன்று என இதனுல் தெரிவித்தாள் என்பது கருத்து.

† வண்டு வெகுவிதமாக ரீங்காரஞ்செய்வதைக்கண்டு நமது ப்ரஸாதத்தையடையவேண்டிக் கிருஷ்ணனைக்குறித்து நம்மிடம் பாடுகிறது என வெண்ணிக்கொண்டு சொல்லுகிருள்.

‡ ஓ தாயே! இவ்விதம் சொல்லாதீர். உம்மை நினைத்துக்கொண்டு மன்மதனுல் தைரியம் குன்றினவராய் உம்மைச்சமாதானப்படுத்தவேண்டி என்னையனுப்பியிருக்கிருர் என்பாயேல் சொல்லுகிறேன் கேள்.

याः स्युः। चरणरज उपास्ते यस्य भूतिर्वयं का अपि च कृपणपक्षे ह्युत्तमश्लोकशब्दः ॥ १५ ॥ विसृज शिरसि पादं वेद्म्यहं चाटुकारैरनुनयविदुषस्तेऽभ्येत्य दौत्यैर्मुकुन्दात्। स्वकृत इह विसृष्टापत्यपत्यन्यलोका व्यसृजदकृतचेता किं नु सन्धेयमस्मिन् ॥ १६ ॥ मृगयुरिव कपीन्द्रं विव्यधे लुब्धधर्मा स्त्रियमकृत विरूपां स्त्रीजितः कामयानाम्। बलिमपि बलिमत्त्वाऽवेष्टयद्ध्वाङ्क्षवद्यस्तदलमसितसख्यैर्दुस्त्यजस्तत्कथार्थः ॥ १७ ॥ यदनुचरित-

---

இங்கூட ஏழைகளிடத்தில் கருணையுள்ள புருஷனிடத்திற்றான் உத்தமஶ்லோகன் என்ற சப்தம் பொருந்தும் என நீ போய்ச் சொல்ல வேண்டும். (15) *உன்னுடைய தலையில் ஸம்பந்தித்த எங்களது காலை விட்டுவிடு. முகுந்தனிடமிருந்து கற்றுக்கொண்டு செய்யப்பட்ட தூதனுடைய காரியங்களான ப்ரியவார்த்தைகளின் ரசனைகள் மூலம் ப்ரார்த்திப்பதில் ஸமர்த்தனான உன்னுடைய செய்கையாவையும் நானறிவேன். தனக்கு (ஸ்ரீகிருஷ்ணனுக்கு) வேண்டியே இங்கு விடப்பட்ட புத்திரன் பதி (தர்மஸாத்யமான) ஸ்வர்க்காதி லோகம் இவற்றையுடையவர்களான எங்களைச் சஞ்சலசித்தனான எவன் பரித்யாகஞ் செய்தானோ இவன் விஷயத்தில் ஆலோசிக்க வேண்டுவது என்ன இருக்கின்றது. (16) (*) தர்மலோபத்தையடைந்த (கொடுமைவாய்ந்த) எவன் வேடன் போல வானரஸ்ரேஷ்டனான வாலியைக் கொன்றானோ, அவ்விதமே ஸீதைக்கு வசப்பட்டவனாய்க்கொண்டு மன்மதனையே ப்ராப்தி ஸாதனமாகக்கொண்ட ஸ்திரீயான சூர்ப்பணகையைக் காது மூக்கு இவற்றையறுத்து குரூபையாக்கினானோ, அவன் கொடுத்த பலியை (பூஜையை)ப் பெற்றுக்கொண்டு காக்கைபோல பலிசக்கிரவர்த்தியைக் கட்டினானோ அந்தக் கருப்பனுடைய (கிருஷ்ணனுடைய) சினேஹங்கள் போதும்.(1) ஆயினும், அவனது கதாரூபமான பொருளானது

---

* காலடியில் பிரவேசிக்கும் வண்டை மன்னிப்பு கேட்கவேண்டி காலில் விழுவதாக எண்ணிக்கொண்டு சொல்லுகிறாள்.

(*) இந்தக் கிருஷ்ணன் முந்தின பிறவிகளிற்செய்த காரியங்களை நினைத்து நான் நிரம்பவும் பயப்படுகிறேன் என இதனைச் சொல்லுகிறாள்.

(1) இங்ஙனமாயின் நித்யம் அவனை ஏன்பாடுகின்றனை என்பாயேல் சொல்லுகிறேன் கேள்.

लीलाकर्णपीयूषविप्रुट्सकृददनविधूतद्वन्द्वधर्मा विनष्टाः। सपदि गृहकुटुम्बं दीनमुत्सृज्य दीना बहव इह विहङ्गा भिक्षुचर्यां चरन्ति ॥ १८ ॥

वयमृतमिव जिह्मव्याहृतं श्रद्दधानाः कुलिकरुतमिवाज्ञाः कृष्णवध्वो हरिण्यः। ददृशुरसकृदेतत्तन्नखस्पर्शतीव्रस्मररुज उपमन्त्रिन्भण्यतामन्य-

---

விட்டுவிட முடியாததாகவிருக்கிறது.† (17) ‡இந்தக் கிருஷ்ணனுடைய அவதாரசரித்திர லீலாரூபமான கர்ணாம்ருதத்தின் துளியை ஒருதடவைப் பானஞ்செய்வதன்மூலம் போக்கப்பட்ட ராகத்வேஷாதிகளான தர்மங்களையுடையவர்களாகவும், விநஷ்டர்களாகவும் (அஸத்துல்யர்களாகவும்) ஆகி துக்கிதமான வீடு குடும்பம் இவற்றை உடனேயே விடுத்து தீனர்களாகவும் (எவ்வித போகமுமற்றவர்களாகவும்) பரமஹம்ஸர்களாகவும் (ஸன்யாஸிகளாகவும்) ஆகி வெகுஜனங்கள் இப்புவியில் பிக்ஷைவாங்கும் நடத்தையைக் கைக்கொண்டுதிரிகின்றனரே? (ஆயினும் நாங்கள் அவரை விடமுடியாதவர்களாக விருக்கின்றோம்.) (18) ஹே உபமந்த்ரின் (ஹே தூத!) வேடுவனுடைய பாட்டை ஸத்யமென நம்பினவைகளும், அறிவற்றவைகளும், கிருஷ்ணமானுடைய பாரியைகளுமான பெண் மான்கள் (பாணங்களாலடிபட்டு ரோகங்களை எவ்விதம் காண்கின்றனவோ) இவ்விதமே கபடியான கிருஷ்ணனுடைய வார்த்தையை ஸத்தியம் போல நம்பினவர்களும், அவனிடத்திலாசைகொண்டவர்களுமான நாங்கள் அவனுடைய நகங்களின் ஸ்பரிசத்தினலேற்பட்ட கடுமையான மன்மதனாலுண்டான பீடைகளையே அடிக்கடி கண்டோம். ஆனதுபற்றி (அவனைப்பற்றின பேச்சைவிட்டு) வேறு வார்த்தைகளைப் பேசுவாயாக. (19) *ப்ரியனுன ஸ்ரீகிருஷ்ணனு

---

† இது அவனது கதையின் குற்றமேயன்றி எங்கள் குற்றமன்று என்று கருத்து. ‡ அவனுடைய கதையானது அறம் பொருள் இன்பம் என்ற மூன்று புருஷார்த்தங்களாகிற கொடியை வேருடன் பிடுங்கி எறிந்துவிடும் என்பதை நாங்கள் நிச்சயமாய் அறிந்திருக்கிறோமாயினும் அதை விட முடியாதவர்களாகவாகிவிட்டோம், யாது செய்வோம் என இந்த சுலோகத்தினல் சொல்லுகின்றுள்.

* போய் திரும்பிவந்த வண்டைப்பார்த்து இந்த சுலோகத்தினல் சொல்லுகிறுன் எனக் கொள்ளவும்.

वार्ता ॥ १९ ॥ प्रियसख पुनरागाः प्रेयसा प्रेषितः किं वरय किमनुरुन्धे माननीयोऽसि मेऽङ्ग । नयसि कथमिहास्मान्दुस्त्यजद्वन्द्वपार्श्वं सततमुरसि सौम्य श्रीर्वधूः साकमास्ते ॥ २० ॥ अपि बत मधुपुर्यामार्यपुत्रोऽधुनास्ते स्मरति स पितृगेहान्सौम्य बन्धूंश्च गोपान् । क्वचिदपि स कथा नः किङ्करीणां गृणीते भुजमगुरुसुगन्धं मूर्ध्न्यधास्यत्कदा नु ॥ २१ ॥ श्रीशुक उवाच— अथोद्धवो निशम्यैवं कृष्णदर्शनलालसाः । सान्त्वयन्प्रियसन्देशैर्गोपीरिदमभाषत ॥ २२ ॥ उद्धव उवाच—अहो यूयं स्म पूर्णार्था भवत्यो लोक-

னுடைய தோழனே! ஹே அங்க! ப்ரியனுன ஸ்ரீகிருஷ்ணனுல் அனுப்பப்பட்டவனுய் நீ திரும்பவும் வந்தனையா என்ன? நீ என்னுல் பூஜிக்கத்தக்கவனுகவாகின்றனை. ஆனதுபற்றி எதையடைய விரும்புகின்றனையோ அதைக் கேட்டுக்கொள்ளு. இங்கிருக்கின்ற எங்களை விடுதற்கியலாத மிதுனத்தன்மையையுடைய ஸ்ரீகிருஷ்ணனுடைய ஸமீபத்துக்கு ஏன் கொண்டுபோகின்றனை? ஹே ஸௌம்ய! லக்ஷ்மீ என்ற ஸ்திரீயானவள் எப்பொழுதும் மார்பில் கூடவே வஸிக்கின்றுளன்றே. (லக்ஷ்மியானவள் இணைபிரியாது அவனது மார்பிலேயே வஸிப்பதால் எங்களாலவருக்கு ஆகவேண்டுவது ஒன்றுமில்லையாதலால் எங்களை அவர் பொருட்படுத்தமாட்டார் என்பது கருத்து.) (20) ஹே ஸௌம்ய! ஆஹா! (குருகுலத்தினின்றும் திரும்பிவந்து) ஆர்யபுத்திரனுன கிருஷ்ணன் இப்பொழுது மதுராபட்டினத்தில் வஸிக்கின்றுரா என்ன? அவர் பிதிரு கிருஹத்தையும், பந்துக்களான கோபாலர்களையும் நினைப்பதுண்டா? அவர் எப்பொழுதாவது அடிமைகளான எங்களுடைய வார்த்தையைச் சொல்லுவதுண்டா? அகில் கட்டையினுடையதுபோன்று நறுமணமுள்ள கையை எப்பொழுதுதான் எங்களுடைய தலையில் வைப்பாரோ. (21)

ஸ்ரீசுகர் சொல்லுகிறுர்—இவ்விதம் கேட்ட பிறகு உத்தவர் கிருஷ்ணனைப் பார்ப்பதில் ஆவல்கொண்டவர்களான கோபிகைகளை ப்ரியனுன ஸ்ரீகிருஷ்ணனுடைய வாய்மொழிகளினுல் ஸமாதானப் படுத்துகின்றவராய் இதைச் சொல்லத் தொடங்கினர். (22) உத்தவர் சொல்லுகிறுர்—என்ன ஆஸ்சரியம். பகவானுன வாசு

पूजिताः। वासुदेवे भगवति यासामित्यर्पितं मनः॥ २३ ॥ दानव्रततपोहोमजपस्वाध्यायसंयमैः। श्रेयोभिर्विविधैश्चान्यैः कृष्णे भक्तिर्हि साध्यते॥२४॥ भगवत्युत्तमश्लोके भवतीभिरनुत्तमा। भक्तिः प्रवर्तिता दिष्ट्या मुनीनामपि दुर्लभा ॥ २५ ॥ दिष्ट्या पुत्रान्पतीन्देहान्स्वजनान्भवनानि च। हित्वा वृणीत यूयं यत्कृष्णाख्यं पुरुषं परम् ॥ २६ ॥ सर्वात्मभावोऽधिगतो भवतीनामधोक्षजे। विरहेण महाभागा महान्मेऽनुग्रहः कृतः॥ २७ ॥ श्रूयतां प्रियसन्देशो भवतीनां सुखावहः। यमादायागतो भद्रा अहं भर्तू रहस्करः॥

श्रीभगवानुवाच—भवतीनां वियोगो मे नहि सर्वात्मना क्वचित्। यथा भूतानि भूतेषु खं वाय्वग्निर्जलं मही। तथाहं च मनःप्राणभूतेन्द्रिय-

---

தேவனிடத்தில் எவர்களுடைய மனது இம்மாதிரி அர்ப்பணஞ் செய்யப்பட்டதோ அந்த நீங்களே கிருதார்த்தர்களும், லோகபூஜிதர்களுமாவீர். (23) தானம், வ்ரதம், தவம், ஹோமம், ஜபம், வேதமோதுதல், ஸமாதி, மற்றும் பற்பலவிதங்களான நற்காரியங்கள் இவைகளாலன்றோ ஸ்ரீகிருஷ்ணனிடத்தில் பக்தி உண்டாக்கப்படுகிறது. (24) உத்தமஸ்லோகனான பகவானிடத்தில் முனிகளுக்கும் துர்லபமானதும் ஸர்வோத்கிருஷ்டமுமான யாதொருபக்தியுண்டோ அது உங்களால் செய்யப்பட்டுவருகிறது. இது தைவாதீனமேயாகும். (25) நீங்கள் புத்திரர்களையும், பதிகளையும், தேஹங்களையும், பந்துஜனங்களையும், வீடுகளையும் விட்டு கிருஷ்ணனெனப் பெரிய பரமபுருஷனை வரித்தீர்கள் என்பது யாதுண்டோ இது மஹாபாக்கியமே யாகும். (26) ஹே மஹாபாக்கியசாலிகளே! அதோக்ஷஜனை ஸ்ரீகிருஷ்ணனிடத்தில் உங்களுக்கு விரஹத்தினால் ஏகாந்தபக்தியானது ஏற்பட்டுவிட்டது (உங்களுடைய ப்ரேமையாகிற சுகத்தைக்காண்பித்தல்மூலம்) எனக்கே மேலான அனுக்கிரஹம் செய்யப்பட்டதாக வாகிறது. (27) ஹே பத்ரைகளே! பர்த்தாவான ஸ்ரீகிருஷ்ணனுக்கு ரஹஸ்யகாரியத்தைச் செய்கின்ற நான் எதைப்பெற்றுக் கொண்டு வந்தேனோ அந்தப்ரியனின் வாய்மொழியைக் கேளுங்கள். அது உங்களுக்குச் சுகத்தை விளைவிக்கும். (28) ஸ்ரீபகவானின் வாய்மொழியாவது—"ஸர்வத்துக்கும் உபாதான காரணமான என்னுடன் வியோகமானது உங்களுக்கு, ஸம்பவிக்கவே

गुणाश्रयः॥ २९ ॥ आत्मन्येवात्मनात्मानं सृजे हन्म्यनुपालये। आत्ममायानुभावेन भूतेन्द्रियगुणात्मना ॥ ३० ॥ आत्मा ज्ञानमयः शुद्धो व्यतिरिक्तोऽगुणान्वयः। सुषुप्तिस्वप्नजाग्रद्भिर्मायावृत्तिभिरीयते ॥ ३१ ॥ येनेन्द्रियार्थान्ध्यायेत मृषा स्वप्नवदुत्थितः। तन्निरुन्ध्यादिन्द्रियाणि विनिद्रः प्रत्य-

---

மாட்டாது. அசையுமசையாப் பொருளான காரியவர்க்கங்களில் அதன் காரணங்களான ஆகாசம் வாயு, நெருப்பு, ஜலம் பூமி என்ற பூதங்கள் எப்படி நிறைந்து நிற்கின்றனவோ அவ்விதமே நானும் மனது, ப்ராணன், பூதங்கள் இந்திரியங்கள், அவற்றின் காரணங்கள் இவற்றுக்கு ஆப்ரயமாயாகுதல்மூலம் தொடர்ந்திருக்கிறேன். (29) * நானே எனக்கதீனமான மாயாசக்திப்ரபாவத்தால் ஆத்மாவாகிற அதிஷ்டானத்தில் ஆத்மாவாகிற நிமித்தத்தினால் உபாதானரூபமான ஆத்மாவையே மஹாபூதரூபத்தாலும், இந்திரியரூபத்தாலும், குணரூபத்தாலும், ஜீவரூபத்தாலும் ஸிருஷ்டிக்கவும் அழிக்கவும், பரிபாலிக்கவுஞ் செய்கிறேன்.† (30) ‡ ஆத்மாவானது க்ஞானமயமும், ஆனதுபற்றியே பூதேந்திரியாதி ஜடபதார்த்தங்களைவிட வேறுபட்டதும், ஆனதுபற்றியே அவற்றின் குணஸம்பந்தமற்றதும், சுத்தமுமாகும். ஆயினும் மாயாகாரியமனை விருத்திரூபங்களான ஸுஷுப்த ஸ்வப்னஜாக்கிரங்களால் (*) விப்வனாகவும், தைஜஸனாகவும், ப்ராக்ஞனாகவும் அறியப்படுகின்றானேயொழிய இயற்கையிலில்லை. (31) ஸ்வப்பினத்தினின்றும் எழுந்த புருஷன் மித்யாபூதமாகவே (உண்மையிலில்லாததாகவே) உள்ள ஸ்வப்பினத்திற்கண்டபொருளை எவ்விதம் சிந்திப்பானே இவ்விதமே மித்யா

---

* காரணத்வமும் ஸர்வானுகதத்வமும் சொல்லும்பக்ஷத்தில் காரிய காரணபேதம் வரும் என்றாலோ அதற்குவேண்டி இந்தசுலோகம் சொல்லப்படுகிறது. † நானே அதிஷ்டானமாயும், நிமித்தமாயும், உபாதானமாயும் ஆவதால் காரியகாரணபேதம் வருவதற்கிடமில்லை என்பது பெறப்பட்டது. ‡ ஆத்மா பூதாதிரூபனாக இருந்தால் அதற்குறியதோஷம் ஆத்மாவுக்கும் வரும் எனின்? அவ்விதம் வராதென இதனாற்சொல்லப்படுகிறது. (*) ஜாக்கிரதவஸ்தாவபாஸகசைதன்யம் விசுவனென்றும், ஸ்வப்பினாவஸ்தாவபாஸகசைதன்யம் தைஜஸனென்றும், ஸுஷுப்த்யவஸ்தாவபாஸகசைதன்யம் ப்ராக்ஞனென்றும் சொல்லப்படும்.

**पद्यत ॥ ३२ ॥ एतदन्तः समाम्नायो योगः साङ्ख्यं मनीषिणाम् । त्यागस्तपो दमः सत्यं समुद्रान्ता इवापगाः ॥ ३३ ॥ यत्त्वहं भवतीनां वै दूरे वर्ते प्रियो दृशाम् । मनसः सन्निकर्षार्थं मदनुध्यानकाम्यया ॥ ३४ ॥ यथा दूरचरे प्रेष्ठे मन आविश्य वर्तते । स्त्रीणां च न तथा चेतः सन्निकृष्टेऽक्षगोचरे ॥ ३५ ॥ मय्यावेश्य मनः कृत्स्नं विमुक्ताशेषवृत्ति यत् । अनुस्मरन्त्यो मां नित्यमचिरान्मामुपैष्यथ ॥३६॥ या मया क्रीडता रात्र्यां वनेऽस्मिन्व्रज आस्थिताः । अलब्धरासाः कल्याण्यो माऽऽपुर्मद्वीर्यचिन्तया ॥ ३७ ॥ श्रीशुक उवाच—एवं प्रियतमादिष्टमाकर्ण्य व्रजयोषितः । ता ऊचुरुद्धवं**

---

பூதங்களாகவேயுள்ள விஷயங்களை எந்த மனத்தினுல் சிந்திப்பானே, சிந்திக்கின்றவனைய் எந்த மனத்தினுல் இந்திரியங்களையடைவானே அந்த மனத்தைச் சோம்பலற்றவனைய்க் கொண்டு நிரோதஞ் செய்ய (அடக்க) வேண்டும். (32) வேதம், அஷ்டாங்கயோகம், ஆத்மானுத்மவிவேகம், தீரர்களின் ஸன்யாஸம், ஸ்வதர்மம், இந்திரிய ஜயம், உண்மைபேசல் ஆகியயாவும் ஸமுத்திரத்தை முடிவிடமாகக்கொண்ட நதிகள்போல இந்த மனோநிரோதத்தையே முடிவாகக் கொண்டவைகளாகின்றன. (33) உங்களுக்கு ப்ரியனுன நான் கண்களுக்குத் தூரத்தில் இருக்கின்றேன் என்பது யாதுண்டோ அது எனது அனுத்யானம் ஸித்திக்கும்வாயிலாக மனத்துக்கு ஸாமீப்யம் ஏற்படவேண்டியேயாகும். (34) வெகுதூரத்திலிருக்கின்ற மிக்க ப்ரேமைவாய்ந்த பொருளில் ஸ்திரீகளின் மனது எவ்விதம் பற்றிக்கொண்டிநிற்குமோ அதுபோல ஸமீபத்திலுள்ளதும் இந்திரியத்துக்கு விஷயமாயுள்ளதுமான பொருளில் சித்தம் பிரவேசிப்பதில்லை. (35) விடப்பட்ட வேறு எல்லாவிருத்திகளையுமுடைய மனது முழுதையும் என்னிடம் செலுத்தி என்னை எப்பொழுதும் நினைக்கிறீர்கள் என்பது யாதுண்டோ இதனுல் அதிசீக்கிரத்தில் என்னையடைந்துவிடப் போகின்றீர்கள். (36) ஹே கல்யாணிகளே! சொந்தப் பர்த்தாக்களால் தடைசெய்யப்பட்டு கோகுலத்திலேயே இருந்த ஸ்திரீகள் எவரோ அவர் வனத்தில் விளையாடுகின்ற என்னுடன் க்ரீடையை யடையாதவர்களாய் எனது லீலையையே சிந்தித்துக்கொண்டு என்னையே அடைந்தனரன்றே. (37)

प्रीतास्तत्सन्देशागतस्मृतीः॥ ३८ ॥ गोप्य ऊचुः—दिष्ट्याहितो हतः कंसो यदूनां सानुगोऽघकृत्। दिष्ट्यासैर्लब्धसर्वार्थैः कुशल्यास्तेऽच्युतोऽधुना॥ ३९ ॥ कच्चिद्गदाग्रजः सौम्य करोति पुरयोषिताम्। प्रीतिं नः स्निग्धसव्रीडहासोदारेक्षणार्चितः॥ ४० ॥ कथं रतिविशेषज्ञः प्रियश्च वरयोषिताम्। नानुबध्येत तद्वाक्यैर्विभ्रमैश्चानुभाजितः॥ ४१ ॥ अपि स्मरति नः साधो गोविन्दः प्रस्तुते क्वचित्। गोष्ठीमध्ये पुरस्त्रीणां ग्राम्याः स्वैरकथान्तरे॥ ४२ ॥ ताः किं निशाः स्मरति यासु तदा प्रियाभिर्वृन्दावने

---

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—அந்தக் கோபஸ்திரீகள் இவ்விதம் ப்ரியதமனான ஸ்ரீக்ருஷ்ணனுடைய வாய்மொழியைக்கேட்டு ஸந்தோஷித்தவர்களாயும், அவ்வாய்மொழி மூலம் கிடைத்த நினைவையுடையவர்களாயும் கொண்டு உத்தவரைப்பார்த்துச் சொல்லத்தொடங்கினர். (38) கோபிகைகள் சொல்லலுற்றனர் — யாதவர்களுக்குச் சத்துருவும், துக்கத்தைத் தருபவனுமான கம்ஸன் தனது பரிவாரத்துடன் கொல்லப்பட்டான். இது வெகு ஆனந்தமே. எல்லாப் பொருள்களையுமடைந்தவர்களான இஷ்ட ஜனங்களுடன் அச்யுதனான க்ருஷ்ணன் இப்பொழுது க்ஷேமமாகவே இருக்கிறார். இதுவும் வெகு ஆனந்தமே. (39) ஹே ஸௌம்ய! க்ருஷ்ணன் அழகு பொருந்தினதும் லஜ்ஜையுடன் கூடினதுமான புன்சிரிப்பென்ன கம்பீரமான பார்வை என்ன இவற்றால் அர்ச்சிக்கப்பட்டவனாய்க் கொண்டு எங்களிடத்திற்செய்யவேண்டிய ப்ரீதியைப் பட்டினத்து ஸ்திரீகள் விஷயத்தில் செய்து வருகின்றாரா? (40) ரதிவிசேஷத்தையறிந்தவனும், சிறந்த ஸ்திரீகளுக்கு ப்ரியனுமான ஸ்ரீக்ருஷ்ணன் அவர்களுடைய வார்த்தைகளினாலும், லீலைகளினாலும் பூஜிக்கப்பட்டவனாய் அவர்களிடத்து எவ்விதம் பற்றையடையாதிருப்பான்.(41) ஹே ஸாதோ! கோவிந்தன் பட்டினத்து ஸ்திரீகளின் கூட்டத்து நடுவில் ஸ்வச்சந்தமான கதைபேசுமிடையில் கிராமவாஸிகளான எங்களைப்பற்றி ஸமயம் வருங்கால் ஒருதடவையாவது நினைப்பதுண்டா? (42) ஆம்பல், முல்லை, சந்திரன் இவற்றால் அழகுவாய்ந்த பிருந்தாவனத்தில் ப்ரியைகளான எங்களால் புகழப்பட்ட மனோக்ஞமான கதையையுடையவனாய் ஒலிக்கும் பாத

कुमुदकुन्दशशाङ्करम्ये। रेमे क्वणच्चरणनूपुररासगोष्ठ्यामस्माभिरीडितमनोज्ञकथः कदाचित् ॥ ४३ ॥ अप्येष्यतीह दाशार्हस्तप्ताः स्वकृतया शुचा। सञ्जीवयन्नु नो गात्रैर्यथेन्द्रो वनमम्बुदैः॥ ४४ ॥ कस्मात्कृष्ण इहायाति प्राप्तराज्यो हताहितः। नरेन्द्रकन्या उद्वाह्य प्रीतः सर्वसुहृद्वृतः॥४५॥ किमस्माभिर्वनौकोभिरन्याभिर्वा महात्मनः। श्रीपतेराप्तकामस्य क्रियेतार्थः कृतात्मनः॥ ४६ ॥ परं सौख्यं हि नैराश्यं स्वैरिण्यप्याह पिङ्गला। तज्जानतीनां नः कृष्णे तथाप्याशा दुरत्यया ॥ ४७ ॥ क उत्सहेत संत्यक्तुमुत्तमश्लोकसंविदम्। अनिच्छतोऽपि यस्य श्रीरङ्गान्न च्यवते क्वचित् ॥ ४८ ॥ सरिच्छैलवनोद्देशा गावो वेणुरवा इमे। सङ्कर्षणसहायेन कृष्णेनाचरिताः

---

ஸரத்தையுடைய ராஸகோஷ்டியில் ஒருஸமயம் எந்த இரவுகளில் எப்பொழுதும் ரமித்தானோ அந்த இரவுகளை நினைப்பதுண்டா?(43) ஹே உத்தவ! தன்னால் செய்யப்பட்ட தாபத்தினால் பீடிக்கப்பட்டவர்களான எங்களை இந்திரன் மேகங்களினால் காட்டைப்போல கரஸ்பர்சாதிகளினால் பிழைப்பிக்கின்றவனாய் இங்கு எப்பொழுதேனும் வருவானா? (44) ராஜ்யத்தையடைந்தவனும், சத்ருக்களைக் கொன்றவனும், ராஜ கன்னிகைகளை மணந்து ப்ரீதியையடைந்தவனும், எல்லா ஸுஹ்ருத்துக்களாலும் சூழப்பட்டவனுமான ஸ்ரீ கிருஷ்ணன் எதற்காக இங்கு வரப்போகிறான். (45) காட்டில் வசிக்கின்றவர்களான நம்மாலோ, ராஜகன்னிகைகளாலோ, மஹாத்மாவும், ஸ்ரீபதியும், ஆப்தகாமனும், பரிபூர்ணனுமான கிருஷ்ணனுக்கு என்ன பயன் செய்யக்கூடியதாக இருக்கிறது. (46) "ஆசையொழித்தலே மேலான ஸௌக்கியத்தைத்தரும்" என வேசியான பிங்களை என்பவளே சொல்லியிருக்கின்றாளே? ஆயினும் நாம் அதையறிந்திருந்தபோதிலுங்கூட கிருஷ்ணனிடத்திலுள்ள ஆசை விடமுடியாததாகவன்றோ இருக்கிறது. (47) எவர் வெறுப்பினுங்கூட லக்ஷ்மீ தேவியானவள் எவரது அங்கத்தினின்றும் ஒருஸமயங்கூட விலகாதிருக்கின்றாளோ அந்த உத்தமஸ்லோகனுடைய ஏகாந்தவார்த்தையை அடியோடுவிடுவதற்கு எவன்தான் சக்தனாவான். (48) ஹே ப்ரபோ! பலராமனை ஸஹாயமாகக்கொண்ட கிருஷ்ணனால் ஸஞ்சரிக்கப்பட்ட நதி, மலை, வனம் இவற்றின் ப்ரதேசங்களும், பசுக்களும், இந்த வேணுசப்தங்களும், நந்தகோபரின் புத்திரனை அடிக்கடி

प्रभो ॥ ४९ ॥ पुनः पुनः स्मारयन्ति नन्दगोपसुतं बत । श्रीनिकेतैस्तत्पदकैर्विस्मर्तुं नैव शक्नुमः ॥ ५० ॥ गत्या ललितयोदारहासलीलावलोकनैः । माध्व्या गिरा हृतधियः कथं तं विस्मरामहे ॥ ५१ ॥ हे नाथ हे रमानाथ व्रजनाथार्तिनाशन । मग्नमुद्धर गोविन्द गोकुलं वृजिनार्णवात् ॥ ५२ ॥

श्रीशुक उवाच—ततस्ताः कृष्णसन्देशैर्व्यपेतविरहज्वराः । उद्धवं पूजयांचक्रुर्ज्ञात्वात्मानमधोक्षजम् ॥ ५३ ॥ उवास कतिचिन्मासान्गोपीनां विनुदन् शुचः । कृष्णलीलाकथा गायन्रमयामास गोकुलम् ॥ ५४ ॥ यावन्त्यहानि नन्दस्य व्रजेऽवात्सीत्स उद्धवः । व्रजौकसां क्षणप्रायाण्यासन्कृष्णस्य वार्तया ॥ ५५ ॥ सरिद्वनगिरिद्रोणीर्वीक्षन्कुसुमितान्द्रुमान् । कृष्णं

---

கினையூட்டுகின்றன. இது வெகு கஷ்டம். ஸ்ரீதேவிக்கு இருப்பிடங்களான அவரது பாத நியாஸங்களினால் அவரை மறக்கமுடியாதவர்களாகவே இருக்கின்றோம். (49–50) அழகிய நடையினாலும், கம்பீரமான மந்தஹாஸத்தினாலும், விநோதமான பார்வைகளினாலும், தேனொழுகும் வார்த்தையினாலும், அபஹரிக்கப்பட்ட புத்தியையுடையவர்களான நாங்கள் அவரை எவ்விதம் மறப்போம். (51) ஹே நாத! ஹே ரமாநாத! ஹே வ்ரஜநாத! ஹே ஆர்த்திநாசன! ஹே கோவிந்த! முழுகிப்போன கோகுலத்தைத் துக்க ஸமுத்திரத்தினின்றும் கரையேற்றுவீராக. (52)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—பிறகு அவர்கள் கிருஷ்ணனுடைய வாய்மொழிகளினால் விலகின விரஹதாபத்தையுடையவர்களாகவாகி ஸ்ரீகிருஷ்ணனை அதோக்ஷஜனாகவும், அவரையே தமது ஆத்மாவாகவும் எண்ணிக்கொண்டு உத்தவரைப் பூஜித்தனர்.* (53) உத்தவர் கோபிகைகளின் சோகத்தைப் போக்கிக்கொண்டு சிலமாதங்கள் அங்கு வஸித்து கிருஷ்ணனது லீலாரூபமான கதைகளைப்பாடிக் கொண்டு கோகுலத்தைச் சந்தோஷப்படுத்தினார். (54) அந்த உத்தவர் எத்தனை நாட்கள் கோகுலத்தில் வசித்தாரோ அத்தனை நாட்களும் கிருஷ்ணனுடைய வார்த்தையினால் கோகுலவாஸிகளுக்கு க்ஷணத்துக்கொப்பானவைகளாகவாயின. (55) ஹரிதாஸரான உத்

---

*உத்தவரை அதோக்ஷஜனும்,ப்ரத்யகாத்மாவுமான ஸ்ரீகிருஷ்ணனாக வெண்ணிக்கொண்டு பூஜித்தனர் என்றும் சிலர் பொருள் கூறுகின்றனர்,

**संस्मारयन्नेमे हरिदासो व्रजौकसाम् ॥ ५६ ॥ दृष्ट्वैवमादि गोपीनां कृष्णावेशात्मविक्लवम् । उद्धवः परमप्रीतस्ता नमस्यन्निदं जगौ ॥ ५७ ॥ एताः परं तनुभृतो भुवि गोपवध्वो गोविन्द एव निखिलात्मनि रूढभावाः। वाञ्छन्ति यद्भवभियो मुनयो वयं च किं ब्रह्मजन्मभिरनन्तकथारसस्य ॥५८॥ केमाः स्त्रियो वनचरीर्व्यभिचारदुष्टाः कृष्णे क चैष परमात्मनि रूढभावः।**

---

தவர் யமுனா நதியையும், பிருந்தாவனத்தையும், கோவர்த்தனத்தின் குஹைகளையும், புஷ்பித்த மரங்களையும் பார்த்துக்கொண்டும் கோகுல வாஸிகளுக்கு அந்தக்கிருஷ்ணனை நினைவூட்டிக்கொண்டும் ஸந்தோஷித்து வந்தார். (56) உத்தவர் கோபிகைகளுக்குக் கிருஷ்ணனிடத்துள்ள அதிகமான பக்தியினாலுண்டான இவை முதலிய மனத்தின் தளர்ச்சியைக் கண்ணுற்று மிக்கப்ரீதியையடைந்து அவர்களை நமஸ்கரிக்கப்போகின்றவராய் இதைச்சொல்லலானார். (57) ஸர்வாத்மாவான கோவிந்தனிடத்திலேயே வேரூன்றின மனோநிலையையுடையவர்களான இந்தக் கோபஸ்திரீகள் மட்டுமேயன்றோ இப்புவியில் சிறந்த தேஹம் படைத்தவர்களாயவர். எந்த நிலைத்த மனோநிலையை பிறவியினின்றும் பயந்தவர்களும் (முமுக்ஷுக்களும்) முக்தர்களான முனிகளும், பக்தர்களான நாமும் அடைய விரும்புகின்றோமேயொழிய அடைந்தோமில்லையே? ஆனதுபற்றி அனந்தனான ஸ்ரீகிருஷ்ணனுடைய கதாரஸானுபவத்துக்கு ப்ராம்ஹ ஜன்மங்களால் (*சௌக்ல, ஸாவித்ர, யாக்ஞிக என்ற பிறவிகளால்) யாதுபயன். அல்லது அனந்தகதையில் (கிருஷ்ணகதையில்) அரஸனுக்கு (பற்றில்லாதவனுக்கு) முற்கூறிய பிறவிகளால் மட்டும் யாதுபயனேற்படப்போகிறது. அல்லது எத்துணை நான்முகப் பிறவிகளேற்படினும் அதனால் மட்டும் ஸ்ரீகிருஷ்ணகதா ரஸானுபவம் ஏற்படுமோ? (*) (58)

---

* சுத்தமான மாதா பிதாவினிடமிருந்து கர்ப்பாதானாதிஸம்ஸ்காரம் பெறல் சௌக்லமென்றும், உபநயனாதி ஸம்ஸ்காரம் பெறல் ஸாவித்ரமென்றும், யாகாதியனுஷ்டான ரூபமான ஸம்ஸ்காரம் பெறல் யாக்ஞிகமென்றும் சொல்லப்படும்.

(*) கேவலம் ஈசுவரானுக்கிரஹத்தால் அனந்தகதையில் ருசியேற்படவேண்டுமேயொழிய முற்கூறிய ஸம்ஸ்காராதிகளால் மட்டுமேற்பட்டுவிடாது என்றும், கதாருசியேற்பட்டவர்களிடத்தில் இத்தகைய ஸம்ஸ்காராதிகளிருக்கவேண்டுவது அவசியமில்லையென்று இதனால்பெறப்பட்டது.

**नन्वीश्वरोऽनुभजतोऽविदुषोऽपि साक्षाच्छ्रेयस्तनोत्यगदराज इवोपयुक्तः ॥ ५९ ॥ नायं श्रियोऽङ्ग उ नितान्तरतेः प्रसादः स्वर्योषितां नलिनगन्धरुचां कुतोऽन्याः। रासोत्सवेऽस्य भुजदण्डगृहीतकण्ठलब्धाशिषां य उदगाद्व्रजवल्लवीनाम् ॥ ६० ॥ आसामहो चरणरेणुजुषामहं स्यां वृन्दावने किमपि गुल्मलतौषधीनाम्। या दुस्त्यजं स्वजनमार्यपथं च हित्वा भेजुर्मुकुन्दपदवीं श्रुतिभिर्विमृग्याम् ॥ ६१ ॥ या वै श्रियार्चितमजादिभिराप्त-**

---

† காட்டில் ஸஞ்சரிக்கின்றவர்களும், ‡ பரபுருஷஸங்கமத்தினல் தோஷத்தையடைந்தவர்களுமான இந்த ஸ்திரீகள் எங்கே? பரமாத்மாவான ஸ்ரீகிருஷ்ணனிடத்தில் வேரூன்றின இந்தப்பக்தி எங்கே? ஈச்வரன் அவித்வானுயினும் அடிக்கடி பஜிப்பவனுக்கு ஸேவிக்கப்பட்ட அமுதப்போல நேரில் க்ஷேமத்தைத் தருகின்றானன்றோ. (59) ராஸக்ரீடாகாலத்தில் இந்தக் கிருஷ்ணனுடைய புஜதண்டங்களினல் கழுத்தில் ஆலிங்கனம் செய்யப்பட்டவர்களும் அதனல் மனோரத பூர்த்தியையடைந்தவர்களுமான கோபஸ்திரீகள் விஷயத்தில் எந்தப் பிரஸாதம் உண்டாயிற்றோ இந்த ப்ரஸாதமானது பகவதங்கமான மார்பில் ஏகாந்த ப்ரேமையுள்ளவளான லக்ஷ்மீதேவியாருக்கும், தாமரை புஷ்பத்தினுடைய துபோன்ற மணமும், காந்தியுமுள்ளவர்களான ஸ்வர்க்கலோகஸ்திரீகளுக்கும்கூட ஏற்படவில்லையே? இவ்விதமிருக்க மற்றவர்கள் எங்கு அதையடையபபோகின்றனர்.(60) *எந்தக் கோபஸ்திரிகள் விடுதற்கியலாத சொந்த ஜனத்தையும், ஆர்யர்களின் மார்க்கமான தர்மத்தையும் விடுத்து ஶ்ருதிகளால் தேடத்தகுந்த முகுந்தனுடைய வழியை அடைந்தனரோ இவர்களுடைய சரணதூளியையடையப்பெற்ற புதர், கொடி, ஒஷதி (செடி) இவற்றுள் யாதானுமொன்ருகக் கோகுலத்தில்பிறப்பையடைவேனாக.(61) பகவானன ஸ்ரீகிருஷ்ணனுடைய எந்தச் சரணாரவிந்தமானது

---

† ஈச்வரப்ரஸாதம் மட்டும் மேன்மைக்குக் காரணமாகுமேயொழிய ஜாதியோ, ஆசாரமோ, க்ஞானமோ காரணமாகாது. அந்த ஈசுவர ப்ரஸாதத்துக்குப் பக்திதான் சிறந்த ஸாதனம் என இதனுலுபதேசிக்கப்படுகிறது. ‡ லோகரீதியாக இவ்விதம் சொல்லப்பட்டது.

* கோபிகைகளின் பாக்கியமிருக்கட்டும். நான் வேண்டுவது இதுவே என இதனுற் சொல்லுகிறுர்.

कामैर्योगेश्वरैरपि यदात्मनि रासगोष्ठ्याम्। कृष्णस्य तद्भगवतश्चरणारविन्दं न्यस्तं स्तनेषु विजहुः परिरभ्य तापम्॥ ६२॥ वन्दे नन्दव्रजस्त्रीणां पादरेणुमभीक्ष्णशः। यासां हरिकथोद्गीतं पुनाति भुवनत्रयम्॥ ६३॥ श्रीशुक उवाच—अथ गोपीरनुज्ञाप्य यशोदां नन्दमेव च। गोपानामन्त्र्य दाशार्हो यास्यन्नारुरुहे रथम्॥ ६४॥ तं निर्गतं समासाद्य नानोपायनपाणयः। नन्दादयोऽनुरागेण प्रावोचन्नश्रुलोचनाः॥ ६५॥ मनसो वृत्तयो नः स्युः कृष्णपादाम्बुजाश्रयाः। वाचोऽभिधायिनीर्नाम्नां कायस्तत्प्रह्वणादिषु॥ ६६॥ कर्मभिर्भ्राम्यमाणानां यत्र क्वापीश्वरेच्छया। मङ्गलाचरितैर्दानै रतिर्नः कृष्ण ईश्वरे॥ ६७॥ एवं सभाजितो गोपैः कृष्णभक्त्या नराधिप।

---

ஸ்ரீதேவியாராலும், ஆப்தகாமர்களும், யோகேஸ்வரர்களுமான ப்ரம்ஹாதியர்களாலுங்கூட மனத்திலேயே மட்டும் வைத்துப் பூஜிக்கப்பட்டதோ, ராஸமண்டலத்தில் ஸ்தனங்களில் வைக்கப்பட்ட அந்தச் சரணாரவிந்தத்தைத் தழுவிக்கொண்டு எவர்கள் தாபத்தைப் போக்கிக்கொண்டனரோ, எவர்களின் ஹரிகதையின் கானமானது மூவுலகையும் பரிசுத்தமாக்குகின்றதோ அந்த நந்தகோகுலத்திலுள்ள ஸ்திரீகளின் பாததூளியை அடிக்கடி நமஸ்கரிக்கின்றேன். (62–63) ஸ்ரீசுகர் சொல்லலுற்றூர்—பிறகு பயணப்பட்ட உத்தவர் கோபிகைகளிடத்தும், யசோதையினிடத்தும், நந்தகோபரிடத்தும் விடைபெற்றுக்கொண்டு கோபாலர்களேயும் கேட்டுக்கொண்டு தேரிலேறினர்.(64) பலவிதமான காணிக்கைகளைக்கையிற்கொண்ட நந்தகோபாதியர் வெளியேறின அவரை அடைந்து கண்ணில் ஜலத்தை வடியவிட்டுக்கொண்டு ப்ரேமையுடன் சொல்லத்தொடங்கினர். (65) எங்களது மனோவிருத்திகள் கிருஷ்ணசரணாரவிந்தத்தைப்பற்றியனவாகவும், வார்த்தைகள் அவரது நாமங்களைச் சொல்லுகின்றனவாகவும், சரீரம் அவரது நமஸ்காராதிகளிலீடுபட்டதாகவும் இருக்கவேண்டும். கர்மங்கள் மூலம் சுழலுகின்றவர்களான எங்களுக்கு ஈப்வரேச்சையினுல் எங்கு பிறவியேற்பட்டபோதிலும் மங்களானுஷ்டானங்களினுலும், தானங்களினுலும் ஈப்வரனை கிருஷ்ணனிடத்தில் பக்தியேற்படல் வேண்டும். (66–67) ஹே நராதிப! இவ்விதம் கிருஷ்ணனிடமுள்ள பக்தியினுல் கோபாலர்களால் பூஜிக்

उद्धवः पुनरागच्छन्मथुरां कृष्णपालिताम् ॥ ६८ ॥ कृष्णाय प्रणिपत्याह भक्त्युद्रेकं व्रजौकसाम् । वसुदेवाय रामाय राज्ञे चोपायनान्यदात् ॥ ६९ ॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्धे भ्रमरगीतं, उद्धवप्रतियानं नाम सप्तचत्वारिंशोऽध्यायः ॥ ४७ ॥

---

கப்பட்ட உத்தவர் கிருஷ்ணனால் ரக்ஷிக்கப்பட்ட மதுரையைத் திரும்பவும் வந்தடைந்தார். (68) கிருஷ்ணனுக்கும், வஸுதேவருக்கும், பலராமனுக்கும் நமஸ்கரித்து கோகுலவாஸிகளுடைய பக்தியதிசயத்தைத் தெரிவித்து உக்ரஸேன மஹாராஜனிடம் காணிக்கைகளையும் கொடுத்தார். (69) (எ—று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண தசமஸ்கந்த பூர்வார்த்தத்தில் ப்ராமரகீதம், உத்தவர் திரும்புதல் என்ற நாற்பத்தேழாவது அத்தியாயம் முற்றிற்று.

## நாராயணீயம்.

गत्वा सान्दीपनिमथ चतुष्षष्टिमात्रैरहोभिः
सर्वज्ञस्त्वं सह मुसलिना सर्वविद्यां गृहीत्वा ।
पुत्रं नष्टं यमनिलयनादाहृतं दक्षिणार्थं
दत्वा तस्मै निजपुरमगा नादयन् पाञ्चजन्यम् ॥ ३९८ ॥

(ப—ரை) अथ=பிறகு सर्वज्ञः=எல்லாமறிந்தவரான त्वम्=நீர் मुसलिना सह=பலராமனுடன் கூட सान्दीपनिम्=ஸாந்திபனி என்ற மஹருஷியை गत्वा=அடைந்து चतुष्षष्टिमात्रैः, अहोभिः=அறுபத்து நான்கு தினங்களுக்குள்ளேயே सर्वविद्याम्=எல்லா வித்யைகளையும் गृहीत्वा=பெற்றுக்கொண்டு नष्टम्=மரித்தவனும், यमनिलयनात्=யமனுடைய பட்டினத்திலிருந்து आहृतम्=கொண்டுவரப்பட்டவனுமான पुत्रम्=ஆசிரியரின் புத்திரனை दक्षिणार्थम्=குரு தக்ஷிணைக்காக तस्मै=அந்த ஸாந்திபனியின்பொருட்டு दत्वा=கொடுத்து पाञ्चजन्यम्=சங்கத்தை नादयन्=வாசித்துக்கொண்டு निजपुरम्=உமது பட்டினமான மதுரையை अगाः=அடைந்தீர். (398) (எ—று)

स्मृत्वा स्मृत्वा पशुपसुदृशः प्रेमभारप्रणुन्नाः
कारुण्येन त्वमपि विवशः प्राहिणोरुद्धवं तम् ।
किञ्चामुष्मै परमसुहृदे भक्तवर्याय तासां
भक्त्युद्रेकं सकलभुवने दुर्लभं दर्शयिष्यन् ॥ ३९९ ॥

(ப-ரை) पशुपसुदृशः=அந்த கோபஸ்திரீகள் स्मृत्वा, स्मृत्वा=நினைத்து, நினைத்து प्रेमभारप्रणुन्नाः=அனுராகத்தின் ஆதிக்யத்தினால் பரவசர்களாயினர். त्वमपि=நீரும் कारुण्येन=தயையினால் विवशः=பரவசராய்க்கொண்டும், किञ्च=மேலும் परमसुहृदे=சிறந்த ஸ்னேஹிதனும், भक्तवर्याय=பக்தர்களுட் சிறந்தவருமான अमुष्मै=இந்த உத்தவரின் பொருட்டு सकलभुवने=எல்லா உலகிலும் दुर्लभम्=அடைதற்கரிதான तासाम्=அந்தக் கோபிகைகளுடைய भक्त्युद्रेकम्=பக்தியின் பெருக்கை दर्शयिष्यन्=காண்பிக்கப்போகின்றவராயும் கொண்டு तमुद्धवम्=அந்த உத்தவரை प्राहिणोः=அனுப்பினீர். (399) (எ-று)

त्वन्माहात्म्यप्रथिमपिशुनं गोकुलं प्राप्य सायं
त्वद्वार्ताभिर्बहु स रमयामास नन्दं यशोदाम् ।
प्रातर्दृष्ट्वा मणिमयरथं शङ्किताः पङ्कजाक्ष्यः
श्रुत्वा प्राप्तं भवदनुचरं त्यक्तकार्यास्समीयुः ॥ ४०० ॥

(ப-ரை) सः=அந்த உத்தவர் त्वन्माहात्म्यप्रथिमपिशुनम्=உமது மாஹாத்மியத்தின் விஸ்தாரத்தை (பெருக்கை) த்தெரிவிக்கின்ற गोकुलम्=கோகுலத்தை सायम्=ஸாயங்காலத்தில் प्राप्य=அடைந்து त्वद्वार्ताभिः=நீர் சொல்லி அனுப்பிய வார்த்தைகளால் नन्दम्=நந்த கோபனையும், यशोदाम्=யசோதையையும் बहु=அதிகமாய் रमयामास=ஸந்தோஷப்படுத்தினார். प्रातः=விடியற்காலத்தில் मणिमयरथम्=ரத்தினங்கள் வைத்திழைத்ததேரை पङ्कजाक्ष्यः=ஸ்திரீகள் दृष्ट्वा=பார்த்து शङ्किताः=முதலில் அக்ரூரர் திரும்பவும் வந்துவிட்டாரோ என்று ஸந்தேஹமடைந்தவர்களாய்க்கொண்டு பிறகு प्राप्तम्=வந்தவரை भवदनुचरम्=உமது பக்தனாக श्रुत्वा=கேட்டு त्यक्तकार्याः=விடப்பட்ட மற்ற கார்யங்களையுடையவர்களாய் समीयुः=வந்து கூடினர். (400)

दृष्ट्वा चैनं त्वदुपमलसद्वेषभूषाभिरामं
स्मृत्वा स्मृत्वा तव विलसितान्युच्चकैस्तानि तानि ।
रुद्धालापाः कथमपि पुनर्गद्गदां वाचमूचुः
सौजन्यादीन् निजपरभिदामप्यलं विस्मरन्त्यः ॥ ४०१ ॥

(ப-ரை) त्वदुपमलसद्वेषभूषाभिरामम्=உமது வேஷம், அலங்காரம் இவற்றுக்கொப்பானதும், விளங்குகின்றதுமான வேஷம் அலங்காரம் இவற்றால் அழகு பொருந்தியவரான एनम्=இந்த உத்தவரை दृष्ट्वा च=பார்த்து तव=உம்முடையதான तानि, तानि=அந்த அந்த विलसितानि=லீலைகளை उच्चकैः=அதிகமாய் स्मृत्वा, स्मृत्वा=நினைத்து, நினைத்து (ताः=அந்த கோபிகைகள்) रुद्धालापाः=(பாஷ்பத்தினால்) தடுக்கப்பட்ட வார்த்தையுடையவர்களாயும் सौजन्यादीन्=ஸ்னேஹம் முதலியவற்றையும் निजपरभिदामपि=தான், பிறர் என்ற பேதபுத்தியையும் अलम्=முற்றிலும் विस्मरन्त्यः=மறந்தவர்களாயும் கொண்டு पुनः=மறுபடியும் गद्गदाम्=தழதழத்த वाचम्=வார்த்தையை ऊचुः=சொல்லினர். (401) (எ-று)

श्रीमन् किं त्वं पितृजनकृते प्रेषितो निर्दयेन
कासौ कान्तो नगरसुदृशां हा हरे नाथ पायाः ।
आश्लेषाणाममृतवपुषो हन्त ते चुम्बनाना-
मुन्मादानां कुहकवचसां विस्मरेत्कान्त का वा ॥ ४०२ ॥

(ப-ரை) श्रीमन्=ஹே ஸ்ரீமானே! त्वम्=நீர் पितृजनकृते=நந்தகோபர், யசோதை இவர்களுக்காக निर्दयेन=தயையற்ற கிருஷ்ணனால் किं प्रेषितः=அனுப்பப்பட்டீரா? नगरसुदृशाम्=பட்டினத்து ஸ்திரீகளுக்கு कान्तः=ப்ரியனான असौ=அந்தக் கிருஷ்ணன் क=எங்கே? हा हरे!=பக்தர்களின் ஸந்தாபத்தை அபஹரிப்பவரும்! नाथ=எங்களுடைய உயிரைக் காப்பாற்றுபவரும் कान्त=மனத்துக்குப் பிடித்தமானவருமான ஹே கிருஷ்ண! पायाः=எங்களைக் காப்பீராக. अमृतवपुषः = அமிருதமயமான சரீரத்தையுடைய ते=உம்முடைய आश्लेषाणाम्=ஆலிங்கனங்களையும் चुम्बनानाम्=முத்தங்களையும், उन्मादानाम् = மோஹத்தையுண்டுபண்ணுகின்ற कुहकवचसाम्=ஏமாற்றுகின்ற வார்த்தைகளையும் का वा=எந்த ஸ்திரீதான் विस्मरेत्=மறப்பாள்.

रासक्रीडालुलितललितं विश्लथत्केशपाशं
मन्दोद्भिन्नश्रमजलकणं लोभनीयं त्वदङ्गम् ।
कारुण्याब्धे सकृदपि समालिङ्गितुं दर्शयेति
प्रेमोन्मादाद्भुवनमदन त्वत्प्रियास्त्वां विलेपुः ॥ ४०३ ॥

(ப-ரை) भुवनमदन=லோகத்துக்கு மன்மதனாய் (காமனையை உண்டுபண்ணுகிறவராய்) இருக்கின்ற ஹே கிருஷ்ண! त्वत्प्रियाः=

உமது ப்ரேமைக்கு பாத்திரமான கோபிகைகள் रासक्रीडालुलितललितम्=ராஸக்ரீடையில் கசக்கப்பட்டதும் அழகுபொருந்தியதும் विश्लथत्केशपाशम्=அவிழ்ந்துபோன கேசபாசங்களையுடையதும் मन्दोद्भिन्नश्रमजलकणम्=கொஞ்சம் வெளிவந்த வியர்வைத்துளிகளையுடையதும் लोभनीयम्=விருப்பத்தகுந்ததுமான त्वदङ्गम्=உமது ஸ்ரீமூர்த்தியை कारुण्याब्धे !=கருணைக்கடலான ஹே கிருஷ்ண ! सकृदपि=ஒருதடவையாவது समालिङ्गितुम्=ஆலிங்கனம் செய்துகொள்ளுவதற்காக दर्शय=காண்பியும் इति=என்று प्रेमोन्मादात्=ஸ்னேஹத்தினாலுண்டான உன்மாதம் (தற்போதமற்ற நிலை) என்ற அவஸ்தையினால் त्वाम्=உம்மைக்குறித்து विलेपुः=கதறினார். (403)

एवंप्रायैर्विवशवचनैराकुला गोपिकास्ता–
स्त्वत्सन्देशैः प्रकृतिमनयत्सोऽथ विज्ञानगर्भैः।
भूयस्ताभिर्मुदितमतिभिस्त्वन्मयीभिर्वधूभि–
स्तत्तद्वार्तासरसमनयत्कानिचिद्वासराणि ॥ ४०४ ॥

(ப–ரை) अथ=பிறகு एवंप्रायैः=பெரும்பாலும் இம்மாதிரியான विवशवचनैः=பரவசப்பட்ட வார்த்தைகளினால் आकुलाः=கலங்கினताः=அந்த गोपिकाः=கோபிகைகளை सः=அந்த உத்தவர் विज्ञानगर्भैः=தத்வம் நிரப்பின त्वत्सन्देशैः=நீர் சொல்லி அனுப்பின வாய்மொழிகளால் प्रकृतिम्=இயற்கையான நிலையை अनयत्=அடைவித்தார். भूयः=மறுபடியும் मुदितमतिभिः=ஸந்தோஷமடைந்த புத்தியையுடையவர்களும் त्वन्मयीभिः=உமது ஸ்வரூபமாகவே ஆனவர்களுமான ताभिः वधूभिः=அந்த ஸ்திரீகளுடன் कानिचित्=சில वासराणि=தினங்களை तत्तद्वार्तासरसम्=அந்தந்த விதமான வார்த்தைகளால் ஸந்தோஷத்துடன் கூடி இருக்கும்படி अनयत्=கழித்தார். (404) (எ–று)

त्वत्प्रोद्गानैस्सहितमनिशं सर्वतो गेहकृत्यं
त्वद्वार्तैव प्रसरति मिथः सैव चोत्स्वापलापाः।
चेष्टाः प्रायस्त्वदनुकृतयस्त्वन्मयं सर्वमेवं
दृष्ट्वा तत्र व्यमुहदधिकं विस्मयादुद्धवोऽयम् ॥ ४०५ ॥

(ப–ரை) सर्वतः=எல்லாவிதமான गेहकृत्यम्=வீட்டு வேலையானது अनिशम्=எப்பொழுதும் त्वत्प्रोद्गानैः=உம்மைப்பற்றின உரத்த பாட்டுகளுடன் सहितम्=கூடி இருக்கின்றது. मिथः=ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ளுங்கால் त्वद्वार्तैव=உம்மைப்பற்றிய வார்த்தைதான்

प्रसरति=நடைபெறுகின்றது. उत्स्वापलापा:=ஸ்வப்பினத்தில் பிதற்றும்வார்த்தைகளும் त्वैव=உம்மைப்பற்றியவார்த்தையேயாகும் चेष्टा:= கோபிகைகளின் செய்கைகள் प्राय:=பெரும்பாலும் त्वदनुकृतय:= உமது லீலையின் அனுகரணரூபமாகவே இருந்தன. तत्र=அங்கு अयम्=இந்த उद्धव:=உத்தவர் एवम्=இவ்விதம் सर्वम्=அந்தக் கோபிகைகளின் எல்லாக் காரியத்தையும் त्वन्मयम्=உம்மயமாகவே दृष्ट्वा= பார்த்து विस्मयात्=ஆச்சரியத்தினால் अधिकम्=அதிகமாய் व्यमुहत्= மோஹமடைந்தார். (திகைத்தார் என்பது கருத்து.) (408) (எ-று)

(அ-கை) இதனால் உத்தவர் ராதையை ஸமாதனப்படுத்துகிறார்—

राधाया मे प्रियतममिदं मत्प्रियैवं ब्रवीति
त्वं किं मौनं कलयसि सखे मानिनी मत्प्रियेव ।
इत्याद्येव प्रवदति सखि त्वत्प्रियो निर्जने मा-
मित्थंवादैररमयदयं त्वत्प्रियामुत्पलाक्षीम् ॥ ४०६ ॥

(ப-ரை) सखि=தோழியான ஹே ராதே! त्वत्प्रिय:=உன்னிடம் ப்ரேமை (ஆசை) யுள்ள க்ருஷ்ணன் निर्जने=ஜனமற்றவிடத்தில் "इदम्=இந்தவஸ்துவானது मे=என்னுடைய राधाया:=ராதைக்கு प्रियतमम्=மிகவும் பிரியமானது. मत्प्रिया=எனது ப்ரேமைக்குப் பாத்திரமான ராதை एवम्=இவ்விதம் ब्रवीति=சொல்லுகிறாள். सखे! ஹே தோழனான உத்தவ मानिनी=கோபங்கொண்ட मत्प्रियेव=எனது பிரியையான ராதைபோல त्वम्=நீ मौनम्=மௌனத்தை किं कलयसि=ஏன் வஹிக்கிறாய்" इत्याद्येव=இது முதலானவற்றையே माम्= என்னைக் குறித்து प्रवदति=அதிகமாய்ப் பேசுகிறார். इत्थंवादै:= உமதுஸ்னேஹத்தைத் தெரிவிக்கின்ற இம்மாதிரியான வார்த்தைகளினால் अयम्=இந்த உத்தவர் उत्पलाक्षीम्=நீலோத்பல புஷ்பம் போன்ற கண்ணையுடைய त्वत्प्रियाम्=ராதையை अरमयत्=ஸந்தோஷப் படுத்தினார். (406) (எ-று)

एष्यामि द्रागनुपगमनं केवलं कार्यभारा-
द्विश्लेषेऽपि स्मरणदृढतासंभवान्मास्तु खेद: ।
ब्रह्मानन्दे मिलति नचिरात्सङ्गमो वा वियोग-
स्तुल्यो वस्स्यादिति तव गिरा सोऽकरोन्निर्व्यथास्ता: ॥४०७॥

(ப-ரை) द्राक्=சீக்கிரமாய் एष्यामि=திரும்பிவருகிறேன். अनुपगमनम्=தற்சமயம் வராமையானது कार्यभारात्, केवलम्=கார்யத்தின் பளுவால் மட்டுமே (जातम्=ஏற்பட்டிருக்கின்றது) विश्लेषेऽपि=எனது பிரிவு இருந்தபோதிலும்கூட (அதனால்) स्मरणदृढतासंभवात्=நினைவுக்கு உறுதி ஏற்படுமாதலால் खेदः=துக்கமானது मास्तु=வேண்டாம். (स्मरणदृढतया=நினைவின் தார்ட்யத்தினால் அதாவது: ஸமாதியினால்) नचिरात्=தாமதமின்றியே ब्रह्मानन्दे=ப்ரம்ஹஸுகமானது मिलति=கூடும்பொழுது (அதாவது: அனுபவிக்கப்படும் பொழுது) सङ्गमो वा=சேர்க்கையோ वियोगः=பிரிவோ वः=உங்களுக்கு तुल्यः=ஒன்றாகவே स्यात्=ஆகும் इति=என்ற तव=உம்முடைய गिरा=வார்த்தையினால் सः=அந்த உத்தவர் ताः=அந்த கோபிகைகளை निर्व्यथाः=துக்கமற்றவர்களாக अकरोत्=செய்தார். (407) (எ-று)

> एवं भक्तिः सकलभुवने नेक्षिता न श्रुता वा
> किं शास्त्रौघैः किमिह तपसा गोपिकाभ्यो नमोऽस्तु।
> इत्यानन्दाकुलमुपगतं गोकुलादुद्धवं तं
> दृष्ट्वा हृष्टो गुरुपुरपते पाहि मामामयौघात् ॥ ४०८ ॥

(ப-ரை) गुरुपुरपते=குருவாயூருக்கு நாதனான ஹே க்ருஷ்ண! एवम्=இத்தகைய भक्तिः=பக்தியானது सकलभुवने=எல்லா லோகத்திலும், नेक्षिता=பார்க்கப்பட்டதில்லை. न श्रुतावा=கேழ்க்கப்பட்டதுமில்லை. शास्त्रौघैः=பக்தியைத்தராத சாஸ்திரங்களின் கூட்டங்களினால் किम्=என்ன ப்ரயோஜனம். इह=இவ்வுலகில் तपसा=பக்தியையுண்டுபண்ணாத தவத்தினாலாவது किम्=என்ன ப்ரயோஜனம் गोपिकाभ्यः=கோபிகைகளுக்கு नमः=நமஸ்காரம் अस्तु = இருக்கட்டும். इति=இவ்விதம் आनन्दाकुलम्=ஆனந்தத்தினால் கலங்கினவராயும், गोकुलात्=கோகுலத்தினின்றும் उपगतम् = திரும்பிவந்தவராயுமிருக்கின்ற तम्=அந்த उद्धवम्=உத்தவரை दृष्ट्वा=பார்த்து हृष्टः=ஸந்தோஷமடைந்த நீர் आमयौघात्=வியாதிகளின் கூட்டத்தினின்றும் माम्=என்னை पाहि=காப்பாற்றுவீராக. (408) (எ-று).

இவ்விதம் உத்தவதௌத்ய வர்ணனம் என்ற எழுபத்தாறுவது தசகம் முற்றிற்று.

—o o*o o—

## ॥ अथ अष्टचत्वारिंशोऽध्यायः ॥

श्रीशुक उवाच—अथ विज्ञाय भगवान्सर्वात्मा सर्वदर्शनः। सैरन्ध्र्याः कामतप्तायाः प्रियमिच्छन्गृहं ययौ ॥ १ ॥ महार्होपस्करैराढ्यं कामोपायोपबृंहितम्। मुक्तादामपताकाभिर्वितानशयनासनैः। धूपैः सुरभिभिर्दीपैः स्रग्गन्धैरपि मण्डितम् ॥२॥ गृहं तमायान्तमवेक्ष्य साऽऽसनात्सद्यः समुत्थाय हि जातसंभ्रमा। यथोपसङ्गम्य सखीभिरच्युतं सभाजयामास

---

## நாற்பத்தெட்டாவது அத்தியாயம்

(அ-கை) अष्टचत्वारिंशकेऽथ कृष्णः कुब्जामरीरमत्।
अक्रूरस्य गृहं गत्वा तं गजाह्वयमादिशत् ॥ १ ॥
सैरन्ध्रीकाममापूर्य पूरयित्वा मनोरथम्।
अक्रूरस्य ततः कृष्णस्तेन पार्थानसान्त्वयत् ॥ २ ॥

(க-ரை) ஸ்ரீகிருஷ்ணன் கூனியை ஸந்தோஷப்படுத்தினர் என்றும், அக்ரூருடைய விடுசென்று அவரை ஹஸ்தினபட்டினத் துக்கனுப்பினரென்றும், ஸைரந்த்ரியினுடைய காமத்தைப் பூர்த்தி செய்வித்து அக்ரூருடைய மனோரதத்தையும் பூர்த்திசெய்வித்துப் பிறகு கிருஷ்ணன் அந்த அக்ரூரர் மூலம் பாண்டவர்களைத்தேற்றினர் என்றும் இந்த நாற்பத்தெட்டாவது அத்தியாயத்திலுபதேசிக்கப்படுகிறது. (1-2) (எ-று)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—பிறகு ஸர்வாத்மாவும், ஸர்வதரிசனனுமான பகவான் உத்தவர் சொன்னதை நன்கு மனத்தில் வாங்கிக்கொண்டு காமத்தினல் தாபத்தையடைந்தவளான ஸைரந்த்ரிக்கு ப்ரியத்தைச் செய்யவிருப்பங்கொண்டு விலைமதிக்கவியலாத வீட்டுக்குரிய பொருள்களுடன் கூடினதும், காமத்தை விருத்திசெய்கின்ற சுரதபந்தாதிபடங்கள் கண்ணாடிகள் இவற்றுடன் கூடினதும், முத்துமாலைகளாலும், கொடிமரங்களாலும், மேல் விரிப்புள்ள படுக்கை, ஆஸனம் இவற்றாலும், நறுமணமுள்ள தூபங்களாலும், தீபங்களாலும், புஷ்பம், சந்தனம் இவற்றாலும் அலங்கரிக்கப்பட்டதுமான அவளுடைய வீட்டையடைந்தார். (1-2) அவள் ஸ்ரீகிருஷ்ணன் வீட்டுக்கு வருவதைக்கண்டு பரபரப்பையடைந்தவளாய் உடன் ஆஸனத்தினின்றும் எழுந்து தோழிகளுடன் கூட அருகில் வந்து

सदासनादिभिः॥ ३ ॥ तथोद्धवः साधु तयाभिपूजितो न्यषीददुर्व्यामभिमृश्य चासनम्। कृष्णोऽपि तूर्णं शयनं महाधनं विवेश लोकाचरितान्यनुव्रतः॥ ४ ॥ सा मज्जनालेपदुकूलभूषणस्रग्गन्धताम्बूलसुधासवादिभिः। प्रसाधितात्मोपससार माधवं सव्रीडलीलोत्स्मितविभ्रमेक्षितैः॥ ५ ॥ आहूय कान्तां नवसङ्गमह्रिया विशङ्कितां कङ्कणभूषिते करे। प्रगृह्य शय्यामधिवेश्य रामया रेमेऽनुलेपार्पणपुण्यलेशया॥ ६ ॥ साऽनङ्गतप्तकुचयोरुरसस्तथाक्ष्णोर्जिघ्रन्त्यनन्तचरणेन रुजो मृजन्ती। दोर्भ्यां स्तनान्तरगतं परिरभ्य कान्तमानन्दमूर्तिमजहादतिदीर्घतापम्॥ ७ ॥ सैवं कैवल्यनाथं तं

---

சிறந்த ஆஸனாதிகளினால் தக்கப்படி அச்யுதனைப் பூஜித்தாள். (3) பிறகு உத்தவர் அவளால் நன்கு பூஜிக்கப்பட்டவராய் அவள் கொடுத்த ஆஸனத்தைக் கையினால் தொட்டுவிட்டுப் பூமியிலுட்கார்ந்தார். ஸ்ரீகிருஷ்ணனே லோகாசரிதங்களைப் பின்பற்றினவராய் மிக்கவிலையுள்ள சயனத்தில் பிரவேசித்தார். (4) அவள் தைலந்தேய்த்து ஸ்னானஞ்செய்தல், சந்தனம், வெண்பட்டு, ஆபரணம், மாலை, வாஸனையுள்ள தாம்பூலம், அமுதம்போன்ற மத்யம் இவற்றால் போகத்துக்குத்தக்கபடி தயார் செய்யப்பட்ட சரீரத்தையுடையவளாய்க் கொண்டும், வெட்கத்துடன் கூடினதும், லீலையினால் வெளிவந்ததுமான புன்சிரிப்பையுடைய புருவத்தை நெரித்தல் முதலிய விலாஸத்துடன் கூடின பார்வைகளுடன் கூடினவளாய்க்கொண்டும் மாதவனுடைய அருகில் வந்தாள். (5) புதிதான சேர்க்கையினாலேற்பட்ட லஜ்ஜையினால் மிக்கச்சங்கைகொண்டவளான காந்தையை அழைத்து வளையல்களினால் அலங்கரிக்கப்பட்ட கையில் பிடித்துப் படுக்கையில் தூக்கிவைத்துக்கொண்டு சந்தனத்தைக் கொடுத்ததினாலேற்பட்ட புண்ணியலேசத்தையுடையவளான அந்த ஸ்திரீயுடன் ரமித்தார். (6) அவள் மன்மதனால் தபிக்கும்படி செய்யப்பட்ட ஸ்தனங்களுடையவும், மார்பினுடையவும், அவ்விதமே கண்களுடையவுமான கஷ்டங்களை அனந்தனுடைய சரணத்தினால் போக்கிக்கொண்டும், அவரது சரணத்தை முகர்ந்துகொண்டும், இரண்டு ஸ்தனங்களின் நடுவையடைந்தவரும், ஆனந்த மூர்த்தியுமான காந்தனைத் தோள்களினால் தழுவிக்கொண்டும், வெகு நீண்டகாலமாயேற்பட்ட தாபத்தைப் போக்கிக்கொண்டாள். (7) அதிருஷ்ட ஹீனையான அவள்

प्राप्य दुष्प्रापमीश्वरम्। अङ्गरागार्पणेनाहो दुर्भगेदमयाचत ॥ ८ ॥ आहो- ष्यतामिह प्रेष्ठ दिनानि कतिचिन्मया। रमस्व नोत्सहे त्यक्तुं सङ्गं तेऽम्बु- रुहेक्षण ॥ ९ ॥ तस्यै कामवरं दत्त्वा मानयित्वा च मानदः। सहोद्धवेन सर्वेशः स्वधामागमदर्चितः ॥ १० ॥ दुराराध्यं समाराध्य विष्णुं सर्वे- श्वरेश्वरम्। यो वृणीते मनोग्राह्यमसत्त्वात्कुमनीष्यसौ ॥ ११ ॥

अक्रूरभवनं कृष्णः सहरामोद्धवः प्रभुः। किञ्चिच्चिकीर्षयन्प्रागादक्रूर- प्रियकाम्यया ॥ १२ ॥ स तान्नरवरश्रेष्ठानाराद्वीक्ष्य स्वबान्धवान्। प्रत्यु- त्थाय प्रमुदितः परिष्वज्याभिवन्द्य च ॥ १३ ॥ ननाम कृष्णं रामं च स

---

இவ்விதம் கைவல்யத்துக்கு (மோக்ஷத்துக்கு) நாதனும், அடைதற் கரிதானவரும், ஈச்வரனுமான அந்தக்கிருஷ்ணனை சந்தனத்தையற்ப ணஞ் செய்ததின் மூலம் அடைந்து இதையாசிக்கத் தொடங்கினுள். இது வெகு கஷ்டம். (8) ஹே ப்ரியதமனுன கிருஷ்ண! இங்கு நீ வஸிக்கவேண்டும். சில தினங்கள் என்னுடன் கூட ரமிப்பாயாக. ஹே அம்புஜேக்ஷண! உன்னுடைய சேர்க்கையை விடுவதற்கு நான் முடியாதவளாக இருக்கிறேன் என்று சொன்னுள். (9) மானதனும் ஸர்வேசனுமான ஸ்ரீகிருஷ்ணன் அவளுக்குக்காமரூபமான வரனைக் கொடுத்தும், அலங்காராதி தானங்களால் அவளை மரியாதை செய்தும், பிறகு அவளால் பூஜிக்கப்பட்டவராய்க்கொண்டும் உத்தவருடன்கூடத் தனது வீட்டையடைந்தார். (10) சுலுவில் ஆராதிக்கவியலாத வரும் ஸர்வ ஈச்வரர்களுக்கும் ஈச்வரனுமான விஷ்ணுவை நன்கு ஆராதித்து எவள் விஷய சுகத்தை வேண்டினளோ, அந்தச் சுகம் பயனற்றதுபற்றி இவள் அற்பபுத்தியுள்ளவளேயாகிறுள். (11) ப்ரபு வான கிருஷ்ணன், அக்ரூரரை ஹஸ்தினபுரத்துக்கு அனுப்பவேண் ணங்கொண்டவராயும், அக்ரூருக்கு ப்ரியத்தைச் செய்யவெண்ணங் கொண்டவராயும் கொண்டு பலராமன் உத்தவர் இவர்களுடன் கூட அவருடைய வீட்டையடைந்தார். (12) அவர் தனது பந்துக்க ளும், நரவரர்களும், ச்ரேஷ்டர்களுமான அம்மூவரையும், வெகு தூரத்தில் கண்டு சந்தோஷித்தவராய் எதிர்கொண்டு சென்று தழுவிக் கொண்டும், சந்தோஷித்துக்கொண்டும், கிருஷ்ணனையும், பலராமனை யும் நமஸ்கரித்தார். அவர்களாலும் நமஸ்கரிக்கப்பட்டவராய் சிறந்த

तैरप्यभिवादितः। पूजयामास विधिवत्कृतासनपरिग्रहान् ॥ १४ ॥ पादावनेजनीरापो धारयन् शिरसा नृप। अर्हणेनाम्बरैर्दिव्यैर्गन्धस्रग्भूषणोत्तमैः॥१५॥ अर्चित्वा शिरसा नम्य पादावङ्कगतौ मृजन्। प्रश्रयावनतोऽक्रूरः कृष्णरामावभाषत ॥१६॥ दिष्ट्या पापो हतः कंसः सानुगो वामिदं कुलम्। भवद्भ्यामुद्धृतं कृच्छ्राद्दुरन्ताच्च समेधितम् ॥ १७ ॥ युवां प्रधानपुरुषौ जगद्धेतू जगन्मयौ। भवद्भ्यां न विना किञ्चित्परमस्ति न चापरम् ॥ १८ ॥ आत्मसृष्टमिदं विश्वमन्वाविश्य स्वशक्तिभिः। ईयते बहुधा ब्रह्मन् श्रुतप्रत्यक्षगोचरम् ॥ १९ ॥ यथा हि भूतेषु चराचरेषु मह्यादयो योनिषु भान्ति

---

ஆஸனத்திலிருக்கின்ற அவர்களை முறைப்படி பூஜித்தார். (13–14) ஹே ந்ருப! அக்ரூரர் பாதங்களையலம்பின ஜலங்களைத் தலையினாலும், உடம்பு முழுதும் பூசிக்கொள்வதாலும் தரித்துக்கொண்டு, திவ்யங்களான வஸ்திரங்களினாலும், சந்தனம், பூமாலை, சிறந்த ஆபரணம் இவற்றினாலும், மற்றும் பூஜைக்குரிய பொருள்களினாலும், பூஜித்துத் தலையினால் வணங்கி மடியில் போட்டுக்கொள்ளப்பட்ட கால்களைப்பிடித்துவிட்டுக்கொண்டும், வினயத்தினால் வணக்கமாகவிருந்துகொண்டும், ராமகிருஷ்ணர்களைச் சொல்லத்தொடங்கினார். (15–16)

தனது பரிவாரத்துடன் கூடப் பாபியான கம்ஸன் தைவாதீனமாகக் கொல்லப்பட்டான். உங்களுடைய இந்தக் குலமானது முடிவற்ற கஷ்டத்தினின்றும் உங்களால் காப்பாற்றப்பட்டதாய்க் கொண்டு நன்கு விருத்தி செய்யப்பட்டுவிட்டது. (17) நீங்களிருவரும் ஜகத்துக்குக் காரணங்களான ப்ரதான (ப்ரகிருதி) புருஷர்களும், ஆனதுபற்றி ஜகன்மயர்களுமாவீர். ஆகவே உங்களைத் தவிர்த்துக் காரணப்பொருளோ காரியப்பொருளோ கிடையாது. (18) ஹே ப்ரம்ஹன்! நீரே ரஜோகுணம் முதலிய சொந்த சக்திகளைக் கொண்டு தன்னாலேயே ஸிருஷ்டிக்கப்பட்ட இந்த ப்ரபஞ்சத்தில் (உபாதான காரணமாக இருப்பதுபற்றி உண்மையான ப்ரவேசமில்லாதவராயினுங்கூட) ப்ரவேசித்தவர்போலவிருந்து ஶ்ருதி,ப்ரத்யக்ஷம் இவற்றுக்கு புலனாகும்படி வெகுவாகத் தோற்றத்தையடைகிறீர். (19) அதாவது:—தனது காரியங்களான சராசராத்மகங்களான பொருள்களில் (அவற்றின் காரணங்களான) பூமி முதலியன

नाना। एवं भवान्केवल आत्मयोनिष्वात्मात्मतन्त्रो बहुधा विभाति ॥२०॥ सृजस्यथो लुम्पसि पासि विश्वं रजस्तमःसत्त्वगुणैः स्वशक्तिभिः। न बध्यसे तद्गुणकर्मभिर्वा ज्ञानात्मनस्ते क्व च बन्धहेतुः॥ २१ ॥ देहाद्युपाधेरनिरूपितत्वाद्भवो न साक्षान्न भिदात्मनः स्यात्। अतो न बन्धस्तव नैव मोक्षः स्यातां निकामस्त्वयि नोऽविवेकः॥ २२॥ त्वयोदितोऽयं जगतो

---

பலவிதமான தோற்றத்தைபடைவது எவ்விதமோ, இவ்விதமே நீர் தனித்தவரும் தனக்குத்தானே அதீனருமாக இருப்பினுங்கூட தன்னுல் ஸிருஷ்டிக்கப்பட்ட பொருள்களில் (பிரவேசித்தவர்போல) வெருவாகத் தோற்றத்தையடைகின்றீர் என்றும். (20) சொந்த சக்திகளான ரஜஸ், தமஸ், ஸத்வம் என்ற குணங்களினுல் ப்ரபஞ்சத்தை ஸிருஷ்டிக்கவும், பிறகு அழிக்கவும், காக்கவுஞ் செய்கின்றீர். ஆயினும் அந்தக் குணங்களினுலோ, அங்குள்ள கர்மங்களினுலோ பந்தத்தைபடைவதில்லை. சைதன்யரூபியான உமக்குப் *பந்தஹேது வான அவித்யையானது எங்கிருந்து எற்படப்போகிறது (*) (21) தேஹாதிகளாகிற உபாதியானது மித்யா பூதமானதால் பிறவியோ அதை மூலமாகக்கொண்ட பேதமோ ஆத்மாவின் ஸ்வரூபத்தில் ஸம்பவிக்கமுடியாது. இவ்விதமிருக்க எக்காரணத்தினுல் அவித்தையென்பதே உண்மையிலில்லையோ அக்காரணத்தினுல் ஜீவாத்மாவுக்கே பந்தமுமில்லை மோக்ஷமுமில்லை என்பது எவ்விதமோ இவ்விதமே உமக்கும் பந்தமோக்ஷங்கள் ஸம்பவிக்க இடமில்லை. ஆகவே சட்டுண்டதாகவும், விடுபட்டதாகவும் உம்மிடமேற்படும் எங்களுடைய எண்ணம் கறைகடந்த அவிவேகமேயாகும். (22) †ஜகத்தின் க்ஷேமத்

---

* பொதுவாய் மாயையானது தனது ஆச்ரயத்தை மறைக்கக்கூடியதாக இல்லாதிருப்பதே அதன்காரணமாகும் என்பது கருத்து.

(*) உமக்குப் பந்தம் உண்டா? இல்லையா? என்பதிருக்கட்டும். அவித்யையை யுபாதியாகக்கொண்ட ஜீவாத்மாவுக்கே உண்மையில் பந்தம் எற்பட இடமில்லை என இதனுல் தெரிவிக்கிறுர்.

† அங்ஙனமாயின் பகவதவதாரமும் அவதார சரித்திரங்களும் சுக்தி ரஜதம்போல அவித்யாகல்பிதங்களோ எனின்? இல்லவேயில்லை. அவை உமது லீலைகளேயாகும் என 23, 24-வது சுலோகங்களாற் சொல்லப்படுகிறது.

हिताय यदा यदा वेदपथः पुराणः। बाध्येत पाखण्डपथैरसद्भिस्तदा भवान्सत्त्वगुणं बिभर्ति ॥ २३ ॥

स त्वं प्रभोऽद्य वसुदेवगृहेऽवतीर्णः स्वांशेन भारमपनेतुमिहासि भूमेः। अक्षौहिणीशतवधेन सुरेतरांशराज्ञाममुष्य च कुलस्य यशो वितन्वन् ॥ २४ ॥ अद्येश नो वसतयः खलु भूरिभागा यः सर्वदेवपितृभूतनृदेवमूर्तिः। यत्पादशौचसलिलं त्रिजगत्पुनाति स त्वं जगद्गुरुरधोक्षज याः प्रविष्टः॥२५॥ कः पण्डितस्त्वदपरं शरणं समीयाद्भक्तप्रियादृतगिरः सुहृदः

---

துக்கு வேண்டி உம்மால் வெளியிடப்பட்ட பழைமையான இந்த வேதமார்க்கமானது பாஷண்ட வழியைப் பின்பற்றின அஸாதுக்களினால் எவ்வெப்பொழுது பாதிக்கப்படுமோ, அவ்வப்பொழுது தாங்கள் ஸத்வகுணத்தையவலம்பிக்கின்றீர்கள். ஹே ப்ரபோ! அந்த நீர் இப்பொழுது அஸுராம்சம் பெற்ற அரசர்களின் நூற்றுக் கணக்கான அக்ஷௌஹிணிகளை வதஞ்செய்து பூமியின் பாரத்தைப் போக்கவேண்டியும், இந்தக் குலத்துக்கு யசஸ்ஸை விருத்திசெய்ய வேண்டியும், சொந்த அம்சமான பலராமனுடன் இங்கு வஸுதேவருடைய பத்னியாரிடத்தில் அவதரித்தவராக இருக்கின்றீர்.(23–24)

ஹே ஈஶ! ஹே அதோக்ஷஜ! எவர் ப்ரம்ஹாதிகளான எல்லாத் தேவர்களுடையவும், அர்யமா முதலிய பிதிருக்களுடையவும், பசு பக்ஷி முதலிய பூதங்களுடையவும், அதிதி (விருந்தாளி) களுடையவும், ருக் முதலிய வேதங்களுடையவும், *மூர்த்தியோ, எவரது பாதத்தையலம்பின ஜலம் மூவுலகையும் பரிசுத்தமாக்குகின்றதோ அந்த ஜகத்குருவான நீர் எந்த வீடுகளில் ப்ரவேசித்தீரோ அந்த எனது வாஸ்ஸ்தலங்கள் இப்பொழுது அதிகம் பாக்கியமுள்ளனவேயாகும். (25) பக்தப்ரியரும், ஸத்தியமான வாக்குள்ளவரும், எதையும் எதிர்பாராது ஆஶ்ரிதர்களுக்கு நன்மையைச் செய்கின்றவரும், செய்நன்றி மறவாதவரும், நல்ல மனதுள்ள பக்தனுக்கு எல்லாக் காமங்களையும், எதற்கு உபசயாபசயங்கள் (வளர்ச்சியும் தேய்வும்) கிடையாதோ அந்த ஆத்மாவையுமே கொடுப்பவருமான உம்மை

---

* ப்ரம்ஹாதிகள் ஒன்று சேர்ந்த கனமான ஸ்வரூபமோ என்று பொருள்.

कृतज्ञात्। सर्वान्ददाति सुहृदो भजतोऽभिकामानात्मानमप्युपचयापचयौ न यस्य॥ २६॥ दिष्ट्या जनार्दन भवानिह नः प्रतीतो योगेश्वरैरपि दुरापगतिः सुरेशैः। छिन्ध्याशु नः सुतकलत्रधनाप्तगेहदेहादिमोहरशनां भवदीयमायाम्॥ २७॥ इत्यर्चितः संस्तुतश्च भक्तेन भगवान्हरिः। अक्रूरं सस्मितं प्राह गीर्भिः सम्मोहयन्निव॥ २८॥ श्रीभगवानुवाच—त्वं नो गुरुः पितृव्यश्च श्लाघ्यो बन्धुश्च नित्यदा। वयं तु रक्ष्याः पोष्याश्च अनुकम्प्याः प्रजा हि वः॥ २९॥ भवद्विधा महाभागा निषेव्या अर्हसत्तमाः। श्रेयस्कामैर्नृभिर्नित्यं देवाः स्वार्था न साधवः॥ ३०॥ न ह्यम्मयानि तीर्थानि

---

விட்டு மற்றவரை (*)எந்தப் பண்டிதன்தான் சரணமாக அடைவான். (26) ஹே ஜனார்த்தன! யோகேஸ்வரர்களாலும், தேவஸ்ரேஷ்டர்களாலும் அடைதற்கரிதான ஸ்வரூபத்தையுடையவரான நீர் இப்பொழுது எங்களால் அறியப்பட்டீர் என்பது மஹாபாக்கியமேயாகும். ஆகவே புத்திர, களத்திர, பொருள், இஷ்டர், வீடு, தேஹம் முதலியவற்றில் மோஹமாகிற கயிறுருபமான உமது மாயையை எங்கள் விஷயத்தில் சீக்கிரம் அறுத்துவிடுவீராக. (27) பக்தனை அக்ரூரரால் இவ்விதம் பூஜிக்கப்பட்டவரும், நன்கு ஸ்துதிக்கப்பட்டவருமான பகவானான ஹரியானவர் சிரித்துக்கொண்டு வார்த்தைகளினால் நன்கு மயக்குகின்றவர்போல அக்ரூரரைச் சொல்லத் தொடங்கினார். (28)

ஸ்ரீபகவான் சொல்லலுற்றார்—நீர் எமக்கு குருவும், சிறிய தகப்பனும், எப்பொழுதும் ஸ்லாகிக்கத்தக்கபந்துவுமாகிறீர். நாமோ ரக்ஷிக்கத்தக்கவும், போஷிக்கத்தக்கவும், தயவுகாட்டத்தக்கவுமான உங்களது பிள்ளைகளாகவன்றோ இருக்கின்றோம். (29) தேவர்களோ சொந்தக் காரியத்தைச் சாதிப்பதிலேயே நோக்குடையவர்கள். ஸாதுக்களோ அவ்விதமில்லாதவர்கள். ஆனதுபற்றி பூஜிக்கத்தக்கவர்களுள் சிறந்தவர்களான உம்போன்ற மஹாபாகர்களே ஸ்ரேயஸ்ஸில் விருப்பமுள்ள மனிதர்களால் எப்பொழுதும் ஸேவிக்கத்தக்கவர்களாகின்றனர். (30) ஜலமயங்களான தீர்த்தங்கள் உலகில்

---

(*) ஒருபொழுதும் பிறரைச் சரணமாக அடையமாட்டான் என்பது பொருள்.

न देवा मृच्छिलामयाः। ते पुनन्त्युरुकालेन दर्शनादेव साधवः॥ ३१ ॥ स भवान्सुहृदां वै नः श्रेयान् श्रेयश्चिकीर्षया। जिज्ञासार्थं पाण्डवानां गच्छस्व त्वं गजाह्वयम् ॥ ३२ ॥ पितर्युपरते बालाः सह मात्रा सुदुःखिताः। आनीताः स्वपुरं राज्ञा वसन्त इति शुश्रुम ॥ ३३ ॥ तेषु राजाम्बिकापुत्रो भ्रातृपुत्रेषु दीनधीः। समो न वर्तते नूनं दुष्पुत्रवशगोऽन्धदृक् ॥ ३४ ॥ गच्छ जानीहि तद्वृत्तमधुना साध्वसाधु वा। विज्ञाय तद्विधास्यामो यथा शं सुहृदां भवेत् ॥ ३५ ॥ इत्यक्रूरं समादिश्य भगवान्हरिरीश्वरः। सङ्कर्षणोद्धवाभ्यां वै ततः स्वभवनं ययौ ॥ ३६ ॥

इति श्रीमद्भागवते महापुराणे दशमस्कन्धे पूर्वार्धे कुब्जारमणादिनिरूपणं नामाष्टचत्वारिंशोऽध्यायः॥ ४८ ॥



---

இல்லையென்பதில்லை. மண் கல் மயங்களான தேவர்களுமுலகில் இல்லையென்பதுமில்லை. அவர்களோ வெகு காலங்கடந்து பரிசுத்த மாக்குகின்றனர். ஸாதுக்களோ பார்த்தமாத்திரத்திலேயே பரிசுத்தமாக்குகின்றனர். (ஆனதுபற்றி ஸாதுக்களே மற்றவற்றைக் காட்டிலும் சிறந்தவர்களாகின்றனர்.) (31) அந்த நீர் எங்களுடைய ஸுஹ்ருத்துக்களுக்கெல்லாம் மிக்கச் சிறந்தவராவீர். ஆனதுபற்றிப் பாண்டவர்களுக்கு நன்மையைச்செய்யவேண்டியும், அவர்களின் யோகக்ஷேமங்களையறிந்துவரவேண்டியும் ஹஸ்தினபட்டினத்துக்குச் செல்லுவீராக. (32) பிதாவான பாண்டு இறந்ததும், தாயான குந்தியுடன் கூட மிக்கத்துக்கத்தையடைந்தவர்களான பாலர்கள் அரசனான திருதராஷ்டிரனால் தனது பட்டினத்துக்கழைத்துவரப்பட்டு அங்கு வஸிக்கின்றனர் என்று கேள்விப்படுகிறோம். (33) ப்ராதாவின் புத்திரர்களான அவர்களிடத்தில் கெட்ட புத்தியுள்ளவனும், கெட்ட புத்திரனுக்கு வசப்பட்டவனும், பிறவிக்குருடனும், அம்பிகையின் புத்திரனுமான திருதராஷ்டிர அரசன் ஸமமாக இருக்கமாட்டான். இது நிஸ்சயம். (34) இப்பொழுது நீர் அங்கு செல்லும். கெட்டதோ, நல்லதோ அவனுடைய நடத்தையை அறிந்து கொள்ளும். அறிந்த பின்னர் நமது ஸுஹ்ருத்துக்களுக்கு எவ்விதமானால் க்ஷேமமுண்டாகுமோ அவ்விதஞ்செய்

॥ अथ एकोनपञ्चाशत्तमोऽध्यायः ॥

श्रीशुक उवाच—स गत्वा हास्तिनपुरं पौरवेन्द्रयशोऽङ्कितम्। ददर्श तत्राम्बिकेयं सभीष्मं विदुरं पृथाम्॥ १॥ सहपुत्रं च बाह्लीकं भारद्वाजं सगौतमम्। कर्णं सुयोधनं द्रौणिं पाण्डवान्सुहृदोऽपरान्॥ २॥ यथावदुपसङ्गम्य बन्धुभिर्गान्दिनीसुतः। संपृष्टस्तैः सुहृद्वार्तां स्वयं चापृच्छदव्य-

---

வோம். (35) பகவானும் ஹரியுமான ஈச்வரன் இவ்விதம் அக்ரூரரை உத்தரவிட்டுவிட்டு பலராமன் உத்தவர் இவர்களுடன் கூட அவர் வீட்டிலிருந்தே தனது கிருஹத்தையடைந்தார். (36) (எ-று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண தசமஸ்கந்த பூர்வார்த்தத்தில் கூனியை ரமிக்கச்செய்தல் முதலியவற்றின் நிரூபணம் என்ற நாற்பத்தெட்டாவது அத்தியாயம் முற்றிற்று.



## நாற்பத்தொன்பதாவது அத்தியாயம்.

(அ-கை) ऊनपञ्चाशत्तमे तु गत्वाऽक्रूरो गजाह्वयम्।
राज्ञः स्वभ्रातृपुत्रेषु बुद्ध्वा वैषम्यमागमत्॥ १॥

(க-ரை) அக்ரூரர் ஹஸ்தினபட்டினஞ்சென்று திருதராஷ்டிர ராஜனுக்குத் தனது ப்ராதிரு புத்திரர்களான பாண்டவர்களிடத்திலுள்ள வைஷம்யத்தையறிந்துகொண்டுத் திரும்பிவந்தார் என இந்த நாற்பத்தொன்பதாவது அத்தியாயத்திலுபதேசிக்கப்படுகிறது. (1)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—அந்த அக்ரூரர் பௌரவேந்திரர்களின் யசஸ்ஸினல் அடையாளஞ்செய்யப்பட்ட ஹஸ்தினபட்டினத்தையடைந்து அவ்விடத்தில் பீஷ்மாசாரியருடன் கூடின அம்பிகா புத்திரனை திருதராஷ்டிரனையும், விதுரரையும், குந்தியையும், புத்திரனுடன் கூடின ஸோமதத்தனையும், கிருபருடன் கூடின துரோணரையும், கர்ணனையும், துரியோதனனையும், அஸ்வத்தாமாவையும், பாண்டவர்களையும், மற்றுமுள்ள நண்பர்களையும் கண்டார். (1-2) காந்தினீ புத்திரரான அக்ரூரர் முறைப்படி அவர்களை அடைந்து அந்தப் பந்துக்களினுல் ஸுஹிருத்துக்களின் பிரவிருத்

यम् ॥ ३ ॥ उवास कतिचिन्मासान्राज्ञो वृत्तविवित्सया। दुष्प्रजस्याल्पसारस्य खलच्छन्दानुवर्तिनः॥ ४ ॥ तेज ओजो बलं वीर्यं प्रश्रयादींश्च सद्गुणान्। प्रजानुरागं पार्थेषु नसहद्भिश्चिकीर्षितम्॥ ५ ॥ कृतं च धार्तराष्ट्रैर्यद्गरदानाद्यपेशलम्। आचख्यौ सर्वमेवास्मै पृथा विदुर एव च ॥ ६ ॥ पृथा तु भ्रातरं प्राप्तमक्रूरमुपसृत्य तम्। उवाच जन्मनिलयं स्मरन्त्यश्रुकलेक्षणा ॥ ७ ॥ अपि स्मरन्ति नः सौम्य पितरौ भ्रातरश्च मे। भगिन्यो भ्रातृपुत्राश्च जामयः सख्य एव च ॥ ८ ॥ भ्रात्रेयो भगवान्कृष्णः शरण्यो भक्तवत्सलः। पैतृष्वस्रेयान्स्मरति रामश्चाम्बुरुहेक्षणः॥ ९ ॥ सापत्नमध्ये शोचन्तीं वृकाणां हरिणीमिव। सान्त्वयिष्यति मां वाक्यैः पितृ-

---

தியைக் கேட்கப்பட்டவராய்த்தாலும் அவர்களின் க்ஷேமத்தை விசாரித்தார். (3) கெட்ட புத்திரனையுடையவனும், துஷ்டர்களான கர்ணன் முதலியோரின் இஷ்டத்தையனுசரிக்கும் ஸ்வபாவமுடையவனும், அற்பதைரியமுள்ளவனுமான திருதராஷ்டிர அரசனுடைய நடத்தையை யறியவிருப்பங்கொண்டு சில மாஸங்கள் அங்கு வாஸஞ் செய்தார். (4) பாண்டவர்களிடத்தில் காணப்படுகின்ற ப்ரபாவம், சஸ்திராதிஸாமர்த்தியம், சூரத்தன்மை, சரீரபலம், வினயம் முதலிய நற்குணங்கள், ப்ரஜைகளுக்கேற்பட்ட ப்ரீதி ஆகியவற்றைப்பொறுக்காதவர்களான திருதராஷ்டிர புத்திரர்களால் செய்ய விரும்பப்பட்டதையும், செய்யப்பட்ட விஷங்கொடுத்தல் முதலிய எல்லாக் கெட்ட காரியத்தையுமே குந்தியும், விதுரரும் இந்த அக்ரூரரிடம் சொல்லினர். (6) குந்தியோ பிறந்தவிடத்தை நினைத்துக்கொண்டு கண்ணில் கொஞ்சம் நீரை வடியவிட்டுக்கொண்டு அங்குவந்த ப்ராதாவான அந்த அக்ரூரரினருகில் வந்து சொல்லத்தொடங்கினுள். (7) ஹே ஸௌம்ய! எனது தாய் தந்தையரும், பிராதாக்களும், ஸஹோதரிகளும், பிராதாவின் புத்திரர்களும், ஜாமிகளும் (குலத்திலுள்ள ஸ்திரீகளும்) தோழிகளும் என்னை நினைக்கின்றனரா? (8) பிராதாவின் புத்திரனும், சரண்யனும், பக்தவத்ஸலனும், பகவானுமான ஸ்ரீகிருஷ்ணனும், புண்டரீகாக்ஷனை பலராமனும் அத்தையின் புத்திரர்களை நினைக்கின்றனரா? (9) செந்நாய்களின் நடுவிற்சிக்கின பெண்மான்போலச் சத்துருக்களின் நடுவில் அகப்பட்டுக்

हीनांश्च बालकान् ॥ १० ॥ कृष्ण कृष्ण महायोगिन्विश्वात्मन्विश्वभावन। प्रपन्नां पाहि गोविन्द शिशुभिश्चावसीदतीम् ॥ ११ ॥ नान्यत्तव पदाम्भोजात्पश्यामि शरणं नृणाम्। बिभ्यतां मृत्युसंसारादीश्वरस्यापवर्गिकात् ॥ १२ ॥ नमः कृष्णाय शुद्धाय ब्रह्मणे परमात्मने। योगेश्वराय योगाय त्वामहं शरणं गता ॥ १३ ॥

श्रीशुक उवाच—इत्यनुस्मृत्य स्वजनं कृष्णं च जगदीश्वरम्। प्रारुदद्दुःखिता राजन्भवतां प्रपितामही ॥ १४ ॥ समदुःखसुखोऽक्रूरो विदुरश्च महायशाः। सान्त्वयामासतुः कुन्तीं तत्पुत्रोत्पत्तिहेतुभिः ॥ १५ ॥ यास्यन्राजानमभ्येत्य विषमं पुत्रलालसम्। अवदत्सुहृदां मध्ये बन्धुभिः सौहृदो-

கொண்டு சோகத்தையடைகின்ற என்னேயும், பிதாவையிழந்தவர்களான எனது குழந்தைகளேயும் வாக்கியங்களிஞல் தேற்றுவாரா? (10) ஹே கிருஷ்ண! கிருஷ்ண! ஹே மஹாயோகின்! ஹே விஸ்வாத்மன்! ஹே விஸ்வபாவன! ஹே கோவிந்த! குழந்தைகளுடன் கூட கஷ்டத்தையடைகின்றவளும் சரணமடைந்தவளுமான என்னேக்காப்பீராக. (11) மிருத்யு யுக்தமான ஸம்ஸாரத்தினின்றும் பயந்தவர்களான மனிதர்களுக்கு மோக்ஷத்தைத் தருகின்ற ஈஸ்வரனுன உன்னுடைய சரணுரவிந்தத்தைவிட ரக்ஷகம் வேறென்றிருப்பதாக நான்காணவில்லே. (12) சுத்தனும் (தர்மாத்மாவும்) எங்கும் நீக்கமற நிறைவுபெற்றவனும், ஜீவனுக்கு ஸகாவும், அணிமாதிகளான ஐஸ்வரியத்துடன் கூடினவரும், க்ஞான ஸ்வரூபியுமான ஸ்ரீகிருஷ்ணனுக்கு நமஸ்காரம். உன்னே நான் சரண்புகுந்தேன். (13)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றுர்—ஹே ராஜன்! உம்முடைய பாட்டியாரான குந்தியானவள் இவ்விதம் சொந்த ஜனத்தையும், ஜகதீஸ்வரனுன ஸ்ரீகிருஷ்ணனேயும், நினைத்துக்கொண்டு துக்கத்தையடைந்தவளாய் வாய்விட்டுக்கதறினுள். (14) ஸமமான துக்கசுகங்களேயுடைய அக்ரூரரும், மஹாயஸஸ்வியான விதுரரும் அவளுடைய புத்திரோத்பத்திக்குரிய காரணங்களேக் காட்டிக் குந்தியைத்தேற்றினர். (15) ஊருக்குப் போகவெண்ணங்கொண்ட அக்ரூரர், கெட்ட ஸ்வபாவமுள்ளவனும், புத்திரனிடமீடுபட்டவனுமான திருதராஷ்டிரனேயடைந்து நல்ல சித்தமுள்ள பீஷ்மாதியரின் நடுவில் ராமகிருஷ்

दितम् ॥ १६ ॥ अक्रूर उवाच—भो भो वैचित्रवीर्य त्वं कुरूणां कीर्तिवर्धन। भ्रातर्युपरते पाण्डावधुनासनमास्थितः ॥१७॥ धर्मेण पालयन्नुर्वीं प्रजाः शीलेन रञ्जयन्। वर्तमानः समः स्वेषु श्रेयः कीर्तिमवाप्स्यसि ॥१८॥ अन्यथा त्वाचरँल्लोके गर्हितो यास्यते तमः। तस्मात्समत्वे वर्तस्व पाण्डवेष्वात्मजेषु च ॥१९॥ नेह चात्यन्तसंवासः कर्हिचित्केनचित्सह। राजन्स्वेनापि देहेन किमु जायात्मजादिभिः॥ २० ॥ एकः प्रसूयते जन्तुरेक एव प्रलीयते। एकोऽनुभुङ्क्ते सुकृतमेक एव च दुष्कृतम् ॥२१॥ अधर्मोपचितं वित्तं हरन्त्यन्येऽल्पमेधसः। संभोजनीयापदेशैर्जलानीव जलौकसः ॥२२॥

---

ஞதிகளான பந்துக்களினுல் நல்ல எண்ணத்துடன் சொல்லப்பட்ட வார்த்தையைச் சொல்லத்தொடங்கினுர். (16) அக்ரூரர் சொல்ல லுற்றுர்—விசித்ரவீர்யன் புத்திரனும், குருக்களுக்குக் கீர்த்தியை விளைவிப்பவனுமான ஓ ஓ திருதராஷ்டிர! ப்ராதாவான பாண்டு இறந்ததும் இப்பொழுது நீர் ஸிம்ஹாஸனத்தையடைந்திருக்கிறீர். (17) நீர் தர்மத்துடன் பூமியைப்பரிபாலிப்பவனும், நல்லொழுக்கத் தினுல் ப்ரஜைகளைத் திருப்திசெய்விப்பவனும், தன்னைச் சேர்ந்தவர் களிடத்தும் பிறரிடத்தும் ஸமமாகவிருப்பவனுமாக இருந்தால் நன் மையையும், கீர்த்தியையும் அடைவீர். (18) வேருக நடந்தீரானுல் உலகில் நிந்திக்கப்பட்டவனுய் நரகத்தையடைவீர். ஆனதுபற்றி பாண்டவர்களிடத்தும், சொந்தப் புத்திரர்களிடத்தும் நடுநிலைமையி லிருப்பீராக. (19) ஹே ராஜன்! இப்பிறவியில் ஒன்றுடனும் ஒருபொழுதும் நெருங்கின வாஸம் ஏற்படமாட்டாது. சொந்த தேஹத்துடனேயே ஏற்படாதபொழுது பத்னீ புத்திராதிகளுடன் எங்கிருந்து ஏற்படப்போகிறது. (20) ஜீவன் ஒருவனுகவே பிறக் கிருன். ஒருவனுகவே மரிக்கிருன். ஒருவனுகவே புண்ணியத்தை யனுபவிக்கிருன். ஒருவனுகவே பாபத்தையுமனுபவிக்கிருன். (21) ஜலத்தில் வசிக்கும் மீன் முதலியவற்றுக்குச் சொந்தங்களான ஜலங் களை அம்மீன் குஞ்சுகள் தன்சொத்தாக அனுபவிப்பது எவ்விதமோ அவ்விதமே அதர்மத்தினுல் தேடப்பட்ட மூடபுத்தியுள்ள மனித னின் தனத்தை போஷிக்கத்தக்க புத்திராதிகள் என்ற வியாஜங்களி னுல் சத்துருக்களே அபஹரித்துக் கொள்ளுகின்றனர். (22) எவன

पुष्णाति यानधर्मेण स्वबुद्ध्या तमपण्डितम्। तेऽकृतार्थं प्रहिण्वन्ति प्राणा रायः सुतादयः॥ २३ ॥ स्वयं किल्बिषमादाय तैस्त्यक्तो नार्थकोविदः। असिद्धार्थो विशत्यन्धं स्वधर्मविमुखस्तमः॥ २४ ॥ तस्माल्लोकमिमं राजन्स्वप्नमायामनोरथम्। वीक्ष्यायम्यात्मनात्मानं समः शान्तो भव प्रभो॥२५॥ धृतराष्ट्र उवाच—यथा वदति कल्याणीं वाचं दानपते भवान्। तथानया न तृप्यामि मर्त्यः प्राप्य यथामृतम्॥ २६ ॥ तथापि सूनृता सौम्य हृदि न स्थीयते चले। पुत्रानुरागविषमे विद्युत्सौदामनी यथा॥ २७ ॥ ईश्वरस्य विधिं को नु विधुनोत्यन्यथा पुमान्। भूमेर्भारावताराय योऽवतीर्णो यदोः कुले॥ २८ ॥ यो दुर्विमर्शपथया निजमाययेदं सृष्ट्वा गुणान्विभजते तदनु-

---

தன்னைச் சேர்ந்தன என்ற புத்தியுடன் அதர்மத்தினால் எவற்றை ரக்ஷிக்கிறானோ மூடனும், அதன் மூலம் போகத்தையடையாதவனுமான அவனை அந்த ப்ராணன்களும், தனங்களும், புத்திராதிகளும் நீக்கிவிடுகின்றனர். (23) அவர்களால் விடப்பட்டவனாய் புருஷார்த்த விஷயத்தில் ஸாமர்த்தியமற்றவனாயும், மனோரத பூர்த்தியையடையாதவனாயும் கொண்டு சொந்த தர்மத்தில் பற்றில்லாத மனிதன் அந்ததமஸ் என்ற நரகத்தையடைகிறான். (24) ஆனதுபற்றி ஹே ராஜன்! ஹே ப்ரபோ! இந்த லோகத்தை (சரீரத்தை) ஸ்வப்பினத்துக்கும், மாயைக்கும், மனோரதத்துக்கும் ஒப்பானதாகக்கண்டு கொண்டு விவேகயுக்தமான புத்தியினால் மனத்தையடக்கிக்கொண்டு நடுநிலைமை வஹிப்பவராகவும், சாந்தராகவும் ஆவீராக. (25)

திருதராஷ்டிரன் சொல்லலுற்றான்—ஹேதானபதே! (அக்ரூர!) நீ க்ஷேமத்தைத் தரத்தக்க வார்த்தையை எவ்விதம் சொல்லுகின்றாயோ அவ்விதமே அமுதத்தையடைந்த மனிதன்போல இதனால் நான் போதும் என்ற திருப்தியையடையாதவனாகவிருக்கிறேன் (26) ஆயினும் ஹேஸௌம்ய! புத்திரனிடமுள்ள அனுராகத்தினால் மேடுபள்ளமுள்ளதும், சஞ்சலமுமான மனத்தில் அந்த ப்ரியவார்த்தையானது கொடிமின்னல்போல நிலைக்காமலிருக்கிறது. (27) பூமியின் சுமையை இறக்கவேண்டி யதுவின் குலத்தில் எவர் அவதரித்திருக்கின்றாரோ அந்த ஈச்வரனுடைய செய்கையை எந்த மனிதன்தான் வேறுவிதமாகச் செய்யக்கூடும். (28) ஆலோசிக்க வியலாதவழியையுடைய

**प्रविष्टः। तस्मै नमो दुरवबोधविहारतन्त्रसंसारचक्रगतये परमेश्वराय॥२९॥ श्रीशुक उवाच—इत्यभिप्रेत्य नृपतेरभिप्रायं स यादवः। सुहृद्भिः समनुज्ञातः पुनर्यदुपुरीमगात्॥३०॥ शशंस रामकृष्णाभ्यां धृतराष्ट्रविचेष्टितम्। पाण्डवान्प्रति कौरव्य यदर्थं प्रेषितः स्वयम्॥ ३१ ॥**

**इति श्रीमद्भागवते महापुराणेऽष्टादशसाहस्र्यां संहितायां दशमस्कन्धे पूर्वार्धे पाण्डववृत्तनिरूपणं नाम एकोनपञ्चाशत्तमोऽध्यायः॥ ४९ ॥**



**॥ कंसनिहन्त्रे भगवते श्रीकृष्णाय नमः ॥**

**॥ इति दशमस्कन्धपूर्वार्धं समाप्तम् ॥**





சொந்த மாயையினால் எவர் இவ்வுலகைப்படைத்து அதில் அனுப்ரவேசமும் செய்து கர்மங்களையும், அதன் பலன்களையும் பிரித்துத் தருகின்றாரோ, அறிதற்கியலாத பகவல்லீலையைத் தனக்கு முக்கிய காரணமாகக்கொண்ட ஸம்ஸார சக்கிரத்துக்கு அடைவிடமானவரும், பரமேஸ்வரனுமான அவருக்கு நமஸ்காரம். (29) ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—அந்த அக்ரூரர் அரசனின் அபிப்பிராயத்தை இவ்விதமறிந்துகொண்டும்,சுஹிருத்துக்களினால் விடையளிக்கப்பட்டவராய்க்கொண்டும் திரும்பவும் யதுபுரியை (மதுரையை) அடைந்தார். (30) ஹே கௌரவ்ய! எதற்குவேண்டித் தான் அனுப்பப்பட்டாரோ பாண்டவர்களைக் குறித்துத் திருதராஷ்டிரனுடைய அந்த நடத்தையை ராமகிருஷ்ணர்களையும் பொருட்டுச் சொன்னார்.

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண தசமஸ்கந்த பூர்வார்த்தத்தில் பாண்டவவிருத்தாந்த நிரூபணம் என்ற நாற்பத்தொன்பதாவது அத்தியாயம் முற்றிற்று.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

இவ்விதம் தசமஸ்கந்தத்தின் பூர்வார்த்தம் முற்றிற்று.

சுபம்.



